(அறுவை சிகிச்சையைப் பற்றிய ஆயுர்வேதநூல்)

# தமிழாக்கம்

கலைமாமணி

## எஸ்.என்.ஸ்ரீராமதேசிகன்

முன்னாள் கவுரவத் தனி அலுவலர்
ஆயுர்வேத மொழி பெயர்ப்புப்பிரிவு
இந்திய மருத்துவம் மற்றும்
ஓமியோபதி இயக்குநரகம்
தமிழக அரசு

# ஸுச்ருத ஸம்ஹிதை

(அறுவை சிகிச்சையைப் பற்றிய
ஆயுர்வேத நூல்)

## உத்திரஸ்தானம்

தமிழாக்கம்
*கலைமாமணி*
எஸ். என். ஸ்ரீராமதேசிகன்
முன்னாள் கவுரவத் தனி அலுவலர்
ஆயுர்வேத மொழிபெயர்ப்புப் பிரிவு
இந்திய மருத்துவம் மற்றும் ஓமியோபதி
இயக்குநரகம், தமிழக அரசு.

**வெளியீடு**
ஸ்ரீரங்கம்
ஸ்ரீமத் ஆண்டவன் ஆச்ரமம்,
**32, தேசிகாச்சாரி ரோடு, சென்னை – 4.**

**2001**

முதற் பதிப்பு : 2001



**பி.ஏ.எம்.எஸ்.**
**ஆயுர்வேதப் பட்டப் படிப்பின்**
**ஐந்தாண்டுகட்கு பயன்படும் பாடநூல்**

*கிடைக்குமிடம் :*
**ஸ்ரீரங்கம் ஸ்ரீமத் ஆண்டவன் ஆச்ரமம்**
31, தேசிகாச்சாரி ரோடு,
சென்னை - 4

# நூல் விளக்கம்


| | |
|---|---|
| தலைப்பு | : ஸுசுருதஸம்ஹிதை தமிழாக்கம் (உத்ரஸ்தானம்) |
| ஆசிரியர் | : கலைமாமணி எஸ். என். ஸ்ரீராமதேசிகன் |
| பதிப்பு | : முதற்பதிப்பு |
| வெளியீடு | : 2001 |
| உரிமை | : ஸ்ரீரங்கம் ஸ்ரீமத் ஆண்டவன் ஆச்ரமம்<br>31, தேசிகாச்சாரி ரோடு,<br>சென்னை - 600004. |
| தாள் | : 14 Kg. |
| எழுத்து | : 10 Pt. |
| பக்கங்கள் | : 537 |
| படிகள் | : ஆயிரம் |
| விலை | : ரூ. 180/- |
| பதிப்பு வெளியீடு: | ஸ்ரீரங்கம் ஸ்ரீமத் ஆண்டவன் ஆச்ரமம்<br>31, தேசிகாச்சாரி ரோடு,<br>சென்னை - 4 |

# பொருளடக்கம்







ஸ்ரீரங்கம் ஸ்ரீமத் ஆண்டவன்
ஸ்ரீரங்கராமாநுஜ மஹா தேசிகன்

Sri






Srimathe Rangaramanuja Mahadesikaya Namaha
Srimathe Srinivasa Ramanuja Mahadesikaya Namaha
Srimathe Vedantha Ramanuja Mahadesikaya Namaha
Srimathe Ranganatha Mahadesikaya Namaha

Srimathe Srinivasa Mahadesikaya Namaha
Srimathe Nigamantha Mahadesikaya Namaha
Srimathe Baghawathe Bashyakaraya Mahadesikaya Namaha
Sri Ranganatha Divyamani Padukabyam Namaha

**SRIRANGAM**
**SRIMAD ANDAVAN ASHRAMAM**

H.Qrs. Melur Road, Srirangam, Tiruchirappalli 620 006
Phone : 0431- 432379


Camp : மும்பை
Date : 23-1-2002

ஸ்ரீமுகம்

சுருதியின் நோக்கில் வாசுதேவம் கூறும்
மருந்தின் நலத்தை நயமிகு மாற்றில்
திருவார் ராமதேசிகன் யாத்த நூலே
பெருவளம் பெற்றதே [illegible]யின்டு.

ஸ்ரீ மங்களாசிஷம்

நிர்வாண

யின் உத்தரஸ்தானம்

அவருடைய உழைப்பின் பெருமை உணர முடிகின்றது. எல்லாவற்றிற்கும் மேலாக அமைந்துள்ளது "ஆயுர்வேத மருத்துவ வரலாறு." இது மிகவும் சிறந்த பொக்கிஷமாகும்; ஆராய்ச்சியாளர்களுக்கு வழிகாட்டியுமாகும். அறுபத்தாறு அத்யாயங்களைக் கொண்ட உத்தரஸ்தானம் மருந்தும் நிறைவும் போல் சாற்ற ஊறியாற்றுப் பெற்ற பான்மை மிகவும் போற்றற்குரியது. ஆயுர்வேதம் பயிலும் மாணாக்கர்கட்கும் பயிற்சிக்கும் ஆசிரியப் பெருமக்கட்கும் அருமருந்தாகும் இந்நூல். இதன் பெருமையை இப் பேரறிஞர்கட்கே விக்கலாகும். மேலும் மேலும் இம்மாதிரியான நூல்களால் பாரத நாட்டின் பெருமையை பாரெல்லாம் அறிய இந்நூலா-சிரியர் செய்ய வேண்டுமென நல்லாசி கூறி நாராயண ஸ்ம்ருதியோடு முடிக்கின்றேன்.

நாராயண! நாராயண!! நாராயண!!!

இவண்

ஸ்ரீரங்க ராமானுஜ மஹாதேசிகன்



ஸ்ரீரங்கம் ஸ்ரீமத் ஆண்டவன் ஸ்ரீரங்கராமாநுஜ
மஹா தேசிகன் ஸ்வாமிகள்,
எஸ்.என். ஸ்ரீராமதேசிகனுக்கு
'அபிநவ விசுருதா ஸுசுருத' என்றபட்டத்தை
சென்னை ஆண்டவன் ஆஸ்ரமத்தில் 2.4.2000 அன்று
நடந்த விழாவில் வழங்கினார்கள்.

# முன்னுரை

## ஆயுர் வேதத்தின் சீரும் சிறப்பும்

'நோய் நொடியின்றிப் பல்லாண்டு வாழ்க' என்று நம்மை வாழ்த்துவோரை நாம் வணங்குகின்றோம். வாழ்த்துவோரின் வாய் முகூர்த்தம் பலிக்கட்டும். நோயை அண்ட விடாமல் உடல் நிலையைப் பேணிப்பாதுகாப்பது என்பது ஆயுர்வேத மருத்துவத்தின் தனிச்சிறப்பு; தலையாய குறிக்கோளும் கூட. நான்கு வேதங்களில் ஒன்றான அதர்வண வேதத்துடன் ஆயுர்வேதம் நெருங்கிய தொடர்பு கொண்டது. எனவே ஆயுர்வேதம் அதர்வண வேதத்தின் துணை. வேதமென ஆயுர்வேத ஆசாரியர்கள் சரகர், ஸுசுருதர் முதலியோர் கூறுவதில் வியப்பில்லை. ஸுசுருதர் ஒரு படி மேலாக வேதம் என்றாலே ஆயூர் வேதம் தான் என்று ஆணித்தரமாகச் சொல்லிப் பெருமை சேர்த்தார். காச்யப ஸம்ஹிதை, பிரம்ம வைவர்த்த புராணம் போன்ற நூல்களில், ஆயுர்வேதத்தை, நான்கு வேதங்களையடுத்து ஐந்தாவது வேதமாகவே குறிப்பிடப்படுகின்றது.

அரசர் முதலியோரின் தீராத நோய்களை மந்திரத்தாலும், தந்திரத்தாலும், யாகத்தாலும் தேவ பூஜையாலும் தீர்த்து வைத்ததாக வேதங்களில் சொல்லப்பட்டுள்ளன என்பதை நாம் அறிவோம். ஆயின் அதற்கு நேர்மாறாக அதர்வண வேதத்தில், நோய் அதை குணமாக்கும் பச்சிலை மூலிகைகள், அவற்றைப் பயன்படுத்தும் செய்முறைகள் போன்ற செய்திகள் உள்ளடங்கியுள்ளதை உணரலாம். ஆயுர் வேத முறை - அதாவது மூலிகை வைத்தியத்தில் நோய்களைத் தீர்க்கும் முறை இன்றல்ல, நேற்றல்ல; வேதங்கள் தோன்றிய காலத்திலேயே தொடங்கிவிட்டது என்பதைச் சொல்லவா வேண்டும்! நான்கு வேதங்களையும் நன்றாக ஆராய்ச்சி செய்தவர்கள், ஆயுர்வேதத்தின் அருமை பெருமைகள், அதர்வண வேதத்தில் மட்டுமல்ல, அனைத்து வேதங்களிலும் இரண்டறக் கலந்து விட்டது. என்பதைத் தெரிவிக்கிறார்கள்.

### 1. புத்தர் கையாண்ட ஆயுர்வேத மருத்துவமுறை

ஆயுர்வேதத்தில் பஞ்சகர்ம என்ற மருத்துவமுறை முதன்மை இடம் பெற்றுள்ளது.

பஞ்சகர்ம என்றால் என்ன? ஐந்து வகைச் செயல் முறைகள். வாய்க்குள் மருந்து, மூக்கில் மருந்திடுதல்; ஆசன வழியாக எண்ணை கசாய மருந்து செலுத்துதல்; உடலைக்கீறி அசுத்த ரத்தத்தை அகற்றுதல், உடலுக்குள்ளிருந்து வியர்வை வரவழைத்தல் ஆகியவை. மேற்கூறப்பட்ட ஐந்து வகை செயல் முறைகள் மூலம் தலை, வயிறு, உடல் உறுப்புகள் அனைத்திலும் உள்ள கழிவுப்பொருள்களை

வெளியேற்றித் தூய்மையாக்கப் படுகின்றன. வமனம், விரேசனம், நஸ்யம், வஸ்தி, ரக்தமோக்ஷணம் ஆகிய பஞ்ச கர்மாக்களை செலுத்துவதற்கு முன்பு உடலிலிருந்து வியர்வையை வரவழைத்தல் (ஸ்வேதம்) உடலில் எண்ணெய் பூசி எண்ணெய்ப் பசை உண்டாக்குதல் (ஸ்நேகம்) ஆகிய இரண்டு செயல்களைச் செய்தல் வேண்டும். சரகர் தமது நூலில் ஆயுர்வேதத்தின் அடிப்படைத்தத்துவத்தை நன்கு ஆராய்ந்து, மருந்தின் உதவியின்றியே சகல நோய்களைத் தீர்த்துவிடலாம் என்பதைக்கூறியுள்ளார். புத்தர் இம்முறையை தனக்கும் மற்ற நோயாளிகளுக்கும் பயன்படுத்தி பலன் பெற்றுள்ளார் என்னும் அரிய சேதி 'வினயபிடகா' என்னும் பௌத்த நூல் மூலம் தெரிய வருகிறது. வாதநோயால் வாடிய விளிந்த வாகன் என்பாருக்கு வியர்வையை வரவழைக்கும் சிகிச்சை மூலம் நோயை குணமாக்கியதாக, வினய பிடகா நூலில் உள்ள கதை கூறுகிறது. வியர்வையை வெளிக்கொணரும் ஸ்வேதகர்மா பலமுறைகளாகப் பிரிக்க பட்டுள்ளது.

(1) பூமியில் பள்ளம் தோண்டி பள்ளத்தில் நெருப்பிட்டுப் பின்பு தணல் நீக்கி, தழை, மணல் பரப்பி எண்ணெய் பூசிய நோயாளியை படுக்க வைத்தால் வியர்வை வரும்.

(2) குறிப்பிட்ட இலை தழைகளில் படுக்க வைத்து, நோயாளியின் உடலிலிருந்து வியர்வை வரவழைத்தல்.

(3) வெந்நீர்த்தொட்டியில் நோயாளியை இறக்கி வியர்வையை வரவழைத்தல்.

(4) இலைக் கஷாயம், நோயாளிக்குக் குடிக்கக் கொடுத்து வியர்வை வரவழைத்தல்

(5) நோயாளியை அறையில் இருக்க வைத்து அறைக்குள் புகை செலுத்த, நோயாளிக்கு வியர்வை வரும். (ஜேந்தாகஸ் வேதம்)

புத்தர், வாதரத்த நோயாளியின் உடலைக் கீறி அசுத்த ரத்தத்தை வெளியேற்றியது; தீராத தலைவலியில் அவதிப்பட்ட பெண்மணியின் மூக்கில் நெய்யை ஏற்றி அவள் நோயிலிருந்து விடுபட வைத்தது; ஒரு மன்னனுக்கு நெய்யை குடிக்கச் செய்து வாந்தியெடுக்க வைத்து அதன் மூலம் அவன் நோயைத் தீர்த்தது; மருந்துக் கஷாயத்தை உட்கொள்ளச் செய்து அரசனின் பணியாளை குணப்படுத்தியது; தலைப்பகுதி தோஷங்களால் அவதிப்பட்ட தனக்கே மூக்கு வழியாக மருந்து செலுத்தி நோயைக் குணப்படுத்தியது; இது போன்ற நிகழ்ச்சிகள் கதை போல 'வைத்திய ஜீவகன்' என்ற நூலில் சொல்லப்பட்டுள்ளன. புத்தர் பஞ்ச கர்மாவை தாமும் பின்பற்றி, மற்றவர்க்கும் விளக்கியுள்ளார் என்பது புலனாகிறது.

## 2. நூல் தோன்றிய வரலாறு

ஆயுர்வேதத்தை, பிரம்மா மூலம் தக்ஷப்ரஜாபதி கற்றார்; அவரிடம் அஸ்வனி குமாரர்கள் கற்று இந்திரனுக்கு சொல்லிக் கொடுத்தார்கள். இந்திரன் ஆயுர் வேதத்தின் எட்டு உட்பிரிவுகளில் ஒன்றான உடல் மருத்துவத்தை மக்கள் நலம் விரும்பி பரத்வாஜ முனிவருக்கு சொல்லித் தந்தார். பரத்வாஜர் ஆத்ரேயருக்கும், ஆத்ரேயர் அக்னிவேசர், சரகருக்கும் ஆயுர்வேதம் போதித்தனர். இதன் விளைவாக "சரக ஸம்ஹிதை" என்ற நூல் உருவானது. ஆயுர்வேதத்தின் மற்றொரு பிரிவான அறுவை சிகிச்சை முறையை தன்வந்தரி மகான் மூலம் ஸுசுருதர், மற்ற சீடர்கள் கற்றனர். ஸுசுருதர் கற்றுணர்ந்து எழுதிய நூல் தான் 'ஸுசுருதஸம்ஹிதை' என்ற பெயர் கொண்டு பிரபலமானது. ஸுசுருதர் வேறு யாரும் அல்ல, விஸ்வாமித்திரரின் புதல்வர் என புராண நூல்கள் தெரிவிக்கின்றன. காசி மன்னர் திவோதாசர் தான் தன்வந்திரி. தன்வந்தரியிடம் பயிற்சி பெற்றவர் ஸுசுருதர்.

## 3. பாம்பு விஷத்தின் மருத்துவகுணம்

**வெண்குட்டம்**

வெண்குட்டம் என்னும் தோல்வியாதி நீங்க ஒரு வழி; கருநாகத்தை உயிருடன் எரித்து அதன் சாம்பலுடன் தான்றிக்காய் எண்ணெயுடன் சேர்த்துப்பூசுவது; அல்லது அந்தச் சாம்பலை ஷாரமுறைப்படி நீரில் கரைத்துச் ஏழு முறை சுத்தம் செய்து அந்த நிரின் நான்கு பங்கு அளவுடன் எண்ணெய் மருந்து தயார் செய்து பூசுவது.

**கண்நோய்**

கழுகு, மான் ஆகியவற்றின் பாலுடன் இந்துப்பு, தேன் கலந்து புடம் செய்தோ; கழுகு, நாகம், கோழி ஆகியவற்றின்வசையை அதிமதுரத்துடன் கலந்து மெய்மருந்தாக்கியோ; பயன்படுத்தினால் வாதம் தாக்கிய திமிரம் என்னும் கண்நோய் விலகும்.

இன்னொரு முறை: ஸ்ரோதாஞ்சனைத்தை (கண்ணுக்கு பூசப்படும் மருத்துவ மை) கருநாகத்தின் வாய்க்குள் திணித்து வாயின் இரு பகுதிகளையும் தர்பத்தைக் கொண்டு கட்டி விட வேண்டும். ஒரு மாதம் கழித்து கருநாகத்தின் வாயைத் திறந்து அந்த ஸ்தோராஞ்சனத்தை எடுத்து அத்துடன் மல்லிகை மொட்டு இந்துப்பு சேர்த்து அரைத்துக் கிடைக்கும் அருமருந்து மூலம் கண்பார்வை திறக்கும்.

**கருக்கலைப்பு:** பாம்பின் தோல் மருந்தாகப் பயன்படுகிறது.

**காலரா என்னும் வாந்திபேதி** : இதற்கும் பாம்பின் விஷத்தை அளவோடு பயன்படுத்தினால் நோய் நீங்கும். ஸுசுருதர் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே

பாமபு விஷத்தை, மனிதனின் பலவித நோய்களுக்கு மருந்தாகப் பயன்படுத்தி வெற்றி கண்டுள்ளார். விஞ்ஞானம் வளர்ச்சியடையாத அந்தக் காலத்திலேயே விந்தை புரிந்த ஸுசுருதர், எதிர்கால மருத்துவத்துறைக்குப் பலம் பொருந்திய அடித்தளத்தை உருவாக்கியுள்ளார் என்பது உண்மை. இன்றைய தினம் பாம்பின் விஷம் மருத்துவத்துறையில் மாமருந்தாகப் பயன்படுத்துவதைப் புதுமையெனப் போற்றுவோர். இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னேயே கையாளப்பட்டுள்ளதென்பதை அறியும் போது வியப்பும் பெருமையும் அடையாமல் இருக்கமுடியாது.

## 4. நூலின் சாரம்

இந்த நூலில் ஆறு ஸ்தானங்கள் அடங்கியுள்ளன.

1. **ஸுத்திரஸ்தானம் :**

   இதில் 46 அத்தியாயங்கள் உள்ளன. மருத்துவத்தில் சிறப்புப்பொருள்கள், அறுவை சிகிச்சைக்குரிய கருவிகள், இயந்திரக்கருவிகள் ஷார நெருப்பு சிகிச்சை முறைகள், அரிஷ்டத்தை அறியும் வகைகள் பொருள்களின் தன்மைகள் ஆகியவை விளக்கப்பட்டுள்ளன.

2. **நிதானஸ்தானம் :**

   ஆயுர் வேதத்தின் ஒரு பிரிவான அறுவை சிகிச்சை முறையை ஆசான் தன்வந்தரி மூலம் சீடர் ஸுசுருதர் கற்றுணர்ந்தார். அதன் பயனாக அவர் எழுதிய நூல்தான் ஸுசுருதஸம்ஹிதை என்பது. இதில் 16 அத்தியாயங்கள் உள்ளன. நோய்களின் அறிகுறிகள், அவை தோன்றக் காரணங்கள் அவற்றின் வகைகள், இலக்கணங்கள் கூறப்பட்டுள்ளன.

3. **சாரீரஸ்தானம் :**

   இதில் 10 அத்தியாயங்கள் உள்ளன. உலகப்படைப்பு, மனிதப்படைப்பு, உடற்கூறு பற்றிய விளக்கங்கள், கரு உருவாகும் வகை, கருவைக் காக்கும் முறை ஆகியவை கூறப்பட்டுள்ளன.

4.

இதில் 40 அத்தியாயங்கள் உள்ளன. அறுவை சிகிச்சை முறை, ரசாயன வாஜிகரண முறைகள், பஞ்சகர்மா சிகிச்சை முறைகள் சொல்லப் ்ள்ளன.

5. **கல்பஸ்தானம் :**

இதில் 8 அத்தியாயங்கள் உள்ளன. விஷ சிகிச்சை முறைகள் பற்றிய விளக்கங்கள் உள்ளன.

6. **உத்தரஸ்தானம் :**

இதில் 66 அத்தியாயங்கள் உள்ளன. முதல் 38 அத்தியாயங்கள் கொண்ட முதற் பகுதியில் கண், காது,மூக்கு, காமாலை, பீநஸம், சிறுநீர்த்தடை போன்ற நோய்களுக்குச் சிகிச்சை முறைகள், குழந்தை மருத்துவம், சாலாக்கியம், உடல் சிகிச்சை முறைகள், பூத வித்யை (தெய்வ குற்றம்) அதைச் சார்ந்த மன நோய்கள் ஆகியவை விரிவாகக் கூறப்பட்டுள்ளன. அறுவை சிகிச்சைக்குரிய கருவிகள் பற்றிய விரிவான விளக்கங்கள் சிறப்புப் பகுதியாகப் போற்றப்படுகின்றன.

## 5. இந்தியர்கள் அறிவியலுக்கு வழிகாட்டி

விஞ்ஞான முன்னேற்றத்தின் விளைவால் மருத்துவத்தில் அறுவை சிகிச்சை முறைகள் நவீனப்படுத்தப் பட்டுள்ளன. அற்புதமான சாதனைகள் நிகழ்த்தப்படுகின்றன. ஆனால் இந்த வளர்ச்சிக்கெல்லாம் முன்னோடியாகத் திகழ்ந்தவர் ஸுசுருதர் என்பதை 2000 ஆண்டுகளுக்கு முன் எழுதப்பட்ட அறுவை சிகிச்சை முறைகள் நமக்குத் தெள்ளத் தெளிய விளக்குகின்றன. அறுவைச் சிகிச்சையின் போது நோயாளிக்கு வலி தெரியாமலிருக்க மயக்கம் தருவது என்பது ஸுசருதரின் சிகிச்சை முறை. இதற்காக நோயாளிக்கு மயக்கம் தர கள்ளுண்ண வைக்கப்படுகிறது. கள் குடித்த நோயாளி நினைவை இழப்பார். அறுவை சிகிச்சை உடனே தொடங்கப்படும். இதை ட்வாப்ளெ தமது (Twhaple) என்னும் ஆங்கிலேயர்

பெரிதும் பாராட்டியுள்ளார். ஸுசுருதர் அனஸ்தீசியா என்னும் நோயாளிக்கு மயக்கம் வரவழைத்தல் முறையிலும் முன்னோடியாகத் திகழ்ந்தார் என்று 'The Story of wound repair' நூலில் சிறப்பித்துக் கூறியுள்ளார்.

மூக்கு, காதுகள் விபத்தில் அறுபட்டால், உடலின் மற்ற பகுதியிலிருந்து சதையை அறுத்து இணைக்கச் செய்யும் அறுவை சிகிச்சை முறை பிளாஸ்டிக் சர்ஜரி (Plastic Surgery) எனப்படும். இந்த முறையை ஆதிகால இந்திய மருத்துவர்களிடமிருந்து இரவலாகப் பெற்றதாக, ஆங்கிலேய மருத்துவர் வெபர் (Weber) தமது நூலில் குறிப்பிட்டுள்ளார் ("Our modern surgeons have been able to borrow from them (Hindus) the operations of Rhinoplasty") ஹிர்ஸெஹ்பெர்க் (Hirsehberg) என்னும் ஆங்கிலேயர் தமது நூலில் இதே கருத்தை கீழ்க்கண்டவாறு வலியுறுத்தியுள்ளார்.

இந்திய மருத்துவர்கள் தந்திரமாகக் கையாண்ட அறுவை சிகிச்சை முறைகள், வெள்ளையர்களுக்குத் தெரிந்தபின்தான் அவற்றைப் பின்பற்றி ஐரோப்பாவில் நடத்தப்படும் பிளாஸ்டிக் அறுவை சிகிச்சைமுறை பதிய பரிமாணத்தைப் பெற்றுள்ளது. தோல் மாற்று சிகிச்சைக்கு இந்தியர்கள்தான் முழுக்க முழுக்க முன்னோடியாக விளங்கினார்கள். (The Whole plastic surgery in Europe has taken its new flight when these cunning devices of Indian workmen become known to us. The transplanting of the viable skin flaps is also as essentially Indian method). இறந்த உடலைப் புடம் செய்து ஆராய்ச்சி செய்யும் 'Anatomy' என்ற முறையை ஸசுருதர் தமது நூலில் சாரீரஸ்தானம் என்ற பகுதியில் விளக்கியுள்ளார். இக்கருத்தை ஹார்நலே (Hornele) என்ற மேனாட்டவர் புகழ்ந்து கூறியுள்ளார். உடற்கூறு பற்றியும் நுண்ணிய நரம்புகள் முதற்கொண்டு அனைத்து உறுப்புக்களையும் ஆராய்ந்து அறிவதில் இந்திய மருத்துவர்கள், வல்லுனர்கள் என்று கீத் (Keith) மேக்டொனல் (McDonal) பாராட்டியுள்ளனர்.

## 6. பிளாஸ்டிக் சர்ஜரிக்கு இந்தியர்களே வழிகாட்டி

ஆங்கிலேயருக்கும் திப்புசுல்தானுக்கும் 1792ல் நடந்த போரில், கோவார்ஜி என்ற வண்டிக்காரன், நான்கு போர் வீரர்கள் காயம் அடைந்தனர். மூக்கையும் இழந்தனர். அவர்களுக்கு புனே மராத்திய மருத்துவர் சிகிச்சை அளித்தார். அறுபட்ட மூக்கை பிளாஸ்டிக் அறுவை சிகிச்சை மூலம் மீண்டும் பொருத்தப்பட்டுள்ளன. இந்த நவீன சிகிச்சை முறையை டொமாஸ் குருஸோ (Domas Cruso) ஜேம்ஸ் பிண்டலே

(James Pindley) என்னும் ஆங்கிலேயர்கள் கண்ணாரக் கண்டு வியந்தனர். பின்பு இதே முறையை இங்கிலாந்துக்குச் சென்று கையாண்டனர். இந்தச் செய்தி புகைப் படங்களுடன், அன்றைய மதராஸ் கெஜட்டிலும் 1794, அக்டோபரில் லண்டனில் வெளியான 'ஜென்டில்மேன் மேகசின்' என்னும் இதழிலும் வெளியாகியுள்ளன.

## 7. அறிவியலை தோற்றுவித்தவ் ஸுசுருதர்

தாய் வயிற்றில் உள்ள கருவை அறுவை சிகிச்சையால் நீக்குவது; குழந்தைப்பிறப்பின் போது சிசேரியன் என்ற அறுவை சிகிச்சை மூலம், கருவிலிருந்து குழந்தையை வெளிக்கொணர்வது இத்தகைய விஞ்ஞான விந்தைகளை 2000 ஆண்டுகளுக்குமுன் ஸசுருதர் தமது நூலில் குறிப்பிட்டுள்ளார். உயிர் அணுக்களைக் கொண்டு செல்லும் நரம்புகளைத் துண்டித்து மகப்பேறு ஏற்படாமல் செய்வது கருத்தடை முறை. இந்த முறை பற்றி அதர்வண வேதம் ஆயுர்வேத பகுதியில் தெளிவாகச் சொல்லப்பட்டள்ளது. உடலுறவின் போது கரு தோன்றாமல் தடுக்கும் முறை ஆரணிய உபநிஷத்தில் விளக்கப்பட்டுள்ளது. கருச்சிதைவு ஏற்படுத்தும் பின்விளைவுகளை சீர் செய்யும் முறை சொல்லப்பட்டுள்ளது. பிறக்கப் போகும் குழந்தை விருப்பப்படி ஆணாக அல்லது பெண்ணாகப் பிறக்க வழிவகையும் சொல்லப்பட்டள்ளது.

**ஸுசுருதர் மேலும் கூறுவதாவது:**

உடலின் 107 உயிர் நிலைகளில் (மர்ம ஸ்தானங்கள்) அறுவை சிகிச்சை செய்யக் கூடாது; செய்வது கட்டாயம் எனில் அதிக கவனம் செலுத்த வேண்டும்.

அறுவை சிகிச்சைக்குப் பயன்படத் தேவையான 64 ஆயுதங்களின் பெயர்களைக் குறிப்பிட்டுள்ளார்.

ஆண்மை பெறுவதற்காக, இந்திரன் தான் இழந்த விதைக்குப்பதிலாக ஆட்டின் விதையைப் பொருத்திக் கொண்டு பயன் பெற்றான். இந்தத் தகவல், ராமாயணத்தில் சொல்லப்பட்டுள்ளது.

இக்காலத்தில் விலங்குகளின் உறுப்புகளைப் பொருத்தி விஞ்ஞான விந்தைகளை மருத்துவத்துறை நடத்திக் காட்டுகிறது. ராமாயணத்தில் குறிப்பிடப் பட்ட தகவல் இதன் மூலம் உறுதி செய்யப்படலாம்.

## தமிழாக்கம்

இந்நூலில் சூத்ர ஸ்தானம் நிதான ஸ்தானம், சாரீர ஸ்தானம் சிகித்ஸா ஸ்தானம், கல்ப ஸ்தானம், உத்ர ஸ்தானம் என்ற ஆறு ஸ்தானங்களும் 186

அத்யாயங்களும் எட்டாயிரத்து முன்னூற்று மூன்று சுலோகங்களும் உள்ளன. B.A.M.S. என்ற ஐந்தாண்டு கால ஆயுர்வேத பட்டப்படிப்பிற்கு இந்நூல் முழுவதும் பகுதி பகுதியாக பாடநூலாக அமைந்துள்ளது. நான் தமிழக அரசின் இந்திய மருத்துவம் மற்றும் ஹோமியோபதி இயக்குநரகத்தில் ஆயுர்வேதப்பிரிவில் கௌரவத் தனிஅலுவலராகப் பணியாற்றிய பொழுது ஸுச்ருத ஸம்ஹிதையில் 6614 ஸ்லோகங்களைத் தமிழில் மொழி பெயர்த்து அளித்தேன். தமிழக அரசு அதை இரண்டு பகுதிகளாக அச்சிட்டு வெளியிட்டுள்ளது. அத்துடன் இத்திட்டத்தை தமிழக அரசு நிறுத்திவிட்டது. 1689 ஸ்லோகங்கள் கொண்ட உத்திரஸ்தானம் மூன்றாம் பகுதி (39 அத்யாயம் முதல் 66 அத்யாயம் வரையாக) தமிழாக்கம் செய்தால்தான் ஸுசுருதஸம்ஹிதை முழுவதும் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டதாகும்.

ஸ்ரீரங்கம் ஸ்ரீமத் ஆண்டவன் ஸ்ரீரங்க ராமானுஜ மஹா தேசிகன் ஸ்வாமிகளிடம் இதை விஞ்யாபித்து கொண்டேன். ஆண்டவன் ஸ்வாமிகள் ஆயுர்வேத மருத்துவத்தில் மிகப்பற்றுள்ளவர்கள். பல சிஷ்யர்களுக்கு கைவைத்யமாக பல வைத்யமுறைகளைச் சொல்லி பல பிணிகளைத் தீர்த்திருக்கிறார்கள். உடல் பிணியைத் தீர்க்கும் ஆயுர்வேத மருத்துவ சாஸ்த்திரத்தோடு ஆத்ம பிணியாகிய பாவத்தைப் போக்கவல்ல ஆன்மிகத்தையும் அறிந்த இம்மஹான் இந்த ஸுசுருத ஸம்ஹிதை மூன்றாவது தமிழாக்கப் பகுதியை ஸ்ரீரங்கம் ஸ்ரீமத் ஆண்டவன் ஸ்வாமிகள் ஆசிரமத்தின் வாயிலாக வெளியிடுவதற்கு ஏற்றுக்கொண்டு தேவையான ரூபாய் 50,000 (ஐம்பதாயிரம் ரூபாயையும்) அளித்து அருளினார்கள். ஸ்வாமியினுடைய பரமகருணையால் இந்நூல் வெளிவந்து ஆயுர்வேதம் பயிலும் மக்களுக்குப் பேருதவியாய் அமைந்துள்ளது. இத்தமிழாக்கத்தினால் ஆயுர் வேத கல்லூரி மாணவர்கள் மிகவும் பயனடைகிறார்கள். மருந்துகளைத் தயார் செய்யவும் மருத்துவம் செய்யவும் அறுவை சிகிச்சையைப் பற்றி விவரங்களை அறியவும் இது பயன்படும். ஸம்ஸ்க்ருதம் படிக்காத சாதாரண மக்களுக்கு இந்நூல் மிக்கப் பயனுள்ளதாக அமையும் என்பதில் ஐயமில்லை.

நான் தமிழக அரசின் ஆயுர்வேத மொழி பெயர்ப்பு பிரிவில் கௌரவத் தனிஅலுவலராக இருந்த பொழுது நான் தமிழில் மொழில் பெயர்த்தளித்த 15,000 ஸ்லோகங்கள் கொண்ட சரக ஸம்ஹிதா நூலும் மூன்று பகுதிகளாக

தமிழக அரசால் அச்சிடப்பட்டு வெளியிடப் பட்டிருப்பதை பெருமையோடு கூறிக் கொள்கிறேன்.

**இந்நூலின் சாரம்**

அறுவை சிகிச்சைப் பற்றிக் கூறவந்த இந்நூலில் உடல் மருத்துவத்தைப் பற்றிய (மூலிகை மருத்துவம்) குறிப்புகளும் ஏராளமாக உள்ளன. உடல் மருத்துவத்தைக் கூறவந்த சரக ஸம்ஹிதையில் இடம் பெறாத சில புதிய மூலிகைகளையும் மருத்துவ முறைகளையும் இங்கு காணலாம். மூலிகை (உடல்) மருத்துவமும் அறுவை சிகிச்சையும் ஒன்றோடொன்று பின்னிப் பிணைந்திருக்கிறது. மூலிகை மருந்துகளால் பிணியைத் தீர்க்க இயலாத பொழுதுதான் அறுவை சிகிச்சையை செய்ய வேண்டும் அறுவை சிகிச்சைக்கு முன்பும் மூலிகை மருத்துவம் மக்களுக்கு இன்றியமையாததது.அறுவை சிகிச்சைக்குப் பிறகு புண் ஆறி உடல் நலம்பெற மூலிகை மருத்துவம் வரப்பிரசாதமாக அமைகிறது. எனவே ஸுசுருத ஸம்ஹிதா நூலில் இவ்விரு மருத்துவ முறைகளையும் விரிவாகக் கூறியிருக்கிறார் சுஸ்ருதர். உதாரணமாக இதயம், ஆன்மா, நுரையீரல், மனது, ரசனை, கிட்னி, உடல், மது போன்ற கெட்டப் பழக்கங்கள், முதுமை, குடல், என இப்படி பற்பல விதமான பிணிகளைத்தீர்க்கும் சிகிச்சை முறைகள் இங்கு விளக்கப்பட்டிருக்கின்றன. உதாரணமாக கழிச்சல், குன்மம், வயிற்றுப்போக்கு, மலம், மூத்ரம் தடைபடுதல், ஹிரண்யா, நீர்ச்சுருக்கு போன்ற உடல் சம்பந்தமான பிணிகளின் தன்மையை விரிவாக காரணங்களோடு விளக்கி அதைப்போக்கும் முறையையும் அழகாக விளக்குகிறர் சுஸ்ருதர். அத்துடன் வாதம், பித்தம், சிலேஷ்மம் என்ற மூன்று தோஷங்களால் தான் எல்லாப் பிணிகளும் தோன்றுகின்றன. எந்த தோஷத்தினால் எந்த பிணி தோன்றுகிறது என்பதைப் பிணிவாரியாக எடுத்து அலசுகிறர் சுஸ்ருதர். நினைவாற்றல் குறைவு ஷயம், இருமல், குரல் மாற்றம், மனக்கோளாறு, நினைவாற்றல் குறைவு, காக்காய் வலி போன்ற மனோ நோய்களையும் வாத பித்த சிலேஷ்ம் அடிப்படையில் விளக்கமாகக் கூறியதோடு அதைத் தீர்க்கும் முறைகளையும் இங்கு விரிவாகக் காணலாம். கிட்னி சரியாக இயங்காத பொழுது அதைச் சரிப்படுத்த இங்கு கூறும் பாணி நவீன விஞ்ஞானிகளை திகைக்க வைக்கிறது. இந்நூலை கடாக்ஷித்து சில திருத்தங்கள் செய்து செப்பனிட்டு பூரண வடிவம் தந்து அதற்கு முத்திரை பதிப்பது போல் ஸ்ரீ முகமருளிய ஸ்ரீ ஆண்டவன் ஸ்வாமிகளுடைய சரணாரவிந்தங்களில் எனது பிரணாமங்களை சமர்பித்துக் கொள்கிறேன்

**எஸ். என் ஸ்ரீராமதேசிகன்**

D-5, டர்ன்புல்ஸ் ரோடு,

நந்தனம், சென்னை – 600 035

போன் : 435 4246



# எஸ். என். ஸ்ரீராமதேசிகனின் (21-6-1921) 60 ஆண்டு பன்முக கல்வித்தொண்டு

## பதவிகள்

1. ஆராய்ச்சி மாணவன், ஸ்ரீ வெங்கடேச்வரா கீழ்த்திசை ஆராய்ச்சி நிறுவனம், திருப்பதி 1943 முதல் 2½ ஆண்டுகள்.

   *(ஆழ்வார்கள் பாசுரங்களில் சங்ககால இலக்கியச் செல்வாக்கைப் பற்றி ஆராய்ந்து கட்டுரை வரைதல்)*

2. ஆராய்ச்சிப் புலவர், இந்திய அரசாங்கம், புது தில்லி – 2½ ஆண்டுகள் (1961 முதல் 1963 வரை)

   *ந்யாயபரிசிஷ்டம் என்ற அரியதொரு பழமையான தர்க்க சாஸ்திர நூல், புதியதொரு உரையுடன் பதிப்பிக்கப் பெற்று, ஆராய்ச்சி முறையில் எழுதிய முன்னுரையுடன் திருப்பதி கேந்திரிய ஸம்ஸ்கிருத வித்யாபீடத்தின் வாயிலாக வெளியிடப்பட்டுள்ளது.)*

3. பகுதி நேர விரிவுரையாளர் – (ஸம்ஸ்கிருதம்) – கிண்டி இன்ஜினீயரிங் கல்லூரி, அடிப்படை ஆராய்ச்சி பிரிவு – 4 ஆண்டுகள் (1965 – 1969)

   *(விஞ்ஞான நுணுக்கங்கள் அடங்கிய பழங்கால தர்க்க சாஸ்திர நூல்களை பொறியியல் கல்லூரி ஆசிரியர்களுக்கு விஞ்ஞான ரீதியில் போதித்து அக்கருத்துக்களை ஆராய்ச்சிக் கட்டுரையாக எழுதி, கிண்டி பொறியியல் கல்லூரி அடிப்படை ஆராய்ச்சி நிறுவனத்தின் மூலம் அச்சிட்டு வெளியிடுதல்)*

4. ஆராய்ச்சி அலுவலர் – கேந்திரீய ஸம்ஸ்கிருத வித்யா பீடம் – திருப்பதி

– இது ஒரு இந்திய அரசாங்க நிறுவனம், இன்று ஸம்ஸ்கிருத பல்கலைக்கழகம் 3½ ஆண்டுகள் (1972 – 1975)

*(சங்ககாலம் தொடங்கி 20வது நூற்றாண்டு வரையிலுள்ள தமிழ் நூல்களையும் வேதகாலம் தொடங்கி இன்று வரையாக உள்ள வடமொழி நூல்களையும் ஒப்பிட்டுப் பார்த்து ஆராய்ந்து ஒன்றோடொன்று கருத்தொற்றுமை கொண்டு இரு கண்கள் போல் இயங்கி வரும் நிலையைப் பற்றி 1000 பக்கங்களில் ஆராய்ச்சிக் கட்டுரை தயார் செய்தல்).*

5. கௌரவ ஆசிரியர் – தஞ்சாவூர் சரஸ்வதி மஹால் நூலகம் – 1980

   *(மஹாபாரதக் கதையின் சுருக்கத்தை விளக்கும் பிராஸ பாரதம் என்னும் வடமொழி நூலின் தமிழாக்கம். இந்நூல் நூலகத்தின் வாயிலாக வெளியிடப்பட்டது).*

6. கௌரவ ஆராய்ச்சி செயலாளர் – தமிழ் – ஸம்ஸ்கிருதம் மற்றும் பிற மொழி ஆராய்ச்சி நிறுவனம், சென்னை – 1975 – 1981

   *(வெகுநாட்களாக தமிழ், ஸம்ஸ்கிருத மொழிகளுக்கிடையே இருந்த சர்ச்சைக்குரிய சில கருத்து வேறுபாடுகளை அகற்றி இரு மொழியாளர்களுக்கும் இரு மொழிகளுக்கும் இடையே ஒற்றுமை காண முறையே சென்னை கவர்னர் கே.கே. ஷா, பிரபுதாஸ் பட்வாரி, மோகன்லால் சுகாடியா ஆகியவர்களைத் தலைவர்களாகக் கொண்ட இந்நிறுவனத்தின் கௌரவ ஆராய்ச்சி அலுவலராக இருந்து பல அறிஞர்கள் எழுதிய ஆராய்ச்சிக் கட்டுரை அடங்கிய ஒரு தொகுப்பை வெளியிடுதல், பல்துறைகளில் புகழ்பெற்ற பல அறிஞர்களைக் கொண்ட பல துணைக் கமிட்டிகளை அமைத்து கருத்தரங்கு மாநாடுகளை நடத்தி இரு மொழிகளுக்கும் பாலம் அமைத்து தொண்டாற்றி வருதல்).*

7. கௌரவத் தனி அலுவலர் – ஆயூர்வேத மொழி பெயர்ப்புப் பிரிவு, இந்திய மருத்துவம் மற்றும் ஓமியோபதி இயக்குநரகம், தமிழக அரசு, சென்னை. 1983 முதல் 1996 வரை

   *(13 ஆண்டு காலமாக பழம்பெரும் ஸம்ஸ்கிருத மொழியிலுள்ள ஆயுர்வேத நூல்களை தமிழாக்கம் செய்து, விஞ்ஞான உலகில் இன்று காணப்படும் அரிய நவீன விஞ்ஞான நுணுக்கங்களை விளக்கி பல மூலிகைப் படங்களையும் இணைத்து தயாரித்த நூல், தமிழக அரசின் வாயிலாக ஐந்து பகுதிகளாக அச்சிட்டு வெளியாகிருக்கிறது).*

8. உதவி ஆசிரியர் – 'அனுமான்' தமிழ் வாரப்பதிப்பு – 1950.

9. சரஸ்வதி கிரி வேத ஸம்ஸ்கிருத பாடசாலையின் தலைவராக இருந்து இலவச ஸம்ஸ்கிருத வகுப்புகளை நடத்தி பல ஸம்ஸ்கிருத பரீட்சைகளுக்கு மாணவர்களை அனுப்பி தொண்டாற்றியுள்ளார். (1973–1986)

10. கௌரவ ஆலோசகர் – சென்னை அரசு கீழ்த்திசை ஓலைச்சுவடி நூலகம், சென்னை, (1988) ஓர் ஆண்டு. (வெகு காலமாக அச்சேறாமல் ஓலைச்சுவடி வடிவத்திலுள்ள தமிழ் ஸம்ஸ்கிருத மொழி நூல்களை அச்சிடுவதற்கு ஏற்றவாறு பதிப்பித்து அச்சிட திட்டம் வகுத்து அளித்தல்)

11. 1940 முதல் இன்று வரை எழுத்தாளராக இருந்து, பல ஆங்கில, தமிழ் தினசரி, வாரப் பத்திரிகைகளில் ஆராய்ச்சிக் கட்டுரை, புத்தக விமர்சனம் எழுதி வருதல்.

12. ஸ்தாபகச் செயலர் – தென்னிந்திய ஸம்ஸ்கிருத சங்கம், சென்னை. 1950 முதல் இன்று வரை.

(1950 முதல் இன்று வரை இச்சங்கத்தின் வாயிலாக பல இலவச ஸம்ஸ்கிருத வகுப்புகள் பல மகாநாடுகள், ஆராய்ச்சி அரங்கங்கள், அறக்கட்டளை சொற்பொழிவுகள் ஆகியவற்றை நடத்தி ஸம்ஸ்கிருத மொழிக்குத் தொண்டு புரிதல்)

## பாராட்டுகள்

1. ஸம்ஸ்கிருத புலமைக்காக இந்திய ஜனாதிபதி வழங்கிய பாராட்டு – 1971.
2. உத்தரப்பிரதேச அரசு, அவ்வையார் ஸம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு நூலுக்குப் பரிசு அளித்தல் – 1973.
3. தமிழக அரசு, மொழி பெயர்ப்புப் பணிக்காக வள்ளுவர் விழாவில் பொன்னாடை அளித்து கௌரவித்தல் – 1986.
4. சரகஸம்ஹிதை மொழி பெயர்ப்புப் பணிக்காக இந்திய மருத்துவ ஓமியோபதி இயக்குநரகம், சால்வை அளித்து கௌரவித்தல் – 1988.
5. சென்னை பல்கலைக் கழகத்தில் பி.யு.சி சிறப்பு ஸம்ஸ்கிருத தேர்வுக்கு அவ்வையார் ஸம்ஸ்கிருத மொழிபெயர்ப்பு நூல் பாடப்புத்தகமாக வைக்கப்பட்டது. (1973 முதல்)
6. தமிழ் எழுத்தாளர் சங்கம், சென்னை – பொற்பதக்கம் அளித்து கௌரவித்தல் – 1969.
7. கானாக்குடி கம்பன் கழகம், பொன்னாடை போர்த்தி கௌரவித்தல் – 1965
8. சென்னை பாரதியார் சங்கம் கேடயம் அளித்துக் கௌரவித்தல் – 1963.
9. சுகர் மார்கண்டேயர் ஆராய்ச்சி மையத்தின் சார்பில் சென்னையில் நடந்த

தன்வந்திரி விழாவி அமிர்த கலசம் (வெள்ளிக் கோப்பை) அளித்துப் பாராட்டப்படுதல். (7-3-97)

10. சென்னை அரசு ப்ளஸ் ஒன்று தேர்வுக்கு திருக்குறள், பாரதியார், ஔவையார் சமஸ்கிருத மொழி பெயர்ப்பு நூல்களிலிருந்து சில சுலோகங்கள் தேர்ந்தெடுக்கப்பட்டு பாட நூலாக வைக்கப்பட்டுள்ளன – 1996 முதல்.

11. ஸ்ரீ ஜெயேந்திர சரஸ்வதி ஸ்வாமிகள் எஸ்.என். ஸ்ரீராமதேசிகன் அவர்களுக்கு " ஆயுர் வேத பாரதீ" என்ற பட்டத்தை காஞ்சி சங்கர மடத்தில் நடந்த விழாவில் 20.6.1999 அன்று வழங்கினார்கள்.

12. இலக்கியச் சங்கம் ஸம்ஸ்கிருத ரத்னா என்ற பட்டம் வழங்கி கௌரவித்தல் – 1970.

13. தமிழக அரசு – கலைமாமணி பட்டம் அளித்து கௌரவித்தல் – 1993 மார்ச்சு.

14. ஸ்ரீ ஸ்ரீரங்கம் ஸ்ரீமத் ஆண்டவன் ஸ்ரீரங்க ராமானுஜ மஹாதேசிகன் ஸ்வாமிகள், எஸ்.என். ஸ்ரீராமதேசிகனுக்கு 'அபிநவ விசுருதா ஸூசுருத' என்றபட்டத்தை சென்னை ஆண்டவன் ஆஸ்ரமத்தில் 2.4.2000 அன்று நடந்த விழாவில் வழங்கினார்கள்.

15. 16-12-2001 அன்று பார்த்தசாரதி ஸ்வாமி சங்கீத சபா இசை விழாவில் அஹோபிலமடம் ஜீயர் அவர்களால் பரத நாட்டிய சாஸ்திர நூலை தமிழில் மொழி பெயர்த்ததற்காக பொன்னாடைப் போர்த்தி நினைவுப் பரிசு வழங்கி கௌரவிக்கப் பட்டார்.

## வெளியீடுகள்

1. அஷ்டாங்கசங்கிரகம், சரகஸம்ஹிதா, ஸூசுருத சம்ஹிதா ஆகிய 25,000 சுலோகங்கள் கொண்ட வடமொழி ஆயுர் வேத நூல்கள் தமிழாக்கம் செய்யப்பட்டு தமிழக அரசு ஆறு பகுதிகளாக 6400 பக்கங்களில் வெளியிடப்பட்டுள்ளன.

2. பரத முனிவரால் எழுதப்பெற்ற 6000 சுலோகங்கள் 36 அத்தியாயங்கள் கொண்ட 'பரத நாட்டிய சாஸ்திரம்' என்ற ஸம்ஸ்கிருத நூல் தமிழாக்கம் செய்யப்பட்டு உலகத்தமிழ் ஆராய்ச்சி நிறுவனத்தின் வாயிலாக வெளியிடப்பட்டுள்ளது.

3. திருக்குறள், ஸம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு தமிழ் ஆங்கிலவிளக்க உரையுடன்.

4. நாலடியார், ஸம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு தமிழ் ஆங்கில விளக்க உரையுடன்.

5. சுப்பிரமணிய பாரதியார் நூல்களின் ஸம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு, ஆங்கில உரையுடன்.

6. பத்துப்பாட்டு, (சங்க இலக்கியம், திருமுருகாற்றுப்படை, முல்லைப்பாட்டு) ஸம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு.

7. எட்டுத் தொகை, (சங்க இலக்கியம் – பரிபாடல்) ஸம்ஸ்கிருத மொழிபெயர்ப்பு.

8. கர்பராமாயணம், (பாலகாண்டம்) ஸம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு

9. சிலப்பதிகாரம் – ஸம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு.

10. அவ்வையார் நீதி நூல்கள் – ஸம்ஸ்கிருத மொழிபெயர்ப்பு

11. ஆந்திரகவி வேமனாவின் பாடல்கள், ஸம்ஸ்கிருத, தமிழ்மொழி பெயர்ப்புகளுடன்.

12. ஏழு நாடகக் கதைகள் – (ஏழு ஸம்ஸ்கிருத நாடகங்களின் கதைச் சுருக்கம்) தமிழில்.

13. ஸ்ரீ கிருஷ்ண லீலா – ஸ்ரீ கிருஷ்ணபரமாத்மாவின் சரிதம் – குழந்தைப் பருவம் முதல் – தமிழ்.

14. இரு மொழி இலக்கிய இன்பம் – (ஆராய்ச்சிக் கட்டுரைகளின் தொகுப்பு) தமிழ்.

15. மகாபாரதத்தை இயற்றியவர் யார்? (ஓர் ஆராய்ச்சிக் கட்டுரை) தமிழ்

16. கிருஷ்ண கதா சங்கிரகா – (ஸம்ஸ்கிருத சுலோகங்கள்)

17. தேசிகமணி சதகம் – (வேதாந்த தேசிகரின் வாழ்க்கை வரலாறு) – ஸம்ஸ்கிருத சுலோகங்கள்.

18. திருப்பாவை – ஸம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு.

## பாராட்டியவர்கள்

1. இராஜாஜி
2. வி.வி. கிரி
3. மொரார்ஜி தேசாய்
4. காஞ்சி சங்கராச்சாரியார்
5. சிருங்கேரி சங்கராச்சாரியார்
6. கே.கே. ஷா. ஆளுநர்
7. பிரபுதாஸ் பட்வாரி. ஆளுநர்
8. டாக்டர். சி.பி. ராமஸ்வாமி அய்யர்
9. எம்.ஜி.ஆர்
10. டாக்டர் புரட்சித்தலைவி தமிழக முதல்வர் ஜெ. ஜெயலலிதா

# ஆசிரியருக்கு அறிஞர் பெருமக்களின் பாராட்டுக்கள்

இலக்கியம், மருத்துவம், பொறியியல், கலை, ஆன்மீகம் ஆகியவற்றில் ஆராய்ச்சி செய்து நூல்களை வெளியிட்டுள்ளார்.

ஆசிரியருடைய நூல்களுக்கு முன்னுரை எழுதியும், நூல் வெளியீட்டு விழாவில் தலைமை தாங்கி அவற்றை வெளியிட்டும், ஆசிரியருடைய தொண்டைப் பாராட்டிப் பரிசளித்த ஜனாதிபதி, பாரதப் பிரதமர், கவர்னர்கள், துணை வேந்தர்கள், மடாதிபதிகள், நீதிபதிகள், மத்திய அமைச்சர்கள் ஆகியோருடைய பெயர்களும் பாராட்டு வழங்கிய தேதிகளும் கீழே தரப்படுகின்றன.

## ஜனாதிபதி

திரு. டாக்டர் வி.வி. கிரி (ஜனாதிபதி)
பத்துப்பாட்டு, ஸம்ஸ்கிருத மொழிபெயர்ப்பு நூலை
வெளியிட்டுப் பாராட்டிப் பரிசளித்தார். 16–02–1973

## துணை ஜனாதிபதிகள்

1. திரு. டாக்டர் வி.வி.கிரி (துணை ஜனாதிபதி)
சிலப்பதிகார ஸம்ஸ்கிருத மொழிப்பெயர்ப்பு நூலை
வெளியிட்டுப் பாராட்டிப் பரிசளித்தார். 21–01–1968

2. திரு. பி.டி. ஜட்டி (துணை ஜனாதிபதி)
திருக்குறள் ஸம்ஸ்கிருத மொழிபெயர்ப்பு இரண்டாம்
பகுதிக்கு முன்னுரை எழுதி பாராட்டியுள்ளார். 15–03–1979

## பாரதப் பிரதமர்

திரு. மொரார்ஜி தேசாய் (பாரதப் பிரதமர்)
திருக்குறள் ஸம்ஸ்கிருத மொழிபெயர்ப்பு இரண்டு
பகுதிகளையும் வெளியிட்டு பரிசளித்தார். 14–04–1979

## முதுபெரும் பேரறிஞர்

திரு. ராஜாஜி (முதல் இந்திய கவர்னர் ஜெனரல்)
கம்பராமாயண ஸம்ஸ்கிருத மொழிபெயர்ப்பு (பாலகாண்டம்)
முதற்பகுதியை வெளியிட்டுப் பாராட்டி பரிசளித்தார். 1–11–1964

## கவர்னர்கள்

1. திரு.வி.வி. கிரி (கேரள கவர்னர்),
வேமன பத்ய ஸம்ஸ்கிருத மொழிபெயர்ப்பு நூல்
வெளியீட்டு விழாவிற்கு தலைமை தாங்கினார். 28–03–1962

2. திரு. ஸ்ரீ. ஸ்ரீபிரகாசா (மஹாராஷ்டிர கவர்னர்),
ஆசிரியரின் புலமையை பாராட்டி நற்சான்று
அளித்துள்ளார். 30–3–1957

3. திரு. டாக்டர் சம்பூர்ணானந்தா (ராஜஸ்தான் கவர்னர்),
கம்பராமாயண ஸமஸ்கிருத மொழிபெயர்ப்பு (பாலகாண்டம்)
நூலுக்கு முன்னுரை எழுதி சிறப்பித்திருக்கிறார். 19–10–1964

4. திரு. பி. ராமகிருஷ்ண ராவ் (உத்தர பிரதேச கவர்னர்),
ஆண்டாள் திருப்பாவை ஸமஸ்கிருத மொழிபெயர்ப்பு
நூலுக்கு முன்னுரை எழுதியிருக்கிறார். 24–4–1961

5. திரு.எம். அனந்தசயனமய்யங்கார் (பீஹார் கவர்னர்),
வேமன பத்ய ஸம்ஸ்கிருத மொழிபெயர்ப்பு
நூலுக்கு முன்னுரை எழுதியுள்ளார். 28–6–1962

அவ்வையார் ஸம்ஸ்கிருத மொழிபெயர்ப்பு நூல்
வெளியீட்டு விழாவிற்கு தலைமையும் தாங்கினார். 5–7–1971

6. திரு.கே.கே.ஷா (தமிழ்நாடு கவர்னர்),
பத்துப்பாட்டு ஸம்ஸ்கிருத மொழிபெயர்ப்பு
நூலுக்கு முன்னுரை எழுதியுள்ளார். 20–12–1972

அந்நூல் வெளியீட்டு விழாவிற்கு தலைமையும்
தாங்கியுள்ளார். 16–02–1973

அவ்வையார் ஸம்ஸ்கிருத மொழிபெயர்ப்பு
நூலை வெளியிட்டார். 05–07–1971

7. திரு. பிரபுதாஸ் பி. பட்வாரி (தமிழ்நாடு கவர்னர்) எட்டுத்தொகை ஸம்ஸ்கிருத மொழிபெயர்ப்பு நூலுக்கு முன்னுரை எழுதியுள்ளார். 16–08–1977

அந்நூல் வெளியீட்டு விழாவிற்கு தலைமையும் தாங்கியுள்ளார். 23–10–1977

8. திரு. பீஷ்மநாராயணசிங் (தமிழ்நாடு கவர்னர்) கலைமாமணி பட்டத்திற்கான பொற்பதக்கத்தை அளித்து சால்வையும் போர்த்தி கௌரவித்தார். 11–03–1993

9. டாக்டர் கே.எம். முன்ஷி (முன்னாள் கவர்னர், உத்திரபிரதேச அரசு. தலைவர், பாரதீய வித்யா பவன், பம்பாய்)

கம்பராமாயண ஸம்ஸ்கிருத மொழிபெயர்ப்பு நூலைப்படித்து புகழ்ந்து பாராட்டுகளை வழங்கியுள்ளார். 19–10–1964

## தமிழக முதல்வர்கள்

1. திரு. எம். பக்தவத்ஸலம் (தமிழ்நாடு முதல்வர்) வேமனபத்ய ஸம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு நூலை வெளியிட்டுள்ளார். 23–08–1962

2. திரு. டாக்டர் எம்.ஜி.ஆர். (தமிழக முதல்வர்) மொழிபெயர்ப்புப் பணியைப் பாராட்டி தமிழர் திருநாள், வள்ளுவர் விழாவில் பொன்னாடை போர்த்தி கௌரவித்தார். 16–01–1986

சரக ஸம்ஹிதா தமிழாக்க நூலின் இரண்டாம் பகுதிக்கு வாழ்த்துரை வழங்கி அந்நூலுக்கு பெருமையும் சேர்த்துள்ளார். 04–03–1987

3. புரட்சி தலைவி டாக்டர் ஜெ. ஜெயலலிதா (தமிழக முதல்வர்) கலைமாமணி பட்டம் அளித்து கௌரவித்தார். 11-03-1993

ஸுசுருத ஸம்ஹிதா தமிழாக்க நூல் முதல் பகுதிக்கு வாழ்த்துரை வழங்கிப் பாராட்டி அந்நூலுக்குச் சிறப்பைத் தந்துள்ளார். 10-09-1992

## ய மந்திரிகள்

1. திரு. சி.ஆர். பட்டாபிராமன்
 ந்திய அரசு செய்தி ஒலிபரப்புத் துறை அமைச்சர்)

கம்பராமாயண ஸம்ஸ்கிருத மொழிபெயர்ப்பு (பால காண்டம்) நூலுக்கு பாராட்டுரை வழங்கியுள்ளார். 15-10-1964

2. திரு. பா. ராமச்சந்திரன் (மத்திய அமைச்சர் – எரிசக்தி) எட்டுத்தொகை ஸம்ஸ்கிருத மொழிபெயர்ப்பு நூலை வெளியிட்டுப் பாராட்டினார். 23-10-1977

3. திரு. டாக்டர் கைலாஸநாத கட்ஜு
 (மத்திய உள்துறை அமைச்சர்)
 கம்பராமாயண (பாலகாண்டம்) ஸம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு நூலுக்கு பாராட்டுரை வழங்கி சிறப்பித்துள்ளார். 19-10-1964

## நீதிபதிகள்

1. ஜஸ்டிஸ் பி. ராஜகோபாலன்
 (பிரதம நீதிபதி, உயர்நீதி மன்றம் சென்னை)
 திருப்பாவை ஸம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு நூலை வெளியிட்டுப் பேசினார். 12-7-1961

2. திரு. எம். பதஞ்சலி சாஸ்திரி
 (உச்ச நீதி மன்ற தலைமை நீதிபதி – டெல்லி)
 திருக்குறள் ஸம்ஸ்கிருத மொழிபெயர்ப்பு நூல் முதற்பகுதி வெளியீட்டு விழாவிற்கு தலைமை தாங்கினார். 28-03-1962

3. திரு. ஜஸ்டிஸ் எம். அனந்த நாராயணன்
(உயர்நீதி மன்ற தலைமை நீதிபதி – தமிழ்நாடு)
சிலப்பதிகார ஸம்ஸ்கிருத மொழிபெயர்ப்பு நூல் வெளியீட்டு
விழாவிற்கு தலைமை தாங்கினார். 21–1–1968

4. திரு. டி.எல். வெங்கட்ராமய்யர்
(உச்ச நீதிபதி – டெல்லி)
ஏழு நாடகக் கதை நூலுக்கு முன்னுரை எழுதியுள்ளார். 1–8–1961

## துணை வேந்தர்கள்

1. திரு. டாக்டர் சி.பி. ராமஸ்வாமி அய்யர்
(அண்ணாமலைப் பல்கலைக் கழக துணைவேந்தர்)
பாராதியார் ஸம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு நூலை
வெளியிட்டுப் பாராட்டினார். 4–9–1963

கம்பராமாயண (பாலகாண்டம்) ஸம்ஸ்கிருத
மொழிபெயர்ப்பு நூலுக்கு முன்னுரையும் வழகியுள்ளார். 19–10–1964

2. டாக்டர் எஸ். கோவிந்தராஜுலு
(வெங்கடேஸ்வரா பல்கலைக் கழக துணைவேந்தர்
திருப்பதி) பாரதியார் ஸம்ஸ்கிருத மொழிபெயர்ப்பு
நூலுக்கு முன்னுரை எழுதியுள்ளார். 27–8–1963

3. திரு. டாக்டர் கே.ஆர். ஸ்ரீநிவாசய்யங்கார்
(ஆந்திரா பல்கலைக் கழக துணைவேந்தர்)
பத்துப்பாட்டு ஸம்ஸ்கிருத மொழிபெயர்ப்பு நூலுக்கு
முன்னுரை எழுதியுள்ளார். 20–9–1972

4. டாக்டர் ஸி.டி. தேஷ்முக்
(முன்னாள் துணைவேந்தர், டில்லி பல்கலை கழகம்)
சிலப்பதிகார ஸம்ஸ்கிருத மொழிபெயர்ப்பு நூலைப்
புகழ்ந்து எழுதியுள்ளார். 28–02–1968

திருக்குறள் ஸம்ஸ்கிருத மொழிபெயர்ப்பு நூலைப் படித்துப் பரவசம் அடைந்து தன் மேலான கருத்தை வெளியிட்டுள்ளார். 5-12-1961

5. திரு.டி.எம். நாராயணசாமி பிள்ளை (முன்னாள் துணைவேந்தர், அண்ணாமலைப் பல்கலைக் கழகம்) ஏழு நாடகக் கதைகள் என்ற நூலுக்கு முன்னுரை எழுதி தன் பாராட்டுதலை தெரிவித்துள்ளார். 30-8-1961

## மடாதிபதிகள்

1. ஸ்ரீசிருங்கேரி சாரதாபீட ஜகத்குரு பாரதிதீர்த்த சங்கராசார்ய ஸ்வாமிகள் நாலடியார் ஸம்ஸ்கிருத மொழிபெயர்ப்பு நூலை வெளியிட்டுப் பாராட்டியருளினார். 16-1-1982

2. ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஜெயேந்திர சரஸ்வதி ஸ்வாமிகள் சுப்ரமணிய பாரதியாரின் ஸம்ஸ்கிருத மொழிபெயர்ப்பு 2ம் பகுதியை வெளியிட்டு பாராட்டியருளினார். 12-12-1982

3. ஸ்ரீ ஸ்ரீரங்கம் ஸ்ரீமத் ஆண்டவன் ஸ்ரீரங்க ராமானுஜ மஹாதேசிகன் ஸ்வாமிகள், எஸ்.என். ஸ்ரீராமதேசிகனுக்கு 'அபிநவ விசுருதா ஸூசுருத' என்ற பட்டத்தை சென்னை ஆண்டவன் ஆஸ்ரமத்தில் வழங்கினார். 2.4.2000

4. பார்த்தசாரதி ஸ்வாமி சங்கீத சபா இசை விழாவில் அஹோபிலமடம் ஜீயர் அவர்களால் பரத நாட்டிய சாஸ்திர நூலை தமிழில் மொழி பெயர்த்ததற்காக பொன்னாடைப் போர்த்தி நினைவுப் பரிசு வழங்கி கௌரவிக்கப் பட்டார். 16-12-2001

## அரசாங்கப் பாராட்டுகள்

1. ஸம்ஸ்கிருதப் புலமைக்காக ஜனாதிபதியால் பாராட்டப் பெற்றார். 5-10-1971

2. அவ்வையார் ஸம்ஸ்கிருத மொழிபெயர்ப்பு நூலை பாராட்டி உத்திரப் பிரதேச அரசு ரொக்கப் பரிசு அளித்து கௌரவித்தது. 1973

3. தமிழக அரசால் கலைமாமணி பட்டம் அளித்து கௌரவிக்கப்பட்டார். 11–3–93

## மத்திய சாஹித்ய அகாடமித் தலைவர்கள்

1. திரு. டாக்டர் சுனீத்குமார் சாட்டர்ஜி
(மத்திய சாஹித்ய அகாடமித் தலைவர்)
சிலப்பதிகார ஸம்ஸ்கிருத மொழிபெயர்ப்பு நூலுக்கு முன்னுரை எழுதி பாராட்டியுள்ளார். 8–1–68

2. திரு. டாக்டர் உமாசங்கர் ஜோஷி
(மத்திய சாஹித்ய அகாடமித் தலைவர்)
திருக்குறள் ஸம்ஸ்கிருத மொழிபெயர்ப்பு நூல் முதற்பகுதிக்கு முன்னுரை எழுதி பாராட்டியுள்ளார். 12–6–78

## பத்திரிகைகள்

ஹிந்து, இண்டியன் எக்ஸ்பிரஸ், பவர்ன்ஸ் ஜர்னல், இந்துஸ்தான் டைம்ஸ், தினமணி, சுதேசமித்திரன், ஆனந்தவிகடன், கல்கி போன்ற பத்திரிகைகளில் ஆசிரியருடன் பேட்டி, புத்தக விமரிசனம், கட்டுரைகள், புத்தக வெளியீட்டு விழாச் செய்திகள், பாராட்டு விழாச் செய்திகள் ஆகியவை இடம் பெற்றிருக்கின்றன.

## குறிப்புகள்

ஜனாதிபதி
இரண்டு உபஜனாதிபதிகள்
மூதறிஞர் இராஜாஜி
பாரதப் பிரதமர்
ஒன்பது கவர்னர்கள்
மூன்று தமிழக முதல்வர்கள்

மூன்று மத்திய மந்திரிகள

நான்கு நீதிபதிகள்

நான்கு மடாதிபதிகள்

இரண்டு மத்திய சாஹித்திய அகாடமித் தலைவர்கள்

மூன்று மாகாண அரசுகள்

தமிழக கவர்னர் திரு . கே.கே. ஷா அவர்களுடைய தலைமையில் ஜனாதிபதி திரு.வி.வி. கிரி அவர்கள் இவருடைய நூலை வெளியிட்டிருப்பதும். கவர்னர் திரு. பிரபுதாஸ் பட்வாரி அவர்களின் தலைமையில் பாரதப் பிரதமர் திரு. மொரார்ஜி தேசாய் அவர்கள் இவருடைய நூலை வெளியிட்டிருப்பதும் குறிப்பிடத்தக்க அம்சமாகும்.



# ஆயுர்வேத ருத ரலாறு

## முன்னுரை

ஏதேனும் ஒரு பொருளைக் கண்ணுற்றபோது, அறிஞனுக்கு அது என்ன? இதன் பயன் என்ன? என்பதை அறிந்து கொள்ள வேண்டும் என்ற ஆவல் தோன்றுவது இயற்கை. இதை அறியாத வரை அப்பொருளின்பால் அவனுக்குக் கவனம் செல்லாது. அப்பொருளைப் பற்றிய பொதுஅறிவு தோன்றியபிறகு அதன் சிறப்பான தன்மைகளைப் பற்றி ஆராய்ந்து அறிந்து கொள்ள வேண்டும் என்ற ஆவல் மிகும். அவ்வாறு அறிந்து கொண்ட பிறகு தமக்குப் பயன்படக்கூடியவற்றில் விருப்பமும், தீங்கு விளைவிக்கக் கூடியவற்றின்பால் வெறுப்பும் தோன்றும். அந்நிலையில் அவற்றை விலக்க வேண்டும் எனும் எண்ணமிகும்.

எனவே, ஒருவனுக்கு முன்பு அறிஞர்கள் இத்தகைய ஐயங்களைப் போக்கும் வகையில் நூலின் உட்பொருளைப் பற்றி விளக்கம் தந்து படிப்போருக்கு அந்நூலைப் பற்றி அறிமுகப் படுத்துகின்றனர். இந்தப் பழக்கத்தைப் பின்பற்றி காசியப ஸம்ஹிதையின் உட்பொருள், அதன் சிறப்பு முதலியன இந் முன்னுரையில் விளக்கப்படுகிறது.

மரு ங்களைப் பற்றிய விளக்கம் காணலாம். அவையாவன :

1. முன்னுரையுடன் ஆயுர்வேதத்தைப் பற்றிய விளக்கம்
2. ஆயுர்வேதத்தைச் சார்ந்த முதல் நூல்கள், அவற்றின் ஆசிரியர்கள் ஆகியவற்றைக் குறித்த விளக்கம்.
3. ஸம்ஸ்காரங்களை ஒப்பிட்டு விளக்குதல்
4. நம் நாட்டு மருத்துவத்தைப் பற்றிய சிறப்பினை அறுத்து கூறுதல்
5. முடிவுரை

(இனி இவற்றைப் பற்றிய விளக்கங்களைக் காண்போம்.)

## முன்னுரையுடன் ஆயுர்வேதத்தைப் பற்றிய விளக்கம் :

ஒவ்வொரு மனிதனுக்கும் இன்பம்(சுகம்) பெறுவதே வாழ்க்கையின் முக்கிய இலட்சியமாகும் என்பது மறுக்க ஒண்ணாத உண்மையாகும்.அறிஞர்கள் இன்பம் என்பதற்கு இருவகையான விளக்கம் தந்துள்ளனர்.வருத்தத்தை நீக்கிக் கொள்வது ஒன்று. துன்பமே விளையாமற் செய்து கொள்வது மற்றொன்று. இருவகையாலும் இன்பம் பெறுவதையே ஒவ்வொரு மனிதனும் விரும்புகிறான்.துன்பத்தை விளைவிப்பதான துக்கம் இவ்வுலகில் விரும்பத் தகாதவற்றில் தலையாயது. கடந்த காலத்தைச் சார்ந்த துக்கம் நினைக்கும் தோறும் மிக்க வருத்தத்தை விளைவிக்கிறது. நிகழ் காலத்தைச் சார்ந்த துக்கம் அவை நீக்கிக் கொள்ள பெரு முயற்சியை மேற்கொள்ளச் செய்கிறது. வருங்காலத்தில் நேரக்கூடுமெனத் தோன்றும் துன்பம் இப்போதிலிருந்தே எவ்வாறேனும் அது நெருங்காமல் இருக்க ஆவன செய்ய வேண்டும் என்ற முயற்சியை ஊக்குவிக்கிறது. துக்கத்தை விரும்பும் நபர் இவ்வுலகில் ஒருவரேனும் இருக்க மாட்டார் என்பதே உண்மையாகும். உலகில் மனிதன் மேற்கொள்ளும் செயல்கள் அனைத்தின் நோக்கம் துக்கம் நெருங்காமலிருக்கச் செய்து கொண்டு சுகத்தை அடைவதற்காகவும் ஆம். ஆயினும் இன்பத்தை நாடிச் செல்லும் மனிதன் தன் அறியாமையில் இவ்வுலகில் உண்மையாகத் தனக்கு இதம் தரும் வழியை விட்டுத் துன்பம் விளைவிக்கும் பாதையிலேயே சென்று துக்கத்தை அடைகின்றான். தொன்றுதொட்டு சாஸ்திரங்கள் அனைத்தும் நிலையான சுகம் தரும் பாதையைத் தேடுவதிலேயே முனைந்துள்ளன. இன்னும் என்றும் அவ்வழியையே பின்பற்றுகின்றன.

துக்கம் மூன்று வகைப்படும். அவையாவன : 1. மனம், உடல், ஆன்மா, எனும் இம்மூன்றினைச் சார்ந்து தோன்றுவதாகிய ஆத்யாத்மிகம் (ஆன்மாவைச் சார்ந்தது) 2. ஐம்பெரும் பூதங்களின் கூட்டால் ஆகிய உயிரினங்களைச் சார்ந்து தோன்றுவதாகிய ஆதிபௌதிகம் (ஐம்பெரும் பூதங்களைச் சார்ந்தது) 3. இயக்கர், அரக்கர், விநாயகப் பெருமான் போன்ற தேவகணங்களைச் சார்ந்து தோன்றக் கூடிய ஆதிதைவிகம் (தெய்வச் செயலால் ஆனது) என்பனவாம்.

இம்மூன்று வகையான துன்பங்களைத் தோன்றாமல் தடுத்துக் கொள்ளத் தக்க வழிமுறைகளை வகுக்கத் தோன்றியவையே முறையே சாங்கியம் முதலான தரிசனங்கள் தெய்வ வழிபாடு முறைகள், நீதி சாஸ்திரங்கள் ஆகியவை.

ஆனால் இந்த ஆன்மிக, லௌகிக (இவ்வுலகைச் சார்ந்த) சாஸ்திரங்களால் இவ்வுடலால் நாம் நடத்தும் வாழ்க்கை முறை உயர்ந்ததாக சீராக அமைந்தபோது தாம் பயன் பெற முடியும். (அதாவது எந்தச் சாத்திரம் வகுத்த வழிமுறையானாலும் உடல் நலம் சீராக இருந்தால்தான் பின்பற்றிச் சென்று நிறைவான பயன் பெற இயலும் என்பதாம்.) அறிவுள்ளவன் புது ஊக்கம் கொண்டு உயர்ந்த உபாயங்களைக் கண்டறிந்து அவற்றால் சீரான வாழ்க்கைப் பாதையை வகுத்துக் கொண்டு அதைப் பின்பற்றிச் செல்வதால் தன் வாழ்க்கையைச் சிறப்புறச் செய்து கொண்டு தன் இலட்சியத்தை அடைகிறான். அதாவது முறையாகத் தன் விருப்பத்தை நிறை வேற்றிக் கொள்வதில் வல்லவன் ஆகின்றான். இதற்கு மாறாக வாழ்க்கை முறை சீராக இல்லாமல் மிகவும் தாழ்ந்த நிலையில் இருப்பதால் துன்புறுபவன் எவ்வளவு முயன்றாலும் இலக்கை அடைய முடியாது. ஆகையால் நிறைவான இன்பம் கொண்ட வாழ்க்கையை விரும்புகிறவன் வேறு சாஸ்திரங்களையும் ஆராய்ந்து தக்க வழிமுறையை ஏற்படுத்திக் கொள்வது இன்றியமையாத தாகும். அனைத்திற்கும் முதன்மையாக உடலுக்கு எத்தகைய துன்பமும் நேராத வகையில் வாழ்க்கையை நடத்துவதால் நாம் இம்மை மறுமைப் பயன்களை பெற முடியும். நம் இவ்வுடலானது தூலமான மற்றும் மிக நுட்பமான உறுப்புகளுடன் அந்தந்த உறுப்புகள் ஆற்றக்கூடிய சிறப்பான செயல்களுடன் முழுஉண்மை கண்டறியமுடியாத இறைவனின் நுண் கலைத் திறமையாலாக்கப் பட்ட ஒரு பெரிய (சிறந்த) இயந்திரம் போன்றதாகும். தூலமான நுட்பமான இவ்வுறுப்புகளில் ஏதேனும் ஒன்றில் தூலமாகவோ நுட்பமாகவோ இயற்கைக்கு மாறுபட்டநிலை தோன்றுமாயின் முழு உடலுக்கும், உடலுடன் வேறுபடுத்திக் காண இயலாதவாறு அத்துடன் இணைந்துள்ள ஆன்மாவுக்கும் விவகாரத்தைப் பெற்றுத் தருகிறது. உடலுக்கு நேர்ந்த கோளாறினால் சிதைவுற்ற அந்தராத்மா வினால் ஏனைய துக்கங்களிலிருந்து விடுபட முடியாமற் போகும். உடலுக்கு எத்தகைய துன்பமும் நேராத நிலையில் தாம் மற்ற துன்பங்களை நீக்கிக் கொள்ளத் தக்க உபாயங்களை மேற்கொண்டு பயன் பெறமுடியும் .நோயுற்ற உடல் நிலை சீராக இல்லாதபோது அதைச்சார்ந்துள்ள ஆன்மா பின்நிலையும் சீராக இன்மையால் கடுந்தவம், புனிதஸ்தலங்களை நோக்கிய பயணம், பிறருக்கு உதவிபுரிதல் போன்ற அறவழிகளை மேற்கொள்ளுதல், சிற்பம் கலைகள் முதலியவற்றில் திறமைபெறுதல், வாணிபம்செய்தல்,

தொழில்களில் ஈடுபடுதல், வேறுநாடுகளுக்கு சென்றுவருதல், செல்வத்தை வளர்த்துக்கொள்ளுதல், விரும்பிய உணவு,செயல் முதலியவற்றை நுகர்தல் புலன்களால் பெறக்கூடிய இன்பங்களைத் துய்த்தல், புலன்களை வென்று சிறப்படைதல், சினம் முதலான உள்ளுறைப் பாதையை வெல்லுதல்,வீடு பெறும் முயற்சியில் வெற்றி காணுதல் முதலிய அனைத்தும் சீராகச் செய்து மேன்மை பெற இயலாது. எனவேதாம் அறம், பொருள், இன்பம்,வீடு என்பன நான்கிற்கும் உடல் நலமே வேர் போன்றது என சரகர் எனும் மருத்துவ நூலாசிரியர் கூறியுள்ளார். முன் கூறியன அனைத்தும் நோயற்ற நிலை மேற்கொண்ட வாழ்க்கை எனும் மாபெரும் மரத்தில் தோன்றும் பழங்களாகும்.எனவே நீண்ட ஆயுள்,சீரிய வாழ்க்கை ஆகியவற்றிற்காக உடலுக்கு நேரக்கூடிய துன்பங் களையும், இவ்வுலகத்தைச் சார்ந்து நேரக்கூடிய துன்பங்களையும் அறவே விலக்கிக்கொள்ளுதல் இன்றியமையாததாகும். ஆயிரக் கணக்கில் உள்ள நோய்களால் உடலுக்குத் துன்பம் விளைந்து கொண்டே இருக்கும். ஏதோ ஒரு உபாயத்தாலோ வெறும் உபதேசத் தாலோ இந்நோய்களை நீக்கிக் கொள்ள இயலாது.ஆகவே இந்நோய் களிலிருந்து விடுபடவும்,நோய்கள் தோன்றாதநிலை ஏற்படவும் தக்க வழிமுறைகள் அனைத்தையும் தன் அறிவாற்றல்களுக்கு ஏற்ப கண்டுணர்ந்து மேற் கொள்ளுதல் இன்றியமையாதாகும்.இதற்காக நாம் நான்கு பொருள்களை உணர்ந்துகொள்ளுதல் தேவையாகும். அவையாவன (1) துன்பங்களுக்கு காரணமாகிய நோய்கள் (2) அவை தோன்றக் காரணங்கள் (3) நோய்களிலிருந்து விடுபடுதல் (4) அவ்வாறு விடுபடுவதற்குப் பயன்படும் மருந்து முதலியனவாம்.

நோய்களின் இலக்கணம், அவை தோன்றக் காரணங்கள்,அவை தோன்றாமல் இருக்க மேற்கொள்ள வேண்டிய வழிமுறைகள், தோன்றிய நோயை நீக்கிக் கொள்வதற்குப் பயன்படும் மருந்து முதலான சிகிச்சை முறைகள் ஆகியவற்றை அறிந்து கொள்ள வேண்டும் என்பதாம்.

உலக மக்களுக்கு நன்மை விளைவிக்கக்கூடிய இத்தகைய விஷயங்களில் நல்லறிவு படைத்த பேரறிஞர்களின் எல்லா வகையான அறிவு முறைகளில் சிறந்ததான இம்முறையே ஆயுர் வேத விஞ்ஞானம் எனப்படுகிறது. இந்த ஆயுர்வேத விஞ்ஞானம் என்பது ஏதோ ஓரிரு நபர்களுக்கு மட்டும் பயனளிக்கக் கூடியதல்ல. ...ால் குடும்பம், மக்கள் சமுதாயம் மற்றும் நாடு முழுவதற்கும்

நன்மை விளைவிப்பதாகும். எனவே ஒவ்வொருவரும் இந்த ஞானத்தை அறிந்து கொள்ள வேண்டும். அறிந்துகொண்டவர் இதன் மேன்மையையும், வழிமுறைகளையும் உலகோருக்குத் தெளிவுபடுத்திப் பிரச்சாரம் செய்ய வேண்டும்.

இவ்வாறு இந்த சாஸ்திரத்தைப் பற்றிய அறிவு, உபதேசம் ஆகியவை மிகவும் பயன் தருபவை ஆகும்.

## ஆயுர்வேதத்தின் தொன்மை :

முதன் முதலில் படைப்புத் தொழிலைத் துவங்கிய பிரும்மா, ஐம்பெரும் பூதங்களையும், அவற்றின் பல்வேறு அளவுகளில் உள்ள கூட்டால் இவ்வுலகப் பொருள்களையும் படைக்கத் துவங்கிய பொழுதே உயிரினங்கள் நீடுழி வாழவழிமுறைகளையும் தேவையான கருவிகளையும் தோற்றுவித்தார். உயிரினங்கள் தோன்றியதும் தவறான உணவு, செயல் முதலியவற்றால் விரை விலேயே அழிந்து போகுமானால் தான் பட்டபாடு எல்லாம் வீணாகிவிடும். மாறாக அவை வெகு காலம் நிலை பெறக் கூடுமாயின், அத்தகைய வலிமையைப் பெறும் அளவிற்குப் பிரும்மாவின் விருப்பங்களை அவை பின்பற்றிச்செய்ய வல்லமை பெற்றிருக்கும். நெடுங்காலம் நிலை பெறக் கூடியவை ஆயினும் வலிவுற்றபடி எல்லா உறுப்புகளையும் கொண்டிராமல், உறுப்பு களில் குறைபாடு கொண்டிருக்குமானால் அத்தகைய உயிரினத்தால் விருப்பம் நிறைவேற்ற இயலாது. ஆகையால் படைப்பின் துவக்க நாள் முதலாக நிறை வலிமை கொண்ட எல்லா உறுப்புகளுடனும் நீண்டநாள் வாழவேண்டும் எனும் கருத்து விளங்கி வந்துள்ளது. இவ்வுலகில் படைப்புத் தொழிலை மேற்கொண்ட சில்பியார் ஆக்கம் பெற்ற நடப்பன, நடக்கஇயலாதன, உண்பன, உண்ணப் படும் பொருள் போன்ற பலவகைகள் விலங்குகின்றன. உண்பன, உண்ணப்படும் பொருள் ஆகியவற்றிலும் பலவேறுபாடுகள் காணப்படுகின்றன. உண்பன அனைத்திற்கும் உண்ணப்படும் பொருள்கள் அனைத்தும் ஏற்றவை அல்ல. உண்பனவற்றின் சாதி இனம்,நாடு ,காலம் ,நிலை ,வயது போன்ற வேறுபாடுகளுக்கு ஏற்ப நன்மை விளைவிப்பவை, துன்பம் விளைவிக்கக்கூடியன என வேறுபட்டுள்ளன. ஏற்றவையான பொருள்களும், ஏற்றுக் கொள்ளத் தக்கவனுக்கு எல்லா காலங்களிலும் நன்மை விளை விப்பதில்லை. மாறாக நிலைமைக்கு ஏற்ப ஒரு வேளை நன்மை

விளைவிக்கும் உணவு மற்றொரு வேளை தீமை விளைவிப்ப தாகவும் அமையக்கூடும். ஆகவே எப்பொருள் யாருக்கு எந்த நிலையில் நன்மை தரும், எப்பொழுது தீமை விளைவிக்கும், அவ்வாறு தீமை விளையும் போது அதற்கு மாறாக நன்மை செய்வது எது, அது எவ்வாறு தோன்றுகிறது, தீமையை விளைவிக்கும் பொருள் எது போன்றவற்றைப் பற்றிய அறிவாற்றல் பிரும்மாவுக்கு முதலிலேயே ஏற்பட்டுள்ளது.

எல்லா உயிரினங்களுக்கும் விருப்பங்களில் உயிர் வாழும் விருப்பமே தலையாயது. இவ்வாறு உயிரினங்கள் தோன்றிய காலத் திலேயே ஆயுர்வேதம் தோன்றியது.

உண்பவர்கள் அனைவருக்கும் உண்ணத் தக்க பொருள்கள் அனைத்தும் நன்மை பயப்பனவாவதில்லை. ஒருவருக்கு இதமான பொருள் மற்றொருவருக்குக் கேடு விளைவிப்பதாகி விடக்கூடும். நிலைமைக்கு ஏற்ப நன்மையும் தீமையும் ஒரே பொருள் வேறு வேறு காலங்களில் விளைவிக்கக்கூடும். ஆகவே, எத்தகையவருக்கு எந்த பொருள் , எந்த நிலையில் நன்மையை விளைவிக்கும், எது தீங்கு விளைவிக்கக் கூடும், அந்த நன்மை அல்லது தீமை உண்டாகக் காரணம் என்ன? தோன்றும் தீமையை நீக்கிக் கொள்ளும் வழி என்ன? என்பனவற்றைப் பற்றிய அறிவு படைப்பின் துவக்கத் திலிருந்தே விளங்கி வந்துள்ளது. விருப்பங்கள் அனைத்திலும் உயிரினங்களில் தலையாகக் காணப்படுவது உயிரினங்கள் வாழ வேண்டும் என்ற விருப்பமேயாகும்.

''பிரும்மதேவன் தான் உயிரினங்களைத் தோற்றுவிப்பதற்கு முன்பே ஆயுர்வேதத்தினைத் தோற்றுவித்தான்'' எனச் சுஸ்ருதர் தம் சம்ஹிதையில் குறிப்பிட்டுள்ளார். காசியபஸம்ஹிதையின் துவக் கத்திலும் அவ்வாறே கூறப்பட்டுள்ளது. மாதின் கருவில் மகவு வளரத் துவங்கும் போதே பிள்ளைப் பேற்றிற்குப் பிறகு அதற்கு தேவையான உணவுக்காகத் தாயின் மார்பகங்களின் பாற்குடங் களாவதைக் காண்கின்றோமல்லவா? உலகில் பிராணிகள் தோன்றுவதற்கு முன்பே தாவரங்கள் தோன்றின என விஞ்ஞானம் உறுதியாகக் கூறும்போது மருத்துவத் தன்மை கொண்ட உயிரினங் களுக்கு உணவாகி, மருந்தாகிப் பயன் படக்கூடிய மூலிகைகள் முதலில் தோன்றின என்பது விளங்குகிறதல்லவா? ஆகவே தான் நாம் கணக்கிட்டு அறியக் கூடாத காலத்திலேயே உலகப் படைப்பு துவங்கப்பட்டது போல இந்த ஆயுர்வேதமும் கணக்கிட இயலாத

காலந்தொட்டே பரம்பரையாக விளங்கி வந்துள்ளது என்பதை புனர்பசு ஆத்ரேயர் தெளிவு படுத்தியுள்ளார்.

## ஆயுர்வேதம் 'எனும் சொற்பொருள்'

வித் எனும் வேர்வினைக்கு வடமொழியில் அறிவு, இலாபம் எனும் பொருள்கள் உள்ளன. அதனடியாக ஆயுர்வேதம் என்ற சொல் (ஆயுள்) வாழ்க்கை அதைப்பற்றிய அறிவு,ஆயுளை (நூறாண்டுகளை ஓர் அளவாக உள்ள வாழ்க்கை ) பெறுவதற்கான வழிகள் எனப்பொருள் தருகிறது. ஆகையால் நீடுழி வாழும் வழியை உணர்த்தும் தனிப் பெருமை வாய்ந்தது ஆயுர்வேதம் என்பதாம். இதனால் ஆயுர்வேதத்தின் தோற்றமும் பயனும் தெரிய வரு கின்றன. இவற்றை விரைந்து இந்த ஆயுர்வேத சாத்திரம் வகுத்த வழியைப் பின்பற்றி நடந்தால் நீடுழி வாழலாம் என்பதும், அறியாத,பின்பற்றாத போது ஆயுள் குறையும் என்பதும் உணரத்தக்கவையாகும். இவ்வாறு நெடுங் காலமாக வாழ்க்கையை நிலை பெறச்செய்வதற்கான கருவிகளுடன், வழிமுறையையும் தெளிவாக்குவது ஆயுர்வேதம் என்பது அறியத்தக்கது.

ஆத்ரேயர், சுசுருதர் ஆகிய மருத்துவ முதநூலாசிரியர்களின் கொள்கையின்படி நோய்களைப்போக்கி உடல் நலத்தை நிலை யாக்குவது (curative and prevenitive) ஆயுர்வேத சாஸ்திரத்தின் பயனாகும்.

ஆயுர்வேதம் பல கிளைகள் கொண்டதாகச் செழித்து மனிதர்களுக்கு மட்டுமல்லாது யானை, குதிரை, ஆவினம் போன்ற விலங்குகளுக்கும் பறவைகளுக்கும் அவ்வாறே தாவரங்களுக்கும் தேவையான மருத்துவமுறைகளைத் தெளிவுபடுத்துவதாக அமைந்துள்ளது. ஆனால் தன்வந்தரி,காசியபர், ஆத்ரேயர் போன்ற ஆசிரியர்கள் மனிதர்களுக்கான சிகிச்சை முறைகளையே விளக்கியுள்ளதால் நாமும் அவ்வழியையே பின்பற்றி விளக்கு வோம். உலகுக்கே முதன்மையான அறிவு விளக்கம் கொண்ட தாகையால் முன்னோர் இம்மருத்துவ நூல்களை மறை எனும் சொல்லாலேயே அழைத்தனர். மறை இறைவன் பாலிருந்து வெளிப்பட்டது போல இதுவும் பழமையான அறிவு விளக்கம் கொண்ட சாத்திரமாகும். ஆன்றோர் தவ நெறியை மேற் கொண்டு அதன் பெருமையால் ஒளி வீசும் மனத்தினராகத் தம் பேரறி

வாற்றலால், உணர்ந்து கொண்ட சாத்திரம் வேதம். இந்த ஆயுர் வேதமும் அத்தகைய பெருமையுடையதேயாகும்.

## ஆயுர்வேதத்தின் பரம்பரை தொடர்பு :

ரிக், யஜுர், ஸாம, அதர்வணங்களெனும் நான்கு மறை நூல்களுக்கும் முறையே தனுர்வேதம், காந்தர்வ வேதம், ஸ்தாபத்ய (மனையடி சாஸ்திரம்) வேதம், ஆயுர் வேதம் என்பன சார்புமறை நூல்களாகும். உபதேசங்கள் என்றபோது உப எனும் சொல் அருகில் எனும் பொருள் தருவதால் நெருக்கமான மறைநூல்கள் என்ற பொருள் கொள்வதாகும். சுகம் தரும் எண் வகை உறுப்புகளைக் கொண்டதான இந்த ஆயுர்வேதம் அதர்வவேதத்தைச் சார்ந்த உபவேதமாகும் எனக் கூறியுள்ளார். ஏனைய மூன்று மறைகளுடன் சிறிதே தொடர்பு கொண்டதாயினும் பெரும்பாலும் ஆயுர்வேதம் அதர்வ வேதத்தைச் சார்ந்துள்ளது என ஆத்ரேயர் தம் சரக சம் ஹிதையில் கூறியுள்ளார். காசியபரும் ஆயுர்வேத நுண்பொருள் பெரும்பாலும் அதர்வ வேதப் பொருளைச் சார்ந்திருப்பதால் இது அவ்வேதத்திலிருந்து தோன்றியதெனக் கூறிப் பிறகு ஏனைய மூன்று வேதங்களுடனும் தொடர்பு கொண்டதால் இதை அந்நான்குடன் ஐந்தாவது வேதமாகக் கருதுவது தகும் எனக் கூறியுள்ளார். மற்றும் அவர் பிரும்மா, அச்வினி குமாரர்கள் இந்திரன் முதலோரின் பரம் பரையில் முறையே செழித்து வளர்ந்து மறைநூல்களைப்போலவே உலக மக்களின் வாழ்க்கைக்கு ஆதாரமாகி உலகத்திற்கு நன்மை விளைவிக்கும் தனிப்பெரும் சாத்திரமாக விளங்குகிறது. ஆகையால் மகாபாரதத்தைப் போலவே ஐந்தாம் வேதம் எனத் தகுந்த சிறப்பினை இந்த ஆயுர்வேதம் பெற்றுள்ளது எனக் கூறியுள்ளார்.

ஸுசுருதர் ஆயுர்வேதத்தைத் தம் ஸம்ஹிதையில் ''உபாங்கமதர்வ வேதஸ்ய'' எனக்கூறியுள்ளார். இதைப்பற்றிச் சிலர் பின்வருமாறு விளக்கம் கூறுகின்றனர். அங்கம் என்றால் உறுப்பு. மறைநூலுக்கு ஆறுஅங்கங்கள் முன்னோர் வகுத்துள்ளனர். அவை சிக்ஷை, வியாக ரணம், முதலானவை இவை வேதத்திற்குப் பிற்பட்டவை. 'உபாங்கம்' என்றால் துணைஉறுப்பு என்றல்லவா பொருளாகிறது அதாவது மறை நூல்களுக்கு உரிய அங்கங்களைச் சார்ந்தது உபாங்கம் எனவே உபாங்கமாகிய ஆயுர்வேதம் மறைநூல்களுக்கு உறுப்புகள் தோன்றிய காலத்திற்குப் பிற்பட்டவை எனப்பொருளாகும் என்பது அவர்களது வாதம். இது பொருத்தமற்றது. எவ்வாறு எனில் சிக்ஷா,

வியாகரணம் முதலான மறையுறுப்புகளாக விளங்கும் நூல்களுக்கு ஆயுர்வேதத்தைச் சார்ந்த பொருள்கள் கூறப்படவில்லை. மாறாக அந்நூல்களுக்கும் முற்பட்ட பிரமாணங்கள் மற்றும் ஸம்ஹிதையில் தாம் ஆயுர்வேத நூற்பொருள்கள் வெகுவாக கூறப்பட்டுள்ளன. எனவே ஆயுர்வேதம் அதர்வ வேதத்துடன் மிக்க நெருங்கிய தொடர்பு கொண்டுள்ளது.

மீமாம்சகர்கள் உறுப்புகளை இருவகைப்படுத்திக் கூறுவர். மறை நூல்களின் உட்பொருளைச் சார்ந்துள்ளவை (உடலுக்குள் இருந்து நன்மை விளைவிக்கும் உறுப்புகளைப் போன்றவை அந்தரங்கள் (உள்ளுறுப்பு) என்றும் சற்று விலகி (உடலுக்கு வெளியே இருந்து கொண்டு நன்மை விளைவிப்பவையாகி இருப்பவை புற உறுப்புகள் ஆகும். சிக்ஷை, வியாகரணம் போன்றவை இத்தகைய புறஉறுப்புகள். ஆனால் ஆயுர்வேதம் அவ்வாறல்லாது மறையின் உட்பொருளைச் சார்ந்தே விளங்குகிறது. அதாவது அதர்வ வேதத்தில் பல ஆயுர்வேதத்தைச் சார்ந்த பொருள்கள் கூறப்பட்டுள்ளன. இப்பொருள்கள் வேத மந்திரத்தில் இரண்டறக் கலந்துள்ளன. எனவே இது உள்ளுறுப்பே (அந்தரங்கம்) ஆகும். பலவகை ஞானங்களுக்குக் கருவூலமான வேதங்களில் யக்ஞங் களையும் பற்றிய பொருள்களே தலையாயவை. அவற்றைப் பற்றிய விளக்கங்களுக்கிடையே ஆயுர்வேதத்தைச் சார்ந்த பொருள்கள் பல கூறப்பட்டுள்ளமையால் ஆயுர்வேதம் உள்ளுறுப்பாக விளங்கு கிறது. தோள் முதலான பெரிய உறுப்புகளை அங்கங்களென்றும், கைவிரல்கள் போன்றவை உபாங்கங்களென்றும் கூறும் டல்ஹணர் (உரையாசிரியர்) ஆயுர்வேதத்தை அந்தரங்கம் (உள்ளுறுப்பு) என்றே குறிப்பிட்டுள்ளார். சிக்ஷா முதலியவற்றை அங்கங் களென்றும், ஆயுர்வேதத்தை உபாங்கமென்றும் கொள்வதாயின் ஐம்பெரும் பூதங்களின் தோற்றத்திற்கு முன்பே ஆயுர்வேதம் தோன்றியதென ஸுச்ருதர் கூறுவது பொருந்தாதல்லவா? அனைத்திற்கும் மேலாக சிக்ஷா முதலியவற்றிற்கு இல்லாத 'வேதம்' என்ற சொல்லுடன் இணைந்தே 'ஆயுர்வேதம்' எனக் குறிப்பிடப் பட்டுள்ளது. இது மறை நூலாகும் என்பதை உறுதிப்படுத்துகிறது. ஞான விஞ்ஞானங்களுக்கு ஒரு கடல் போல விளங்கும் வேதத்தில் ஓர் அலையாக இதைக் கருதி 'ஆயுர்வேதம்' என்பதை (உபவேதம்) எனச் சிலரும் உடலும் உறுப்புமாகக் கொண்டு வேதாங்கம் எனச் சிலரும் சிறு உறுப்புகளை மனத்தில் கொண்டு வேத உபாங்கம் என்று சிலர் கூறுகின்றனர். இவ்வுரைகளில் மாறுபாடு கொள்ள இடம்

இல்லை. எனவேதான் இத்தகைய குழப்பங்களுக்கு இடம் தராமல் காசியபர் ஆயுர்வேதத்தை ஐந்தாம் வேதம் எனக் கணக் கிட்டுள்ளார். உள்ளுறுப்புகள் எப்போதும் உடலுடனேயே இருக்கும். உடல் தோன்றும் போதே புறஉறுப்புகள் தோன்றுவது கண்கூடு. உடல் , உடலுறுப்புகள் தோன்றுவதில் கால வேறுபாடு இல்லை அல்லவா? எனவே உபவேதம் என்பது போலவே உபாங்கம் என்பதும் தொன்மையையே உணர்த்தும் என்றறிக.

பிரமாணங்கள், உபநிஷத்துகள், மகாபாரதம் போன்ற புராணங்கள் ஆகியவற்றில் நான்கு மறைகளைப் பற்றிய வர்ணனைகள் சமமாகவே காணப்படுகின்றன. அதர்வ வேதத்திலும் ரிக் யஜுர் ஸாம வேதங்களைப் பற்றிய குறிப்புகள் காணக் கிடைக்கின்றன. ஆனால் இம்மூன்று வேதங்களிலும் எங்கும் அதர்வ வேதத்தைப்பற்றிய குறிப்பு ஏதும் இல்லை. எனவே மறைகள் மூன்று (ரிக், யஜுர், ஸாமம்) என்னும் கொள்கையே தொன்மையானது. (அதர்வ வேதம் என்பது நான்காவது ஆகையால் இது பிற்பட்டது)என்கின்றனர் சிலர். (வேதங்கள் 'திரயி' என்பதால் மூன்றே எனச்சிலர் கருது கின்றனர் என்பதாம்). வேதங்கள் மூன்றா? நான்கா? மூன்றுடன் நான்காவதற்குக் காலவேறுபாடு உண்டா? என்பதை ஆராய்ந்த முன்னோர்கள், செய்யுள், உரைநடை, இசை எனும் வேற்றுமையைக் கொண்டு நான்கு வேதங்களை மூன்றெனக் கொண்ட தொகுப்பு வடிவில் நான்கு எனவும் இருவகையாகக் கூறப்படுவதில் வேற்றுமை இல்லை என்றும் முடிவு செய்துள்ளனர். எனவே மந்திரம் (செய்யுள்) என்ற வடிவில் உள்ள அதர்வ வேதமும் இம்மூன்றில் அடங்கியதேயாகும். மறை மூன்றினைப்பற்றிய அறிவு இருடிகளுக்குத் தோன்றிய பொழுதே ஆயுர்வேதத்தைப் பற்றிய அறிவு தோன்றியது எனவும், அம்மூன்றும் மறை நூல்களுக்கு ஒப்ப இடம் ஆயுர்வேதம் பெற்றிருந்தும், உள்ளுறைப் பொருள் சிறப்பினைப்பற்றி ஆயுர்வேதம் ஏனைய மூன்றை விட வேறு நான்காவதாகக் கணக்கிடப்பட்டது. பிரமாணம் -உபநிஷத் -ஸ்மிருதி-மீமாம்ஸை முதலியற்றின் நான்கு வேதங்களும் ஒரே காலத்தில் வெளிப்பட்டவை என்பது நியாயமஞ்சரி, வேத விர்வஸ்வம் போன்ற நூல்களில் தெளிவாக விளக்கப்பட்டுள்ளது.

வராஹஸம்ஹிதை, அதற்குப் பட்டோத்பனர் எழுதிய விரிவுரை உபவன விநோதம் முதலிய நூல்களில் பாலகாப்பியர், மதங்கர், சாலிஹோத்ரா முதலான விலங்கியல் மருத்துவர்கள் அவர்களுடைய

உபதேசங்கள், அவர்களது பரம்பரையில் தோன்றிய நூல்கள் முதலியவற்றைப் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன.

அவ்வாறே தாவர மருத்துவத்தைப் பற்றிக் காசியர், ஸாரஸ்வதர், பராசரர் முதலிய அறிஞர்கள் முதலியவர்களைப்பற்றியும் அவர்களது உபதேசங்கள்,முதலியனவற்றைப் பற்றிய குறிப்புகள் காணக் கிடைக்கின்றன. அக்கினிபுராணம், அ.279, 292ல் தன்வந்திரியால் ஸுசுருதருக்கு மனிதர், யானை, பசு, மரம் ஆகியவற்றைப் பற்றிய மருத்துவம் (ஆயுர்வேதம்) உபதேசிக்கப் பட்டதாக கூறப்பட்டுள்ளது. ஆனால் தன்வந்திரி, காசியபர், ஆத்ரேயர் முதலான ஆசிரியர்கள் மனிதர்களுக்கான ஆயுர்வேதத்தையே சிறப்பாகத் தம் நூல்களில் விளக்கியுள்ளனர். நாமும் அவர்களைப் பின்பற்றி அம்முறை யையே விளக்கம் தருவோம்.

முதன் முதலில் தோன்றிய அறிவு என்பதால் அறிஞர்கள் இதை 'வேதம்' என்றனர். ஏனெனில் ஆரியர்களின் அறிவாற்றல்களில் முதன் முதலாகத் தோன்றிய அறிவுப் பொக்கிஷம் வேதம். இதில் முற்காலத்தில் முதன்மையான விஞ்ஞானம் முழுவதும் விளக்கப் பட்டுள்ளது. ஆசிரியர்கள் தம் சிறந்த தவநெறியால் இறை நம்பிக்கையால் தம் மனத்தில் ஒளி வீசிய பிரதிபை யினால் அவ்உயர்ந்த ஞானத்தை வளர்த்துக் கொண்டனர். அவ்வாறு அறிந்து கொள்ளப்பட்ட அறிவே வேதமாயிற்று. அத்தகைய ஞான வழியில் ஒன்று ஆயுர்வேதம்.

## வேதத்திற்கும் ஆயுர்வேதத்திற்கும் உள்ள தொடர்பு :

ரிக், யஜுர், ஸாம, அதர்வங்கள் என்னும் நான்மறை நூல்களுக்கும் முறையே தனுர் வேதம், காந்தர்வ வேதம், ஸ்தாபத்ய வேதம், ஆயுர்வேதம் என்பன உபவேதங்களாயின. இங்கு'உப' எனும் சொல் 'அருகில்' எனும் பொருளை உணர்த்தும். ஸுசுருதர் தம் ஸம்ஹிதையில் ''கலு ஆயுர்வேத மாஷ்டாங்க முபாங்க மதர்வ வேதஸ்ய '' ஸு அ1) எனக் கூறியுள்ளதைக் காண்க. சரகஸம்ஹிதை (ஸு அ.30) யில் ஆத்ரேயர்'ரிக்,யஜுர், ஸாம வேதங்களில் ஓரளவு ஆயுர்வேதத்தைச் சார்ந்த குறிப்புகள் காணப்பட்டாலும் இது ஆயுர் வேதத்தையே பெரும்பாலும் சார்ந்துள்ளது எனக் கூறியுள்ளார். இந்தக் காசியபஸம்ஹிதையிலும் 'ஆயுர்வேதம் எவ்வாறு தோன்றியது எனும் வினாவுக்கு அதர்வ வேதத்தைச் சார்ந்து தோன்றியது எனவும், வேதத்தைச் சார்ந்துள்ளதால் அந்நான்கினைத் தவிர்த்து

இது ஐந்தாம் வேதமாகும் எனவும் கூறியுள்ளார். நூல் முடிவில் அவ பிரம்மா, அச்வினி குமாரர்கள், இந்திரன் முதலான பரம்பன வழியில் முறையே செழிப்புற்று வளர்ந்து ஆயுர்வேதம் ஒரு தவ விஞ்ஞானம் எனும் தோற்றத்தில் வளர்ந்தது. வேதங்களைப் போலவே எல்லோரும் உயிர் வாழ இன்றியமையாததாகி, உலகக் கல்யாணமே தன் குறிக்கோளாகக் கொண்டு விளங்குவதால் இது தனிப்பெரும் சாஸ்திரமாகவும் தோற்றம் கொண்டது என்பதை நன்கு விளக்கி மகாபாரதத்தைப் போலவே இதுவும் ஐந்தாம் வேதம் எனக் கொண்டார்.

அதர்வவேதத்துடன் நான்கு வேதங்களைச் சார்ந்த உபவேதங்களைக் குறிப்பிடும் வகையில் 'சரணாவ்யூஹம்'என்பதை இயற்றியவர் 'ருக்வேதஸ்ய ஆயுர்வேத உபவேத இத்யாஹ பகவான் வ்யாஸ 'ஸ்கந்தோவ' என ஆயுர் வேதம் ரிக் வேதத்தைச் சார்ந்ததாகக் குறிப்பிட்டுள்ளார். அவர் கொள்கையின்படி மூன்றுவேதங்களிலும் ஆயுர் வேதத்தைச் சார்ந்த பொருள்கள் காணப்பட்டாலும், சிறப்பாக ரிக் வேதத்தில் அதன் மருத்துவர்களாகிய அச்வினிகுமாரர்களுடைய உரையால் மேலும் மற்ற முன்னோர்களால் ஆயுர் வேதத்தைப் பற்றி அறியப்படுவதாம். வேதங்கள் மூன்று எனக் கொண்ட போதும் ரிக் வேதத்துடன் ஆயுர்வேதத்திற்கு உள்ள தொடர்பு தெரிய வருகிறது. ஆயினும் பிற்காலத்தில் கர்மகாண்டம் வெகுவாக வளர்ந்த நிலையில் சாந்திக, மௌஷ்டிக, முதலான உலகத்தைச் சார்ந்த நன்மை விளைவிக்கும் கர்மாக்களை பற்றிய விஷயங்கள் அவ்வாறே உடலைச் சார்ந்த புறக்காரணங்களால் தோன்றும் துன்பங்களைப் போக்கும் கர்மாக்களைச் சிறப்பாக விளக்கும். அதர்வ வேதம் தனிப்பிரிவாகக் கணக்கிடப்பட்டது. அதனால் மறை நூலைச் சார்ந்த அறிவுப் பாதை நான்காகியது. அந்த அதர்வ வேதத்தில் மருத்துவம், ஆயுளை விளைவிக்கும் வழி முறைகள், பூதம் முதலியவற்றா லாகும் துன்பங்களைப் போக்கும் முதலியன வேறுபடுத்தப் பட்டன. கௌசிக சூத்ரகாரரும், இவ்வாறே கருத்தைத் தம் நூலில் அங்கங்கு குறிப்பிட்டுள்ளார். இவ்வாறு அதர்வண வேதத்தைச் சார்ந்த கிரியை சாரியிலிருந்து தனிப்பட்டு சாந்திக, பௌஷ்டாகக் கிரியைகளுடன் கூடிய வைத்திய விஞ்ஞானம் முறையாக வளர்ந்து ஆயுர்வேதமாயிற்று. மற்ற வேதங்களையும் விட அதர்வ வேதத்துடன் உள்ள தொடர்பைக் கண்டு தன்வந்திரி, ஆத்ரேயர், காசியபர் முதலான அறிஞர்கள் ஆயுர்வேதத்தை அதர்வ வேதத்திற்கு உபாங்கம் எனக் குறிப் பிட்டுள்ளது மிக்க பொருத்தமுள்ளதேயாகும்.

## வேதங்களில் ஆயுர்வேதத்தைச் சார்ந்த பொருள்கள் :

வேதத்தைப் பற்றி இருவகைக் கொள்கைகள் உள்ளன. முன்காலத்து மற்றும் மீமாம்ஸகர்களின் கருத்து பின்வருமாறு :

இக்காலத்து அறிஞர்கள் கேள்வி மூலமாக வேதங்கள் கற்றுணரப்பட்டு வந்துள்ளதாலும்,இந்நூலை இயற்றிவர் இருப்ப தாகத் தெரிய வராமையாலும் (யோவைப்ரம்ஹாணம் விததாதி பூர்வம் - யோவை வேதாம்ச ப்ரஹிணோதி தஸ்மை என சுவேதாச்வத) உபநிஷத்தில் கூறியபடி முதன் முதலில் இறைவன் படைப்புத் தொழிலுக்காக பிரும்மாவைத் தோற்றுவித்து அவருக்கு வேதங்களையும் வழங்கினார்'' என்றுகூறப்பட்டுள்ளதால், ரிஷிகள் மந்த்ரத்ரஷ்டாக்கள் (மந்திரங்களைகண்டு கொண்டவர்கள் அல்லது உணர்ந்து கொண்டவர்கள்) எனக் கூறப்படுவதால் மறை நூல் அநாதிஎன உணரலாகும். சொல்லும் அதற்கு உரிய பொருளும் என்றும் இருப்பவை. அதனால் மறைப்பொருள் அநாதியாகும்.

ஆனால் தர்க்க நூலாசிரியர்கள் வேறுவிதமாகக் கொள் கின்றனர். அவர்களது கொள்கை பின்வருமாறு;

ரிக் யஜுர் ஸாமங்களாகிய மறை நூல்கள் இறைவனி மிருந்து தோன்றியதாகக் கூறப்பட்டுள்ளது. சொற்களின் தோற்றத் திற்கும் புது உச்சரிப்பு காரணமாகும். ஆகையால் வேதங்கள் (முதலில் புதியதாக யாரேனும் உச்சரித்திருக்க வேண்டும். இறைவனால் உச்சரிக்கப்பட்டது ஆகையால் இறைவனே கர்த்தர் என்பதாம்) என்றாவது முதன்முதலாக உச்சரிக்கப்பட்டு வெளிப்பட்டிருக்க வேண்டும். எனவே, மறைநூற்கள் என்றும் இருப்பவை' (நித்யமானவை) என்பது பொருந்தாது. இறைவனால் இயற்றப்பட்டு வெளிப்படுத்தப்பட்டதாகையால் வேதம் பௌருஷே யமே புருஷனால் இயற்றப்பட்டது. ஆயினும் குற்றங்கள் அனைத்தும் நீங்கி (அதாவது எந்தக் குற்றமும் இன்றி, உலகங்கள் அனைத்திற்கும் நன்மையை விளைவிக்கும். (ஆப்தனாகிய) இறைவனால் தோற்றுவிக்கப்பட்டதால் மறைநூல் பிரமாணிக (பிரமாணமாகக்) கருதத் தக்கதே வேதம். அனாதி, மனிதனால் செய்யப்பட்டதன்று ஆகையால் அபௌருஷேயம் (ஆனால் வனால் தோற்றுவிக்கப்பட்டது).

வேதம் எந்தக் காலத்தில் வெளிப்படுத்தப்பட்டது என்பது பற்றிய ஆராய்ச்சிக்கு இங்கு இடம் இல்லை. ஆனால் ஒன்று மட்டும்

இங்கு தெளிவுபடுத்தப்படுகிறது.முற்காலத்தில் விளங்கிய முனிவர் களுக்கும் முற்பட்ட காலத்திலிருந்து மறைநூல் விளங்கி வருகிறது என்பது உண்மை. வேதநூல்களை ஆராய்ந்த மேலை நாட்டு அறிஞர்களில் சிலர் பன்னிரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்டது என முடிவு செய்துள்ளனர். மற்றும் சிலர் நான்காயிரம் ஆண்டு களுக்கு முற்பட்ட தென்கின்றனர். உலகில் எந்த நாட்டில் மிகப்பழைய காலத்தது என்னும் இலக்கியம் காணப்படுகிறதோ அதற்கும் முற்பட்டது (அதாவது உலக இலக்கியங்கள் அனைத் திலும் முற்பட்டது) மறை நூல்கள் என்பது உறுதி. இதில் யாருக்கும் மாறுபட்ட கருத்து இல்லை. இதனால் மறை நூல் காலத்தால் மிக்க பழையது என்றும் அதைப்போல ஆயுர்வேதம் மிகப் பழமையானது என்றும் தெளிவாகிறது.

அறிவுத்துறைகள் அனைத்திற்கும் கருவூலமாகிய வேதத்தில் மற்ற விஞ்ஞானங்களுடன் ஆயுர்வேத விஞ்ஞானமும் இரண்டறக் கலந்துள்ளதை நாம் காணலாம்.

## 1. ரிக் வேதத்தில் ஆயுர்வேதம்:

முதுமையால் சிதைவுற்ற உடலைக் கொண்ட சியவனன், வந்தனன் எனும் ரிஷிகள் அச்வினி குமாரர்களால் இரசாயன மருந்து களைப் பெற்று மீண்டும் வாலிபப் பருவம் பெற்றனர்(1-116-20, 1-127-23) (1-129-7)

தாஸர்களால் நெருப்பில் மற்றும் ஆற்று நீரில் வீசி எறியப்பட்ட தீர்கதமஸ் பிழைத்துக் கொள்ளுதல், மீண்டும் தாஸர்கள் அம்முனிவரின் தலையையும், மார்பையும் வெட்டியபிறகு அச்வினி குமாரர்களால் அவர் மீண்டும் உயிர் பெற்றனர். அவர் அதன் பிறகு பத்துயுககாலம் வரை முதுமையின்றி பிழைத்திருந்தார்(1-158-4-6)

போர் அரங்கத்தில் கேல மன்னரின் மனைவியாகிய விச்பலாவின் கால் துண்டிக்கப்பட்டது. அச்வினி குமாரர்கள் அந்தக்காலுக்கு மாறாக இரும்பிலான காலை இணைத்துச் சிகிச்சை புரிந்தனர்.(1-116-15)

அத்ரி முதலியவர்களின் உறுப்புகள் வெட்டப்பட அசுவினி குமாரர்கள் மீண்டும் அவ்வுறுப்புகளை இணைத்தனர். (1-117-19)

பகைவர்கள் சியாவாச்வர் என்பவரின் உறுப்புகளை மூன்று துண்டுகளாக வெட்டிவிட மீண்டும் அவற்றை இணைத்து அச்வினி குமாரர்கள் பிழைக்க வைத்தனர். (1-117-24)

ததீசி எனப்படும் ரதியங்கரின் தலையை அசுவினி குமாரர்கள் வேறுபடுத்தி அவ்விடத்தில் குதிரையின் தலையை ஒட்ட வைத்தனர். அப்பொழுது மதுவித்தை எனப்படும் பிராண வித்தையை அம்முனிவர் மூலம் அறிந்து கொண்டு மீண்டும் முன்பு இணைத்த குதிரையின் தலையை வேறுபடுத்தி எப்பொழுதும் போல அவரது மனிதத் தலையை உடலுடன் ஒட்ட வைத்து உயிர் பெறச் செய்தனர் (1-116-12, 1-117-22) குருடரான ருஜ்ராச்வர் என்பவருக்கு கண்தானம் செய்யப்பட்டது. மீண்டும் அவர் பார்வை பெற்றார். (1-110-16, 1-127-17) குருடான கன்வருக்குப் பார்வையும், செவிடரான நார்ஷத் என்பவருக்குக் காது கேட்கும் வலிமையும் மீண்டும் உண்டாக்கப் பட்டன (1-117-8) முழங்கால் சீர்கெட்டு நொண்டியாகிப்போன பராங்குஜர் நொண்டியான கோணரிஷி என்பவர்களுக்கு மீண்டும் கால் சீராக நடக்கும் சக்தி உண்டாக்கப்பட்டது. (1-112-8) பத்ரிமதி என்பவளது கணவன் ஆண்மை யற்றிருக்க அவருக்கு பிள்ளையைப் பெறும் சக்தி உண்டாக்கப்பட்டு அவள் பிள்ளையைப்பெறுதல் (1-116-13) விச்வக என்பவள் மறைந்தமகன் விஷ்ணாச்வன் என்பவனை மீண்டும் பெறுதல் (1-116-23) கக்ஷீவதி என்பவரின் பெண் கோஷா குட்ட நோயால் துன்புற்றுக் கணவனைப் பெற முடியாமல் பிறந்தகத்தில் வருந்திக் கொண்டிருக்க, தக்க சிகிச்சை மூலம் நோய் நீங்கிக் கணவனை அடைந்தாள் (1-117-7).

சிபாவர் என்பவர் குட்ட நோயால் கருநிறம் கொண்டு வருந்த அவரது நோய் அகற்றப்பட்டு அன்னார் அழகிய மனைவியை அடைந்தார் (1-117-8)

அசுவினி குமாரர்களின் இத்தகைய அற்புத சிகிச்சை முறைகளைப் பற்றிய குறிப்புகள், வாயு, மின்னல், நிலம் முதலிய வற்றைப்போல அனுகூலமான சிகிச்சையைப் பற்றி அச்வினி குமாரர்களிடம் வேண்டிக்கொள்ளுதல் (1-89-4) அசுவினி குமாரர் கள் சிறப்பான முறையில் ஓஷதி, வனஸ்பதி முதலியவற்றைக் கொண்டு வெளிப்படுத்தல் (1-116-8)

'நீங்கள் மருத்துவம் செய்து சிறந்த மருத்துவராக விளங்குங் கள்' என அசுவினிகுமாரர்களைப்பற்றிய வேண்டுகோள் (1-156-6)

கண்பார்வை சீராக விளங்க, புலன்கள் தம் செயல்களைத் திறமையாக செய்யும்படி வலிமைபெற முதுமை நீங்க - நூறாண்டு கள் வாழ (வழிவகுக்கும்படி) அசுவினி தேவர்களை வேண்டிக் கொள்ளுதல் (1-116-15)

ஆர்சத்கர், ஸம்யு எனும் முனிவர்களின் பசுக்கள் கன்றை ஈன்றும் வலிமை நீங்கிய பசுக்கள் மீண்டும் கன்றுகளைப்பெறக் கூடியபடி உடல் வலிமையும் (திறமையும்)பெற்று பால் கொடுக்கக்கூடியனவாகச் செய்தல் (1-116-22, 1-117-20)

குருடான பராவ்ருஜர் கண்பார்வையையும், முடமாகிப் போன சுரோணர் கால் சீராகி நன்கு நடமாடும் வலிமையையும் இந்திரனால் பெறுதல் (2-15-7) அபாலா என்பவளின் தோல் நோயும், அவளது தந்தையின் தலை வழுக்கை நோயும் (Baldness) இந்திரனால் நீங்குதல் (8-92-7)இந்திரன் ஔஷதியை (தாயத்து போல) பூணுதல் (2-23-7) பலவகை நஞ்சுகள்,நோய்க் கிருமிகளைப் பற்றிய வர்ணனை அவற்றால் தோன்றும் பல வகையான யக்ஷ்மா (எலும்புருக்கி)நோயை நீக்கும் முறைகள் (10-163-16 நீரின் மருத்துவத் தன்மை (10-137-6, 1, 23, 19)ஓஷதிகளின் வர்ணனை (10, 97, 1-23)யக்ஷ்மா, அஞாத யக்ஷ்மா ,(அஞாத நோய்கள் Observe diseases) ராஜயக்ஷ்மா, கிராஹி, பிருஷ்ட்யாமயம் ஷிபாஸிமி, இதயநோய் முதலியவற்றின் விளக்கங்கள் (10-97-105-137, 16,167) முதலானவை (ரிக் வேதத்தில்) அங்கங்கு காணக்கிடைக்கின்றன

## 2. சுக்லயஜுர்ஸ்ஸம்ஹிதையில் ஆயுர்வேதக் குறிப்புகள்:

சுக்லயஜுர் வேதத்தில் பன்னிரண்டாவது அத்தியாயத்தில் இருஸூக்தங்களில் (12-75,89, 12-90,101) ஓஷதி (மூலிகை)களின் நோய்களைப் போக்கும் தன்மைகள், அந்த மூலிகைகளைக் கொடுத்தவர், யார் பொருட்டு கொடுக்கப்பட்டதோ அவர்களின் பெயர்கள் சிலேத்துமம், மூலநோய், சுவபது, கண்டு சிலீபதம்,யக்ஷ்மா முகபாகம் க்ஷுதம் முதலிய நோய்களைப் போக்குதல், முதலியன அங்கங்கு (193,81,93-20,5,9-25, 1-9,10-18,30,8-101) குதிரை மற்றும் மனிதனின் உடலுறுப்புகளைப் பற்றிய குறிப்புகள், யக்ஷ்மா, கபநோய், சோதம், பாகாரு, மூலம், விஷூசிகா, இதயநோய், கர்ம, தோல்நோய், குட்டம், அங்கபேதம் முதலிய நோய்களை ப்பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன.

## தைத்ரீயஸம்ஹிதையில் ஆயுர்வேதக் குறிப்புகள்:

தைத்ரீய ஸம்ஹிதையில் காம்யோஷ்டியை பற்றிய பிரகரணத்தில் கண் பார்வையைப் பெறுதல்,யக்ஷ்மா, உன்மாதம் போன்ற

நோய்கள் தீரும் வழிகள் அறிய வேண்டுகோள், ராஜயக்ஷ்மா மற்றும் அதனடி தோன்றும் வேறு நோய்கள் ஆகியவை தோன்றக் காரணங்களைப் பற்றிய குறிப்புகள் காணக்கிடைக்கின்றன (2,11, -2,4,1428)

## ஸாமஸம்ஹிதையில் ஆயுர்வேதக் குறிப்புகள்:

ஸாம வேதத்தில் ரிக் வேத மந்திரங்களும், ரிக்வேதத்தில் ஆயுர் வேதத்தைப் பற்றிய குறிப்புகளைக் கொண்ட மந்திரங்களும் அடங்கி யுள்ளன. எனவே, ஸாமவேதமும் ஆயுர்வேதத்தைப் பற்றிய நிலையில் ரிக் வேதத்திற்கு இணையானது எனத் தெரிய வருகிறது.

## 3. அதர்வ வேதத்தில் ஆயுர்வேதம் :

சிறப்பாக ஆயுர்வேதத்தைச் சார்ந்த பல பொருள்கள் அதர்வ வேதத்தில் இடம் பெற்றுள்ளன. இந்த வேதத்தில் இதைக் குறித்து நூற்றுக் கணக்கான ஸூக்தங்களும், மந்திரங்களும் உள்ளன. ரிக் வேதம் முதலியவற்றில் அங்கங்கு வரலாற்றைத் தெரிவிக்கும் வகையில் ஆயுர்வேதத்தைச் சார்ந்த குறிப்புகள் காணப்படுகின்றன. ஆனால் அதர்வவேதத்தில் அங்கங்கு நோய்கள், உடலுறுப்புகள் நோய்களைத் தீர்க்கும் முறைகள் எந்தெந்த மூலிகை எந்தெந்த நோயைப் போக்கவல்லது, அதைப்பற்றிய விளக்கங்கள், போன்ற பல பொருள்கள் கிடைக்கின்றன. எனவே அதர்வ வேதத்துடன் ஆயுர் வேதத்திற்கு உள்ள நெருங்கிய தொடர்பு தெளிவாகத் தெரிய வருகிறது . எடுத்துக்காட்டுகள் சில.

காய்ச்சல், பற்றிய விளக்கம், அதன் வகைகள் (6,21-1,3) காய்ச்சலின் வகையான 'ஸத்த, சாரக, கிரைஷ்ம, சீத, வார்ஷிக, திருதீயக முதலானவற்றின் விளக்கம் (1, 25, 4-4, 5, 82-1-14) காய்ச்ச லின் வகைகளில் மண்டூக (தவளை) த்தின் பயன் (7, 116, 1, 2) அந்தக் காலத்தில் பெரும்பாலும் நம் நாட்டுப் பகுதிகள் அடர்ந்த காடு களுடன் கூடியிருந்தமையால் முஞ்சவர், யாஹ்லீகம், காந்தாரம், அங்கம், மகதம் முதலிய பகுதிகள் காய்ச்சலுக்கு உரியவை என்ற விளக்கம் (5, 22, 14) சிலேத்துமம் எலும்புகள் இணைப்புகள், இதயம் முதலான உடற்பகுதிகளில் துன்பம் விளைவிக்கும் வகை, (6, 14, 1-2) மன்யா - கண்டமாலா எனும் நோயின் 55 வகைகள், கழுத்தில் தோன்றும் கண்டமாலா (goitre) நோயின் 77 வகைகள்

ஸ்கந்தகண்ட மாலா எனும் நோயின் 99 வகைகள் (6-23, 1, 3) அபசித (கண்டமாலா) எனும் நோயின் ஏனீ, ச்யேனி, கிருஷ்ணா ரோஹிணி. ஸூதிகா முதலிய வேற்றுமைகள் (6, 83, 1-3) சீர் ஷக்தி, சீர் ஷாமய (தலைநோய்), கர்ண சூல, (காதுவலி) விலோஹித விசல்யக அங்கபேத, அங்கஸ்வர, விச்வாங்க்ய, விச்வதக்ம, சாரததக்ம, வஸால, ஹரிம, யக்ஷ்மோத, காஹாவாஹ, க்லோம (pharynx) உதர (வயிறு, நாபிதொப்புள் எனும் பகுதிகளில் தோன்றும் துன்பங்கள், இதய தயாக்ஷ்ம (இதயத்தைச்சார்ந்த க்ஷயநோய்) பார்சவ (விலா) பிருஷ்ஷா (பின்தட்டு) வக்ஷண (தொடை இடுக்கு (groin) ஆந்த்ர (குடல்) மஜ்ஜர்த (எலும்புக்குள் உள்ள சோற்றைச் சார்ந்த ) வித்ரதி, சீழ்க்கட்டி, வாதி, காரா பாதம் முழங்கால், சுரோணி இடுப்பு உனுகம் எனும் என்பு, உஷ்ணாஹா எனும் கழுத்து நரம்பு முதலியற்றைச் சார்ந்த நோய்கள் தலைவலி முதலானவற்றின் விளக்கம் காணக்கிடக்கிறது. (9, 8, 1 – 22)

## 4. அதர்வ வேதத்தில் உடற்கூறு பற்றிய குறிப்புகள் :

அதர்வ வேகத்தில் உடலில் உள்ள நரம்புகள் அதாவது நூறு ஸிரைகள் மற்றும் தமனிகளை பற்றிய குறிப்பு (1, 17, 1, 4-7, 26, 2) பல வகை நோய்களைப் பற்றிய வர்ணனையுடன் அந்தந்த நோய் களுக்கு இலக்கான உடலுறுப்புகளின் வர்ணனை (2-33, 1-7) பலவகை உடலுறுப்புகளைப் பற்றிய விளக்கங்கள் (2, 33, 2-4, 10, 4-10, 201-20, 9, 13-25) தலைமுடி, எலும்பு, ஸ்ராவம் (பெருக்கு) மாமிசம், மஜ்ஜை (கொழுப்பு) பர் (இணைப்பு) முழங்கால், பாதம், தலை, கை, முகம், பின்தட்டு தனம் (கொங்கை) விலா, நாக்கு, கழுத்து, உரோமம், தோல் முதலியவற்றைப் பற்றியும் குறிப்புகள் 11, 10, 11-15) காணக்கிடக்கின்றன.

## 5. அதர்வ வேதத்தில் நோய்த் தணிப்பு முறைகள்:

மூத்ராகாதம் எனும் சிறுநீர்த்தடை நோயில் சரம், சலாகா (cathetar) முதலியவற்றால் சிறுநீரை வெளியேற்றுதல் (1,3,1-19 சுகபிரஸவம் எளிதாகப் பிள்ளையைப் பெறுதல், மற்றும் அதன்

---

முறையே இடைவிடாத காய்ச்சல், கூதிர் பருவத்தில் தோன்றுவது, முதுவேனில் பருவத்தில் தோன்றுவது, கார்காலத்தில் தோன்றுவது, மூன்று நாட்களுக்கு ஒரு முறை தோன்றுவது என பொருள் கொள்க.

விசாரங்கள் (normal delivery and abnormal delivery) சிக்கலான பிள்ளைப் பேற்றில் குறிப்பகுதியைக் கீறுதல், (Scissarian section) *1-11, 1-6* விரணங்களுக்கு நீரைக் கொண்டு சிகிச்சை செய்தல் *(5,53 1-3)* நன்கு முற்றிய பிடகை (abscess)யை சலாகை (உலோகக்குச்சி) யால் பிளத்தல் *(7, 34 1-2)* பிடகைப் பக்குவம் பெற உப்பைப் பயன்படுத்தல், *(3, 36, 1-2)* போன்ற அறுவைச் சிகிச்சை முறைகள் புறத்திலிருந்து உடலைச் சேர்ந்து பலவகை நோய்களைத் தோற்றுவிக்கும். கிருமிகளைப் பற்றிய விளக்கங்கள், அவற்றை வெளியேற்றும் முறைகள் *(2, 31, 1-5)* கண், மூக்கு, பல் ஆகிய உறுப்புகளை அடைந்து நோய்களைத் தோற்றுவிக்கும். யவாஸ, கஷ்கஷ ஏஜத்க -சிபிவிலுக முதலான கிருமிகளைப் போக்கும் முறைகள் *(5, 23, 1-13)* பல வகை நோய்க்கிருமிகளின் வர்ணனை மனிதர்கள், மற்றும் பசுக்களின் உடலில் தோன்றி நோய்களைத் தோற்றுவிக்கும் கிருமிகளைப் போக்க சூரிய கிரணத்தைக் கொண்டு சிகிச்சை செய்யும் முறை, சூரியனின் சிவப்பு நிறக் கதிர்களைக் (red rays) கொண்டு இதய நோய், காமாலை, பாண்டு (சோகை) முதலிய நோய்களைப் போக்குதல் *(1-2, 1-4)* காலை வெய்யிலில் உடல் வியர்க்கச் செய்தல், சூரிய கிரணத்தில் குளித்தல் (sun bath) நீரில் குளித்தல் முதலியவற்றால் நோய்கள் அகலுதல், *(6, 92-3)* காடு, மலை முதலியவற்றிலிருந்து வீசும் காற்று உடல் நலத்தைக் காக்கும் என்பது *(1-12-1-4)* காற்றின் நோய் நீக்குந்தன்மை *(13-2-3)* உடல் நலத்தைப் பற்றிய வர்ணனை *(2.10.1-8)* அலித் தன்மையைப் போக்கும் முறைகள் *(6, 138, 1-5)* முதலியன காணக்கிடக்கின்றன.

## 6. அதர்வ வேதத்தில் கூறப்பட்டுள்ள ஓஷதிகள் அவற்றின் தன்மைகள்

1. நத், ராமா, கிருஷ்ணா, அஸிக்னி, பிரும்மா எனும் ஓஷதிகள் கிலாஸ குட்டத்தையும், பலிதம் (தலைமுடி உதிர்தல்) எனும் நோய்களைப் போக்கும் *(1, 23, 1-4)*

2. ஸுபர்ணா, ஆஸுரி, ஸரூபா, சியாமா எனும் ஓஷதிகள் தோல் நோய்களைத் தணிக்கும் *(1.24.1-4)*

3. பாம்புப்புற்றின் மேல் முளைத்த ஓஷதிகள் அதிஸாரம், அதிமூத்ரம், நாடீவிரணம் (நரம்புச்சிலந்தி) எனும் நோய்களைத் தணிக்கும் *(2-3 , 1-8)*

4. பிருச்னிபர்ணி என்பது கருச்சிதைவு, இரத்த விகாரம் ஆகிய வற்றைப் போக்கும் , உடலைச் செழிப்புறச் செய்யும் (2-25. 1-4)

5. குரங்க - சிருங்க என்பனவற்றில் மெய்த்நோல் குட்டம், க்ஷயம், அபஸ்மாரம், எனும் நோய்களைப் போக்கும் (3, 7. 1-3)

6. சதவீர்யா, தூர்வா என்பன நீண்ட ஆயுளைத் தருவதுடன் பல வகை நோய்களைத் தணிக்கும் (3, 11, 1-8)

7. விருஷா,சுஷ்மா எனும் ஓஷதிகள் விந்துவை வளர்க்கும் (4, 4, 1-8)

8. ரோகிணி எனும் ஓஷதி உடைந்த எலும்புகளை இணைக்கும், காயங்களை ஆற்றும் (4.12-1-3)

9. ஸஹதேவி, அபாமார்கா எனும் ஓஷதிகள் நாவறட்சி, பசி ஆகியவற்றைத் தணிக்கும். புலன்களைச் சார்ந்த நோய்களைப் போக்கும். பகைவர்களை அழிக்க வல்லவை (4.13-1-8, 4.18.1-8, 4.19.1-8)

10. அபாமார்கா எனும் ஓஷதி போக்கும் முகநோய், பல்நோய் ஆகியவற்றைப் போக்கித் தூய்மைப்படுத்தும் (3.63.1-3)

11. ஸலாச்ய எனும் ஓஷதியின் பெருமை (5.5.1-9)ல் காணலாம்.

12. குஷ்டம் (கோஷ்டம்)எனும் ஓஷதி காய்ச்சல்,யக்ஷ்மா, குஷ்டம் ஆகிய நோய்களைத் தணிக்கும் (5-4.1-10)

13. குஷ்டம் எனும் ஓஷதியின் வருணனை (6.95.1-3)

14. குஷ்டம் எனும் ஓஷதியைப் புகை போடுவதால் காய்ச்சல் நீங்கும். இம்மூலிகை எல்லா நோய்களையும் போக்கவல்லது. கிருமிகளை அழிக்க வல்லது.

15. ஜங்கிட ஓஷதிகள் ஆசரிகம் (19.39.1-10) விசரிகம், ப்ருஷ்டிகா, விச்வ, சாரத எனும் நோய்களைப் போக்கும். இம் மூலிகைகளின் பயன்கள் (5.22 -1-4) காணலாம்.

16. ஜங்கிட ஓஷதிகளின் வர்ணனை மணிகளை அணிவதால் நோய் நீங்குதல் அவற்றால் பகைவர்களை அழித்தல்,ஆயுள் வளர்த் தல் விஷ்கந்த (வாத) நோய் தணிதல், ஆசரிக விசரிக பிருஷ்டலோக கபரோகங்கள் நீங்குதல் விச்வ சாரதாரி காய்ச்சல்கள் தணிதல் (2.4) 1.6.19.34, 1-10)

17. ஜங்கிட ஓஷதி-விஷ்கந்தம் எனும் வாத நோயைப் போக்கும். எல்லா நோய்களையும் போக்கவல்லது. சிறப்பாக யக்ஷ்மா (க்ஷயம்) வாத நோய்கள் ச்வித்ரம் (வெண்குட்டம் ) தத்ரு (தடிப்புகள்) பாமா (சொறி) போன்ற தோல் நோய்கள் மூலநோய் என்பனவற்றைப் போக்கும் (19, 85, 1-5)

18. விஷாண ஓஷதி – இரத்தப்பெருக்கு, வாதநோய் முதலிய வற்றில் நன்மை தரும் (6-84.1-3)

19. வரண ஓஷதி-யக்ஷ்மா (க்ஷய) நோயைப்போக்கும்(6.85-1-3)

20. திப்பிலி.க்ஷிபதம், வாத நோய்கள் ஆகியவற்றைப் போக்கும் (6.109-1-3)

21. சீபத்ருஎனும் ஓஷதி - கப நோய், வித்ரதி (சீழ்க்கட்டி) லோஹிதகம், விசல்யகம் எனும் நோய்களைப் போக்கும் (6.127-1-3)

22. தேவித தலி எனும் ஓஷதி -த லைமுடியை வளர்த்தல் (6.136-1-3, 6.137-1-3)

23. குக்குலு (குங்கிலியப்) புகை - இதன் மணத்தால் யஷ்மா (க்ஷய) நீங்கும் (19-36-1-3)

24. அஜசிருங்கி - ஜலவாயுவால் பரவும் நோய்களைத் தணிக்கும். குக்குலு நீரால் பரவும் நோய்களைத் தணிக்கும் அத்வத்தம் (அரசு) நியக்ரோத (ஆலம்) தியௌக்ஷகந்தி, பிரமந்தி முதலான மற்றும் தொற்று நோய்களைப் போக்கவல்லவை (4.37,1-12)

25. பொதுவாக ஓஷதிகளின் பெருமை (6.21, 1-3)

26. அஸிக்னி, பிருஷ்ணி, ஸ்தம்பினி, ஏகசிருங்கா , பிரதன்வதி, அம்சுமதி, கண்டினி விசாகா, வைச்வதேவீ, உக்ரா,அவகோல்வா, திஷ்ணசிருங்கி போன்ற பலவகை ஓஷதிகளின் வருணனை, பலவகை வனஸ்பதிகளின் சாற்றினால் செய்த மாத்திரைகளின் தோற்றத்தில் உள்ள மணிகள் (வையாக்ரமணி) வருணனை, அச்பத்தம் தருப்பை, சோமம், பாவம் முதலான அவ்வாறே மலர்களைக் கொண்டவை, பழங்கள் உள்ளவை ஆன ஓஷதிகள், காய் இல்லாத ஓஷதிகள், நஞ்சைப் போக்கவல்ல கிருத்யா

எனப்படும் ஏவல்களைப் போக்க வல்லவை, கபநோய்களைப் போக்கவல்லவை ஆன ஓஷதிகளின் வருணனை (8-9 1-28)

தர்ப்பை, பங்கம் (சணல்) யவம், ஸஹம், ஸோபம் முதலிய வற்றின் வர்ணனை (11-8-15)

27. பிராம்ஹணம் எனும் மூலிகை நஞ்சைப் போக்கும், அயஸ் கம்பம் என்பது நஞ்சில் தோய்ந்த ஆயுதங்களாலான காயங்களில் நன்மை தரும். பர்ணம், அதிசிருங்கம், குட்மலம். சாஸ்திர, பிராண, ஓஷதிகளின் நஞ்சை போக்கவல்லது (4–6 1–8)

28. பலவகை ஸர்ப்பங்களைப் பற்றிய வர்ணனையுடன், தாவுவ, தஸ்ஸுவ முதலான ஓஷதிகளின் நஞ்சைப் போக்கும் தன்மைகளின் வர்ணனை (5–13–1–11)

29. மதுபம், ருஷ்ணீசீ, பாலா முதலான ஓஷதிகளின் சர்ப்ப விஷத்தைப் போக்கும் தன்மை (6.12 1—3)

30. வேறு வேறு விளக்கங்களினால் புற்றுமண் (சாயனரின் கொள்கைப்படி) அல்லது ஸிலாச்ய எனும் ஓஷதி (கிரிபித் என்பவரின் கொள்கைப்படி) விஷத்தைப் போக்கும் தன்மை (6.100. 1-3)

31. மதுகம் எனும் ஓஷதி பலவகை ஸர்ப்பங்களின் நஞ்சைப் போக்கும் (7-56. 1-8)

32. நச்சுத் தன்மை கொண்ட பொருளால் வேறு பொருளின் நச்சுத் தன்மையைப் போக்கவேண்டும் என்பது (7.88 – 9)

33. விஷத்தைக் சுரக்கச் செய்யும் வித்தையைக் கொண்டு நஞ்சைப் போக்க·வேண்டும் என்பது (8.5 1-16, 6.1- 4)

34. மாற்றார் நாட்டை ஆக்ரமணம் செய்து கொள்ள அல்லது இந்திரசாந்தி எனும் முறைக்காக தர்ப்பையாலான மணியைக் கட்டுதல் (19-28. 1-10, 19, 29-1-9, 19, 30-1-5)

35. செழிப்பை விரும்புகிறவன் ஔதும்பரமணியை அணிய வேண்டும் என்பது (19-31-1-4) மரணத்தால் விளையும் அச்சத்தைப் போக்கத் தர்ப்பைமணியை அணிதல் (19-32-1-2, 19-23, 1-5)

இத்தகைய நூற்றுக்கணக்கான ஓஷதிகளைப் பற்றிய குறிப்புகள் வேற்றுமைகள், பயன்படுத்தும் முறைகள், அவற்றால் விளையும் பயன்களின் விளக்கம் முதலியன அங்கங்கு கூறப்பட்டுள்ளன.

## பிரமாணகிரந்தங்களில் ஆயுர்வேதக் குறிப்புகள்:

ஐதரேயப்ராம்ஹணத்தில் அங்கங்கு உடலின் உற்பத்தி, பிராணனின் விளக்கம், அச்வினி தேவதைகள் தேவர்களின் மருத்துவர்களாக இருக்கும் நிலை, அறிவுப்புலன்களின் விளக்கம் (5-22)

ஓஷதிகள் நோயைப் போக்குதல் 3-40) கண்மை மருந்துகளால் கண்ணோய்கள் குணமாதல் (1-3) ஆன்றோர்கள் சினந்து இடும் சாபத்தால் பைத்தியம், குட்டம் போன்ற நோய்கள் தோன்றுதல், சுனச்சேபரின் கதையில் வருணனின் சாபத்தால் ஜலதோரம் எனும் நோய் தோன்றுதல், சாந்தோக்யத்தில் இதயத்தைச் சார்ந்த நாடிகளின் வருணனை (8-1-6) உண்ட உணவு செரிமானமாகும் விதம்(6-5)உறக்கம்,கனவு ஆகியவற்றைப் பற்றிய விளக்கம் (4-3-3) பாமா (சொரி) நோய் விளக்கம் (4-1-6) நோய்களை அகற்றி நூற்றுப்பதினாறு ஆண்டுகள் வாழும் வகையின் விளக்கம் (3-16) காணலாம்.

## பிருஹதாரண்யகத்தில் ஆயுர்வேதக் குறிப்புகள்:

குதிரையின் உறுப்புகள் (1-1-1) மனித உடல் உறுப்புகள் (2-4-11) இதயம் அதைச் சார்ந்த நாடிகள் (2-1-19, 4.2-3, 4.3.20) மனிதனுக்கும் மரத்திற்கும் உள்ள ஒப்புமை (3-9-25) கண்ணின் அமைப்பு (2-2-3) மரணத்தைப் பற்றிய விளக்கம் (3-2-21) சாபத்தால் நோய்கள் தோன்றுதல் (3-7-1, 3-9-25) ஆகியவற்றின் விளக்கங்கள் காணலாம்.

## ஸாமவிதானப்பிராம்ஹணத்தில் ஆயுர்வேதக் குறிப்புகள்:

ஸர்ப்பங்களிலிருந்து பாதுகாப்பு (2-3-3) பூதங்கள் ஆக்ரமித்துக் கொள்ளுதல் (2-2-2)

நோய்கள் சூழ்ந்து கொள்ளுதல் (2-2-3) காணலாம்

## தைத்தரீய ஆரண்யகத்தில் ஆயுர்வேதம் :

நோய்களைத் தோற்றுவிக்கும் கிருமிகளைப் பற்றிய குறிப்பு (4-36-1) காணப்படுகிறது.

## ஆச்வலாயனத்தில் ஆயுர்வேதக் குறிப்புகள்:

யஞ்த்திற்கு உரிய பசுக்கள், ருத்விகுகளில் விலக்கத் தக்க நோய்கள் பற்றிய விளக்கம், ஆபஸ்தம்பத்தில் கிருமிகள் (15 - 19 - 5) விளக்கம் காணப்படுகின்றன.

## கிருஹ்ய கிரந்தங்களில் ஆயுர்வேதக் குறிப்புகள்:-

ஆச்வலாயனத்தில் சூரியன் உதிக்கும் மற்றும் மறையும் நேரத்தில் உறங்குவதால் நோய் தோன்றுதல் (3,7,1,2) யஜமானன் (யாகம் செய்பவன்) பால் உள்ள விலக்கத் தக்க நோய்கள் (1,23,20) பசுக்களின் நோய்களைப் போக்குதல் (4.8.43) என்பனவற்றைப் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன.

## சாங்க்யாயனத்தில் ஆயுர்வேதக் குறிப்புகள்:

உடலைச் சார்ந்த துன்பம் தோன்றியுள்ளபோது வேதமந்திரங்கள் ஓதக்கூடாது என்பது (4–7–36) ஆக்ரஹாயணயஞ்ஜத்தில் உண்ணத் தக்க பொருள்களில் பூதங்கள் சேராமல் தடுத்தல் (3–8) எல்லா நோய்களுக்கும் தீரும் முறை (5–63, 1–2) விளக்கப்பட்டுள்ளன)

## ஆபஸ்தம்பத்தில் ஆயுர்வேதக் குறிப்புகள்:

நோயுற்ற பெண்களுக்குத் தாமரை இதழ் (அல்லது இலை) முதலியவைற்றைக் கொண்டு மந்திரித்தல் (3–9.20) தலையில் பாதி பாகத்தில் தோன்றும் துன்பம் (hemi cronia) தோற்றுவிக்கும் கிருமிகளைப் பற்றிய வர்ணனை, சிறுவர்களில் இயற்கையாக (பரம்பரையால் தோன்றும் Congenital) நோய்கள் நீக்கும் முறை (6–15–4)ல் விளக்கப்பட்டுள்ளன.

## பாரஸ்கரகிருஹ்ய ஸூத்திரத்தில் ஆயுர்வேதக்குறிப்பு :

பாரஸ்கரஸூத்திரத்தில் மாலிஷ் செய்வதால் (தேய்த்து விடுவதால்) தலைவலி நீங்கும் முறை கூறப்பட்டுள்ளது (3–6).

## உறிரண்ய கேசீய கிருஹ்ய ஸூத்திரத்தில் ஆயுர்வேதக் குறிப்புகள் :

*ஹிரண்ய கேசியகிருஹ்யஸூத்திரத்தில் அக்கினியின் நோய் களைத் தீர்க்கும் தன்மை விளக்கப்பட்டுள்ளது (2–3–10)*

## காதிர கிருஹ்யஸூத்திரத்தில் ஆயுர்வேதக் குறிப்புகள்:

*காதிரகிரு ஹ்யஸூத்திரத்தில் கிருமிகளின் வர்ணனை (4.4.3) பசுக்களின் நோய் நீங்க வேள்வியின் புகைமண்டிய பகுதியில் திரியச் செய்தல் (4.3.13) ஸர்பம் தீண்டியதற்குச் சிகிச்சை (4–4–1) முதலியன அங்கங்கு கூறப்பட்டுள்ளன. வேத இலக்கியத்தில் காணப்படும் ஆயுர்வேத குறிப்புகளைப் பற்றி புளும் பில்ட்*M. (Bloom field) *ஹில்பிராண்ட் (*a HILLE BRANT*) கோலண்ட்* (Caland) *பாலிங்க் (*Polling) *ஜுமர்* (Zimmer) *போன்ற மேலைநாட்டு ஆராய்ச்சியாளர்கள், மற்றும் நம் நாட்டு அறிஞர்கள் சிலர் பலவிஷயங்களை விளக்கிக் கூறியுள்ளனர். விரிவாகும் என அஞ்சி அவற்றைப் பற்றிய விளக்கம் இங்கு கூறப்படவில்லை.*

## கௌசிக ஸூத்திரத்தில் மருத்துவக் குறிப்புகள்

*கௌசிக ஸூத்திரம் இயற்றியவர் தம் நூலில் அங்கங்கு மந்திரங்களின் பயனை விளக்கும் பகுதிகளில் அந்தந்த மந்திரங் களின் பெருமையைக் கூறி நான்காம் அத்தியாயத்தில் 'அதயை ஷஜ்யாநி' (இனி மருத்துவ முறைகள்) எனத் துவங்கி அந்தந்த நோய்களைப் போக்க அந்தந்த மந்திரங்களால் மந்திரித்துக் கொடுக்கத் தக்க நீர், ஓஷதிகளைக் குறிப்பிட்டு, ஹோமம் செய்தல், மார்ஜனம் (உடலின் மேல் தடவுதல்) முதலியவற்றிற்கான குறிப்புகள் போன்ற பலமுறைகளைக் கூறியுள்ளார். மந்திர ஸம்ஹிதையின் ஆதாரத்தில் கூறப்பட்ட கௌசிக ஸூத்திரத்தில் மந்திர முறைகள் விரிவாகக் கூறப்பட்டிருப்பினும் வாத நோய்க்கு மாமிசக் கொழுப்பை உட்கொள்ளுதல், சிலேத்துமத்தில் தேனைப் பருகுதல் வாதபித்தத்தால் தோன்றிய நோயில் எண்ணெயைப் பருகுதல், தனுர்வாதம், உடல் நடுக்கம், சரீரபங்கம் போன்ற வாத நோய்களில் நெய்யை மூக்கிலிடும் மருந்தாக (நசியமாக)ப் பயன்படுத்தல், இரத்தப் பெருக்கு மற்றும் பெண்களின்*

மாதவிடாய்ப் பெருக்கு மிகுதியாக உள்ள நோய் ஆகியவற்றில் நன்கு உலர்ந்த சேற்றுமண்ணைக் கரைத்துப் பருகச் செய்தல், இதய நோய், காமாலை முதலியவற்றிற்கு மஞ்சள் கலந்த சோற்றை உட்கொள்ளச் செய்தல், வெண்குட்டத்திற்கு சிவப்புக் கோஷ்டத்தைப் பசுவின் சாணத்துடன் கலந்து கரிசலாங்கண்ணி, மஞ்சள், இந்திரவாருணி, அலரிவேர் ஆகியவற்றையும் கலந்து அரைத்து மேல் பூச்சாகச் செய்தல், வாதத்தால் ஆனகோளாறுகளுக்குதிப்பிலியை உட்கொள்ளச் செய்தல் ஆயுதத்தால்பட்ட காயத்திலிருந்து இரத்தம் பெருகுவதற்கு அந்தப் பகுதியில் பக்குவம் செய்த கொம்பரக்கு நீரை ஊற்றிக் கொண்டிருத்தல், ராஜயக்ஷ்மா, குட்டம், தலைநோய், உடல் முழுவதிலும் வலி போன்றவற்றில் வெண்ணெயில் கோஷ்டத்தின் தூளைக்கலந்து நோயாளியின் உடலின் மேல் பூதல், ஆயுதத்தில் அடிபட்டவனுக்குப் பாலுடன் கொம்பரக்கைக் கலந்து காய்ச்சிப் பருகச் செய்தல், கண்டமாலை (கபத்தைச் சுற்றித் தோன்றும் கட்டி)யில் சங்கை அரைத்துப் பூசுதல், அட்டைப்பூச்சியின் உதவியால் (கெட்ட) இரத்தத்தை வெளியேற்றுதல், இந்துப் புத்தூளைத் தூவுதல், விரணங்களின் மீது பசுவின் சிறுநீரைப் பயன்படுத்தல், சிறுநீர், மலம் ஆகியவை வெளியேறாமல் தடைப்பட்டபோது கடுக்காய் போன்ற மலத்தைப் பிளந்து வெளிப்படுத்தும் (Lexatinx) மருந்துகளைக்கட்டுதல், ஆகு, கிரி, பூதிகம் ஜரத், பிரமந்தம், ஸ்ராவங்கம் போன்ற ஓஷதிகளை நீரில் கலந்து உட்கொள்ளச் செய்தல், குதிரை மீது சவாரி செய்வித்தல், பாணம் விடச் செய்வித்தல், பசுவைப் பால் கறக்கும் நீரில் (கோதேனஹனியில்) 21 யவதானியத்தைப் போட்டு ஆண்குறியை மேல் நோக்கி வைத்துக் கொள்ளச் செய்து அதன் மீது ஊற்றுதல், உலோகக் கம்பியை (Catheter or Sound) உட்புகுத்தல், யவதானியம், கோதுமை, வல்லி, பத்மமூலம், பாவிகா போன்ற வற்றின் கஷாயத்தைப் பருகச் செய்தல் முதலிய விளக்கங்கள் காணப்படுகின்றன.

மந்திரத்தால் மந்திரிக்கப்பட்ட நீரில் சமீ, சமம், காசம், வம்சா, சாம்யம், வாகா, தலாசா, பலாச,வாஸா சிம்சபா, சிம்பல, ஸிபுந, தர்ப்ப அபாமார்க, கிருதி, லோஷ்ட, வல்மீக, வபா, தூர்வாப்ராந்த, விரீஹி, யவம் போன்ற சாந்த ஓஷதிகளைத் கலந்து செய்த அந்நீரை மருந்தாகப் பல நோய்களைத் தணிக்கும் முறை கூறப்பட்டுள்ளது.

இவ்வாறு மந்திரமுறைகளைப் போல ஓஷதிவித்தை (மருத்துவம்)யும் கௌசிகஸூத்திரம் அதர்வ வேதத்துடன் தொடர்பு கொண்டிருப்பதைக் காணலாம்.

முன்காலத்தில் உடலில் தாதுக்களின் கோளாறுகளைப் போல நோய்களுக்கு ராக்ஷஸ, பூத, பிரேத, பிசாச, கிரக, ஸ்கந்த, ருத்ர முதலான தேவதைகளின் சினமும் காரணங்களாகக் கருதப்பட்டு வந்தது என்பதை 'ரக்ஷோஹா மீவசாதன' போன்ற மந்திரப் பகுதிகளில் அந்நோய்கள் தீர்க்க உபாயங்களைக் கூறப்படுவ தால் அறியலாம். மேலை நாட்டு மருத்துவ நூல்களில் கூட பைத்தியம், அபஸ்மாரம் (கால் கைவலி) போன்ற நோய்களிலும் பூதம் முதலியவற்றின் காரணம் கூறப்பட்டுள்ளது. அவ்வாறே கௌசிகஸூத்திரம் முதலான நூல்களில் அங்கங்கு நோய் தோன்றக் காரணமான பூதம் ராக்ஷஸம் முதலானவற்றை விலக்கத் தக்க மந்திரங்கள் அதர்வ வேதத்தில் காணப்படுகின்றன. அதர்வம் முதலான மந்திரங்களில் அங்கங்கு கூறப்பட்டுள்ள நோய்க்குக் காரணங் களான பூத, ராக்ஷஸ முதலான கிருமிகளின் விளக்கமும் காணப் படுகின்றன. இவை ராக்ஷஸ இனத்தைச் சேர்ந்தவையாகும். நூலாசிரியர்கள் மூன்றுதலைகளுள்ளவை, மூன்று கால்கள் உள்ளவை, சிவந்த கண்களைக் கொண்டவை என நோய்களுக்கு உருவங்கள் கற்பனை செய்து கூறப்பட்டுள்ளவை அந்நோய்களைத் தோற்றுவிக்கும் நுண்ணிய உயிரணுக்களின் தோற்றங்கள் எனத் தெளிவாகிறது. இன்று நாம் மைக்ராஸ்கோப் எனும் கருவியின் மூலம் நோய்க் கிருமிகளின் பலவகை விசித்திர உருவங்களைக் காண்கிறோம். இந்தக் கிருமிகளின் தோற்றத்தையே அந்தக் காலத்து ரிஷிகள் தம் உள் நோக்கால் உணர்ந்து ராஷஸத் தோற்றமுள்ளவை என வருணனை செய்தனர் எனத் தோன்றுகிறது. இன்றும் மலைவாழ் மக்கள் காய்ச்சல் முதலான நோய்களுக்குப் பூதங்கள் காரணமெனக் கருத்துடன் கழிவிடைகள் செய்தல் மந்திரித்தல், பலியிடுதல் வேறு உயிரினங்களின் மேல் நோயை ஏவுதல் போன்ற முறைகளைக் கையாள்வதையும், அம்முறைகளால் நற்பயனைப் பெறுவதையும் காண்கிறோம். இம்முறைகள் ஆதாரமற்றவை அல்ல. முன் காலத்திலிருந்து வழக்கமாக வந்துள்ள முறைகளே அங்கங்கு சிதைந்து ஓரளவு இவ்வாறு பின்பற்றப் படுகின்றன என்பதை அறியலாகும். இவ்வாறு மந்திரங்களுடன் கூடிய சிகிச்சை முறைகள் தொன்று தொட்டு நம் நாட்டில் மட்டுமல்ல, கிரேக்க வட அமெரிக்கா போன்ற மேலை நாடுகளிலும் விளங்கி வந்துள்ளது எனபது சரித்திர ஆராய்ச்சியால் தெளிவாகிறது.

அதர்வ வேதத்தில் மந்திரவித்தை, பூத வித்தை போன்ற தாந்திரீக முறைகளால் நோய்களுக்குச் சிகிச்சை செய்யும் முறைகள்

தான் அதர்வவேதத்தில் கூறப்பட்டுள்ளதே எனச் சிலர் கருதுகின்றனர். அது உண்மைக்குப் புறம்பானது.

வேத காலத்தில் தவறான உணவு உட்கொள்ளுதல், கூடாத செயல்களைப் புரிதல் ஆகியவற்றுடன் முன் செய்த தீவினை, பூத, பிரேதங்கள், ருத்திரன் முதலான தேவதைகளின் கோபமும் காரணங்களாகக் கருதப்பட்டு அந்தந்த தேவதைகளை வழிபடுல், சிறப்பான மந்திரங்களால் பூதம் முதலானவை விலகிச் செல்வதற்கு மந்திரித்த நீரைத் தெளித்தல், மந்திரித்த நீரில் முழுகச் செய்தல், புகை போடுதல் முதலான உபாயங்களைக் கையாளுதலுடன் நாம் முன்பு கூறியபடி அங்கங்கு மூலிகைகளைப் பயன்படுத்தும் மருத்துவ முறைகளும் பயன்படுத்தப்பட்டு வந்துள்ளன என்பன தெளிவாகிறது. எனவே முன்னோர்கள் மந்திர வித்தை, மருத்துவம் எனும் இவ் விரண்டையும் சமமாகவே அதர்வ வேதம் கூறும் முறையாகும் என அறியலாம்.

மேலும் அதர்வ வேதத்தில் உள்ள சில மந்திரங்களுக்குப் பொருள்காணும் போது பூத வித்தையுடன் தொடர்பு இல்லாமல் மருத்துவமுறையின் விளக்கம் கூறப்பட்டிருந்தும், ஸூத்ரகாரர்கள் 'கண்னோதேமர பீஷ்ய' போன்ற மந்திரங்களால் தெரிவித்தல் முதலான முறைகளைக் கூறியது போல கௌசிக ஸூத்திரகாரரும் அபிசாரம், மந்திரித்துத் தாயத்து கட்டுதல் போன்றவற்றைக் காலத்திற்கு ஏற்ப மாறுபட்ட செயல்களாக அறிய வேண்டும்.

ரிக் வேதத்தில் சிறிய அளவில் காணப்படும் மந்திர மற்றும் மருத்துவ முறைகள அதர்வண வேதத்தில் நன்கு வளர்ந்து விரி வடைந்தன. அதர்வ வேத மந்திரங்களில் தனிப்பட்ட மருத்துவப் பொருள்களைக் கொண்ட மந்திரங்களுக்கும் கௌசிக ஸூத்தி ரத்தில் மந்திர வித்தையாகப் பொருள் கூறப்பட்டுள்ளது. இதனால் ஸூத்திர கிரந்தங்கள் தோன்றிய காலத்தில் மந்திர வித்தை நன்கு வளர்ந்தது எனத் தெரிய வருகிறது. இவ்வாறு இவ்விரு முறைகளும் மலர்ந்து விரிவடைந்தன. அதர்வ பூத வித்தைக்கு ஆசிரியர் எனவும் வேதத்தில் கூறப்பட்டுள்ளது. அதனால் அதர்வ வேதத்தில் பூத வித்தை மந்திரவித்தை என இவ்விரண்டும் நன்கு விளக்கம் பெற் றுள்ளன. இந்தக் கௌமாரபிருத்ய (குழந்தைகளின் நோய்களுக்கான மருத்துவ) நூலில் ஸ்கந்த, அபஸமார்கிரஹ, பூதனா முதலான பூதங் களைப் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன. அவற்றிற்குப் பூசை போடுதல், புகை போடுதல் எனும் தோற்றங்களில் நோய்களுக்கு

உரிய சிகிச்சை முறைகள் அத்துடன் அந்தந்த நோய்களைப் போக்க வல்ல மருந்து முறைகளும் கூறப்பட்டுள்ளதை நோக்கும் போது அக்காலத்தில் இருமுறைகளும் விளங்கி வந்தன என்பதை நாம் அறியலாகும்.

ரிக் வேதத்ததில் பல மருத்துவ முறைகளின் குறிப்புகள் காணப் பட்டாலும் அச்வினி குமாரர்கள் பல அற்புத நிகழ்ச்சிகளை நடத்திக் காட்டியதாக சரித்திர வரலாற்றைக் கூறும் முறையே காணப்படு கிறது. அதாவது விச்பலாவின் முழங்கால் இணைக்கப்பட்டது. ருச்ராச்வரின் கண்கள் சீராக்கப்பட்டன போன்ற வரலாறுகளே கணக் கிடைக்கின்றனவே அல்லாது அவற்றிற்கான மருத்துவ முறைகள் கூறப்படவில்லை. அங்கங்கு சில மூலிகைகள் கூறப்பட்டுள் ளனவே அன்றி அவற்றைப் பயன்படுத்த வேண்டிய முறைகள் கூறப்படவில்லை. அதர்வ வேதத்திலும் பலவகை நோய்கள், மருந்துப் பொருள்கள், நோய்கள் தோன்றக் காரணங்கள், கிருமிகள், இன்ன மூலிகை இன்ன நோயைப் போக்க வல்லது என்னும் வகையில் பல விளக்கங்கள் காணப்படுகின்றனவே அல்லாது அவற்றைப் பயன்படுத்தும் முறைகள் கூறப்படவில்லை. எனவே அம்மந்திரங்களால் அந்தக் காலத்தில் விளங்கி வந்த மருத்துவ விஞ்ஞானத்தின் நிலைமை மட்டுமே அறிய முடிகிறது.

''பத்ரௌஷதீஸமக்மத ராஜாந: ஸமிததாவிவ,

விப்ர ஸஉச்யதே பிஷக் ரக்ஷோஹாமீவ சாதனம்'

*(ரிக் – 10.97.60)*

''சதம் தேராஜன் பிடிஜ: ஸஹஸ்ரமுர் வீ கபீரா

ஸுமதிஸ்தேஸ்து

*(ரிக் 1–24–9)*

'சதம ஹ்யஸ்யபிஷஜ ஸஹஸ்ர முதவீருத'

*(அதர்–2.9.3)*

முதலான மந்திரங்களால் ''ஓஷதிகளைக் கைக்கொண்டு வரும் மருத்துவர்கள் நூற்றுக்கணக்கில் உள்ளனர்'' எனக் கூறப்பட்டுள்ள தால் ஒருவர், இருவர் அல்லது நூற்றுக்கணக்கில் மருத்துவர்கள் இருந்தனர் எனக் கூறப்பட்டுள்ளது. ஓஷதிகளாக அறியப்பட்ட கொடிகளும் செடிகளும் நூற்றுக்கணக்கில் அல்ல ஆயிரக்கணக்கில்

உள்ளன எனக் கூறப்பட்டுள்ளது. எனவே இந்த மருந்துவ விஞ்ஞானத்தை அறிந்த நூற்றுக்கணக்கான மகரிஷிகளால் முழுமையாக வழக்கத்திலிருந்த முறைகளை பற்றிய விளக்கங்களைக் கொண்ட தனிப்பட்ட ஆயுர்வேத நூல் விளங்கி வந்துள்ளது எனக் கருத இடம் உண்டு. எவ்வாறெனில் அறிந்து கொள்ளத் தக்க பொருள்களைப் பற்றிய குறிப்புகள் அவற்றின் பயன், பயன்படுத்துவதால் கிடைக்கும் இலாபம் முதலியனவற்றைப் பற்றிய குறிப்புகள் அங்கங்கு வேதத்தில் காணப்படுகிறது. 'வேத' எனும் சொல்லால் அறிந்து கொள்ளத் தக்க பொருள்களின் தொகுப்பு மொத்தமாகக் குறிப்பிடப்படுகிறது. அப்பொருள்களை ஞானவழிகளில் தனித்தனியாக அறிந்து கொள்ள வேண்டியவை உபவேதம் எனும் சொல்லால் உணர்த்தப்படுகிறது.

காந்தர்வம் (இசை) தானிஷ்யம் (தனுசைக் கொண்டு அம்புகள் எய்தல்) ஸ்தாபத்யம் (சிற்பக்கலை) எனத் தனித்தனியாக ஞானத்தின் துறைகளைப் போல ஆயுர்வேதத்தைப் பற்றியும் தனியாக உப வேதம் விளங்கி வந்ததாக தெளிவாகிறது. தொன்மையான இந்த ஆயுர்வேத நூல் பிரும்மஸம்ஹிதை, அச்வி ஸம்ஹிதை, இந்திர ஸம்ஹிதை எனும் தோற்றத்தில் இருந்திருக்க வேண்டும். ஆகையால் சில ஆசிரியர்கள் ஆயுர்வேதத்தை உபவேதம் எனவும், கச்யபாசாரியர் ஐந்தாம் வேதம் எனவும் குறிப்பிட்டுள்ளது சரியே எனத் தெளியலாகும். ஆனால் தனிப்பட்ட மூலநூலாக விளங்கிய ஸம்ஹிதை இன்று கிடைக்க வில்லை. வேதங்களில் அங்கங்கு காணப்படும் குறிப்புகளாலும், பரம்பரையாக ரிஷிகளால் இயற்றப் பட்டுள்ள வேறு நூல்களினாலும் குறிப்புகளாலும், பரம்பரையாக ரிஷிகளால் இயற்றப்பட்டுள்ள வேறு நூல்களினாலும் மட்டுமே ஆயுர்வேதத்தை அறிந்து கொள்ள முடிகிறது.

இன்று கிடைக்கின்ற பண்டைய ஆயுர்வேத நூல்களையும், வேதகாலத்து இலக்கியத்தையும் சீர் தூக்கிப் பார்க்கும்போது நோய் களின் பெயர், ஓஷதிகளின் பெயர், அவற்றின் பயன், இவற்றை விளக்கும் முறை ஆகியவற்றில் மிக்க வேற்றுமை காணப்படுகிறது. வைதீக விஷயங்களை விட ரிஷிகள் கூறிய ஸம்ஹிதை நூல்களைச் சார்ந்த நூல்களில் கூறப்பட்டுள்ள பொருள்களில் முறையே வளர்ச்சி பெற்ற நிலையும் சிறப்பாக காணப்படுகிறது. மொழி நூலைப் பற்றிய விஷயங்களிலும் இத்தகைய வேற்றுமைகள் குறுகிய காலத்தில் நிகழக்கூடியவையல்ல. நூல் அதில் காணப்படும் மொழி,

இயற்றப்பட்டுள்ள முறை முதலிய விஷயங்களில் ஸரித்திர நூல்கள் மற்றும் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கும் முன் கவிகள் இயற்றிய நூல்கள் பௌத்த சமயத்தைச் சார்ந்த நூல்கள் ஆத்ரேயர், காசியபர், தன்வந்தரி முதலியவர்களின் நூல்கள் ஆகியவற்றிற்கும் இன்றுள்ள (வடமொழி) நடைக்கும் உள்ள வேற்றுமைகளைவிட மிகுந்த அளவில் வேற்றுமை வேதகாலத்து நூல்களுக்கும், ரிஷிகள் இயற்றிய நூல்களுக்கும் இடையே காணப்படுகின்றன.

இவ்வேற்றுமை இடையில் வெகுகாலம் கடந்திருந்தாலின்றி ஏற்பட்டிருக்க முடியாது. எந்த மொழியிலாயினும் அறிவு மலர்ச்சி நிதானமாகவே ஏற்படும். ஆயுர்வேத விஞ்ஞான விஷயத்திலும் இவை வைதிக இலக்கியத்தை விட ரிஷிகளின் ஸம்ஹிதைகளைச் சார்ந்த இலக்கிய வளர்ச்சிக்கு இடையே உள்ள நெடுங்கால இடைவெளியைவிட அதிக அளவு காலம் கடந்திருக்க வேண்டும். வேத இலக்கியத்திற்குப் பிறகு பிராம்மண, உபநிஷத், கல்ப, ஸூத்திரங்கள் எனும் தொடரில் அங்கங்கு காணப்படும் ஆயுர்வேத விஞ்ஞானம் எனும் வெள்ளம் தத்தம் ஆசிரிய பரம்பரையின் உதவியின்றி பண்டைய ரிஷிகளின் ஸம்ஹிதையில் காணக்கிடைக்கும் ஞானக்கடல் நன்கு விளங்க இயலாது. எனவே, அங்கங்கு முற்காலத்து ஆன்றோர்களால் குறிப்பிடப்பட்ட பெயரளவில் இன்றுள்ள அல்லது பெயரும் மறைந்து போன ஆசிரியர்களது உபதேச ரூபமாக விளங்கிய விஞ்ஞான பரம்பரையே ஆயுர்வேத விஞ்ஞானமெனும் வெள்ளத்தில் வேத இலக்கியத்தையும், ரிஷிகளின் ஸம்ஹிதையையும் ணைக்கும் பாலமாகச் செயல்படுகிறது. பெரும் பாலமாக அமைந்துள்ள இந்த ஒன்று இரண்டு ஆயிர வருஷங்களுக்கு முற்பட்டதே ஆகும். 'மருத்துவர்களின் சாஸ்திரங்கள் பல உலகில் பரவியுள்ளன' என ஆத்ரேயரும் தம் காலத்தில் விளங்கிய ஏனைய ஆசிரியர்களின் சாஸ்திரங்களைக் குறிப்பிட்டுள்ளார். இதனால் ஆத்ரேயருக்கு முன் ஆம மருத்துவ ஆசிரியர்கள் பலர் விளங்கி வந்துள்ளமை தெரிய வருகிறது. வேத காலத்து ஆயுர்வேத விஞ்ஞானத்தில் சல்ய முறை மற்றும் உடற்கூறு பற்றிய பொருள்களிலும் மிக நுட்பமான விளக்கம் காணப்படுகிறது. ஓஷதி(மருந்து மூலிகைகளைப் பற்றிய) விஷயத்திலும் உலோகங்கள், இரத்தினங்கள், பாதரஸம் முதலியவற்றைப் பற்றிய குறிப்புகள் காணப்படவில்லை. சாதாரணமான தாவரங்களே மருந்துப் பொருள்களாகப் பயன்படுத்தப்பட்டு வந்துள்ளது தெளிவாகிறது. ஜங்கிட, கோஷ்ட, ரோகிணி, அபாமார்க முதலான

செடிகளும் அந்தந்த நோய்களுக்குத் தனித்தனியாகக் கூறப் பட்டுள்ளன. கௌசிக ஸூத்திரம் இயற்றியவரும் ஏறக் குறைய இம்முறையிலேயே தேன், எண்ணெய், நெய், திப்பிலி, கோஷ்டம் முதலிய பொருள்கள் இந்தந்த நோய்களைப் போக்கும் எனத் தனித்தனியாகவே குறிப்பிட்டுள்ளார்.

ஆலவிஸோலபாண்ட பிருங்கார்ஜ முதலான மலர்களின் சாற்றை மேல் பூச்சாகப் பூசுவது, வெண்ணெய் கலந்துள்ள கோஷ்டத்தைப் பூசுவது, பக்குவம் செய்த பால், கொம்பரக்கை பருகச் செய்வது இவ்வாறு ஒன்றிரண்டு பொருள்களைச் சேர்த்துப் பயன்படுத்தும் முறை அங்கங்கு காணப்படுகிறது. எந்த பொருள் எந்த நோயைப் போக்கும் என்பதை உணர்ந்து கொண்டால் பிறகு அதை பயன்படுத்தும் முறையைத் தானாக ஆராய்ந்து தெரிந்து கொள்ளலாம். இதை மனத்திற்கொண்டு முதலில் நூன் மரபாகத் தெரிந்து கொள்ள வேண்டிய சாஸ்திரப் பொருள்களை வாதிக, பைத்திக, இலைஷ்மிக - அவ்வாறே ஜீவனிய, பிரும்மணீய, தர்பணீய, ஸம்சமனீய, விருஷ்ய எனும் வகைகளாக (மூலிகைகளையும்) பாகுபடுத்தி, நோய்களைத் தணிக்க முதன்மையான உபாயமாக பஞ்சகர்மா முதலிய முக்கிய விஷயங்களைத் தொகுத்து வேறுவேறு ஸம்ஹிதை களை எழுதிய ஆசிரியர்கள் முதன் முதலாக ஸூத்திரஸ்தானம் என்பதைச் செய்தனர். அப்பொருள்களை நன்கு தெரிந்து கொண்டால் அவற்றில் தகுந்த பொருள்களைக் கலந்து மருந்தாக்கி நோய்களுக்குத் தக்கபடி பயன்படுத்தி நோய்களை போக்கலாம். ஆகையால் மருந்துகளைப் பற்றிய விஷயத்தில் ஸூத்திரஸ்தானம் மட்டுமே போதுமானது எனலாம். இன்று கூட கிராமங்களில் மலைகளில் வாழும் மக்கள் அந்தந்த நோய்களுக்கு ஒன்றிரண்டு மூலிகைகளைப் பயன்படுத்துவது காணப்படுகிறது. இது முற்காலத்தில் விளங்கிய முறையை நினைவுபடுத்துகிறது. பிறகு மெள்ள மெள்ள காலப்போக்கில் பொருள்களின் தன்மைகளும், தோஷங்களின் செயல்கள் ஆகியவற்றைப் பற்றிய அறிவும் அனுபவமும் வளர்ச்சி பெறுமளவில் அவற்றைக் கலந்து தோஷங்கள் சேர்ந்து தோற்றுவித்த நோய்களில் அவற்றைப் போக்கும் மூலிகைகளைச் சேர்ந்து மருந்தாக்கிப் பயன்படுத்தும் முறை வளர்ந்தது. உயிரினங்களின் (எண்ணிக்கை) வளர்ச்சி, நாடு (வாழுமிடம்) காலம், நீர், காற்று, உணவு குடிநீர், இருக்கும் (வாழும்) நிலை முதலியவற்றில் மாறுபாடுகள், மக்கள் ஒருவரோடு மற்றொருவர் இணங்குதல் அல்லது பிணங்குதல் ஆகியவற்றால்

மாறுதல்களுக்கு ஏற்ப உடலில் உள்ளும், புறத்திலும் தோன்றும் நோய்களும் பலவாக வேறுபட்டு இவற்றிற்குத் தக்க புதுப்புது பெயர்களும் அந்நோய்களுக்கு ஏற்பட்டன. மருந்துகளும் பரவலாயின மருத்துவ ஆசிரியர்களும் இம்முறையில் புது நோய்களுக்கும் ஸூத்திரஸ்தானத்தில் கூறப்பட்டுள்ள பொருள் களுக்கு ஏற்ப மருந்து முறைகளைத் தம் அறிவாற்றலால் உணர்ந்து அவ்வகைகளையும் தம் ஸம்ஹிதைகளில் குறிப்பிட்டும் மருத்துவ நூலை ஸூத்திரஸ்தானத்தை ஒட்டி மேலும் விரிவுபடுத்தி நிறைவுபெறச் செய்தனர். தமக்கு முன் விளங்கியவர்களின் நூலில் கண்டுள்ள பொருள்களைத் தம் அனுபவத்தால் பயன்படுத்தி நாடு, காலம், நோயின் தன்மை முதலியவற்றிற்கு ஏற்பக் கண்ட முறைகளையும் தெளிவு படுத்தி ஆயுர் வேதத்தை விரிவுபடுத்தினர். எனவே தக்க மூலிகைகளைக் கலந்து பயன்படுத்தும் முறை இன்று ஏற்பட்டதல்ல.ஹார்னலே குறிப்பிட்ட படி, ஷ்டாயின் என்பவரால் கிழக்கு டர்க்கி நாட்டில் துங்க்ஹுாங்க் எனும் வடமேற்கு சீனநாட்டுப்பகுதியில் உள்ள இடத்தில் கிடைத்த பண்டைய காலத்து ஈரான்மொழி பெயர்ப்புநூலுடன் கிடைத்த அதன் முதநூலாகிய வடமொழிநூல் ஒன்று உள்ளது. அதில் புத்த பகவானால் ஜீவகனைக் குறித்து உபதேசம் செய்யப்பட்ட ஓஷதிகளின் வர்ணனை உள்ளது. 'மகாவக்கத்தில்' ஜீவகனைக் குறித்து செய்யப்பட்ட இந்த உபதேசத்தில் பல மூலிகை களைச் சேர்த்துச் செய்த மருந்துகளைப் பற்றிய குறிப்புகள் காணப் படுவதால், புத்தபகவானுடைய காலத்திற்கு முன்பே இவ்வாறு பல மூலிகைகளைச் சேர்த்து மருந்துகள் செய்யும் முறை விளங்கி வந்துள்ளது என்பது தெளிவாகிறது. அக்காலத்து வேறு நூல்களின் வாயிலாகவும் இது உறுதியாகிறது. மேலை நாட்டு மருத்துவத்திலும் நோய்களுக்குச் சிகிச்சை செய்யும்போது தோஷங்களைப் போக்கும் மருந்துகளைக் கலந்து பயன்படுத்தும் முறை தொன்றுதொட்டு விளங்கி வந்துள்ளது. இன்று 'போடன்ட்' செய்யப்பட்ட முறையில் இத்தகைய மருந்துகள் கிடைப்பதுமன்றி அவற்றில் கலந்துள்ள மருந்துப்பொருள்களின் விளக்கமும் விளம்பரப்படுத்தப்படுகிறது. உலக மக்களின் உடல் நலம் எப்பொழுதும் அனைவருக்கும் ஒரே நிலையில் இருப்பதில்லை. ஒரே நோய் வேறு வேறு மனிதர்களிடையே அவர்களது உடல்

நிலைமைக்கு ஏற்ப வேறுபட்டவையாகப் பலவகையாகக் காணப் படுவது கண்கூடு. இருக்கும் இடம், காலம், நீர், காற்று நிலைகளில் உள்ள மாறுபாடு உட்கொள்ளும் உணவு, பழக்க வழக்கங்கள், போன்றவற்றில் உள்ள மாறுபாடுகளால் தோன்றிய நோயிலும் பல மாறுபாடுகள் காணப்படும். வாத - பித்த - கப தோஷங்களில் இரண்டு அல்லது மூன்று கலந்து சீற்றமுறுவதால் அவற்றின் தராதரத்திற்கு ஏற்ப நோய்கள் பலவாகத் தோன்றுவதுண்டு. அந்நோய்களின் தன்மைகளுக்கு ஏற்ப மருந்துப் பொருள்களில் சேர்க்க வேண்டியவை, விலக்க வேண்டியவை, கலக்கும் அளவுகளில் ஏற்றத்தாழ்வுகள், கலக்கும் முறைகளில் வேறுபாடுகள், பயன்படுத்தும் முறைகளிலும் வேறுபாடுகள், அனுபவத்தில் கண்டதற்கு ஏற்ப பழைய முறைகளை மேற் கொள்வதும், புதியன கண்டு கொண்டும் ஆயுர்வேத விஞ்ஞானத்தை வளர்ச்சியுறச் செய்வது மிகவும் தேவையாகும்.

## ஆயுர்வேத நூல்களும் ஆசிரியர்களும் :

உலகில் தோன்றிய உயிரினங்களின் உடல் நலப் பாதுகாப்புக் காகப் படைப்புத் தொழிலின் துவக்கத்திலேயே பிரும்மா ஆயுர் வேத ஸம்ஹிதையைத் தோற்றுவித்தார். அந்த ஆயுர்வேதம் அச்வினீ குமாரர்கள், இந்திரன் முதலியவர்களால் ரிஷிகளுக்குக் கிடைத்தது. இந்த ரிஷிகளால் ஆயுர்வேதம் உலகில் பரவச் செய்யப் பெற்றது என இதிஹாஸம் கூறுகிறது. பிரும்மதேவனால் துவங்கப்பட்டதோ, தேவதைகளில் உபதேசம் செய்யப்பெற்றதோ எதுவாயினும் ரிஷிகளால் பிரகாசப் படுத்தப்பட்டது என்பதில் ஐயப்பாடு கொள்ள இடம் இல்லை. மிக்க தொன்மையான காலத்திலேயே இது தோன்றியது. தொன்மையான முதல் நூல்களில் இதன் பரம் பரை பின்வருமாறு தெரியவருகிறது.

பிரும்மா

தஷன்

அச்வினீகுமாரர்கள்

இந்திரன்

| | | |
|---|---|---|
| (ஸுசுருத ஸம்ஹிதையின்படி) | (காசியப ஸம்ஹிதையின்படி) | (சரக ஸம்ஹிதையின்படி) |
| தன்வந்திரி<br>\|<br>திவோதாஸர்<br>\|<br>ஸுசுருத, ஔபதேநவ, வைதரண, ஔரப்ர, பௌஷ்கலாவத, கரவீர்ய, கோபுர, ரக்ஷித போஜ முதலியவர்கள் | கசியப, வஸிஷ்ட, அத்ரி பிருகு<br>\|<br>இவர்களது மைந்தர்களும் சீடர்களும் | பரத்வாஜர்<br>\|<br>ஆத்ரேயபுனர்வசு<br>\|<br>அக்னிவேச, பேட, ஜதுகர்ண, பராசர, ஹாரீத, க்ஷீரபாணி முதலியவர்கள் |

காசியபஸம்ஹிதையில் கூறப்பட்டுள்ள உபதேச பரம்பரையின்படி முதன் முதலில் ஆயுர்வேதத்தைப் பிரும்மா தோற்றுவித்தார். அவரிடம் அச்வினிகுமாரிகள் பெற்றனர். அவர்கள் இந்திரனுக்கும் இந்திரன் கசியபர் முதலான முனிவர்களுக்கும் உபதேசம் செய்தனர் எனத் தெரிய வருகிறது.

சரகஸம்ஹிதையின் துவக்கத்தில் கூறியுள்ளபடி – நோயால் துன்புறும் உயிரினங்களைக் காத்தருளத் தக்க வழிகாணும்படி முனிவர்குழாம் வேண்ட பரதவாஜர் இந்திரனை அண்டி ஆயுர்வேதத்தைக் கற்றறிந்ததாகவும், அம்முனிவரிடம் மற்ற முனிவர்கள் இந்த வித்தையைக் கற்றதாகவும் தெரிய வருகிறது. ''ஜ்வர ஸமுச்சயம்'' என்பதாலும் ஆயுர்வேதத்தை முதன் முதலாகப் பரவச் செய்த ஆசிரியர் பரத்வாஜர் என்பது தெளிவாகிறது. மகாபாரதத்தில் வைத்திய ஆசிரியர் பரத்வாஜர் எனும் குறிப்பு காணப்படுகிறது. சரகஸம்ஹிதையின் துவக்கத்திலும், உத்தரபாகத்திலும் ஆக

பரத்வாஜரைப் பற்றிய குறிப்பு இருவகையாகக் காணப்படுகிறது. வாத கலாகலீயம் (சரக ஸூத்ர -அ.12) மற்றும் ஆத்ரேய பத்ர காப்பியம் (சரக ஸூத்ர - அத்.26) அத்தியாயங்களில் குமாரசிரா பரத்வாஜர் என்பவரின் கொள்கை கூறப்பட்டுள்ளது. 'குமாரசிரா' எனும் அடைமொழியால் இந்தபரத்வாஜர் (முதலாசிரியரைவிட) வேறுபட்டவர் எனத் தெரிய வருகிறது. இவரது கொள்கையைத் தம் நூலில் ஆத்ரேயர் மறுத்துள்ளார். 'யஞ்ஜ புருஷ்யம் (சரக சம் ஸூத் - 25) மற்றும் 'குட்டீகா - கர்பாவக்ராந்தி (சர.ஸூ.அ.3) அத்தியாயத்தில் அடைமொழிஇல்லாத பரத்வாஜரின் கொள்கை கூறப்பட்டுள்ளது. அவ்விடத்திலும் பரத்வாஜரின் கொள்கையை ஆத்ரேயர் மறுத்துள்ளார். அதன் பிறகு தன் கொள்கைக்கு மாறாகக் கூறப்பட்ட பொருள்களை மறுத்துத் தன் கொள்கையை ஆத்ரேயர் விளக்கியுள்ளார். இவ்விளக்கத்தில் பரத்வாஜர் இவரது குரு அல்லர் என்பது தெளிவாகிறது. வாதகலாகலீய அத்தியாயத்தில் பரத்வாஜருக்குக் குமாரசிரா எனும் அடைமொழி ஆத்ரேயரின் குரு பரத்வாஜர் இவரல்லர் என்பதற்காகக் கூறப்பட்டுள்ளது.

'குட்டீகா கர்பாவக்தயம்'' எனும் அத்தியாயத்தில் கூறப்பட்ட பரத்வாஜரும் ஆத்ரேயரின் குருவல்லர். பரத்வாஜர் எனும் கோத்திரத்தைச் சேர்ந்த வேறு ஒருவர் எனத் தெரிய வருகிறது. ஆக முன் கூறிய இரண்டு இடங்களிலும் கூறப்பட்டுள்ள பரத்வாஜர் ஆத்திரேயரின் குரு அல்லர். உரையாசிரியராகிய சக்ரபாணி என்பவரது உரையின்படி பரத்வாஜர் எனப் பெயர் கொண்டவர்கள் பலர் இருந்திருக்கலாம் என்றும் அத்திரி பரம்பரையில் வந்தவர் யாரேனும் ஒருவர் பரத்வாஜர் கோத்திரத்தில் பிறந்தவர்களில் யாரேனும் ஒருவரின் சீடராக இருந்திருக்கலாம் என்பது தெரிய வருகிறது. ஆத்ரேய சம்ஹிதையிலும் பரத்வாஜரால் உபதேசம் பெற்றதாகவோ, அவரைப் போற்றும் முறையிலோ அவரது கொள்கையை உறுதிப் படுத்தும் முறையிலோ எத்தகைய குறிப்பும் காணப்படவில்லை. எனவே ஆத்ரேயரின் குரு பரத்வாஜர் பற்றிப் பல ஐயப் பாடுகள் தோன்றுகின்றன. காசியப ஸம்ஹிதையில் ரோகாத் யாயத்தில் கிருஷ்ண பரத்வாஜர் எனக் குறிப்பு காணப்படுகிறது. அடைமொழியால் இந்த பரத்வாஜரும் வேறுபட்டவர் எனத் தெரிகிறது. ஆத்ரேயரின் ஆசிரியராகிய பரத்வாஜர் யார்? என்பதை முடிவாக அறிய இயலாமல் உள்ளது. காசியப சம்ஹிதையில் ரோகாத்யாயத்தில் கிருஷ்ணபரத்வாஜரைப் பற்றி மட்டுமே குறிப்பிடப்பட்டுள்ளது. இவரும் அடைமொழியுடன் கூடிய வேறு

ஒரு பரத்வாஜர் எனத் தோன்றுகிறது. காசியபசம்ஹிதையில் ஆயுர்வேத அத்யாயனப்பிரகரணத்தில் பிரும்மா, அச்வினீ தேவதைகள், இந்திரன் மற்றும் மாணவ பரம்பரைக்கு ஆசிரியர் தன்வந்திரியுடன் காசியபசம்ஹிதையின் ஆசிரியர் காசியபரின் பெயரும் இணைக்கப்பட்டுள்ளது. அவ்வாறே ஆத்ரேயம்ஸஹிதை (சரக. வி.அத்.8) யிலும் பிரும்மா, அச்வினீ தேவதைகள், இந்திரன், மற்றும் தன்வந்திரி என்று மட்டுமே கூறப்பட்டுள்ளது. 'சூத்திர தாரர்களாகிய ரிஷிகள் எனப் பொதுவாகக் குறிப்பிடப்பட்டுள் ளதைக் கொண்டு பரத்வாஜரையும் கணக்கிடலாம். ஆனால் தம் நூலில் இந்திரனுக்குப் பிறகு பரம்பரையில் தோன்றிய மற்றும் தம் ஆசிரியராகிய பரத்வாஜரைக் குறிப்பிடாதது பொருத்தமன்று. எவ்வாறு காசியபசம்ஹிதையில் கசியப, வசிட்ட, அத்திரி, பிருகு ஆகியவர்கள் இந்திரனிடம் உபதேசம் பெற்றமை குறிப்பிட்டுள் ளதோ, அவ்வாறே ஆத்ரேய சம்ஹிதையின் ரஸாயன பாதத்தில் (சரக. சிகிட்சை–அத் 1) பிருகு, அத்திரி, வசிட்ட, கசியப,அங்கிரா, அகஸ்த்ய, புலஸ்த்ய, வாமதேவ, அஸித, கௌதம் ஆகியவர்கள் இந்திரனிடம் நேராக உபதேசம் பெற்ற வரலாறு குறிப்பிடப் பட்டுள்ளது. இவ்விரண்டிலும் பரத்வாஜரின் பெயர் காணப்பட வில்லை. சரக சம்ஹிதையின் துவக்கத்தில் கூறப்பட்ட மகரிஷிகளில் முன்பின் பல காலம் கடந்து விளங்கியவர்கள் பெயர்கள் இணைக்கப்பட்டுள்ளமையால் மேலும் அந்த நூலின் பின் பகுதிக்கும் முன்பகுதிக்கும் உள்ள நூலியற்றும் தன்மையில் மாறுபாடு காணப்படுவதால் (பிற்பகுதியில் காணப்படும் நடை போல முற்பகுதி பொருள் நயம் சொல் நயம் போன்றவற்றில் ஆசிரியரின் திறமை குறைந்து காணப்படுவதால்) ஐயப்பாடு தோன்றுகிறது. சரகசம்ஹிதையில் பரத்வாஜரிடம் ஏனைய ரிஷிகள் பாடம் கேட்டதாகக் கூறப்பட்டுள்ள கருத்து உண்மையாக அறிந்து கொள்ள இயலாமல் உள்ளது. இவற்றை இணைத்துக் காணும்போது கசியபர், வசிட்டர், அத்திரி, பிருகு, முதலிய மகரிஷிகளால்தான் தம் புதல்வர்களுக்கும் சீடர்களுக்கும் ஆயுர் வேதம் உபதேசம் பெற்றது என்பது தெளிவாகிறது. ஆத்ரேய போன்ற சொற்கள் கோத்திரத்தைக் குறிக்கும் சொல்லாகக் காணப்படுவதால் ஆத்ரேய பரம்பரையில் தோன்றியவர் வேறு கோத்திரத்தைச் சார்ந்த கல்வியில் சிறப்புற்று விளங்கும் சரகசம்ஹிதையின் முதலா சிரியர்கள் ஆத்ரேய புனர்வசு, கிருஷ்ண ஆத்ரேயர், போன்றவர்கள் பலர் குறிப்பிடப்பட்டுள்ளனர். கசியப பரம் பரையிலும் கசியபர்

விருத்த கசியபர் போன்றவர்கள் கூறப்பட்டுள்ளனர். ஒரு கோத்திர பரம்பரையில் தோன்றியவர் வேறு கோத்திரத்தைச் சேர்ந்த கல்வியில் சிறப்புற்று விளங்கும் ஆசிரியரிடம் பாடம்கேட்பதும் வழக்கமாக வந்துள்ளது. அவ்வாறு சரக சம்ஹிதையின் துவக்கத்தை ஒட்டி தம் முன்னோர் மரபின் ஆத்ரேயபுனர்வசு பாடம் கேட்டுப் பிறகு பரத்வாஜரிடமும் பாடம் கேட்டுச் சில சிறப்பு பொருள்களைக் கற்றிருக்கக் கூடும். பிருகு பரம்பரையில் தோன்றிய ஜீவகர் மரிச கசியரிடமும் பாடம் கேட்ட வரலாறு இந்நூலில் கூறப்பட்டுள்ளது. மகாபாரதத்தில் பரத்வாஜரின் ஆசிரமத்தை நோக்கிச் சென்றதாகக் கூறப்பட்டிருந்தாலும், ஸுசுருதஸம்ஹிதையின் கூற்றுப்படி தன்வந்திரி திவோதாஸர் நேராக இந்திரனிடமேகல்வி கற்றதாகத் தெரிகிறது. ஆனால், எல்லோருக்கும் இந்திரன் பரமாசாரியன் ஆகையால் நேராகவோ பரம்பரை முறையாலோ இந்திரன் உபதேசம் செய்தவன் ஆகிறான். இந்த தன்வந்திரி, மரீசகசியபர், ஆத்ரேய புனர்வசு போன்ற ரிஷிகள் உலக மக்களுக்கும் பேருபகாரம் செய்யக் கருதி இந்தக் கல்வியை சம்ஹிதை நூல்களாக இயற்றித் தம் சீடர்களுக்கு உபதேசம் செய்துள்ளனர். இவ்வாறு வைதிக விஞ்ஞானத்தின் முன்னுரையில் பிரும்மாவினால் விதையாகத் தோற்றுவிக்கப்பட்ட ஆயுர்வேத விஞ்ஞானம் எனும் கல்பவிருட்சம் அச்வினி குமாரர்கள், இந்திரன், கசியர், அத்தி, வசிட்டர் பிருகு எனும் பரம்பரையாலும், தன்வந்திரி, ஆத்ரேயர், கசியபர் போன்ற முதலாசிரியர்கள் பரம்பரையாலும் பெரு முயற்சியால் கிளைகள் தோன்றிப் பூத்து மலர்ந்து காய்த்துப் பழங்கள் தோன்றச் செய்யப்பட்டு வந்தது. காலப்போக்கில் கிடைத்த சில பழங்களைக் கொண்டு சீட பரம்பரையில் இன்றும் உலகோர் உயிரைக் காக்கும் சிறப்பான இந்தச் சாஸ்திரம் பெற்றுள்ளது மகிழ்ச்சிக்கு உரியது.

## ஆயுர்வேதத்தின் எண்வகைப் பிரிவுகள் :

வைதிக இலக்கியத்தில் ஆயுர்வேதத்தின் எண்வகைப் பிரிவுகள் அவற்றின் பெயர்கள் கூறப்படவில்லை. காசியபரின் கூற்றின்படி பிரும்மாவால் உபதேசிக்கப் பெற்ற காலத்தில் ஆயுர்வேதம் ஹேது (Cause) இலிங்கம் *(நோய்குறிகள்)* (Symptoms) மற்றும் மருந்துகளை (Treatment) அறிந்து கொள்ளுதல் என மூன்று பிரிவுகளைக் கொண்டிருந்தது. ஆயினும், மேற்கூறியபடி அச்வினி தேவதைகளைப் பற்றிய வருணனையில் முழங்காலை இணைத்தல்,

துண்டுகளாகிய உடற்பகுதிகளை இணைத்து உயிர்ப்பித்தல், இழந்த பார்வை, கேள்வி ஞானம் முதலியவற்றை மீண்டும் பெறச் செய்தல், குட்டம் போன்றவற்றைப் போக்குதல், சியவனரசாயனம், மகப் பேறில்லாதவருக்கு மகவைத் தோற்றுவித்தல் என்பனவும் இந்திரனைத் துதி செய்யும் பகுதியிலும் இவற்றைப் போன்ற பல விடயங்கள் காணப்படுவதால், ரிக் யஜுர் அதர்வ வேதங்களில் அங்கங்கு பலவகைப் பொருள்கள் காணக்கிடைப்பதாலும், ரிக் யஜுர் அதர்வ வேதங்களில் பலவகை பைக்ஷஜ்யம் (மருத்துவம்) ஓஷதி மூலிகைகளைப் பற்றிய வித்தை, பூதவித்தை, விஷயபரிஷ்கார வித்தை (வித்தைகளை முறைப்படுத்திக் கூறும் பகுதிகளில்) காணப்படுவதால் சல்யம், சாலாக்யம், காய சிகிச்சை, அகதம், பூதவித்தை, ரசாயனம் என எண்வகைப் பிரிவுகளைச் சேர்ந்த பொருள்கள் அந்தக் காலத்தில் தனித்தனியாக விளங்கின என்பது தெரிகிறது. பூதவித்தைகளுக்கு ஆசிரியர் அதர்வா, மகாபாரதத்தில் கூறப்பட்டுள்ள விஷ சிகிச்சைக்கு உரிய காசியபர், கௌமாரபிருத்யர் என்பதற்கு ஆசிரியர் கசியபர், சாலாக்யத்திற்கு ஸ்கயர், மற்றும் காலவர் சல்யத்திற்கு சௌனகர் எனத் தனித்தனிப் பிரிவுகளுக்கு ஆசிரியர்கள் என்பது தெரிய வந்துள்ளது. ஆகவே ஆயுர்வேதத்தின் எண்வகைப் பிரிவுகள் தொன்மையிலேயே விளங்கி வந்துள்ளது என்பது தெளிவு. தனித்தனிப்பிரிவின் சிறப்புத்தன்மை (Specialisation)யைப் பற்றி ஆசிரியர்களும் சிறப்புற்று விளங்கினர். மற்றும் சிலர் எல்லா வகையிலும் சிறப்பான அறிவாற்றல் பெற்று விளங்கினர். ரிக் வேதத்தில் காணப்படுவதை விட அதர்வ வேதத்தில் ஓஷதி, பைஷஜ்யம், பூதசாதனம், விஷாஹரணம் போன்றவை வளர்ச்சியுற்றுக் காணப்படுவது போல ஒவ்வொரு பிரிவும் நன்கு வளர்ச்சி பெற்று பொருள்களை அறிதல், அறிந்தவற்றை நினைவிற்கொள்ளுதல், அறிந்தவற்றைத் திறமையுடன் பயன்படுத்தல் என்பனவற்றில் உள்ள சௌகரியத்தை ஒட்டி தனித்தனி விஞ்ஞானமாக இது வளர்ந்துள்ளது. ரிஷிகளின் காலத்தில் ஆத்யாத்மிகம், ஆதிதைவிகம், ஆதிபௌதிகம் எனும் மூவகைத் துன்பங்களைப் போக்கத் தனித்தனியே போக்கவல்ல அதிருஷ்ட (கண்களுக்குப் புலனாகாத) உபாயங்களைப் போல கண்களுக்குப் புலனாகும் உபாயங்களும் வளர்ந்தமையால் அதர்வ வேதத்தில் காணப்படும் வளர்ச்சி முறையைச் சார்ந்து பின்வரும் எண்வகைப் பிரிவுகள் தோன்றின. அவையாவன :

உடலைச்சார்ந்த மருத்துவத்தில் உடலியக்கத்தைச் சிறப்பாகக் கொண்டு சல்யம் அறிவுப்புலன்களுக்கு நிலையாக விளங்குவதால், தலையைச் சார்ந்து சாலாக்யம், உடல்வலிமை விந்து வலிமைகளைச்சார்ந்துள்ள வாஜிகரணம் (மனிதன் நிறைந்த ஆயுளாகிய நூறு ஆண்டுகள்) வயது நிலை பெற்று வாழச் சிறப்பான முறைகளைக் கொண்ட ரஸாயனம், இருது, கரு முதலியவற்றைச் சார்ந்து மற்றும் சிறுவர்களின் உடலைச் சார்ந்த கௌமாரபிருத்யம், இவற்றுக்கு மாறுபட்ட உடலையும் மனத்தையும் சார்ந்த காய சிகிச்சை, புறப்பொருள்களால் தோன்றும் துன்பங்களாகிய தேள், பாம்பு முதலிய உயிரினங்களின் தாக்குதலால் தோன்றும் நஞ்சைத் தீர்க்க அசுத தந்திரம், பூதகிரகங்களாகிய ஸ்கந்த கிரகம் முதலான தேவதைகளால் தோன்றும் துன்பங்களைப் போக்கவல்ல பூதவித்தை என்பனவாம்.

இவ்வாறு மூன்று வகையான துக்கங்களைச் சார்ந்த தனித் தனியான எட்டு பிரிவுகளைக் கொண்டுள்ளது ஆயுர்வேதம். தொன்மையான ஆசிரியர்களாக பிரும்மாவும் இந்திரனும் இந்த எண் வகைக்கும் ஆசிரியர்களாவார்கள். மகாபாரத்தின்படி இந்திரனிடம் உபதேசம் பெற்ற பரத்வாஜர் ஹரிவம்ச புராணத்தின்படி பரத்வாஜரிடம் மற்றும் ஸுசுருத சம்ஹிதையின்படி நேராக இந்திரனிடமும் உபதேசம் பெற்ற தன்வந்திரி இவ்வெண் வகைக்கும் ஆசிரியர்களாக கருதப்படுகின்றனர்.

ஒவ்வொரு பிரிவும் மிக விரிவு பெற்று வளர்ந்ததால் இன்று தனித்தனி உறுப்புகளைச் சார்ந்த சிறப்பான அறிவு பெற்று விளங்குவதைப் போல் தனித்தனிப்பிரிவுகளில் சிறப்பான அறிவாற்றல் பெற்றவர்கள் தனித்தனியாக அந்தந்த பிரிவுக்கும் மட்டும் ஆசிரியர்கள் ஆனார்கள்.ஆகையால் எட்டு பிரிவுகளும் தனித் தனியாக வளர்ச்சி பெற்றன. காயசிகிச்சையில் ஆத்ரேய சம்ஹிதை மற்றும் கௌமார பிருத்தியத்தைச் சார்ந்த காசியபஸம்ஹிதையில் பிரஜாபதி,இந்திரர் முதலான ஆசிரியர்களுடன் தன்வந்திரி தேவதையாகக் கூறப்படுவது பலவிபாகங்களில்தான் வந்தரகிருதம் முதலான முறைகளில் விளக்கம் காணப்படுவது நோக்கும்போது முதல் தன்வந்திரி மட்டுமல்ல அவரது பரம்பரையில் தோன்றிய இரண்டாம் தன்வந்திரி திவோதாஸரும் ஸுசுருத சம்ஹிதையின் கூற்றுப்படி ஆயுர்வேதத்தின் எண்வகைப் பிரிவுகளில் எதை உனக்கு உபதேசம் செய்வது? என ஸுசுருதர் வினவி சல்யசாஸ்திரத்தை உபதேசம் செய்யுங்கள் என ஸுசுருதர் அப்பிரிவைப் பற்றி உபதேசம் பெற்றார்

எனத் தெரிகிறது. இதில் திவோதாஸரின் வினாவால் அன்னார் எண்வகை பிரிவுகளுக்கும் ஆசிரியர் என்பது தெளிவாகிறது.

எண்வகைப் பிரிவுகளையும் அறிந்துள்ள பரத்வாஜர் அல்லது இந்திரனிடம் பாடல் கேட்ட ஆத்ரேயபுனர்வசு, அக்னிவேசர் முதலான சீடர்கள் அறுவரால் தனித்தனியாக சம்ஹிதைகள் இயற்றியதாகக் கூறப்படுவதால், அவ்வாறே தன்வந்திரி திவோதாஸரின் சல்யசாஸ்திரத்தை உபதேசம் பெற்று ஸுச்ருதர் ஸுச்ருத சம்ஹிதையை இயற்றியதாகக் கூறப்பட்டிருப்பதால் அவ்விருவரது நூல்களிலும் அங்கங்கு சந்தர்ப்பத்திற்கு ஏற்ப வேறு பிரிவுகளைச் சார்ந்த பொருள்கள் கூறப்பட்டிருப்பினும் சிறப்பாக கூறப்பட்டிருப்பதால் வேறுபட்டு எண்வகைகளில் காய சிகிச்சைக்கு ஆத்ரேய புனர்வசு ஸுச்ருதரின் நூல்கள் சல்ய சிகிச்சைக்கு முக்கியமாகக் கூறப்படுகின்றன. இவ்விருவகைகளும் அன்றி கௌமார பிருத்திய விஷயத்தில் ஆத்ரேயருக்கும் முற்பட்டவரான மாரீசகசியபர் ஸம்பிரதாயம் ஒன்று விளங்கியதாகத் தெரியவருகிறது. சரகசம் ஹிதையிலும் ஸுச்ருத சம்ஹிதையிலும் கூறப்பட்டுள்ள கௌமார பிருத்யம் பற்றிய விரிவான சம்ஹிதை கிடைத்துள்ளதால் இவ்வாறே சாலாக்யம் முதலிய பிரிவுகளைப் பற்றிச் சுருக்கமாக ஸுச்ருத சம்ஹிதையில் கூறப்பட்டுள்ளவைக்கு வேறு வேறான சம்ஹிதைகள் விளக்கியுள்ளன என நாம் கருத இடமுண்டு.

சரக, ஸுச்ருதசம்ஹிதைகளில் சிறிதளவே கூறப்பட்ட கௌமாரபிருத்யம் தனிப்பிரிவாக வளர்ந்து விளங்குவதைக் காணும்போது ஸுச்ருத சம்ஹிதையின் உத்தரஸ்தானத்தில் சுருக்கமாகக் கூறப்பட்ட சாலாக்யம் முதலான மற்ற பொருள்களும் நிறைவாக எல்லா உறுப்புகளையும் கொண்ட தனிப்பிரிவுகளாக கலந்து அவற்றிற்கான சம்ஹிதைகளும் அவற்றின் ஆசிரியர்களும் முற்காலத்தில் விளங்கியிருக்க வேண்டும் எனக் கருத இடம் உண்டு. அந்நூல்களும் இவற்றின் ஆசிரியர்களின் பெயர்களும் கால வெள்ளத்தில் மறைந்திருக்கலாம். ஆகவே, மகாபாரதம், ஹரி வம்சம், ஸுச்ருதம் போன்ற நூல்களில் கூறப்பட்டுள்ள ஆயுர் வேதத்தின் எண்வகைப் பிரிவுகளில் மிகத் தொன்மையான காலத் தவையே என அறியலாகும். காய சிகிச்சையைச் சார்ந்த பரத்வாஜ சம்ப்ரதாயமும், சல்யசிகிச்சையைச் சார்ந்த தன்வந்தரி ஸம்ப்ர தாயமும் பிற்காலத்தில் எண்வகைப் பிரிவுகளாயின எனக் கற்பனை செய்வது தவறான கருத்தாகும்.

இவ்வாறு தொன்று தொட்டு எட்டு பிரிவுகளாக விளங்கும் ஆயுர்வேதத்தில் காலப்போக்கில் அந்தந்த பிரிவுகளில் தனித் திறமை பெற்று அவற்றை வளர்த்த ரிஷிகள் பலர் விளங்கினர். ஸுஶ்ருதம்ஹிதையில் சாலாக்ய தந்திர ஆசிரியர்களாக விதேஹநிமி, ஸுசுருதர், ஔபதேனவர், ஔரப்ரதர் பௌஷ்கலாவதர் என்பவர்களும் சல்ய சிகிச்சைக்குரியவர்களாக சௌனகிர, கிரதவீரியர், பாராசர்யர், மார்க்கண்டேயர், ஸுபூதி கௌதமர் என்பவர்களும் தொன்மையான ஆசிரியர்களாகக் குறிப்பிட்டுள்ளனர். சரகசம் ஹிதையில் (3) காயசிகிச்சைக்கு உரியவர்களாக அக்னிவேசர், பேடர் முதலியவர்கள் குறிப்பிடப் பட்டுள்ளனர்.

காங்காயனார், வார்யோவிதர், ஹிரண்யாக்ஷர், குசிகமைத் ரேயர், குசர், ஸாங்கிருத்யாயனர், குமாரசிரா பரத்வாஜர் வடிசர், தாமார்கவர், மாரீசகாப்யர் காசிமதிவாமகரி, பாரீமௌத்கல்யர், சரலோமர், கௌசிகர், பத்கரகாம்யர், தன்வந்திரி போன்றவர்களின் கொள்கைகள், அங்கிரா, ஜமதக்னி, காசியபர் போன்ற ரிஷிகளின் பெயர்கள் அந்நூலில் கூறப்பட்டுள்ளன. அவ்வாறே விருத்தஜிவகீ தந்திரத்தில் ஸுத்ரஸ்தானத்தில் உள்ள ரோகாத்யாயத்திலும் சித்தி ஸ்தானத்தைச் சார்ந்த ராஜபுத்தியாயத்திலும், வமன விரேசனீயாத் யாயத்தில் மற்றும் அங்கங்கு வேறு வேறு கொள்கைகளைக் கூறும்போது பார்கவர், வார்யோவிதர் காங்காயனார், கிருஷ்ணபரத் வாஜர், தாருவாஹர் ஹிரண்யாக்ஷர் வைதேஹநிடதி, கார்க்யர், மாடர், ஆத்ரேயபுனர்வக, பாராசர்யர், பேடர், கௌத்ஸர் போன்ற தொன்மை ஆசிரியர்களின் பெயர்கள் குறிப்பிடப்பட்டுள்ளன.

இவர்களில் பராசரர், பேடர், காங்காயனர், க்ஷாரபாணி, ஜாதா கர்ணர், ஆக்ஷினர், பாரத்வாஜர், பானுபுத்ரர், பாலுகி, கரநாதர், விச்வாமித்ரர் போன்ற சிலர் மது கோச - சரக - ஸுசுருத நூல்களின் விரிவுரைகளில் குறிப்பிடப்பட்டுள்ளனர். மற்றும் பண்டைய காலத்தில் எழுதப்பட்ட பனைஓலை நூலாகிய ஜ்வர சமுச்சயம், ஜ்வர சிகிச்சிதம் போன்ற நூல்களில் அத்தகையவர்களின் கூற்றுகள் எடுத்துரைக்கப்பட்டுள்ளன. ஆகவே, அவர்கள் நூல்களை இயற்றினர் என்பது தெளிவாகிறது. சிலரது உபதேச உரைகள் இன்று கிடைக்காவிடினும் அங்கங்கு அவர்கள் நூலாசிரியர்களாகக் குறிப்பிடப்பட்டுள்ளதையும் ஸுத்திரங்கள் இயற்றியவர்களாகக் குறிப்பிடப்பட்டுள்ளதாகவும் அவர்களது கொள்கைகள் எடுத்துக் கூறப்பட்டுள்ளதையும் காணும்போது அன்னார்களது நூல்கள் விளங்கிவந்தமை தெளிவாகிறது. ஹேமாத்ரியின் லக்ஷ்ய

பிரகாசத்திலும், சாலி ஹோத்ரர் இயற்றிய அச்வசாஸ்திரத்திலும் அச்வாபிஷேக மந்திரங்களிலும் ஆயுள் வேதநூலாசிரியர்களாக ரிஷிகள் பலரின் பெயர்கள் காணப்படுகின்றன.

இவ்வாறு தேவ யுகத்திலிருந்து இன்றுவரை தேவரிஷிகள், மகரிஷிகள் பலர் ஆயுர்வேத ஆசிரியர்களாக விளங்கி வந்துள்ளனர். ஆயுர்வேதத்தின் எண்வகைப் பிரிவுகளும் நூலியற்றுவதாலும், உபதேசம் புரிவதாலும் அவ்வாசிரியர்களால் நன்கு வளர்க்கப் பட்டுள்ளன. அப்பொருள்கள் அனைத்தையும் ஒரு நூலாகத் தொகுத்தால் ஆயுர்வேதத்திற்கு ஒரு பெரிய நூலாக விளங்கும். ஆனால் ஏனைய சாஸ்திரங்களில் பல கால வெள்ளத்தில் மறைந்து போயின. அவ்வாறு மறைந்து போன நூல்களைப் பற்றித் திருகணநாத ஸேன்டி கிரீந்திர நாத முகோபாத்யாயர் போன்ற நம் நாட்டு அறிஞர்களும், மேலை நாட்டு ஆராய்ச்சியாளர்களும் விரிவாக ஆராய்ச்சிகளை மேற்கொண்டு நூல்களை இயற்றி யுள்ளார். ஆகையால் மீண்டும் அவற்றைப் பற்றி இங்கு குறிப்பிட வேண்டியதில்லை.

## ஆத்ரேய மற்றும் ஸுசுருத ஸம்ஹிதைகள் :

கால வெள்ளத்தில் மறைந்தவை போக ஆயுர்வேதத்தின் தொன்மைப் பெருமையை நிலை நாட்டும் வகையில் ஆத்ரேயர் மற்றும் தன்வந்தரி ஆகியவர்கள் இயற்றிய ஸம்ஹிதைகள் முறையே சரக ஸுசுருத சம்ஹிதைகள் இன்றும் விளங்குகின்றன. மிக்க புகழ் பெற்றுள்ள இந்நூல்களுக்கு ஆதவனுக்கும் சந்திரனுக்கும் போல வேறு ஒளி தரும் விளக்கம் தேவையில்லை.

அஷ்டாங்கஹிருதயத்தை இயற்றிய வாக்படரின் காலத்தில் மற்ற ஆசிரியர்கள் இயற்றிய சம்ஹிதைகள் விளங்கியிருந்தாலும் 'சரகஸம்ஹிதையை மட்டுமே கற்றார். ஸுசுருதர் விளக்கியுள்ள நோய்களின் பெயர்களைக் கூட அறிய இயலாது அவ்வாறே ஸுசுருதசம்ஹிதையை மட்டும் கற்றார். நோய்களுக்கு உரிய சிகிச்சை முறைகளைப் பற்றி தெளிவான அறிவு பெற இயலாது எனும் கருத்துள்ள சுலோகங்களின்படி சரக, ஸுசுருதசம்ஹிதைகள் இரண்டையும் கற்பது இன்றியமையாதது எனத் தெளிவாகிறது. இடைக்காலத்தவரான வாக்படரின் காலத்திலும் இவ்விரு நூல்களைக் கற்பது மிகவும் தேவையாக விளங்கியதை கருத்தில் கொள்ளத் தகும்.

ஆயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்டதான 'ஜ்வரஸமுச்சயம்' எனும் நூலில் சரக, ஸுசுருத ஸம்ஹிதையில் உள்ள பொருள்கள் பல எடுத்துக்கூறப்பட்டுள்ளன. அவ்வாறே நான்காம் நூற்றாண்டைச்சார்ந்த நாவநீதகம் எனும் நூலில் சரக ஸுசுருதசம்ஹிதையில் உள்ள கூற்றுகள் பல எடுத்துக் காட்டுப்பட்டுள்ளது. பாணபட்டர்இயற்றிய ஹர்ஷ சரித்திரத்தில் பௌனர்வஸவ (புனர்வசுவின் புதல்வர் அவரது சீடர்)ரின் பெண் வைத்யகுமாரரெனக் குறிப்பிடப் பட்டுள்ளதால் அந்தக் காலத்திலும் ஆத்ரேயபுனர்வசுவின் ஸம்பிரதாயம் விளங்கி வந்துள்ளன என அறியலாகும்.

சரகஸம்ஹிதையும், ஸுசுருத சம்ஹிதையும் தோன்றிய நாள் முதல் பொருள் சிறப்பாலும் தெளிவாகவும் நிறையாகவும் மருத்து வத்தைச் சார்ந்த பொருள்களை விளக்கும் தன்மையின் சிறப்பாலும் இவ்விரண்டு நூல்களும் நம் நாட்டில் மட்டுமல்லாது பிற நாடு களிலும் பெருமளவில் ஒளிவீசித் திகழ்ந்தமைகண்டு இன்னும் இவை மருத்துவத்திற்கு ஒப்பற்ற களஞ்சியங்களாக விளங்கு கின்றன.

ஏழாம், எட்டாம் நூற்றாண்டுகளில் அராபிய, பாரசீக நாடுகள் மிக்க உயர்ந்த நிலையில் விளங்கிய காலத்தில் நம் நாட்டு மருத்துவ விஞ்ஞானத்திற்கு அந்நாடுகளில் மிக்க மதிப்பு இருந்தது என்பதற்கு அந்நாட்டு மொழிகளில் மொழி பெயர்க்கப்பட்டுள்ள இவ்விரண்டு நூல்களும் மறுக்க ஒணாச் சான்றுகளாகும். அராபிய மொழியில் சரகம் 'ஸரக்'எனவும் ஸுசுருதம் ஸஸ்ரத் எனவும் பெயர் கொண்டன. 'அபூஸினா' (Abusina) ஆபூரஸி (aburasi) அபூஸ்ராபி எனப்படும் அராபிய மொழியிலுள்ள மருத்துவ நூல்களின் இலத்தீன் மொழி பெயர்ப்பு நூல்களில் அங்கங்கு சரகரின் பெயர் காணப்படுகிறது. அல்பருனி (Alberuni) எனப்பெயர் கொண்ட யாத்திரிகரின் நூலகத்தில் சரகத்தின் மொழி பெயர்ப்பு நூல் இருந்தது என்பது அதன் ஆங்கில மொழி பெயர்ப்பு நூலில் குறிப்பிடப்பட்டுள்ளது. அலம் நஸுர் (Almnasur) *(கி.பி.753-774)* பல ஆயுர்வேத மருத்துவ நூல்களையும், சரகம்உறிதையின் ஸர்ப்ப சிகிச்சைப் பிரகரணம் மற்றும் ஸுசுருத ஸம்உறிதை முதலியவற்றை மொழி பெயர்த்துள்ளார். ரஜஸ் (Rhajes) எனும் அவரது மருத்துவர் சரகரை மிகவும் பாராட்டியுள்ளார். ஸிரஸீன்வனும் மேலை நாட்டவரின் முன்னோர்கள் சரக, ஸுசுருத நூற் பொருள்களை அறிந்திருந்தார் என ஆராய்ச்சியாளர்கள் கூறுகின்றனர். அசோக மன்னரின் பேரன்

(ஸம்பிரதி)யின் காலத்தில் பௌத்த தருமத்துடன் ஆயுர்வேதமும் சிங்களத்தீவை அடைந்தது. ஆயுர்வேத நூல்களில் பலஉரைகளைக் கொண்ட வாக்படம் திபேத்திற்குப் பரவி அங்கிருந்து மங்கோலியா வரை பரவியது.

நம் நாட்டில் மறைந்து போன வாக்பட நூலின் உரைநூல்கள் பல திபேத் மொழியில் மொழி பெயர்க்கப்பட்டு இன்னும் அங்கு விளங்குகின்றன.

## பேடஸம்ஹிதை:

பேடஸம்ஹிதை என்ற பெயரில் சுருக்கமான சுலோக ரூபமான புத்தகம் ஒன்று கல்கத்தாவில் அச்சிடப்பட்டுள்ளது. இது ரிஷிகளின் ஸம்ஹிதையின் நடையில் எழுதப்பட்டுள்ளது. ஆனால் துவக்கத்திலும் இடையிடையேயும் முடிவிலும் சிதைந்தும் பிழைகள் மலிந்தும் காணப்படுகிறது. ஆயினும் எழுதும்முறை நடை ஆகியவற்றால் இது பண்டைய காலத்து நூல் எனலாம். ஆயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்டதான ஜ்வரஸமுச்சயம் எனும் நூல் ஓலை வடிவ புத்தகம் ஒன்றுகிடைத்துள்ளது. இதில் அச்வினி குமாரர்கள், பரத்வாஜர் முதலியவர்களுடையவை போல பேடரின் உரைகளும் எடுத்துக்கூறப்பட்டுள்ளன. இந்நூலில் அச்சிடப்பட்டுள்ள பேடஸம்ஹிதையில் காணப்படும் இரண்டு மூன்று சுலோகங்களே எடுத்தாளப்பட்டுள்ளன. அந்த அச்சில் காணப்படும் பேடசம்ஹிதையின் சுலோகங்கள் வேறு எவையும் இந்நூலில் இடம் பெறவில்லை. இவற்றால் இந்தப் பேடஸம்ஹிதை தொன்மையான நூல் எனத் தள்ளிவிட முடியாது. ஆனால் ஜ்வரபிரகணத்தில் பேடருடையவை என எடுத்துக் கூறப்பட்டுள்ள வேறு சுலோகங்கள், 'தந்திஸாரம்' எனப்படும் வேறு ஒரு தொகுப்பு நூலில் பேடருடையவை எனக் குறிப்பிடப்பட்டுள்ள வேறு பிரகரணத்தைச் சார்ந்த சுலோகம் அவ்வாறே உரை ஆசிரியர்களால் அங்கங்கு பேடருடையவையாக எடுத்தாளப்பட்டுள்ள ஒரு சுலோகம் ஆகியவை அச்சாகியுள்ள பேடஸம்ஹிதையில் இடம் பெறவில்லை. இந்த விருத்த ஜீவகரின் (முதிய ஜீவகர்) காசியப ஸம்ஹிதையில் வஸ்தி கர்மாவுக்கு (எனும் சிகிச்சைக்குரிய காலத்தை நிர்ணயம் செய்யும் இடத்தில் 'ஷட்வர்ஷப்பிரபிருதீனாம்துபேட' (ஆறு ஆண்டுகளானது முதல் துவங்கி என பேடர்) எனும் உரையை ஒட்டி ஆறு ஆண்டுகள் வயதானவர்கள் முதலாக

அனைவருக்கும் வஸ்திமுறையைப் பயன்படுத்தலாம் எனக் கூறப்பட்டுள்ளது. ஆனால் இன்று நமக்குக் கிடைத்துள்ள பேடஸம்ஹிதையில் (வயது குறிப்பிடப்படாமல்) சிறுவர், முதியவர் முதலாக எல்லோருக்கும் வஸ்திகர்மாமுறையை பின்பற்றலாம் என்ற உரை காணப்படுகிறது. இது முன் கூறிய கூற்றுக்கு முரண்பட்டதாகும். வேறு சில நூல்களில் பேடரின் உரையாகக் கூறப்பட்டுள்ளவை இந்நூலில் காணப்படவில்லை. இவ்வனைத்தையும் நோக்குங்கால் இன்று அச்சேறியுள்ள பேடஸம்ஹிதை உண்மையானது எனத் தோன்றவில்லை. சரக, ஸுச்ருதஸம்ஹிதையில் உள்ளது போல பொருள்கள் தெளிவாக இந்நூலில் கூறப்படவில்லை என்பது பற்றியே வாக்படரும் ஸுச்ருத ஸம்ஹிதைகளை நன்றாக கற்றபின் பேடரின் ஸம்ஹிதையால் பயன் இல்லை என்று கூறியுள்ளார்.

## ஹாரீதஸம்ஹிதை:

'ஹாரீதஸம்ஹிதை என்ற பெயரில் இருநூறு, முன்னூறு ஆண்டுகளுக்கு முற்பட்ட நூல் ஒன்று நமக்கு இன்று கிடைத்துள்ளது. ஆனால் இதன் நடை ரிஷிகளின் கூற்றுக்கு மாறுபட்டதாகி, சாதாரணமாக உள்ளது. நூலை ஆராயும் போது காலத்தால் முற்பட்டதாகவோ, ரிஷிகளால் கூறப்பட்டதாகவோ நினைக்க இடமில்லை. ஜ்வரஸமுச்சயம் எனும் நூலில் ஹாரிதஸம்ஹிதையில் உள்ளதாகக் கூறப்பட்ட சுலோகங்களோ, வேறு மருத்துவ நூல்களில் ஹாரீதரின் கூற்றாகக் கூறப்பட்ட சுலோகங்களோ இந்த நூலில் காணப்படவில்லை. எனவே, தொன்மையான ஹாரீதஸம்ஹிதை இதற்கு வேறுபட்டதாகும் எனத் தெளிவாகிறது. ஹாரீதஸம்ஹிதை கிடைக்கவில்லை என்பதால் அந்நூலின் பெயரை நிலை நாட்ட வேறு நபர் யாரோ இப்பெயரில் இந்நூலை இயற்றியிருக்க வேண்டும் எனத் தோன்றுகிறது.

## புதிதாகக் கிடைத்துள்ள காசியப ஸம்ஹிதை:

மிகத் தொன்மையான காலத்திலிருந்து புகழ்பெற்ற சரக ஸுச்ருத ஸம்ஹிதைகள், இன்று காணப்படும் பேடஸம்ஹிதை எனும் மூன்றினைத் தவிர்த்து நான்காவதாக இன்று நமக்குக் கிடைத்துள்ள காசியபஸம்ஹதை நடையிலும், பொருட் செறிவிலும் தொன்மையான ரிஷிகளின் உரைக்கு இணையாக, ஸுச்ருத

ஸம்ஹிதைக்கு ஈடாகக் கௌமாரபிருத்தியம் எனும் பொருளைச் சார்ந்த தொன்மையான காசியபஸம்ஹிதை விதிவசத்தால் வெகு காலம் மறைந்து இருந்து அதிருஷ்டவசத்தால் இன்று அங்கங்கு சிதைவுற்ற நிலையில் அங்கங்கு துண்டு துண்டாகப் பொருள் களைத் கொண்டு நமக்கு இன்று கிடைத்துள்ளது. பெயரளவில் நின்று போன அந்நூல் காலத்தின் கொடுமையால் உறுப்புகள் சிதைக்கப்பட்ட நிலையில் கிடைத்துள்ள இந்நூலின் நடையும், பொருள் செறிவும் முன்னோர்களது நூலுக்கு இணையாக உள்ளது. ஓரளவேனும் கிடைத்து பற்றி அறிஞர்களுக்கு மகிழ்ச்சியே கொள்ள இடமளிக்கிறது.

முதன் முதலாக ஏதோ ஒரு சமயத்தில் மகாமகோபாத்தியாய பண்டித ஹரபிரசாத சாஸ்திரியார் என்பவர் நேபாள தேசம் சென்றுள்ளபோது அன்னாருக்கு அங்கு காசியப ஸம்ஹிதையின் பிரதி கிடைத்தமை (Report on the search of Sanskrit Manu-scripts 1895 to 1900) எனும் ஏட்டில் வெளியிடப்பட்டுள்ளது. இவ்விளக்கத்தை ஜுலியல் ஜௌலி எனும் அறிஞர் மருத்துவ நூலிலும் குறிப்பிட்டுள்ளார். அந்தக் குறிப்பில் நேபாளத்தில் எனக்குக் காசியப பார்கவ ஸம்வாதம் என்ற பெயரில் 38 ஏடுகளைக் கொண்ட அரைகுறையான தொன்மைக் காசியபஸம்ஹதை கிடைத்துள்ளது. இதன் துவக்கத்தில் ''பைஷஜ்யோபக்கிராமணீயம்'' என்பதில் எட்டாவது ஏட்டிலிருந்து ஜ்வர நிதானம் காணப் படுகிறது. இதில் சரகர், ஸுசுருதர், காசியபர், ஆச்வினர், ஆத்ரேயர், பேடர், பராசர், ஹாரீதர், ஜதூ கர்ணர் போன்றவர்களின் கூற்றுகளும் எடுத்தாளப்பட்டுள்ளன. பைஷஜ்யோபகரணீயம் எனப் பெயர் கொண்டிருந்தாலும் இதில் ஓஷதிகளைப் பற்றிய விளக்கம் காணப்படவில்லை எனக் கூறப்பட்டுள்ளது. இந்தக் குறிப்புக்கு ஏற்ற விளக்கம் அன்னார் தயார் செய்து வெளியிட்டுள்ள நேபாள அரசாங்கப் புத்தகாலயத்தைச் சார்ந்த 'புத்தகப்பட்டியலில் (Index) கொடுக்கப் படவில்லை. அதற்குப் புறத்தேயும் தேடிய போது இத்தகைய காசிபஸம்ஹிதை கிடைக்கவில்லை. ஆனால் ஜ்வரநிதானம் போன்ற விஷயங்களைப் பற்றிய பண்டைய ரிஷிகளின் கொள்கைகளின் தொகுப்பாக பண்டைய ஓலைப் பிரதி ஜ்வரஸமுச்சயம்' எனும் பெயர் கொண்ட மருத்துவ நூல் நேபாளத்தில் வேறு இடத்தில் கிடைத்துள்ளது. அதன் பிரதி என்னிடத்திலும் உள்ளது. அதில் ஜ்வரத்தைப் பற்றிக் காசியபர், சரகர், ஸுசுருதர், ஆச்வினர், பேடர் முதலிய பேரறிஞர்களின் பல

உரைகள் இடம் பெற்றுள்ளன. காசியபஸம்ஹிதையின் சிதைவுற்ற பகுதியில் ''பார்கவ , ஸந்நிபாத விசேஷங்களைப் பற்றிய உண்மை பொருள்களைக் கேள்''எனக் காசியப் பார்கவர்களின் உரை யாடலைப் பற்றிய குறிப்பு காணப்படுகிறது. அவ்விளக்கத்தில் துவக்கத்தில் பைஷஜ்யோப கரணீயம் குறிப்பிடப்பட்டுள்ளதால், ஜ்வரஸமுச்சயத்தில் இது இடம்பெறாமையால், காசியப ஸம்ஹிதையின் சிதைவுற்ற பாகத்தின் மூன்றாவது அத்தியாயம் ''பைஜ்யோபகரணீயம்'' என்பதால் ஒருவேளை துவக்கத்தில் எட்டு ஏடுகளில் காசியபஸம்ஹிதையின் சிதைவுற்ற பகுதியைச் சார்ந்த பைஷஜ் யோபகரணீய அத்தியாயம் அதில் இணைக்கப் பட்டிருக்கலாம். அச்சாகியுள்ள காசியபஸம்ஹிதையில் சரகர், ஸுசுருதர் முதலியவர்களின் உரைகள் காணப்படவில்லை. தொன்மையான இந்நூலில் பிற்காலத்தவர்களான சரகர் முன்னோர் களது பெயர்கள் இடம் பெற வாய்ப்பில்லை. இதில் ஜ்வபிரகரணம் மற்றும் ஒஷதிகளைப் பற்றிய விளக்கமும் இடம் பெறவில்லை. இவ்வாறு அவரது பார்வைக்கும் கிடைத்துள்ள நூல் எல்லா வகையிலும் இந்தக் காசியபஸம்ஹிதையாகாது, ஆனால் இந்த ஸம்ஹிதையின் பைஷஜ்யோப கரணீய அத்தியாயத்தைச் சார்ந்த சில ஏடுகளை இணைத்து உருவாக்கப்பட்ட ஜ்வரஸமுச்சயமோ அல்லது இதைப் போன்ற வேறு ஒரு தொகுப்பு நூலோ ஆகியிருக்க வேண்டும். கீழுள்ள இந்த ஓலைப்பிரதியின் தோற்றம் 21.54 2.25 அங்குல அளவுள்ளது. ஒவ்வொரு ஏட்டின் பக்கத்திலும் ஆறு வரிகள் உள்ளன. அனைத்திற்கும் முதன் பக்கம் 29 முடிவான பக்கம் 234 எனும் இலக்கம் கொண்டவை. இடையிடையேயும் பல ஏடுகள் காணப்படவில்லை. சில ஏடுகள் உடைந்து போயுள்ளன. மிக்க முயற்சி செய்தும் அப்பகுதிகளை ஈடு செய்யத் தக்க வேறு ஆதாரங்கள் கிடைக்கவில்லை.

நூலில் ஏடுகள் காணப்படவில்லை என்பது அச்சாகியுள்ள நூலின் முன்னுரையில் அடிக்குறிப்பில் கூறப்பட்டுள்ளது. நூலின் முதலில் 10, 12 அத்தியாயங்கள் சிதைந்து போயின. நூலின் முடிவிலும் எண்பது அத்தியாயங்களில் இருபத்தைந்து அத்தியாயங் கள் மட்டுமே காணப்படுடுகின்றன. மீதியுள்ள ஏடுகளிலும் பல இடங்களில் சிதைந்து மறைந்த பகுதிகள், எழுத்துக்களும் சொற்களும் மறைந்து போய் விட்டன என்பதை இடையிடையே அச்சிடப்பட்டுள்ள புள்ளிவரிசைகள் எடுத்துக் காட்டுகின்றன. ஓலைச்சுவடியில் எழுதப்பட்டுள்ள எழுத்து மிக்க பழைய காலத்தது

என்பதுமன்றி எழுத்துகளின் வேறுபாடுகள் காணப்படுவதால் யாரோ ஒருவர்தமக்குக் கிடைத்த மூலப்புத்தகத்தை ஒரே சமயத்தில் பிரதி எடுத்து இணைத்துள்ளனர் எனக் கருத இடமளிக்கிறது. ஏட்டுப் பிரதியின் தோற்றம் தெளிவாகக் கருதி இரு ஏடுகளைப் படமெடுத்து அச்சிட்டவர் அச்சாகியுள்ள நூலின் துவக்கத்தில் இணைத்துள்ளார்.

## காசியபஸம்ஹிதை - ஓர் ஆய்வு :

தொன்மையான மருத்துவ நூல்களில் நம் முன்னிலையில் ஸுஶ்ருதஸம்ஹிதை, சரகஸம்ஹிதை, இன்று நமக்குக் கிடைத்துள்ள காசியபஸம்ஹிதை என்பன மூன்றும் ரிஷிகளால் இயற்றப் பட்டவையாகும். இவற்றில் ஸுஶ்ருதஸம்ஹிதைக்கு தன்வந்தரி, சரகஸம்ஹிதைக்குப் புனர்வசு ஆத்ரேயர், காசியபஸம்ஹிதைக்குக் காசியபர் உபதேசம் புரிந்த ஆசிரியர்களாவர். இந்நூலின் துவக்கத்தில், முடிவில் இன்ன பகுதிகள் மறைந்து போனமையினால் இந்தக் காசியபரைப் பற்றிய சிறப்பான பொருள்கள் அறிய இயலாமல் உள்ளது. ஆயினும் கல்பஸ்தானத்தில் ஸம்ஹிதாகல்பம் எனும் அத்தியாயத்தில் 'தக்ஷயஞ்ஜே வதத்ராஸாத்... நிகிலேனதே'' (சுலோ 14-28) என்பதால், தக்கயாகத்தில் ஏற்பட்ட குழப்பத்தில் தோன்றிய பலவகை நோய்களால் துன்புறும் உயிரினங்களைக் காப்பாற்றக் காசியபர் பிரும்ம தேவரின் கருணையாலும், தம் தவவலிமையாலும் தாம் அறிந்து கொண்டுள்ள மருத்துவ விஷயங்களை இந்த ஸம்ஹிதையாக இயற்றி இருடிகளுக்கு உபதேசம் செய்தார் எனத் தெரிய வருகிறது.

முதன் முதலில் மிகப் பெரியதான இந்தத் தந்திரத்தை அன்னாரிடம் உபதேசம் பெற்று ருசீகருடைய மைந்தராகிய ஜீவகன் எனும் முனிகளில் இருவர்தாம் ஒரு சுருக்கமான நூலை இயற்றினார். ஆனால் சிறுவன் இயற்றிய நூல் என்பதால் அக்காலத்து முனிவர்கள் அந்நூலை ஏற்றுக் கொள்ளவில்லை. அம்முனிவர்கள் பார்த்துக் கொண்டிருக்கும்போதே ஜீவகன், 'கனகல்' எனும் இடத்தில் கங்கையில் மூழ்கி முதுமையும் நரைத்த தலையும் பெற்று எழுந்தார். முனிவர்களும் அச்சிறுவனின் பெருமையைக் கண்டு வியந்து முதுமையின் தோற்றம் கொண்ட ஜீவகன் விருத்த ஜீவகன் என அழைக்கலாயினர். அவரை உயர்ந்த மருத்துவராகக் கொண்டு நூலையும் பாராட்டினர். பிறகு மறைந்து

போன இந்தத்தந்திரத்தை அநாயாசர் எனும் பெயர் கொண்ட இயக்கன் எவ்வாறோ கண்டு பாதுகாத்து வந்தார். பிறகு விருத்த ஜீவகரின் மரபில் தோன்றியவரும், வேத வேதாங்கங்களைக் கற்றறிந்தவரும் சிவகசியபரின் பக்தருமான வாத்ஸ்யர் என்பவர் அநாயாசரைத் தொழுது மகிழச் செய்து அவரிடம் இந்நூலைக் கற்றுத் தம் அறிவாற்றலால் அந்நூலைச் சீர்படுத்தி உலகுக்கு வெளிப் படுத்தினார். இதன் எட்டு ஸ்தானங்களில் கூறப்படாத பொருள்களை 'சிலஸ்தானம்' எனும் பெயரில் இயற்றி இணைத்துள்ளார். இவ்வாறு இதன் வரலாறு தெரிய வருகிறது.

வைதிக காலத்தில் மந்திர பிராம்மணர் முதலியவற்றில் கசியபர், காசியபர் எனும் பெயரில் மகரிஷிகள் பலரின் பெயர்கள் மேலும் வேறு பல நூல்களிலும் இந்தப் பெயரில் பலர் குறிப் பட்டுள்ளனர். இவர்களில் கௌமார பிருத்யம் எனும் நூல் ஆசிரியரால் எந்தக் கசியபரிடம் விருத்த ஜீவகர் உபதேசம் பெற்றார், எனும் விஷயங்கள் ஆராய்ச்சிக்கு உரியவையாகும். அத்ரி, கசியபர். எனக் கோத்திரங்களைக் தோற்றுவித்த ரிஷிகளில் காணப்படுவதால் மூல ரிஷியானவர் கசியபர் என்றும் அன்னாரது மரபில் தோன்றியவர் காசியபர் எனப் பெயர் பெற்றார் எனவும் அறியலாகும். தோத்திரத்தை தோற்றுவித்தவர் கசியபர் அம்மரபில் தோன்றியவர்கள் காசியபர் என்பது தகும். ஆயினும் கி.மு. நான்காம் நூற்றாண்டில் விளங்கினவராகக் கருதப்படும் போதாயன ஸூத்திரம் இயற்றியவர் தம் நூலில் கோத்திரங்களை விளக்கும் பகுதியில் அதகச்யமான் வியாக்யாஸ்யாம் என்வும் விளக்கத்தின் முடிவில் ''இத்யேதே நித்ருவார் கசியர்'' எனக் கூறியுள்ளார். அபஸ்தம்ப, ஆச்வலாயன, காத்யாயன ஸூத்திரங்களிலும் இவ்வாறே கூறப்பட்டுள்ளது. சதபதபிராம்மணத்திலும் ஹரித, கசியப: சில்ப: காசியப., நைத்ருவி: கசியப: என ஹரிதர் முதலான வேறுபட்ட நபர்களுக்கும் 'கசியபர்' எனக் குறிப்பு காணப்படுகிறது. ஆகவே கசியப மரபில் தோன்றியவர்களும் 'கசியபர்' எனக் குறிப்பிடப்பட்டுள்ளதை நாம் காணலாம்.

கசியபஸம்பிரதாயத்தில் போதாயனர் முதலியவர்களால் மாரீசர் என்பவர் குறிப்பிடப்படவில்லை. வைதிகஸம்பிரதாயத்தில் வேறிடத்தில் கசியபர் மரீசியின் புதல்வர் எனக் கூறப்பட்டுள்ளது. போதாயனஸம்பிரதாயத்தில் கூறப்பட்டுள்ள மூல கசியபர்தான் மாரீசர் ஆவார் என்பது தெளிவாகிறது. மத்ஸ்யபுராணத்தில் கோத்திரங்களை நிறுவிய முனிவர்களில் மரீசியின் குமாரர் கசியபர்

மூல கோத்திரத்தை நிறுவியவராகக் கூறப்பட்டுள்ளது. அவரது ஸந்ததியில் அவாந்தர கோத்ரத்தை ஏற்படுத்தியவராக மரீசி முனிவர் கசியபர் மீண்டும் கூறப்பட்டுள்ளார். கோத்திரங்களைப் பற்றி விளக்கியவரான கமலாகரபட்டர் (17ம் நூற்றாண்டினர்) மத்ஸ்யபுராணத்தில் கூறப்பட்டுள்ள கசியபரைக் குறிப்பிட்டு ''அதகச்யபாஸ'' என கசியப பரம்பரையில் தோன்றியவரான மாரீசர் பெயரைக் குறிப்பிட்டுள்ளார். இவர் கசியபர் மரபில் தோன்றியவராகையால் கசியபர் எனும் பெயர் இவருக்கும் பொருந்தும்.

சரகஸம்ஹிதையின் துவக்கத்தில் ரிஷிகளின் குழாம் குறிப்பிடும்போது முதலில் கசியபர் எனத் தனியாகக் குறிப்பிடப் பட்டு பிறகு 'மாரீச கசியபர் என இருவரைத் தனித் தனியாக மாரீச, கசியபர்கள் குறிப்பிடப்பட்டுள்ளனர். இந்த ஆராய்ச்சியால் கசியபர், காசியபர், மாரீசி என மூவர் உளர் என்பது தெளிவாகிறது.

இந்தக் காசியபஸம்ஹிதையில் ஒவ்வொரு அத்தியாயத் துவக்கத்திலும் முடிவிலும் இவ்வாறு கசியர் உரைக்கிறார் எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. சில இடங்களில் கசியபர் இவ்வாறு உரைத்தார் என ஆசாரியர் பெயராகவும் கூறப்பட்டுள்ளது.

ஆங்காங்கு மாரீச எனும் சொல்லும் குறிப்பிடப்பட்டுள்ளது. முன்பின் உள்ள சொற்களைக் காணும்போது கசியபரே மாரீசர் எனவும், மாரீசரே கசியபர் எனவும் தோன்றுகிறது. இவ்விரு பெயர்களும் ஒருமையில் குறிப்பிடப்பட்டுள்ளதை நோக்கும் போது இருவரும் ஒருவரே எனத் தோன்றுகிறது. அத்தியாயத்தில் ஆத்ரேயர் வாயோர்விதருடன் உரையாடும்போது 'மாரீசி' என வருணனை செய்துள்ளதால் மாரிசர் வாயோர்விதரின் சம காலத்தில் விளங்கியவர் என்பது தெளிவாகிறது. இந்தக் கசியப ஸம்ஹிதையிலும் மாரிசர் வாயோர்விதர் ஆத்ரேயர்களின் சம காலத்தவர் இந்நூலாசிரியர் என்பது தெளிவாகிறது. வாயோர்விதர் எனும் மன்னனுக்கு ரிஷிகசியபர் சிறுவர்களுக்கான ஓஷதிகளைப் பற்றி உபதேசம் செய்துள்ளார் என ஒரு சுலோகத்தில் இந்நூலில் பாடப்பட்டுள்ளது. கருவில் உறுப்புகள் தோன்றுவதைப் பற்றி விளக்கும் பகுதியில் ஆத்ரேய ஸம்ஹிதையில் இப்பொருளைப் பற்றி ரிஷகளிடையே பல கருத்து வேறுபாடுகள் காணப்படு கின்றன எனத் துவங்கி அவர்களது கருத்துக்களைக் கூறும்போது ''கச்யப ஸர்வாங்க நிர்விருத்திஹி'' (கருவில் உறுப்புகள் அனைத்தும்

ஒரே சமயத்தில் தோன்றத் துவங்குகின்றன'') எனும் கசியபரின் கருத்து உறுதி செய்யப்பட்டுள்ளது. இந்தக் காசியப ஸம்ஹிதை யிலும், ''ஸர்வேந்த்ரியானனி'' எனத் துவங்கும் சுலோகத்தில் இந்தக் கருத்து கூறப்பட்டுள்ளது.

ஆத்ரேயஸம்ஹிதையில் மாரீச மற்றும் கசியப எனும் பெயர்கள் ஒருவரையே குறிப்பிடுவதாகக் கூறப்பட்டிருப்பது நோக்கும்போது ஆத்ரேயபுனர்சுவால் ஆயுர்வேத ஆசிரியராகக் குறிப்பிடப்பட்டுள்ள ராஜரிஷி வாயோர்விதர் என்பவரது சமகாலத்தில் விளங்கியவரான மாரீச கசியபர் இந்தக் காசியப ஸம்ஹிதையை உபதேசம் செய்தவராவார் என்பது தெளிவாகிறது.

இந்த ஸம்ஹிதை போதாயனர் முதலியவர்களின் நூல்களில் மாரிச எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. 'மரிசி' எனும் சொல்லுக்கு வடமொழியில் 'அன்' எனும் விகுதியைச் சேர்ப்பதால் மாரீச எனும் சொல் ஏற்படுகிறது. ஆத்ரேய ஸம்ஹிதையில் தௌம்யௌ மாரீசி காசியபௌ' மாரீசிருவாக' 'மாரீசி: கசியப'' என 'இ' எனும் உயிரெழுத்து கடையில் கொண்ட சொல்லாக கூறப்பட்டிருந்தாலும் 'மரிசி' என்னும் சொல் (வடமொழி இலக்கணத்தில்பஹ்வ்யாதி) கணத்தில் சேர்க்கப்பட்டிருப்பதால் 'மாரீசி' என்பது 'மாரிச' எனும் சொல்லின் மறுதோற்றம் எனக் கொள்ளத்தகும்.

ப்பொருள்கள் அனைத்தையும் ஆராய்ந்து பார்க்கும்போது இந்த ஸம்ஹிதையில் 'சிஷ்யோக்ரமஹீயம் எனும் அத்தியாயத்தில் இந்திரனிடம் பாடம் கேட்ட கசியப, அத்ரி முதலியவர்களின் சீடர்கள், புதல்வர்கள் ஆகியவர்களால் இந்த மருத்துவக் கல்வி பிரச்சாரம் செய்யப்பட்டதாகக் கூறப்படுவதால் போதாயனர் முதலியவர்களின் கூற்றின்படி மரீசி புதல்வர் மூலகசியபர் இந்நூலின் ஆசிரியராவார் எனத் தெரியலாகும்.

ஸத்யயுக, திரேதாயுகங்களுக்கு இடைக் காலத்தில் தோன்றிய நோய்களால் உயிரினங்கள் துன்பப்பட்டுக் கொண்டிருக்கையில் அத்துன்பங்களைப் போக்க கசியபரால் இந்த ஸம்ஹிதை இயற்றப்பட்டது.

ஷருத்த ஜீவக தந்திரம் எனும் பெயரில் சுருக்கமாக விளங்கிய நூல் கலியுகத்தில் மறைந்துபோய் மீண்டும் வாத்ஸ்யர் என்பவரால் பெறப்பட்டுச் சீர்திருத்தப்பட்டது எனக் கல்பாத்தியாயத்தில் கூறப்பட்டிருப்பதாலும், ஆத்ரேயரின் நூலில் காங்காயனர்

முதலியவர்களில் சமகாலத்தில் மாரீசிகசியபர் விளக்கியதாகக் கூறப்பட்டிருப்பதால் மாத்ஸ்யபுராணத்தில் கூறப்பட்டுள்ளபடி கசியப பரம்பரையில் இரண்டாவது மாரீசர் இந்நூலாசிரியராவார் என்பதும் பொருந்தும் எனத் தோன்றுகிறது.

மாத்ஸ்யபுராணத்தில் கூறப்பட்ட இரண்டாம் மாரிச கசியபர் மூலகசியபரின் மரபில் தோன்றியவரே என உறுதியாகக் கூற இயலாது. ஆயினும் இடையில் தோன்றிய பிரிவான கோத்திரத்தைச் சேர்ந்தவர் என்றாலும் மந்திரங்களைக் கண்டு பரவச் செய்தவர் களில் ஒருவராகக் கூறப்படுவதால் அவரும் தொன்மைக் காலத் தவரே எனலாம். ஸம்ஹிதா கல்பாத்யாயத்தில் கலியுகத்தில் மறைந்து போன விருத்தஜீவக தந்திரத்தை இவரிடம் பெற்று வத்ஸ்யரால் சீர்திருத்தப்பட்டிருப்பதால் விருத்த ஜீவக தந்திரத்திற்கும் மூலமான காச்யப ஸம்ஹிதையின் காலம் அதற்கு முற்பட்டதாகையால் ஸம்ஹிதையை இயற்றிய காசியபர் தொன்மைக் காலத்தவர் என்பது தெளிவு. பாணினியின் கொள்கைப் படி விதாதிகணத்தில் சேர்ந்த கசியப எனும் சொல் பலர் என்ற பொருளில் விகுதி மறைதல் (பிரத்யயலோபம்) கூறப் பட்டிருக்கிறது. ஆனால் மறையைச் சார்ந்த அந்தணர் எனும்போது ஒரு நபருக்கும் கூட 'கசியபர்' எனும் சொல் வழங்கப்பட்டிருப் பதால் இங்கு 'கசியர்' என்ற பொருளில் வந்த கசியர் எனும் சொல் பாணினிக்கும் முற்பட்ட கால வழக்கில் இருந்துள்ள தென்பதைக் குறிக்கிறது.

இந்தக் காசியபஸம்ஹிதையில் தன்வந்திரியின் கொள்கை எடுத்துக் கூறப்பட்டுள்ளதால், ஆனால் அந்தத் தன்வந்திரியைப் பின்பற்றிய திவோதாஸர், ஸுசுருதர் ஆகியவர்களின் பெயர்கள் குறிப்பிடப் பெறாமையால், மேலும் மகாபாரதத்தில் ஆசிரியர் கேட்டபடி அன்னாருக்குக் குருதட்சிணையாகக் குதிரைகளைப் பெறக் காசி மன்னன் திவோதாஸரிடம் செல்ல விரும்பிய காலவர் என்பவர் இமயமலையின் வடமேற்குப் பகுதியில் செல்லும் வழியில் மாரீசி கசியபரின் ஆசிரமம் இருந்ததாகக் கூறப்பட்டிருப்ப தால் மாரீசி கசியபர் தன்வந்திரிக்குப் பிறகு ஆனால் அன்னாரது நான்காவது ஸந்ததியாகிய திவோதாஸருக்குச் சிறிது முற்பட்ட காலத்திலோ அல்லது அவரது ஸமகாலத்திலோ இமயமலைச் சாரலில் ஆசிரமம் கட்டிக் கொண்டிருந்தார் எனத் தெரிகிறது. இதனால் இந்த ஸம்ஹிதையில் வந்துள்ள ஆசாரியர் கங்கைத் துவாரத்தில் வசித்து வந்தார் என்பது சரியாகத் தோன்றுகிறது.

கிரையாகிய கோத்திரத்தை நிறுவிய மாரீசகசியபர் இந்த ஸம்ஹிதையை இயற்றினார் எனக் கொள்வோமாயின் சரகஸம்ஹிதையின் துவக்க உரைப்படி மாரீசி மற்றும் கசியபர் ஆகியவர்களுக்கு மாறுபட்ட முற்காலத்துக் கசியபர் ஒருவர் இருந்ததாகத் தெரிவதால், மற்றும் இந்த ஸம்ஹிதையில் இந்திரனின் சீடரான கசியபரால் ஆயுர்வேத மருத்துவக் கல்வி பரப்பப்பட்டதாகத் தெரிவதனால், அத்ரி, பிருகு போன்றவர்களுடன் விளங்கிய மூலகசியபரால் தான் இந்தக் கல்வி மாரீச கசியபரை அடைந்தது எனத் தெளிவாகிறது. இவ்வாறு மரபில் தோன்றிய மாரீசரால் இந்த ஸம்ஹிதை இயற்றப்பட்டது என்பது முடிவாகிறது

ஆகவே, வமனவிரேசனாத்யாயத்தில் விருத்த காசியபரின் கொள்கையை எடுத்துக்கூறி, இனி கசியபர் கூறுகிறார் எனத் தன் கொள்கை விளக்கப்பட்டிருக்கிறது என்றறிக. வேறு ஆசிரியர்களின் கொள்கைகளைக் கூறி முடிவில் பெயரைக் குறிப்பிடுவதுடன் தன் கொள்கையை உறுதி படுத்திக் கூறும் முறை கௌடில்யர் இயற்றிய அர்த்த சாஸ்திரத்திலும், ஆத்ரேய ஸம்ஹிதையிலும் காணப் படுகிறது. இவ்வாறு கசியபர் கூறுகிறார் எனும் சொற்றொருடன் துவங்கிய அத்தியாயத்தின் இடையில் வேறு ஆசிரியரின் கொள்கை இன்றியே 'எனக் கசியபர்' இவ்வாறு கசியபர் கூறினார் போன்ற சொற்றொடர்கள் காணப்படுகின்றன. புதிய சிறப்பான பொருளைக் கூறும்போதும் ஆசிரியர் இவ்வாறு பெயருடன் · விளக்கம் தந்திருக்கலாம். ஆனால் மாரீச கசியபரின் ஸம்ஹிதையில் 'கசியபாயஸ்வாஹா' போன்ற சொற்றொடர் 'ஸ்வாஹா' எனும் சொல்லுடன் கசியபச் சொல் தேவதை என்பதைக் குறிப்பிடுவதாக அமைந்துள்ளது இது. அதற்கு முற்பட்ட காலத்து காசியபரை குறிப்பிடுவதாகும் எனலாம். மூல கசியபரின் மரபில் வந்தவர்களால் இந்தக் கல்வி பரப்பப்பட்டதாகையால் தொன்மை ஆசிரியரான கசியபரின் கொள்கையைக் கூறும்போது இவ்வாறு கூறப்பட்டிருக்கலாம். இந்த ஆசிரியர் மூலக் கசியபரோ அல்லது அன்னாரது மரபில் தோன்றியவரோ ஆயினும் இதை மட்டும் கருதி இவ்வாசிரியர் பிற்காலத்தவர் எனக் கூற இயலாது. ஏனெனில் வைதிக இலக்கியத்திலும் மந்திரங்களைக் கண்டு கொண்டவர்களின் பெயர்களில் இவரது பெயரும் காணப்படுகிறது. காத்யாயனரின் ரிக்ஸர்வானுக்ரம ஸூத்திரத்தில் கசியபர் மேலும் காசியபர்களால் கண்டு கொள்ளப்பட்ட பல ஸூத்திரங்களில் ஜாதவேதத் துவக்கத்தில் ஓராயிரம் ஸூத்திரம் கசியரால்

ய்ற்றப்பட்டதாகக் கூறப்பட்டுள்ளது. அதற்கு உரை இயற்றிய ஷட்குரு சீடர் 'இவர் மரீசி புத்திரராகிய கசியபர்' என அறிமுகப் படுத்துகிறார்.

'பிருஹத்தேவதா' எனும் நூலிலும் இந்த ஆயிரம் ஸூத்ரங்களைக் கண்டவர் 'கசியபர்' எனக் கூறப்பட்டுள்ளது.

ஸாயனாசாரியரும் ஜாதவேதஸ மந்திரங்களில் மாரீசி கசியப ரிஷியைக் குறிப்பிடுகிறார். பப்ரு ஸூத்திரத்திலும் ஸூத்திரம் இயற்றியவர் ஸர்வானுக்ரமஸரித்திரத்திலும் ஜாதவேதஸ ஸூக்திரத்தைக் கண்டவர் மாரீச கசியபர் (மாரீச, கசியபர்) எனக் கூறியுள்ளார்.

ரிக்வேதத்தில் ஒன்பதாவது மண்டலத்திலும், வேறு சில இடங்களிலும் காச்யபாவத்ஸார, காசியபநித்ருவி, மாரீசகசியபர்களால் கண்டு கொள்ளப் பட்ட ஸூக்தங்கள் பல உள்ளன. இவற்றிற்கு ஓஷதியாகிய ஸோமத்தைப் பற்றிய சிறப்பியல்புகள் பலவாறாகக் கூறப்பட்டுள்ளன. ஜாதவேதஸ ஸூக்தங்களில் அக்கினியைப் பாராட்டும் பகுதிகளிலும் ஸோமத்தைப் பற்றிய சிறப்புகள் காணப்படுகின்றன. ஜாத வேதஸ ஸூத்திரத் துவக்கத்தில் உள்ள ஓராயிரம் ஸூக்தங்கள் கசியபரிஷியால் இயற்றப் பெற்றவை என ஸர்வானுக்ரம ஸூத்திர போன்றவர்கள் குறிப்பிட்டுள்ளனர். இன்று நமக்குக் கிடைத்துள்ள ரிக்வேதத்தில் மாரீசகசியபரிஷியால் கண்டு கொள்ளப்பட்ட ஓராயிரம் ஸூக்தங்கள் காணப்படவில்லை. ஜாதவேத ஸூக்தத்தில் ஓருரிக்கைக் கொண்ட ஒரு ஸூக்தம் மட்டும் காணப்படுகிறது. ஸர்வானுக்ரம ஸரித்திரம், பிருஹத்தேவதா மற்றும் ஷட்குரு சிஷ்யரால் கண்டெடுத்துக் கூறப்பட்ட சௌனக–சாதகபூர்ணி போன்றவர்களின் குறிப்புகளில் 'ஜாதவேத' ''ஸயோவ்ருஷா எனும் ஸூக்தங்களுக்கு இடையில் 999 ஸூக்தங்கள் இருந்த வகை தெரிய வருவதால் அவை காலக்கணக்கில் மறைந்து போயின என்பது தெளிவாகிறது. சிதைந்துபோன தோற்றத்தில் காணப்படும் இந்த ஸூக்தம் வேதத்தில் காணப்பட்டாமல் மறைந்து போனது என்பதை ஷட்குருசிஷ்யர் தெளிவுபடக் கூறியுள்ளார். மறைந்துபோன இந்த ஸூக்தங்களைப் பற்றி ஸர்வானுகிரமத்திற்கு உரை, இயற்றியவர் ஷட்குணசிஷ்யர் துவக்கத்தில் ஏகர்ச, விருச, தித்ருச, ஸஹஸ்ரர்ச, ஏர்யந்தஸூக்தங்களைக் குறிப்பிட்டு அவற்றைக் கணக்கிட்டு ஐந்து லட்சத்து நானூற்றுத் தொண்ணூற்றொன்பது ஸூக்தங்கள்

மறைந்துள்ளன எனக் குறிப்பிட்டுள்ளார். ஆனால் ரிக் வேதத்தில் ஒன்றிரண்டு மந்திரங்களைத் தவிர ஸூக்தங்களில் மந்திரங்கள் அமைந்திருக்கும் வகை எங்கும் காணப்படவில்லை. ஆனால் ஸூத்திரம் மற்றும் பிருஹத் தேவதையில் இந்த ஆயிரம் ஸூக்தங்களில் ஒரே ரிக் உள்ள மந்திரங்கள் பல இருப்பதாகக் குறிப்பு காணப்படுகிறது. இவ்வாறு கூறப்பட்டுள்ள எண்ணிக்கை நிறைவு பெறவில்லை. எண்ணிக்கையில் கணக்கு சரியோ, தவறா எப்படியாயினும் ஒரே ரிக் உள்ள மந்திரங்கள் பல எனக் குறிப்பு காணப்பட்டாலும் பல ரிக்குகளைக் கொண்ட ஸூக்தங்களும் இடம் பெற்றிருக்கக் கூடும். ஆகையால் இதில் ஆயிரக்கணக்கில் மந்திரங்கள் இருந்தன எனக் கொள்ளலாம்.

கசியப மற்றும் காசியப ரிஷிகளின் பெயர்களில் கிடைத்துள்ள ஸூக்தங்களில் ஸோமம் எனும் ஓஷதியைப் பற்றிய சிறப்புகள் கூறப்பட்டுள்ளதால் மறைந்துபோன ஸூக்தங்களில் ஓஷதிகளின் சிறப்பியல்புகள் கூறப்பட்டிருக்கலாம் என நினைக்க இடம் உள்ளது. கசியபர் ஆயுர்வேத மருத்துவ கல்விக்கு ஆசிரியர் ஆகையாலும் காசியப ஸம்ஹிதையில் அன்னார் பரம்பரையில் அக்கல்வி சிறப்புற்று விளங்கியதாகக் கூறப்பட்டிருப்பதாலும் அவ்வாறே பெரிய அளவில் இருந்த காசியப ஸம்ஹிதைக்கு பிற்காலத்தில் விருத்த ஜீவகரால் சுருக்கமான நூல் ஒன்று இயற்றப் பட்டிருப்பதாலும் மறைந்துபோன ஓராயிரம் ஸூக்தங்கள் காசியப ஸம்ஹிதையின் தோற்றத்தில் இருந்திருக்கக்கூடும் எனத் தோன்று கிறது. ஆயுர்வேதத்தின் பொருள்கள் நிறைந்த அந்தப்பகுதியை காசியபர் வேதத்தில் இணைத்திருக்கக் கூடும். காலவெள்ளத்தில் அது மறைந்து போய் இருக்கலாம்.

காசியபஸம்ஹிதை என்ற பெயரில் கிடைத்துள்ள நூலில் ரிக்வேதத்தின் உபதேசத்தின் உபவேதமாகக் கசியபரால் முன்பு லட்சசுலோகங்கள் கொண்ட நூல் ஒன்று இயற்றப்பட்டுள்ளது. அது எனக்கு உபதேசம் செய்யப்படட்டும் எனும் கருத்துள்ள சுலோகங்கள் காணப்படுகிறது.

இங்கு கூறப்பட்ட இலட்சம் சுலோகங்கள் கொண்ட அந்த ரிக்வேதத்தின் உபவேதமே வேதத்தில் மறைந்துபோன ஓராயிரம் ஸூக்தங்களாக இருந்திருக்கலாம். ஆயுர்வேதத்தைச் சார்ந்த பொருள்களை விளக்கும் அப்பகுதியைச் சிதைவுற்ற ரிக் வேதப் பகுதி எனக் கசியபர் இணைத்திருக்கக் கூடும். காலம் கடந்த

நிலையில் அப்பகுதி காணாமற் போய் இருக்கலாம். காசியப ஸம்ஹிதை என்ற பெயரில் இன்று நமக்குக் கிடைத்துள்ள நூலில் ரிக் வேதத்தின் உறுப்பாக முன்பு கசியபரால் ஒரு லட்சம் சுலோகங்கள் கொண்ட நூல் இயற்றப்பட்டுள்ளது. அந்நூல் எனக்கு உபதேசிக்கப்படட்டும் எனும் கருத்துள்ள சுலோகம் காணப் படுகிறது.

'லட்சம் சுலோகம் கொண்டதாகக் கூறப்பட்டுள்ள காசியப ஸம்ஹிதை மறைந்துபோன ரிக் வேதத்தின் ஆயிரம் ஸுக்தங்கள் கொண்ட காசியபஸம்ஹிதையை குறிப்பிடுகிறது. சிதைந்த வடிவத்தில் தாம் கண்ட ஆயிரம் ஸுக்தம் கொண்ட நூலை தொகுத்து கசியபர் சிஷ்யோபக்ரமணியம் எனும் அத்தியாயத்தில் ஆயுர்வேதத்தை ஐந்தாம் வேதம் எனக் குறிப்பிட்டிருக்கக்கூடும் எனவும் கருத இடம் உண்டு. ஆயுர்வேதப் பொருளைக்கொண்ட சிதைந்துபோன அந்த நூலின் பொருளைச் சுருக்கமாக ஒரு நூலாக விருத்த ஜீவகர் தாம் ஒரு தந்திர நூலாகச் செய்திருக்கிறார் என்பது கண் கூடு. எது எப்படியாயினும் குறிப்பிடப்பட்ட காசியபஸம் ஹிதை வேதமாக விளங்கிய முதல் நூலின் சுருக்கம் என்பது உண்மையாகும்.

இந்நூலின் கல்பாத்யாயத்தாலும் இடையிடையே வேறு அத்யாயங்களில்காணப்படும் பொருள்களாலும் இந்த ஸம்ஹிதையை உபதேசம் செய்த ஆசிரியர் கசியபர் எனும் பெயர் கொண்டவர். நாள்தோறும் மறைநெறிப்படி வேள்வி புரிந்ததவர், வேதவேதாங் கங்களில் கரை கண்டவர், பிரும்மதேவனுக்கு ஒப்பானவர் கங்கையின் கரையில் வசித்து வந்தவர் ஆன மாரீச கசியபரே என்பது தெளிவாகிறது. சரகஸம்ஹிதையின் முதல் நூலை இயற்றிய ஆத்ரேயருக்குப் புனர்வசு போல என்பதுபோல இந்த ஸம்ஹிதை யின் ஆசிரியராகிய கசியபருக்கு 'மாரீச' என்பது அடைமொழி யாகும்.

கௌமாரபிருதயத்தைச் சார்ந்த இந்நூலில் உள்ள பொருளைக் காணும்போது கசியபர் விடுத்த காசியபர் என்பவர்கள் வேறு வேறான நபர்கள் எனத் தெரிய வருகிறது. மாரீசகசியபரால் உபதேசம் செய்யப்பட்டதாக உள்ள இந்த ஸம்ஹிதையில் வமன விரேசனீயப்பிரகரணத்தில் பிற ஆசிரியர்களின் கொள்கைகளைக் கூறும் பகுதியில் விருத்த காசியபரின் கொள்கையைக் கூறி முடிவில் காசிய்பர் உரைத்தார் எனத்தம் கருத்தைத் தெளிவாக விளக்குவதால்

இந்நூலாசிரியர் வேறு விருத்தகாசியபர் வேறு எனத் தெளிவாகிறது. ஒவ்வொரு அத்தியாயத்தின் துவக்கத்திலும் இவ்வாறு கசியபர் உரைத்தார் எனக் கூறப்படுவது காண்க. ஒவ்வொரு அத்தியாயத் துவக்கத்திலும் இவ்வாறு கசியபர் கூறுகிறார் என்பதும் இதை உணர்த்துகிறது. இந்தக் கசியப ரிஷிக்கும் ஆங்காங்கு இந்நூலில் விருத்த எனும் அடைமொழி கூறப்பட்டுள்ளது. அது வயதால், அல்லது அறிவால் முதுமை பெற்றுள்ளதைக் குறிப்பிடுவதாகும் எனலாம். அல்லது இடைச் செருகலாகக்கூடும். அல்லது சரக ஸம்ஹிதையின் பின்பகுதியில் கிருஷ்ண ஆத்ரேயர் முதலியவர் களின் கருத்துகள் கூறப்பட்டிருப்பது போல விருத்தஜீவகர் தாம் நிறைவு படுத்திய சிதைந்த பகுதிகளில் விருத்தா கசியபரின் நூலில் எனக் கூறியிருக்கக்கூடும்.

மகாபாரதத்தில் தக்ஷகனின் வரலாற்றில் சாபம் பெற்ற பரிக்ஷித்து மன்னனைத் தீண்ட வந்து கொண்டிருக்கும் தக்ஷகனுடன் அவனை எதிர்கொண்ட ராஜனைக் காப்பாற்ற முனைந்த கசியபர் உரையாடிய பகுதி உள்ளது. 'மாரீச' எனும் அடைமொழி பாரதத்தில் இவருக்குக் கூறப்படவில்லை. எனவே விஷ மருத்துவத்தை நன்கு கற்ற இந்தக் கசியபர் பரம்பரையாகத் தோன்றியக் கசியபரை விட வேறானார் எனத் தோன்றுகிறது. டல்ஹணர் என்பவர் இயற்றிய ஸுசுருத ஸம்ஹிதையின் உரையிலும், மாதவநிதானத்திற்கு உரையான மது கோசத்திலும் விருத்தகாசியபர் எனும் பெயர் இரு சுலோகங்களில் காணப்படுகிறது. இந்தச் சுலோகங்கள் விஷ மருத்துவப்பகுதியைச் சார்ந்தவை ஆகையால் இந்தக் காசியபர், விருத்தகாசியபர் ஆகியவர்களும் வேறு வேறானர்கள் என்றும் விஷ மருத்துவத்தில் தேர்ச்சி பெற்றவர்கள் என்பதும் தெரியவருகிறது.

பாணினி தம் நூலில் (1,2,25) மற்றும் (8-4-67 என) இரு இடங்களில் 'காசியப எனும் பெயரைக் குறிப்பிட்டுள்ளார். இலக்கண ஆசிரியர்களாக குறிப்பிடப்பட்டுள்ள காசியபர் இந்நூலாசிரியரை விட வேறானவர் எனத் தெளிவாகிறது.

கைத்தீர ஸம்ஹிதையில் சில்பாசிரியராக ஒரு கசியபர் குறிப்பிடப்ஞபட்டுள்ளார். அவரும் இவரைவிட வேறானர். 'காசியப ஸம்ஹிதை' எனும் பெயரில் உமாமகேசுவர ஸம்வாதத் தோற்றத்தில் மருத்துவப்பொருள் கொண்ட சிறுநூல் ஒன்று தஞ்சை நூல் நிலையத்தில் (எண்.10780) உள்ளது. இதன் முதல் பகுதி பிரதி எடுக்கப்பட்டு யாதவர் எனும் மருந்துவ நண்பரால் எனக்கு

அனுப்பப்பட்டுள்ளது. இந்த முற்பகுதியில் பலவகை வாத நோய்கள், காய்ச்சல், கரஹணி, அதிஸாரம், மூலம் ஆகிய நோய் களின் இலக்கணங்கள், நோய் நீக்கும் ஔஷதிகள், நோய் தோன்றக் காரணமான தீவினையை அகற்ற உருத்திரன், சிவன், திருமால் ஆகிய தெய்வங்களை வழிபடும் முறைகள் சுருக்கமாகக் கூறப் பட்டுள்ளன. இப்பகுதியின் முடிவில் 'பாலரோகஸ்ய' எனத் துவங்கிய சுலோகங்கள் சில உள்ளன. அவற்றின் முடிவில் 'இதிபார்வதீ பரமேச்வரஸம்வாதே காசியப ஸம்ஹிதா யாம் பூர்வார்தம் ஸமாப்தம்' என்று குறிப்பிடப்பட்டுள்ளது. இந்நூலில் உள்ள சுலோகங்களின் நடை சிறப்பாக இன்மையால் இது தொன்மையான நூல்எனக் கருத இடம் இல்லை. மேலும் சிறுவர் களுக்கான மருத்துவத்தைப் பற்றிய சிறப்பான விஷயங்களும் கூறப்படவில்லை. விருத்தஜீவகீயதந்திரத்திற்கும் இந்நூலுக்கும் எந்தப் பொருளிலும் ஒப்புமை இல்லை. எனவே இது தாந்திரிக முறைகளுடன் கூடிய வேறு நூலாகத் தெளிவாகிறது. ஆகவே இந்நூலாசிரியர் ஆகக் கூறப்பட்ட காசியபரும் வேறானவர்.

சென்னையைச் சார்ந்த பகுதியில் அச்சிடப்பட்டுள்ள காசிய பஸம்ஹிதை எனப்பெயர் கொண்ட அகததந்திர (விஷமருத்துவ) நூல் ஒன்றுள்ளது. அதில் காருடவித்யா, விஷ நாசக ஔஷதபிர யோகம் மாந்திரிகப் பிரயோகம், விஷங்களின் பலவகைகள் அவற்றின் கடிகள் போன்ற பொருள்கள் இடம் பெற்றுள்ளன. இதில் காணப்படும் சுலோகங்களுக்கும டல்ஹணர்,மதுகோசம் ஆகிய நூல்களில் காணப்படும் பொருள்களும் சிறிதும் ஒப்புமை இல்லை. அந் நூல்களில் குறிப்பிடப்பட்டுள்ள இரு சுலோகங் களும் இந்நூலில் காணப்படவில்லை. அதே தந்திரம் அறிந்த பிற்காலத்தவரான வேறு காசியபர் ஒருவர் அல்லது விஷமருத்து வத்தில் முற்காலத்தில் திறமை பெற்றிருந்த காசியபரது வழித் தோன்றலாகிய வேறு ஒருவர் இயற்றிய நூலெனத் தோன்றுகிறது. இந்தக் கௌமார பிருத்யப் பொருள்கொண்ட நூலில் இதின் மணம், பெயர் ஏதும் இல்லை.

இவ்வாறு கசியப, காசியப எனும் வேறு வேறு பெயர்கள் காணப் படுவதாலும், மேலே குறிப்பிடப்பட்ட காசியபர்கள் முற் காலத்தவராயினும் பொருள் மாறுபடுவதாலும் காசிய ஸம்ஹிதை எனும் பெயரில் கிடைத்துள்ள முன் கூறிய நூல்கள் பிற்காலத்தில் தோன்றியவை ஆகையாலும் இந்தக் காசியபர்களின் பெயர்

களுடன் 'மாரீச' எனும் அடைமொழி கூறப்படாமையாலும், இந்தக் கௌமாரபிருத்திய ஆசிரியர் மாரீச காசியபரைவிட வேறானவர் என்பது தெளிவு. புதிதாகக் கண்டெடுக்கப்பட்டுள்ள பழைமையான இந்நூலும் வேறுபட்டதாகும்.

அஷ்டாங்கஹ்ருதயத்தில் சிறுவர்களுக்கான நோய்களைத் தீர்க்கும் முறைகளைக் கூறுமிடத்தில் விருத்தகசியபர், கசியபர் எனும் பெயர்களில் இரு மருந்துமுறைகள் கூறப்பட்டுள்ளன. விருத்த கசியபர் கசியபர் என வேறுபடுத்திக் கொண்டவரின் கூற்றாக உள்ள சிறுவர்களுக்கு உண்டாகும் கிரஹதோஷங்களைப் போக்கவல்ல 'தசாங்க தூபம்' என்பது தூபபிரகரணத்தில் சிறிது பாடமாறுபாடுடன் இந்நூலில் காணப்படுகிறது.

சிறுவர்களின் யக்ஷராக்ஷஸர்களால் தோன்றும் துன்பங்களைப் போக்கவல்லதான கசியபரின் பெயரில் கூறப்பட்டுள்ள அபயகிருதம் வாக்படர் நூலிலும் கூறப்பட்டுள்ளது. அதில் உள்ள பொருட்கள், ரக்ஷோக்னத்வம் முதலியவற்றில் ஒப்புமையால் இரண்டும் ஒன்றேயாகும்.

கோடாங்க (மத்யஏஷியா) எனும் இடத்தில் நிலத்தடியிலிருந்து பௌவர் மான்யுஸ்கிரிப்ட் (Bower Manuscript) தோற்றத்தில் புதிதாகக் கண்டெடுக்கப்பட்ட பண்டைய மருத்துவ நூல் ஒன்று உள்ளது. போஜபத்ரம் எனும் இலையில் எழுதப்பட்டுள்ள பண்டைய காலத்து எழுத்துக்களுடன் கூடிய இந்நூலில் அக்காலத்து எழுத்தை நோக்கி ஆராய்ச்சியாளர்கள் இந்நூல் மூன்று அல்லது நான்காவது நூற்றாண்டில் எழுதப்பட்டதாகும் என முடிவு செய்துள்ளார். நூல் அதற்கும் முற்பட்ட காலத்தில் இயற்றப் பட்டிருக்க வேண்டும். இதில் ஆத்ரேய, க்ஷாரபணி, ஜாதூகர்ண, பராசர், பேட, ஹாரீத ஸுச்ருத, காசியப, ஜீவகர்கள் முதலியவர் களின் பெயர்களும் குறிப்பிடப்பட்டுள்ளன. இப்பண்டைய ஆசிரியர்களின் மருத்துவமுறைகள் இதில் தொகுக்கப்பட்டுள்ளன. ஆயினும் அஷ்டாங்க ஹ்ருதயத்தில் கூறப்பட்ட ஒரு மருந்து கூட கூறப்படாமையால் இந்நூல் கசியப, காசியப, ஆத்ரேய, ஸுசுருத, பேடர் முதலான ஆசிரியர்களுக்குப் பிற்பட்ட ஆனால் வாக்படருக்கு முற்பட்ட காலத்தில் தோன்றிதாகும் எனத் தோன்றுகிறது. இதன் கௌமாரபிருத்யத்தைச் சார்ந்த 14வது அத்தியாயத்தில் காசியபர் மற்றும் ஜீவகர்களின் பெயர்களில் சில மருந்து முறைகள் கூறப்பட்டுள்ளன. கௌமார பிருத்யபிரகரணத்தில் ஜீவகருடன் கூறப்

பட்டுள்ள காசியபர், இந்தக் காசியபஸம்ஹிதையின் ஆசிரியராகவே இருக்க வேண்டும். கசியபர் என்பதற்கு மாறாகக் காசியபர் எனக் குறிப்பிடப்பட்டிருக்க வேண்டும். அந்நூலில் கசியபர் பெயரில் குறிப்பிட்டுள்ள குளிகை மருந்து ஒன்று உள்ளது. நூலில் அக்குளிகையைப் பற்றி சுலோகங்களுக்கு முற்பட்ட பகுதி சிதைந்து போய் உள்ளதால் அந்தக் குளிகை எத்தகையது என்பது விளங்கவில்லை. காசியபஸம்ஹிதையில் அங்கங்கு குளிகைகளும் அவற்றின் பயன்களும் கூறப்பட்டுள்ளன. அவற்றில் ஏதேனும் ஒன்று தன் அனுபவத்தில் உள்ள துணை மருந்தைக் குறிப்பிட்டு அம்மருந்துடன் கொடுக்க வேண்டும் எனக் கூறப்பட்டிருக்க வேண்டும்.

முற்காலத்தைச்சார்ந்த ராவணனால் இயற்றப்பட்ட பால தந்திர நூலில் காசியப, விருத்த காசியபர்களின் பெயர்கள் கூறப்பட்டுள்ளன. இந்தக் கௌமாரபிருத்யத்தில் விருத்த காசியபருடன் ஆசார்ய கசியபராகக் கூறப்பட்டுள்ளவர் இந்தக் கௌமார பிருத்திய ஆசிரியராகவே இருக்கக் கூடும். ஜ்வரஸமுச்சயம் எனப் பெயர் கொண்ட பழைய காலத்து நூல் ஒன்று உள்ளது. அதில் ஜ்வரத்தைப் பற்றிய பொருள்களில் பண்டைய ரிஷிகளின் கூற்றுகள் குறிப்பிடப் பட்டுள்ளன. அந்தப் புத்தகத்தின் பனை ஓலை பிரதியில் உள்ள எழுத்துக்களின்படி எழுநூறு எண்ணூறு ஆண்டுகளுக்கு முன் எழுதப்பட்டதாகத் தெரிகிறது. மற்றொன்று நேபாள ஆண்டு 44ல் (கி.பி.974)ல் எழுதப்பட்ட பிரதி என்னிடம் உள்ளது. எழுத்துக் களைக் கொண்டு முற்காலத்ததாகத் தோன்றுவதால் நூல் அதற்கும் முற்பட்ட காலத்தில் இயற்றப்பட்டதாக வேண்டும். இந்நூல் கசியபரின் பெயரில் பல சுலோகங்கள் குறிப்பிடப்பட்டுள்ளன. இந்தச் சுலோகங்களுக்கும் காசியபஸம்ஹிதையில் உள்ள சுலோகங்களுக்கும் தொடர்பு உள்ளது. இதைப் பற்றிய மற்றொரு பகுதியில் விளக்கம் காணலாம். எனவே ஜ்வரஸமுச்சயம் எனும் நூலில் கூறப்பட்டுள்ள காசியபர் இந்த ஸம்ஹிதையை இயற்றிய கசியபரே என்பதில் ஐயம் இல்லை. அந்த நூலில் குறிப்பிட்டுள்ள சுலோகமும் இந்த ஸம்ஹிதையில் உள்ளதே.

இவ்வாறே ஸுசுருத ஸம்ஹிதை உரை அஷ்டாங்கஹ்ருதய உரை, சரகஸம்ஹிதைக்கு சக்ரபாணி இயற்றிய உரை ஆகியவற்றில் கசியபரின் பெயரில் வேறு இரண்டு மூன்று சுலோகங்கள் குறிப்பிடப்பட்டுள்ளன. இந்தக் காசியபஸம்ஹிதையின் பல

பகுதிகள் துண்டாகிப் போனமையால், அந்நூல்களில் உள்ள சுலோகங்கள் எவ்வாறு துண்டித்துப் போன பகுதியில் இருந்தவை யாகக் கூடும்.

'ப்யூஷதாரா' என்பதன் கர்ப்பாதான பிரகரணத்தில் 'கசியப ஸம்ஹிதையில் கூறப்பட்டுள்ளது என ஒரு சுலோகம் காணப் படுகிறது' அதன் கருத்தாவது பலா, அத்தி மரங்களைப் போலப் பன்னிரண்டு ஆண்டுகள் கடந்த பெண் 'அந்தப்புஷ்பா' (உள்ளடங்கி யுள்ள ருது ரத்தமுள்ளவள்) ஆவாள். ஆகையால் அத்தகைய கன்னிகையுடன் அறிவுள்ளவன் புணர்ச்சியில் ஈடுபடலாம் என்பதாகும்.

இந்தச் சுலோகம் சோதிட நூலில் காணப்படுவதால் காசியப ஸம்ஹிதை என்ற பெயரில் ஒரு சோதிட நூல் விளங்கி இருக்கக் கூடும்.

காசியபஸம்ஹிதையின் ஜாதிஸூத்ரீயாயாத்யாயத்தில் கூறப் பட்டுள்ள கர்ப்பதானத்தைச் சார்ந்த பகுதி துண்டாகிப் போய் இருப்பதால் ஒருவேளை இந்தச் சுலோகம் அவ்வாறு சிதைந்து போன பகுதியில் இருந்திருக்கக் கூடும். அந்நிலையில் 'ப்யூஷதாரா' எனும் நூலில் கூறப்பட்ட காசியபஸம்ஹிதை இந்நூலே ஆகும்.

## ஜீவகனைப் பற்றிய பொருள்கள் :

முன்குறிப்பிட்ட காசியபஸம்ஹிதையின் கல்பாத்யாயத்தில் கூறப்பட்டுள்ள பொருள்களின்படி கசியபரால் உபதேசம் செய்யப் பட்ட பெரும் தந்திரமாகிய இந்நூலைக் கனகல் எனும் இடத்தில் வசித்து வந்தவரான ருசீகமுனி குமாரரான விருத்த ஜீவகர் சுருக்கமாக ஒரே தந்திர நூலாக இயற்றியுள்ளார் எனத் தெரிகிறது.

மகாபாரதத்துவக்கத்தில் ஜாமதக்னய உபாக்யானத்தில் ருசீகர் எனும் ரிஷியின் பெயர் காணப்படுகிறது. அஸிரியன் நாட்டு பண்டைய வரலாற்றில் 'காலவ' முதலியவர்களின் பெயருடன் 'ருசீக' எனும் பெயர் காணப்படுகிறது. இந்த விருத்த ஜீவகரின் தந்தையாகிய ருசிகர் யார் என்பது பற்றி அறியத் தக்க சான்றுகள் எவையும் கிடைக்கவில்லை. புராண இதிகாசங்களிலோ அல்லது ஆத்ரேயர், ஸூசுருதர் முதலியவர்கள் இயற்றிய ஸம்ஹிதைகளிலோ விருத்த ஜீவக, ஜீவகர்களின் பெயர்கள் காணப்படவில்லை. ஆனால், நாவநீதகத்தில் கௌமாரபிருதயப் பிரகரணத்தில் கசியபரின்

பெயருடன் சர்தி (வாந்தி) உரோகாதம் (மார்பு தாக்கப்படுதல்) எனும் நோய்களுக்கான மருந்து முறைகளைக் கூறுமிடத்து ஜீவகர் கூறிய மருந்துமுறை குறிப்பிடப்பட்டுள்ளது. அதனால் சிறுவர்களுக்கான மருத்துவத்தில் காசியபருடன் விருத்த ஜீவகரும் ஒருவர் என்பது தெளிவாகிறது. இந்த விருத்த ஜீவக தந்திரத்தில் சந்திரோகப்பிரகரணத்தில் ஏடுகள் துண்டித்துப் போனதால் அந்த மருந்தின் விளக்கம் தெரிய வரவில்லை. மார்பு தாக்கப்படுதல் எனும் நோய்க்கான மருந்தைப் பற்றி சுலோகங்கள் இடையில் சிதைந்து போய் உள்ளன. ஆனால் மிகுந்துள்ள ஏட்டில் திப்பிலியுடன் கலந்து கொடுக்க வேண்டும் எனக் காணப்படுவதால் அத்தகைய மருந்து குறிப்பிடப்பட்டிருக்க வேண்டும் என்பது தெரிகிறது. அதனால் இந்த நூலில் கூறப்பட்டுள்ள மருந்தாக இருக்கும் என்ற ஒப்புமை காணப்படுகிறது. ஸுசுருதஸம்ஹிதையின் உத்தர தந்திரத்தில் 'சிறுவர்களுக்கான மருந்து முறைகள் விஸ்தாரமாகக் காணப்படுகிறது' எனப் பொதுவாக (வேறு நூல்களின் பொருள்களைப் பற்றிய குறிப்பு) காணப்படுகிறது. அதற்கான தம் உரையில் டல்ஹணர் 'பார்வதக ஜீவந்தகப் பிரப்ருதியில் (பார்வதக ஜீவந்தகர்கள் முதலானவர்களால்) எனக் குறிப்பிடப்பட்டுள்ளார். இவ்வாறு கௌமார பிருத்திய ஆச்சார்யர்களில் குறிப்பிடப் பட்டுள்ளவர் இந்த விருத்த ஜீவகராக இருக்கலாம் எனத் தோன்றுகிறது. 'சக்ரதந்த' எனும் மருத்துவ நூலிலும் ஜீவகரின் பெயருடன் 'ஸொரேச்வரக்ருதம்' எனும் மருந்து முறை கூறப்பட்டுள்ளது. வேறு உரை நூல்களிலும் சிறுவர்களுக்குப் பயன்படும் காச சுவாச நோயைத் தணிக்கும் மருந்துகள் ஜீவகரின் பெயருடன் குறிப்பிடப்பட்டுள்ளன.

இந்த விருத்த ஜீவகர் யார் என ஆராயும்போது புத்த பகவானது சம காலத்தில் 'மகாவக்க' எனப்படும் பாலி மொழியில் பௌத்த ஜாதகம் மற்றும் தீப்பதிய காதையில் 'குமாரபச்ச' எனும் அடைமொழியுடன் கூடிய ஜீவகன் எனும் புகழ்பெற்ற மருத்துவரின் வரலாறு கிடைத்தது.

'மகாவக்க' எனும் பௌத்த மத நூல் பாலி மொழியில் உள்ளது. அதன் எட்டாவது அத்தியாயத்தில் பின்வருமாறு ஒரு வரலாறு கூறப்பட்டுள்ளது.

ராஜகிருஹ (இன்றைய பாட்னா மண்டலத்தில் உள்ள ராஜகௌர்) சாலாவதி எனும் வேசி இருந்தாள். அவள் பெற்ற

மகவைப் பிறந்தவுடன் (அவள் அனுமதியுடன்) வேலைக்காரி முறத்தில் வைத்துக் கொண்டு சென்று வெளியே விட்டு விட்டாள். பிறகு அப்பகுதியை ஆண்ட அரசரின் குமாரன் அக்குழந்தையை எடுத்துச் சென்று தன் மாளிகையில் வேலைக்காரிகள் மூலம் வளர்த்து வந்தான் (உத்ருஷ்டோபி ஜீவதி) கைவிடப்பட்டும் பிழைத்திருக்கிறான் எனும் பொருள்பட அவனுக்கு 'ஜீவகன்' எனப் பெயராயிற்று. ராஜகுமாரனால் காப்பாற்றப்பட்டதால் குமாரபச்ச (குமாரபிருத்ய - குமாரபிருத) எனும் பெயர் ஆயிற்று. அதாவது குமாரனால் காப்பாற்றப்பட்டவன் எனப் பொருளாகும்.

நன்கு வளர்ந்த பிறகு ஜீவகன் (அக்காலத்தில் புகழ் பெற்று விளங்கிய பல்கலைக் கழகமாகிய) தக்ஷசீலையில் ஏழாண்டு காலம் புகழ் பெற்ற மருத்துவரிடம் கல்வி கற்றார். பயிற்சி முடித்தவுடன் ஆசிரியரிடம் விடை பெற்றுக் கொண்டு திரும்பி வரும் வழியில் ஸாகேதம் (அயோத்தி) அடைந்தார். அங்கு அரசரின் மனைவிக்கு மூக்கிலிடும் மருந்து (நஸிய) முறைகளில் சிகிச்சை செய்து குணப்படுத்தினார். அதனால் பெற்ற பொருளுடன் ராஜகிருஹம் வந்தடைந்தார். தாம் பெற்ற பொருளை அவர் தன்னைக் காத்த 'அபயன்' ராஜகுமாரனுக்கு வழங்க நினைத்தார். ஆனால் அரச குமாரன் அதை ஏற்றுக் கொள்ளாமல் மேலும் பல பரிசுகளைத் தந்து அரச மாளிகையிலேயே அன்னார் வசிக்கத் தனியாக விடுதியொன்று கட்டிக் கொடுத்துப் பாராட்டினார்.

பிறகு மகத நாட்டு மன்னன் பிம்பிசாரன் மகந்தரம் (பிஸ்டுலா) எனப்படும் நோயால் கடுமையான துன்பத்திற்கு ஆளான போது ஒரே மேல் பூச்சு மருந்தால் ஜீவகர் அந்நோயைப் போக்கினார். மன்னரும் மாதர்களணியும் நகைகள் 500 பரிசளித்துத் தம் மாளிகையில் உள்ள புத்தமத பிட்சுகளுக்கு மருத்துவம் செய்ய அனுமதி அளித்தான். பிறகு ஜீவகர்' ஏழாண்டுகளாகப் பெரும் வணிகர் ஒருவரின் மனைவி கடுந்தலைவலியுடன் துன்புற்றிருக்க அன்னாரது இல்லம் சென்று ஏதோ ஒரு மருந்தால் நினைவிழக்கச் செய்து மண்டை ஓட்டைப் பிளந்து உள்ளிருக்கும் இரண்டு கிருமிகளை நீக்கி மீண்டும் மண்டை ஓட்டைப் பொருத்திச் சிகிச்சை செய்து குணப்படுத்தினான். பரிசாக மிக்க பொருள் பெற்றான். பிறகு மன்னனது ஆணை பெற்றுக் காசிக்கு சென்றான். அங்கு கடும் 'ஆந்த்ரகிரந்தி' (TB of Intestinal Glands)) எனும் நோயால் துன்புற்ற வணிக குமாரனின் வயிற்றைக் கீறி சிகிச்சை செய்து நோயை அகற்றினான். வணிகரும் பெரும் செல்வம் அளித்துப்

பாராட்டினான். பிறகு மன்னது ஆணைப்படி உஜ்ஜயினி மன்னனான பிரத்யோதனன் என்பவனின் பாண்டு நோய்க்குச் சிகிச்சை புரியச் சென்றான். ஒருவகை நெய் மருந்தைச் செய்து அளித்த போது மன்னன் அதை உட்கொள்ள மறுத்தான். பிறகு அம்மருந்தைக் கஷாயமாகச் செய்து அளித்தான் ஜீவகன். மருந்து வாந்தியாக வெளிவந்து விட்டது. அப்பொழுது ஜீவகன் மன்னனுக்கு அஞ்சி முன்னதாகவே ஏற்பாடு செய்திருந்த யானை மீது ஏறி ராஜ கிருஹத்திற்கு வந்து விட்டான். ஆனால் வாந்தி எடுத்த பிறகு மன்னனது நோய் நீங்கிவிட்டது. அதனால் மகிழ்ந்து பிரத்யோதனன் சிபிதேசத்து மானின் தோல் ஒன்றைப் பரிசாக ஜீவகருக்குக் கொடுத்து அனுப்பினான். பிறகு ஆனந்ததாகதர் ஒன்றைப் பரிசாக ஜீவகருக்குக் கொடுத்து அனுப்பினான். பிறகு ஆனந்ததாகதர் குறிப்பிட்ட விரேசன மருந்து ஒன்றை அளித்து அன்னாரைக் குணப்படுத்தினார். பிரத்யோதனன் அளித்த மான் தோல், காசி மன்னன் அளித்த கம்பளம் முதலியவற்றைப் பிட்சுக்களின் உபயோகத்திற்காக ஜீவகன் ததாகதருக்கு அர்ப்பணித்தான்.

## திபேத் நாட்டின் காதைப்படி ஜீவகன் வரலாறு :

திபேத் நாட்டின் காதையின்படி பிம்பிஸார மன்னனால் புஜிஷ்யா என்பவன் தான் பெற்ற மகவை ஒரு கூடையில் வைத்து வெளியே எறிந்து விட்டாள். அந்தக் குழந்தையை ராஜகுமாரனாகிய அபயன் எடுத்து வளர்த்தான். அதனால் அக்குழந்தைக்குக் குமார பிருத்யன் எனும் பெயர் ஆயிற்று. அவன் ராஜகுமாரனின் ஆணையின்படி மருத்துவக் கல்வி கற்றுச் சிறப்பாக அறுவைச் சிகிச்சையில் தேர்ச்சி பெறத் தக்ஷசீலை சென்றான். ஆத்ரேயர் எனும் ஆசிரியர் மண்டையைப் பிளந்து சிகிச்சை செய்தல் முதலான முறைகளைக் கற்று நன்கு தேர்ந்து ஆசிரியரை விடத் திறமை மிக்கவனானான்.

கி.பி. 454இல் புத்த கோஷரால் இயற்றப் பெற்ற தம்மபத உரையில் 500 பிட்சுக்களுடன் புத்த பகவானுடன் ஜீவகன் தோன்றியவிரணத்திற்கு ஜீவகன் விருந்து உண்டதும், பகவானது பாதத்தில் தோன்றி விரணத்திற்கு ஜீவகன் சிகிச்சை செய்ததும் குறிப்பிடப்பட்டுள்ளன. மேலும் ஸதீகும்பஜாதகத்தில் [illegible]விச்ச ஜாதகத்தில் மற்றும் சுல்லஹம்ஸ ஜாதகத்தில் மேலும் சிலவற்றில் ஜீவகனுடைய பெயர் காணப்படுகிறது.

ஒரு சமயம் அம்பபாளி எனும் உத்யானவனத்தில் ஒரு விஹாரம் கட்டுவித்து ஆயிரத்து இருநூற்றைம்பது பேர் பிட்சுக்களுடன் புத்த பகவானை வரவேற்று உபசரித்தான். இந்த ஜீவகன் பிம்பிஸாரனின் மகனான அஜாதசத்ருவைப் புத்தபகவானின் தரிசனம் செய்யத் தூண்டினான். இவ்வாறு பல வரலாறுகள் ஜீவகனைப் பற்றியவை புத்த இலக்கியங்களில் காணக் கிடைக்கின்றன. 'ஸ்ரீ குப்தபரிகா'வில் ஒரு தூபியை ஜீவகன் கட்டுவித்தான். மேலும் இதைப் போன்ற பல வரலாறுகளை ஜாதகம் முதலான பௌத்த நூல்களில் காணலாம். இப்பொருளைப் பற்றிப் 'புத்தர்' எனும் (ஆங்கில மொழியில்) நூலில் (Eldenberg)எனும் எழுத்தாளர் மற்றும் கிரீந்த்ரநாத் என்பவர் (வேறு நூலிலும் ) பல செய்திகள் கூறியுள்ளார். ஜீவகன் தன் இல்லத்திற்கு அருகில் 'ஸ்ரீ குப்த பரிகா' எனும் பகுதியில் ஒரு தோட்டமும், மற்றும் புத்தருக்கு தந்துவ விளக்கம் தருவதற்காக (அமைந்திருக்க) ஒரு அரங்கும் (திண்ணை) போன்ற அமைப்பு கட்டுவித்தான். வீட்டின் முன்னால் சத்வரம் எனப்படும் அரங்கு, மரம் போன்றவற்றின் அடையாளங்கள் இன்றும் அவ்விடத்தில் காணப்படுகின்றன என வில் எனும் அறிஞர் கூறுகிறார்.

மேலே குறிப்பிட்ட விளக்கங்களால் ஜீவகன் எனும் மருத்துவ நிபுணர் புத்தருக்கும் மற்றும் பிம்பிசார மன்னனுக்கும் சம காலத்தில் விளங்கி வந்தது தெரியலாகும். அது இன்று முதல் 2500 ஆண்டுகளுக்கு முற்பட்ட (கி.மு.600ல்) நிகழ்ந்த வரலாறு ஆகும்.

பௌத்த நூல்களில் காணப்படும் ஜீவகன் மகத தேசத்தில் வாழ்ந்து வந்தவன். பிம்பிசாரனுக்கு 'புஜிஷ்யா' எனும் வேசியிடம் தோன்றியவன். வாலிபப் பருவத்தில் உள்ள மருத்துவன் எனக் கூறப்பட்டுள்ளது. சிறு வயதிற்குப் பிறகு 'தக்ஷசீலை' எனும் இடத்திற்குச் சென்று ஓராசிரியரிடம் மருத்துவம் கற்றான். பிறகு மகாவக்கத்தில் கூறியபடி பௌத்த பிட்சுகளுக்குச் சிகிச்சை புரிந்து வந்தான் என்பது தெளிவு.

திபேத் நாட்டுக் கதையின்படித் தூபியை நிறுவியவன் பிறகு ததாகதரின் மரபில் சேர்ந்தான் எனத் தெரிகிறது. 'மஜ்ஜம்நிரேயம்' என்பதன்படி புத்தரைச் சரணடைந்து உபாஸனை செய்து வந்ததாகத் தெரிய வருகிறது. ஆனால் காசியபஸம்ஹிதையின்படி இந்த நூலாசிரியர் 'கனகல்' எனும் இடத்தில் வசித்து வந்தவர், ருசீகரின் மைந்தர், ஐந்தாண்டுகள் வயதான நிலையிலும் நரையும் தோல்

சுருக்கமும் கொண்டு முதியவரைப் போல காணப்பட்டவர், வேதவேதங்களில் திறமைமிக்கவர், மற்றும் நாள்தோறும் வைதிகமுறைப்படி வேள்வி புரிபவரான கசியபரின் சீடர்,வேத நெறியைப் பின்பற்றுபவர் எனத் தெரிய வருகிறது. புத்தரின் காலத்தில் விளங்கிய ஜீவகரின் வரலாற்றின்படி அன்னார் ராஜ கிருஹத்தில் வசித்து வந்த 'சேட்' (வணிகர்) ஒருவரின் கபாலத்தைப் பிளந்து வாரணாசியில் ஒரு வணிகரின் குடலைக் கீறியும் சிகிச்சை புரிந்ததாகத் தெரிய வருவதால் அவர் அறுவைச் சிகிச்சையில் நிபுணர் என்பது தெளிவு. சிறுவர்களுக்கான மருத்துவம் அறிந்தவர் என்பதற்குக் குறிப்பேதும் காணப்படவில்லை. அறுவைச்சிகிச்சை யில் நிபுணர் என்பதால் ஏனைய சிகிச்சை முறைகளை அறியாதவர் என்பது என் கருத்தல்ல. ஸுசுருதர் அறுவைச்சிகிச்சையை போல ஏனைய சிகிச்சை முறைகளை அறிந்தவரே ஆயிலும், அறுவைச் சிகிச்சையில்தாம் அவர் புகழ் பெற்று விளங்கினார் எனத் தெளிவாகிறது. அதைப்போலவே சிறுவர்களின் மருத்துவத்திலும் நிபுணர் எனப் பெயர் பெற்றவர் என்பதற்குத் தக்க சான்றுகள் அவசியமாகும். ஆனால் அவ்வாறு ஏதும் கிடைக்கவில்லை. ஆனால், இந்நூலாசிரியர் துவக்கத்திலிருந்து சிறுவர்களுக்கான சிகிச்சையில் புகழ்பெற்று விளங்கினார் எனத் தெரிய வருகிறது.

புத்தர் காலத்தில் கசியப ஜீவகர்கள் விளங்கினர் எனத் தெரிய வருவதால் இந்த நூலில் குறிப்பிடப்பட்டுள்ள கசியபர் ஜீவகரின் சம காலத்தவர் என நினைக்கக்கூடாது. ஏனெனில் காசியபர் மூவரில் மூத்தவர் எனவும், சம்பிரதாய பரம்பரையைச் சேர்ந்தவர், வேள்வி புரிந்தவர் ஆவார்.

மகாவக்கத்தில் அவரைப்பற்றிய செய்தி காணப்படுகிறது. அதன்படி 'உருபில்வம்' எனும் கிராமத்தில் புத்தர் அன்னாருக்குத் தீக்ஷை கொடுத்தார் எனவும், அதைக்கண்டு பிம்பிஸாரனும் பௌத்த தீக்ஷை பெற்றதாகவும் கூறப்பட்டுள்ளது. ஆனால், அவர் மருத்துவர் எனவோ, கௌமாரபிருத்திய ஆசிரியர் எனவோ மரிசி மைந்தர் எனவே கூறப்படவில்லை. பௌத்த நூல்களில் கூறப் பட்டுள்ள ஜீவகன் தக்ஷசீலைக்குச் சென்று அங்கு விளங்கிய ஆத்ரேயரிடம் மருத்துவம் கற்றதாகக் கூறப்படவில்லை. இவ்வாறு பௌத்த காசியபருக்கும் கசியபருக்கும் பல வேற்றுமைகள் காணப்படுகின்றன. அதனால் பெயரில் மட்டும் உள்ள ஒற்றுமையைக் கொண்டு ஜீவகனைப் பற்றி எதுவும் முடிவாகக் கூற யலாமல் உள்ளது.

மேலும் புத்தருக்குச் சமகாலத்தவனான ஜீவகன் குமாரனால் குலத்தில் தோன்றியவர் ஆதலால் காப்பாற்றப்பட்டதால் பாலி மொழியின்படி 'குமாரபச்ச' எனப்பட்டதாலும், இந்நூலாசிரியர் குமாரர்களுக்கான மருத்துவத்தில் நிபுணரானதாலும் கௌமார பிருத்தியார் எனப்படுவதாலும் இருவரும் ஒருவரே என்பதும் பொருந்தாது. ஏன் எனில் தொன்மையான காலத்திலிருந்தே ஆயுர்வேதத்தில் 'கௌமாரபிருத்யம்'' எனும் பிரிவு எண் வகையில் ஒன்றாக இப்பொருட்கள் வழங்கப்பட்டு வந்துள்ளது. இந்நூலில் 'கௌமாரபிருத்யமஷ்டானாம் தந்திராணாம் ஆத்யமுச்யதே' (எண்வகையான பிரிவில் கௌமாரபிருத்யம் என்பது முன் காலத்திலிருந்து விளங்கி வந்துள்ளது) எனக்கூறப்பட்டுள்ளதாலும் 'கௌமார பிருத்யமதிவர்தனமைமததக்தம்' என்றும், காசியப ஸம்ஹிதாயாம் கௌமார பிருத்யே' என்றும் கௌமாரபிருத் யாஸ்த்வபரே ஜங்கமஸ்தாவராச்ரயாத், த்வியோனின் புருவதேதூ பம் கசியபஸ்யமதேஸ்திதா:' என்றும் வேறு பலருக்கும் கௌமார பிருத்யம் (சிறுவர்களுக்கான மருத்துவர்) எனப் பெயர் கூறப் பட்டுள்ளதாலும் இந்த நூலாசிரியரும், மேலும் பலரும் கௌமார பிருத்யம் ஆவார் என்பது தெளிவாகிறது. இதற்கு மாறாகப் புத்தர் காலத்து ஜீவகன் பௌத்த நூல்களில் குமாரன் அபயனால் பாதுகாக்கப்பட்டு மருத்துவம் கற்பதற்கு முன்னதாகவே குமார பிருத்யர் எனும் அடைமொழியுடன் கூறப்பட்டுள்ளதால் அன்னாருக்கு இப்பெயர் சிறுவர்களுக்கான மருத்துவத்தை அறிந்த தால் ஏற்பட்டதல்ல என்பது தெரிய வருகிறது. பாலர்களுக்கான சிகிச்சை முறைகளை அறிந்தவர் எனும் குறிப்பும் காணப்பட வில்லை. குமாரனால் காப்பாற்றப்பட்ட அன்னாருடைய பெயரைக் கொண்டு கௌமார பிருத்யம் என இந்நூலுக்குப் பெயராயிற்று எனவும் நினைக்க இடமில்லை. ஏனெனில் இதற்கு முற்பட்ட ஸுசுருதம், நாவநீதகம் முதலான நூல்களிலும் கௌமாரபிருத்யம் எனும் பெயர் காணப்படுகிறது. இந்நூலாசிரியர் பௌத்த மதத்தைச் சார்ந்தவர் எனக் கருதத் தக்க குறிப்பு ஏதும் இந்நூலில் காணப்படவில்லை. பௌத்தமதப் புலவர்களது சொல் அல்லது நூல்களால் தம் உள்ளம் கவர்ந்துள்ளதெனக் குறிப்பிடும் சொல் ஏதும் இந்நூலில் காணப்படவில்லை. எனவே, இந் நூலாசிரியர் ஆகிய விருத்தஜீவகருக்கும், பௌத்தமரபைச் சார்ந்த ஜீவகருக்கும் பல வேற்றுமைகள் காணக்கிடக்கின்றன. ஜைனர் களின் நூலில் காணப்படும் 'மத்ஸர்ப்பிணி' 'அவஸர்ப்பிணி எனும்

சொற்கள் இதில் காணப்படுகின்றன. ஜைனர்களின் இதிகாசத்திலும் ஜீவகன் எனப்படும் புகழ் பெற்ற நபரின் பெயர் காணப்படுகிறது. அன்னாருக்கு சுருதந்தர் ராஜகுமார், ஜீவந்தர், ஜீவஸ்வாமி எனும் பெயர்களும் இருந்துள்ளன எனத் தெரிய வருகிறது. மகாபுராணம், ஜீவந்தர சரித்திரம், கத்யசிந்தாமணி எனும் ஜைனர்களின் வேறு நூல்களிலும் அன்னாரைப் பற்றிய வருணனைகள் காணப்படுகின்றன. இவர் தம் தந்தையின் மாளிகையை விட்டு வெளியேறித் தம் புயபலத்தால் பகைவர்களை அழித்து அரச பதவியைப் பெற்றதாகவும்,ஜைனமரபைப் பின்பற்றி யதாகவும் அந்நூல்களால் தெரிய வருகிறது. தன்னிடம் உதவி பெற்ற கந்தர்வன் ஒருவன் மூலம் பெற்ற ஒரு மந்திரத்தின் வலிமையில் தாம் தொட்ட மாத்திரத்தில் நஞ்சு அகலும் வித்தை ஒன்று கற்றதாகவும் தெரிகிறது. ஆனால் அவர் மருத்துவம் கற்றதாகவோ சிறுவர்களுக்கான சிகிச்சை முறைகளில் நிபுணர் என்றோ கூறப்படவில்லை.

இந்த விருத்த ஜீவகதந்திரத்தில் வைதிகமரபைச் சார்ந்த குறிப்புகள் பல காணப்படுகின்றன. ஆகவே, இந்நூலாசிரியர் பௌத்த நூல்களிலும் மற்றும் ஜைன மரபைச் சார்ந்த நூல்களிலும் குறிப்பிடப்பட்டுள்ள ஜீவகரை விட வேறு பட்டவர் என்பதும் முன்காலத்தில் விளங்கிய ருசீகர் என்பவருடைய மைந்தர் என்பதும் தெளிவாகிறது.

## வாத்ஸ்ய நிரூபணம்:

இந்நூலின் கல்பாத்யாயத்தில் கூறப்பட்டிருப்பதன்படி விருத்த காசியபரால் இயற்றப்பட்டுக் கால வெள்ளத்தில் மறைந்துபோன இந்த ஸம்ஹிதையை 'அனாயாசர்' எனும் இயக்கரின் வாயினால் அறிந்து ஜீவகரின் மரபைச் சார்ந்தவரும், வேதவேதங்களைக் கற்றவரும் சிவகசியபரின் பக்தரும் ஆன 'வாத்யஸ்யர்' என்பவரால் மீண்டும் சீர்திருத்தப்பட்டு வெளிப்படுத்தப்பட்டதாகத் தெரிய வருகிறது. இக்கூற்றால் இந்த'வாத்ஸ்யர்' யார்? எக்காலத்தவர் எனும் வினாக்கள் எழுகின்றன.

## இதற்கான விடை பின்வருமாறு :

**வத்ஸகோத்திரத்தில் பிறந்தவன், வாத்ஸ்யன் எனப்படுவான். அதனால் வாத்ஸ்ய என்பது குலப்பெயரே அன்றித் தனிப்பெயர்**

அல்ல. ஜீவகன் 'பார்கவன்' எனக் குறிப்பு காணப்படுவதால், வத்ஸர் பிருகுவின் குலத் தோன்றல் ஆதலால் (பார்கவர் என்பது வத்ஸ குலப்பெயராகும் என்பதால்) ஜீவக வம்சத்தில் தோன்றிய இந்நூலைச் சீர்படுத்தியவர், 'வாத்ஸ்யர்' ஆவது பொருத்தமானதே. வம்ச பிராம்மணத்திலும் 'வாத்ஸ்யாத்வாத்ஸ்யே' எனக் காணப் படுகிறது.

இந்நூலைச் சீர்படுத்திய வாத்ஸயரின் (வத்ஸவமிசத்தில் தோன்றியவன்) உண்மையான தனிப்பெயர் என்ன? அன்னார் ஜீவகர் எத்தனையாவது தலைமுறையைச் சேர்ந்தவர் என்பன போன்ற வினாக்களுக்கு விடைகாண வழி ஏதும் இல்லை. அனாயாஸர் எனும் இயக்கரை மகிழ்வித்து அதன் மூலம் இந்நூலை உபதேசம் பெற்றதாகக் குறிப்பு காணப்படுவதால் இந்நூலைச் சீர்திருத்தியவர், இயக்கசாதியினர் கல்வியில் சிறந்து விளங்கிய காலத்தவர் எனக் கூறலாம். இயக்கர் குலம் தொன்றுதொட்டுக் கல்வியில் சிறந்து விளங்கி வந்ததாகும். நம் நாட்டினருக்கு இயக்க சாதியினருடன் நெருங்கிய தொடர்பு தொன்று தொட்டு விளங்கி வந்துள்ளதும் உண்மையே.

இயக்கர்களின் சம்பிரதாயம் பௌத்ததருமத்திற்கு முற்பட்டது எனக் கூறிக் குமாரசுவாமி என்பவர் இயக்கர்களைப் பற்றி நன்கு ஆராய்ந்து பல வரலாற்று உண்மையைத் தெளிவுபடுத்தியுள்ளார். பிற்காலத்தில் இந்த சம்பிரதாயம் பௌத்த மற்றும் ஜைன மரபுகளில் சேர்ந்துவிட்டது. பண்டைய பௌத்த மற்றும் ஜைன மரபினைச் சேர்ந்த நூல்களில் இயக்கர்களைப் பற்றிய பல குறிப்புகள் காணக்கிடைக்கின்றன. புத்தர் காலத்திலும் நம் நாட்டில் இயக்கர்களை வழிபடுதல் விளங்கி வந்துள்ளது. நம்நாட்டில் இங்கும் அங்குமாக இயக்கர்களின் சிற்பங்கள் காணப்படுகின்றன. நம் நாட்டில் மட்டுமல்லாது நம் நாட்டு எல்லைப்புறங்களில் உள்ள ரமடம், ஜாகுடம், பாஹ்லீகம், போன்ற நாடுகளிலும் தொன்று தொட்டு இயக்கர்களை வழிபடுதல் வழங்கி வந்துள்ளதென்பதற்குச் சான்றுகள் உள்ளன. தாம் உயிரோடிருக்கும் காலத்தில் எத்தகைய சிறப்பு வாய்ந்திருந்தவராயினும் தெய்வமாக வழிபாடு பெறுதல் ஏற்படாது. உடல் வலிமை, கல்விச் சிறப்பு, செயலாற்றல் முதலிய சிறப்புகள் கொண்டு விளங்கிய ஜாதி எதுவாயினும் சிறிது காலம் கடந்த பிறகே தெய்வமாக வழிபாட்டுக்கு உரியதாகும். வாத்ஸ்யர் மறைந்துபோன இந்த ஸம்ஹிதையை எந்த இயக்கரிடம் பெற்றாரோ அந்த அனாயாசர் எனும் இயக்கரைப் பற்றி ஆராய்ந்தபோது

'ஓரிடத்தில் அன்னாரின் பெயர் கிடைத்தது. 'பஞ்சரக்ஷ' எனும் பௌத்தமரபைச் சார்ந்த நூல் ஒன்று இன்று கிடைத்துள்ளது. அதற்குச் சீன மொழியில் பல மொழி பெயர்ப்புகள் உள்ளன. அவற்றில் கி.பி. 317 முதல் 322க்கு இடையில் மத்திய ஆசியா வாசியான் குசபிக்ஷா போ பிந்மீ என்பவர் செய்த மொழிபெயர்ப்பு நூலும் ஒன்றாகும். பாரத நாட்டு நூலாகிய இதற்கு இத்தனை தொலைவில் அந்தக் காலத்தில் மொழிபெயர்ப்பு செய்யப்பட்டது என்றால் அது எழுதப்பெற்ற காலத்திற்கும் பல நாட்கள் முன்பே அந்நூலின் சிறப்பு அந்தப் பகுதியில் பரவி இருக்க வேண்டும். அந்நூலில் ஏறக்குறைய இருநூறு இயக்கர்களை பற்றிய குறிப்பு காணப்படுகிறது. வேறு வேறு நாடுகளுக்குக் காவலர்களாக வைசிரவணன் (குபேரன், முதலான இயக்கத் தலைவர்களை வழிபடும் முறைகள், அவ்வழிபாடுகளால் வாத - பித்த - கபங்களால் தோன்றும் நோய்கள் நீங்குதல், மருத்துவச் செய்திகள், கருவில் உள்ள குழந்தைகளின் நோய்கள், சிறுவர்களைத் துன்புறுத்தும் கிரகங்களை வழிபடும் முறைகள் போன்றவையும் விளக்கம் பெற்றுள்ளது. அந்த நூலில் மகாமாயூரிவித்யா' எனும் பிரகரணத்தில் 'ரமடம்' எனும் தேசத்துக் காவலனாக ராவணன் விளங்கியதாகக் குறிப்பு காணப்படுகிறது. மந்திரிக்கும் முறையால் சிறுவர்களின் நோய்களைத் தீர்க்கும் முறையை விளக்கும் 'ராவணதந்திரம்' எனும் நூலும் கிடைத்துள்ளது. பஞ்சரக்ஷாவில் மகாமாயூரீ வித்தையைச் சார்ந்த பிரகரணத்தில் இந்திந்த காடுகளுக்குக் காவலரான இயக்கர்கள் இவர் இவர் எனக் குறிப்பிடும் பகுதியில் 'கௌசாம்ப்யாம் சாப்யனாயாயோ பத்ரிகாயாஞ்சபத்ரிக: எனக் கௌசாம்பி (இன்று இலாஹாபாத் அருகில் உள்ள கோஸம்) நாட்டுக்கு அனாயாஸர் காவலர் எனும் கூற்று காணப்படுகிறது. புத்தர் காலத்திலும் கௌசாம்பி புகழோங்கி இருந்தது. இவ்வாறு போற்றுதற்கு உரியவராகக் குறிப்பிடப் பட்டுள்ள அனாயஸர் அக்காலத்திற்கும் முற்பட்டவராக வேண்டும். புத்தர் காலத்திலும் போற்றத்தக்கவராகக் குறிப்பிடப் பட்டுள்ளது. இயக்கரை அனாயாசரிடம் இந்த தந்திரம் வாத்ஸயரால் பெறப்பட்டதாகக் கூறப்பட்டுள்ளதால் வாத்ஸ யருடன் புத்தர் காலத்திற்கு முற்பட்டவராகவேண்டும். ஒரு முற்காலப்புத்தகத்தில் மஹாமாயூரி வித்தையைபற்றிய விளக்கத்துடன் இறுதியில் ஆர்யமகாவித்யா விநஷ்பா யக்ஷமுகாத் பிரதியப்தா சிறப்பான இந்த மகாமாயூரி வித்தை மறைந்துபோனது

மீண்டும் இயக்கரால் பெறப்பட்டது எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. இதனால் வித்தைகள் இயக்கர்களால் மரபுப்படி உபதேசத்தால் பெறப்படுகிறது என்பது தெளிவாகிறது. ஆகவே அனாயாசர் எனும் இயக்கர் மூலமாகவும் இந்த வித்தை கிடைத்திருக்கக் கூடும். மேலும் ஆத்ரேய கார்கியர், கௌனகர் போன்ற ரிஷிகளை விட வாத்ஸ்யர் முற்பட்டவர் எனத் தெரிகிறது. வேதவேதங்களில் புலமை பெற்றவராகவும், சிவகசியபரின் பக்தராகவும் குறிப்பிடப் பட்டுள்ளதால் இந்த வாத்ஸ்யர் வேத மரபைப் பின்பற்றியவர் என்பது தெளிவாகிறது.

இந்த விருத்த ஜீவக தந்திரத்தில் சாரீரிக ஸ்தானத்தில் காலத்தைப் பற்றிய விளக்கத்தில் ஆதியுகம், தேவயுகம், கிருகயுகம் எனப்பாகுபடுத்தப்பட்ட இம்மூன்று காலங்கள் உயர்ந்தவை, சுபம் விளைவிப்பன என 'உத்ஸர்ப்பிணி' எனும் சொல்லால் பாகு படுத்தப்பட்டுள்ளன. த்ரேதா, துவாபர, கலியுகங்கள் என மூன்றாகப் பாகுபடுத்தப்பட்டுள்ள காலம் அவஸர்ப்பிணி எனத் தாழ்ந்து கொண்டே செல்லும் அசுபகாலமாகவும், உடல்வலிமை நாளுக்கு நாள் குன்றிக் கொண்டே வரும் என்றும் குறிப்பிடப் பட்டுள்ளது. இவ்வாறு குறைந்து கொண்டே செல்லும் உடல்கள் நாராயண முதலான சொற்களாலும், ஆயுளின் அளவு 'பலிதோபமம் எனும் சொல்லாலும் குறிப்பிடப்பட்டுள்ளன. இந்தப் பொருளில் இந்நூலில் இவ்வாறு குறிப்பிடப்பட்டுள்ள யுக, வேறுபாடுகள் எங்கும் கேட்டதில்லை (வேறு நூல்களில்) எங்கும் கண்டதில்லை. அற்புதமான உடல்நிலை, விசித்திர கர்ப்பநிலை, விகாசவாதம், அவனதிவாதம் ஆகியவை எந்தக் கொள்கைப்படி முடிவு செய்யப் பட்டுள்ளன என்பது ஆராயத் தக்கது (இந்த முழு விளக்கத்துடன் ஒப்புமை காணப்படாவிட்டாலும் சரக ஸம்ஹிதையின் விமானஸ்தானத்தில் மூன்றாம் அத்தியாயத்தில் கிருதயுகம் முதலிய கால வேறுபாடுகள் உட்பிரிவுகளுடன் (அந்தந்தக் காலத்து மனிதர்களின்) ஆயுளின் அளவுகள் குறைந்து உரையாசிரியர் சக்ரபாணி முறையே தொன்மையான காலத்தின் சிறப்பும் வரும் காலங்களில் மனிதர் நிலை தாழ்ந்து போவதையும் வியாசரின் கூற்றை எடுத்துக்காட்டி விளக்கியுள்ளார். இவ்வாறு உயர்ந்த தாழ்ந்த கால வேறுபாடுகள் ஸ்மிருதிகளிலும் கூறப்பட்டுள்ளன. 'என்ஸிக்ளொபீடியா ஆப்ரிலிஜியன் அண்ட் சையன்ஸ், முதற்பகுதி 202ம் பக்கத்தில் புராணங்களில் கூறப்பட்டுள்ள இப்பொருளைப் பற்றிய குறிப்புகள் விளக்கப்பட்டுள்ளன.

மகாபுராணம், கர்மபிரகிருதி, ஜீவஸமாஸ விருத்தி போன்ற ஜைனமரபினைச் சார்ந்த நூல்களில் உத்ஸர்பிணி, அவஸர்ப்பிணி எனக் கால வேறுபாடுகள், 'வஜ்ர' முதலான உடலைச் சார்ந்த வேறுபாடுகள், பல்யோபம் முதலான ஆயுளின் அளவுகள் கூறப் பட்டுள்ளன. ஆயினும் அங்கு வஜ்ர, ரிஷப நாராச முதலான ஆறுவகை உடல் உறுப்புகளும் ஆயுளின் அளவைப் பற்றி பல்யோபமம், ஸாகரோமம் எனும் சொற்களும் பயன்படுத்தப்பட்டுள்ளன. இந்தவிருத்த ஜீவகிய தந்திரத்தில் நாராயண, அர்த நாராயண, கௌசிக, பிரக்ஜப்திபிசித என உடல் அமைப்புகளும் ஆயுளின் அளவு பலிதோபம் எனவும் குறிப்பிடப்பட்டுள்ளதால் இவ்விரு வகைக்கூற்றுகளிலும் ஓரளவு ஒப்புமையே காணப்படுவதால் முழுமையாக ஒற்றுமை காணப்படவில்லை. வேத நெறிக்கு மாறு பட்ட நூல்களைப் போல வேதநெறியைச் சார்ந்த நூல்கள் பலவும் கால வெள்ளத்தில் மறைந்து போயின. ஒரு மரபைச் சார்ந்த தனி சிறப்பான பொருள் தரும் சொல்லைப் பிற்காலத்தில் வேறு மரபைச் சார்ந்தவர்கள் தம் நூல்களில் சேர்த்துக் கொண்டாலும், மரபைச் சேர்ந்த நூல்கள் மறைந்து போனாலும் கூடப் பிறபட்ட மரபில் சேர்த்துக் கொள்ளப்பட்ட சொல் பொருள் அப்படியே கொள்ளப் படுகிறது. நன்கு ஆராய்ந்தபோது, இந்த ஒரு சிறுவிஷயம் தவிர வேறு ஜைன பௌத்த மரபுகளைச் சார்ந்த அல்லது வேறு மரபைச் சார்ந்த பொருள் ஏதும் இந்நூலில் காணப்படவில்லை. எந்த அத்தியாயத்தில் உத்ஸர்பிணி, அவஸர்பிணி எனும் சொற்கள் கூறப்பட்டுள்ளனவோ, அந்த அத்தியாயத்தில் அடுத்து வரும் சொற்றொடர்களில் உலகப் படைப்பினை விளக்கும்போது அவ்யக்தம், மகத் முதலான சொற்களால் சாங்கிய பிரிவின்படி உலகப் படைப்பு விளக்கப்பட்டுள்ளது. பிறகு கூர்ப்பாவக்ராந்தி அத்தியாயத்தில் வேதநெறியைச் சார்ந்த மரபுகளின்படி இறைவனின் குணங்களுடன் கூடிய எங்கும் பரவியுள்ள சிவனது தன்மைகள் கூறப்பட்டுள்ளன. ஆதலால் இந்த உன்னத (உயர்ந்த) அவந்த (தாழ்ந்த) சுப, அசுபங்களெனும் கால வேறுபாடுகள், உடலின் அமைப்பு ஆயுள் அளவு போன்றவற்றின் விளக்கமும் தொன்மையான வேத நெறிப்படி ஸ்மிருதிகளின் வழியைப் பின்பற்றிய தாகும் எனத் தெளிவாகிறது. ஆயினும் உத்ஸர்ப்பிணி, அவஸர்ப்பிணி எனும் சொற்கள் வேதம் ஸ்மிருதி முதலிய நூல்களில் எங்கும் காணப்படாமையால் ஜைனமரபினைச் சார்ந்த நூல்களில்

வெகுவாகக் கையாளப் பட்டிருப்பதால், பெயரிலும் எண்ணிக் கையிலும் சிறிது மாறுபாடு காணப்பட்டாலும் ஸம்ஹனனம் போன்றவற்றின் விளக்கமும் ஜைன நூல்களிலேயே காணப் படுவதால் இந்த ஸம்ஹிதையில் இந்த ஒரு விஷயத்தில் ஜைன மரபின் சாயல் காணப்படுகிறது. இங்கு குறிப்பிடப் பட்டுள்ள அளவில் குறிப்பான பலிதோபமம் என்ற சொல் ஜைன நூல்களில் உள்ள பல்யோபமம் எனும் சொல்லின் சிதைந்த உருவம் என்பது தெளிவாகிறது. சைன்ட் பீடர்ஸ்பர்கின் பெரிய நிகண்டு ஜைகாபியின் என்ஸிக்ளைபீடியா ஆப்ரிலிஜியன் அண்ட் எதிக்ஸ் முதற்பகுதி 202ம் பக்கத்தில் இந்தச் சொற்கள் ஜைனமரபைச் சார்ந்தவையாகவே குறிப்பிடப்பட்டுள்ளன, அபிதானராஜேந்திரம் எனும் பெயர் கொண்ட பெரிய ஜைனமத நிகண்டுவிலும் இச் சொற்களின் பொருள் ஜைனமரபின்படி விளக்கப்பட்டுள்ளது. திருமதி ஸ்டீரோவன்ஸனும் 'திஹார்ட் ஆப் ஜைனிஸம்' எனும் நூலின் 272-276 பக்கங்களில் ஜைனமரபினை ஒட்டி உத்ஸர்பிணி அபஸர்பிணி எனும் சொற்களுக்குக் காலத்தை சார்ந்த பொருள் கூறி இருக்கிறார். ஹார்ட் எனும் அறிஞரும் பௌத்த மரபைச் சார்ந்த தம் கட்டுரையில் இந்தப் பொருளை விளக்கியுள்ளார்.

ஜைன மரபிற்கு மகாவீரரும் புத்த மரபிற்குக் கௌதமபுத்தரும் சிறப்பான குருமார்களாகப் புகழ் பெற்றாலும், அவர்களது நூல்களில் மகாவீரருக்கு முற்பட்ட காலத்தில் விளக்கிய பார்சவநாதர் முதலான தீர்த்தங்கரர்களின், மற்றும் புத்தருக்கு முற்பட்ட கனகமுனி முதலியவர்களின் குறிப்பு காணப்படுவதால் அசோகரால் கௌதமபுத்தருக்கு முற்பட்ட கனகமுனி ஸ்துபியின் சிதைவுகளில் காணப்படும் கல்வெட்டுகளில் உள்ள செய்திகளால் முன்காலத்தில் இம்மரபுகள் இதே முறையில் அல்லது ஓரளவு மாறுபட்ட நிலையில் விளங்கி வந்தமை தெளிவாகிறது. ஜைனமரபு மகாவீரராலும் புத்த மரபு புத்தராலும் துவங்கப்பட்டதென்ற போருள் பற்றிய விளக்கங்கள் இன்றும் அரைகுறையாகவே உள்ளன. தொன்மையான காலத்திலும் வேதநெறிக்கு மாறுபட்ட கொள்கையைப் பின் பற்றியவர்கள் இருந்துள்ளனர் என்பது 'தீக்தநிகாயம்' எனும் நூலினால் தெளிவாகிறது. உபநிஷத்துக்களின் காலத்திலும்அவற்றின் கொள் கைக்கு மாறுபட்ட கருத்துகள் மறுப்புகள் இருந்தன என்பது தெளிவு.அஸ்தி நாஸ்தி திஷ்டம் மதி (4.4.60) எனும் சூத்திரத்தில் பாணினியும் வேதமரபைச் சார்ந்ததும் வேத நெறிக்கு முரணானதும் ஆன இரண்டு மரபுகள் விளங்கி வந்துள்ளதைக் குறிப்பிட்டுள்ளார்.

ஜைனமதநூல்களின்படி பார்ச்வநாதர் முதலான தொன்மை குருக்களிடையே அவர்கள் விளங்கிய இடைக்காலங்கள் நீண்டவையாகத் தெரியவருவதால் பல்யோபமம், ஸாகரோபமம் ஆகியவற்றைச் சார்ந்த எண்ணிக்கையும் தெரியாதாகையால் ஆர்ஹதரபின் மிகத் தொன்மையான பரம்பரையை காணும்போது உபஸர்ப்பிணி போன்ற சொற்கள் ஆர்ஹதங்களானாலும் மகாவீரருக்கு முற்பட்ட காலத்திலிருந்தே வழக்கத்தில் இருந்திருக்க வேண்டும். அல்லது இன்று கிடைத்துள்ள வேதநெறியைச் சார்ந்த நூல்களில் காணப்படாவிடினும் மறைந்துபோன நூல்களில் கூறப்பட்டிருக்க வேண்டும். மகாவீரருக்கு முன்பே இச்சொற்கள் இந்நூலில் கையாளப்பட்டிருப்பதால் இந்நூல் பிற்காலத்தில் தோன்றியதெனக் கருதலாகாது.

ரேவதீகல்பாத்யாயத்தில் மாதங்கீவித்தையில் பிராகிருதத்தைச் சார்ந்த சாபரசொல்லால் ஆன கேயூர எனும் சொல்லுடன் கூடிய மந்திரம் குறிப்பிடப்பட்டுள்ளது. மாதங்கியைப் பற்றிய குறிப்பு தக்ஷிணாம்னாய ஸம்பிரதாயப்படி பௌத்த ஸம்பிரதாயத்திலும் காணப்படுகிறது. இதை மட்டும் கொண்டு இது பௌத்த மரபைச் சார்ந்த வித்தை எனக் கூறக்கூடாது. இந்த ரேவதீகல்பாத்யாயத்திலேயே இந்த வித்தையின் துவக்கத்தின் தோற்றம் வைதிக மரபைச் சார்ந்த வேள்வியைக் குறிப்பிட்டு 'மாதங்கீநாமவித்யா பிரும்ஹர்ஷி தாஜர்ஷினா ஸித்த சாரண பூஜிதார்ச்சிதா மதங்கேன மஹர்ஷிணா கச்யப புத்ரேண கன்யஸா தபஸோக்ரேண பிதாமஹா தேவா ஸாதிதா' என மிகத் தெளிவாக இது வைதிக மரபில் தோன்றியது என்பது கூறப்பட்டுள்ளது. அதன் முறையும் வைதிக மரபின்படியே விளக்கப்பட்டுள்ளது. பிற்காலத்தில் இந்த வித்தை புத்த மரபைச் சார்ந்த நூல்களில் இணைக்கப்பட்டிருக்கக்கூடும். இந்த வித்தை தொன்மையான வைதிக மரபிலும் விளங்கி வந்துள்ளது. எனவே இந்த மந்திரத்தில் வந்துள்ள மாதங்கி எனும் சொல்லைக் கொண்டு இது புத்த மரபைச் சார்ந்த மந்திரம் எனக் கருத இடம் இல்லை. ஷ்டாயின் எனும் பெயர் கொண்ட அறிஞரால் சீனத்து வடமேற்கு பகுதியைச் சார்ந்த 'துங்க்ஷாங்க' எனும் பகுதியில் கண்டெடுக்கப்பட்ட பண்டைய நூலில் உள்ளபடி புத்தபகவான் ஜீவகனுக்குச் செய்த உபதேசத்தில் பாபரகையெழுத்தைச் – சார்ந்த நாவநீதகத்துடன் கூடிய நூலில், பஞ்சரக்ஷா முதலான நூல்களிலும் பிராக்ருத மொழிச் சொற்களுடன் கூடிய மந்திரங்கள்

உள்ளன. அதனால் மந்திரங்களில் பிராக்ருத மொழிச் சொற்கள் காணப் படுவதால் மட்டும் எதையும் முடிவு செய்ய இயலாது.

மேலும் ரேவதீகல்பாத்யாயத்தில் ஜாதஹாரிணியை (தோன்றுபவற்றை அழிப்பவர்களை)க் குறிக்கும்போது பிக்ஷுணிகள், 'சிரமணிகா' மற்றும் நிர்கிரந்தி எனும் சொற்கள் பயன்படுத்தப் பட்டுள்ளன. 'சிரமணர்' எனும் சொல் பௌத்தரைக் குறிப்பிடுவதாகவும் பிற்காலத்துப் புலவர்களால் புத்த பிக்ஷுக்களைக் குறிப்பிடுவதாகவும் காணப்பட்டாலும் மகாபாஷ்யகாரரால் 'யேஷாஞ்ச விரோத: சாச்வதிக:' (2–4–9) எனும் சூத்திரத்தில் நிலையான பகைக்கு 'சிரமணபிராம்ஹணம்' என்பது எடுத்துக் காட்டாகக் கூறப்பட்டுள்ளது. ஆகையால் நிலையான பகை கொண்டவர்களாகிய பௌத்தர்களைக் குறிப்பிடச் சிரமணகர் எனும் சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது என்பது தெரிகிறது. அதற்கு முன்பு பாணினியாலும் ''குமார சிரமணாதிபி: எனும் சூத்திரத்தில் சிரமணர் எனும் சொல் காணப்படுவதாலும் பௌத்தர்களும் ஜைனர்களும் தோன்றிய பிறகே இச்சொல் ஏற்பட்டது எனக் கொள்ள இயலாது. சிரமண' எனும் சொல் உடலுக்கு வருத்தம் தோற்றுவித்தல் முதலியவற்றால் தோன்றிய சோர்வு எனும் பொருளை ஒட்டி வைகானஸ சூத்திரத்தில் வானபிரத்தம், எனும் மூன்றாவது ஆசிரமத்தை மேற்கொண்டவர் எனும் பொருளில் பயன்படுத்தப்பட்டுள்ளது. பிருஹதாரண்யகம் எனும் உபநிஷத்தில் முற்றும் துறந்த பிக்ஷு எனும் பொருளிலும், தைத்தரியாரண்யகம், இராமாயணம் போன்ற பல பண்டைய காலத்து நூல்களில் பிக்ஷா, தவநிலை மேற்கொண்டவர் எனும் பொருள்களில் பயன்படுத்தப் பட்டுள்ளன. எனவே சிரமணர் எனும் சொல் பண்டைய காலத்திலிருந்தே வழக்கத்தில் உள்ளது எனத் தெரிகிறது. சிந்தாமணி வைத்யரும் தம் நூலில் இவ்வாறே குறிப்பிட்டுள்ளார்.

நிர்க்ரந்த எனும் சொல்லைப் பற்றி ஆராயப் புகுந்தபோது திக்தநிகாயம் எனும் நூலால் அந்தக் காலத்தில் பழக்கத்தில் இருந்த வேறு மரபைச் சார்ந்தவர்களின் வரிசையில் வேறு மதத்தைச் சார்ந்தவர்களைக் குறிப்பிடும்போது அவர்களில் ஒருவராக 'நிர்க்ரந்தநாதபுத்த' (நிர்க்ரந்தநாதபுத்ர) எனும் சொல் பயன்படுத்தப் பட்டுள்ளதைக் காணலாம். நிர்க்ரந்த எனும் சொல் ஜைனபிக்ஷுக்களுக்கும் பெயராக வழங்கப்பட்டு வருவதால், அந்தக்காலத்தில் மகாவீரர் மாறுமரபினைச் சேர்ந்தவராகக் கருதப்பட்டு வந்ததால் நிர்கிரந்தநாதபுத்ர எனும் சொல் மகாவீரரைக் குறிப்பதாகும் என்பது

ஆராய்ச்சியாளர் சிலர் கருத்தாகும். அப்படியானால் நிர்க்ரந்தநாத என்பவர் மகாவீரரின் தந்தையாகவோ, ஆசிரியராகவோ விளங்கி இருக்கக்கூடும். 'நாத' என்றசொல்லால் அவரது தந்தையாரின் காலத்தில் நிர்க்ரந்தர்களின் புகழ் ஓங்கி இருக்க வேண்டும் எனத் தெரிகிறது. இதனால் நிர்க்ரந்த சம்பிரதாயம் மகாவீரரால் துவங்கப்பட்டதல்ல எனவும், அவருக்கு முன்பே அது பரவி இருந்தது எனவும் தெளிவாகிறது. வின்டர்நீஜ் எனும் அறிஞரும் நிர்க்ரந்த நாதமரபு மகாவீரருக்கு முற்பட்டது எனக் கூறியுள்ளார். ஜைனநூல்களில் மகாவீரருக்கு முன்பு ஆதிநாதர், பார்ச்வநாதர் போன்ற ஆசாரியர்கள் குறிப்பிடப்பட்டுள்ளதால், இன்றும் அவர்கள் தீர்த்தங்கரர்கள் எனப் போற்றப்பட்டு வருவதால் இந்த ஜைன மரபினை மகாவீரர் மிகவும் பிரபலப்படுத்தியதால் பிற்காலத்தில் இம்மரபிற்கு முக்கிய குருவாக விளங்கியதால் அன்னாருக்கு முற்பட்ட நிர்கிரந்த மரபே ஜைனமரபாக விலங்கியது எனலாம். மகாவீரருக்கு முற்பட்ட காலத்திலிருந்தே தீர்த்தங்கரர் களால் துவங்கப்பட்டதென அறியலாம். நிர்கிரந்த எனும் சொல் சிறப்பாக ஜைனர்களால் பயன்படுத்தப்பட்டாலும் 'மனத்தின் முடிச்சை அவிழ்த்தவர் என ஆன்மீக நெறியில் சித்திபெற்றவர் என்பது இச்சொல்லின் பொருள் ஆகையால் வைதிக மரபிலும் இப்பொருளின் இச்சொல் முற்காலத்திலிருந்து வழங்கப் பட்டுள்ளதை நாம் காணலாம் முன்காலத்திலிருந்து சிறப்பாக விளங்கி வந்த இச்சொற்களைப் புத்தர்களும், ஜைனர்களும் 'சிரமண, நிர்கிரந்த' எனும் சொற்களைப் பிற்காலத்தில் தம் சமயத்தைச் சார்ந்த பிக்ஷுக்களெனக் குறிப்பதாகப் பரவலாகப் பயன் படுத்தி வந்துள்ளனர் எனத் தெரிகிறது. மொழி ஆராயச்சியால் 'கடிகா' எனும் சொல்லைப் போலப் பல சொற்கள் கால வெள்ளத்தில் வேறுவேறு பொருள்களைக் குறிப்பிடுனவாக மாறி விடுவதைக் காணலாம். எடுத்துக்காட்டுக்கு, போதாயனர், ஆச்வலாயனர், வராஹர், ஆபஸ்தம்பர் போன்ற முற்காலத்தில் புகழ் பெற்ற சூத்ரகாரர்களால் வேதநெறியைச் சார்ந்த ஸ்மிருதி மரபைச் சார்ந்த வேள்விக்கு உரிய நிலம் என்ற பொருளில் பயன்படுத்தப் பட்டுள்ள 'விகாரம்' எனும் சொல் பௌத்தர்களால் பௌத்த பிக்ஷுக்கள் வாசம் புரியும் இடம் எனும் பொருளில் பயன்படுத்தப் பட்டுள்ளது அவ்வாறே மயானத்தில் நிலைபெறும் சித்தத்தை விரும்பும் தேவதை, அரசு, மந்திரம், க்ஷேத்ரக்ஞன் எனும் பொருள்களில் பயன்படுத்தப்பட்டு வந்த சைத்யம் எனும் சொல் பிற்காலத்தில் ஸ்தூபத்தை, (தூபியைக்) குறிக்கும் சொல்லாயிற்று.

முன்காலத்தில் தவம், ஞானம், முதியவர் எனும் பொருளில் பயன்படுத்தப்பட்டு வந்த 'ஸ்தவிர' எனும் சொல் பௌத்தர்களால் சிறந்த புலவர், எனும் பொருள் பயன்படுத்தப்பட்டது. பிற்காலத்துப் பெருமையை விரும்புகிறவர்கள் 'விஹாரம்' முதலான சொற்கள் புத்த மரபைச் சார்ந்த சொற்கள் எனக் கூறுகின்றனர். ஆனால் இந்த அளவைக் கொண்டு முற்காலத்தைப்பற்றி நன்கு ஆராயாமல் ஒருதலைப்பட்சமாக முடிவு செய்வது தகாது. அவ்வாறே இங்கு வந்துள்ள சிரமணக, நிர்கிரந்த எனும் சொற்களையும் முற்காலத்துத் தவஸிகளைக் குறிக்கும் சொற்களே என அறியத்தகும்.

இதில் வந்துள்ள லிங்கினி, பரிவ்ராஜீகா, சிரமணக நிர்க்ரந்தி, கண்டினி, சிரவல்கலதாரிணி, சரிகி, மாத்ருமண்டலகி, அவேக்ஷணிகா எனப்படும் மாதர்கள் வீடுவீடாகச் சென்று பிக்ஷை பெற்று ஜாதஹாரிணி மரபைப் பிரசாரம் செய்து வந்துள்ள பிக்ஷுணிகளின் வரிசையில் குறிப்பிடப்பட்டுள்ள வகைகளில் பரிவ்ராஜிகா சிரமணிகா, நிர்கிரந்தி என்பன தவிர மற்ற வகை ஏதும் பண்டைய வேறு மரபில் வழங்கப்பட்டு வந்துள்ளதாக இன்று தெரியவில்லை. பிற்காலத்து நூல்களில் வந்துள்ள ஹம்ஸ, பரமஹம்ஸ, குடீசக, பஹூதக போன்ற வகைகளைச் சொல்லாமல், கால வெள்ளத்தில் மறைந்த மரபுகளை மட்டும் கூறுவதால் முன் கூறிய வகைகள் பண்டையக் காலத்தவையே எனத் தெரிகிறது.

அந்த ரேவதீ கல்யாத்யாய பிரகரணத்தில் ஸிம்ஹள(ஸ்ரீலங்கா) உட்ர (ஒரிஸ்ஸா) போன்ற நாடுகளும் ஸரித, மரகத முதலான ஜாதிகளும் குறிப்பிடப்பட்டுள்ளன. கச, சக, யவன, பல்ஹவ, துஷார, காம்போஜ என்பன போன்றவையும் குறிப்பிடப் பட்டுள்ளன. யவன என்பதைப் போல கச எனும் சொல்லும் மனுஸ் மிருதி போன்ற நூல்களில் காணப்படுகிறது. சரித்திர ஆராய்ச்சி யாளர்களும் இந்தச் சாதிகள் முற்காலத்தவை எனக் கூறுகின்றனர். என்ஸைக்ளொபீடியா பிரிடானிகா எனும் நூலில் நான்காம் நூற்றாண்டில் (கி.பி.372) ஹூணர்கள் ஐரோப்பாவில் புகுந்ததாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. ஆயினும் 2500 ஆண்டுகளுக்கு முற்பட்டதான அவெஸ்தா எனும் நூலில் ஹநு (ஹஜின) ஜாதியினர் மாறுபட்ட (பகையின) ஜாதிக்காரர்களாகக் கூறப்பட்டுள்ளது. அதனால் ஜரதுஷ்ட்ர என்பவருக்கும் முற்பட்ட கர்ஸப் (Kerasup) எனப்படும் ஈரான் நாட்டு மன்னனால் அந்தச் சாதி வெல்லப்பட்ட வரலாறு காணப்படுவதால் ஹூணர்களின் காலம் கி.மு. 700 என

'மோதி' எனும் அறிஞர் கூறுகிறார். மகாபாரதத்திலும் ஹரின, யவன, சக, புஷ்ட்ர, கிராத, திரவிட, கசஜாதிகள் குறிப்பிடப் பட்டுள்ளன. 'கர்காதிப்யோயஞ்' எனும் (4.1.105) சூத்திரத்தில் கூறப்பட்ட கணத்தில் சக, இந்த், வருணேதி (4.1.49) எனும் சூத்திரத்தில் யவன, கம்போஜா வலுக் (4.1.175) எனும் சூத்திர வார்திகத்தில் கம்போஜாதிகணத்தில் சக, யவன போன்ற சாதிகள் குறிப்பிடப்பட்டுள்ளன. இவ்வாறு இச்சொற்கள் முன்காலத்திலும் வழக்கத்தில் உள்ளமை காணப்படுகிறது.

இந்த நூலின் ஒவ்வொரு அத்தியாயத்திலும் 'அமுகாத்யாயம் வியாக்யாஸ்யாம': (இப்பெயர் கொண்ட அத்தியாயத்தை விளக்குகிறேன்) எனத் துவக்கத்திலும், இதிஹஸ்மாஹ பகவான் கச்யப : (இவ்வாறு கூறுகிறார் கசியபர்) என இறுதியிலும் கூறப்பட்டுள்ளன.

சிஷ்யோபக்ரமணீய, அத்தியாயத்தில் சொல்லிலும், பொருளிலும் மறை வகுத்த நெறிப்படி மாணவர்களுக்கு உபநயனம், அக்கினி, ஸோமம் பிரஜாபதி போன்ற மறை போற்றும் தேவர்களுக்கு வேள்வி செய்தல், ஜாதியை ஸரித்தியாயத்தில் மறைகளைச் சார்ந்த சொற்றொடர்கள் தீனதந்தோத்பேதத்தில் மாருதி இஷ்டி எனும் வேள்வி, ஸ்தால்பாக ஓமம் என்பதன் செய்முறை, மகப் பேற்றுக்குப் பல வழிகளை விட்டு 'புத்திரேஷ்டி' எனும் வேள்வி செய்யும் முறை,கனவால் நேரும் குற்றம் நீங்க ஸாவித்ரீ வேள்வி செய்யும் முறை, குழந்தைகளின் காப்புக்காகப் புகை போடும் போது 'அக்கினிஸ்து' போன்ற மறைச் சொற்றொடர்களைக் கூறுதல், ரேவதீகல்பாத்யாயத்தில் பிரமாணங்கள் எனும் நூல்களின் வழியில் வரலாற்றுச் செய்திகள். அப்பகுதியில் வசு, ருத்திர, ஆதித்யர் போன்ற தேவதைகளைப் போற்றுதல், அவ்வாறே 'தீர்கஜீஹ்வீச சந்தஸி (4.1.59) எனும் பாணினியின் ஸரித்திரத்தின் படி வேதப் பிரயோகங்களில் வந்துள்ள 'ஙீப் எனும் விகுதியுடன் கூடிய தீர்க்க ஜிஹ்வீ எனக் கூறுதல், போஜன கல்பாத்யாயத்தில் காசி, புண்ட்ர, அங்க, வங்க, காச, ஸாகர, அநூப கோசல கலிங்க நாடுகளையும் அவ்வாறே தேசஸாத்ம்யாத்யாயத்தில் குமார வர்த்தம், நிகடிவர்ஷம், ரிஷப த்வீபம்,பௌண்ட்ர வர்தனம், மிணருத்திகா, வர்த்தமானம் போன்ற பல பண்டைய நாடுகளையும் பாராட்டி இவற்றை விடமிக்கபுகழ்பெற்றபாண்டிய நாட்டைக்குறிப்பிடாமை, பாஹ்லீக மருத்துவரைக் கூறியும் யவன, ரோம நாடுகளின் மருத்துவர்களைக் கூறாமை, ராஜனதலத்தின் பெருமையைக் கூறும்

இடத்தில் இக்ஷ்வாகு, ஸுபாஹு, ஸகர, நஹுஷ, திலீப, பரத, கயன்வரை பண்டைய காலத்து மன்னர்களை மட்டும் குறிப்பிடுதல், ரஸ, தாது ரத்தினங்கள் மருந்துகளாக எங்கும் கூறப்பாடாமை, படைப்புத் தொழிலைப் பற்றி விளக்கும் பொழுது பண்டைய சாங்கிய மரபின்படி எண்வகை பிரகிருதி மற்றும் பதினாறு விகாரங்கள் ஆகியவற்றை விளக்குதல், ஆனால் பௌத்தர் களுடைய மற்றும் ஜைனர்களுடைய ஆன்மிக வழிமுறைகளில் ஏதும் காணப்படாமை 'தீப்தாக்னயோ கஸ்மரா: ஸ்நேஹ நித்யா:' 'க்ஷீரம் ஸாத்யம்யம் க்ஷர மாஹீ: பவித்ரம்' போன்ற மறைநூல் கூற்றுகள் காணப்படுதல் என்பன போன்றவற்றால் விருத்த ஜீவநீயதந்திரம் மிகப் பழமையான காலத்தைச் சார்ந்தது என்பதை உறுதி செய்கின்றது.

ஹேமாத்ரி போன்றவற்றில் புராணங்களின் வழியில் மருத்துவ சாலைகளின் நிறுவனம் கூறப்பட்டிருந்தும் இன்றைய அறிஞர்கள் அதை உறுதிப்படுத்தத் தக்க கல்வெட்டுக்கள் மற்ற நாட்டைச் சார்ந்த மற்றும் மரபைச் சார்ந்த கூற்றுகளைத் தேடுகின்றனர். இதற்கு ஏற்பத் தக்க சான்றுகளாகக் கூடியவற்றை வரலாற்றில் காணும் நோக்கில் ஆராயும்போது 2300 ஆண்டுகளுக்கு முன் அசோகமன்னனால் மக்கள் அனைவருக்கும் பயன்தரவல்ல மருத்துவமனையைப் பற்றிய குறிப்புகள் நம் கண்களுக்குப் புலனாகின்றன. அவ்வாறே கௌடியல்யரின் அர்த்தசாஸ்திரத்தில் கோட்டையைக் கட்டும்போது மருத்துவமனை நிறுவப்பட வேண்டும் என்ற குறிப்பு காணப்படுகிறது. சரகஸம்ஹிதை முதலியவற்றில் ரஸாயனசாலை பற்றிய குறிப்புகள் காணக் கிடக்கின்றன. அவ்வாறிருந்தும் இப்புத்தகத்தில் பொது மக்களுக்கான மருத்துவமனை போன்றவற்றை நிறுவுவதைப் பற்றிய குறிப்பு காணப்படவில்லை. அதற்கு ஏற்றபடி இந்நூலின் கல்பாத்யாயத்தில் ரஸாயனசாலை, அதற்குத் தக்கபடி சிகிச்சைக் கான மனை முதலியவை நிறுவுதலைப் பற்றிய செய்திகள் காணப்பட வில்லை. அதற்கு மாறாக நோயாளியின் இல்லத்திற்குச் சென்று மருத்துவம் செய்வதைப் பற்றிய குறிப்புகள் காணப் படுவதாலும் இந்நூல் பழமையானது எனத் தெரியவருகிறது. கசியபருடன் விருத்த ஜீவகர் உரையாடிய வகை கூறப்பட்டிருப்பதும் இந்நூலின் பழமையை உணர்த்துகிறது. காசியபமஹாஸம் ஹிதையை விருத்த ஜீவகர் சுருக்கமாகச் செய்தார் எனப்படுவதால் காசியபஸம்ஹிதை இந்நூலுக்கு முற்பட்டது என்பது உறுதியாகிறது.

ஆனால், சிரமண எனும் சொல் பிரமாண கிரந்தங்களில் கிடைத்திருப்பது போல, கிரந்தி எனும் சொல் உபநிஷத்துக்களில் காணப்பட்டாலும் நிர்கிரந்தி எனும் சொல் தவநெறியை மேற்கொண்டவர் எனும் பொருளில் பாகவத புராணத்தில் தவிர வேறு மறைவழி நூல்களிலோ, மகாபாரதத்திலோ காணக் கிடைக்க வில்லை. பிற்காலத்தியவர்களான நாகார்ஜுனர் முதலானவர்களின் உபாயஹ்ருதயம், லலிதவஸ்தாரம் போன்ற நூல்களில் ஜைனர்கள் எனும் பொருளில் இந்த நிர்கிரந்த எனும் சொல் பயன்படுத்தப் பட்டுள்ளது. வாசஸ்பதி போன்ற ஆஸ்திக தர்சனங்களை இயற்றிய வர்கள் மறைவழிக்குப் புறம்பான மரபினரின் வரிசையில் உள்ளவர் களைக் குறிப்பிடும் சொல்லாகவே இதைப் பயன்படுத்தியுள்ளார்.

ஆனால் சரியான காலத்தைக் கணக்கிட இயலாத இந்நூலில் இடம் பெற்றுள்ள சில சொற்களை மட்டும் கொண்டு நூலின் காலத்தைக் கணக்கிடுதல் கூடாது. தருக்கத்தால் முடிவு செய்யப் பட்ட பல செய்திகள் பிற்காலத்தில் (மேலும் நுட்பமான ஆராய்ச்சி களால்) கால வெள்ளத்தில் வேறு சில தர்க்க உத்திகளால் மாறானவையாக முடிவாகியதை நாம் கண்டுள்ளோம். மிக்க பழமையான காலத்தைச் சார்ந்ததெனத் தக்க இலக்கணங்களுடன் கூடிய இந்நூல் சிலகாலம் கால வெள்ளத்தில் மறைந்து போனது என்பதும், பிற்காலத்தில் இயக்கர் வாயிலாக வாத்ஸ்யர் கேட்டு மீண்டும் தாம் சீர்திருத்தி, வெளிப்படுத்தினார் என்பது இந்நூலின் கல்பாத்யாயத்தால் தெரியவருகிறது. எனவே, பிற்காலத்தவரால் (அவரது காலத்தில் வழக்கத்தில் வந்துள்ள சில சொற்கள் இதில் கலந்து போய் இருக்கலாம்) அதனால், ரே 1தீகல்பாத்யாயத்தில் காணப்படும் நிர்கிரந்த முதலான சொற்களே அல்லாது பூர்வமாகத்தில் காணப்படும் உத்ஸர்பிணி போன்ற பிற்காலத்தில் வழக்கத்தில் வந்துள்ள சொற்களும் பொருள்களும் விருத்தஜீவகர் இயற்றிய நூலைச் சீர்திருத்தும்போது வாத்ஸ்ய நூல் சேர்க்கப் பட்டிருக்கக் கூடும். சரகஸம்ஹிதை மற்றும் ஸுசுருத ஸம்ஹிதைகளின் முற்பகுதியில் பிறரது நூல்களில் உள்ள பாலகிரகங்களைப் பற்றிய விளக்கங்கள் காணப்படாவிட்டாலும், ஸுசுருதரின் உத்தரதந்திரத்தில் சாலாக்ய கௌமாரபிருத்யங்களைச் சார்ந்த வேறு சிலரின் நூல்களில் காணப்படும் விஷயங்கள் இடம் பெற்றிருப்பதைக் கண்ணும்போது இருபத்தேழு முதல் இருபத் தெட்டு வரையான அத்தியாயங்களில் உள்ள கௌமாரபிருத்ய விஷயங்கள் மூலத்தில் அந்த ஆசிரியர்கள் பெயர்கள் குறிப்பிடப்

படாவிட்டாலும் உரையாசிரியர்கள் பார்வதக, ஜீவக, பந்தகர்கள் முதலானவர்களைக் குறிப்பிட்டுள்ளனர். அதனால் கசியபர், ஜீவகர் முதலிய ஆசிரியர்களின் நூல்களிலிருந்து அவ்விஷயங்கள் கையாளப் பட்டிருக்க வேண்டும் என்பது தெளிவாகிறது. ஸுசுருதரின் பாலதந்திர பிரகரணத்தில் (உத்தரஸ்தானம் 27வது அத்தியாயம்) குறிப்பிடப்பட்டுள்ள ஸ்கந்த ரேவதீ, சீதபூதனா, சகுனீ, முகமண்டிகா, நைகமேய போன்ற ஆண் பெண், குதங்கள் (சிறுவர்களைத் துன்புறுத்துபவை) பற்றிய வர்ணனைகள் காணப்படுகின்றன. அவை ஏறக்குறைய இந்த ஸம்ஹிதையில் கூறப்பட்டுள்ள விஷயங்களுடன் ஒப்பியுள்ளன. ரேவதீகல் பாயத்தில் ரேவதியின் வேறு தோற்றமாக ஜாதஹாரிணியின் சிறப்பு கூறப்பட்டிருக்கிறது. ஸுசுருத ஸம்ஹிதையில் காணப்படவில்லை. இரு ஸம்ஹிதைகளையும் ஒன்றாக வைத்துக் கொண்டு ஆராய்ந் தோமாயின் ஜாதஹாரிணியின் விளக்கம் ஒரளவு ஸுசுருத -உத்தர தந்திரத்தில் கூறப்பட்டிருக்கிற போதும் ரேவதீ, ஸ்கந்த முதலான கிரகங்களைப் பற்றிச் சிகிச்ஸாஸ்தானத்தில் உள்ள பால கிரஹாத்யாயத்தில் விளக்கிய பிறகு மீண்டும் ரேவதீகல் பாத் யாயத்தில் ரேவதியின் மேலும் சிறந்த போகத் தோற்றம் வருணனை செய்திருப்பது ஜாதஹாரிணியைப்பற்றிய முன்பின் விளக்கங்களை விட பல விளக்கங்களுடன் கூடியிருப் பதைக் கண்ணுறும்போது இந்த மிகுதியானவிளக்கம் கசியப – ஜீவகர்களுக்கும் பிறகு வாத்ஸ் யருடைய காலத்தில் சீர்திருத்தப்படட்ட நிலையில் இணைக்கப் பட்டிருக்க வேண்டும் எனத் தெளிவாகிறது. வேறு பகுதியாகப் பிரிக்காமல் சீர்திருத்தும்போது இத்தகைய ஐயங்களைத் தோற்று விக்கும் நிலை தோன்றுவதுண்டு. இதைப்பற்றிப் பிறகு விளக்கம் கூறப்படும். ஸம்ஹிதையில் கல்பாத்யாயத்தை நிறைவுப்படுத்தும் நோக்கில் வாத்ஸ்யரால் இயற்றப்பட்ட பகுதியில் தேசஸாத்ம்யாயத்யா யத்தில் அவ்வாறே சிதைவுற்ற பகுதியின் முற்பகுதியில் போஜன கல்பாத்யாயத்திலும் ஸாத்ம்யத்தை விளக்கும்பகுதியில் பல பண்டைய நாடுகள் குறிப்பிடப்பட்டுள்ளன. போஜன கல்பாத்யா யத்தில் குருக்ஷேத்திரத்தை மையமாகக் கொண்டு நான்கு திசை களிலும் உள்ள பல நாடுகள் குறிப்பிடப்பட்டுள்ளன. அங்கு, இந்து, ஸௌவீரம் முதலான காச்மீர மேற்குப் பகுதி நாடுகள், சீனம் போன்ற வடக்குத் திசை நாடுகள் காசி, புண்ட்ரம், அங்கம், வங்கம் போன்ற கீழ்திசை நாடுகள், தெற்கில் கலிங்கம் பட்டணம், நார்மேதேயம் போன்ற நாடுகள் குறிப்பிடப்பட்டுள்ளன.

ராமாயணத்தில் தெற்குப்பகுதியில் உள்ள நகரங்களின் பரிசயம் இல்லாதது போல இங்கும் கலிங்கம் பட்டணம் போன்ற நர்மதை வரையில் உள்ள நாடுகளே குறிப்பிடப்பட்டுள்ளன. நூலின் சிதைந்த பகுதியில் உள்ள நாடுகளைக் குறிப்பிடுகையில் பண்டைய நாடுகள் குறிப்பிட்டிருப்பதாலும் சிரபாலி, சிரசீரம், புளிந்தம், திராவிடம் போன்ற தொலைவில் விளங்கிய தென்னாடுகள் அவ்வாறே குமாராவர்த்தம், நிகடிவர்ஷம் போன்ற கீழ்நாடுகள் நன்கு வளர்ச்சியுற்றனவாக விளக்கப்பட்டுள்ளன. அசோக மன்னனது கல்வெட்டுகள், அக்காலத்து இலக்கியங்கள் ஆகியவற்றில் புகழ் பெற்ற நாடுகள் பண்டைய காலத்தவையே ஆயினும் இரண்டிலும் நாடுகளின் வர்ணனைகளை ஒப்பிட்டுப் பார்க்கும்போது விருத்த ஜீவகன் முற்பகுதிக்கும் வாத்ஸ்யர் நிறைவு படுத்திய சிதைந்த பகுதி ஆகியவற்றிற்கு பல வேற்றுமைகள் நன்கு புலனாகின்றன. சிதைந்த பகுதியில் தேசஸாத்ம்யாயத்தில் மகதாஸுமகாராஷ்டிரம் எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. வேதத்தில் மற்றும் ஜராஸந்தன் காலத்தில் மகதம் விளங்கி இருந்தது. பண்டைய கால வரலாற்றை ஆராய்ந்த அறிஞர்கள் இன்றைய ராஜகிருஹம் அப்பகுதி எனக் கண்டுள்ளனர். எனவே மகதம் மிகவும் தொன்மையான நாடு. நூலின் முற்பகுதியில் பெயரால் குறிப்பிடப்படாத மகதம் பாடலிபுத்திரம் உத்தரபாகத்தில் மகாராஷ்டிரம் (பெரும்நாடு) எனக் குறிப்பிடப் பட்டுள்ளது. பாண்டிய நாடு, பாடலிபுத்திரம் குறிப்பிடப்படவில்லை. பௌத்த நூல்களில் அநாயாஸர் எனும் இயக்கர் தம் முன்னோரால் நூல் பெற்றதாகக் கூறப்பட்டுள்ளது. புத்தர், மகாவீரர்களின் காலத்திற்குப் பிறகு நந்தர், சந்திரகுப்தன் ஆகியவர்களின் காலத்தில் மகதம் மகாராஷ்டிரம் என பெரிய நாடாக புகழ் பெற்றது. இச்செய்திகள் அனைத்தையும் நுட்பமாக ஆராய்ந்தால் வாத்ஸ்யர் அக்காலத்தில் தோன்றியவர் எனக் கருதலாம்.

நாவநீதக ஆசிரியரான டல்ஹணர் போன்றோர் கூற்றில் கௌமார பிருத்ய ஆசிரியர் ஜீவகர் என பெயர் குறிப்பிடப் பட்டுள்ளதால் 'ததாமதாவக்க' போன்ற பௌத்த நூல்களில் கௌமாரபிருத்த எனும் அடைமொழியுடன் விருத்த ஜீவகரின் வரலாறு காணப் படுவதால் இருவரிலும் சிகிச்சையில் தேர்ச்சி பெற்றிருத்தல், பெயர், கௌமாரபிருத்ய எனும் சொல் சமமாகக் காணப்படுவதால் பௌத்த நூல்களில் குறிப்பிடப் பட்டுள்ள ஜீவகரே பிருத்ய ஆசிரியரான ஜீவகராவார் – என்பது ஆசிரியர்கள் சிலரின் கருத்தாகும்.

இன்றுவரை விருத்த ஜீவகரின் நூல் கிடைத்திராதவரை கௌமாரபிருத்திய ஆசிரியரான ஜீவகரின் வரலாற்றை தெளிவு படுத்தும் பிரமாண நூல் கிடைத்திராத வரை – பௌத்த நூல்களில் புகழ் பெற்ற ஜீவகரின் பெயர் காணப்படுவதால் தக்தாச்வரத நியாயத்தைப்போல (தேர், குதிரை) எரிந்து போனால் தேர் பயனற்றதாவது போல – ஏதேனும் முக்கியமான பகுதி நட்ட மானால் அதைச் சார்ந்த ஏனைய பகுதிகளும் பலனற்றுப் போவது போல என்பதாம்.) இருவரும் ஒருவரே எனக் கருத்து உருப்பெற்றது. முன்கூறிய 'உத்ஸர்பிணி' போன்ற சொற்கள் கண்டபின் அக்கருத்தில் ஐயம் தோன்றவில்லை. ஆனால், இன்று இந்த தந்திரம் கிடைத்துள்ளது. விருத்த ஜீவகரைப் பற்றிய பல விளக்கங்கள் தெளிவாகத் தெரிய வந்துள்ளன. இருவருடைய தந்தையினரின் வேற்றுமை, பிறந்த நாட்டின் மாறுபட்டிருத்தல் இருவருடைய ஆசிரியர்களின் வேறுபாடு அடைமொழியுடனும், இல்லாமலும் பெயர்கள் வேறுபின் பற்றிய அறநெறி வேறுபாடு பௌத்த நூல்களில் குறிப்பிடப்பட்டுள்ள ஜீவகர் கௌமாரபிருதய எனும் அடைமொழி மகாவக்க எனும் நூலின்படி குமாரனால் பாதுகாக்கப்பட்டதால் ஏற்பட்டதே அன்றி சிறுவர்க்கு உரிய சிகிச்சையில் தேர்ச்சி பெற்றதால் அன்று. பௌத்த நூல்களில் இடம் பெற்றுள்ள ஜீவகர் அத்தகைய மருத்துவத்தைக் கற்றிருக்கக்கூடும். பௌத்த நூல்களில் அவரது சிகிச்சையைப் பற்றிய விளக்கங்கள் வெகுவாகக் காணப்படினும், அன்னார் கௌமாரபிருத்ய ஆசிரியர் என்பதோ, இந்நூலை இயற்றியவர் அவர் தாம் என்பதோ தெளிவாகும் குறிப்புகள் ஏதும் இதில் கூறப்படாதது ஏன்? மிக நுட்பமாக ஆராய்ந்த போது இவ்விருவரிடைய பல வேற்றுமைகள் தெளிவாகின்றன. துங்ஹுவாங் (Tunhuang) பகுதியில் ஹர்ந்லே என்பவரால் கண்டெடுக்கப்பட்ட பண்டைய காலத்து நூலில் புத்தர் தம் காலத்தவரான ஜீவகருக்கு உபதேசம் செய்த வரலாறு கூறப் பட்டுள்ளது. அந்த ஜீவகரே, இந்நூலாசிரியராகிய விருத்த ஜீவகர் என்றால், நூலின் இடையிடையே தன்வந்திரி முதலியவர்களை போல பாஹலீகபாஷக் (பாஹ்லிக நாட்டு மருத்துவர்) காங்காயனர் மற்றும் அன்னாரைப் போன்ற வேறுநாட்டு மருத்துவர்களின் பெயர்களும், சிகிச்சையைச் சார்ந்த பொருள்களும் கூறியது போல தன் ஆசிரியரான புத்த பகவானது பெயரை, புகழ் பெற்ற ஓஷதிகள் விளக்கும் பொருள்களின் ஊடே அன்னாருடைய உபதேசச் சுருக்கம் சிறிதளவுவேனும் கூறப்படாமைக்குக் காரணம் யாது? புத்த

மதத்தைச் சார்ந்த நிழல் கூட இந்நூலில் காணப்படவில்லை. 'மகாவக்கம்' போன்ற பௌத்த மத நூல்களினால் ஜீவகர் அறுவைச் சிகிச்சையிலும் மிகத் திறமையும் புகழும் பெற்றவர் என்பது தெளிவாகிறது. ஆனால் இந்நூலில் அறுவைச் சிகிச்சையைப் பற்றிய செய்திகள் வேறு ஓராசிரியரைச் சார்ந்தது போல குறிப்பிடுவதால் அச்சிகிச்சை முறையில் அவ்வளவு ஊக்கம் காட்டாமை தெளிவாகிறது. இவ்வாறு இந்நூலாசிரியர் பௌத்த நூல்களில் குறிப்பிடப்பட்டுள்ள மகததேசத்தவரான ஜீவகரல்லர் 'புஜ்யா' என்பவரின் வயிற்றில் தோன்றிய அபயனின் புதல்வரான ஜீவகரல்லர் என்றும், அன்னாருக்கு முற்பட்டு கனகல் என்ற இடத்தில் தோன்றிய ருசீகர் என்பவரின் புதல்வரும், கசியபரின் சீடரும், மகரிஷிகளால் போற்றப்பட்டவரும், கௌமார, பிருத்யர் எனும் மருத்துவப் பிரிவின் ஆசிரியரும் ஆவார் என்பது உறுதியாகிறது. கச்யபரால் உபதேசம் செய்யப் பெற்று விரிவடைந்த மகாஸம்ஹிதையை , விருத்தஜீவகர் சுருக்கமாகச் செய்தார் எனவும், காலம் கடந்த பிறகு வாத்ஸ்யர் அந்நூலைச் சீர்திருத்தம் செய்து இன்று நாம் காணும் நூலாக வெளிப்படுத்தினார் என்றும் இந்நூலின் கல்பாத்யாயத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது.

## நூல்பொருள்களின் ஊடே இடம்பெற்ற ஏனைய ஆசிரியர்களின் வரலாறு :

ஆத்ரேயரால் முதன் முதலாக உபதேசம் செய்யப் பெற்ற ஸம்ஹிதை அக்னிவேசரால் தந்திரமாக உருப்பெற்று அந்நூல் சரகரால் சீர்திருத்தம் செய்யப்பெற்று இன்று நாம் காணும் (சரகஸம்ஹிதை எனும்) நூலாக விளங்குவது போலவும், திவோதாஸரான தன்வந்திரியால் துவங்கப்பட்டு உபதேசம் செய்யப்பட்ட ஸம்ஹிதை ஸுசுருதரால் 'ஸுசுருத ஸம்ஹிதையாகத் திருத்தப்பட்டு பிற்காலத்தில் நாகார்ஜுனரால் அல்லது வேறு ஒரு மருத்துவ அறிஞரால் சீர்திருத்தப்பட்டு இன்று நாம் காணும் 'ஸுசுருத ஸம்ஹிதையாக விளங்குவது போலவும், கசியபரால் உபதேசம் செய்யப்பெற்று முதல் நூல் விருத்த ஜீவகரால் சுருக்கமாக இயற்றப்பெற்றது எனவும், காலம் கடந்த பின் அந்நூலை வாத்ஸ்யர் என்பவர் சீர்திருத்தம் செய்து இன்று நம் முன் இந்நூலை வைத்தருளினார் எனவும் அறியலாகும். இன்று முதல் நூலான அந்நூலில் சீர்திருத்தம் பெற்ற வேறு பிரதிகளோ காணப்படாமை

யால் இன்று நமக்குக் கிடைத்துள்ள நூலே அக்னிவேசரது அல்லது ஆத்ரேயரது நூலாகக் கருதப்படுவது போல, சீர்திருத்தம் பெற்று இன்று நாம் முன்புள்ள ஸுசுருதஸம்ஹிதையே முதல் நூலான அல்லது தன்வந்திரி ஸம்ஹிதையானது போல வாத்ஸ்யரால் சீர்திருத்தம் செய்யப்பெற்ற இந்நூலே விருத்த ஜீவகரது அல்லது காசியபரது முதல்நூலாக கருதத் தக்கதாகும். இவ்வாறு நமக்குக் கிடைத்துள்ள இம்மூன்று நூல்களே அவற்றில் முதநூல்களாகக் கருதும்படி உள்ளன. இம்மூன்றிலும் சீர்திருத்தம் செய்தவர்களை சரகர் நாகார்ஜுனர் வாத்ஸ்யர் ஆகிய மூவரும் மூன்றாம் வரிசை யிலும், ஸம்ஹிதையை உருவாக்கியவர்களான அக்னிவேசர், ஸுசுருதர், விருத்த ஜீவகர் எனப் புகழ்பெற்ற இம்மூவரும் இரண்டாம் வரிசையிலும் முதநூலை உபதேசம் செய்தவர்களான ஆத்ரேயர், திவோதாஸரெனப் புகழ்பெற்ற தன்வந்திரி, மாரிச கசியபர் முதல்வரிசையிலும் கணக்கிடத் தக்கவர்களாவர். ஆக, முதல் வரிசையில் உள்ள இம்மூவரும் மிக்க பழமையான இந்நூல்களுக்கு முறையே முதலாசிரியர்களாவர்.

ஆத்ரேயர், தன்வந்திரி, கசியபர் போன்ற முதல் நூலாசிரியர்கள் சரியான காலம் தெரிந்து கொள்வது அரிதாக உள்ளது. அதனால் இவர்களில் முன்னவர், பின்னவர் ஒருவருக்கொருவர் உள்ள தொடர்பு, நெருக்கம் அவ்வாறே ஆத்ரேயர் அக்னிவேசர், சரகர் தன்வந்திரி, திவோதாஸர், ஸுசுருதர், கசியபர், விருத்த ஜீவகர் வாத்ஸ்யர் போன்ற ஆசிரியர்களில் பிறந்த காலம் போன்ற வரலாறுகளை முடிவு செய்வதற்கான தொடர் கட்டுரையோ, வரலாறு நூலோ கிடைக்கவில்லை . அதனால் அவர்களைப் பற்றி உண்மையான செய்தி ஏதும் கூற இயலாமல் உள்ளது. ஆயினும் அவர்களது காலம் மிஞ்சி மிஞ்சி அல்லது குறைந்த அளவில் எதுவாக இருக்கக்கூடும் என்பதை ஓரளவாவது, தெளிவற்ற நிலையில் ஆவது ஊகம் செய்ய இயலுமாயின், ஏனையோரது காலம் முன் வைத்து கண்டுகொள்வது தகும். இம்முறையில் ஆராய்ந்தால் கசியபர், விருத்தஜீவகர் ஆகியவர்களைப் பற்றி ஓரளவு தெரிந்து கொள்ள முடியும். இந்தக் கருத்துடன் ஏனைய அறிஞர்களின் ஆராய்ச்சி முடிவுகளையும் குறிப்பிட்டு எம் கருத்தை இங்கு வெளியிடுகிறோம்.

## தன்வந்திரி, திவோதாஸர்:

ஸுசுருத ஸம்ஹிதையில் தன்வந்திரியாகிய திவோதாஸரிடம் ஸுசுருதர் உபதேசம் பெற்றது குறிப்பிடப்பட்டுள்ளது. வேதத்தில்

எங்கும் மருத்துவ ஆசிரியர் தன்வந்திரி பற்றிய குறிப்பு காணப்படவில்லை. ரிக்வேதத்தில் மருத்துவத்தைப் பற்றிய பொருள்களைக் குறிப்பிடும் இடங்களில் தேவ வைத்தியர்களாக அச்வினி தேவதைகளே குறிப்பிடப்பட்டுள்ளனர். ரிக் வேதா முதல் மண்டலத்தில் பல இடங்களில் திவோதாஸர் எனும் மன்னனைப் பற்றிய செய்திகள் காணப்படுகின்றன. 'ஆதிதிக்வ : சம்பரச்சத்ரு: ஸுதாஸபிதா போன்ற சூரத்தன்மை, வீரம் கொண்டுள்ளதற்கான அடைமொழிகள் காணப்படுகின்றன. காடகஸம்ஹிதையின் மந்திர பாகத்தில் பிரத்னச்வ வேதாஸரின் பெயர் காணப்படுகிறது. இவர் காசி மன்னர் என்பதோ தன்வந்தரியுடன் இவருக்குள்ள தொடர்பு பற்றியோ குறிப்பு ஏதும் இல்லை. ரிக் வேதத்திலும், காடகஸம் ஹிதையிலும் குறிப்பிடப்பட்டுள்ள திவோதாஸரது காலம் மிக்க பழமையானது. ஆனால் அவர் மருத்துவர் என்பதற்கு சான்று ஏதும் ல்லை.

புராண இதிஹாஸத்தில் திவோதாஸர் எனும் பெயரில் பலர் குறிப்பிடப்பட்டுள்ளனர். அவர்களில் ஹரிவம்சபுராணம் 29ம் அத்தியாயத்தில் காசவமிசத்தில் தன்வந்திரி மற்றும் திவோதாஸர் எனும் காசி மன்னர் தோன்றியது குறிப்பிடப்பட்டுள்ளது. அன்னார் மரபினரின் முறையில் வருமாறு :

**காச**

**தீர்கதமா**

**தன்வ**

**தன்வந்திரி**

**கேதுமான்**

**பீமரத (பீமஸேன)**

**திவோதாஸ**

**பிரதர்தன**

**வத்ஸ**

**அலர்க்க**

காசரின் பேரன் தன்வன் எனும் மன்னன் (தேவ-அஸுரர்கள்) பாற்கடலைக் கடையும்போது தோன்றிய 'அப்ஜ' எனும் பெயர் கொண்ட தேவதையை வழிபட்டு அந்தத் தேவதையின் அவதார மாக தன்வந்திரி எனும் பெயர் கொண்ட மகனைப் பெற்றார்.அவன்

பரத்வாஜரிடம் மருத்துவம் கற்று, அதை எட்டு பிரிவுகளாகச் செய்து,தன் மாணாக்கர்களுக்கு உபதேசம் செய்தார். அவனுடைய கொள்ளுப் பேரனான திவோதாஸர் வாரணாஸி எனும் நகரத்தை நிறுவினான். திவோதாஸரின் மகன் பிரதர்தனன் திவோதாஸர் காலத்தில் வெறித்துப் போன வாரணாசியை பிரதர்தனனின் பேரன் அலர்க்கன் எனப்பெயர் கொண்ட காசி மன்னன் மீண்டும் வளப் படுத்தினான். என இவ்வாறு ஹரிவமிச புராணம் கூறுகிறது. ஹரிவம்சத்தில் உள்ளபடி வெறித்திருந்த வாராணஸியைத் திவோ தாஸர் வளப்படுத்தியதாகக் கூறப்பட்டிருப்பதால், அன்னாருக்கு முன்பே அந்நகரம் ஏற்பட்டிருக்க வேண்டும் என்பது தெளி வாகிறது. மகாபாரத அநுசாஸநிகபர்வத்தில் வாரணாஸி திவோ தாஸரால் கட்டுவிக்கப்பட்டதாகக் கூறப்பட்டுள்ளது.

மகாபாரதத்தில் நான்கு இடங்களில் திவோதாஸரின் பெயர் காணப்படுகிறது. காசி மன்னன் என்பதும்,வாராணாஸியை நிறுவியது, ஹைஹயர்களுக்குத் தோற்றுப்போய் பரத்வாஜரைச் சரணடைந்தது, அன்னாரைக்கொண்டு புத்ரேஷ்டி எனும் வேள்வியைச் செய்து பிரதர்னன் எனும் வீரனாகிய மகனைப் பெற்றது, போன்ற வரலாறுகள் மகாபாரதத்திலும் கூறப்பட்டுள்ளன. இந்நூலில் திவோதாஸரின் முன்னோர்களைக் குறிப்பிடுவதில் மற்றவர்களுடன் ஹர்யச்வர் என்பவரின் பெயரும் குறிப்பிடப் பட்டுள்ளது. அக்னிபுராணம் (278ம் அத்)கருடபுராணம் (அத்139 சுலோ8.12) ஆகியவற்றிலும் வைத்தியரான தன்வந்தரியின் நான்காவது தலைமுறையைச் சார்ந்தவன் திவோதாஸன் எனக் குறிப்பிடப் பட்டுள்ளது. மகாபாரதத்தில் பாற்கடல் கடையப்பட்டபோது தன்வந்திரி தேவன் தோன்றியதாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. புராணங்களிலும் தன்வந்திரியைப் பற்றிய குறிப்புகள் உள்ளன. ஆக்னேயபுராணத்தில் பாற்கடல் கடையப் பட்டபோது தோன்றிய தன்வந்திரி ஆயுர்வேதத்தைப் பிரகாசப்படுத்தியவராகக் கூறப் பட்டுள்ளது.

வேதத்தில் தன்வந்திரியின் பெயர் காணப்படாமையாலும், ஹரிவம்ச புராணத்தில் பாற்கடல் கடையப்பட்டபோதுதோன்றிய 'அப்ஜ' தேவதையை வழிபட்டு தன்வமன்னன் பெற்ற மகன்தன்வந்தரி எனக் காணப்படுவதாலும்,இருவரும் ஒருவரே எனக் கருத்து கொண்டு அப்ஜ தேவதையே பிற்காலத்தில் தன்வந்தரி எனக் கூறப்பட்டிக்கக்கூடும். ஆகவே, மருத்துவ ஆசிரியரான... திவோ

தாஸரின் முன்னோர்களில் ஒருவரான தன்வந்திரி அப்ஜ தேவதையின் மறு தோற்றமாகையால் ஒருவராகப் போற்றப் பட்டார் எனலாம்.

பரத்வாஜருடன் தொடர்பு, வாராணஸியை நிறுவுதல், பிரதர்னன் எனப் பெயர் கொண்ட மகனைப் பெறுதல் எனும் செய்திகளில் ஹரிவம்ச- மகாபாரதத்தின் வரலாறுகளில் ஒற்றுமை காணப்படுகிறது. கௌஷிதகீ (ஸாங்க்யாயனம்) பிரமாணம் மற்றும் கௌஷித பிரமாணோபநிஷத் ஆகியவற்றிலும் தைபோதஸி (திவோதாஸபுத்திரன்) பிரதர்தனன் பிரும்ம வித்தையைப்பெற்றது வர்ணிக்கப்பட்டுள்ளது. காடக ஸம்ஹிதையின் பிரமாண பாகத்தில் ஆருணியின் சம காலத்து பீமஸேனனின் மகன் திவோதாஸன் கூறப்பட்டுள்ளான்.

)வ்வாறு ஹரிவமிச புராணத்தின்படிக் காசராஜாவின் மரபில் தோன்றியவர்கள் என்பதால் இவ்வனைவருக்கும் காசராஜனால் நிறுவப்பெற்ற காசி தேசத்திற்கு மன்னர்களாகையால் காசி மன்னன் என்றும்,தன்வனுக்கு மகனாகையால் தன்வந்திரி பெயராயிற்று.. ஆத்ரேயர் போன்றவர்களைப் போல தன்வந்தரியும் முதலாசிரிய ராகிய பரத்வாஜரிடம் மருத்துவம் பெற்றார் எனப்பட்டுள்ளது. மகாபாரதத்திலும் ஹரிவம்சத்திலும் தன்வந்தரியின் கொள்ளுப் பேரனான காசிமன்னன் திவோதாஸனது மருத்துவக் கல்வி ஆசிரியராகக்குறிப்பு காணப்படாவிடினும், ஸுசுருதத்தில் காசி மன்னனான திவோதாஸன் ஸுசுருதர் முதலானவர்களுக்கு உபதேசம் செய்தவராகக் கூறப்பட்டுள்ளது.அதனால் மருத்துவக் கல்விக்கு ஆசானாகிய தன்வந்திரியின் நான்காவது தலை முறையைச் சார்ந்து தம் முன்னோர் வகுத்த கல்வியில் ஆதரவு கொண்டு திவோதாஸரும் மருத்துவ ஆசிரியராக விளங்கியதில் பொருத்தமுள்ளதே. தன்வந்திரிக்கு மிக நெருக்கமானவராகி (அவரது மரபில் தோன்றி) அன்னாரது ஸம்பிரதாயத்தை ஒளி வீசச் செய்தமையால் மற்றும் அன்னாரது இடத்தில் தான் விளங்கியதால் அன்னாரது மறு அவதாரம் எனக் கொண்டு 'தன்வந்திரிம் திவோதாஸம் ஸுசுருத பிரப்ருதய ஊசு'' (தன்வந்திரி ஆகிய திவோதாஸரை நோக்கி ஸுசுருதர் முதலானோர் கூறுகின்றனர்) என தன்வந்திரிக்கும் திவோதாஸருக்கும் வேற்றுமை இன்றி கூறியுள்ளதும் பொருத்தமே ஆகும். ஆயுர்வேத மருத்துவ ஆசிரியராக புகழ்பெற்ற தன்வந்திரியின் கொள்ளுப் பேரன்,

ஸுசுருத ஸம்ஹிதையில் கூறப்பட்டுள்ள ஆயுர்வேதத்தை உபதேசம் செய்தவரான தன்வந்திரி போன்ற திவோதாஸர் இவ்விருவரின் ஒற்றுமையைக் கொண்டு தன்வந்திரியின் ஆயுர்வேத ஸம்பிரதாயம் தம் சீடனைப் போல திவோதாஸரிடமும் பரவியது என்பது தெளிவாகிறது. என்னிடம் ஸுசுருத ஸம்ஹிதையின் பனை ஓலை பிரதி ஒன்றுள்ளது. அதன் துவக்கத்தில் ''இத்யுவாச பகவான் தன்வந்திரி (இவ்வாறு உரைத்தார் பகவான் தன்வந்திரி) எனக் குறிப்பு காணப்படவில்லை. தன்வந்திரியின் மறுதோற்றமாகிய திவோதாஸரிடம் ஸுசுருதர் முதலானோர் சென்று வினவினார்கள் எனப்படுவதால் அவ்வாறு கூறுவதும் பொருத்தமல்ல.

முன்பு குறிப்பிட்டபடி ஹரிவமிசத்தில் கலியுகத்தில் திவோதாஸன் வாரணாஸியை நிறுவியதாகக் குறிப்பிட்டுள்ள படியால் தன்வந்திரி மற்றும் அன்னாரது கொள்ளுப் பேரனான திவோதாஸர் ஆகியவர்களின் காலம் கலியுகம் என்பது தெளிவு. ஆனால் கலியுகத்தில் எந்த ஆண்டு என்பது தெரிய வரவில்லை.

காசியின் இளவரசன் பிரும்மதத்தன் ஆயுர்வேத மருத்துவம் கற்க விரும்பி தக்ஷசீலைக்குச் சென்ற வரலாறு ஜாதக (பௌத்த) கிரந்தத்திலும், பிறகு காசி மன்னனாக விளங்கியபோது ஜீவகன் அம்மன்னனைக் காண வந்த வரலாறு மகாவக்கத்திலும் காணப்படுகின்றன. மகாவக்கத்தில் 'காசி' எனும் சொல் காணப்பட்டாலும் பெரும்பாலும் 'வாராணஸி' எனும் சொல்லே கையாளப்பட்டுள்ளது. புத்தரால் வாராணஸியில் தர்மசக்கரம் (தர்மஉபதேசம்) நடத்தப் பட்ட வரலாறும் காணப்படுகிறது. ஜாதக நூல்களிலும் வாரணாஸி எனும் சொல் பல இடங்களில் கூறப்பட்டுள்ளது. பாணினி நாடு எனும் பொருளில் காசி எனும் சொல்லை ''காச்யாதிப்யஷ்டஞ்சிடௌ'' (4.2.116) எனும் ஸூத்திரத்தில் தெளிவாகக் கூறியுள்ளார். நகரத்தைக் குறிக்கும் வாராணஸி எனும் சொல் நதிகளின் கணத்தில் குறிப் பிடப்பட்டுள்ளது. ('நதியாதிப்யோடக்'' 4.2.97 வாராணஸேய:) மகா பாஷ்யகாரரும் 'வாரணாஸேய' எனும் சொல்லைப் பல இடங்களில் குறிப்பிட்டுள்ளார். 'ஜாபாலோபநிஷத்' போன்ற நூல்களில் வாரணாஸி எனும் சொல் காணப்பட்டாலும் தொன்மையான உபநிஷத்துக்களில் காசி எனும் சொல்லே அன்றி வாராணஸி எனும் சொல் காணக் கிடைக்கவில்லை. இதனால் நாட்டைக் குறிக்கும் காசி எனும் சொல் பண்டைய காலத்திலிருந்து வழக்கில் உள்ளதென்பதும், நகரத்தைக் குறிக்கும் வாராணஸி என்னும் சொல் உபநிஷத்துக்களின் காலத்திற்குப்

பிறகே புகழ் பெற்றதெனத் தெளிவாகிறது. புராணங்களில் 'காசி' 'வாராணஸி' எனும் இவ்விரு சொற்களும் காணப்படுகின்றன. வரலாற்று நூல்களில் புத்தகருக்குப் பிறகு சில காலம் கோஸல மன்னர்களாலும், சில காலம் மகத மன்னர்களான சிசுநாகர்களாலும், அவர்களுக்குப் பிறகு மௌர்யர், சுங்கர், குப்தர் போன்ற மரபுகளைச் சார்ந்த மன்னர்களாலும் முடிவில் ஹர்ஷ வர்தனனாலும் வாராணஸி வெற்றி கொள்ளப்பட்ட செய்திகள் காணப்படுகின்றன. அந்தந்த மரபினைச் சார்ந்த மன்னர்களின் வரலாறுகளை ஆராய்ந்தபோது தன்வந்திரி, திவோதாஸர் ஸர்பிரதர்தனன் என்பவர்களின் பெயர்கள் காணப்படவில்லை. ஆனால் வார்த்திககாரரான காத்யாயனர் 'திவச்சதாஸே' 'திவோதாஸ' எனத் திவோதாஸர் எனும் சொல்லுக்கும் விளக்கம் தந்துள்ளார். மகாபாஷ்யகாரர் ''திவோதாஸாய காயமே'' என எடுத்துக் காட்டியுள்ளார். கௌஷீதகீபிரமாணம், அதன் உபநிஷத்து ரிக்ஸர்வானுக்ரம ஸூத்ரம் ஆகியவற்றில் திவோதாஸரது மகனாகிய பிரதர்தனன் குறிப்பிடப்பட்டுள்ளான். காடகஸம் ஹிதையின் பிரமாண பாகத்தில் பீமஸேனனது மகன் திவோதாஸன் எனும் குறிப்பு உள்ளது. மகாபாரத, ஹரிவம்ச புராணங்களில் இவ்வாறே மருத்துவக் கல்விக்கு ஆசிரியர், தன்வந்திரியின் கொள்ளுப் பேரன் வாராணஸியை நிறுவியவன், பிரதர்தனனின் தந்தை, அலர்க்கரின் முப்பாட்டனார். கலியுகத்தில் தோன்றியவர் எனத் திவோதாஸரைப் பற்றிய விளக்கம் காணப்படுகிறது. எனவே கலியுகத்தில் ஐதரேயபிராமண காலத்தில், காடக பிராமணம் கௌக்ஷிதக் பிராமணம் ஆகியவற்றின் உபநிஷத்துக்கள் ஆகியவை தோன்றிய காலத்திற்குச் சிறிது முற்பட்ட காலத்தவர் என்பது தெளிவாகிறது.

மிளிந்தபஹ்ஹி (மிளிந்த பிரசனம்) எனும் பெயர் கொண்ட பாலி மொழி நூலில் இரண்டாம் நூற்றாண்டின் மிளிந்தன் (Menandor King of Bactgria) எனும் அரசனைக் குறித்து நாகஸேனன் என்பவர் உரைத்ததில் 'சிகிச்ஸகாநாம் பூர்வகா ஆசார்ய தாதசார்ய'' (மருத்துவத்தின் முற்காலத்து ஆசிரியர்கள்) எனத் துவங்கிக் கணக்கிடப்பட்ட ஆசிரியர்களில் தன்வந்திரியின் பெயரும் உள்ளது. இதில் ரோகோத் பத்திநிதானம், ஸ்வபாஸமுத்தானம், சிகிச்சை முதலியவற்றிற்கு ஆசிரியர் எனக் குறிப்பிடப்பட்டுள்ள தால், நாகஸேனரால் தமக்கு முன் விளங்கிய மருத்துவ ஆசிரியராகக் குறிப்பிடப்பட்டுள்ள தன்வந்திரி மகாபாரதம், ஸுச்ருதரின்

ஆசிரியர் ஆன தந்வந்தரியே எனத் தெளிவாகிறது. அல்லது, கபிலர், நாரதர், போன்றவர்களோடு வருவதால் முதல்வரான தன்வந்திரி யாகவும் இருக்கக்கூடும்.

கி.மு.க. இரண்டாவது மூன்றாவது நூற்றாண்டுகளில் நிறுவப் பெற்ற பரூச், சாஞ்சி ஸ்தூபங்களில் உள்ள கல்வெட்டுகளில் ஜாதக நூல்களைப் பற்றிய குறிப்பு காணப்படுவதால், பாலி ஜாதக நூல்கள் அக்காலத்திற்கு முன்பே விளங்கியிருந்தன என்பது தெரிய வருகிறது. கி.மு.க. நான்காம் நூற்றாண்டில் வைசாலியில் நடை பெற்ற பௌத்த மஹாஸபையிலும் ஜாதக நூல்கள் புகழ் பெற்றிருந்தன என மேலை நாட்டு அறிஞர் மெடக்டொனால் கூறுகிறார். அக்காலத்தில் இந்நூல்கள் புகழ் பெற்றிருந்தன என்றால் அக்காலத்திற்கு முன்பே அவை தோன்றி விளங்கி இருக்க வேண்டும். அவற்றில் அயாகர் (அயோகிருஹ) எனும் ஒரு ஜாதகத்தில் புத்தரது ஒரு முற்பிறவியில் அரச குமாரன் என்ற நிலையில் அறநெறியினைப் பின்பற்ற மன்னது ஆணை பெற்றதாக ஒரு செய்தி கூறப்பட்டுள்ளது. அதில் தன்வந்திரி வைதரணர், போஜர் முதலான மருத்துவர்களின் பெயர்கள் காணப்படுகின்றன. நஞ்சை முறிக்கும் சிகிச்சையில் உலகோருக்கு நன்மை புரிந்த தன்வந்திரி போன்ற சிறந்த ஆசிரியர்களும் காலத்தின் கொடுமையால் மறைந்து போயினர் என மிருத்யுவின் வலிமை கூறப்பட்டுள்ளது. தம் அறவழியின் சிறப்பும் விளக்கப்பட்டுள்ளது. இந்தக் கதையால் புத்தரின் முற்பிறவி ஒன்றிற்கு முன்பே தன்வந்திரி, வைதரணர், பே[illegible] ஆகியவர்கள் இவ்வுலகிலிருந்து மறைந்து போயினர் என்பது அறிய வருகிறது. புத்தரின் எந்தப் பிறவியில் என்பது குறிப்பாக அறியவரவில்லையாயினும் வெகு காலத்திற்கு முன்னதாக என்பது மட்டும் தெரிகிறது. ஆரியஸரிரியின் ஜாதக மாலாவின் அயோகிருஹ ஜாதகத்தில் நோய்களைத் தீர்க்கும் தன்வந்திரி என பாராட்டுதலுடன் கூறப்பட்டுள்ளது. ஆரிய சூரீய ஜாதகத்தில் தன்வந்திரியின் பெயர் மட்டும் குறிப்பிடப் பட்டுள்ளது. ஸுச்ருதஸம்ஹிதையின் துவக்கத்தில் தன்வந்திரி யாகிய திவோதாஸரைக் கல்வி பெற அணுகிய சீடர்களின் பெயர்களில் வைதரணரும் குறிப்பிடப்பட்டுள்ளார். இதில் ஸுச்ருதர் முதலானவர்கள் என்பதால் முதலானவர்களில் போஜர் போன்றவர்களும் குறிப்பிடப்பட்டுள்ளர் என அறியலாம், என்பதை டல்ஹணர் தம் உரையில் குறிப்பிட்டுள்ளார். ஆனால், என்னிடம் உள்ள ஸுச்ருத ஸம்ஹிதையில் அதன் முதல் பகுதியிலேயே

''ஔபதேநவ வைத்ர லொள ரப்ர பௌஷ்கலாவத கரவீர்ய கோபுரரக்ஷித போஜ ஸுசுருத ப்ரபிருதய : ஊசு.'' எனும் சொற்றொடரால் வைதரணருக்குச் சமமாகப் போஜருடைய பெயரும் தெளிவாகக் குறிப்பிடப் பட்டுள்ளது. இந்த 'அயோதர' எனும் பெயர் கொண்ட பாலி மொழி ஜாதக நூலில் குறிப்பிடப்பட்ட தன்வந்திரி திவோதாஸ சீடர் மற்றும் வைதரண போஜர்களின்கூட இருந்ததால் மூல தன்வந்திரியாகத் தெரிய வில்லை. வேறென்ன வெனில், தன்வந்திரியின் அவதாரமாகியவ ரெனத் தெரிய வருகிறது. ஆகவே ஸுசுருதஸம் ஹிதையில் குறிப்பிடப்பட்ட தன்வந்திரி எனும் பெயரால் விளிக்கப்பட்ட திவோதாஸர் எனத் தெளிவாகிறது. இங்கு ஸுசுருதருடன் ஏனைய மருத்துவ அறிஞர்களின் பெயர்கள் குறிக்கப்படாவிடினும், உப நிஷத் காலத்து திவோதாஸரின் பெயர் குறிப்பிடப் பட்டுள்ளதால், ஸுசுருத ஸம்ஹிதையில் தன்வந்திரியின் அவதாரம் என திவோதாஸர் குறிப்பிடப்பட்டுள்ளதால் திவோதாஸரின் தோற்றத்திலுள்ள தன்வந்திரி சீடர் வைதரணர், போஜர் ஆகியோர்களின் பெயர்கள் ஸுசுருதஸம்ஹிதையில் காணப்படு வதால், ஜாதக நூல்களில் விஷ சிகிச்சையைப் பற்றிய பொருள்கள் ஸுசுருத ஸம்ஹிதையின் கல்பஸ்தானத்தில் காணப்படுவதால் போஜர் மற்றும் வைதரணருடன் கூடியிருந்த ஸுசுருதர் ஸம்ஹிதையில் குறிப்பிடப்பட்ட காலத்தவராவர். ஆக்னேய புராணத்திலும் ஆயுர்வேத மருத்துவக் கல்வி கற்பிப்பதில் ஸுசுருதர் தன்வந்திரியின் சீடனாக கூறப்பட்டுள்ளது. இவ்வாறு திவோதாஸர் தோற்றத்தில் உள்ள தன்வந்திரி ஜாதகநூல்களின் காலத்திற்கு முற்பட்டவர் எனத் தெளிவாகிறது. எனவே முதல்வரான தன்வந்திரி அவருக்கும் முற்பட்டவர் என்பது உறுதியாகிறது.

சிலர் விக்ரமாதித்ய மன்னனின் அவையில், விளங்கிய நவரத்தினங்களில் க்ஷபணகர், அமரஸிம்ஹர், முதலானவர்களுடன் ஒருவராகக் குறிப்பிடப்பட்டுள்ள தன்வந்திரியே ஆயுர்வேத மருத்துவ ஆசிரியர்களில் புகழ் பெற்ற தன்வந்திரி எனக் கருது கின்றனர். ஆனால், இந்த தன்வந்திரி அப்பெயர் கொண்ட கவியே அன்றி மருத்துவர் அல்லர்.

காசியபரின் சிஷ்யோபகிரமணீயாத்யாயத்தில் வேள்வியில் போற்றுவதற்கு உரிய தேவதைகளைக் குறிப்பிடுகையில் பிரஜாபதி,

இந்திரன், அச்வினி குமாரர்கள் தன் ஸம்ஹிதைக்கு முதலாசிரியர் கசியபர் பெயருடன் வேறு பிரஸ்தானத்தின் ஆசிரியராகிய தன்வந்திரியின் பெயர்கூட இணைக்கப்பட்டு 'ஸ்வாஹா' என அமுது பெற உரியவராகக் குறிப்பிடப்பட்டுள்ளார். திவோதாஸர், ஸுசுருதர், தன்வந்திரியைப் பின்பற்றிய ஏனைய ஆசிரியர்கள் ஆகியவர்களின் பெயர்களும் காணப்படவில்லை. திவிப்ரணீய அத்யாயத்தில் ''பரதந்திரஸ்ய ஸமயம்'' (வேறு தந்திரத்தினில் என்பதால் வேறு தந்திரமாகிய 'சல்ய தந்திரம்' கூறப்பட்டிருப்ப தால் அது தன்வந்திரியின் தந்திரம் (பிரிவு ) என்பது தெளிவாகிறது.

ஆத்ரேய ஸம்ஹிதையிலும் 'இதிதன்வந்திரி'' (இவ்வாறு தன்வந்திரி) ''தான் வந்தரம்மதம்'' (தன்வந்திரியின் கொள்கை) ''தான்வந்தார : (தன்வந்திரியை பின்பற்றியவர்கள்) முதலியவற்றை பல இடங்களில் தன்வந்திரியின் அவ்வாறே மற்றும் அம்மரபைச் சேர்ந்த மற்ற ஆசிரியர்களின் ஆதரவுடன்கூடிய குறிப்பு காணப்படு கிறது. ஆனால், திவேதாஸர் மற்றும் ஸுசுருதர் ஆகியவர்கள் இதில் குறிப்பிடப்படவில்லை. இவ்வாறு மாரீச கசியபர், புனர்வசு, ஆத்ரேயர் ஆகியோருக்கும் தன்வந்திரி முற்பட்டவர் என்பது தெளிவாகிறது. மேலும் காசிய ஸம்ஹிதையில் தன்வந்திரி மட்டுமே குறிப்பிடப்பட்டுள்ளதால் ஆத்ரேய ஸம்ஹிதையில் தன்வந்திரியின் கொள்கையைப் பின்பற்றியவர்களும் குறிப்பிடப்பட்டுள்ளதால் தன்வந்திரியின் கொள்கை நன்கு பரவிய பிற்காலத்தில் ஆத்ரேய புனர்வசு தோன்றினார் என்பது தெளிவாகிறது. தன்வந்திரி, புனர்வசு ஆத்ரேயருக்கு முற்பட்டவர் ஆவர். பேட்ஸம்ஹிதை சரகஸம்ஹிதை களில் குறிப்பிடப்பட்டுள்ள 'தான்வந்தரகிருதம்' முதலியவற்றாலும் இது உறுதியாகிறது. ஸுசுருத ஸம்ஹிதையின் சாரீரஸ்தானத்தின் மூன்றாம் அத்தியாயத்தில் சௌனகர், கிருதவீரியர், பாராசர்யர், மார்க் கண்டேயர், சுபூதி கௌதமர் போன்ற முற்காலத்து ஆசிரியர்களின் பெயர்கள் காணப்படுகின்றன. இதற்கு மாறாக ஆத்ரேய, காசிய ஸம்ஹிதைகளில் காங்காயனர் முதலியவர்களின் பெயர்களும் காணப்படுகின்றன. டல்ஹணரின் ஸுசுருத உரையில் சிலருடைய கருத்தின்படி திவோதாஸரின் சீடர் காங்காயனரெனக் குறிப்பிடப் பட்டுள்ளது. இந்நிலையில் திவோதாஸரின் சீடரான காங்காயனர் ஆத்ரேய காசியஸம்ஹிதைகளில் குறிப்பிடப்பட்டுள்ளதால், திவோதாஸர் மற்றும் தன்வந்திரி ஆத்ரேயர், கசியபர் ஆகியவர் களுக்கு முற்பட்டவர் என்பது மேலும் உறுதியாகிறது.

ஹரிவசம்ச புராணத்தில் தன்வந்திரி பரத்வாஜரிடம் ஆயுர் வேதம் கற்றதாகவும், திவோதாஸர் மூலம் பரத்வாஜரின் ஆசிரமம் சேர்ந்ததாகவும் குறிப்பிடப்பட்டுள்ளது. மூன்று தலைமுறை களுக்குப் பிற்பட்ட தன்வந்திரி திவோதாஸருடன் தொடர்பு கொண்டிருப்பதைக் காணும்போது பரத்வாஜர் ஒருவர்தானா, அல்லது அந்த மரபில் தோன்றிய வேறு ஒருவரா என்பது அறிய சான்று ஏதும் இல்லை. சரகஸம்ஹிதையின் துவக்கத்திலும், பரத்வாஜரிடம் ஆத்ரேயர் கல்வி கற்றதாகவும், பிறகு ஆத்ரேயர் பரத்வாஜரின் கொள்கையை மறுத்து கண்டித்துள்ளதும் வாதகலாகலீயமயம் அத்தியாயத்தில் 'குமாரசிர' எனும் அடை மொழியுடன் கூடிய பரத்வாஜரைக் குறிப்பிட்டுள்ளதும் கண்கூடு. இவ்வாறே காசியபர் ஸம்ஹிதையின் ரோகாத்யாயத்தில் கிருஷ்ண பரத்வாஜரின் பெயர் காணப்படுகிறது. இவ்வாறு ஆயுர்வேத நூல்களில் பரத்வாஜர்கள் பலர் ஆசாரியர்களாகக் கூறப்பட்டுள்ளனர். வேறு வேறு நபர்களாகிய பரத்வாஜரின் பெயர் கொண்டவர்களில் ஒருவர்.

தன்வந்திரி, மாரீசகச்யப, ஆத்ரேய புனர்வசு திவோதாஸர் களின் சம காலத்தில் விளங்கியிருந்தார் எனலாம். ஆத்ரேய புனர் வசு, மற்றும் மாரீச கச்யபர்களால் குறிப்பிடப்பட்ட தன்வந்திரி முதல்வரான தன்வந்திரியின் மரபில் தோன்றியவராகையால் அப்பெயரால் போற்றப்பட்ட திவோதாஸராகவும் இருக்கக்கூடும். ஆயினும், கசியபரால் 'ஸ்வாஹா' என வேள்வி பெறுவதற்கான தேவதைகளில் ஒருவராகவும் தன்வந்திரி பாராட்டப்பட்டுள்ளதால் ஆத்ரேய கசியபர்களால் காசி மன்னனாகப் புகழப்பட்ட திவோ தாஸர் போன்ற சிறப்பு விளக்கும் அடைமொழி இன்றி குறிப்பிடப் பட்டுள்ளதால், மகாபாரதத்தின்படி தன்வந்திரி ஆயுர்வேதத்தின் எண்வகைப் பிரிவுகளுக்கும் ஆசிரியராக, அவரது ஸம்ஹிதை முற்காலத்தில் விளங்கியதாகக் குறிப்பு காணப்படுவதால், மூல தன்வந்திரியின் நூலில் காணப்படும் பொருள்களையே ஆத்ரேய கசியபர்கள் தத்தம் நூல்களில் தன்வந்திரியின் கொள்கை என எடுத்துக்கூறியுள்ளனர் என்பது தெளிவாகிறது. முன்கூறியபடி திவோதாஸர் எனும் பெயர் கொண்ட மன்னனுடன் வந்த காலவரை குறித்து மாரீசகாசியபரின் ஆசிரமம் மட்டும் மகாபாரதத்தில் குறிப்பிடப் பட்டுள்ளதால் திவோதாஸரின் காலத்தில் மாரீசகசியபர் ஆசிரமத்தில் வசித்திருக்கலாம். இவ்வாறு மாரீசகசியபரின் காலம் தன்வந்திரிக்குப் பிறகு திவோதாஸருக்கு முன்பு என அறியலாகிறது. சரக காசியப

ஸம்ஹிதைகளில் ஆத்ரேயரால் மரீசிகயர், மரிசிகசியபரால் புனர்வசு ஆத்ரேயர் குறிப்பிடப்பட்டுள்ளதால் ஆத்ரேய ஸம்ஹிதையின் வாத கலாகவ்ய அத்யாயத்தில் மரீசிகசியபருடன் ஆத்ரேய புனர்வசு உரையாடிய வரலாறு குறிப்பிடப்பட்டுள்ளதால், இருவரிடத்திலும், அதைப் போலவே அல்லது சிறிது வேறுபாடுகள் பரத்வாஜருடைய குறிப்பு காணப்படுவதால் இந்த மூவர் ஆசிரியர்களும் ஏறக்குறைய ஒரே காலத்தில் இருந்தவர்கள் என்பது அறியலாகும்.

**ஸுசுருதர்:**

ஸுசுருத ஸம்ஹிதையில் அந்நூலின் ஆசிரியர்கள் விசுவா மித்ரரின் புதல்வராகிய ஸுசுருதர் எனத் தெரிய வருகிறது. சக்ரதத்தா எனும் நூலிலும் அதன் உரையில் அவ்வாறே குறிப்பிடப்பட்டுள்ளது. மகாபாரதத்திலும் விசுவாமித்ரரின் புதல்வர்களின் பெயர்களில் ஸுசுருதர் என்புதும் ஒன்று, ரிக்வேதத்தில் பல மந்திரங்களைக் கண்டு கொண்டவர். இராமபிரானுக்கு வில்வித்தை கற்றுக் கொடுத்தவர். மகரிஷி விசுவாமித்திரர் வேறு ஒருவர் எனத் தெரிய வருகிறது. உபநிஷத்துக்களின் காலத்தவரான திவோதாஸரின் சீடராக ஸுசுருதர் கூறப்பட்டிருப்பதால், ஸுசுருத ஸம்ஹிதையில் கிருஷ்ணன் பெயர் காணப்படுவதால் கச்யபர் மற்றும் ஆத்ரேயரைப் போல விசுவாமித்ரரின் கோத்திரத்தில் பிறந்தவரின் மகனாகி ஸுசுருதர் திவோதாஸரைப் போல உபநிஷத் காலத்தில் கிருஷ்ண பகவான் தோன்றிய காலத்திற்குப் பிற்பட்டவராகக் கூடும்.

விசுவாமித்திரர் தம் மகனான ஸுசுருதரை காசி மன்னனான தன்வந்திரியிடம் (திவோதாஸர்) மருத்துவம் கற்க அனுப்பியதாக பாவபிரகாசம் எனும் நூலிலும் கூறப்பட்டுள்ளது. இந்த விசுவா மித்திரரின் வரலாற்றுக் குறிப்புகள் ஏதும் கிடைக்கவில்லை.

ஸுசுருத ஸம்ஹிதையின் காலத்தைப் பற்றி ஆராய்ந்த மேலை நாட்டு அறிஞர் ஹஸ் (HASS) என்பவர் ஸுசுருதர் முதலானோர் 12வது நூற்றாண்டினர் என்று கூறுகிறார். ஜோன்ஸ் வில்ஸன் (Jones Willson) என்பவர் 9–10 நூற்றாண்டுகளுக்கு இடைப்பட்ட காலத்தவர் எனவும், மற்றும் சிலர் நான்காம், ஐந்தாம் நூற்றாண்டைச் சேர்ந்தவர் எனவும் குறிப்பிட்டுள்ளனர். மேக்டொனால் என்பவர் கி.பி. நான்காம் நூற்றாண்டிற்கு முற்பட்டவரல்லர் என்கிறார். வாபர் ஓலைச்சுவடிக்கு ஏற்ப சரகம் மற்றும் ஸுசுருதர்களிடையே கருத்து ஒற்றுமை காணப்படுவதுடன் சொற்களிலும்ஒற்றுமை காணப்படு கிறது எனச் சான்று கூறுகிறார்.

ஹச் கோவென் (H. Goven) என்பவரோ ஸுசுருதர் எனப் பெயர் கொண்டவர் இதுவரை பிறந்ததே இல்லை எனவும், ஒருவேளை தோன்றியுள்ளார் எனக் கருதுவோராயின் அவர் ஸோக்ரடீஸ் என்பவரே எனக் கூறுகிறார்.

இவ்வனைத்தையும் உற்று நோக்கும்போது தெரிந்து கொள்ளத்தக்க பொருள் பின்வருமாறு. ஏறக்குறைய இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் தத்துவ நூலாசிரியர் நாகார்ஜுனர் இயற்றிய 'உபாயஹ்ருதயம்' எனும் தத்துவ நூல் கிடைத்துள்ளது. நம்நாட்டு முதல் வடமொழி நூல் கிடைக்காவிட்டாலும் அதன் பண்டைய சீனமொழி பெயர்ப்பு நூலை ஒட்டி மீண்டும் எமது ஆருயிர் நண்பர் துச்சி எனும் பெரியார் அதை வடமொழியில் மொழிபெயர்த்து வெளியிட்டுள்ளார். அந்நூலின் துவக்கத்தில் ஏனைய தந்திரங்களைப் பற்றிக் கூறுகையில் ''ஒஷதிவித்யா ஷட்விதா – ஓஷதி நாம, ஓஷதி குணாம், ஓஷதிரஸ; ஓஷதிவீர்ய; ஸந்நிபாதோ, விபாகச்சேதி பைஷஜ்யதர்மா'' மருத்துவத்தைச் சேர்ந்த முக்கியப் பொருள் களைக் கூறிப் பிறகு அந்தச் சாத்திரத்தைப் பற்றிக் கூறுகையில், ''யதாஸுவைத்யகோ பேஷஜகுசலோ மைத்ர சித்தேந சிக்ஷக : ஸுசுருத'' என மருத்துவக் கல்விக்கு ஆசிரியராக பாராட்டி ஸுசுருதரின் பெயரைக் குறிப்பிட்டுள்ளார். இவ்வாறு இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்டவரான நாகார்ஜுனரின் நூல் ஸுசுருதரின் காலத்தைக் கணக்கிடுவதில் மறுக்க ஒண்ணாத சான்றாகும்.

மேலும் முன்பு குறிப்பிட்டபடி ''கோடாங்க்' எனும் இடத்தில் போஜபத்திரம் எனும் இலை மேல் வரையப்பட்ட நூலாகிய நாவநீதகம் எனும் நூலின் எழுத்துக்களைக் காணும்போது அறிஞர்கள் அனைவரும் மூன்றாம் அல்லது நான்காம் நூற்றாண்டைச் சார்ந்தவை என முடிவு செய்துள்ளனர். இன்றிருப்பது போல விரைவாகச் செல்ல ரயில், விமானம் போன்ற ஊர்திகளோ, தொலைபேசி போன்ற செய்திகளை விரைவாக அறியத்தக்க கருவிகளோ, வானொலி போன்றவையோ இல்லாத காலத்தில் நம் நாட்டு நூல் ஒன்று எங்கோ கண்ணுக்கு எட்டாத தொலைவில் உள்ள பகுதியில் பரவி விளங்கி இருந்தது என்றால் அதற்கு எத்தனை காலம் பிடிக்கும் என்பதை நாம் ஊகம் செய்து அறியலாம். நூல் எழுதப்பட்ட காலம் அதற்கும் தொன்மையானது எனலாம். இந்தப் பண்டைய காலத்து நூலில் ஆத்ரேய புனர்வசு மற்றும் அவரைப் பின்பற்றிய க்ஷாரபாணி,

ஹாரீதர், ஜாதுகர்ணர், பராசரர், பேடர் மற்றும் காச்யபர், ஜீவகர், ஸுசுருதர் போன்றவர்களின் பெயர்களும் அவர்களது பெயர்களைக் கொண்ட மருந்துகளும் குறிப்பிடப்பட்டுள்ளன.

அந்நூலில் கூறப்பட்டுள்ள சில மருந்துகளின் பெயர்கள் இன்றுள்ள சரக ஸம்ஹிதையில் காணப்பட்டாலும், அவை அந்நூலில் ஆத்ரேயரின் பெயரிலேயே குறிப்பிடப்பட்டுள்ளன. சரகர், நாகார்ஜுனர், ஆகியவர்களின் பெயர்கள் அந்நூலில் காணப்படவில்லை.

சரகரின் பெயரால் வழங்கப்படும் சரகஸம்ஹிதையில் தோற்றத்திற்குப் பிறகு நாவநீதகம் தோன்றியிருந்தால், வாக்படம் போன்றவற்றைப் போல அந்நூலைப் பற்றிய குறிப்பு இந்நூலில் தவறாமல் இடம் பெற்றிருக்கும். அவ்வாறின்மையால் இந்நூல் சரகஸம்ஹிதைக்கு முற்பட்டதெனத் தெரிகிறது. இந்நூலாசிரியர் பௌத்த மரபினை சேர்ந்தவராக இருப்பினும், மருத்துவத்தில் அன்று சிறப்புற்று விளங்கிய பௌத்த மத ஆசாரியர்களின் பெயர் நாகார்ஜுனரின் பெயர்ஆகியவை இந்நூலில் இடம் பெற்றிருக்கும், எனவே இந்நூல், ஆத்ரேயர், அவரைப் பின்பற்றியவர்கள், ஸுசுருதர், காசியபர் ஜீவகர் ஆகியவர்களுக்குப் பிறகு ஆனால் நாகார்ஜுனருக்கு முன்பு இந்நூலில் காணப்படும் ஸுசுருதர் தோன்றியவர் எனலாம். ஸுசுருதர் நாகார்ஜுனர், நாவநீதகம் ஆகியவற்றிற்கு முற்பட்டவர் என்பது மட்டும் அல்ல, மகாபாஷ்யகாரர் தத்திதேஷ்வசாமாதே (7.12.117) சாசபாரிதிவானா முப்ஸங்க்யானம் (2.1.170) என்பனவற்றின் வார்திகத்தில் ''குதபவாஸர் ஸௌச்ருத குதபாஸஹச்ருத' எனக் குறிப்பிடுவதால் இவர் மகாபாஷ்யகாரர் மற்றும் வஸ்திககாரர் ஆகியவர்களுக்கும் முற்பட்டவர் என்பது தெளிவு. மேலும் பாணினி கார்த்தகௌ பாதயுச்சா எனும் சூத்திரத்தில் ஸௌச்ருத பார்திவார் என்பதில் அபத்ய (மகன்) எனும் பொருளில் 'விகுதியுடன் கூடிய ''ஸௌச்ருத எனும் சொல்லைக் குறிப்பிட்டிருப்பினும் ஸுசுருதர் மட்டுமல்லாது அவரது மரபைச்சேர்ந்த அல்லது சீடர்கள் மற்றும் தொடர்பு உள்ளவர்கள் கூட பாணினிக்கும் முற்பட்டவர்கள் எனத் தெளிவாகிறது.

## மேலை நாட்டு அறிஞர் வேவர் என்பவரின் கருத்து பின்வருமாறு :

மகாபாஷ்யகாரர் ஸுச்ருத ஸௌச்ருத என மெய்யெழுத்து இறுதியில் கொண்ட ஸுச்ருதி என்பதையே கூறியுள்ளார். கார்த

கௌஜமாதி கணத்தில் ஸுசுருதசப்தம் இருந்தாலும் பிறகு அது பிரக்ஷிப்தம் (இடைச் செருகல்) ஆனபடியால் பாணினி அதைக் குறிப்பிட்டதாக உறுதியாகக் கூற அவகாசம் இன்மையால், பாஷ்யகாரர் அந்தச் சரித்திரத்திற்கு உரை எழுதாமையால், அது பாணினியின் கொள்கை எனக் கருத இடமின்மையால், பாஷ்யகாரர் ஸுசுருதர் மருத்துவரெனக் குறிப்பிடாமையால் இந்நூலில் கூறப்பட்டுள்ள ஸுசுருதர் மருத்துவரான ஸுசுருதரே எனக் கருத இடமில்லை.

## இந்தக் கருத்து சரியானதல்ல :

பிருத் – பிருத:, கர்மகிருத் – கர்ம.கர : எனும் சொற்களைப் போல ஹலந்த (மெய்யெழுத்தை இறுதியில் கொண்ட) ஸுசுருத் எனும் சொல் 'க்விப்' எனும் விகுதியைக் கொண்டது. இந்த இரு சொற்களிலும் விகுதிகள் மட்டும் வேறுபட்டுள்ளன. ஆதலால் இரு சொற்களும் ஒரே பொருளைக் குறிப்பிடுவனவாகும். 'இகோ குறை விருத்தி' எனும் சூத்திரத்தின் உரையில் இறுதியில் உள்ள 'இ' 'உ' எனும் விகுதி கொண்டது. இந்த இரு சொற்களிலும் விகுதிகள் மட்டும் வேறுபட்டுள்ளன. ஆதலால் இரு சொற்களும் ஒரே பொருளைக் குறிப்பிடுவனவாகும். 'இகோ குறை விருத்தி' எனும் சூத்திரத்தின் உரையில் இறுதியில் உள்ள இ' உ' எனும் எழுத்துக் களுக்கே குணம் எனும் இலக்கண விதி பொருந்தும் எனவே, அக்னி, வாயு, பப்ரு, மாடு எனும் 'உ, இ.' இறுதியில் உள்ள சொற்களுக்கே குணம் எனும் விதி பொருந்தும். உபதா இறுதி எழுத்துக்கு முன் எழுத்தாக உள்ள அதாவது அலோந்த்யாத் பூர்வம் உபதா என்றபடி சொல்லின் இறுதி எழுத்துக்கு முன்புள்ள (இ' 'உ' களுக்கு குணவிதி பொருந்தாது. இதனால் ஹலந்த (மெய் எழுத்து இறுதியில் உள்ள) குணம் வாராதாகையால் பாஷ்யகாரர் ஸுசுருதஸௌச்ருத எனக் குறிப்பிட்டுள்ளார். ஹலந்த ஸுசுருத சப்தத்தைப் போல அதந்த ஸுச்ருத சப்தத்தாலும் ஸௌச்ருத எனும் சொல் ஏற்படும். பாப்ரப மாண்டவ்ய எனும் சொற்கள் பப்ரு, மண்டு எனும் சொற்களால் மட்டும் ஏற்படும். எனவே இதில் அடிப்படை சொற்களைக் கூற வேண்டிய தேவை இல்லை. அதனால் மண்டு : மாண்டவ்ய எனக் குறிப்பிடாமல் மாண்டவய என்று மட்டுமே குறிக்கப்பட்டுள்ளது. இவ்வாறே ஸௌச்ருத சப்தம் மெய்யெழுத்து இறுதியில் கொண்ட ஸுச்ருத என்ற சொல்லிலிருந்து மட்டும் ஏற்படுவதானால்

அப்பொழுது மெய் யெழுத்தை இறுதியில் கொண்ட ஸுச்ருத் என்ற சொல்லைக் குறிப்பிட வேண்டிய தேவை இல்லை. மெய்யெழுத்தை இறுதியில் கொண்ட ஸுச்ருத் என்ற சொல்லிலிருந்து தோன்றுவது போல உயிரெழுத்தை இறுதியில் கொண்ட ஸுச்ருத எனும் சொல்லிலிருந்தும் ''ஸௌச்ருத'' எனும் சொல் தோன்றும். ஆனால் உபதையில் உள்ள இ, உ என்னும் எழுத்துக்களுக்கு விருத்தி எனும் இலக்கண விதி தோன்றுவதற்கு எடுத்துக்காட்டாக உயிரெழுத்தை இறுதியில் உள்ள ஸுசுருத சப்தம் பயனில்லை. அதனால் உயிரெழுத்தை இறுதியில் கொண்ட ஸௌச்ருத எனும் சொல்லுடன் பொருள் மாறுபாடு இல்லாவிடினும் மூலசப்தமான ஸுச்ருத் என்பதுடன் ஸுச்ருத் - ஸௌச்ருத எனச் சொல்வது சிறப்பான பொருள் தரும். இவ்வாறே தத்திதே ஷ்வசாமாதே (7.2.117) எனும் சூத்திரத்தில் விரிவுரையில் இறுதியில் வயதை கொண்ட சொல்லுக்கு விருத்தி முறை ஒருஅதற்கு மாறாக,எதில் முதலில் உள்ள உயிரெழுத்துக்கு விதித்தமுறை தோன்றுவதற்கு உயிரெழுத்தை இறுதியில் கொண்ட ஸுசுருத சப்தத்திற்கு 'உபதாவிருத்தி' ஏற்படாது ஆகையால் மெய்யெழுத்தை இறுதியில் உள்ள ஸுசுருத் எனும் சொல்லே இதற்கு எடுத்துக்காட்டு ஆகும் என்பதால் பாஷ்யகாரர் ஸுச்ருத் என்பதுடன் ஸௌச்ருத சப்தத்தை இணைத்துக் கூறியுள்ளார். இவ்வாறு இரண்டு இடங்களிலும் மெய்யெழுத்தை இறுதியில் கொண்ட ஸுசுருத் சப்தத்தைத் தந்து உயிரெழுத்தை இறுதியில் உள்ள சொல்லைத் தவிர்த்ததனால் உயிரெழுத்தை இறுதியில் உள்ள சொல்லாலும் ''ஸௌச்ருத'' எனும் சொல் தோன்றும் என்பது தெளிவாகிறது. இதனால் கார்த்தகௌஜப முதலான சூத்திரங்களில் குறிப்பிடப்பட்டுள்ள ஸௌச்ருத பார்திவ (கோத்ராந்ததே வாஸீ மாண ப்ராம்ஹணேஷு க்ஷேபே' (6.2.69) சூத்திரத்தில் குறிப்பிடப்பட்டுள்ள பார்யாஸௌச்ருத எனும் இடங்களில் காரணப் பொருளைக் குறிப்பிடுவதற்காகக் காசிகா, பதமஞ்சரி, நியாசம் முதலான நூல்களில் ஆசிரியர்கள் சில இடங்களில் ஸுச்ருதஸ்யசாத்ரா ஸௌச்ருத ஸுச்ருதாபத்யம் ஸௌச்ருதம் எனவும், சில இடங்களில் பகஸ்யசித் ஸுச்ருதோபத்யம் ஸௌச்ருத எனும் கூற்றுகளால் மெய்யெழுத்து மற்றும் உயிரெழுத்து ஆகியவற்றை இறுதியில் கொண்ட இருவகைச் சொற்களாலும் ஸௌச்ருத் எனும் சொல் தோன்றுவதைக் கூறியுள்ளார். இதனால் தொல் இலக்கண ஆசிரியர்கள் உயிரெழுத்து மற்றும் மெய்யெழுத்துக்களை இறுதியில் கொண்ட இருவகை

ஸுசுருத, ஸுசுருத் எனும் சொற்களைக் குறிப்பிட்டுள்ளமை தெளிவாகிறது. இங்கு ஒரு கேள்வி எழுகிறது. யாதெனில், வார்த்திககாரர் மற்றும் பாஷ்யகாரர் ஆகியவர்களால் கூறப்பட்ட 'குதபஸௌச்ருதர்' என்பதும், பாடத்தைக் கொண்டவர் கூறும் பார்த்திவ ஸௌச்ருத என்பதிலும் மெய்யெழுத்தை இறுதியில் கொண்ட ''ஸுசுருத்'' எனும் சொல்லால் ஸௌச்ருத சப்தம் தோன்றியது குறிப்பிடப்பட்டுள்ளதா அல்லது உயிரெழுத்தை இறுதியில் கொண்ட சொல்லா, இரண்டிற்கும் உள்ள வேற்றுமை என்ன என்பதாகும்.

பாணினி உபதேசம் செய்த நூலில் (இன்று) காணப்படும் கண பாடங்களில் காணப்படும் சொற்கள் அனைத்தும் பாணினியால் கூறப்பட்டவையே என்பது என் கருத்தல்ல. ஆனால் ஒரே காலத்தில் இருந்தவர்களான பாஷ்யகாரர், வார்த்திக காரர்களால் சூத்திரங்களுக்கு எடுத்துக்காட்டாகக் கூறப்பட்டிருப்பதால் கணபாடத்தில் வந்துள்ள ஸுசுருதர் எனும் சொல் சிறப்புகள் எதும் கூறப்படாமையால் விரிவுரையில்லாத சில சூத்திரங்கள் பாஷ்யத்தில் (விரிவுரையில்) அந்தச் சூத்திரங்கள் பாணினி இயற்றியவையல்ல எனக் கூறுவது வீண் துணிவு என்பது எம் கருத்தாம். பாஷ்யகாரர் விரிவுரை எழுதாத பல சூத்திரங்கள் பாணினி இயற்றியவை அல்ல என நீக்கி விடுமோமாயின் அந்தந்த அத்தியாயத்தைச் சேர்ந்த பாதங் (பகுதி)களில் இறுதியில் குறிப்பிடப்பட்டுள்ள சூத்திரங்களின் எண்ணிக்கை எவ்வாறு சரியாகும்? பாணினியின் கார்த்தி கௌஜபாதிகணத்தில் குறிப்பிடப் பட்ட சொற்களை விளக்குவதில் 'சேகரம்' முதலான இலக்கண நூல்களில் 'ஸௌச்ருதபார்த்திவா' எனும் சொல் காணப்படுவதால் வேறுவேறு ஸௌச்ருதர்கள் மற்றும் பார்த்திபர் (மன்னர்) களின் தொடர்பு உள்ளதெனத் தெரிகிறது. அவ்வாறு பார்த்திவ சப்தத்தாலும் அதற்கு முன்பு ஸௌச்ருதசப்தம் காணப்படுவதால் அக்காலத்தில் ஸௌச்ருதர்கள் மன்னர்களால் பாராட்டப்பட்டனர் என்பதும் தெரிகிறது. ''ஸௌச்ருதா: பார்தியாச்ச'' எனும் இம் உம்மைத்தொகை பன்மையாக இருப்பதால் பாணினி காலத்திலும் ஸௌச்ருதர்கள் பலர் மருத்துவர்களாக மன்னர்களுடன் தொடர்பு கொண்டிருந்தனர் என்பதும் தெளிவாகிறது. ஸுசுருத ஸம்ஹிதையின் ஸத்திரஸ்தானத்தில் யுக்தஸேனீயாத்யாயத்தில் (1) மருத்துவரால் மன்னன் நன்கு கவனிக்கப்பட்டு பாதுகாக்க படுதல், சேனைப்பாசறைகளில் மன்னனுடன் மருத்துவர் தங்கியிருக்க

வேண்டுமெனக் கூறுதல், ஆகியவற்றுடன் மன்னன் மருத்துவரை நன்கு பாராட்ட வேண்டுமென்பதும் கூறப்பட்டுள்ளது. ஸூத்திரஸ் தானத்தின் இறுதியிலும் இந்தச் சாஸ்திரத்தை மன்னர்களும் இந்தச் சாஸ்திரத்தைக் கற்று வந்தனர் என்பது தெளிவாகிறது. 'தம் தே ராஜன் பிஷஜஸ்ஸஹஸ்ரம்' (ருக்1 – 14 – 9) எனும் மந்திரப் பகுதியால் அக்காலத்தில் மன்னர்களுக்கும் மருத்துவர்களுக்கும் இடையே இருந்த தொடர்பு தெரிய வருகிறது. மகாபாரதம், கௌடில்யரின் அர்த்த சாஸ்திரம் யுத்தம் பிரகரணத்தில் சிறப்பாக அறுவைச் சிகிச்சையில் தேர்ச்சி பெற்றவர்களுடன் மன்னன் நெருங்கிய தொடர்பு கொண்டிருக்க வேண்டும் என்பது கூறப்பட்டுள்ளது. ஆயுதங்களை ஏந்தி என்றும் போர் புரியும் சேனைகளுடன் கூடிய மன்னன் அருகில் எப்பொழுதும் அறுவைச்சிகிச்சையில் தேர்ந்த மருத்துவர் இருப்பது இன்றியமையாததாகும். ஸுசுருதர் அறுவைச்சிகிச்சையில் தேர்ச்சி பெற்றவராகையால் அவரைச்சார்ந்த சீடர்களும் அத்துறையை கற்றவர்களாதலால், மன்னர்களுடன் தொடர்பு கொண்டவர்கள் ஆதல் பற்றிப் பாணினி ''ஸௌச்ருதர் பார்த்திவா என குறிப்பிட்டுள்ளதால் அந்தக் காலத்திலேயே ஸௌச்ருதர்களின் புகழ் ஓங்கியிருந்தது எனத் தெரிகிறது. காசிகையில் ஸௌச்ருத பார்த்தவா என்றொரு பாடம் காணப்படுவதால் ஸௌச்ருதர்களை மன்னர்கள் பாராட்டிய புகழ் பரவியிருந்தது என அறியலாம். (வடமொழி) இலக்கண நூல்களினால் ஸுசுருதர் மருத்துவக் கல்வி ஆசிரியர் என்பது புலனாகாவிடினும் ஸுசுருதஸ்யசாத்ரா ஸௌச்ருதர் (ஸுசுருதருடைய சீடர்கள் ஸௌசுருதர்கள்) என ஸௌசுருத சப்தத்திற்குப் பொருள் விளக்கம் காசிகாகாரர், நியாஸகாரர் முதலியவர்களால் கொடுக்கப் பட்டுள்ளதால், மூலவரான ஸுசுருதர் கல்விக்கு ஆசிரியர் என்பது தெளிவாகிறது. கல்வி மரபைப் பரவச் செய்தவர் என்பது சல்ய தந்திரத்தில் புகழ் பெற்றவரான ஸுசுருதருக்கே பொருந்தும் அல்லாது வேறு ஒருவர் அத்தகையவர் இருந்தார் என்பதற்கு வேறு சான்றுகள் இல்லை. மருத்துவ ஆசிரியர்களான ஸுசுருதர், நாகார்ஜுனரால் உபாயஹ்ருதயம் என்பதில், வாக்படகம், நாவநீதகம், ஸ்வரஸமுச்சயம் போன்ற நூல்களில் ஜயவர்மனால் நிறுவப்பெற்ற கல்வெட்டில் குறிப்பிட்டுள்ளார். இந்நூலுக்கு அரபி முதலான மொழிகளில் மொழி பெயர்ப்புகள் காணப்படுகின்றன. ஹரிவம்ச புராணம் போல உபநிஷத்துக்களிலும் திவோதாஸரும் போற்றப் பட்டிருக்கிறார். ஸுசுருதஸம்ஹிதையில் விசுவாமித்திரருடைய குமாரர் ஸுசுருதர் திவோதாஸரிடம் மருத்துவம் கற்றதாகக்

கூறப்பட்டிருக்கிறது. மகாபாரதத்திலும் விசுவாமித்திரருடைய மைந்தர்களின் பெயர்களில் ஸுசுருதரின் பெயரும் காணப்படு கிறது. இவை அனைத்தையும் நோக்கும்போது முன்காலத்தில் இந்த ஸுசுருதர் சல்ய சிகிச்சையில் புகழ் பெற்று வந்துள்ளது தெளிவாகிறது. ஸுசுருத ஸம்ஹிதை வேத மரபினைச் சார்ந்துள்ள பொருள்களுடன் கூடியிருப்பதும், பௌத்த மரபினைச் சார்ந்ததற்கு அறிகுறிகள் ஏதும் இந்நூலில் காணப்படாமையினாலும், சௌனகர், கிருதவீரியர், பாராசர்யர், மார்க்கண்டேயர், ஸுபூதி, கௌதமா போன்ற முற்காலத்து ஆசிரியர்களே இந்நூலில் குறிப்பிட்டுள்ளமையாலும், திவோதாஸர் ஸுசுருதர் ஆகியவர் களின் பெயர்கள் ஸ்வரப்ரக்ரியையில் எடுத்துக்காட்டிற்குக் குறிப்பிடப்பட்டுள்ளதாலும் ஸுசுருதா சாரியர் மிகப்பண்டைய காலத்தவர் எனத் தெரிகிறது. இவ்வாறு மிகத் தொன்மையான காலத்தில் புகழ் பெற்று எல்லோருடைய நினைவிலும் சிறந்த அறுவைச் சிகிச்சை நிபுணராகி விளங்குபவரை விட வேறு ஒரு ஸுசுருதர் இருந்தாரெனக் கற்பனை செய்வது வீண் முயற்சியாகும்; எனவே இலக்கண சூத்திரம் இயற்றிவர், வார்தீககாரர் (வார்திகம் எனும் முறையில் உரை எழுதியவர்) பாஷ்யகாரர் (விரிவுரை இயற்றியவர்) ஆகியவர்களால் குறிப்பிடப்பட்ட ஸுசுருதர் இவரேயாவர் என்பதும், பாணினிக்கு முற்பட்ட திவோதாஸரைப் போல உபநிஷத்துக்களின் காலத்தில் விளங்கியவர் என்பதும் தெளிவாகிறது. வலிமையுள்ள முற்காலத்துச் சான்றுகளை விட்டு விடுவது தகாது.

விமாக்லானதோ விசேஷ பிரதிபந்திநஹி ஸந்தேஹா தலக்ஷணம் (ஐயம் தீர்ப்பதில் விரிவுரையை விட உண்மையாகக் கொள்ளத் தக்க சான்றுகள் வேறில்லை) எனவும் ஆன்றோர் கூறுவர் அன்றோ.

மேலும் அக்கினி புராணத்தில் (அத். 279-292) மனிதர்கள், குதிரைகள், ஆவினங்கள் பற்றிய ஆயுர்வேதத்தைப் பற்றிய ஸுசுருதர் ஆவலுடன் வினவ ஆசிரியர் தன்வந்திரி அம்முறை களையும் உபதேசம் செய்தார் எனத் தெரிவதால், ஸுசுருதர் மனிதர்களுக்கு அல்லது குதிரை, மாடு போன்ற விலங்குகளுக்கான மருத்துவத்திலும் கைதேர்ந்தவர் என்பது தெளிவாகிறது. அக்கினி புராணத்தில் குறிப்பிடப்பட்டுள்ள ஸுசுருதரும் தன்வந்திரியின் தொடர்பினால் ஸுசுருதஸம்ஹிதையின் ஆசிரியரே எனத் தெரிகிறது. ஒரு ஆசிரியர் பலவகை விஞ்ஞானங்களைக் கற்றிருப்பது பரவ

லாகக் காணப்படுவதேயாம். சாலிஹோத்ரர் இயற்றிய நூலில் சீடரின் பெயர் ஸுசுருதர் எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. குதிரைகளுக்கான மருத்துவ நூல் இயற்றிய சலிஹோத்ரரைப் பற்றி திருகிரீந்த்ரநாத் என்பவர் விரிவாக ஆராய்ந்துள்ளார். கல்கத்தாவில் வெளியிடப் பட்டுள்ள ஜயதத்தரின் அச்வசிகிச்சை எனும் நூலின் முன்னுரையில் சில விஷயங்கள் குறிப்பிடப்பட்டுள்ளன. இந்தப்ரயாருரைப் பற்றிய சிறப்பான விளக்கங்களை அதில் காணலாம். சாலிஹோத்ரரின் நூலின் பகுதிகள் ஆங்காங்கு நூலகங்களில் காணலாம். நான் அவற்றைக் கண்டதில்லை. ஆயினும் முன்பு குறிப்பிட்ட ஹேமாத்ரியின் லஷ்ண பிரவாகம் எனும் நூலில் அச்வபிரகரணத்தில் சாலி ஹோத்ரரின் அச்வசாஸ்திரத்தைச் சேர்ந்த சில விஷயங்கள் எடுத்துக் கூறப் பட்டுள்ளன. அதில் ஸுசுருதர், மித்ரஜிதி, காந்தார முதலிய குமாரர்கள், கர்கர் முதலான சீடர்கள் ஆகியவர்கள் வினவ அவர்களுக்கு சாலி ஹோத்ரர் குதிரையைப் பற்றிய மருத்துவம் உபதேசம் செய்ததாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. அதில் சாலிஹோத்ரருடைய புதல்வர் ஸுசுருதர் கூறப்பட்டுள்ளார். ஆனால் இப்பகுதியில் புத்ரா : சிஷ்யாச்ச ப்ருச்சந்தி விநயேன மகாமுனிம்'' (மகாமுனியை நோக்கிச் சீடர்களும், புதல்வர்களும் அடக்கத்துடன் வினவு கின்றனர்) எனக் காணப்படுகிறது. ஆயினும் பல இடங்களில் தெளிவாக சாலிஹோத்ரரின் புதல்வர் ஸுசுருதர் எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. இதற்கு மாறாக ஸுசுருதஸம்ஹிதையில் ஸுசுருதர் விசுவாமித்ர முனிவரின் புதல்வர் எனத் தெளிவாகக் கூறப்பட்டுள்ளது. மகாபாரதம் முதலான நூல்களிலும் ஆயுர்வேத ஆசாரியர்களைக் குறிப்பிடுகையில், ஆத்ரேயர், அன்னாருடைய சீடர்களான அக்னிவேசர், ஹாரிதர், ஹாரபாணி, ஜாதுகர்ண்யர், பராசரர் பற்றிய வேறு ஆசாரியர்களின் பெயர்கள் காணப் படுகின்றன. ஆனால் தன்வந்திரி, திவோதாஸர் ஆகியவர்களின் பெயர்கள் காணப்படவில்லை. சாலிஹோத்ராவிலும், தன் வந்திரியால் குறிப்பிடப்பட்டவரும் ஆன ஸுசுருதர் ஒருவரே. ஆனால் அச்வவைத்யரான சாலிஹோத்ரரோ அவரது சீடரான ஸுசுருதரோ ஏனைய ஆயர்வேத ஆசாரியர்களுடன் அக்காலத்தில் புகழ் பெற்ற தன்வந்திரி. திவோதாஸர்களின் பெயர் களைக் குறிப்பிடாமை ஏன்? மற்றும் ஸுசுருத ஸம்ஹிதையின் ஆசிரியர் தம் தந்தை மற்றும் அச்வசாஸ்திரத்தை உபதேசம் செய்த சாலிஹோத்ரரின் பெயரை தம் நூலில் குறிப்பிடாதது ஏன்? ஏனைய மருத்துவ ஆசிரியர்களின் மருத்துவப் பொருள்களுடன் கூடியதாகிய பிற்காலத்தில் கிடைத்த உத்தரதந்திரத்திலும் ஸுசுருதர், சீர்திருத்தம்

செய்த ஆசிரியரும் இப்பெயரைக் குறிப்பிடாமை ஏன்? இவ்வாறு ஆராயும்போது சாலிஹோத்ரரின் புதல்வரும் சீடருமான ஸுசுருதர் வேறு, தன்வந்திரியிடம் மருத்துவம் கற்ற ஸுசுருதர் வேறு என்பது தெளிவாகிறது.

சாலிஹோத்ரேணகர்கேண ஸுசுருதேசைபாஷிம்த தத்வம்
மஹாஜி சாஸ்த்ரஸ்ய தத்ஸர்வமிஹம்ஸ்திதம்''

துர்லபகணரால் இயற்றப்பட்ட குதிரை மருத்துவ நூலில் உள்ள இந்தச் சுலோகம் ஸுசுருதர் குதிரை மருத்துவம் கற்றுத் தேர்ந்தவர் எனக் கூறப்பட்டுள்ளது. ஆனால் அக்கினி புராணத்தின்படி தன்வந்திரியில் சீடராகிய ஸுசுருதரும் குதிரை மருத்துவம் அறிந்தவர் எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. இந்தச் சுலோகத்தில் குதிரை மருத்துவத்தில் தேர்ந்தவராகக் குறிப்பிட்டுள்ள ஸுசுருதர் தன்வந்திரியின் சீடரா, சாலிஹோத்ரரின் சீடரா என்பது தெளிவாகத் தெரியவில்லை. சாலிஹோத்ரர் மற்றும் கர்கரின் கூட இருந்த துர்லபகணரால் கூறப்பட்ட ஸுசுருதர் சாலிஹோத்ரரின் சீடர் எனக் கொண்டால் இக்கூற்றின்படி அச்வசாஸ்திரம் கற்ற ஸுசுருதர் வேறொருவர் என்பது முடிவாகிறது. சாலிஹோத்ரர் ஆகிய ஸுசுருதரின் இயற்றியதாக இதுவரை எத்தகைய நூலும் கிடைத்திருக்கவில்லை. ஆகவே இந்த வேறொரு ஸுசுருதரைப் பற்றி ஏதும் கூற இயலாது. நூல்களால் மற்ற நூல்களில் குறிப்பிடப் பட்டுள்ளதால் ஏனைய ஆசிரியர்களால் பாராட்டப்பட்டிருப்பதால் கல்வெட்டிலும் குறிக்கப்பட்டுள்ளதால் தன்வந்திரியின் சீடரான ஸுசுருதர் புகழ் பெற்றுள்ளார். ஆனால் சாலிஹோத்ரரின் மைந்தரான ஸுசுருதருக்கு அத்தகைய பெருமை ஏதும் காணக்கிடைக்கவில்லை. அதனால் எங்கு ஸுசுருதர் காணப்பட்டாலும் அது தன்வந்திரியின் சீடரைக் குறிப்பதாகும் தவிர சாலிஹோத்ரரின் குமாரரைச் சேராது என அறியலாம்.

சிலர் இவ்விரு ஸுசுருதர்களையும் ஒருவராகவே கொண்டு, சாலிஹோத்ரரின் கூற்றினால் அவர் சாலிஹோத்ரருடைய புதல்வ ரெனவும் நகுலர் இயற்றிய அச்வ சிகித்ஸா நூலில் ''பாயாத்தஸ்ஸ துரங்க கோஷ தநம: ஸ்ரீ சாலிஹோத்ரோமுநி :'' எனத் துவக்கத்தில் உள்ள சுலோகத்தில் வந்துள்ள 'துரங்க கோஷ' என்பது அச்வ கோஷர் என முடிவு செய்து அன்னாருடைய மைந்தர் சாலிஹோத்ரி எனக் கருதுகின்றனர். முன்கூறிய கூற்றின்படி ஸுசுருதர் சாலி ஹோத்ரரின் புதல்வராகையால் ஸுசுருதர் கனிஷ்கரின் சமகாலத் தில் விளங்கிய அச்வகோஷருக்கும் பிற்பட்டவர் என்கின்றனர்.

ஆனால், நேபாளத்தில் கிடைத்த அச்வசிகிச்சையைச் சார்ந்த இரு நூல்களிலும் காப்பாகக் கூறப்பட்ட சுலோகங்களில் முன் கூறிய சுலோகம் காணப்படாமையால் இந்தக் கொள்கை மறுக்கப்படத் தக்கதாக உள்ளது. அந்தச் சுலோகத்தைச் சரியானதெனக் கருதிய போதும் சாலிஹோத்ரருடைய நூல், ஏனைய அச்வசிகிச்சையைச் சார்ந்த நூல்கள் ஆகிய நூல்களிற் துவக்கத்தில் உள்ளபடி பிரும்மா, இந்திரன் ஆகியவர்களுடன் மூலஸம்ஹிதையின் ஆசிரியர் தொடர்பு கொண்டவராகக் கூறப்பட்டுள்ளதால் சாலிஹோத்ரர் பண்டைய தொடர்புள்ளமை காலத்தவரே ஆவார் எனலாம். சாலிஹோத்ரரின் நூலில் இக்ஷ்வாகு மற்றும் சரகர் சாலிஹோத்ரரை வினவியதாகக் கூறப்பட்டுள்ளதாலும் அன்னார் பண்டைய காலத்தவர் என்பதும் தெளிவாகிறது. பஞ்சதந்திரத்தின் துவக்கத்தில் மட்டும் குறிப்பிடப்பட்டுள்ளவரல்லர். மகாபாரதம் வனபர்வத்திலும் குதிரைச் சேவகனான நளனின் வரலாற்றுடன் தொடர்புள்ளமை குறிக்கப்பட்டுள்ளது. இப்பகுதியில் குறிப்பிடப்பட்ட சாலிஹோத்ரர் குதிரையைப் பற்றிய சிறப்புப் பொருள்கள் அறிந்தவராவர் எனத் தெரிவதால் இவர் இந்த ஆசாரியரே என்பது தெளிவாகிறது. இப்பொழுது கிடைத்துள்ள சாலிஹோத்ர ஸம்ஹிதை அன்னாருடைய ...க எழுத்தாக இருக்கட்டும். அல்லது வேறு ஆசிரியரால் சீர் ...ருத்தப்பட்டதாக இருக்கட்டும் அல்லது அவரது மரபினைச் சார்ந்த வேறு ஒரு மருத்துவரால் எழுதப்பட்டதாகவும் இருக்கட்டும். அசுவசாஸ்திரமறிந்த பரமசாரியான சாலிஹோத்ரர் காலத்தால் மிகப் பழமையானவர் என்பது உண்மை. இதில் ஐயப்பாடு கொள்ள இடமில்லை. இந்தப் பண்டையகாலத்து ரிஷியை யுதிஷ்டிரருடைய சகோதரரான நகுலன் தான் இயற்றிய அசுவசாஸ்திரத் துவக்கத்தில் போற்றி இருப்பது தகுந்ததே. இதனால் முன்பின் தோன்றிய நூல்களைப் பற்றிய வரலாறு எளிதில் அறியலாம். மிகப் பண்டைய காலத்தவரான இந்த ரிஷியைத் தவிர்த்து அச்வகோஷரான (தத்துரங்க கோஷரேனும் சொல்லால்) கற்பனை செய்து கொண்டு சாலி ஹோத்ரர் அவரது மைந்தரையும் ஸுசுருதர் பேரன் எனவும் கருதுவதால் வரலாறு முழுவதும் வீண் குழப்பமாகி விடும். அச்வசாஸ்திரத்தின் முதலாசிரியர் கனிஷ்கரின் காலத்து அச்வகோஷரின் மகன் என்றால் கனிஷ்கருக்குப் பிறகே இந்நூல் தோன்றியது என்பதாகும். அப்பொழுது கௌடில்யரின் அர்த்த சாஸ்திரத்தில் விளக்கப்பட்டுள்ள குதிரை லாயநிர்மாணம், குதிரையின் விரைவு முறை, குதிரைகளின் ஜாதிகள், அவற்றிற்கு உரிய மருத்துவர்களின் பெயர்கள் முதலியன சுருக்கமாகக்

குறிப்பிடப்பட்டுள்ளன. எங்கிருந்து கிடைத்தன? அசோக மன்னனால் பாரதநாட்டு மருத்துவமுறையைச் சார்ந்து தன் நாட்டில் உள்ளவை போலவே பிற நாடுகளிலும் குதிரை போன்ற விலங்குகளுக்கான மருத்துவ நிலையங்கள் ஏற்படுத்தி இருப்பது எதன் ஆதாரத்தின் மீது செய்யப்பட்டது எனலாம்! அச்வகோஷர் புத்தமரபினைச் சார்ந்த சிறப்பான ஆசாரியர் என்பது தெளிவு. ஆனால் சாலிஹோத்ரரின் நூலில் அச்வாபிஷக் பிரகரணத்தில் வேதமரபினைச் சார்ந்த ரிஷிகளின் பெயர்கள் மட்டும் மேலும் பிரும்மகோஷம், வேதமரபின்படி வேள்வி நடத்துதல், குதிரை களைச் சார்ந்த தேவதைகளைக் குறிப்பிடுதல் போன்ற பகுதிகளில் வேதங்கள், ஸ்மிருதிகள் ஆகியவற்றின் கொள்கைகளுக்கு ஏற்ற விளக்கங்களே கூறப்பட்டுள்ளன. இதனால் சாலி ஹோத்திரர் வேதமரபைப் பின்பற்றியவர் என்பது தெளிவாகிறது.

சாலிஹோத்திரரின் நூல் மற்றும் ஸுச்ருத ஸம்ஹிதைகளில் பௌத்தமதத்தைச் சார்ந்த நிழல் கூட காணக்கிடைக்கவில்லை. ஆதலால், இவ்விருவரும் பௌத்தாசாரிகளான அச்வகோஷரின் மரபில் தோன்றியவர்களல்லர் என்பது உறுதியாகத் தெரிகிறது. அச்வகோஷர் ஸரகேதம் எனும் பகுதியில் வசித்து வந்தவர். சாலி ஹோத்திரர் வடமேற்குப் பகுதியில் வசிந்து வந்தவர் என்பதும் இதை உறுதியாக்குகிறது. அச்வகோஷரது மைந்தரெனக் கற்பனை செய்யப்பட்ட சாலிஹோத்ரரது மகனான ஸுச்ருதரும் சல்யதந்திரத்தில் தேர்ச்சி பெற்றவரான ஸுச்ருதரும் ஒருவரே எனக் கொள்வோ மாயின், கனிஷ்கர் மற்றும் அச்வகோஷரது சமகாலத்தவரான நாகார்ஜுனன் அவரது பேரனாகக் கருதப்பட்ட ஸுச்ருதரைப் புகழ் பெற்ற மருத்துவரெனப் போற்றுவதும், ஸுச்ருத ஸம்ஹிதையை நாகார்ஜுனர் சீர்படுத்தினார் என்பதும் எவ்வாறு பொருந்தும். கனிஷ்கரது காலத்தவர் என இருவர் ஸுச்ருதரையும், ஒருவரே எனக் கொண்டால், பாணினி, வார்திககாரரான காத்யாயனர், பாஷ்யகாரர் ஆகியவர்கள் ஸுச்ருதரைப் பாராட்டுவது எவ்வாறு நிகழக்கூடியதாகும்? எனவே, இவை அனைத்தையும் பொரு ளற்றவையாகும்.

தக்க சான்றுகளுடன் விக்ரம ஆண்டுக்கு முன்பு ஆறாவது நூற்றாண்டில் ஸுச்ருதர் இருந்தவர் என முடிவு செய்த ஹார்னல் (A.F. Rudolp Hoernel) கொள்கைபடியும் ஸுச்ருதர் காலத்தால் மிகப் பழமையானவர் என்பது தெரிய வருகிறது.

சிலர் முழுமையாக உறுதிப்படாவிடினும் ஸுசுருதர், கி.மு. ஆறாவது நூற்றாண்டில் இருந்தவர் என்பது பொருத்தமானது என்கின்றனர். மேலும் சிலர் பின்வருமாறு கூறுகின்றனர். ஸுசுருதரின் நூலில் ஏழுவகைக் குட்டங்கள் விளக்கப்பட்டுள்ளன. இந்நோயைப் பற்றிப் பாரதம் மற்றும் சீன நாட்டு மக்கள் ஏறக்குறைய 2500 ஆண்டுகளுக்கு முன்னரே அறிந்து கொண்டிருந்தனர். எனவே ஸுசுருதர் 2500 ஆண்டுகளுக்கு முற்பட்டவர் எனலாம்.

ஸுசுருத ஸம்ஹிதையை இலத்தீன் மொழியில் மொழி பெயர்த்தவரான ஹெஸ்லர் (Hessler) எனும் மேலை நாட்டு அறிஞரும், நம் நாட்டவரான கிரீந்த்ரநாத் முகோபாத்யாய என்பவரும் ஆங்கில ஆண்டு துவக்கத்திற்கு ஆயிரம் ஆண்டுகள் முற்பட்டவர் ஸுசுருதர் என முடிவு செய்துள்ளனர்.

இவ்வாறு வேறுவேறு நிலைகளில் ஆராய்ந்த அறிஞர்கள் செய்துள்ள ஆராய்ச்சிகளை உற்று நோக்கினால் ஸுசுருத ஸம்ஹிதையின் முற்பகுதியின் காலம் ஏறக்குறைய ஆயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்டதாகும் என்பது உறுதியாகிறது.

# ஸுசுருதஸம்ஹிதை

# உத்தரஸ்தானம்

## பொருளடக்கம்

### முப்பத்தொன்பதாம் அத்தியாயம்

### ஜ்வரபிரதிஷேதம்

முப்பத்தொன்பதாம் அத்தியாயம் முற்றும்

## நாற்பதாவது அத்தியாயம்

## அதிஸார பிரதிஷேதம்

**நாற்பதாம் அத்தியாயம் முற்றும்**

## சோஷபிரதிஷேதம் எனும் நாற்பத்தொன்றாம் அத்தியாயம்

**நாற்பத்தொன்றாம் அத்தியாயம் முற்றும்**

# குல்மபிரதி ஷேதம்
# நாற்பத்திரண்டாம் அத்தியாயம்

நாற்பத்தி இரண்டாம் அத்தியாயம் முற்றும்

## நாற்பத்திமூன்ரும் அத்தியாயம்
## ஹ்ருத்ரோக பிரதிஷேதம்



நாற்பத்தி மூன்றாம் அத்தியாயம் முற்றிற்று

## நாற்பத்தி நான்காம் அத்தியாயம்
## பாண்டு ரோக பிரதிஷேதம்



நாற்பத்திநான்காம் அத்தியாயம் முற்றும்

# நாற்பத்தைந்தாம அத்துயாயம
# இரத்தபித்த பிரதிஷேதம்

**நாற்பத்தைந்தாம் அத்தியாயம் முற்றும்.**

## நாற்பத்தாறாவது அத்தியாயம்
## மூர்ச்சா பிரதிஷேதம்



**நாற்பத்தாறாம் அத்தியாயம் முற்றும்.**

## நாறபதது ஏழாம அததுயாயம
## பானாத்யய பிரதிஷேதம்

**நாற்பத்தேழாம் அத்தியாயம் முற்றும்**

## நாற்பத்தெட்டாம் அத்தியாயம்
## திருஷ்ணாபிரதிஷேதம்



**நாற்பத்தெட்டாம் அத்தியாயம் முற்றும்**

# நாற்பத்தொன்பதாம் அத்தியாயம்
## சர்த்திபிரதிஷேதம்



நாற்பத்தொன்பதாம் அத்தியாயம் முற்றும்

# ஐம்பதாம் அத்தியாயம்
## ஹிக்காபிரதிஷேதம்

ஐம்பதாம் அத்தியாயம் முற்றும்.

## ஐம்பத்தோராம் அத்தியாயம்
## சுவாசப்பிரதிஷேதம்

ஐம்பத்தோராம் அத்தியாயம் முற்றும்.

## ஐம்பத்திரெண்டாம் அத்தியாயம்
## காசபிரதிஷேதம்

ஐம்பத்திரண்டாம் அத்தியாயம் முற்றும்

## ஐம்பத்து மூன்றாம் அத்தியாயம்
## ஸ்வரபேதபிரதிஷேதம்



ஐம்பத்து மூன்றாம் அத்தியாயம் முற்றும்

# ஐம்பத்து நான்காம் அத்தியாயம்
# கிருமிரோகப்ரதிஷேதம்



**ஐம்பத்துநான்காம் அத்தியாயம் முற்றும்.**

# ஐம்பத்தைந்தாம் அத்தியாயம்
# உதாவர்த்த பிரதிஷேதம்

ஐம்பத்தைந்தாம் அத்தியாயம் முற்றும்.

## ஐம்பத்தாறாம் அத்தியாயம்
## விஸூசிகா பிரதிஷேதம்



ஐம்பத்தாறாம் அத்தியாயம் முற்றும்.

## ஐம்பத்தேழாம் அத்தியாயம்
## அரோசக பிரதிஷேதம்



ஐம்பத்தேழாம் அத்தியாயம் முற்றும்.

## ஐம்பத்தெட்டாம் அத்தியாயம்
## மூத்ராகாத பிரதிஷேதம

**ஐம்பத்தெட்டாம் அத்தியாயம் முற்றும்.**

## மூத்ரகிருச்சிர பிரதிஷேதம்
## ஐம்பத்தொன்பதாம் அத்தியாயம்

## அறுபதாம அததுயாயம

## அமானுஷோபஸர்கப்பிரதிஷேதம்

அறுபதாம் அத்தியாயம் முற்றும்.

## அறுபத்தோறாம் அத்தியாயம்
## அபஸ்மார பிரதிஷேதம்

அறுபத்தோறாம் அத்தியாயம் முற்றும்

## அறுபத்திரெண்டாம் அத்தியாயம்
## உன்மாதபிரதிஷேதம்

அறுபத்திரெண்டாம் அத்தியாயம் முற்றும்

## அறுபதது மூனறாம அததியாயம
## ரஸபேத விகல்பம்



அறுபத்து மூன்றாம் அத்தியாயம் முற்றும்.

## ஸ்வஸ்தவிருத்தம்
## அறுபத்து நான்காம் அத்தியாயம்

அறுபத்து நான்காம் அத்தியாயம் முற்றும்.

## தந்திர யுக்தி
## அறுபத்தைந்தாம் அத்தியாயம்

அறுபத்தைந்தாம் அத்தியாயம் முற்றும்

## அறுபத்தி ஆறாம அததயாயம
## தோஷபேத விகல்பம்



அறுபத்தாறாவது அத்தியாயம் முற்றும்.

★ ★ ★

# ஸுசுருதஸம்ஹிதை
# உத்தரஸ்தானம்
# அத்தியாயப் பெயர்கள்

# ஸுச்ருதஸம்ஹிதை
# உத்தரஸ்தானம்

## ஜ்வரபிரதிஷேதம்*
## எனும்
## முப்பத்தொன்பதாம் அத்தியாயம்

இனி தன்வந்திரி பகவான் ஸுசுருதர் முதலான சீடர்களுக்கு உபதேசம் செய்தபடி காய்ச்சலுக்கு உரிய சிகிச்சை முறைகளை விளக்குவோம். 1–2

### 1. காய்ச்சலுக்கு உரிய சிகிச்சை முறைகள்

முற்பிறவியில் தேவர்களில் தான் ஒருவராகி பாற்கடலைத் தேவர்கள் கடைந்த போது அமிர்தத்தைத் தோற்றுவித்துத் தேவர்களுக்கு வழங்கி அவர்களை இறப்பும் மூப்பும் அற்றவர்களாக்கியவரும், உயர்ந்த இருக்கையில் அமர்ந்துள்ளவருமான தன்வந்திரி பகவானை ஸுசுருதர் முதலான சீடர்கள் வணங்கி இவ்வாறு கூறினர்: ''பகவான்! முன் அத்தியாயங்களில் விரணத்திற்குச் சிகிச்சை கூறும்போது விரணத்தைச் சார்ந்து தோன்றக்கூடிய துன்பங்களைச் சுருக்கமாகக் கூறினீர்கள். அவற்றைப் பற்றி விளக்கிக் கூற வேண்டுகிறோம். 3–4

---

* ஜ்வரம் – காய்ச்சல். அதற்கு உரிய சிகிச்சை முறைகளை விளக்குவதால் இந்த அத்தியாயம் ஜ்வரபிரதிஷேதம் எனும் பெயர் பெற்றது.

காய்ச்சல் முதலான துன்பங்களுடன் கூடியவருடைய விரணம் மிகவும் சிரமப்பட்டு நீக்கக்கூடியதாகும். ஏனெனில் விரணம் கொண்டவரின் உடல் வலிமையும், மாமிசமும் குறைந்திருக்கும். அதனால் கொழுப்பு முதலான மற்ற தாதுக்களும் உடலில் குறைந்து போகும். ஆகையால் விரணம் உள்ளவருக்குத் தோன்றும் மற்ற துன்பங்களுக்கும் தங்களாலும், ஆத்ரேயர் முதலான பிரும்மரிஷிகளாலும் கண்டு கொள்ளப்பட்ட சிகிச்சை முறைகளை விளக்கிக் கூறுங்கள்.'' 5–7

## 2. தந்வந்தரி பகவானின் விடை

ஸுச்ருதர் முதலான சீடர்கள் கேட்ட கேள்விக்கு தன்வந்தரி பகவான் கீழ்வருமாறு விடையளித்தார். எல்லா நோய்களுக்கும் அரசனைப் போன்றது காய்ச்சல். தக்கனின் யாகத்தில் சினம் கொண்ட பரமசிவனின் கோபம் எனும் தீயில் தோன்றியது காய்ச்சல். தாவரங்களும், நடக்கக்கூடிய உயிரினங்களுமாகிய அனைத்தையும் மிகவும் துன்புறுத்தக் கூடியது காய்ச்சல். இது வேறு வேறு உயிரினங்களில் வேறு வேறு பெயரைக் கொண்டு விளங்கும். 8–9

## 3. காய்ச்சலின் தனித்தன்மை

பிறக்கும் போதும், உயிர்விடும் போதும் மனிதர்களை இக்காய்ச்சல் பற்றித் துன்புறுத்தும். ஆகையால் இது நோய்கள் அனைத்திற்கும் அரசனைப் போன்றதெனப்படும். 10

## 4. ர் சிறப்பு

தேவர்களும், மனிதர்களும் தவிர மற்ற உயிரினங்கள் காய்ச்சலைத் தாங்கிக் கொள்ள இயலாதவையாகும். நற்செயல்களைப் புரிவதால் மனிதன் தெய்வத்தன்மையைப் பெற்றுச் சுவர்க சுகங்களை அனுபவிக்கிறான். அந்தப் புண்ணிய பலன்கள் முடிந்த பிறகு மீண்டும் மனிதனாக உலகில் தோன்றுகிறான். மனிதனுக்கு இவ்வாறு தெய்வத்தன்மை பெறக்கூடிய நிலையிருப்பதால் அவனால் காய்ச்சலை தாங்கிக் கொள்ள முடிகிறது. மற்ற உயிரினங்கள் காய்ச்சல் கண்டால் தாங்க இயலாமல் மரித்து விடும். 11–12

## 5. காய்ச்சலின் பொது இலக்கணம்

வியர்வை வெளிவராமல் தடுத்தல், உடல் முழுவதிலும் அழற்சி, உறுப்புகள் அனைத்திலும் பிடிப்பு ஆகியவை ஒன்றாகக் கலந்து மனிதனில் தோன்றுவது காய்ச்சல் எனும் நோயாகும். 13

## 6. காய்ச்சல் வகைகள்

முக்கியமாகக் காய்ச்சலில் எட்டு வகைகள் உள்ளன. அவையாவன :-

வாதபித்த கபங்களால் தோன்றுவன மூன்று. மூன்றும் கலந்து ஸந்நிபாதத்தால் தோன்றுவது ஒன்று. இரண்டு தோஷங்களாகச் சேர்ந்து வாதபித்தத்தால் தோன்றியது, வாதபகங்களால் தோன்றியது, கபபித்தங்களால் தோன்றியது என மூன்று, புறக்காரணங்களால் தோன்றுவது ஒன்று – ஆக எட்டு வகைக் காய்ச்சல்கள் கணக்கிடப் பட்டுள்ளன. 14

## 7. காய்ச்சல் தோன்றக் காரணங்கள்

மழை, கூதிர்ப்பருவம், இளவேனில் ஆகிய பருவங்களிலும், பகல்,இரவு என தாம் சீற்றமடையக் கூடிய வேளைகளிலும் முதுமை, வாலிபப் பருவம், சிறு வயது எனும் வயதைச் சார்ந்த நிலைகளிலும், சினம் கொள்ளுதல், பகலில் தூங்குதல் முதலான சீற்றம் பெறும் காரணங்களாலும் வாதம் முதலிய தோஷங்கள் சீற்றமடைந்து உடல் முழுவதும் பரவி காய்ச்சலைத் தோற்று விக்கும். இவ்வாறு தனக்கு உரிய காரணங்களால் சீற்றமடைந்த தோஷம் ஆமாசயத்தை அடைந்து அங்குள்ள செரிமானமடையச் செய்யும் சாறுடன் (Gestril Juice) சேர்ந்து அல்லது செரிமான மடையச் செய்யும் வெப்பம், தாதுக்களின் வெப்பம், தோஷங்களின் வெப்பம் ஆகியவற்றுடன் சேர்ந்துவிடும். பிறகு ரஸத்துடன் (உணவுச் சாற்றுடன்) கலந்து ரஸத்தை எடுத்துச் செல்லும் ஸ்ரோதஸ்களின் வழிகளையும், வியர்வையை வெளியேற்றும் வழிகளையும் அடைத்து சடராக்னியின் வலிமையைக் குறைத்து சடராக்னியை அதன் நிலையிலிருந்து வெளியேற்றி, அந்த வெப்பத்தை உடல் முழுவதும் பரவச் செய்யும். தோல், நகம், கண், சிறுநீர் ஆகியவற்றில் தனக்கு உரிய நிறத்தைத் தோற்றுவிக்கும். 15–18

## 8. காய்ச்சலுக்குக் காரணம்

எண்ணெய் முறை, வியர்க்கச் செய்யும் முறை, வாந்தியாகச் செய்யும் முறை, பேதியாக செய்யும் முறை முதலியவற்றைத் தவறாகவோ, அளவுக்கு மீறியோ பயன்படுத்துதல், பலவகைக் கருவிகள், மண்கட்டி, கட்டை, கல் முதலியவற்றால் அடிபடுதல், சீழ்கட்டி முதலியவை தோன்றுதல், அவை நன்கு முற்றுதல், அளவுக்கு மீறிய உழைப்பு, க்ஷயம், அசீரணம், நஞ்சு, உடலுக்குப் பழக்கமான பருவங்கள் மாறுதல், நஞ்சு கலந்த மருந்து, மலர் மணம் முதலியவற்றால் வருத்துதல், பிறந்த நட்சத்திரம் அல்லது இலக்கணத்தில் கிரஹம் சாரத்தில் வருதல், ஏவல் முறைகள், தேவதை, குரு, முதியவர் முதலியவர்களின் சாபத்தால் மனத்தில் காமம், கோபம் முதலியன தோன்றுதல், தெய்வகிரஹ பூதங்களின் செயல்களால் காலமற்ற காலத்தில் பிள்ளை பேறு பெற்றவளுக்கு அல்லது சரியான காலத்தில் பிள்ளைப் பேறு பெற்றாலும் தவறான உணவு, கூடாத பழக்கம் முதலியவற்றை மேற்கொள்ளுதல், முதன் முதலாகத் தாய்ப்பால் மார்பகத்தில் சுரக்கும் போது தோஷத்தின் சீற்றத்தால் எனும் இவற்றால் காய்ச்சல் தோன்றும். 19–22

## 9. உடலில் வெப்பம் மிகுதியாகக் காரணம்

விரைவாகப் புரவக் கூடியவையாகி உடலில் சீற்றமுற்ற வாதம் முதலான தோஷங்கள் தம் நடைக்கு மாறான நடையைப் பெற்றுள்ளபோது அத்தோஷங்களால் உடலில் உள்ள வெப்பம் தூண்டப்பெற்று தன் இருக்கையை விட்டுப் பரவி, மயிர்க் கால்களின் வழியாக வெளியேறி வியர்வை வெளிவருவதைத் தடுத்து விடும். அதனால் திடீரென நோயாளியின் உடல் வெப்பம் பெறும். இது காய்ச்சல் எனும் நோயாகும். 23–24

## 10. காய்ச்சலுக்கு முற்குறிகள்

உடலில் சோர்வு, குளிர் தோன்றுதல், மனத்தில் ஒன்றும் தோன்றாமை, உடல் நிற மாறுபாடு, வாய்ச்சுவையறியும் தன்மையில் மாற்றம் (கார்ப்பு – கசப்பு – துவர்ப்புச் சுவைகள் தோன்றுதல்), கண்களில் நீர் தளும்புதல், குளிர், காற்று, வெயில் ஆகியவை உள்ள இடத்தில் உட்கார வேண்டுமென்று விருப்பம் அல்லது வெறுப்பு தோன்றுதல், உடலை முறித்துக் கொள்ளுதல்,

உடலில் வெடித்துவிடும் போன்ற வலி, உடல் பளு, மயிர்க்கூச்சம் தோன்றுதல், உணவு, குடிநீர் ஆகியவற்றில் விருப்பமின்மை, கண்கள் இருண்டு போதல், மகிழ்ச்சியற்ற நிலை என்பன காய்ச்சல் தோன்ற முற்குறிகளாகும். வாத சீற்றத்தால் கண்களில் எரிச்சல் மிகுதல், கபத்தின் சீற்றத்தால் உணவில் விருப்பமின்மை, மூன்று தோஷங்களும் காணப்படுதல், இரண்டிரண்டு தோஷங்கள் சீற்றம் பெற்றால் அவற்றிற்கு உரிய இலக்கணங்கள் மிகுந்து காணப்படும் என்பன முற்குறிகள் என்றுணர்க. *25–28*

## 11. வாதத்தால் தோன்றும் காய்ச்சலின் இலக்கணம்

உடல் நடுங்குதல், காய்ச்சலின் கடுமை ஒருவேளை குறைந்தும் மற்றொரு வேளை மிகுந்தும் காணப்படுதல், தொண்டையும் உதடும் உலர்ந்து போதல், உறக்கமின்மை, உடலில் மிக்க வறட்சி காணப்படுதல், தலை, இதயம் உடலுறுப்புகள் ஆகியவற்றில் வலி, வாயில் சுவையின்மை, மலத்தடை, உடலை அதிக அளவில் முறித்துக் கொள்ளுதல், வயிற்றில் உப்புசம், வலியும் காணப்படுதல் என்பன வாதத்தால் தோன்றும் காய்ச்சலின் இலக்கணங்களாகும். *29–30*

## 12. பித்தத்தால் தோன்றும் காய்ச்சலின் இலக்கணம்

காய்ச்சல் மிகுதியாகக் காணப்படுதல், பேதியாதல், உறக்கம் குறைதல், பித்த நீருடன் வாந்தியாதல், தொண்டை, உதடு, முகம், மூக்கு ஆகிய பகுதிகளில் சிவப்பு நிறம் தோன்றுதல், உடலிலிருந்தும் தலையிலிருந்தும் வியர்வை மிகுதல், பிதற்றல், முகத்தில் கடுகடுப்பு, நினைவிழத்தல், மலம், சிறுநீர் வெளிவரும்போதும் அழற்சி தோன்றுதல், வெறி, நாவறட்சி, மலமும் சிறுநீரும் கண்களும் மஞ்சள் நிறம் கொள்ளுதல், தலைசுற்றல் என்பன பித்தத்தால் தோன்றும் காய்ச்சலின் இலக்கணங்களாகும். *31–32*

## 13. கபத்தால் தோன்றும் காய்ச்சலின் இலக்கணம்

உடல் பளு, குளிர், ஒக்காளம், மயிர்கூச்சம், மிக்க உறக்கம், பிராணன் முதலியவற்றின் வழிகளில் தடை, உடலில் பல உறுப்புகளில் குறைந்த அளவில் வலி, உமிழ் நீர் மிகுதல், வாய் இனிப்பாகக் காணப்படுதல், உடலில் அதிக வெப்பம்

தோன்றாமை, வாந்தி, கைகால்கள் விட்டுப் போதல், உணவு செரியாமை, சளி, உணவு குடிநீர் ஆகியவற்றில் விருப்பம் இன்மை, கண்கள் மிகவும் வெளிறிக் காணப்படுதல் என்பன கபத்தால் தோன்றும் காய்ச்சலின் இலக்கணங்களாகும். 33–34

## 14. ஸந்நிபாதத்தால் தோன்றும் காய்ச்சலின் இலக்கணங்கள்

உறக்கமின்மை, தலைசுற்றல், பெருமூச்சு, சோம்பல், உறுப்புகள் செயலற்றிருத்தல், சுவையின்மை, நாவறட்சி, மிகுதல், நினைவிழத்தல், வெறி, உடலுறுப்புகள் மரத்துப் போதல், சில நேரங்களில் அழற்சியும் சில நேரங்களில் குளிர்ச்சியும் தோன்றுதல், இதயத்தில் வலி, மிகத் தாமதமாகத் தோஷங்கள் பக்குவம் பெறுதல், பைத்தியம், பற்கள் கறுத்தல் நாவில் கடினத்தன்மை (சுரசுரப்பு) கருநிறம் தோன்றுதல், இணைப்புகளிலும், தலையிலும், என்புகளிலும் வலி, கண் பார்வை கோணலாகிக் கண்கள் அழுக்கடைந்தது போலக் காணப்படுதல், காதில் ஒலியும் வலியும் தோன்றுதல், பிதற்றல், வாய் மூக்கு முதலான சுரோதஸ்களில் பக்குவம், தொண்டையில் தெளிவற்ற ஒலிதோன்றுதல், உணர்வு நீங்குதல், மிக்க வியர்வை, மலமும் சிறுநீரும் வெகுநேரத்திற்கு சிறிது சிறிதாக வெளிவருதல் ஆகிய எல்லா தோஷங்களும் சீற்றமடைவதால் தோன்றும் ஸந்நிபாதக் காய்ச்சல் அவை அனைத்தாலும் தோன்றும், துன்பங்களைக் கொண்டிருக்கும். இக்காய்ச்சலின் தனித்தன்மையும், வகைகளும் இனிக் கூறப்படும். 35–38

## 15. ஸந்நிபாதக் காய்ச்சலின் வகைகள்

மிக்க வெப்பமோ, குளிர்ச்சியோ காணப்படாமல் குறைந்த அளவு உணர்வு கொண்டிருத்தல், நோயாளி பிரமையுடன் பொருள் களைக் காணல், குரல் கெட்டுப் போதல், நாக்கு சுரசுரப்புடன் காணப்படுதல், தொண்டை உலர்ந்து போதல், மிக்க வியர்வை, மலமும் சிறுநீரும் வெளிப்படாமல் தடைப்பட்டிருத்தல், கண் களில் நீர்ததும்புதல், இதயத்தில் இழுப்பு, இதயம் செயலற்றுப் போகும் நிலை, உணவில் வெறுப்பு, உடற்பொலிவு குறைந்து போதல், பிதற்றல் முதலான இலக்கணங்களுடன் கூடிய ஸந்நி பாதக் காய்ச்சல் அபிநியாஸக்காய்ச்சல் எனப்படும். மற்ற நூலாசிரி யர்கள் இதைச் சிகிச்சையால் தீர்க்க இயலாததாகக் கொண்டனர். மிக்க சிரமப்பட்டுத் தீர்க்கக் கூடிய நோயாகும். 39–41

மூன்று தோஷங்களும் சீற்றம் பெறுவதால் தோன்றும் ஸந்நிபாதக் காய்ச்சலில் நோயாளி நினைவின்றி தூங்கிக் கொண்டிருப்பாரானால் அது அபிநியாஸம் எனப்படும். நாள்தோறும் உடல் இளைத்துப் பொலிவிழந்து உறுப்புகள் பிடிநழுவிக் காணப் பட்டால் அது ஸந்நியாஸம் எனப்படும். 42

ஸந்நிபாதக் காய்ச்சலில் பித்தமும், வாயுவும் மிகவும் சீற்றமுற்ற ஓஜஸ் என்பது நிலையற்று நழுவிய போது உறுப்புகள் அனைத்தும் மரத்துப் போய் குளிர்ச்சி தோன்றி நோயாளி எப்பொழுதும் படுத்துக் கொண்டிருப்பதையே விரும்புவாராயின், படுத்து நினைவிழந்து காணப்படுவாராயின், சோம்பலும் பிதற்றலும் மிகுந்திருக்கு மாயின், உடலில் மயிர்க்கூச்சமும் தோன்றியிருந்தாலும், உறுப்புகள் பிடிதளர்ந்து காணப்பட்டாலும், உடல் வெப்பமும் வலியும் குறைந்து காணப்பட்டாலும் அது ஓஜஸ் தடைப்படுவதால் தோன்றும் ஸந்நிபாத காய்ச்சல் என்று உணர்க. 43–44

ஏழாம் நாள், பத்தாம் நாள் அல்லது பன்னிரண்டாம் நாள் மீண்டும் ஒருமுறை காய்ச்சல் மிகுந்து தணியும் அல்லது நோயாளி யைக் கொன்று விடும். 45

## 16. துவந்துவக் (இரண்டு தோஷங்களால் தோன்றும்) காய்ச்சல் இலக்கணம்

இரண்டிரண்டு தோஷங்கள் சீற்றமடைவதால் தோன்றும் காய்ச்சல் மூன்று வகைப்படும். 46

## 17. வாதபித்தக் காய்ச்சல் இலக்கணம்

நாவறட்சி தோன்றுதல், நினைவிழத்தல், தலைசுற்றல், அழற்சி, உறக்கமின்மை, தலையில் வலி, தொண்டையும் வாயும் உலர்ந்து போதல், வாந்தி, மயிர்க்கூச்சம், சுவையின்மை, கண்கள் இருண்டு போதல், இணைப்புகளில் வலி, அடிக்கடி உடலை முறித்துக் கொள்ளுதல் எனும் இலக்கணங்கள் காணப்படுமானால் அது வாத பித்தங்களின் சீற்றத்தால் தோன்றும் காய்ச்சல் என அறிக. 47

## 18. வாத கபத்தால் தோன்றும் காய்ச்சலின் இலக்கணம்

இணைப்புகளில் மிக்க வலி, உறக்கம் மிகுதல், உடல் பளுவாகத் தோன்றுதல், தலை மரத்துப் போதல், மிக்க வலியும் தோன்றுதல்,

மிகுந்த சளி இருமல், வியர்வை தோன்றாமை, மிகவும் அழற்சி காணப்படுதல், காய்ச்சல் சற்று குறைந்து (நடுத்தரமான) அளவில் காணப்படுதல் என்பன வாத கபத்தால் தோன்றும் காய்ச்சல் என அறிக. 48-49

## 19. கபத்தாலும் பித்தத்தாலும் தோன்றும் காய்ச்சல் இலக்கணம்

வாயில் கபத்தால் பூச்சு தோன்றுதல், பித்தத்தின் காரணத்தால் கசப்புச் சுவை தோன்றுதல், சோம்பல், நினைவிழத்தல், இருமல், சுவையின்மை, நாவறட்சி, அடிக்கடி உடலில் வெப்பம் மிகுந்து காணப்படுதல், மீண்டும் அடிக்கடி குளிர்ச்சி ஏற்படுதல் என்பன கபபித்தங்களால் தோன்றும் காய்ச்சலின் இலக்கணமாகும். 50

(இம்மூன்றுக்கும் வேறு வகை பாடம் காணப்படுகிறது. அதன் விளக்கம் கீழ் வருமாறு)

1. உடலை முறித்துக் கொள்ளுதல், வயிறு வீங்குதல், வெறி, உடலில் நடுக்கம், இணைப்புகளில் வலி, வலுவின்மை, நாவறட்சி, பிதற்றல், உடல் முழுவதிலும் எரிச்சல் எனும் இலக்கணங்கள் காணப்பட்டால் அது வாத பித்தங்களால் தோன்றிய காய்ச்சல் என்று உணர்க.

2. வலி, இருமல், கபம் சீற்றமடைதல், குளிர்ச்சி உணரப் படுதல், நடுக்கம், பீநசம், உடல் பளுவாக காணப்படுதல், சுவை யின்மை, மலம் சிறுநீர் தடைப்படுதல் என்பன காணப்பட்டால் வாதகபங்களால் தோன்றும் காய்ச்சல் என அறிக.

3. குளுமை, அழற்சி, சுவையின்மை, உடல் மரத்தல், மிக்க வியர்வை தோன்றுதல், நினைவிழத்தல், வெறி, தலைசுற்றல், இருமல், உறுப்புகள் உடைந்து போவது போன்ற வலி எனும் இலக்கணங்கள் காணப்பட்டால் கபபித்தங்களால் தோன்றிய காய்ச்சல் என்று அறிக.

## 20. விஷமக் காய்ச்சல் தோன்றுதல்

காய்ச்சல் தணிந்து வலிமை குறைந்துள்ளபோது தவறான உணவு, கூடாத பழக்கம் என்பனவற்றால் உடலில் குறைந்த அளவில் உள்ள தோஷம் வாதத்தால் தூண்டப்பட்டு சீற்றமடைந்து

கபத்தின் நிலைகளை ஒட்டி ஸந்ததம், அந்யேத்யுஷ்கம், திருதீயகம், சாதுர்த்தகம், பிரலேபகம் எனும் காய்ச்சல்களைத் தோற்றுவிக்கும்.

## 21. தோஷகதிஜன்ய ஜ்வரம்

மார்புப்பகுதியில் நின்ற தோஷம் ஒரு நாளில் அப்பகுதி யிலிருந்து ஆமாசயத்தை (வயிற்றை) அடையும். அங்கிருந்து அடுத்த நாளில் அன்யேத்யுஷ்கம் (தோஷகதீஜன்ய ஜ்வரம்) எனப்படும் காய்ச்சலைத் தோற்றுவிக்கும்.

## 22. பிரலேபகம் எனும் காய்ச்சல்

பிரலேபகக் காய்ச்சல் என்பது ராஜயக்ஷ்மா (எலும்புருக்கி) எனும் நோய் கொண்டவரை அழிப்பதாகும். இதன் வேகம் மிக மந்தமாகும். சிகிச்சையால் மிகவும் கஷ்டப்பட்டு தீர்க்கக்கூடியதும் இரஸம், இரத்தம் முதலான தாதுக்களை உலர்த்திவிடுவதும், சிகிச்சையால் மிகக் கஷ்டப்பட்டு தீர்க்கக் கூடியதுமாகும். 54

## 23. சதுர்த்தகம் முதலிய விஷக்காய்ச்சல்களின் இலக்கணம்

கபத்தின் இருக்கை இதயம் ஆமாசயம் முதலிய இடங்களில் இருக்கும் தோஷம் இரண்டாவது, மூன்றாவது அல்லது நான்காவது நாட்களில் மாறிமாறி மிகவும் கஷ்டப்பட்டு சிகிச்சையால் தீர்க்கக் கூடிய சதுர்த்தகம் முதலிய விஷக்காய்ச்சலைத் தோற்றுவிக்கும். 55

## 24. விஷக்காய்ச்சல் தோன்றக் காரணம்

பலர் பூதங்கள் முதலியவற்றை விஷக்காய்ச்சலுக்குக் காரணம் எனக் கருதுகின்றனர். சிலர் இயற்கையாகத் தோன்றுவன என்பர். ஆனால், பெரும்பாலும் புறத்தாக்குதலால் தோன்றக்கூடியது என்பதே உண்மையாகும். 56

## 25. விஷக்காய்ச்சலின் துவக்கத்தில் தோஷங்கள்

காய்ச்சலின் உண்மையை நன்கு அறிந்த ஆன்றோர்கள் திருதீயக, சதுர்த்தக (மூன்று நாட்களுக்கு ஒருமுறை, நான்கு நாட்களுக்கு ஒரு முறை என வரும்) காய்ச்சல்களுக்கு வாதம் மிகவும் சீற்றமுற்ற

த்வந்த்வஜ (இரண்டு தோஷங்களின் சீற்றத்தால் தோன்றும்) காய்ச்சலெனக் கருதுகின்றனர். அவ்வாறே ஔபத்யக (மலைச் சரிவில் உள்ள இடத்தில் தோன்றும்) காய்ச்சலுக்கும், மது வெறியால் தோன்றும் காய்ச்சலுக்கும் பித்தத்தின் சீற்றம் காரணமென்கின்றனர். அவ்வாறே பிரலேபகக் காய்ச்சல், வாத பலாஸகக்காய்ச்சல் எனும் இவ்விரண்டிற்கும் கபம் மிகுந்திருத்தல் காரணமென்கின்றனர். நினைவிழத்தலுடன் கூடிய காய்ச்சல் பொதுவாக இரண்டிரண்டு தோஷங்களின் சீற்றத்தால் தோன்று வதாகும். 57–58

## 26. அழற்சியும் குளிர்ச்சியும் கொண்ட காய்ச்சல்

கபமும் வாதமும் சீற்றமுற்று மெய்த்தோலைச் சார்ந்து காய்ச்சலில் முதலில் குளுமையை தோற்றுவிக்கும். அந்தக் குளிர்ச்சி தணிந்த பிறகு முடிவில் பித்தம் சீற்றமுற்று அழற்சியைத் தோற்று விக்கும். இவ்வாறே சீற்றமடைந்த பித்தம் முதலில் மெய்த் தோலைச் சார்ந்து நின்று காய்ச்சலின் துவக்கத்தில் மிக்க அழற்சி யைத் தோற்றுவிக்கும. அது தணிந்ததும் கபமும் வாதமும் சீற்ற மடைந்து குளிர்ச்சியைத் தோற்றுவிக்கும். இவ்வாறு அழற்சியும் குளிர்ச்சியும் கலந்து காய்ச்சல் ஸம்ஸர்கத்தால் தோன்றுமெனக் கருதுகின்றனர். இவற்றில் முதலில் அழற்சி தோன்றும் காய்ச்சல் எளிதில் சிகிச்சைக்கு உட்படாததாகும். 59–61

## 27. விடாத காய்ச்சல்

அடிபடுவதால் தோன்றுவதும், காமம், சினம் வருத்தம் முதலியவற்றால் தோன்றும் காய்ச்சலும் இடைவிடாமல் காயும் காய்ச்சல் ஆகும். 62

## 28. விஷக்காய்ச்சல் தோன்றும் காலம்

விரணபிரச்னாத்யாயத்தில் கூறியபடி, இரவும் பகலும் தோஷங்கள் சீற்றமடைவதற்கான வேளைகள் ஆறு (முற்பகல், நண்பகல், மாலை, முன்னிரவு, நள்ளிரவு, பின்னிரவு ஆகியவை). இவற்றில் விஷக்காய்ச்சல் வலிமையுடன் நோயாளியை ஒரு சமயம் குளிர்ச்சியுடனும், மற்றொரு சமயம் அழற்சியுடனும் துன்புறுத் தினால் அக்காய்ச்சல் பலவகையாகத் தோன்றும். 63

## 29. விஷக்காய்ச்சல் என்றும் இருத்தல்

இந்த விஷக் காய்ச்சல் எப்பொழும் உயிரினத்தின் உடலை விடுவதில்லை. உடலில் சோர்வு, பளு, இளைப்பு ஆகியவற்றைத் தோற்றுவித்துக் கொண்டிருப்பதால் என்றும் விடுவதில்லை. ஆனால் அதன் வேகம் தணிந்திருப்பதால் காய்ச்சல் நீங்கியது போலத் தோன்றும். ஆனால் அது உடலில் தாதுக்களில் மறைந் திருப்பதாலும், நுட்பமான நிலையில் இருப்பதாலும் வெளிப்படு வதில்லை. அவ்வமயம் இரட்டையாக சேர்ந்துள்ள தோஷங்கள் விறகை எரித்த பின் தீ குறைந்திருப்பது போல குறைந்த அளவில் இருக்கும். 64–65

## 30. விஷக்காய்ச்சல் தோன்றல்

முதலில் குறைந்த அளவில் இருக்கும் அல்லது காய்ச்சல் விட்ட பிறகு குறைந்த அளவில் இருக்கும் தோஷம் தவறான உணவு உட்கொள்ளுதல், கூடாத பழக்கத்தை மேற்கொள்ளுதல் என்பன வற்றால் மீண்டும் சீற்றமடைந்து இரஸம், இரத்தம் முதலிய தாதுக் களில் ஏதேனும் ஒன்றைச் சார்ந்திருந்து விஷக்காய்ச்சலைத் தோற்று விக்கும்.

தவறான உணவு பழக்க வழக்கங்களால் சீற்றமடைந்த தோஷம் ரஸதாதுவைச் சார்ந்து இடைவிடாத காய்ச்சலைத் தோற்றுவிக்கும். அந்தத் தோஷம் மாமிசத்தை சார்ந்திருந்தால் அந்யேத்யுஷ்கம் எனும் காய்ச்சலைத் தோற்றுவிக்கும். கொழுப்பைச் சார்ந்திருக்கும் தோஷம் திருதீயகம் எனும் காய்ச்சலைத் தோற்றுவிக்கும். மஜ்ஜை எனும் தாதுவைச் சார்ந்திருக்கும் தோஷம் யமனைப் போல உயிரைத் துன்புறுத்தும் கொடியதான உபத்ரவங்களுடன் கூடிய சாதுர்த்தகக் காய்ச்சலைத் தோற்றுவிக்கும். ஆசிரியர்கள் சிலர் பூத கிரகங்களை உடலைப் பற்றியிருப்பதால் விஷக்காய்ச்சல் தோன்றும் என்பர். 67–68

## 31. ஸந்ததம் முதலிய காய்ச்சல்களின் இலக்கணம்

இடைவிடாமல் ஏழு அல்லது பத்து அல்லது பன்னிரண்டு நாட்கள் காயும் காய்ச்சல் ஸந்ததக் காய்ச்சல் எனப்படும். இரவு பகல் ஆகிய இருபத்து நான்கு மணி நேரத்தில் இரு முறை தோன்றும்

காய்ச்சல் ஸந்ததக் காய்ச்சல் எனப்படும். இருபத்து நான்கு மணி நேரத்தில் ஒருமுறை தோன்றித் தணியும் காய்ச்சல் அந்யேத்யுஷ்கம் எனப்படும். ஒவ்வொரு மூன்றாம் நாளிலும் தோன்றும் காய்ச்சல் திருதீயகம் எனப்படும். ஒவ்வொரு நான்காவது நாளில் தோன்றுவது சதுர்த்தகம் எனப்படும். 69–70

## 32. விஷக்காய்ச்சல் குறிப்பிட்ட காலத்தில் தோன்றக் காரணம்

தவறான உணவு, பழக்கவழக்கங்களால் சீற்றமடைந்த வாதத்தால் ஒன்றிரண்டு தோஷங்கள் தூண்டப்பட்டு உடலில் எல்லாப் பகுதிகளிலிருந்தும் தோஷங்களைத் தன்பால் ஈர்த்துக் கொண்டு தோஷங்கள் தாம் சீற்றம் அடைவதற்கு உரிய நேரங்களில் சீற்றமடைந்து அடிக்கடி காய்ச்சலின் வேகத்தைத் தோற்றுவிக்கும். அதே நாளில் தோஷம் முழுவதும் தணிந்து காய்ச்சலைத் தணிக்கும். காற்றினால் தோன்றிய கடல் அலை எழும்பி காற்று தணிந்ததும் அலை ஓய்ந்து கடல் நீர் தன் முன்னிருந்த நிலைக்கு வருவது போல வாதத்தால் சீற்றமடைந்த தோஷம் காய்ச்சலைத் தோற்றுவித்து வாத வேகம் தணிந்ததும் காய்ச்சலும் தணியும். காற்றின் வேகம் தணிந்ததும் அலை தானாக ஓய்ந்து விடுவது போல வாதத்தின் வேகம் தணிந்ததும் காய்ச்சலும் தணியும். 71–74

## 33. அபிகாதக காய்ச்சல்

பலவகையான ஆயுதங்கள், மண்கட்டி, கைமுட்டி, தடி முதலியவற்றால் அடிக்கப்பட்டால் தோன்றும் காய்ச்சல் சீற்றமடைந்த தோஷத்திற்கு ஏற்பப் பெயர் கொண்டதாகும். 75

## 34. விஷத்தால் தோன்றும் காய்ச்சல்

தாவரங்களின் நஞ்சினால் தோன்றும் காய்ச்சலில் முகம் வெளிறிய கருநிறம் கொண்டு காணப்படும். அத்துடன் அதிஸாரம், இதயம் செயலற்று மரத்துப் போதல், சுவையின்மை, மிக்க நாவறட்சி என்பன தோன்றும். ஊசியால் குத்துவது போன்ற வலி தோன்றும். வலிமை குறைதலும் நினைவு தவறுதலும் உண்டாகும். 76

நஞ்சுள்ள மருந்துப் பொருள்களின் மணத்தால் நினைவிழத்தல், தலையில் வலி, வாந்தி, தும்மல் முதலியன காணப்படும். 77

### 35. காமத்தால் தோன்றும் காய்ச்சல்

காமத்தால் இதயம் மிகக் கலங்கி நிலையில்லாமல் சோம்பல், ஊக்கமின்மை, உணவில் விருப்பமின்மை, இதயத்தில் வேதனை, உடலும் வாயும் உலர்ந்து போதல் முதலிய இலக்கணங்கள் காணப்படும். 78

### 36. அச்சம் முதலியவற்றால் தோன்றிய காய்ச்சல்

அச்சம், மிக்க வருத்தம் முதலியவற்றால் தோன்றும் காய்ச்சலில் நோயாளி பிதற்றிக் கொண்டிருப்பார். சினத்தால் தோன்றிய காய்ச்சலில் நோயாளியின் உடல் நடுங்கிக் கொண்டிருக்கும். ஏவல், பெரியவர்களின் சாபம் முதலியவற்றால் தோன்றும் காய்ச்சலில் மயக்கம், நாவறட்சி மிகும், பூதம், பிரேதம், கிரகம் முதலியவற்றின் தொடர்பால் தோன்றும் காய்ச்சலில் மனத்தில் அமைதியின்மை, சிலபோது நகைத்தல், சிலபோது அழுதல் போன்ற இலக்கணங்கள் காணப்படும். 79

### 37. காய்ச்சலில் வாதத்தின் சிறப்பு

உடலால், மனத்தால் மிக்க உழைப்பதால் இரசம், இரத்தம் முதலிய தாதுக்கள் குறைந்து போவதாலும் அடிபடுவதாலும் முதலில் மனிதனின் உடலில் வாதம் சீற்றம் பெற்று உடல் முழுவதும் பரவி கடுமையான விடாத காய்ச்சலைத் தோற்றுவிக்கும். 80

### 38. மற்றும் சில காய்ச்சல்கள்

சீழ்க்கட்டி முதலான வேறு நோய்களின் காரணமாக, மிக்க அழற்சியால் வேறு புறக்காரணங்களால் வேறு வகைக் காய்ச்சல்கள் தோன்றும். எந்தக் காரணத்தால் தோன்றிய காய்ச்சல் ஆயினும் வாதம் முதலிய தோஷங்கள் சீற்றம் பெற்ற இலக்கணங்கள் காணப்படும். புறக்காரணங்களால் காய்ச்சல் தோன்றினாலும் தோஷங்களின் இலக்கணங்கள் காணப்படும். 81–82

### 39. இரசத்தைச் சார்ந்த காய்ச்சலின் இலக்கணம்

சீற்றமடைந்த தோஷம் ரஸத்தைச் சார்ந்து நிலைபெற்று காய்ச்சலைத் தோற்றுவித்தால் உடலில் பளு, இதயத்தில் துன்பம்,

உறுப்புகளில் சோர்வு, வாந்தி, உணவில் விருப்பம் இன்மை, நொந்து போன நிலை (தைன்யம்) என்பன தோன்றும். 83

## 40. இரத்தத்தைச் சார்ந்த காய்ச்சலின் இலக்கணம்

தோஷம் இரத்தத்தைச் சார்ந்திருந்து காய்ச்சலைத் தோற்று வித்தால் எச்சில் துப்பும்போது இரத்தம் கலந்து வெளிப்படுதல், உடலில் எரிச்சல், வியர்வை மிகுதல் வாந்தி, தலைசுற்றல், பிதற்றல், சிறுசிறு கட்டிகள் உடலில் தோன்றுதல், அடிக்கடி நாவறட்சி தோன்றுதல் எனும் இலக்கணங்கள் காணப்படும். 84

## 41. மாமிசத்தைச் சார்ந்த காய்ச்சலின் இலக்கணம்

மாமிசத்தைச் சார்ந்துள்ள காய்ச்சலில் முழங்கால் ஆடுசதைப் பகுதியில் கழியால் அடித்தது போன்ற வலி, நாவறட்சி, மலமும் சிறுநீரும் அடிக்கடி வெளிவருதல், உடலுக்குள் வெப்பம் மிகுதல், கால் கைகளில் மிக்க அழற்சி (எரிச்சல்), கால்கைகளை அடிக்கடி உதறுதல், எல்லா உறுப்புகளிலும் சோர்வு எனும் இலக்கணங்கள் தோன்றும். 85

## 42. கொழுப்பைச் சார்ந்த காய்ச்சலின் இலக்கணம்

கொழுப்பைச் சார்ந்த காய்ச்சலில் வியர்வை மிகுதல், அடிக்கடி நாவறட்சி தோன்றுதல், நினைவு தவறுதல், பொருத்தமற்ற பேச்சு (பிதற்றல்), வாந்தி, உடலிலிருந்து கெட்ட நாற்றம் வீசுதல், உணவில் விருப்பமின்மை, குளிர்ச்சி வெய்யில் முதலியவற்றைப் பொறுக்க யலாமை முதலிய இலக்கணங்கள் காணப்படும். 86

## 43. எலும்பைச் சார்ந்துள்ள காய்ச்சலின் இலக்கணம்

எலும்பைச் சார்ந்துள்ள காய்ச்சலில் எலும்புகளை முறிப்பது போன்ற வலி, எலும்புகள் சுருங்குதல், பெருமூச்சு, சில நேரங்களில் வாந்தியும் ஆகுதல், உறுப்புகளை இப்படியும் அப்படியும் வீசி அசைத்தல் போன்ற இலக்கணங்கள் காணப்படும். 87

## 44. மஜ்ஜையைச் (எலும்புக்குள் உள்ள சோற்றை) சார்ந்த காய்ச்சலின் இலக்கணம்

மஜ்ஜை எனப்படும் எலும்புக்குள் உள்ள சோற்றைச் சார்ந்துள்ள காய்ச்சலில் கண்கள் இருண்டு போதல், விக்கலும் இருமலும் மிகுதல், மிக்க குளிர்ச்சி உணரப்படுதல், வாந்தி, அழற்சி (உடம்புக்குள் எரிச்சல்) பெருமூச்சு விடுதல், உயிர் நிலைகளில் வெட்டுவது போன்ற வலி எனும் துன்பங்கள் காணப்படும். 88

## 45. விந்துவைச் சார்ந்த காய்ச்சலின் இலக்கணம்

விந்து மற்றும் விந்துவின் இருக்கையைச் சார்ந்துள்ள காய்ச்சலுக்கு உடனே தக்க சிகிச்சை செய்ய வேண்டும். இல்லை எனில் சிகிச்சைக்கு உட்படாமல் நோய் மரணத்தை விளைவிக்கும். இந்தக் காய்ச்சலில் ஆண்குறி விறைத்து விந்து தானே வெளிவந்து விடும். 89

நெருப்பு விறகை எரித்த பிறகு அணைவது போல உட்கொள்ளப்பட்ட நஞ்சு இரஸம், இரத்தம் முதலிய தாதுக்களை அழித்து பிறகு தணியும். அதைப்போலவே எல்லா வகையான காய்ச்சல்களும் அல்லது ரஸம் இரத்தம் முதலியவற்றைச் சார்ந்த காய்ச்சலும், அல்லது விந்துவைச் சார்ந்த காய்ச்சலும் உடலை அழித்தேதான் தணியும். 90

## 46. தாதுக்களைச் சார்ந்த காய்ச்சல்களில் தோஷங்களின் தன்மை

வாத பித்தகபங்களின் சீற்றத்தால் தோன்றும்போது வேறு வேறு இலக்கணங்கள் காணப்படுவதைப் போல ரஸம் முதல் விந்து வரை உள்ள ஏழு தாதுக்களைச் சார்ந்து தோன்றும் காய்ச்சல்களில் இலக்கணங்களுக்கு ஏற்ப தோஷங்களின் சீற்றத்தைக் கூற வேண்டும். எல்லா தாதுக்களும் சீற்றமடைந்து தாதுக்களைச் சார்ந்து காய்ச்சலைத் தோற்றுவித்தால் ஸந்நிபாதத்தால் அல்லது இரண்டிரண்டு தோஷங்கள் சீற்றமுறுவதால் தோன்றும் காய்ச்சல்கள் என்று கூற வேண்டும். 91-92

## 47. கம்பீரக் காய்ச்சலின் இலக்கணம்

உடலுக்குள் எரிச்சல், நாவறட்சி, மலமும் வாயுவும் அடியோடு தடைபடுதல், பெருமூச்சு, இருமல் ஆகியவை மிகுந்து காணப் படுதல் என்பன கம்பீரக் காய்ச்சலின் இலக்கணங்களாகும். 93

புலன்கள் தமக்கு உரிய செயல்களைச் செய்ய இயலாமல் தளர்ந்து போய் காய்ச்சலின் கடுமையால் புலன்கள் அழிவுற்றால், சுவையின்மை மிகுந்திருந்தால் அத்தகைய நோயாளிக்கு காய்ச்சல் மிகக் கடுமையான போது சிகிச்சையைக் கைவிட வேண்டும். 94

## 48. காய்ச்சலின் வேகம்

குறைந்த அளவில் சீற்றமுற்ற தோஷங்களால் மூன்று நாட்களும், நடுத்தர அளவில் சீற்றமுற்ற தோஷங்களால் தோன்றும் காய்ச்சல் ஏழு நாட்களும், அதிக அளவில் சீற்றம் கொண்டு வரும் காய்ச்சல் பத்து நாட்களும் காயும். அவற்றில் குறைந்த அளவு தோஷமுள்ளது எளிதில் சிகிச்சையால் தீரும். நடுத்தர தோஷத்தால் தோன்றும் ஏழு நாட்கள் வரை உள்ள காய்ச்சல் சிரமப்பட்டுச் சிகிச்சை செய்வதால் தீர்க்கக்கூடியதாகும். அதிக அளவில் சீற்றமுற்ற தோஷத்தால் தோன்றிப் பத்து நாட்கள் வரை இருக்கும் காய்ச்சல் சிகிச்சைக்கு உட்படாததாகும். 95

## 49. காய்ச்சலின் கடுமை

காய்ச்சல் காலத்தின் தோற்றம் கொண்டது. எமனின் தோற்றமுள்ளது. முற்பிறவி வினையின் விளைவால் தோன்றுவது மற்றும் யாக்கையின் இறுதியாகக் கூறப்படுவதுமாகும். உடலிலிருந்து இந்தக் காய்ச்சல் விலகிச் சென்ற பின் நோயாளி மறுபிறவி எடுத்தவர் ஆவார் என மக்கள் கூறுவர். இவ்வாறு காய்ச்சலின் தோற்றம், இலக்கணம் முதலியன கூறப்பட்டன. இனி சிகிச்சை முறைகள் விளக்கப்படும். 96

## 50. காய்ச்சலின் முற்குறிக்குச் சிகிச்சை

காய்ச்சலின் முற்குறிகள் தோன்றியதும் அறிவாற்றல் மிக்க மருத்துவர் நோயாளிக்கு தூய (வேறு பொருள் கலவாத) நெய்யைப் பருகச் செய்ய வேண்டும். நெய்யைப் பருகுவதால் தோஷம்

தணிந்து நோயாளிக்கு நலம் உண்டாகும். இந்த நெய்யைப் பருகும் முறை சோர்வு, க்ஷயம், அச்சம் முதலியவற்றால் சீற்றமுற்ற வாதத்தால் தோன்றும் காய்ச்சலில் மிகவும் நன்மை தரும். ஆனால் தவறான உணவு, பழக்கம் முதலியவற்றால் ஆமாசயத்தில் (வயிற்றில்) சீற்றமுற்ற வாதத்தால் தோன்றிய காய்ச்சலில் பயன்படுத்தக் கூடாது. பித்தத்தின் சீற்றத்தால் தோன்றும் காய்ச்சலுக்கு முற்குறிகள் தோன்றியபோது திராட்சை, ரோஜாமலர், அதிமதுரம் முதலியவற்றால் மென்மையான விரேசனமுறையைப் பின்பற்ற வேண்டும். கபத்தின் சீற்றத்தால் தோன்றும் காய்ச்சலின் முற்குறிப்பில் மருக்காரைக் காய் முதலியவற்றைக் கொண்டு வாந்தியாகச் செய்ய வேண்டும். *97–98*

## 51. ஸந்நிபாத – இரண்டு தோஷங்களால் தோன்றிய காய்ச்சல்களின் முற்குறிக்குச் சிகிச்சை

ஸந்நிபாதத்தால் தோன்றுவது, மற்றும் இரண்டிரண்டு தோஷங்களின் சேர்க்கையால் தோன்றுவது ஆகிய காய்ச்சல்களின் முற்குறிகள் காணப்பட்ட போது வாதபித்த கபங்களாகிய தோஷங்களில் சீற்ற முற்ற தோஷங்களை அறிந்து முறையே அவற்றிற்கு ஏற்ப நெய்யைப் பருகுதல், பேதியாகச் செய்தல், வாந்தி எடுக்கச் செய்தல் எனும் முறைகளைப் பின்பற்ற வேண்டும். ஆனால் நெய் மருந்தைப் பருகத் தகாதவரும், பேதியாகச் செய்தல், வாந்தி எடுக்கச் செய்தல் எனும் முறைகளுக்கு தகாதவரும் ஆன நோயாளியைப் பட்டினி கிடக்கச் செய்ய வேண்டும். *99*

## 52. நோய்க்கும் முற்குறிக்கும் உள்ள வேற்றுமை

நெருப்புக்கும் புகைக்கும் உள்ள தொடர்பு போல காய்ச்சலின் தோற்றத்திற்கும் அதன் முற்குறிக்கும் வேற்றுமை அறியத்தக்கது. காய்ச்சலின் இலக்கணம் நன்கு தோன்றிய பிறகு ஐயமின்றிப் பட்டினி கிடக்கச் செய்வதைப் பயன்படுத்த வேண்டும். *100*

## 53. வாந்தி எடுக்கச் செய்யும் முறை

தோஷம் ஆமாசயத்தில் தங்கியிருக்கும்போது முதலில் கபத்தைத் தூண்டும் பொருள்களால் வாந்தி எடுக்கச் செய்வது

நல்லது. அல்லது தோஷம் ஆமாசயத்தை சேர்ந்துள்ள போது குமட்டல், உமிழ் நீர்ப் பெருக்கம் முதலிய இலக்கணங்கள் காணப்பட்ட போது வாந்தி எடுக்கச் செய்ய வேண்டும். 101

## 54. பட்டினி கிடக்கச் செய்தல்

தோஷம் அசையாமல் நிலை பெற்றிருக்கும் வரை நோயாளியைப் பட்டினி கிடக்கச் செய்தல் நல்லது. தோஷங்களின் வலிமை குறைந்த பிறகு பேயா முதலிய முறைப்படி உணவு உட்கொள்ளச் செய்ய வேண்டும். 102

## 55. பட்டினி கிடக்கச் செய்யத் தகாதவர்கள்

வாதத்தால் தோன்றும் காய்ச்சல், தாதுக்கள் குறைந்து போவதால் தோன்றிய காய்ச்சல், மனத்தில் காமம், சினம் முதலியன தோன்றுவதால் உண்டான காய்ச்சல் கொண்டவர்களும், திவிவிரணீய அத்தியாயத்தில் கூறப்பட்டபடி கருவுற்றவள், முதியவர், சிறுவர், உடல் வலிமை குறைந்தவர் ஆகியவர்கள் காய்ச்சல் கொண்ட போதும் பட்டினி கிடக்கச் செய்தல் கூடாது. 103

## 56. பட்டினி கிடத்தலின் பயன்

தோஷங்களும் சடராக்னியும் சீராக இல்லாத நிலையில் பட்டினி கிடக்கச் செய்வதால் ஆம தோஷம் நன்கு பக்குவம் பெறும். அதனால் உணவில் விருப்பமும், சுவையும் தோன்றும். அப்பொழுது தோஷமும் இலேசாகும். 104

## 57. நன்கு பட்டினி கிடத்தலின் இலக்கணம்

சரியான முறையில் பட்டினி கிடப்பதால் அபானவாயு, மலம், சிறுநீர் ஆகியவை தகுந்தபடி வெளிவரும். அதனால் நன்கு பட்டினி கிடந்தவர் பசியையும் நாவறட்சியையும் பொறுக்க இயலாதவராவார். உடலும் இலேசாகும். ஆன்மாவும், மனமும் தெளிவு பெறும். நோயாளி இளைத்து விடுவார். 105

## 58. அளவுக்கு மீறி பட்டினி கிடத்தல்

அளவுக்கு மீறி பட்டினி கிடப்பதால் வலிமை அழிதல், அடிக்கடி நாவறட்சி மிகுதல், வாய் உலர்ந்து போதல், உடல் சோர்ந்து போதல், சோம்பல் (ஊக்கமின்மை), உறக்கம், சிரமம், சுவாசகாசம் போன்ற துன்பங்கள் தோன்றும். 106

## 59. வெந்நீரின் சிறப்பு

காய்ச்சல் தோன்றியபோது வெந்நீரைப் பயன்படுத்துவதால் சடராக்னி வளர்தல், கபம் தணிதல், பித்தமும் வாதமும் கீழ் நோக்கிப் பரவுதல் என்பன தோன்றும். வாதத்தாலும், கபத்தாலும் தோன்றிய காய்ச்சல் கொண்டவருக்கு வெந்நீர் மிக்க நன்மை பயக்கும். நாவறட்சியைத் தணிக்கும். ஆமதோஷத்திற்கும் ஸ்ரோதஸ்களுக்கும் மென்மையைத் தோற்றுவிக்கும். குளிர்ந்த நீர் இத்தன்மைகளுக்கு மாறான தன்மைகள் கொண்டதாகும். 107

## 60. குளிர்ந்த நீரால் தோன்றும் விளைவு

காய்ச்சல் கொண்டவர் குளிர்ந்த நீரைப் பருகினால் காய்ச்சல் மிகும். ஆகையால் காய்ச்சல் கொண்டவர் வெந்நீரையே பருக வேண்டும். பித்தத்தால் தோன்றிய காய்ச்சல், மது வெறியால் தோன்றிய காய்ச்சல், விஷக்காய்ச்சல் ஆகியவற்றில் கசப்புச் சுவை கொண்ட பொருள்களைச் சேர்த்துக் காய்ச்சிக் குளிர வைத்த நீர் பருகத் தக்கது. 108

பெருங்கோரைக்கிழக்கு, சுக்கு, வெட்டிவேர், பர்பாடகம், குருவேர், சிவப்புச் சந்தனம் ஆகியவற்றை ஒவ்வொரு கர்ஷம் வீதம் கொண்டு ஒரு பிரஸ்தம் அளவுள்ள நீரில் இட்டுக் காய்ச்சி பாதி அளவு மிகுந்துள்ள போது எடுத்து வடிகட்டி அந்த நீரைக் கொண்டு தயார் செய்த பேயா எனும் கஞ்சி சடராக்னியை வளர்க்கும். ஆமதோஷத்தை (செரியாமல் இருக்கும் உணவு ரசத்தைச்) செரிமானமாக்கும். எளிதில் செரிமானமடையும். காய்ச்சலைத் தணிக்கும். அல்லது தோஷத்திற்கு ஏற்றபடி கூறப்போகும் பஞ்சமூலம் முதலான செரிமானத்தைத் தூண்டும் பொருள்களால் ஷடங்க மரபுப்படிக் காய்ச்சிய நீரில் பேயா முதலான கஞ்சி வகைகளைச் செய்து உணவு உட்கொள்வது காய்ச்சலில் மிக்க நன்மை தரும். 109

## 61. காய்ச்சலைத் தணிக்கும் கஷாயம்

மிக்க சீற்றங்கொண்ட தோஷங்களால் தோன்றும் காய்ச்சலில், சடராக்னி மிகவும் குறைந்துள்ள நோயாளிக்கு ஏழு நாட்கள் வரை பட்டினி கிடத்தல், ஷடங்க முறையில்செய்த குடிநீர், யவாகூ முதலியவற்றைப் பயன்படுத்திய பிறகு தோஷங்கள் தணியாவிடில் ஏழு நட்களுக்குப் பிறகு வாயில் சுவையின்மையையும், நாறவட்சியையும் போக்கவல்லதும், ஆம தோஷத்தைச் செரிமானமடையச் செய்வதும், இதயத்திற்கு நன்மை பயப்பதும், காய்ச்சலைப் போக்குவதும் ஆன பஞ்ச மூலம் முதலியவற்றாலான கஷாயத்தைப் பயன்படுத்த வேண்டும். *100–111*

## 62. வாதம் முதலியவற்றாலான காய்ச்சலைத் தணிக்கும் கஷாயம்

பெரும்பஞ்ச மூல கஷாயம் வாதத்தால் தோன்றும் காய்ச்சலில் செரிமானத்தைத் தூண்டும். கோரைக் கிழங்கு, கடுகரோகிணி, குடசப்பாலை என்பனவற்றைச் சேர்த்துக் காய்ச்சிய கஷாயத்தில் தேன் கலந்து பருகச் செய்தல் பித்தக் காய்ச்சலில் செரிமானத்தைத் தூண்டும். திப்பிலி முதலான கூட்டுப் பொருள்களின் கஷாயம் கபத்தால் தோன்றும் காய்ச்சலில் பயன் தருவதாகும். இரண்டிரண்டு தோஷங்கள் கலந்து தோற்றுவிக்கும் காய்ச்சல்களில் அவ்விரண்டு தோஷங்களையும் போக்கும், மூலிகைகளைச் சேர்த்துக் காய்ச்சிய கஷாயத்தைப் பயன்படுத்த வேண்டும். அவ்வாறே நீரைப் பருகிய உடனேயும் மற்றும் பட்டினி கிடந்தவருக்கும் உணவு உட் கொண்ட உடனேயும், அசீரணமுள்ளவருக்கும், உடலிளைப்பு, நாவறட்சி ஆகியவற்றால் துன்புறுகிறவர்களுக்கும் கஷாயத்தைப் பருக தரக் கூடாது. *112–113*

## 63. ஆமபக்குவக் காய்ச்சலின் இலக்கணம்

காய்ச்சலின் வலிமை கடுமையாக இருத்தல், உடல் பளுவாகத் தோன்றுதல் மலம், சிறுநீர், வியர்வை ஆகியவை தடைபடுதல் ஆகிய இலக்கணங்கள் காணப்பட்டால் அது ஆமநிலையில் உள்ள காய்ச்சல் என்று உணர்க. இதற்கு மாறான அதாவது காய்ச்சலின் வேகம் குறைந்திருத்தல், உடல் இலேசாக இருத்தல், மலமும் சிறுநீரும் வெளிவருதல் என்பன காணப்பட்டால் பக்குவம் பெற்ற

(முற்றிய) காய்ச்சல் என்று அறிக. இந்நிலையில் நோயைத் தணிப்பவையும், தூய்மைப்படுத்துவனவுமான மருந்துகளைப் பயன்படுத்த வேண்டும். 114–115

## 64. ஆமபக்குவக் காய்ச்சல்களைப் பற்றி வேறு கொள்கை

வேறு நூலாசிரியர் சிலர் இவ்வாறு கூறுகின்றனர் :- தோஷம், இயற்கை, விகாரம் ஆகிய இலக்கணங்களை அறிந்து காய்ச்சல் பக்குவம் பெற்றதை உணர்ந்து கொள்ள வேண்டும். அவ்வாறே இதயத்தில் கபம் சீற்றம் பெற்று அங்கு நிறைந்து காணப்படுதல், சோம்பல், உமிழ் நீர் பெருக்கம், சுவையின்மை, வாதம் முதலிய தோஷங்கள் நன்கு வெளிவராமை, தாமதம் (ஊக்கமின்மை), மலம் சிறுநீர் முதலியன தடைபடுதல், வியர்வை தோன்றாமை, மலம் பக்குவம் பெறாமை, செயலற்றிருத்தல், கால் கைகளில் ஓய்ச்சல், மிக்க உறக்கம் தோன்றுதல், உடல் மரத்தல், உடல் பளுவாகத் தோன்றுதல், சடராக்னிக் குறைவு, வாய் தூய்மையற்றிருத்தல். ஆனால் சோர்வின்மை, காய்ச்சல் மிகுதல் என்பன போன்ற இலக்கணங்களால் ஆமக் (பக்குவம் பெறாத) காய்ச்சலை மருத்துவர் தெரிந்து கொள்ள வேண்டும். 116–118

## 65. காய்ச்சலுக்கு மருந்து கொடுக்க வேண்டிய காலம்

ஆசிரியர்கள் சிலர் காய்ச்சல் தோன்றினால் ஏழு நாட்களுக்குப் பிறகு தணிவதற்கான மருந்து கொடுக்க வேண்டும். மற்றும் சிலர் பத்து நாட்கள் கழித்துக் கொடுக்க வேண்டுமென்கின்றனர். 119

பித்தக்காய்ச்சல், குறைந்த காலத்தில் தோன்றிய (விரைவில் பக்குவம் பெறக் கூடிய) காய்ச்சல் ஆகியவற்றில் காய்ச்சல் முற்றியதும் (பக்குவம் பெற்றதும்) ஏழு நாட்களுக்கு முன்னதாகவே காய்ச்சலைத் தணிக்கும் மருந்தைக் கொடுக்கலாம் என்கின்றனர்.

## 66. பக்குவம் பெறாத நிலையில் மருந்தை விலக்குதல்

முற்றாத (ஆமதோஷமுள்ள) காய்ச்சலில் தூய்மைப்படுத்தும் முறைகளைப் பயன்படுத்தினால் அது மீண்டும் காய்ச்சலை வலிவுள்ளதாக்கும். தருண நிலையில் உள்ள காய்ச்சலில் கஷாயத்தைப் பயன்படுத்தினால் அதனால் தோஷம் மேலும் சீற்றமடைந்து நிலையாக நின்று விஷக்காய்ச்சலைத் தோற்றுவிக்கும். 121

## 67. காய்ச்சலில் மலம் வெளியேறினால் கவனியாமல் இருத்தல்

காய்ச்சலால் துன்புறுபவருக்கு எப்பொழுதும் போல மலம் வெளியேறுமானால் அப்படியே விட்டுவிட வேண்டும். ஆனால் அதிக அளவில் மலம் வெளியேறுமானால் அதிஸாரத்திற்குப் போல சிகிச்சை முறைகளைக் கையாள வேண்டும். 122

## 68. காய்ச்சலில் தூய்மைப்படுத்தும் நிலை

மலம் (வாதம் முதலான தோஷங்களும் மலம் சிறுநீர் முதலியவையும்) குடலை அடைந்து பக்குவம் பெற்றிருந்து ஸ்ரோதஸ்களை (மலம் வெளியேறும் வழிகளை) அடைத்துக் கொண்டிருக்கும்போது, காய்ச்சல் நாள் கடந்து விடாத நிலையில் இருக்கும்போது காய்ச்சல் கொண்ட நோயாளிக்குத் தூய்மைப் படுத்துவதற்காக பேதியாக செய்யும் மருந்தைக் கொடுக்க வேண்டும். 123

## 69. தோஷம் பக்குவம் பெற்ற நிலை

தோஷம் பக்குவம் பெற்ற போது (கசப்புச் சுவை கொண்ட கஷாயம், பேயா எனும் கஞ்சி கொடுத்தல், வாந்தி எடுக்கச் செய்தல் போன்ற முறைகளால்) அதை வெளியேற்றாமல் அசட்டை செய்தால் சீற்றமடைந்த தோஷம் உடலில் நிலைபெற்று மிக்க தீங்கு விளைவிக்கும். சாதாரணக் காய்ச்சலை விஷக்காய்ச்சலாக மாற்றி விடும். உடல் வலிமையும் மிகக் குறைந்து போகும். 124

## 70. தோஷங்களை வெளியேற்றும் முறை

பக்குவம் பெற்ற தோஷங்கள் உடலில் இணைந்து விடுமானால் அவை அது மிகக் கேடு விளைவிக்கும். ஆகையால் வாந்தி எடுக்கச் செய்தல், பேதியாகச் செய்தல் போன்ற சிகிச்சை முறைகளால் அந்தத் தோஷங்களை வெளியேற்ற வேண்டும். காய்ச்சல் கொண்ட வருக்கு முதலில் வாந்தி எடுக்கச் செய்ய மருந்து கொடுக்க வேண்டும். இதுதான் முதன் முதலாக செய்யத்தக்க சிகிச்சை. இதற்குப் பிறகு ஆஸ்தாபன வஸ்தியும் அதன் பிறகு பேதியாகச் செய்யும் முறையும் சிரோவிரோசனமும் பயன்படுத்தத்தக்கவை. 125

## 71. வமன விரேசன முறைகள்

*கபத்தால் தோன்றிய காய்ச்சலில் உடல் வலிமை பெற்றுள்ள நோயாளிக்கு வாந்தி எடுக்க செய்யும் முறையைப் பயன்படுத்த வேண்டும். பித்தத்தால் தோன்றும் காய்ச்சலில் மலக்குடல் பக்குவாசயம் பித்தாசயம் ஆகியவை தளர்ந்த பிறகு பேதியாக செய்யும் முறையைப் பயன்படுத்த வேண்டும். 126*

## 72. நிரூஹண அநுவாஸன வஸ்திகள்

*வலியுடன் வாதம் மேல் நோக்கித் தடைப்பட்டிருக்கும் வாதக் காய்ச்சலில் நிரூஹண வஸ்தியைப் பயன்படுத்த வேண்டும். இடுப்பு புட்டப்பகுதிகளில் பிடிப்புடன் சடராக்னி மிகுந்துள்ள காய்ச்சலில் அநுவாஸன வஸ்தியைப் பயன்படுத்த வேண்டும். 127*

## 73. காய்ச்சலில் சிரோவிரேசனம்

*கபத்தால் தோன்றிய காய்ச்சலில் சிரோவிரேசன முறையைப் பின்பற்றுவதால் தலைப்பளு, தலைவலி ஆகியவை நீங்கும். மூக்கு, காது முதலான புலன்கள் தடையின்றி செயல்படக் கூடியதாகும். 128*

## 74. காய்ச்சலில் வயிற்று உப்புசத்திற்கு மேல் பூச்சு

*உடல் வலிமை குறைவாக உள்ள காய்ச்சல் நோயாளிக்கு வயிற்று உப்புசம், வயிற்றில் வலி தோன்றினால் தேவதாரு, வசம்பு, கோஷ்டம், சோம்பு, பெருங்காயம், இந்துப்பு என இவை ஒவ்வொன்றும் அரைத்தோலா வீதம் கொண்டு பசுவின் சிறுநீர் அல்லது புளிக்காடி முதலான புளிப்புச் சுவையுள்ள பொருள் விட்டு அரைத்து இளஞ்சூடாக்கி வயிற்றின் மீது பற்றாகப் பூச வேண்டும். இவ்வாறு வாயுவின் வேகம் மேல் நோக்கிச் சென்ற பிறகு மலமும் சிறுநீரும் தடைப்பட்ட போது தேவதாரு முதலான பொருள்களின் கஷாயத்துடன் நன்கு அரைத்து வத்தியாகச் செய்து ஆஸனவாயில் வைக்க வேண்டும். 129–130*

## 75. காய்ச்சலில் யவாகூ

*வாயு மேல் நோக்கி பரவியபோது காய்ச்சல் நோயாளிக்கு திப்பிலி, திப்பிலி மூலம், ஓமம், செவியம் ஆகியவற்றை ஓர் கர்ஷம்*

அளவு கொண்டு 64 தோலா நீரில் இட்டுப் பாதி அளவு மிகுந்திருக்கக் காய்ச்சி வடிகட்டி கஞ்சி காய்ச்சிக் கொடுக்க வேண்டும். 131

## 76. காய்ச்சலில் நெய் மருந்து

காய்ச்சல் கொண்ட நோயாளியை வாந்தி எடுக்கச் செய்தல், பேதியாகச் செய்தல் எனும் முறைகளால் தூய்மைப் படுத்திய பிறகு தோஷம் மேலும் தங்கிக் காய்ச்சலைத் தோற்றுவிக்கும் நிலையில் கல்யாணகிருதம் முதலிய நெய் மருந்துகளைக் கொடுத்துக் காய்ச்சலைத் தணிக்க வேண்டும். 132

## 77. காய்ச்சலைத் தணிக்கும் முறை

வலிமை குறைந்துள்ள சிறிதளவே சீற்றம் கொண்ட தோஷங்களுடன் கூடிய நோயாளிக்கு காய்ச்சல் தோன்றினால் சம்சமனீய மருந்துப் பொருள்களைக் கொண்டு சிகிச்சை செய்ய வேண்டும். உடல் வலிமை பெற்றுள்ள நோயாளிக்கு ஸந்நர்ப்பனத்தால் (உடல் செழிப்புற்றுள்ள போது) காய்ச்சல் தோன்றினால் பட்டினி கிடக்கச் செய்தல் எனும் முறையைக் கையாள வேண்டும்.

## 78. யவாகூ முதலிய பத்திய முறைகள்

சடாராக்னி குறைந்து நாவறட்சி கொண்டுள்ள காய்ச்சல் நோயாளிக்கு மிகவும் (சிதைந்த) குழம்பியுள்ள யவாகூவைப் பருகத் தர வேண்டும். நாவறட்சி, வாந்தி, அழற்சி, வெப்பம் ஆகியவற்றுடன் கூடிய காய்ச்சல் நோயாளிக்கு அல்லது மதுவைப் பருகிய காய்ச்சல் நோயாளிக்கு தர்ப்பண முறைக்காக பொரி மாவுடன் தேன் கலந்து நீருடன் கலந்து பருகச் செய்க. இந்தப் பொரிமா செரிமானமடைந்த பிறகு பயற்றின் கஞ்சி அல்லது மாமிசச்சாறுடன் உணவு உட்கொள்ளச் செய்க. பட்டினி கிடத்தல் அல்லது உடல் இளைத்த வாதம் முதலான தோஷம் சீற்றம் பெற்றுள்ளவரும், சடராக்னி வலிமை கொண்டவரும் ஆன காய்ச்சல் நோயாளிக்கு அறிவாற்றல் மிகுந்துள்ள மருத்துவர் மாமிசச் சாறுடன் உணவு உட்கொள்ளச் செய்ய வேண்டும். கபத்தால் தோன்றிய காய்ச்சலில் நோயாளிக்குப் பயற்றின் கஞ்சியுடன் சோறு உண்ணச் செய்தல் நன்மை தரும். பித்தத்தால்

தோன்றிய காய்ச்சல் கொண்டவருக்கு பயற்றின் கஞ்சியை ஆற வைத்து அத்துடன் சர்க்கரை சேர்த்து உட்கொள்ளச் செய்தல் நன்மை தரும். *134–137*

## *79.* இரு தோஷங்களாலான காய்ச்சலுக்குப் பத்திய முறை

வாத பித்தங்களால் தோன்றிய காய்ச்சலில் மாதுளை விதைகள், நெல்லிக்காய், பயறு கலந்து செய்த யூஷத்தைக் கொடுக்க வேண்டும். வாத கபங்களால் தோன்றிய காய்ச்சலில் சிறு முள்ளங்கி யூஷத்தைக் கொடுக்க வேண்டும். பித்த கபங்களால் தோன்றிய காய்ச்சலில் புடலை இலை, வேப்பிலை அல்லது வேப்பம் பட்டையுடன் யூஷம் காய்ச்சி உட்கொள்ளச் செய்க. *138–139*

## *80.* பொரியால் தர்ப்பணம் செய்வித்தல்

அழற்சி, வாந்தி ஆகியவற்றுடன் கூடி உடல் இளைத்துள்ளவரும், சோறு உண்ணாதவரும் ஆன நோயாளி நாவறட்சியால் துன்புறும் நிலையில் சர்க்கரையும், தேனும் கலந்து நீர் சேர்த்து அத்துடன் பொரிமாவைக் கலந்து பருகச் செய்ய வேண்டும். *140*

## *81.* யவாகூ கூடாத நிலை

கபம் மற்றும் பித்தம் மிகுந்துள்ளவருக்கும், முதுவேனில் பருவத்திலும் இரத்த பித்த நோய் கொண்ட போதும் நாள்தோறும் மதுவைப் பருகும் பழக்கமுள்ளவருக்கும் யவாகூ நன்மை விளைவிக்காது. ஆகையால் இத்தகைய நோயாளிக்குப் புளிப்புச் சுவை மிகுந்த அல்லது புளிப்புச் சுவை கொண்ட பொருள் சேராத யூஷத்தை, காட்டு விலங்குகள் மற்றும் காட்டுப்பறவைகள் ஆகியவற்றின் புலால் சாற்றுடன் கலந்து கொடுக்க வேண்டும். *141*

## *82.* மதுவைப் பருகச் செய்தல்

சடராக்னி குறைந்துள்ள நோயாளிக்கு யவ அரிசிச் சோற்றுடன் மதுவைப் பருகச் செய்க. கபத்தின் சீற்றத்தால் தோன்றிய சுவையின்மையால் துன்புறும் நோயாளிக்கு மோரில் சுக்கு மிளகு திப்பிலிகளின் தூளைக் கலந்து உட்கொள்ளச் செய்க. *142.*

## 83. ்ப் பாலைப் பயன்படுத்துதல்

வலிமை குறைந்துள்ள, குறைந்த அளவு தோஷம் கொண்ட நாள்பட்ட காய்ச்சல் தொண்டுள்ளவரும், சிறுநீர்த்தடை மலத் தடையுடன் கூடிய அல்லது தோஷம் வெளியேறிய நிலையிலுள்ள வரும், வறட்சியுடன் கூடியவரும், பித்தம் மற்றும் வாதத்தால் தோன்றிய காய்ச்சல் கொண்டவரும், நாவறட்சி அழற்சிகளால் துன்புறுபவரும் பாலை பருகுதல் மிக்க நன்மை தரும். ஆனால் காய்ச்சல் தோன்றிய புதிதில் பாலைப் பருகுதல் நஞ்சைப் போல நோயாளியைக் கொல்லக்கூடும். *143–144*

## 84. காய்ச்சலில் இலேசான உணவு

எல்லா வகையான காய்ச்சல்களிலும் காய்ச்சலின் வேகம் தணிந்த பிறகு அளவோடு இலேசான (எளிதில் செரிமானமாகக் கூடிய) உணவு உட்கொள்வது மிக்க நன்மை தரும். காய்ச்சல் கண்டிருக்கும் போது உட்கொள்ளப்பட்ட இலேசான உணவு காய்ச்சலின் வேகத்தையே மிகப்படுத்தும். *145*

(எல்லா வகையான காய்ச்சல்களில் ஏழு நாட்கள் வரை பசி மிகுந்திருந்தாலும் மிகக் குறைந்த அளவிலேயே உணவு தர வேண்டும். காய்ச்சலின் வேகம் தணிந்த பிறகு தேவையான உணவு கொடுக்கலாம். அதற்கு முன் உணவு காய்ச்சலின் வேகத்தை மிகப் படுத்தும். ஆகையால் காய்ச்சலின் வேகம் தணியும் வரை உணவை மிக்க அளவோடு கொடுக்க வேண்டும் என்பதாம்.)

காய்ச்சலில் நாள்பட்ட நோயாளிக்கு வாய்ச்சுவையாக இல்லா விடினும் பத்தியமான இலேசான உணவு கொடுக்க வேண்டும். ஏனெனில் வாய்க்குப் பிடிக்கவில்லை என்று உணவு உட்கொள்ள வேண்டிய நேரத்தில் உணவு உட்கொள்ளாவிட்டால் நோயாளி உடல் மிகவும் இளைத்து உயிர் நீங்கும் நிலைக்கு ஆளாகக் கூடும். உணவு இல்லாவிடில் நாள்பட்ட காய்ச்சல் எளிதில் தீர்க்க இயலாத தாகி விடும் அல்லது சிகிச்சையால் தீர்க்க இயலாததாகவும் கூடும். *146–147*

## 85. உடல் வலிமையைக் காப்பாற்றவேண்டும் எனல்

நோய் மிகவும் கஷ்டப்பட்டு சிகிச்சை செய்ய வேண்டிய தாகவோ, சிகிச்சைக்கு உட்படாததாகவோ ஆகாமல் இருக்க

நோயாளியின் உடல் வலிமையைக் காக்க வேண்டும். உடலில் வலிமை இருந்தால்தான் உயிர் நிலைத்திருக்கும். காய்ச்சல் உள்ளவர் குருத்தன்மை கொண்ட (எளிதில் செரிமானமாகாத) அபிஷ்யந்தியான உணவு, கஞ்சி வகைகளை ஒருபோதும் உட்கொள்ளக்கூடாது. நேரமற்ற வேளையில் உணவு உட்கொள் வதைத் தவிர்க்க வேண்டும். ஏனெனில் தவிர்க்க வேண்டியதாக இங்கு கூறப்பட்ட உணவு ஆயுளை வளர்க்காது. சுகம் தராது. *148*

## 86. விடாத காய்ச்சலில் உணவு

உடல் இளைத்துப் போக விடாமல் இருக்கும் காய்ச்சல் கொண்டவர், விஷக் காய்ச்சல் கொண்டவர், பல நாள்பட்ட காய்ச்சல் கொண்டவர்ஆன இவர்களுக்கு பத்தியமான இலேசான உணவு தந்தே பணி விடை செய்ய வேண்டும். *149*

## 87. காய்ச்சலில் யூஷம்

காய்ச்சல் கொண்டுள்ளவருக்கும் உணவு உட்கொள்ளத்தக்க நேரத்தில் பயறு, மஸரை எனும் பருப்பு, கடலை, கொள்ளு, மகுட்டம் எனப்படும் பெரும் காட்டுப்பயறு ஆகியவற்றாலான (யூஷத்தைக்) கஞ்சியைக் கொடுக்க வேண்டும். *150*

## 88. காய்ச்சலில் பயன்படுத்தத் தக்க காய்கறி

காய்ச்சல் கொண்டவருக்கு புடலை இலை, கத்தரிக்காய், சாரடை இலை, வட்டத்திருப்பி, பாகல், பர்ப்படாகம், இளசான முள்ளங்கி ஆகியவற்றைக் காய்கறிகளுக்குப் பயன்படுத்த வேண்டும். *151–152*

## 89. காய்ச்சலில் புலால் வகை

காய்ச்சல் கொண்டவருக்கு புலால் உணவு உட்கொள்ளும் பழக்கமுள்ளவராக இருந்தால் லாவகப்புள், தித்திரிப்புள், மான், (வெள்ளைப் புள்ளிகளைக் கொண்ட) புள்ளிமான், சரபம், முயல், காலபுச்சம் எனும் விலங்கு (கருநிறவாலுள்ள ஒருவகை மான்) குரங்கி எனப்படும் சிறுவகை மான் ஆகியவற்றின் புலாலை உட்கொள்ளச் செய்யலாம். *153*

சில மருத்துவ நூலாசிரியர்கள் காய்ச்சலில் ஸாரஸப்புள், கிரௌஞ்சப்புள், மயில், கோழி, தித்திரிப்புள் ஆகியவற்றின் புலால் எளிதில் செரிமானமாகாத தன்மை கொண்டவையும், உஷ்ண வீரியம் உள்ளவையும் ஆனதால் விலக்கத்தக்கவை எனத் தம் நூல்களில் குறிப்பிட்டுள்ளனர். 154

காய்ச்சல் உள்ள போது வாதம் சீற்றம் பெற்றுள்ள நிலையில் காலத்திற்கு ஏற்ப அளவோடு கூடாதவையாகக் கூறப்பட்ட அந்தப் புலால் வகையைப் பயன்படுத்தலாம். 155

## 90. காய்ச்சல் தோன்றிய புதிதில் விடத்தக்கவை

காய்ச்சல் தோன்றிய புதிதில் நோயாளி குளியல், நீரில் மூழ்கிக் குளித்தல், எண்ணெய்க் குளியல், வாந்தி எடுக்கச் செய்தல், பேதியாகச் செய்தல் போன்ற உடலைத் தூய்மைப்படுத்தும் முறைகள், பகல் தூக்கம், குளிர்ச்சி தரும் உணவு வகைகள், உலாவுதல் உடற்பயிற்சி, கலவி, துவர்ப்புச் சுவை எளிதில் செரிமானமாகாத குருத்தன்மை, வறட்சி கொண்ட பொருள்கள், சினம் முதலியவை கொள்ளுதல், எண்ணெய்ப்பசை மிக்க பொருள்கள், புதிய தானியங்கள் ஆகியவற்றை விலக்க வேண்டும். 156–158

## 91. காய்ச்சல் வீறு கொள்வதற்குக் காரணம்

முன்கூறிய பரிஷேகம் மற்றும் உணவு முதலியவற்றால் தாறுமாறாக உள்ள தோஷங்கள் வளர்ந்து, சடராக்னி வலிமையுள்ள புதிய காய்ச்சலைக் கொண்ட நோயாளியின் காய்ச்சல் மேலும் வளர்ந்து, அது க்ம்பீர தாதுக்களில் கலந்து மிக்க வீறு கொண்டு சிகிச்சைக்கு உட்படாததாகிவிடும். 159

(அதாவது காய்ச்சல் தக்க பணிவிடைகளால் குறைந்தாலும் உணவு முதலியவற்றால் காய்ச்சல் தணிந்த நிலையில் குளியல், எண்ணெய் தேய்த்துக் கொள்ளுதல், குளிர்ச்சி தரும் பொருள்களைப் பயன்படுத்துதல் முதலியன மேற்கொண்டால் தோஷங்கள் சீற்றமடைவதால் காய்ச்சல் மேலும் கடுமையாகிச் சிகிச்சைக்கு உட்படாததாகிவிடும் என்பதாம்.)

காய்ச்சல் விட்ட பிறகு உடல் வலிமை கொள்ளும் வரை குளிர்ந்த நீரில் உடலைத் தூய்மைப் படுத்திக் கொள்ளுதல், குளியல்,

பகலில் உறங்குதல், சினம் கொள்ளுதல், உடற்பயிற்சி செய்தல் போன்றவற்றை விலக்க வேண்டும். 160

## 92. விட்ட காய்ச்சல் மீண்டும் தோன்றக் காரணம்

காய்ச்சல் விட்டதும் உடல் வலிமை குறைந்துள்ள நோயாளி கூடாத உணவு உட்கொள்ளுதல், பழக்க வழக்கங்களை மேற்கொள்ளுதல் முதலியவற்றைச் செய்தால் காய்ச்சல் திரும்பத் தோன்றி உலர்ந்த கட்டையை நெருப்பு எளிதில் பற்றுவது போல உடலை எரித்து விடும். 161

## 93. காய்ச்சல் விட்டவர் விலக்க வேண்டியவை

காய்ச்சல் விட்ட நோயாளி வாதம் முதலான தோஷங்கள் பிராணனுடன் இணைந்து தம் இயற்கை நிலையைப் பெறும்வரை பேதியாகச் செய்யும் முறையை மேற்கொண்டவரைப் போல மிக்க பத்தியமான உணவு உட்கொள்ளுதல், தகுந்த பழக்கங்களை மேற்கொள்ளுதல் ஆகியவற்றைப் பின்பற்ற வேண்டும். 162

## 94. காய்ச்சலில் முழு ஓய்வு கொள்ளுதல்

காய்ச்சலில் சிறிதளவு பயிற்சி செய்தாலும் நோயாளி நினைவிழந்து போவார். ஆகவே, அவரைப் படுக்கையில் அமர்ந்திருக்கச் செய்தே உணவு உட்கொள்ளச் செய்ய வேண்டும். மலம், சிறுநீர் முதலியன கழிவதற்கும் படுக்கையிலிருந்தபடியே செய்வதற்கான ஏற்பாடுகளைச் செய்ய வேண்டும். 163

## 95. காய்ச்சலில் உடலைத் தூய்மைப்படுத்துதல்

காய்ச்சல் தணிந்த பிறகும் நோயாளிக்குச் சுவையின்மை, உறுப்புகள் தளர்ந்திருத்தல் (விட்டுப் போதல்), உறுப்புகளில் இயற்கை நிறம் மாறுபட்டிருத்தல், சிறுநீர் மலம் முதலியவற்றின் நிறமும் மாறுபட்டிருத்தல் முதலிய இலக்கணங்கள் காணப் பட்டால் அவருடைய உடலில் ரஸம் முதலான தாதுக்களில் நோய்க்கு உரிய தோஷங்களின் விகாரம் இன்னும் கலந்துள்ளது என்றும், மீண்டும் காய்ச்சல் தோன்றக்கூடும் என்றும் தெரிந்து

கொண்டு தோஷங்கள் வெளியேற்றித் தூய்மைப்படுத்துவதற்கான (வாந்தி எடுக்கச் செய்தல், பேதியாகச் செய்தல், நஸிய முறை போன்ற) முறைகளைப் பயன்படுத்த வேண்டும். 164

## 96. காய்ச்சலால் உடல் இளைத்தவர் குளியலை விலக்குதல்

அறிவாற்றல் மிக்க மருத்துவர், நோயாளி முழு அளவு தன் உடல் வலிமையை மீண்டும் பெறும் வரை காய்ச்சல் விட்ட பிறகும் உடற்பயிற்சி, குளியல், கலவி, குருத்தன்மை கொண்டவையும், உடலுக்குப் பழக்கமில்லாதவையும், அழற்சியைத் தோற்றுவிப்பது மான உணவு உட்கொள்ளுதல் போன்றவற்றை விலக்கும்படிக் கவனித்துக் கொள்ள வேண்டும். 165

## 97. எல்லாவகை காய்ச்சலுக்கும் சிகிச்சை முறை

எல்லா வகை காய்ச்சலுக்கும் அவை தோன்றுவதற்குக் காரண மானவற்றிற்கு மாறான முறைகளைக் கொண்டு சிகிச்சை செய்ய வேண்டும். ஆனால் பயிற்சி, ரசம், ரத்தம் முதலான தாதுக்கள் குறைந்து போதல், அடிபடுதல் முதலியவற்றாலான காய்ச்சலுக்கு அதற்கு மூலகாரணமான (வாத) தோஷத்திற்குச் சிகிச்சை செய்ய வேண்டும். 166

## 98. தவறான காலத்தில் பிள்ளைப் பேறு தோன்றுவதாலான காய்ச்சலுக்குச் சிகிச்சை

சரியான முறையில் அல்லாது பிள்ளைப் பேறு ஏற்படுதல் மற்றும் முதன் முதலாகத் தாய்ப்பால் தோன்றும் போதும், பெண்களுக்குக் கருச்சிதைவு போன்றவற்றால் தோன்றும் காய்ச்சலுக்குச் சீற்றமடைந்த தோஷத்திற்கு ஏற்ப செய்யத்தக்க சிகிச்சை முறைகளை அறிந்த மருத்துவர் காய்ச்சலைத் தணிக்கச் செய்யும் (ஸம்சமன) முறை, செரிமானத்தைத் தோற்றுவிக்கும் (பாசன) முறை, உடலைத் தூய்மைப்படுத்தும் முறை முதலியவற்றால் சிகிச்சை செய்ய வேண்டும். 167

## 99. ஸம்சமன கஷாயம்

இனி ஸம்சமனீய கஷாய முறைகளைக் கூறுகிறேன். கேள். இவற்றை நன்கு அறிந்து மருத்துவர் எல்லா வகையான காய்ச்சல்களையும் தணிக்கப் பயன்படுத்த இயலும். *168*

## 100. திப்பிலி முதலியவற்றாலான கஷாயம்

திப்பிலி, நன்னாரி, திராட்சை, சதகுப்பை, அரேணுகம் எனும் இவை அனைத்தும் ஒரு பலம் அளவு கொண்டு பதினாறு பலம் நீர் சேர்த்து நான்கில் ஒரு பங்கு மிகுந்திருக்கக் காய்ச்சி வடிகட்டி ஒரு கர்ஷம் பழைய வெல்லம் கலந்து பருகச் செய்தால் வாதத்தால் தோன்றும் காய்ச்சல் தணியும்.... *169*

## 101. சீந்தில் கொடியைப் பயன்படுத்துதல்

கபத்தின் சீற்றத்துடன் கூடிய வாதக் காய்ச்சலில் சீந்தில் கொடியின் சுருத கஷாயம் கொடுக்க வேண்டும். பித்தம் துணையாக உள்ள வாதக் காய்ச்சலில் சீந்தில் கொடியின் சீத கஷாயத்தைப் பருகத் தர வேண்டும். *170*

(மென்மையான பொருள்களுக்கு நான்கு மடங்கு, நடுத்தரமான பொருள்களுக்கு எட்டு மடங்கு, கடினமான பொருள்களுக்குப் பதினாறு மடங்கு நீர் சேர்த்து முறையே நான்கில் ஒரு பங்கு, எட்டில் ஒரு பங்கு, பதினாறில் ஒரு பங்கு மிகுந்திருக்கக் காய்ச்சிக் கொள்வது சுருத கஷாயமாகும். பகலில் காய்ச்ச்சியதை இரவிலும், இரவில் காய்ச்சியதைப் பகலிலும் பயன்படுத்தக் கூடாது. நேரம் கடந்த கஷாயத்தின் குணத்தன்மை கெட்டு விடும். குருத்தன்மை கொண்டு விடும். காய்ச்சிக் குளிர்ந்த கஷாயத்தை மீண்டும் சூடுபடுத்தினால் நஞ்சாகி விடும்.

சீத கஷாயம் - மருந்துப் பொருள் ஒரு பலம், நீர் ஆறுபலம் சேர்த்து மண்பாத்திரத்தில் இரவு ஊற வைத்துக் காலையில் நன்கு பிசைந்து வடிகட்டிக் கொள்வது சீதகஷாயமாகும்.)

## 102. வாதக்காய்ச்சலுக்குப் பலாதி கஷாயம்

சிற்றாமுட்டி, தர்ப்பை, நெருஞ்சி ஆகியவை கலந்து 2 தோலா, நீர் 32 தோலா எனக் கலந்து நான்கில் ஒரு பங்கு மிகுந்திருக்கக்

கஷாயம் காய்ச்சி, வடிகட்டி அதில் ஒரு தோலா சர்க்கரை ஒரு தோலா பசுநெய் சேர்த்துப் பருகச் செய்தால் வாத காய்ச்சல் தணியும். 171

### 103. வாதக்காய்ச்சலுக்குச் சதபுஷ்பாதி கஷாயம்

சோம்பு, வசம்பு, கோஷ்டம், தேவதாரு, நொச்சி விதை, கொத்துமல்லி விதை, வெட்டிவேர், கோரைக்கிழங்கு, ஆகிய வற்றைச் சம அளவில் கொண்டு மொத்தம் இரண்டு தோலா அளவு கொண்டு 32 தோலா நீர் சேர்த்து நான்கில் ஒரு பங்கு மிகுந்திருக்கக் கஷாயம் காய்ச்சி வடிகட்டி ஆறு உளுந்து எடை தேன், ஒரு தோலா சர்க்கரை கலந்து பருகச் செய்தால் வாத சீற்றத்தால் தோன்றும் காய்ச்சல் தணியும். 172

### 104. வாத காய்ச்சலுக்குத் திராட்சாதி கஷாயம்

திராட்சை, சீந்தில் கொடி, குமிழன் திராயமாணா (பிராம்மி), நன்னாரி, ஆகியவற்றைக் கஷாயம் (முறைப்படி) காய்ச்சி வடிகட்டி வெல்லம் கலந்து பருகச் செய்வதால் வாதக் காய்ச்சல் தணியும்.

174

### 105 .வாதக் காய்ச்சலுக்கு சீந்தில்கொடி சுரசம்

சீந்தில் கொடி சுரசம் ஒரு தோலா, சதாவரி சுரசம் ஒருதோலா எனக் கொண்டு அவற்றில் தேன் கலந்து பருகச் செய்தால் வாதக் காய்ச்சல் உடனே தணியும். மற்றும் வேறு வேறு நிலைகளுக்கு ஏற்ப வறட்சி அதிக அளவில் இருந்தால் பழைய நெய்யை உடலின் மேல் தடவுதல், குளிர்ச்சி தோன்றினால் உடல் வியர்க்கச் செய்தல் மற்றும் மேல் பூச்சு மருந்து ஆகியவற்றைப் பயன்படுத்த வேண்டும். 174

### 106. பித்தக்காய்ச்சலுக்குக் கஷாயம்

குமிழன் பட்டை அல்லது பழம், சிவப்புச் சந்தனம், வெட்டிவேர், சீற்றீசம்பழம், இலுப்பைப் பூ எனும் இவற்றைக் கொண்டு முறைப்படி கஷாயம் காய்ச்சி வடிகட்டி அதில் சர்க்கரை கலந்து இனிப்புச் சுவை கொள்ளச் செய்து பருகச் செய்தால் பித்தக்காய்ச்சல் தணியும். 175

## 107. பித்தக்காய்ச்சலுக்கு *சாரிபாதிகண கஷாயம்

நன்னாரி முதலான கூட்டுப் பொருள்களாலான கஷாயத்தில் சர்க்கரை கலந்து பருகச் செய்தால் பித்தக் காய்ச்சல் தணியும். அவ்வாறே ஆம்பல் முதலான கூட்டுப் பொருள்களுடன் அதிமதுரம் சேர்த்துக் கஷாயம் காய்ச்சிச் சர்க்கரை கலந்து இனிப்புச் சுவை கொள்ளச் செய்தால் பித்தக்காய்ச்சல் தணியும். அல்லது ஆம்பல் முதலான கூட்டுப் பொருள்களான சுருத கஷாயம் அல்லது சீத கஷாயம் பருகச் செய்தால் பித்தக் காய்ச்சல் தணியும். 176–177

## 108. பித்தக் காய்ச்சலுக்கு சீந்தில் கொடி முதலியவற்றின் கஷாயம்

சீந்தில் கொடி, தாமரை, பாச்சோத்தி, நன்னாரி, ஆம்பல் ஆகியவற்றை முறைப்படி கஷாயமாகச் செய்து அல்லது சீத கஷாயம் செய்து சர்க்கரை சேர்த்து இனிப்புச்சுவை கொள்ளச் செய்து பருகச் செய்தால் பித்தக் காய்ச்சல் தணியும். 178

## 109. பித்தக்காய்ச்சலுக்கு வேறு முறைகள்

திராட்சை, சரக்கொன்றைப் பழக்கதுப்பு எனும் இவ்விரண்டையும் சீதகஷாயம் அல்லது குமிழன் பழத்தின் சீத கஷாயம், திராட்சை அதிமதுரம், காகோலி முதலிய கூட்டுப் பொருள்களின் கஷாயம், துவர்ப்பு சுவை கொண்ட கூட்டுப் பொருள்களின் கஷாயம் அல்லது இப்பொருள்களின் சீத கஷாயம் ஆகியவற்றில் சர்க்கரை சேர்த்துப் பருகச் செய்தால் பித்தக்காய்ச்சலில் தோன்றும் நாவறட்சி, அழற்சி தணியும். 179

## 110. நாவறட்சிக்கு வாந்தி எடுக்கச் செய்தல்

நாவறட்சியால் துன்புறும் பித்தக் காய்ச்சல் கொண்டவருக்குத் தேன் கலந்த குளிர்ந்த நீரைத் தொண்டை வரை (நிறைவாகப்) பருகச் செய்து வாந்தி எடுக்கச் செய்தால் நாவறட்சி தணியும். 180

* சாரிபா – நன்னாரி.

## 111. அழற்சிக்குச் சிகிச்சை

பித்தக் காய்ச்சலில் அழற்சி மிகுந்தால் பல வகை பாலுடன் பாலுள்ள ஆலமரம் முதலான கூட்டுப்பொருள்களின் குளிர்ந்த கஷாயத்தில் சந்தனம் கர்ப்பூரம் முதலியவற்றைச் சேர்த்து அதைக் கொண்டு உடலை நனைத்தல், பூசுதல் முதலியவை செய்ய வேண்டும். அந்தப் பொருள்கள் கலந்த நீரில் மூழ்கியிருக்கச் செய்து துன்பத்தைத் தணிக்க வேண்டும். காகோலி முதலான கூட்டுப் பொருள்களின் சீத கஷாயத்தைப் பயன்படுத்த வேண்டும். குளிர்ச்சி தரும் ரத்னாபரணங்களை அணியச் செய்ய வேண்டும். 181

## 112. பித்தக்காய்ச்சலில் பதுமகாதி பொருள்களின் கஷாயம்

பதுமகம், அதிமதுரம், திராட்சை, வெள்ளத்தாமரை, நீலாம்பல், யவதானியப் பொடி, வெட்டிவேர், மஞ்சிட்டி தொட்டால் சுருங்கி, குமிழன் பழம் ஆகியவற்றைச் சம அளவில் கொண்டு தூளாக்கி நீரில் விட்டு நன்றாகக் கலக்கி இரவு முழுவதும் வைத்திருந்து காலையில் வடிகட்டித் தேன் கலந்து பருகச் செய்தால் அழற்சியுடன் கூடிய பித்தக் காய்ச்சல் தணியும். அவ்வாறே பதுமகம் முதலாகக் குமிழன் வரை கூறப்பட்ட பொருள்களின் தூளைத் தண்ணீர் விட்டு அரைத்து நாக்கு, அண்ணப்பகுதி, தொண்டை, மண்ணீரல் பகுதி, உச்சந்தலை ஆகியவற்றில் பூசுதல் அல்லது அந்நீரை ஊற்றிக் கொண்டிருத்தல் என்பனவற்றால் அழற்சி தணியும். 182–184

## 113. பித்தக்காய்ச்சலில் வாய் கொப்பளித்தல்

துரிஞ்சிப்பழக் கதுப்புடன் (சுளைகளின் மணிகளுடன்) சிறிது தேன், இந்துப்பும் கலந்து வாய்க்குள் வைத்துக் கொண்டிருத்தல், அல்லது சர்க்கரை, மாதுளம்பழ விதைகள், பேரீச்சம்பழம் ஆகியவற்றை விழுதாகச் செய்து வாயில் வைத்துக்கொண்டிருத்தல், அல்லது இப்பொருள்களைத் தூளாக்கி நீரில் கலந்து வாய் கொப்புளித்தல் என்பனவற்றால் பித்தக்காய்ச்சலில் தோன்றும் வாய்க்கசப்பு (வாய்ச்சுவை கெட்டிருத்தல்) நீங்கும். 185

### *114. கபக்காய்ச்சலுக்குச் சிகிச்சை*

*ஏழிலைப்பாலை, சீந்தில் கொடி, வேப்பம்பட்டை, காட்டுத் துளசி ஆகியவற்றை முறைப்படி கஷாயம் காய்ச்சி வடிகட்டி அதில் சிறிது தேன் கலந்து பருகச் செய்தால் கபக்காய்ச்சல் தணியும்.* 186

### *115. கபக்காய்ச்சலில் திரிகடுக கஷாயம்*

*சுக்கு, மிளகு, திப்பிலி, சிறுநாகப்பூ, மஞ்சள், கடுக ரோகிணி, குடசப்பாலைப்பழம் ஆகியவற்றைச் சம அளவில் கொண்டு கஷாயம் அல்லது தூள் செய்து உட்கொள்ளச் செய்தால் கபக்காய்ச்சல் தணியும்.* 187

### *116. கபக்காய்ச்சலில் மஞ்சள் முதலியவற்றின் கஷாயம்*

*மஞ்சள், கொடி வேலிப்படை, வெட்டிவேர், அதிவிடயம், வசம்பு, கோஷ்டம், குடசப்பாலை, வட்டத்திருப்பி, புடலை இலை எனும் இவற்றைச் சம அளவில் கொண்டு கஷாயம் காய்ச்சியோ, தூளாகச் செய்தோ உட்கொள்ளச் செய்தால் கபக்காய்ச்சல் தணியும்.* 188–189

### *117. கபக்காய்ச்சலுக்கு *சாரிபாதி கஷாயம்*

*நன்னாரி, அதிவிடயம், கோஷ்டம், குங்கிலியம், காஞ் சொரிவேர், கோரைக்கிழங்கு எனும் இவற்றைக் கொண்டு முறைப்படி கஷாயம் காய்ச்சி தேன் கலந்து பருகச் செய்தால் கபக்காய்ச்சல் தணியும்.* 190

### *118. கபக்காய்ச்சலுக்குக் கோரைக்கிழங்கு முதலிவற்றின் கஷாயம்*

*கோரைக்கிழங்கு, குடசப்பாலை விதை, கடுக்காய், தான்றிக்காய், நெல்லிக்காய், கடுகரோகிணி சீற்றீச்சை ஆகியவற்றைக் கொண்டு கஷாயம் காய்ச்சிப் பருகச் செய்தால் கபக்காய்ச்சல் தணியும்.* 191

---

** சாரிபா – நன்னாரி*

## 119. இரு தோஷங்களால் தோன்றும் காய்ச்சலுக்குச் சிகிச்சை

** ஆரக்வதாதி கூட்டுப்பொருள்களின் கஷாயத்தில் தேன் கலந்து தக்க நேரத்தில் (மருந்து உட்கொள்ள வேண்டிய நேரத்தில்) ட்கொண்டால் கபவாதங்களாலான காய்ச்சல் தணியும். 192

## 120. கபவாதக்காய்ச்சலுக்கு *** நாகராதி கஷாயம்

சுக்கு, கொத்துமல்லிவிதை, (தனியா), பாரங்கி, கடுக்காய், தேவதாரு, வசம்பு, பர்பாடகம், கோரைக்கிழங்கு, சடாமாஞ்சி, காயபலம் எனும் இவற்றைக் கொண்டு முறைப்படி கஷாயம் காய்ச்சி வடிகட்டி ஆறு உளுந்து எடை தேனுடன் இரண்டு முதல் நான்கு குன்றிமணி எடையுள்ள தூய பெருங்காயத்தூள் கலந்து உட்கொள்ளச் செய்தால் கபவாதக்காய்ச்சல் தணியும். இந்தக் கஷாயம் சுவாசம், காசம், கபம் மிகுதியாக வெளிப்படுதல், தொண்டைபிடிப்பு, விக்கல், தொண்டை வீக்கம், நெஞ்சுவலி, விலாவலி போன்ற துன்பங்களையும் போக்கவல்லதாகும். 193–194

## 121. பித்த கபக்காய்ச்சலுக்குக் கஷாயம்

சிற்றாமுட்டி வேர், புடலை இலை, கடுக்காய், தான்றிக்காய், நெல்லிக்காய், அதிமதுரம், ஆடாதொடை ஆகியவற்றின் கஷாயத்தில் தேன் கலந்து உட்கொள்ளச் செய்தால் பித்த கபங்களாலான காய்ச்சல் தணியும். 195

## 122. கபபித்தக் காய்ச்சலில் கடுகரோகிணி கஷாயம்

கடுகரோகிணி, கடுக்காய், திராட்சை, கோரைக்கிழங்கு, பர்ப்பாடகம் ஆகியவற்றைக் கஷாயம் காய்ச்சிப் பருகச் செய்தால் கபபித்தங்களாலான காய்ச்சல் தணியும். 196

** ஆரக்வத – சரக்கொன்றை

*** நாகரம் – சுக்கு

### 123. கபபித்த காய்ச்சலில்[1] பாரங்கி முதலிவற்றின் கஷாயம்

சிறுதேக்கு, வசம்பு, ஸ்பாடகம், கொத்துமல்லி விதை, பெருங்காயம், கடுக்காய், கோரைக்கிழங்கு, குமிழன்பட்டை அல்லது பழம்சுக்கு எனும் இவற்றின் கஷாயத்தில் தேன் கலந்து பருகச் செய்தால் கபபித்தக் காய்ச்சல் தணியும். 197

### 124. கபபித்தக் காய்ச்சலுக்குக் கடுகரோகிணி

சர்க்கரை ஒருதோலா கடுகரோகிணித் தூள் 3 முதல் 6 உளுந்து எடை எனக் கலந்து வெந்நீருடன் உட்கொள்ளச் செய்தால் கபபித்தக் காய்ச்சல் தணியும். 198

### 125. வாதபித்தக் காய்ச்சலுக்கு கிராதாதி[2] கஷாயம்

நிலவேம்பு, சீந்தில்கொடி, திராட்சை, நெல்லிக்காய், பூலாங்கிழங்கு ஆகியவற்றின் கஷாயத்தில் ஒரு தோலா வெல்லம் கலந்து பருகச் செய்தால் வாதபித்தக் காய்ச்சல் தணியும் 199

### 126. வாதபித்தக் காய்ச்சலுக்கு ராஸ்னாதி[3] கஷாயம்

சிற்றரத்தை, ஆடாதொடை, கடுக்காய், தான்றிக்காய், நெல்லிக்காய், பழக்கதுப்பு ஆகியவற்றின் கஷாயத்தைப் பருகுவதால் பித்தக் காய்ச்சல் தணியும் 200

### 127. ஸந்நிபாதக் காய்ச்சலுக்குச்

மூன்று தோஷங்களாலும் தோன்றிய காய்ச்சலில் அந்தந்த தோஷங்களுக்குக் கூறப்பட்ட முறைகளை, அதிக அளவில் சீற்றமடைந்துள்ள தோஷத்தையும் கவனித்துத் தக்கபடி பயன்படுத்த வேண்டும். 201

### 128. எல்லா வகைக் காய்ச்சலுக்குப் பால்

வெள்ளைச்சாரடை, வில்வப்பட்டை, சிவப்புச் சாரடை ஆகியவற்றின் விழுதாக்கிப் பாலும் நீரும் கலந்து மருந்தும் பால்பக்குவம் செய்யும் முறைப்படி கால்பகுதி மட்டும் மீகுந்

1. பாரங்கி – சிறுதேக்கு; 2. கிராதா – நிலவேம்பு;
3. ராஸ்னா – சிற்றரத்தை

திருக்கக் காய்ச்சி வடிகட்டிப் பருகச் செய்தால் எல்லாவகைக் காய்ச்சலும் தணியும். 202

### 129. எல்லாவகைக் காய்ச்சலுக்கும் சிம்சபா முறை

நீர் 24 பலம்; பால் 8 பலம்; சிம்சுபாச்சாறு ஒருபலம் எனும் அளவில் கலந்து பால்மட்டும் மிகுந்திருக்கக் காய்ச்சி வடிகட்டிப் பருகினால் எல்லாவகைக் காய்ச்சல்களும் தணியும். 203

### 130. எல்லாவகைக் காய்ச்சல்களுக்கும் நலாதி கஷாயம்

வேர், நீர்வஞ்சி வேர், வட்டத் திருப்பி, தேவதாரு ஆகியவற்றை முறைப்படி கஷாயம் காய்ச்சிப் பருகச் செய்தால் எல்லாவகைக் காய்ச்சல்களும் தணியும். 203

### 131. ஸந்நிபாதக் காய்ச்சலுக்கு ஹரித்ராதி[1] கஷாயம்

மஞ்சள், பெருங்கோரைக் கிழங்கு, கடுக்காய், தான்றிக்காய், நெல்லிக்காய், கடுகரோகிணி, வேப்பம்பட்டை, புடலை இலை, தேவதாரு, கண்டங்கத்திரி வேர், ஆகியவற்றைச் சம அளவில் மொத்தம் இரு தோலா அளவு கொண்டு முப்பத்திரண்டு தோலா நீர்விட்டு எட்டில் ஒருபங்கு மிகுந்திருக்கக் காய்ச்சி வடிகட்டி ஆறு உளுந்து எடை தேன் கலந்து பருகச் செய்தால் ஸந்நிபாதக் காய்ச்சல் தணியும். மேலும் பக்குவம் பெறாமை, உமிழ் நீர்பெருக்கு, வீக்கம், இருமல், சுவையின்மை எனும் நோய்களும் தணியும். 205–206

### 132. ஸந்நிபாதக் காய்ச்சலுக்கு திரிபலா கஷாயம்

கடுக்காய், தான்றிக்காய், நெல்லிக்காய், மூன்றும் கலந்து இரண்டு தோலா, நீர் 32 தோலா எனக் கலந்து கஷாயம் காய்ச்சி எட்டில் ஒரு பங்கு மிகுந்திருக்கக் கொண்டு வடிகட்டி அதில் பசுநெய் ஆறு உளுந்து எடை முதலாக ஒரு தோலா வரை சேர்த்துப் பருகச் செய்தால் மூன்று தோஷங்களாலும் தோன்றிய காய்ச்சல் தணியும். 207

---

1. ஹரித்ரா – மஞ்சள்.

### 133. எல்லாக் காய்ச்சல்களுக்கும் அனந்தாதி[1] சூரணம்

நன்னாரி, நேத்ரபாலா, கோரைக்கிழங்கு, சுக்கு, கடுகரோகிணி ஆகியவற்றைச் சம அளவு கொண்டு காலை வேளையில் இளஞ் சூடுள்ள நீருடன் உட்கொள்ளச் செய்தால் எல்லாவகைக் காய்ச்சல் களும் தணியும். இந்தச் சூரணம் சடராக்னியை மிகவும் தூண்டி விடும். *208*

### 134. காய்ச்சலுக்கு வேறு முறை

திப்பிலி முதலான சடராக்னியைத் தூண்டும் கூட்டுப் பொருள்கள், திரிவிருத் (சிவதை) முதலான பேதியாகச் செய்யும் கூட்டுப் பொருகள், காய்ச்சலைத் தணிக்கும் மருந்துப் பொருள்கள் ஆகியவற்றில் நிலமைக்கு ஏற்றவாறு நோயைத் தோற்றுவித்த தோஷத்தின் வலிமைக்கு ஏற்றவாறு தனித்தனியாகவோ, இரண்டிரண்டு எனக் கலந்தோ, மூன்று வகைப்பொருள்களைக் கலந்தோ பயன்படுத்த வேண்டும். *209*

### 135. காய்ச்சலுக்கு நெய், தேன் முதலியன

நெய், தேன், கடுக்காய்த் தூள், நல்லெண்ணெய் ஆகியவற்றைத் தோஷத்திற்கு ஏற்ப தனித்தனியாக அல்லது கலந்து பயன்படுத்தினால் எல்லாவகைக் காய்ச்சல்களும் தணியும். இவ்வாறே சிவதைத் தூளைத் தேனுடன் உட்கொள்ளச் செய்தால் கடுமையான காய்ச்சல் தணியும். *210*

### 136. விஷம (கடும்) சுரத்திற்கு மருந்து

விஷம சுரத்தில் கபம் மிகுந்திருந்தால் வாந்தி எடுக்கச் செய்வதால் தொப்புளுக்கு மேலுள்ள உடற்பகுதியைத் தூய்மைப் படுத்த வேண்டும். பித்தம் மிகுந்திருந்தால் பேதியாகச் செய்யும் முறைகளால் தொப்புள் பகுதிக்கு கீழுள்ள உடலைத் தூய்மைப் படுத்த வேண்டும். அல்லது மண்ணீரல் வீக்கம் முதலான வயிற்று நோய்களைப் பற்றிய அத்தியாயத்தில் கூறிய ஷட்பலகிருதம் எனும் ய் மருந்தைப் பயன்படுத்த வேண்டும். *211*

1. அனந்தா – நன்னாரி

## 137. விஷமக் காய்ச்சலில் திரிபலை முதலியன பயன் படுத்தல்

விஷக்காய்ச்சலால் துன்புறும் நோயாளிக்குத் திரிபலா சூரணம் மூன்று உளுந்து எடை முதல் ஆறு உளுந்து எடைவரை ஒரு தோலா வெல்லம் கலந்து நீரைத் துணை மருந்தாக உட்கொள்ளச் செய்க. அல்லது சீந்தில் கொடி, வேப்பிலை அல்லது வேப்பம்பட்டை, கடுக்காய் ஆகியவற்றைக் கஷாயம் காய்ச்சித் தேன் கலந்து உட் கொள்ளச் செய்க. 212

நாள்தோறும் காலை வேளையில் வெள்ளைப் பூண்டின் சுரசத்தில் நெய் கலந்து உட்கொள்ளச் செய்க. 213

## 138. விஷமக் காய்ச்சலுக்கு மூன்று நான்கு ஐந்து பொருள்களைக் கலந்த முறைகள்

அதிமதுரம், புடலை இலை, கடுகரோகிணி, கோரைக் கிழங்கு, கடுக்காய் எனும் இந்த ஐந்து மருந்துப் பொருள்களில் எவையேனும் மூன்று, அல்லது நான்கு அல்லது ஐந்தையும் சேர்த்துக் கஷாயம் காய்ச்சிப் பருகச் செய்தால் விஷமக் காய்ச்சல் தணியும். 215

## 139. விஷமக் காய்ச்சலில் நெய் பால் முதலியன

விஷமக் காய்ச்சலால் துன்புறும் நோயாளி தன் வலிமைக்கு ஏற்ப நெய், பால், சர்க்கரை, தேன், திப்பிலி என்பனவற்றை நாள்தோறும் பயன்படுத்த வேண்டும். அல்லது திப்பிலித் தூளைத் தசமூல கஷாயத்துடன் நாள்தோறும் உட்கொள்ள வேண்டும். 216

## 140. வர்த்தமான திப்பிலியைப் பயன்படுத்தல்

வாத வியாதி அத்தியாயத்தில் கூறிய வர்த்தமான திப்பிலி எனும் மருந்தை முறையாகப் பயன்படுத்த வேண்டும். பசி எடுத்ததும் பால் அல்லது புலால்சாற்றை உட்கொள்ளவேண்டும். அல்லது கோழிப் புலாலுடன் உயர்ந்த வகை மதுவை உட்கொள்ள வேண்டும். 217

## 141. விஷமக் காய்ச்சலுக்கு 'பஞ்சகோல கிருதம்'

திப்பிலி, திப்பிலி வேர், செவியம், கொடிவேலி, சுக்கு, முன்னை, கடுக்காய், தான்றிக்காய், நெல்லிக்காய் ஆகியவற்றைச் சம அளவில் கலந்து நூறு பலம் கொண்டு துளாக்கி 512 பலம் நீர் கலந்து நான்கில் ஒரு பங்கு மிகுந்திருக்கக் காய்ச்சி வடிகட்டுக. அதில் 128 பலம் தயிர் 32 பலம் நெய், 8 பலம் பால் சேர்த்துப் பட்டை விழுது ஆகியவற்றைச் சேர்த்து முறையாக நெய்ப்பக்குவம் செய்க. இந்த நெய் மருந்து விஷமக் காய்ச்சலைத் தணிக்கும். 218

## 142. நாள் பட்ட காய்ச்சலுக்கு பிப்பல்யாதி கிருதம்

திப்பிலி, அதிவிடயம், திராட்சை, நன்னாரி, வில்வப் பட்டை, சிவப்புச் சந்தனம், கடுகரோகிணி, குடசப்பாலை, வெட்டிவேர், கண்டங்கத்திரி, கீழாநெல்லி, கோரைக் கிழங்கு பிராம்மி, மூவிலை, நெல்லிமுள்ளி, சுக்கு, கொடி வேலி வேர்ப்பட்டை ஆகியவற்றைச் சம அளவில் கொண்டு தூளாக்கி நீர்விட்டு அரைத்து விழுதாகச் செய்க. பிறகு பஞ்ச கோல முறைப்படி அல்லது விழுதுடன் அதற்கு நான்கு மடங்கு நெய் நெய்க்கு நான்கு மடங்கு நீர் சேர்த்து நெய் மருந்து செய்க. இந்நெய் மருந்தைப் பயன்படுத்துவதால் விஷமக்காய்ச்சல் நாட்பட்ட காய்ச்சல், தலைவலி, குன்மம், வயிற்று நோய்கள், க்ஷயம், இருமல், விலாவலி, மிக்க அழற்சி ஆகியவை நீங்கும். 218-221

## 143. நாள்பட்ட காய்ச்சலுக்கு [1]குடுச்யாதி கிருதம்

'ல் கொடி, கடுக்காய், தான்றிக்காய், நெல்லிக்காய், ஆடாதொடை, பிராம்மி, தொட்டால் சிணுங்கி, பஞ்சகோலம். (திப்பிலி, சித்ரமூலம், செவியம் கொடி வேலி சுக்கு எனும் ஐந்து பொருட்கள் குடுசி சீந்தில் கொடி ஆகியவற்றின் கஷாயம், 16 பிரஸ்தம், திராட்சை, திப்பிலி, கோரைக்கிழங்கு, சுக்கு, தாமரை) சிவப்புச் சந்தனம் ஆகியவற்றின் விழுது ஒரு பிரஸ்தம், நெய் நான்கு பிரஸ்தம் எனக் கொண்டு அனைத்தையும் சேர்த்து முறைப்படி நெய் மருந்து செய்க.

1. குடுசி – சீந்தில் கொடி

இது குடுச்யாதி கிருதம் எனப்படும். இம்மருந்தை நாள்தோறும் உட்கொள்வதால் க்ஷயம், இழுப்பு, இருமல், அசீரணம், ஆகியவை தணியும். *222–223*

### *144. நாள்பட்ட காய்ச்சலுக்குக் கலசி[1] ஆதிகிருதம்*

ஓரிலை, கண்டங்கத்தரி, திராட்சை, பிராம்மி, வேப்பம் பட்டை, நெஞ்சி, சிற்றாமுட்டி, பர்ப்பாடகம், கோரைக்கிழங்கு, மூவிலை, தொட்டால் சிணுங்கி ஆகியவற்றை முறைப்படி கஷாயம் காய்ச்சி அக்கஷாயம் 16 பிரஸ்தம், பூலாங்கிழங்கு, கீழாநெல்லி, சிறுதேக்கு, மேதா, நெல்லிக்காய் புஷ்கர மூலம் ஆகியவற்றின் விழுது ஒரு பிரஸ்தம், நெய் நான்கு பிரஸ்தம், பால் எட்டு பிரஸ்தம் எனக் கொண்டு அனைத்தையும் சேர்த்து நெய் மிகுந்திருக்கக் காய்ச்சிக் கொள்க. இந்நெய் மருந்தை நாள்தோறும் உட்கொண்டு வந்தால் நாள்பட்ட காய்ச்சல், தலைவலி, விலாவலி, இருமல், க்ஷயம் முதலிய நோய்கள் தீரும். *224–226*

### *145. படோலாதி[2] கிருதம்*

புடலை இலை, பர்ப்பாடகம், வேப்பம்பட்டை, சீந்தில் கொடி, கடுக்காய், தான்றிக்காய், நெல்லிக்காய், ஆடாதொடை, கடுகரோகிணி கோரைக்கிழங்கு, நிலவேம்பு, தொட்டால் சுருங்கி, அதிமதுரம், சிவப்புச் சந்தனம், மரமஞ்சள், குடசப் பாலை, வெட்டி வேர், பிராம்மி, திப்பிலி, வெள்ளைத் தாமரை, ஆகியவற்றின் விழுது ஒரு பிரஸ்தம், நெல்லிக்காய் கரிசலாங்கண்ணி சதாவரி மணத்தக்காளி ஆகியவற்றைச் சேர்த்துச் சுரசம் அல்லது கஷாயம் 16 பிரஸ்தம் அளவு கொண்டு நெய் 4 பிரஸ்தம் சேர்த்து முறைப்படி நெய் செய்க. நாள்தோறும் பயன்படுத்துவதால் அபசி குஷ்டம், அலைச்சல், கண்புரை, கண், வாய், காது, மூக்குகளில் தோன்றும் நோய்கள் தீரும். *227–229*

### *146. நாள்பட்ட காய்ச்சலுக்குக் கல்யாண கிருதம்*

வாயுவிளங்கம், கடுக்காய், தான்றிக்காய், நெல்லிக்காய், கோரைக்கிழங்கு, மஞ்சிட்டி, மாதுளை, நீலாம்பல், ஞாழல்

---

1. கலசி – ஓரிலை; 2. படோலம் – புடலை

ஏலக்காய், ஏலவாலுகம், சிவப்புச் சந்தனம், தேவதாரு, நேத்ரபலா, கோஷ்டம், மஞ்சள், மரமஞ்சள், ஓரிலை, மூவிலை, வெள்ளை நன்னாரி, கருநன்னாரி அரேணுகம், சிவதை, நேர்வாளவேர் வசம்பு, தாளிசபத்திரி, சிறுநாகப்பூ, மல்லிகை மலர், ஆகிய பொருள்களைச் சம அளவு விழுதாகச் செய்து கொள்க.

அத்துடன் 32 பலம் நெய் 64 பலம் பால் 128 பலம் நீர் சேர்த்து நெய்ப்பகுதி மிஞ்சியிருக்கக் காய்ச்சுக. இது கல்யாணகிருதம் எனப்படும். இம்மருந்தில் நாள்தோறும் ஆறுஉளுந்து எடை முதல் ஒரு தோலா அளவுவரை இளஞ்சுடுள்ள பாலைத்துணை மருந்தாகக் கொண்டு உட்கொண்டு வந்தால் நாள்பட்ட காய்ச்சல், இழுப்பு, இருமல், குன்மம், பைத்தியம், கரவிஷம் (இடு மருந்து) ஆகியவை தணியும். இது உடலுக்கு மிக்க நன்மை விளைவிக்கும் மருந்தாகும். உடலுக்குப் பொலிவின்மை, கிரகங்களால் நேரும் துன்பம், அரக்கர்களால் தோன்றும் துன்பம், சடராக்கினிக் குறைவு, கால்கை வலி, பாபம் முதலியன நீங்கும். மேலும் தவறான வழியில் விந்து வலிமையை இழந்தவர்களுக்கு மிக்க நன்மைதரும் மருந்தாகும். மலட்டுப் பெண்களுக்குக் கருப்பை முதலான உறுப்புகளைத் தூய்மைப் படுத்திக் கருவைத் தாங்கும் வலிமையைத் தோற்றுவிக்கும். கண்களுக்கு நன்மை தரும். விந்துவைத் தாங்கும் குழாய் வழிகளைத் தூய்மைப்படுத்தும். ஆயுளை வளர்க்கும். 230-234

## 147. மகாகல்யாண கிருதம்

முன்கூறிய கல்யாண கிருதத்தில் கூறிய வாயு விளங்கம் முதல் மல்லிகை மலர் வரையான பொருள்களுடன் கந்தவர்கம் என நறுமணப் பொருள்களாகக் கூறப்பட்ட கூட்டுப் பொருள்களான இலவங்கப்பட்டை, இலவங்கப்பத்திரி, சாதிபத்திரி, சிறுநாகப்பூ, கர்ப்பூரம், கங்கோலம், (வால்மிளகு) அகில், குங்குமப்பூ, இலவங்கம் ஆகியவற்றின் விழுதைச் சம அளவில் சேர்த்து நீர்விட்டு அரைத்து நான்கு பலம் கொண்டு காராம்பசுவின் நெய் 16 பலம், தங்கபற்பம். நவரத்னபற்பம், ஆகியவற்றுடன் 64 பலம் நீர் சேர்த்து நெய் மிகுந்திருக்கக் காய்ச்சி வடிகட்டிக் கொள்க. மீண்டும் இந்நெய்யுடன் காராம் பசும்பால் 48 பலம் மல்லிகைப் பூ, சம்பகப் பூ, அசோகு மற்றும் வாகை மலர்கள், சடாமாஞ்சி, செந்தாமரை, மாதுளம் பூ, அல்லது அம்மலர்க் கேசரங்கள் ஆகியவற்றின் விழுதைச் சேர்த்து 64 பலம் நீர் சேர்த்து நெய்ப்பக்குவம் செய்க. நெய்ப்பகுதி

மட்டும் மிகுந்திருக்கும் போது (அடுப்பிலிருந்து இறக்கி வடிகட்டிக் கொள்க. இது மகாகல்யாண கிருதம் எனப்படும்) நல்ல நாள் நட்சத்திரம் பார்த்து மந்திரங்கள் ஓதுவதால் புனிதத் தன்மை கொண்ட இந்நெய் மருந்தை மன்னர்களும் உட்கொள்ளத் தக்கதை நோயாளிக்கு ஆறு உளுந்து எடை முதல் ஒரு தோலா வரை அளவாக வெண்ணெயுடன் கலந்தோ, பாலில் கலந்தோ உட்கொள்ளச் செய்க. இது எல்லா வகைக் காய்ச்சல்களையும் தணிக்கும். இந்த நெய்மருந்தைக் கண்களால் பார்ப்பதும், தொடுவதும் எல்லா நோய்களையும் போக்கவல்லதாகும். இது மிகவும் நன்மை பயக்கும் மருந்தாகும். இதை நாள்தோறும் உட்கொள்பவன் அறிவாலும், உடல் வலிமையாலும் மிக்க சிறப்பு கொண்டு வெல்ல முடியாதவனாகி நரை முதுமை முதலியன இன்றி முன்னூறு ஆண்டுகள் கூட வாழக் கூடியவன் ஆவான். 235–239

## 148. விஷமக் காய்ச்சலுக்குப் பஞ்சகவ்யகிருதம்

பசுந்தயிர், பசுவின் சிறுநீர், பசும்பால், பசு நெய், பசுஞ்சாணச் சாறு ஒவ்வொன்றும் ஒரு பிரஸ்தம் வீதம் கொண்டு கடுக்காய், தான்றிக்காய், நெல்லிக்காய், சித்ரமூலம், கோரைக்கிழங்கு, மஞ்சள், ஆடாதொடை, வாயு விளங்கம், சுக்கு, மிளகு, திப்பிலி, செவியம், தேவதாரு எனினும் பொருள்களைச் சம அளவு கொண்டு சேர்த்து நெய்யில் நான்கில் ஒருபங்கு அளவு சேர்த்து நெய் அளவுக்கு நான்கு மடங்கு நீர் சேர்த்து நெய்ப்பகுதி மிகுந்திருக்கக் காய்ச்சுக. பிறகு வடிகட்டிக் கொள்க. இது பஞ்ச கவ்யகிருதம் எனப்படும். இந்நெய் மருந்தில் ஆறு உளுந்து எடை முதல் ஒரு தோலாவரை இளஞ்சூடுள்ள பால் அல்லது நீருடன் நாள்தோறும் உட்கொண்டு வந்தால் விஷமக் காய்ச்சல் தணியும். 240–241

பஞ்ச கவ்யம் – பசும்பால், பசுந்தயிர், பசுநெய், பசுஞ்சாணம், பசுவின் சிறுநீர் என்பன ஐந்தின் கூட்டு.

## 149. மற்றொரு முறை

முன்கூறிய பஞ்சகவ்ய கிருதத்தில் திரிபலைமுதல் தேவதாரு வரை கூறிய பொருள்களின் விழுது சேர்க்காமல் பசுவின் தயிர் முதலானவை ஐந்தையும் ஒவ்வொரு பிரஸ்தம் அளவு கொண்டு நான்கு பிரஸ்தம் நீர் சேர்த்து நெய்ப்பகுதி மட்டும் மிகுந்திருக்கப் பக்குவம் செய்க. இது விழுது சேராத பஞ்சகாவிய கிருதமாகும். 242

### 150. மூன்றாவது முறை

அதைப்போலவே முதலில் கூறப்பட்ட திரிபலாதி மருந்துப் பொருள்களுடன் கூடிய பஞ்சகவ்ய கிருதத்தில் ஆடாதொடை இலைகளின் சுரசம் நீருக்கு மாறாகச் சேர்த்துப் பக்குவம் செய்க. இதைப்போலவே முதலில் கூறிய விழுதுடன் கூடிய பஞ்சகவ்ய கிருதத்தில் சிற்றாமுட்டிக் கஷாயத்தை நீருக்கு மாறாகச் சேர்த்துப் பக்குவம் செய்க. இதைப்போலவே விழுதுடன் கூடிய பஞ்சகவ்ய கிருதத்தில் சீந்தில் கொடியின் சுரசம் சேர்த்து நெய் மருந்து செய்யலாம். இவ்வாறு மூன்று வகையான பஞ்ச கவ்யகிருத முறைகள் கூறப்பட்டுள்ளன. இம்முறைகள் நாட்பட்ட காய்ச்சல், வீக்கம், பாண்டு நோய் முதலியவற்றில் சிறப்பாகப் பயன் தரக் கூடியவையாகும். *243*

### 151. [1]பஞ்சாவிகாதி கிருதம்

செம்மறியாட்டின் தயிர், சிறுநீர், பால், நெய், பிழுக்கையின் சாறு ஆகியவற்றால் அல்லது ஆட்டின் தயிர் – பால் – சிறுநீர் – நெய் – பிழுக்கைச் சாறு முதலியவற்றுடன் அல்லது எருமைப்பால் தயிர் நெய், சிறுநீர், சாணச்சாறு ஆகியவற்றுடன் நெய்மருந்துகளைச் செய்து விஷமக் காய்ச்சலில் பயன்படுத்தலாம். மேலும் ஒட்டகத்தின் பால், தயிர், நெய், சிறுநீர் ஆகிய நான்கை ஒவ்வொரு பிரஸ்தம் வீதம் கொண்டு முறைப்படி நெய் மருந்து செய்து பயன்படுத்தலாம். *244*

### 152. திரிபலாதிகிருதம்

கடுக்காய், தான்றிக்காய், நெல்லிக்காய், வெட்டிவேர், சரக்கொன்றைப் பழக்கதுப்பு, கடுகரோகிணி, அதிவிடயம், கோரைக்கிழங்கு, சதாவரி, எழிலைப் பாலைபட்டை, சீந்தில் கொடி, மஞ்சள், மரமஞ்சள், சிவதை, வட்டத் திருப்பி, புடலை இலை, வேப்பம்பட்டை, நேத்ரபலா, நிலவேம்பு, வசம்பு, தும்மட்டி வேர், பதுமுகம், நீலாம்பல், வெள்ளை நன்னாரி, கருநன்னாரி, அதிமதுரம், செவியம், சிவப்புச்சந்தனம், காஞ்சொரி, பர்பாடகம், பிராம்மி, ஆடாதொடை, சிற்றரத்தை, குங்குமப்பூ,

1. ஆவிகம் – செம்மறியாட்டினுடைய தயிர் முதலானவை

மஞ்சிட்டி, திப்பிலி, சுக்கு ஆகிய பொருள்களைச் சம அளவு விழுது செய்து கொள்க. நெய் நான்கு பிரஸ்தம், நெல்லிக்காய் சுரசம் அல்லது கஷாயம் நெய்யின் அளவுக்கு இருமடங்கு எனக்கொண்டு நான்கு மடங்கு நீர்விட்டு நன்றாகப் பக்குவம் செய்க. இது திரிபலாதி கிருதம் எனப்படும் இந்த மருந்து அக்கி, காய்ச்சல், சுவாசம், குன்மம், குட்டம், பாண்டு, மண்ணீரல் வீக்கம், சடராக்கினி குறைவு போன்ற நோய்கள் கொண்டவர்களுக்குச் சிறப்பான பயன்தரக் கூடியதாகும். *245–249*

## 153. [1]படோலாதி கிருதம்

பேய்ப் புடலை இலை, கடுகரோகிணி, மரமஞ்சள், வேப்பம் பட்டை ஆடாதொடை, கடுக்காய், தான்றிக்காய், நெல்லிக்காய், காஞ்சொரி, பர்ப்பாடகம், பிராம்மி என்பன ஒவ்வொன்றும் ஒவ்வொரு பலம் வீதம் கொண்டு ஒரு பிரஸ்தம் நெல்லிக்கனியுடன் அனைத்தையும் இடித்து ஒரு துரோணம் அளவு நீர்சேர்த்து நான்கில் ஒருபங்கு மிகுந்திருக்கக் காய்ச்சுக.

பிறகு வடிகட்டி அதில் நெய் பதினாறு பலம், குடசப் பாலைப் பட்டை, நிலவேம்பு, கோரைக்கிழங்கு, அதிமதுரம் சந்தனம், திப்பிலி ஆகியவை அனைத்தும் சேர்ந்த விழுது நான்கு பலம் சேர்த்து முறைப்படி நெய் மருந்து செய்க. இந்த படோலாதி கிருதம் கண்களுக்கு மிக்க நன்மை தரும். கண்களின் வெள்ளை விழிப்பகுதியில் விரணத்துடன் அல்லது விரணம் இல்லாமல் தோன்றும் நோய்களைத் தீர்க்கும். மேலும், மூக்கு, காது, கண், வாய், கண்ணிமை போன்ற உறுப்புகளில் தோன்றும் விரணம், நோய் முதலியவற்றைத் தணிக்கும். மேலும் ரத்தபித்தம், கபம், மிக்க வியர்வை தோன்றுதல், உடலில் தோன்றும் சோர்வு, சீழ் முதலியவற்றைப் போக்கும். காமாலை, காய்ச்சல், அக்கி, கண்ட மாலை முதலிய நோய்களைப் போக்கும். *250–254*

## 154. காய்ச்சலுக்குப் பஞ்சஸார முறை

காய்ச்சிய பால், சர்க்கரை, திப்பிலி, தேன், நெய் என்பன 'பஞ்சஸாரம்' எனப்படும். இவற்றைத் தகுந்த அளவில் கொண்டு கையால் நன்றாகக் கலக்கி நாள்தோறும் விஷமக் காய்ச்சல்,

1. படலோ – பேய்ப்புடல்

அடிபடுதலால் உடல் இளைத்தல், க்ஷயம், சுவாசம், இதயநோய் ஆகியவற்றால் துன்புறுபவர்களுக்கு உட்கொள்ளக் கொடுத்தால் மிகவும் நல்ல பலன் உண்டாகும். 255

## 155. நாள்பட்ட காய்ச்சலுக்கு லாக்ஷாதி[1] தைலம்

கொம்பரக்கு, சுக்கு, மஞ்சள், வட்டத் திருப்பி, மஞ்சிட்டி, ஸர்ஜக்ஷாரம், கோஷ்டம் என்பனவற்றைச் சம அளவில் மொத்தம் எட்டு பலம் அளவாகக் கொண்டு இடித்து நீர்விட்டு அரைத்து விழுதாகச் செய்க. அத்துடன் 32 பலம் எள் எண்ணெய், 192 பலம் மோர் கலந்து முறைப்படி எண்ணெய் மருந்து காய்ச்சுக. இது லாக்ஷாதி தைலம் எனப்படும். அதை நாள்தோறும் காலையில் வெயிலில் அமர்ந்து உடல் முழுவதும் தேய்த்துக் குளித்தால் அழற்சியுடன் அல்லது குளிர்ச்சியுடன் தோன்றும் நாட்பட்ட காய்ச்சல் தணியும். 256

## 156. விஷமக் காய்ச்சலுக்கு க்ஷீரி விருக்ஷாதி[2] தைலம்

ஆலம் முதலான பாலுள்ள மரங்களின் பட்டைகள், ஜயஸாரம், (வேங்கை பிசின் அல்லது பட்டை) வேப்பம்பட்டை, நாவல் பட்டை, ஏழிலைப் பாலைப் பட்டை, எருக்கம்பட்டை, நன்னாரிப் பட்டை, சிந்தில் கொடி, பட்டை, ஆடாதொடை, கடுக ரோகிணி, பர்ப்பாடகம், வெட்டிவேர், வசம்பு, ஜோதிஷ்மதி, கோரைக்கிழங்கு எனும் இவற்றைச் சம அளவில் கொண்டு நன்கு இடித்து மொத்தமாக நான்கு பலம் உள்ள விழுது செய்து கொள்க. அத்துடன் பதினாறு பலம் எண்ணெய் மருந்து காய்ச்சுக. இது க்ஷீரிவிருக்ஷாதி தைலம் எனப்படும். நாள்தோறும் இதை எண்ணெய்க் குளியலுக்குப் பயன்படுத்தினால் நாட்பட்ட காய்ச்சல் தணியும். 257-258

## 157. விஷமக் காய்ச்சலில் அச்சுறுத்தும் சிகிச்சை முறை

விஷமக் காய்ச்சல் வீறு கொண்டுள்ள போது நோயாளியின் முன் நஞ்சற்ற பாம்பு, பயிற்சி அளிக்கப்பட்டவரான மருத்துவ ரால் ஏவப்பட்ட பொய்த் திருடர்கள் முதலியவற்றைக் கொண்டு

1. லாக்ஷா கொம்பரக்கு;
2. க்ஷீரி விருக்ஷம், பால் உள்ள மரம்; (ஆலம் முதலானவை)

அச்சுறுத்த வேண்டும். அன்று நோயாளிக்கு உணவு கொடுக்கக் கூடாது. (அச்சுறுத்தலால் காய்ச்சல் கண்டுள்ளபோது சீற்றமுற்ற வாதம் தணிந்துவிடும். உணவின்மையால் மற்ற தோஷங்களும் தணிந்து விடும். இதனால் காய்ச்சல் நீங்கும்.) காய்ச்சலில் கபம் மிகவும் சீற்றம் பெற்றிருந்தால் எளிதில் செரிமானமாகாத கொழகொழப்பு மிக்க (சுரோதஸ்களில் கபத்தை மிகச் செய்யும்) பொருள்களால்அல்லது மருக்காரை முதலானவற்றால் செய்த பாலை நிறைவாகப் பருகச் செய்து வாந்தி எடுக்கச் செய்ய வேண்டும். அல்லது தீக்ஷ்ணமான மதுவைப் பருகச்செய்ய வேண்டும். வாதமும் பித்தமும் சீற்றமுற்றிருந்தால் காய்ச்சலைத் தணிக்கும் நெய் மருந்தை உட் கொள்ளச் செய்க. அல்லது பத்து ஆண்டுகள் பழமையான நெய்யை வயிறு முட்டப் பருகச் செய்க. அல்லது கீழ் நோக்கித் தோஷங்களை வெளியேற்றித் துன்பம் விளைவிக்காத பேதியாகச் செய்யும் மருந்துகளைப் பயன் படுத்துக. அல்லது உடல் வியர்க்கச் செய்யும் முறையைச் சீராகப் பயன்படுத்தி நிரூஹண வஸ்தியைக் கொடுக்கவும். 259–261

## 158. காய்ச்சலுக்குப் புகை போடுதல்

ஆடு, செம்மறியாடு எனும் இவற்றின் உடல் மேல் உள்ள உரோமம், வசம்பு, கோஷ்டம், குங்குலியம், வேப்பிலை ஆகியவற்றைச் சம அளவில் கொண்டு சிறிது தேன் கலந்து அதைக் கொண்டு புகை போடுவதால் விஷமக் காய்ச்சல் தணியும், 262

காய்ச்சல் வருமுன் நோயாளிக்கு உடல் நடுக்கம் தோன்றிய போது பூனைமலத்தைக் கொண்டு புகை போடவேண்டும். திப்பிலி, இந்துப்பு, எண்ணெய், மனோசிலை ஆகியவற்றைச் சம அளவு கொண்டு அனைத்தையும் சேர்த்து நன்றாக அரைத்துக் கண் களில் மைபோல் இட்டால் விஷக்காய்ச்சல் தணியும். 263

## 159. வேறு அத்தியாயங்களில் கூறப்பட்டுள்ள முறைகள்

வயிற்று நோய்களைப் பற்றி விளக்கும் உதரரோகாத் தியாயத்தில் கூறிய க்ஷீரஷட் பலகாதி கிருதம், கல்பஸ்தானத்தில் கூறிய அஜேய கிருதம் ஆகியவை விஷமக் காய்ச்சலைத் தணிக்கப் பயன்படுத்தத் தக்கவையாகும். 264

## 160. பூத பிரேதங்களால் மற்றும் மனக்கோளாறுகளாலான காய்ச்சல்களுக்குச் சிகிச்சை

பூதம், பிரேதம் முதலனாவை, மனிதனைப் பற்றிக் கொள்வதால் தோன்றிய காய்ச்சலில் பூதவித்யாத்யாயத்தில் கூறிய மந்திர சபத்துடன் கயிற்றால் கட்டுதல் போன்ற சிகிச்சைகளைக் கையாளவேண்டும். பூதங்களுக்குத் தக்க பலி இடுதல் போன்றவையும் செய்யத்தக்கவையாகும். காமம், கடுஞ்சினம் மிக்க வருத்தம் போன்ற மனக் கோளாறுகளால் தோன்றிய காய்ச்சல்களுக்கு விஞ்ஞானம் முதலான அதாவது அறிவாற்றலை வளர்த்தல்; நினைவாற்றலை வளர்த்தல், தைரியத்தைத் தோற்றுவித்தல், அமைதியைத் தரும் நல்லுரைகளைக் கூறுதல் போன்ற முறைகளைப் பயன்படுத்திக் காய்ச்சலைத் தணிக்க வேண்டும். 265

## 161. ஆகந்துக சிகிச்சை

மிக்க உடல் உழைப்பு, க்ஷயநோய் எனும் இவற்றால் தோன்றும் காய்ச்சல்களுக்கு அதிக அளவு நெய் மற்றும் மாமிசத்துடன் சோறு உட்கொள்ளச் செய்ய வேண்டும். பெரியோர்களின் கடுஞ்சொல்லா(சாபத்தா)ல் மற்றும் ஏவல் முதலியவற்றால் தோன்றிய காய்ச்சலில் ஓமம் வளர்த்தல், சாந்திப் பாடங்களான மந்திரங்களை ஓதுதல், தக்க கழிவிடைகளைச் செய்தல் போன்ற முறைகளால் அக்காய்ச்சலைத் தணிக்க வேண்டும். 266

## 162. இடி மின்னல் போன்றவற்றால், கிரகங்களின் துன்பங்களால் தோன்றும் காய்ச்சல்களுக்குச் சிகிச்சை

மின்னல், இடி முதலியவற்றின் தாக்குதல் உத்பாதம் எனப்படும். அதனால் தோன்றும் காய்ச்சலில் தானம் செய்தல், தக்கவர்களைக் கொண்டு ஸ்வஸ்தியாசனம் எனும் நலம் தோற்றுவிக்கும் மந்திரங்களை ஓதச் செய்தல் போன்றவற்றால் அக்காய்ச்சலைத் தணிக்கச் செய்ய வேண்டும். 267

1. உத்தரஸ்தானம் அறுபதாவது அத்தியாயம் காண்க.

2. புறக்காரணங்களால் தோன்றுதல்.

## 163. அடிபடுதலால் தோன்றும் காய்ச்சலுக்குச் சிகிச்சை

கட்டை, கல், வேறு ஆயுதங்கள் போன்றவற்றால் தாக்குண்டு அடிபடுவதால் தோன்றிய காய்ச்சல் அபிகாதசுரம் எனப்படும். அதற்கு வெப்பத்தைத் தோற்றுவிக்கும் முறைகளைத் தவிர்த்து மற்ற சிகிச்சை முறைகளைக் கையாள வேண்டும். கஷாயம், இனிப்புச் சுவை மற்றும் எண்ணெய்ப்பசை கொண்டவற்றால் செய்யப்படும் முறைகளைக் கையாள வேண்டும். அல்லது வாதம் முதலான சீற்றமடைந்த தோஷங்களை அறிந்து அதற்கு ஏற்ற சிகிச்சை முறைகளைக் கையாள வேண்டும்.

## 164. மருந்துப் பொருள்களின் நெடி, நஞ்சு முதலியவற்றால் தோன்றிய காய்ச்சலுக்குச் சிகிச்சை

மருந்து மூலிகைகளின் (உடலுக்கு ஒவ்வாத) மணம், நஞ்சின் தொடர்பு ஆகியவற்றால் தோன்றும் காய்ச்சல்களுக்கு பித்தத்தைத் தணிக்கும் சிகிச்சை முறைகளைக் கையாள வேண்டும். மற்றும் நறுமணமுள்ள கூட்டுப்பொருள்கள் சேர்த்துக் காய்ச்சிய கஷாயம் அல்லது ஏலாதி கணப்பொருள்களின் கஷாயம், வேப்பம்பட்டை, மரமஞ்சள், மல்லிகை வேர் இலை, மலர்கள் சேர்த்துச் செய்த கஷாயம் முதலியவற்றைப் பருகச் செய்க. 269

## 165. விஷமக் காய்ச்சலில் பத்திய முறை

விஷமக் காய்ச்சல் தோன்றும் நோயாளிக்கு யவதானியத்தாலான உணவுப் பொருள் நவதானியக் கஞ்சி (பார்லி கஞ்சி) நெய், அளவுடன் மதுவைப் பருகுதல் முதலியன நன்மை தரும். மற்றும் அந்தணர், பசு, தேவதை, பரமசிவன், அம்பிகை போன்றவர்களைப் போற்றி வணங்கிடுதல் முதலியன செய்யத் தக்கவை. 270

## 166. விஷமக் காய்ச்சலில் குளிர்ச்சியைப் போக்குதல்

கபவாதங்களால் தோன்றிய விஷமக் காய்ச்சல்களில் குளிரால் துன்புறும் நோய்களுக்கு பத்ரதாரு, முதலான அல்லது சுரசாதி கூட்டுப்பொருள்கள் அல்லது ஏலாதி கணப்பொருள்களால் வெப்பத்தைத் தோற்றுவிக்கும் மருந்துப் பொருள்களை அரைத்து மேல் பூச்சாகப் பூசுவதால் வெப்பத்தைத் தோற்றுவிக்கும் பணிவிடைகளால் குளிரையும் போக்க வேண்டும். 271

## 167. குளிர்ச்சியால் துன்புறுவதற்கு [1]உஷ்ணஸேசனம்

குளிர்ச்சியால் துன்புறும் நோயாளிக்கு இலேசான வெப்பம் கொண்டுள்ள புளிப்புக்காடி, சுக்தம் எனும் மதுவகை, பசுவின் சிறுநீர், மஸ்து (தயிர்த் தெளிவு) முதலியவற்றில் ஒன்றினால் நோயாளியின் உடலை நனைத்துக் கொண்டிருத்தல் அல்லது துளசி, கருந்துளசி, முருங்கை ஆகியவற்றின் இலைகளை அரைத்து உடலின் மேல் பூசுதல் ஆகியவை செய்யத்தக்கவை. 272

## 168. குளிர்ச்சிக்கு க்ஷார தைலம்

புரச க்ஷாரத்தால் எண்ணெயில் சுக்தம் எனும் மதுவைக் கலந்து குளிர்ச்சியில் துன்புறும் நோயாளியின் உடல்மேல் பூசித் தேய்த்துக் குளிக்கச் செய்க. மற்றும் கொன்றை முதலான கூட்டுப் பொருள் களின் கஷாயத்தைப் பருகச் செய்தல். 273

## 169. குளிர்ச்சியால் துன்புறுபவர்களுக்கு [2]அவகாஹம் முதலியன

ஆமணக்கு முதலான வாதத்தைத் தணிக்கும் கூட்டுப் பொருள்களாலான இளஞ்சூடுள்ள கஷாயத்தில் குளிர்ச்சியால் துன்புறும் நோயாளியை மூழ்கி இருக்கச் செய்க. பிறகு இளஞ்சூடுள்ள வெந்நீரால் குளிக்கச் செய்து காற்றோட்டம் இல்லாத வீட்டில் இருக்கச் செய்து கம்பளி பருத்தி ஆடை அல்லது பட்டாடை போர்த்திக் கொண்டு இருக்கச் செய்க. அவனது உடலில் கரு அகிலை ளஅரைத்துப் பூசுக. மற்றும் பருத்த கொங்கைகளைக் கொண்டவளை நெருங்கி இறுகத் தழுவிக் கொண்டிருக்கச் செய்க.

கூதிர் பருவத்து நிறைமதிபோன்ற முகம்; நீலாம்பல்களைப் போல எழிலார்ந்த கண்கள்; அழகாக அசைந்து கொண்டிருக்கும் புருவங்களைக் கொண்ட நெற்றி அழகாக அசைந்து கொண்டி ருக்கும் பருத்த பின்தட்டுகள், கோவைப்பழம் போலச் சிவந்த உதடு, இளைத்த இடை, பருத்த அல்குல் பகுதியை அசைப்பதில் தாமதம் கொண்ட அழகிய பெண்கள் குங்குமப்பூ, அகில் முதலானவற்றைப் பூசி உயர்ந்த பருத்த கொங்கைகளுடன் பல

1. உஷ்ணஸேசனம், வெப்பம் தரும் திரவப் பொருளால் நனைத்தல்
2. அவகாஹம் – மூழ்கிக் குளித்தல்.

வகை நறுமணப் பொருள்களின் புகைமண்டியிருப்பதால் நறு மணம் கொண்டுள்ள அழகிய நிறம் கொண்ட முந்தாணைகள் நழுவக் குளிர்ச்சியில் துன்புறும் நோயாளியை நெருங்கி நந்தவனக் கொடிகள் மரங்களைச் சுற்றியுள்ளது போல இறுகத் தழுவிக் கொண்டிருக்கச் செய்க. அவர்களின் செயலால் மனமகிழ்ந்துள்ள நோயாளிக்கு அம்மாதர்களின் பால் விருப்பம் மிகும்போது விரைந்து அம்மங்கையர்கள் அவ்விடத்தை விட்டு அகலும்படிச் செய்க. நோயாளியின் குளிர் காய்ச்சல் இப்பணிவிடையில் தணிந்த பிறகு அவனுக்கு விருப்பமான பத்தியமான உணவை உட்கொள்ளச் செய்க. இதனால் அந்நோயாளிக்கு சுகமும், அமைதியும் உண்டாகும். 274–27

## 170. காய்ச்சலில் தோன்றும் அழற்சிக்குச் சிகிச்சை

காய்ச்சல் தோன்றுவதற்கு முற்குறியாக அல்லது காய்ச்சல் கொண்டுள்ளபோது மிக்க அழற்சி தோன்றும். வேப்பிலைகளை அரைத்து நீரில் கலந்து கஷாயம் காய்ச்சி வடிகட்டி தேனும், வெல்லப்பாகும் கலந்து உடலின் மேல் பூசவேண்டும். அல்லது தேனும், வெல்லப்பாகும் கலந்த வேப்பிலைக் கஷாயத்தைப் பருகி அழற்சியுடன் கூடிய காய்ச்சல் கொண்டவன் விரைவாக வாந்தி எடுக்கும்படிச் செய்ய வேண்டும். இதனால் பித்தம் தணியும். அல்லது அழற்சியுடன் கூடிய காய்ச்சல் கொண்டவன் நூறு முறை தூய்மைப்படுத்தப்பட்ட நெய்யை உடலின்மேல் பூசிக் கொள்ளச் செய்ய வேண்டும். மற்றும் யவதானியப் பொரிமாவை நீரில் கலந்து அதை அவனது உடல்மேல் பூசவேண்டும். 282–283

இலந்தை, நெல்லிக்காய்களைத் தூளாக்கிக் காடி அல்லது மதுவுடன் கலந்து நோயாளியின் உடலின் மேல் பூச வேண்டும். அல்லது பொன்னலன் இலை, புளியாரைக் கீரை இலைகளை அரைத்து புளிக்காடியில் கலந்து உடலின் மேல் பூச வேண்டும். 284

புரசந்தளிர் இலைகளை அரைத்துக் குளிர்ந்துள்ள அதை நோயாளியின் உடலின் மேல் பூச வேண்டும். இலந்தை இலைகளை நீரில் இட்டு, அல்லது வேப்பிலைகளை நீரில் இட்டு அல்லது பொன்னலன் காய்களை நீரில் இட்டுக் கடைந்து அந்நுரையுடன்கூடிய நீரை உடலின் மேல் பூசவேண்டும். இதனால் அழற்சி நாவறட்சி, நினைவிழத்தல் ஆகியவை தணியும். 285

## *171. அழற்சிக்குப் பிரஹ்லாதக தைலம்*

*யவதானிய விழுது இரண்டு பலம், மஞ்சிட்டி அரை பலம் புளிக்காடி 100 பிரஸ்தம், எள்எண்ணெய் ஒரு பிரஸ்தம் எனக் கொண்டு அனைத்தையும் சேர்த்து முறைப்படி எண்ணெய் மருந்து காய்ச்சுக. இது பிரஹ்லாதக தைலம் எனப்படும். நாள்தோறும் இந்த எண்ணெயைக் குளியலுக்குப் பயன்படுத்தினால் காய்ச்சல், அழற்சி ஆகியவை தணியும். 286–287*

## *172. [1]நியக்ரோதாதி கணலேபம்*

*ஆல மரம் முதலான கூட்டுப் பொருள், காகோலி முதலான கூட்டுப் பொருள், ஆம்பல் முதலான கூட்டுப் பொருள் ஆகியவற்றில் ஏதேனும் ஒரு கூட்டுப் பொருள்களைக் கிடைத்தவற்றைக் கொண்டு நீர்விட்டு அரைத்து உடலின் மேல் பூசுவதால் அழற்சி நீங்கும். 288*

## *173. நியக்ரோதாதிகண தைலம்*

*முன்கூறிய மூன்று வகைக் கூட்டுப் பொருள்களில் கிடைத்தவற்றைக் கொண்டு கஷாயம் காய்ச்சி அத்துடன் புளிக்காடி சேர்த்து எண்ணெய் மருந்து செய்து எண்ணெய்க் குளியலுக்குப் பயன்படுத்தினால் அழற்சி தணியும். அல்லது கூறிய கூட்டுப் பொருள்களின் சீதகஷாயத்தைக் கொண்டு அழற்சி கொண்ட நோயாளியைக் குளிக்கச் செய்க. கஷாயத்தைத் தொட்டியில் நிரப்பி அதில் நோயாளியை மூழ்கி இருக்கச் செய்து அழற்சி தணிந்தபின் குளிர்ந்த நீரில் குளிக்கச் செய்து குளிர்ச்சிதரும் கர்ப்பூரம் முதலான கலந்துள்ள சந்தனத்தை உடல் முழுவதும் பூசிக்கொள்ளச் செய்க. இவ்வாறு குளிப்பதால் நோயாளி சோர்வு நீங்காதவனாக இருந்தால் அல்லது மெல்லிய பட்டாடை உடுத்தி, சந்தனம் கர்ப்பூரம் முதலியவற்றைப் பூசியதால் ஈரப்பசை கொண்ட உயர்ந்த கொங்கைகளைக் கொண்டு தாமரை மலர்களாலான மாலையை அணிந்துள்ளவளும், பலவகை இரத்தினங்கள்ாலான ஹாரங்களை அணிந்தவளும் ஆன இள மங்கை தன் சந்தன நறுமணத்துடன் கூடிய கொங்கைகளால், அணிந்துள்ள தாமரை முதலிய மலர்களால் நோயாளியின் உடல் உறுப்பு*

*1. நியக்ரோதம் – ஆலமரம்*

களைத் தீண்டச் செய்க. இறுகத் தழுவி முத்தமிடச் செய்க. இவ்வாறு உணர்ச்சியைத் தூண்டும் பணிவிடைகளால் நோயாளி மிக்க மகிழ்ச்சி கொண்டதும் அப்பெண்ணை அவ்விடத்திலிருந்து அகற்றுக. பிறகு நோயாளிக்கு நன்மை பயக்கும் உணவைத் தருக. இச்செய்கைகளால் நோயாளிக்கு மிக்க நன்மை உண்டாகும்.

289–293

## 174. அழற்சியில் பித்தக் காய்ச்சலுக்குக் கூடிய முறைகளைப் பயன்படுத்தல்

பித்தக் காய்ச்சலைத் தணிப்பதற்கு முன் கூறிய முறைகள், பேதியாகச் செய்தல் முதலான நன்மை தரும் சிகிச்சை முறைகள் ஆகியவற்றை அழற்சியைத் தணிக்கப் பயன்படுத்துக. ஏனெனில் தோஷங்கள் ஒன்றோடொன்று சேர்ந்து தோற்றுவிக்கும் காய்ச்சலில் முதலில் பித்தத்தைத்தான் தணிக்க வேண்டும். ஏனெனில் அழற்சியுடன் கூடிய காய்ச்சலில் பித்தச் சீற்றத்தைத்தான் தவிர்ப்பது மிக்க சிரமமாகும். 294

## 175. காய்ச்சலில் மற்ற துன்பங்களை நீக்குதல்

காய்ச்சலில் வாந்தி, நினைவிழத்தல், மிக்க நாவறட்சி முதலிய துன்பங்கள் தோன்றினால் காய்ச்சலுக்கு மாறானதல்லாத துன்பங்களுக்கு மாறான பொருள்களைக் கொண்டும், உணவு, போன்றவற்றைக் கொண்டும் துன்பங்களைத் தணிக்க வேண்டும்.

295

## 176. காய்ச்சலில் தோன்றும் துன்பங்களைத் தணிக்கச் சிறப்பான முறைகள்

அதிமதுரம், மஞ்சள், கோரைக் கிழங்கு, மாதுளை விதை, புளிவஞ்சி, சுரமா (கண்களில் இடும் மை) புளியம்பட்டை, வெட்டி வேர், தாமரை இதழ், இலவங்கப்பட்டை, புலிநகப்பூண்டு, துரிஞ்சிப் பழச்சாறு, தேன் எனும் இவற்றைச் சம அளவில் கொண்டு தேன் அல்லது மதுக்கம் சேர்த்து அரைத்து காய்ச்சல் கொண்டவனின் தலையில் பூசவும். இது தலையில் தோன்றும் எரிச்சல், நினைவிழத்தல், வாந்தி, குமட்டல், நடுக்கம் போன்ற

தனியாகத் தோன்றிய அல்லது காய்ச்சலின் வேகத்தால் தோன்றிய துன்பங்களைப் போக்கும். 296-299

அதிமதுரம், வெட்டிவேர், ஆம்பல், வட்டத் திருப்பி ஆகியவற்றைச் சம அளவில் கொண்டு தூளாக்குக. அதில் நாள் தோறும் ஒன்று முதல் மூன்று உளுந்து எடை வரை நெய்யும் தேனும் கலந்து உட்கொள்ளச் செய்தால் வாந்தி தணியும். அவ்வாறே கடுமையாகத் தோன்றிய கபப்பெருக்கு, இரத்த பித்தம், விக்கல், சுவாசம் எனும் நோய்களும் தணியும். 300-301

## 177. திரிபலா திப்பிலி முறை

காய்ச்சலால் துன்புறுபவன் திரிபலை மற்றும் திப்பிலியைச் சம அளவில் கொண்டு தேனுடன் மூன்று நாட்கள் அரைத்து அதில் நாள்தோறும் ஒரு உளுந்து எடை கொண்டு மூன்று உளுந்து எடை தேன் 6 உளுந்து எடை நெய் கலந்து இருமல், இழுப்பு தோன்றிய போது உட்கொண்டால் அத்துன்பம் தணியும். 302

## 178. நாவறட்சிக்கு மருந்து

நாவறட்சியால் துன்புறும் நோயாளிக்கு முதுக்கன் கிழங்கு மாதுளை விதை, பாச்சோத்தி, விளாம்பழக் கதுப்பு, துரிஞ்சிப் பழச்சாறு ஆகியவற்றைக் கல்வத்தில் இட்டு அரைத்து தலைமேல் பூச வேண்டும். 303

## 179. சுவையின்மைக்கு மருந்து

காய்ச்சலில் வாய் சுவையின்றியிருக்கும்போது மாதுளை விதை, சர்க்கரை, திராட்சை, நெல்லிமுள்ளி ஆகியவற்றைச் சம அளவில் கொண்டு நீர்விட்டு அரைத்து விழுதாக்கி வாயில் அடக்கிக் கொண்டிருக்கச் செய்க. அவ்வாறே பால், கருப்பஞ்சாறு, தேன், நெய், எண்ணெய், இளஞ்சூடுள்ள நீர் ஆகியவற்றால் கொப் பளிக்கும் முறையைப் பயன்படுத்துக. 304

## 180. ஜீவனிய கிருத நஸ்யம்

தலை எண்ணெய்ப் பசை இன்றி வற்றாகக் காணப்பட்டால் ஜீவனிய கணக்கூட்டுப் பொருள்களின் விழுது ஒருபலம் நெய் நான்கு பலம் நீர் பதினாறு பலம் சேர்த்து நெய் அளவு மிகுந்திருக்கக்

காய்ச்சுக. இது ஜீவநிய கிருதம் ஆகும். இதை மூக்கிலிடும் மருந்தாகப் பயன்படுத்த வேண்டும். 305

## 181. முற்றிய பித்தக் காய்ச்சலுக்குச் சிகிச்சை

நன்கு முற்றிய பித்தக் காய்ச்சலில் மேல் நோக்கிப் பரவிய இரத்தப் பித்தத்தில் உடலுறுப்புகள் நடுக்கம் கண்டபோதும் கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய், சிவதை, கருஞ்சிவதை, திப்பிலி, ஆகியவற்றைச் சம அளவில் கொண்டு தூள் செய்து 3 உளுந்து எடை சர்க்கரை கலந்து உட்கொள்ளச் செய்தால் பேதியாகித் துன்பம் தணியும். 306

## 182. கபவாதக் காய்ச்சலுக்குச் சிகிச்சை

கபவாதங்களின் சீற்றத்தால் தோன்றிய காய்ச்சலில் முறைப் படித் தூய்மைப்படுத்தும் மருந்துகளைப் பயன்படுத்துவதுடன் எண்ணெய்ப்பசை தோற்றுவித்தல், எண்ணெய்க்குளியல் எனும் முறைகளால் நோயைத் தணிக்க வேண்டும். 307

## 183. தலைச்சுற்றலுக்குச் சிகிச்சை

கூறியபடி காய்ச்சலுள்ள நோயாளிக்குச் சிகிச்சை செய்து வாதம் முதலிய தோஷங்களைத் தணித்த பிறகும் தலைச்சுற்றல் தணியா விடில், கடுக்காய்த் தூய் 3 உளுந்து எடை முதல் 6 உளுந்து எடைவரை ஒரு தோலா தேன், ஆறு உளுந்து எடை சர்க்கரை கலந்து உட்கொள்ளச் செய்க.

## 184. வாதக் காய்ச்சலில் நிரூஹவஸ்தி முதலியன

வாதக் காய்ச்சலில் வாதத்தைத் தணிக்கும் பத்ரதாரு முதலான மருந்துப்பொருள்கள், காகோலி முதலான இனிப்புச் சுவை கொண்ட கூட்டுப் பொருள்களின் விழுது மற்றும் கஷாயம் ஆகிய வற்றால் செய்த எண்ணெய் அல்லது நெய் மருந்தைக் கொண்டு நிரூஹணவஸ்தி கொடுக்க வேண்டும். அவ்வாறே உடலில் சீற்றமுற்ற தோஷங்களின் நிலை, நோயாளியின் உடல்வலிமை ஆகியவற்றை அறிந்து தகுந்தபடி அநுவாஸனவஸ்தியைப் பயன்படுத்த வேண்டும். 309

## 185. பித்தக் காய்ச்சலில் நிரூஹணப் பொருத்தம்

ஆம்பல் முதலான கூட்டுப் பொருள்களுடன் சிவப்புச் சந்தனம் வெட்டிவேர் ஆகியவற்றைச் சேர்த்துக் கஷாயம் காய்ச்சிக் குளிரச் செய்து பிறகு வடிகட்டி அதில் சர்க்கரை கலந்து இனிப்புச் சுவை யைக் கொள்ளச் செய்து நிரூஹணவஸ்தியாகப் பயன்படுத்தினால் பித்தக் காய்ச்சல் தணியும். 310

## 186. பித்தக்காய்ச்சலுக்கு வேறு நிரூஹணப் பொருள்கள்

நியக்ரோதாதி கணத்தில் கூறப்பட்ட கூட்டுப் பொருள்களில் கூறிய மாமுதல் நந்தி விருட்சம் வரை உள்ள மருந்துப் பொருள்களின் பட்டை, சங்கு, சிவப்புச் சந்தனம், அதிமதுரம், நீலாம்பல், தாமரைத் தண்டு, பதுமுகம் ஆகியவற்றைச் சம அளவில் கொண்டு மைய அரைத்துப் பாலில் கலந்து சர்க்கரையும், தேனும் கலந்து வடிகட்டி அழற்சியால் துன்புறும் நோயாளிக்கு குளிர்ந்த நிரூஹண வஸ்தி கொடுக்க வேண்டும். அவ்வாறே நியக்ரோதாதி கூட்டுப் பொருள்களின் பட்டைகளாலான எண்ணெயை அநுவாஸன வஸ்தியாகப் பயன்படுத்துக. இதனால் காய்ச்சலும் அழற்சியும் தணியும். 311–312

## 187. கபக்காய்ச்சலில் நிரூஹவஸ்தி

ஆரக்வத கணத்தைச் சேர்ந்த கூட்டுப் பொருள்களின் கஷாயத்தில் திப்பிலி முதலான கூட்டுப் பொருகளின் விழுது, தேன் பசுவின் சிறுநீர் ஆகியவற்றைக் கலந்து நிரூஹணவஸ்தி கொடுப்பதால் கபக்காய்ச்சல் தணியும். இவ்வாறே கபத்தைப் போக்கும் மருந்துப் பொருள்களின் கஷாயத்தால் செய்த எண்ணெயை அனுவாஸன வஸ்தியாகக் கொடுப்பதால் கபக்காய்ச்சல் தணியும். 313

## 188. தோஷங்கள் கலந்துள்ள போது நிரூஹ – அநுவாஸன வஸ்திகள்

வாதம் முதலான தோஷங்களில் எவையேனும் இரண்டு கலந்து அல்லது மூன்று தோஷங்களும் கலந்து தோற்றுவித்த காய்ச்சல்

ஆரக்வதா – சரக்கொன்றை

களில் கலந்துள்ள தோஷங்களைத் தணிக்கும் மருந்துப் பொருள் களைக் கலந்து செய்த மருந்தால் நிரூஹணவஸ்தி கொடுப்பது நலம் தரும். அவ்வாறே இரண்டு தோஷங்கள் கலந்த மற்றும் ஸந்நிபாதத் ததால் தோன்றிய காய்ச்சல்களில் அந்தந்த தோஷங்களையும் மருந்துப் பொருள்களின் விழுது மற்றும் அவற்றின் கஷாயம் கலந்து செய்த நெய், எண்ணெய் மருந்துகளால் அநுவாஸன வஸ்திகளைக் கொடுப்பதும் நன்மை தரும். *314*

## *189. வாதக் காய்ச்சலுக்கான வஸ்தியில் எண்ணெயை விலக்குதல்*

வாதச் சீற்றத்தால் தோன்றும் காய்ச்சலில் வாதத்தையும், வாதத்தால் தோன்றிய நோய்களையும் போக்குவதற்கு எல்லாவகை அதாவது நெய், எண்ணெய், வசை, மஜ்ஜை எனும் எண்ணெய்ப் பசை கொண்ட மருந்துகள் கூறப்பட்டுள்ளன. அவற்றில் நல்லெண்ணெயைத் தவிர்த்து மற்ற மூன்றும் கலந்த அநுவாஸன வஸ்தியை வாதக் காய்ச்சலில் பயன்படுத்த வேண்டும். ஆனால் எண்ணெய்க் குளியலிலும் மற்றும் சிகிச்சை முறைகளில் நான்கு வகை எண்ணெய்ப் பொருள்களையும் பயன்படுத்துக. *315–316*

## *190. பித்தக் காய்ச்சல் முதலியவற்றில் சிறந்த முறை*

பித்தக் காய்ச்சலில் இனிப்புச் சுவை கொண்ட மற்றும் கசப்புச் சுவை கொண்ட மருந்துப் பொருள்களின் விழுது மற்றும் கஷாயம் கலந்து செய்த நெய் மருந்தாகப் பயன்படுத்த வேண்டும். அவ்வாறே கபக் காய்ச்சலில் கார்ப்புச் சுவை மற்றும் கசப்புச் சுவை கொண்ட பொருட்களாலான விழுது, கஷாயம் கலந்து செய்த நெய் மருந்தைப் பயன்படுத்துக. இரண்டு தோஷங்கள் கலந்து மற்றும் மூன்று தோஷங்களும் கலந்து தோற்றுவிக்கும் காய்ச்சல்களில் அந்தந்த இரண்டு தோஷங்களைப் போக்கவல்ல மருந்துப் பொருள்களை அல்லது மூன்று தோஷங்களையும் போக்கவல்ல மருந்துப் பொருள் களைக் கொண்டு செய்த விழுது, கஷாயங்களாலான நெய் மருந்துகளைப் பயன்படுத்துக. *317*

## *191. மிகக் குறைந்த அளவில் மிகுந்துள்ள பித்தத்திற்குச் சிகிச்சை*

தகுந்த சிகிச்சையால் பித்தம் சீற்றம் தணிக்கப்பட்டபோது முழுவதுமாகத் தணியாமல் பித்தம் சிறிதளவு தோலைச் சார்ந்து

சிறிதளவு காய்ச்சலைத் தோற்றுவிக்கும். இந்நிலையில் அதைத் தணிக்கக் கருப்பஞ் சாறு பருகச் செய்க. மற்றும் சர்க்கரை கலந்த நீரைக் குளிர வைத்துப் பருகச் செய்க. உணவில் சம்பா அரிசி, அறுபதாங் குறுவை ஆகியவற்றைப் பயன்படுத்துக. அவற்றாலான சோற்றில் பால் கலந்து உட்கொள்ளச் செய்க. இவ்வாறே வாதம் அல்லது கபம் சிறிதளவு தங்கியிருக்கும்போது தோன்றும் சிறிதளவு காய்ச்சலில் அதைத் தணிக்க உடல் வியர்க்கச் செய்தல், எண்ணெய்க் குளியல் எனும் முறைகளைப் பயன்படுத்துக. 318

## 192. காய்ச்சலில் நெய் பயன்படுத்தல்

எல்லா வகையான காய்ச்சல்களிலும் பட்டினி கிடத்தல், வெந்நீரைப் பருகச் செய்தல், பேயா எனும் கஞ்சி முதலிய வற்றையும் செரிமானத்தைத் தூண்டும் முறைகளையும் பயன் படுத்தல், அவை பக்குவம் பெற்ற பிறகு பன்னிரண்டு நாட்கள் கடந்த பிறகு நெய்யைப் பயன்படுத்தல் என்பன செய்யத்தக்கவை. ஏனெனில் இந்தச் சமயத்தில் தோஷங்கள் உடலில் தமக்கு உரிய நிலையான இடங்களைச் சேர்ந்து விடும். 320.

## 193. காய்ச்சல் விட்டபோது சோர்வு மிகுதல்

காய்ச்சல் விட்டதும் வாதம் முதலியன தோஷங்கள் இரசம் இரத்தம் முதலிய தாதுக்களைச் சீற்றமடையச் செய்து தம் வலிமையைக் காட்டும். அதனால் நோயாளி மிகவும் கலக்கம் கொண்டு உயிர்நீங்கக் கூடுமென்ற அச்சம் கொண்டவனைப் போலக் காணப்படுவான். 321

## 194. காய்ச்சல் விட்டதன் இலக்கணம்

தலை இலேசாகத் தோன்றுதல், உடல் மிக்க வியர்த்தல், முகம் சற்று வெளிறிக் காணப் படுதல், வாய், உதடு போன்ற உறுப்புகளில் பக்குவம் பெற்ற இலக்கணங்கள் (சிறுகட்டிகள் போன்றவை) காணப்படுதல், தும்மல் மிகுதியாகத் தோன்றுதல், உணவில் விருப்பம் மிகுதல் போன்ற இலக்கணங்கள் காணப்பட்டால், காய்ச்சல் முற்றிலும் நீங்கிவிட்டது என்று உணர்க. 322

### 195. காய்ச்சலின் வலிமை

காய்ச்சல் பரமசிவனின் சினத்தால் தோன்றியது அச்சுறுத்துவது, உடல்வலிமை, நிறம், சடராக்னி ஆகியவற்றை அழிப்பது நோய்கள் அனைத்திற்கும் தலையாயது. பல நோய்கள் இணைந்துள்ள தோற்றம் கொண்டது. இந்தக் காய்ச்சல் மனிதனை மட்டுமல்லாது மாடுகளையும், மற்ற விலங்குகளையும் சார்ந்து துன்புறுத்தக் கூடியது. உடல், புலன், மனம்ஆகியவற்றைச் சார்ந்து துன்புறுத்தும் பதின்மூன்று வகை அக்னிகளின் தாக்குதல்களைக் கொண்டது. மிக்கச் சிரமப்பட்டுச் சிகிச்சை செய்வதால் போக்கவல்லது. யமனைப் போல உயிரையும் போக்கக் கூடியது எனக் காய்ச்சல் மிகக் கொடியதாகக் கூறத்தக்கது. *323–324*

**சிறுங்கட்டூர், நடாதூர் எஸ்.என். ஸ்ரீராமதேசிகன் எழுதிய**
**ஸுச்ருத ஸம்ஹிதை உத்தரஸ்தானம் தமிழாக்க நூலின்**
**ஜ்வரபிரதிஷேதம் எனும்**
**முப்பத்தொன்பதாம் அத்தியாயம்**
**முற்றும்**

# அதிஸார பிரதிஷேதம்

# எனும்

## நாற்பதாவது அத்தியாயம்

இனி தந்வந்தரி பகவான் ஸசுருதர் முதலான சீடர்களுக்கு உபதேசம் செய்தபடி அதிஸார நோய்க்கு உரிய சிகிச்சை முறைகளை விளக்குவோம்.

### 1. அதிஸார நோய்க்குக் காரணம்

அளவிலும், தன்மையிலும், பக்குவம் பெறும்போதும், இயற்கையான தோற்றத்திலும் (பெரிய துண்டுகளாக இருத்தல் முதலிய) குருத்தன்மை கொண்ட (இயற்கையாக குருத் தன் மையுள்ள உளுந்து முதலான) பொருள்களை, எண்ணெய்ப் பசை மிகுந்துள்ளவை மிக்க வறட்சித் தன்மை கொண்டவை, மிக்க வெப்பம் அல்லது சூடு உள்ளவை, மிகவும் நீர்த்தன்மை கொண்டவை, மிகவும் பருத்தவை, மிக்க குளிர்ச்சி கொண்டவை என இத்தகைய உணவுப் பொருள்களை உட்கொள்ளுதல், ஒன்றுக்கொன்று எதிர்மாறான பொருள்களை உட்கொள்ளுதல், அளவில் மிகுந்து உண்ணுதல், அசீரணமுள்ளபோது உண்ணுதல், தன் உடலுக்கு ஒவ்வாத பொருள்களை உண்ணுதல், ஸ்நேஹன (எண்ணெய்ப் பசை தோற்றுவித்தல்) வமன (வாந்தி எடுக்கச் செய்தல்) விரேசன (பேதியாகச் செய்தல்) அநுவாஸன, நிரூஹணவஸ்தி முறைகள் முதலான ஐவகைச் சிகிச்சை முறைகளை அளவுக்கு மீறிப் பயன்படுத்தல், அல்லது தவறாகப் பயன்படுத்தல், அல்லது ஏறுமாறாகப் பயன்படுத்தல், அச்சம் அல்லது மிக்க வருத்தம் கொள்ளுதல், கேடுற்ற நீரைப் பருகுதல், அளவுக்கு மீறிய மதுபானம், போன்ற தனக்கு ஒவ்வாத உணவு முறைகளைப்

பயன்படுத்துவதாலும், வெகுநேரம் நீரில் குளித்தல், மலம் சிறுநீர் முதலியவற்றின் வேகங்களைத் தடுத்தல் (அதாவது அவை வெளிவரும் நிலையில் வலிமையுடன் அடக்குதல்) வயிற்றில் கிருமிகள் தோன்றுதல், போன்ற காரணங்களால் அதிஸாரம் எனும் நோய் உண்டாகும். 3–5

## 2. அதிஸாரம் தோன்றும் வகை

அதிக அளவில் உடலுக்குள் தோன்றிய நீர்த்தன்மை மிகுந்துள்ள ரஸம் முதலான தாதுக்கள் சடராக்னியை (உணவைச் செரிமானமடையச் செய்யும் உடல் வெப்பத்தைத் தணித்து மலத்துடன் கூடி அபானவாயுவால் வெளித்தள்ளப்பட்டு அதிக அளவில் ஆஸனவாய் வழியே (கழிச்சலாக) வெளிவரும் (அதிக அளவில் நீர்த்தன்மை கொண்டு வெளிப்படுவது ஆகையால் அதிஸாரம் எனப்பட்டது.

அதிஸாரம், நீர்த்தன்மை மிகுந்துள்ள கழிச்சல். அதற்கு உரிய சிகிச்சை முறைகளை விளக்குவதால் இந்த அத்தியாயம் அதிஸாரபிரதிஷேதம் எனும் பெயர் பெற்றது.

## 3. அதிஸார வகைகள்

வாதத்தால் தோன்றியது, பித்தத்தால் தோன்றியது, கபத்தால் தோன்றியது, ஸந்நிபாதத்தால் தோன்றியது, மிக்க வருத்தத்தால் தோன்றியது, (ஆமத்தால் செரிமானமடையாத உணவு ரசத்தால்) தோன்றியது என அதிஸார நோய் அறுவகைப்படும்.

சிலர் அதிஸாரம் ஒரு தோஷத்தால் தோன்றியதென வகைப் படுத்தக் கூடாது. இரண்டிரண்டு தோஷங்களால் பலவகைகளாக தோன்றும் நோய் இதுவாகும் எனக் கூறுகின்றனர். ஆனால் காசி மன்னன் ஆகிய திவோதாஸர் எனப்படும் தன்வந்தரி பகவான் வாதம் முதலான தோஷங்களில் சீற்றமுற்ற நிலைகள் பலவகை களாகும் ஆதலால் அதிஸாரம் பலவகைகளாகும் என தோன்றும். உண்மையில் இந்நோய்க்கு மூல காரணமான வாதம் முதலான தோஷங்களின் அடிப்படையில் ஆறு வகைகளாக கொள்வதே தகும் என்பர். ஆம நிலை, பக்குவ நிலை, ரத்த நிலை போன்ற நிலைகளில் வாதம் முதலான தோஷங்களின் நிலை பலவகைப்

பட்டிருக்கும். அதனால் அதிஸாரமும் பலவகைகளாகத் தோன்றும் என்ற கருத்தாகும். 7–8

## 4. அதிஸார நோய்க்கு முற்குறி

எல்லாவகையான அதிஸாரங்களும் தோன்றுவதற்கு முன்பு காணப்படும் இலக்கணங்களாவன : இதயம், தொப்புள், வயிறு, சிறுகுடல், போன்ற பகுதிகளில் ஊசியால் குத்துவது போன்றவலி, உடலுறுப்புகள் தளர்ந்து போதல், அபானவாயு வெளிப்படாமல் தடைபடுதல், மலத்தடை, வயிறு வீங்குதல், உண்ட உணவு செரிமானமடையாமை என்பனவாம். 9

## 5. வாத அதிஸார இலக்கணம்

வாதத்தால் தோன்றிய அதிஸாரத்தில் வயிற்றில் வலி மிகும். சிறுநீர் தடைப்படும். அல்லது சிறிது சிறிதாக அளவில் குறைந்து வெளிப்படும். சிறுகுடலில் 'குட–குட' எனும் ஒலி தோன்றும். ஆஸனவாய் தளர்ந்திருக்கும். அல்லது வெளியே வந்திருக்கும். இடுப்பு, தொடை, முழங்கால் முதலியன மிகவும் தளர்ந்து போகும். நுரையுடன் கூடி, வறண்டு கருநிறம் கொண்டுள்ள மலம் சிறிது சிறிதாக வெளிப்படும். மலம் வெளிவரும்போது அபான ஒலியும் தோன்றும். இத்தகைய இலக்கணங்கள் காணப்பட்டால் இது வாதத்தால் தோன்றிய அதிஸாரம் என அறிக. 10

## 6. பித்த அதிஸார நோயின் இலக்கணம்

இந்நோயில் மலம் கெட்ட நாற்றம் கொண்டிருக்கும். கொண்டு விரைவாக வெளிப்படும். புலாலை கழுவிய [illegible] போன்ற நிறம் கொண்டிருக்கும். சிறுசிறு உருண்டைகளாக [illegible] காணப்படும். மிகவும் தீக்ஷ்ணமாக மலம் மஞ்சள், நீலம், [illegible] எனும் நிறங்களில் ஒன்று உடையதாகிக் காணப்படும். நோயா[illegible] உடல் வியர்க்கும். நாவறட்சி மிகும். நினைவு தவறும். எரிச்[illegible] ஆஸன வாய்ப் பகுதியில் புண் உண்டாகும். காய்ச்சலும் தோன்[illegible] இத்தகைய இலக்கணங்கள் காணப்பட்டால் அது பித்தத்[illegible] தோன்றிய அதிஸாரம் எனக் கொள்க.

## 7. கப அதிஸார நோயின் இலக்கணம்

நோயாளிக்குச் சோம்பல் மிகுதல், உறக்கம், உடல் பளுவாகத் தோன்றுதல், வயிற்றில் கலக்கம் மிகுதல், தளர்ச்சி, மலம் வெளியேறிய உடன் மீண்டும் வெளிவருவது போலிருத்தல், மலம் வெண்ணிறம் கொண்டு அடர்த்தியுடன் கபத்துடன் காணப்படுதல் என்ற இலக்கணங்கள் தோன்றும். நோயாளிக்கு உணவில் விருப்பம் இருக்காது. மலம் வெளிப்படும்போது எத்தகைய ஒலியும் தோன்றாது. மலம் வெளிப்படும்போது மயிர்க் கூச்சம் தோன்றும். இத்தகைய இலக்கணங்கள் காணப்பட்டால் அது கபத்தால் தோன்றும் அதிஸாரம் என அறிக. 12

## 8. ஸந்நிபாத அதிஸார நோயின் இலக்கணம்

சோம்பல், நினைவு தவறுதல், பகுத்தறிவின்மை (வெளி)வாய் உலர்ந்து போதல் நாவறட்சி ஆகியவை கொண்டுள்ள நோயாளிக்கு பல நிறங்களுடன் கூடி மலம் வெளிப்படுமானால் அது ஸந்நிபாதத் தால் தோன்றிய அதிஸாரம் என்று அறிக. மற்றும் வாத பித்த கபங்களுடன் உரிய இலக்கணங்கள் கலந்து காணப்படும். நடு வயதினருக்கு இந்நோய் தோன்றினால் மிகவும் சிரமப்பட்டு சிகிச்சை செய்வதால் தீர்க்க இயலும். சிறுவர்களுக்கும், முதியவர் களுக்கும் தோன்றினால் இந்நோய் சிகிச்சைக்குக் கட்டுப்படாத தாகும் என்று அறிக. 13

## 9. மிக்க வருத்தத்தால் தோன்றும் அதிஸார இலக்கணம்

செல்வம் அழிதல், உறவினரின் இழப்பு போன்ற மிகவும் வருத்தம் தரும் நிகழ்ச்சிகளால் மனம் வெதும்பி மிகக் குறைந்த அளவே உணவு கொண்டு வருந்துபவர்களின் கண்கள், மூக்கு, தொண்டை போன்ற உறுப்புகளில் தோன்றும் இந்த நீர் மிக்க வெப்பம் கொண்டு விரைவாகச் சிறுகுடலில் சேரும். அது செரிமானத்தைத் தோற்றுவிக்கும் வெப்பத்தை தணித்து விடும். மற்றும் இரத்தத்தைக் கெடுக்கும். அதனால் மிகவும் வெப்பம் கொண்டு கலக்கமடைந்த இரத்தம் குன்றிமணி நிறத்தில் மலக்குடலைச் சேர்ந்து மலத்துடன் கலந்தோ, கலக்காமலோ, நாற்றம் கொண்டோ நாற்றம் இல்லாமலோ மிக்க துன்பத்தை

விளைவித்துக் கொண்டு ஆஸனவாய் வழியே வெளிவரும். இது மிக்க வருத்தத்தால் தோன்றும் அதிஸாரத்தின் இலக்கணமாகும். 14-15

## 10. ஆமாதிஸார இலக்கணம்

உண்ட உணவுப் பொருள்கள் செரிமானமடையாமல் சிறுகுடல் போன்ற சீரண உறுப்புகளில் கலக்கத்தைத் தோற்றுவித்து கலக்க மடைந்த வாதம் முதலான தோஷங்களால் பெருங்குடலில் சேர்க்கப்படும் அவ்வுணவுப் பொருள்கள் அப்படியே (செரிமான மாகாமலேயே) பல நிறங்களைக் கொண்ட மலத்துடன் மிகவும் துன்பத்தை விளைவித்துக் கொண்டு பலமுறை சிறிது சிறிதாக ஆஸனவாய் வழியாக வெளிவரும். இது ஆமாதிஸாரம் எனப்படும் நோய் என்று அறிக. 16

## 11. ஆமமல இலக்கணம்

வாதம் முதலான தோஷங்களுடன் கூடியதாகக் கூறப்பட்ட மலம் நீரில் மூழ்கி விடும் கெட்ட நாற்றத்தைத் தோற்றுவிக்கும் மிகவும் கொழகொழப்புடன் சிறிது சிறிதாக வெளிப்படும் இத்தகைய மலம் செரிமானமடையாத உணவுப் பொருள்களாலான ஆம மலம் என்று உணர்க. 17

## 12. பக்குவம் பெற்ற மலத்தின் இலக்கணம்

நீரில் மிதத்தல், கெட்ட நாற்றம் இல்லாமை, கொழ கொழப் பின்மை எனும் தன்மைகள் கொண்டு (வெளிப்பட்டதும் உடலை இலேசாகச் செய்து) எளிதாக வெளிப்படும் மலம் உணவு பக்குவ மடைந்ததாலானது என அறிக. 18

## 13. சிகிச்சைக்கு உட்படாத அதிஸார இலக்கணம்

நெய், கொழுப்பு ★வேஸவாரத்துடன் கூடிய நீர், எண்ணெய், எலும்புகள் உள்ள சோறு (மஜ்ஜை) பால், தேன் ஆகியவற்றைப் போலப் பெருகும் அதிஸாரம், மற்றும் மஞ்சிட்டி நிறம் அல்லது மூளையின் நிறம் கொண்டு ஆமத்தின் நாற்றம் குளிர்ச்சி உயிரற்ற

★ வேஸவாரம் – எலும்பு நீக்கிச் சிறுதுண்டுகளாக நசுக்கப்பட்ட புலால்.

உடல் அழுகிய நாற்றம் ஆகியவற்றைக் கொண்ட அதிஸாரம் மற்றும் பச்சை நீலம் மயில் இறகு போன்ற நிறங்களில் கோடுகளைக் கொண்டு காணப்படும் மலம் வெளிவரும் அதிஸாரம் சீழ் சேறு கலந்த நீர் போன்று வெளிப்படுவதும் மிக்க வெப்பம் கொண்டதுமான அதிஸார நோய்ச்சிகிச்சையால் தீர்க்க இயலாதது என அறிக. 20

## 14. சிகிச்சையை விலக்கத்தக்க அதிஸார நோய் கொண்டவன் இலக்கணம்

சுருங்கி விரியும் தன்மையற்றுத் திறந்த நிலையில் அதாவது தளர்ந்து போன ஆஸனவாய் கொண்டவனும், மிக்க உடல் இளைத்தவனும், மலம் வெளியேறினாலும் வயிறு வீங்கிக் காணப்படுபவனும், அதிஸாரத்தால் தோன்றும் வேறு துன்பங்களுடன் (உபத்ரவத்துடன்) கூடியவனும், புண்ணாகி ஆஸன வாய் சிதைந்துள்ளவனும், உடல் மிகவும் குளிர்ந்து உள்ளவனும் ஆன அதிஸார நோயாளி கைவிடத்தக்கவன் அதாவது சிகிச்சை செய்வதால் எத்தகைய பயனும் விளையாது என்பதாம். 20-21

## 15. வேறு வகை அதிஸார நோய்களைப் பற்றி விளக்கம்

வேறு பல காரணங்களால் அதிஸார நோய் தோன்றலாம். ஆனால் அவை மூன்று தோஷங்களின் சீற்றத்தாலான இலக்கணங்களைத் தவிர வேறு வகையான இலக்கணங்களைக் கொண்டிருக்க இடமில்லை. (அதாவது காரணம் எதுவானாலும் அதனால் சீற்றமடைந்து நோயைத் தோற்றுவிப்பவை வாத பித்த கபங்களெனும் தோஷங்களேயாகும். எண்ணெயை அளவுக்கு மீறி உட்கொள்வதால் தோன்றும் அதிஸாரம் மிக்க வலிவுடன் கூடியதாகி தோன்றும் பிரவாஹிகை, காலரா எனும் விஷூசி நோய்க்கு இலக்கணமான அதிஸாரம், அசீரணத்தால் தோன்றும் வேறு வகை அதிஸாரம் நஞ்சின் விளைவால் தோன்றும் அதிஸாரம், மூல நோயால் தோன்றும் அதிஸாரம் கிருமிகளால் தோன்றும் அதிஸாரம் போன்ற அனைத்திலும் அப்படைக் காரணமான சீற்றமுற்ற வாத பித்த கபங்களின் இலக்கணங்கள் காணப்படும். ஆகவே, அதிஸார நோய் அறு வகைப்படும் அன்றி வேறு வகை இல்லை எனத் தெளிக.

22 – 23

## 16. அதிஸாரத்திற்குச் சிகிச்சை முறை விளக்கம்

அதிஸார நோயில் முதலில் மருத்துவன் ஆமத்தால் தோன்றியதா பக்குவ இலக்கணங்களுடன் கூடியதா என்று ஆராய்ந்தறிய வேண்டும். 24

பொதுவாக அதிஸார நோய் வகைகள் அனைத்திலும் துவக்கத்தில் ஆம தோஷம் காணப்படும். ஆகவே, இந்நோய்க்கு முதன் முதலாக செரிமானமடையாத உணவு ரசமான ஆமம் செரிமானமடையத்தக்க சிகிச்சையை மேற்கொள்ள வேண்டும். அதற்குப் பட்டினி கிடக்கச் செய்ய வேண்டும். பிறகு உணவைப் பக்குவம் அடையச் செய்யும் மருந்துகளுடன் கூடிய அல்லது பக்குவ மடையச் செய்யும் மருந்துப் பொருள்களாலான கஷாயத்தால் தயார் செய்யப்பட்ட யவாகூ, யூஷம், முதலான கஞ்சி வகைகளைப் பருகச் செய்ய வேண்டும். இத்தகைய முறை மிகவும் நன்மை விளைவிக்கும். 25

## 17. வலி, வயிற்று வீக்கம் கொண்ட அதிஸாரத்திற்குச் சிகிச்சை

ஆமாதிஸாரத்தில் நோயாளி மிக்க வலி வயிற்று (உப்புசம்) வீக்கம் கொண்டு துன்புறுபவனானால் திப்பிலித் தூள் இந்துப்புதூள் கலந்த இளஞ்சூடுள்ள நீரைக் கழுத்து வரை பருகச் செய்து வாந்தி எடுக்கச் செய்ய வேண்டும். பிறகு பட்டினி கிடக்கச் செய்தல், கஞ்சிவகையைச் பருகச் செய்தல் போன்ற முறைகளைப் பயன்படுத்த வேண்டும். 26

வாந்தி எடுக்கச் செய்தபிறகு நீர்த்தன்மை மிகுந்துள்ள யவாகூ, மண்டம், யூஷம் என்பன போன்ற கஞ்சி வகை உணவைத் தர வேண்டும். அந்தக் கஞ்சியில் திப்பிலி முதலான கூட்டுப் பொருள்களைச் சேர்க்க வேண்டும். 27

## 18. ஆம தோஷத்திற்கு மஞ்சள் முதலியவற்றைப் பயன் படுத்தல்

முன்கூறிய முறைகளால் நோயாளியின் ஆம தோஷம் தணியாத போது நாள்தோறும் காலையில் அவனுக்கு மஞ்சள் முதலான கூட்டுப் பொருள்களின் அல்லது வசம்பு முதலான கூட்டுப் பொருள் களின் கஷாயத்தைப் பருகத் தர வேண்டும். 28

## 19. ஆமாதிஸாரத்தில் மலத்தைக் கட்டும் மருந்துகளைப் பயன்படுத்தக் கூடாமை

துவக்கத்திலேயே அதிஸார நோயாளிக்கு மலத்தைக் கட்டும் (அதிஸார பேதியை நிறுத்தும்) மருந்துகளைப் பயன்படுத்தக் கூடாது. பயன்படுத்தினால் சீற்றமடைந்த தோஷம் வயிற்றிலேயே தங்கி மண்ணீரல் வீக்கம், பாண்டு நோய், ஆநாஹம், நீரிழிவு, குட்டம், வயிற்று நோய் காய்ச்சல், சோகை, குன்மம், ஸங்கிரஹணி மூலம், வயிற்றுவலி, அலஸகம், நெஞ்சுப் பிடிப்பு போன்ற வேறு நோய்கள் தோன்றக் கூடும். 29–30

## 20. மலக்குடலில் சேர்ந்துள்ள தோஷங்களை வெளியேற்றுதல்

வயிற்றுவலியுடன் மிகவும் சிரமத்துடன் சிறிது சிறிதாத மலம் வெளியேறும் நோயாளிக்கு மலக்குடலில் சேர்ந்துள்ள தோஷங்களைக் கடுக்காய்த்தூளை அல்லது கஷாயத்தைப் பயன்படுத்தி வெளியேற்ற வேண்டும். 31

## 21. நீர் மிகுந்த அதிஸாரத்திற்குச் சிகிச்சை

நீர்ப்பகுதியையும், மலத்தையும் அதிக அளவில் வெளிப்படுத்தும் அதிஸாரத்தில் முதன் முதலாக வாந்தி எடுக்கச் செய்து பிறகு பட்டினி கிடக்கச் செய்து அதன்பிறகு செரிமான வலிமையைத் தூண்டும் மருந்துகளைப் பயன்படுத்த வேண்டும். 32

## 22. மலம் தடைப்பட்டு வெளியேறும் அதிஸாரத்திற்குச் சிகிச்சை

சிறிது சிறிதாக மலம் தடைப்பட்டு மிக்க வலியுடன் வெளிவரும் – அதிஸார நோயாளிக்கு இளஞ்சூடுள்ள நீருடன் பெரிய கடுக்காய்த்தூள் ஆறு உளுந்து எடை, திப்பிலித்தூள் ஓர் உளுந்து எடை கலந்து அல்லது அவ்விரண்டையும் விழுதாக செய்து உட்கொள்ளச் செய்க. 33

## 23. இலங்கன - பாசன முறைகளின் சிறப்பு

ஆம அதிஸாரத்தில் முதலில் பட்டினி கிடக்கச் செய்தல் சிறந்த முறையாகும். உடல் வலிமை குன்றி பட்டினி கிடக்க இயலாதவனும், உணவில் விருப்பம் உள்ளவனும் ஆன நோயாளிக்குச் செரிமானத்தைத் தூண்டும் பாசன முறைக்கேற்ற மருந்துகளுடன் கஞ்சியை அல்லது இத்தகைய மருந்துப் பொருள்களாலான கஷாயத்துடன் கூடிய யவாகூ போன்ற கஞ்சியை உட்கொள்ளத் தர வேண்டும். இனி ஆமாதிஸாரத்தைப் போக்கவல்ல மருந்துகள் கூறப்படுகின்றன. 34

## 24. ஆமாதிஸாரத்திற்கு உரிய மருந்துகள்

1. குடசப் பாலை, அதிவிடயம், பெருங்காயம், சௌவர்ச்சல, உப்பு, வசம்பு பெருங்கடுக்காய், 2. தேவதாரு, வசம்பு, கோரைக் கிழங்கு, சுக்கு அதிவிடயம், பெருங்கடுக்காய், 3. பெருங்கடுக்காய் கொத்துமல்லி விதை (தனியா) கோரைக் கிழங்கு, திப்பிலி, சுக்கு, வசம்பு, 4. சுக்கு கொத்துமல்லி விதை, கோரைக் கிழங்கு, நேத்ர பாலை, வில்வக்காய் கதுப்பு, 5. கோரைக் கிழங்கு, பர்ப்படாகம், சுக்கு, வசம்பு, அதிவிடயம் கடுக்காய், 6. பெருங்கடுக்காய், அதிவிடயம், பெருங்காயம், வசம்பு ஸௌவர்ச்சல உப்பு, 7. சிவப்புக் கொடி வேலி வேர், திப்பிலி வேர், வசம்பு அதிவிடயம் கடுக்காய் கடுகரோகிணி, 8. வட்டத் திருப்பி துமட்டி பெருங் கடுக்காய், சுக்கு, 9. பெருங்குரும்பை, கொடி வேலி வேர், வட்டத் திருப்பி, சுக்கு மிளகு திப்பிலி யானைத் திப்பிலி 10. வெண்கடுகு, தேவதாரு சோம்பு, (பெருஞ்சீரகம்) கடுக ரோகிணி, 11. தோலுடன் கூடிய ஏலக்காய், பாச்சோத்திப் பட்டை, கோஷ்டம், மஞ்சள், மரமஞ்சள் குடசப்பாலை, 12. ஆடுதீண்டாப் பாளை, இலவங்கப் பட்டை, ஏலக்காய், வாயு விடங்கம், குடசப் பாலை, 13. பதனிகை கரீரம் (செங்கம்) கண்டங்கத்தரி முள்ளுக்கத்தரி காட்டுப்பயறு காட்டு உளுந்து, 14. வேங்கைப்பட்டை, தும்பைப் பட்டை, மாதும்பழத் தோல், குடசப் பாலைப்பட்டை, வன்னி மரப்பட்டை, 15. வட்டத் திருப்பி, இலவங்கப்பத்திரி கோரைக் கிழங்கு, திப்பிலி, குடசப் பாலை; 16. வட்டத் திருப்பி, இலவங்கப் பத்திரி கோரைக் கிழங்கு திப்பிலி, குடசப்பாலை; 16. பேய்ப் புடல் இலை, ஓமம், வில்வக் காய்கதுப்பு, மஞ்சள், மரமஞ்சள், தேவதாரு; 17. வாயுவிளங்கம், பெருங்கடுக்காய், வட்டத்திப்பிலி, சுக்கு,

கோரைக் கிழங்கு, வசம்பு; 18. வசம்பு குடசப்பாலை, இந்துப்பு கடுகரோகிணி; 19. பெருங்காயம் குடசப்பாலை, வசம்பு, வில்வக் காய் கதுப்பு; 20. சுக்கு, அதிவிடயம், கோரைக் கிழங்கு, திப்பிலி, குடசப்பாலை.

இவ்வாறு கூறப்பட்டுள்ள இருபது வகைகளைத் தனித்தனி யாகத் தூள் செய்து கொள்க தோஷத்திற்கு ஏற்றவாறு இம்முறைகளில் ஒன்றின் தூளை மூன்று உளுந்து எடை முதல் ஆறு உளுந்து எடை வரை புளிக்காடி அல்லது வெந்நீருடன் உட்கொள்ளச் செய்க. அல்லது இவ்விருபது வகைகளில் ஒன்றைக் கொண்டு கஷாயம் காய்ச்சி இளஞ்சூட்டுடன் பருகச் செய்க. இவ்வகைகளில் சிறப்பாக சுக்கு அதிவிடயம், கோரைக் கிழங்கு என்பன செரிமான வலிமையைத் தூண்டுவனவாகும். 35–46

## 25. ஆமாதிஸாரத்திற்கு கோரைக் கிழங்குப் பால்

இருபது கோரைக்கிழங்குகளைக் கொண்டு வந்து நன்கு நசுக்கி எட்டு மடங்குப்பால் அதற்கு மூன்று மடங்கு நீர் சேர்த்து பால் அளவு மட்டும் மிகுந்திருக்கக் காய்ச்சி வடிகட்டிப் பருகச் செய்தால் வலியுடன் கூடிய ஆம அதிஸாரம் தீரும். இவ்வாறு ஆமதோஷத்தை நீக்கக் கூடிய முறைகள் அனைத்தும் விளக்கப்பட்டன. 47

## 26. ஆமாதிஸாரத்திற்கு கடுக்காய் முதலியவற்றின் தூள்

கடுக்காய், அதிவிடயம், தூய பெருங்காயம், சௌவர்ச்சல உப்பு, வசம்பு ஆகியவற்றைச் சம அளவு கலந்து தூள் செய்து 2 உளுந்து எடை முதல் 4 உளுந்து எடை வரை இளஞ்சூடுள்ள நீருடன் நாள்தோறும் ஆமாதிஸாரத்திற்கு மூன்று அல்லது இரண்டு முறைகள் உட்கொள்ளச் செய்க.

## 27. ஆமாதிஸாரத்திற்குப் படோலாதி சூரணம்

பேய்ப்புடல் இலை, ஓமம், வில்வக்காய் கதுப்பு, வசம்பு, திப்பிலி, சுக்கு, கோரைக்கிழங்கு கோஷ்டம் வாயுவிளங்கம் ஆகியவற்றைச் சம அளவில் கொண்டு தூளாக்கி இரண்டு உளுந்து எடை முதல் 4 உளுந்து எடை வரை நாள்தோறும் இரண்டு அல்லது மூன்று வேளைகள் இளஞ்சூடுள்ள வெந்நீருடன் ஆமாதிஸார நோய்க்கு உட்கொள்ளச் செய்க. 50

## 28. ஆமாதிஸாரத்திற்கு ஐந்து முறைகள்

1. ஐந்து வகை உப்புகள், திப்பிலி, வாயு விளங்கம், பெருங் கடுக்காய்; 2. கொடிவேலி வேர், சிம்சுபாமரப்பட்டை வட்டத் திருப்பி, தொட்டால் சுருங்கி ஐந்து வகை உப்புகள் அனைத்தும் சம அளவு; 3. தூய பெருங்காயம், குடசப்பாலை ஐந்து வகை உப்புகள் அனைத்தும் சம அளவு; 4. ஆமணக்கு திப்பிலி விழுது மும்மூன்று உளுந்து எடை; 5. வசம்பு சீந்தில் கொடி ஒவ்வொன்றுக்கும் இரு உளுந்து எடை இவ்வாறு ஐந்து முறைகளிலும் ஒன்றில் மருந்துப் பொருள்களைச் சம அளவு கொண்டு தூளாக்கி இளஞ்சூடுள்ள வெந்நீருடன் உட்கொள்ளச் செய்தால் ஆமாதிஸாரம் தணியும். இவை சிறந்த மருத்துவர்களால் அநுபவத்தில் கண்டு கொள்ளப்பட்டவை ஆகும். 51-53

## 29. வாத சிலேத்தும அதிஸாரத்தைப் போக்கும் முறைகள்

முன் கூறிய சிகிச்சை முறைகளால் ஆமமும், வலியும் தணிந்த பிறகு அபானம் சீர்படாத போது நோயாளி வலியுடன் சிறிது சிறிதாக மலம் கழிப்பான். அவனுடலில் செரிமான வலிமை குறைந்திருக்கும். இவ்வாறு இருந்தபோது யவக்ஷாரம் ஓர் உளுந்து எடை ஐந்து உப்புகளும் கலந்து ஓர் உளுந்து எடை எனக் கலந்து இரண்டு தோலா நெய்யில் கலந்து பருகக் கொடுக்கவும் அல்லது பால் சுக்கு புளிப்பான இலந்தைப் பழம் தயிர் காடி என்பன வற்றாலான தூய நெய் மருந்தை வயிற்று வலியுடன் கூடிய அதிஸாரம் தணியக் கொடுக்க வேண்டும். அல்லது சுக்கு மிளகு திப்பிலி சாதிக்காய் கொடிவேலி ஆகியவற்றின் விழுதைத் தயிருடன் எண்ணெய் சேர்த்து நெய் பக்குவம் செய்து உட்கொள்ளச் செய்க. அல்லது வில்வக்காய் கதுப்பு கொடி வேலி, மாதுளை விதை அல்லது மாதுளம்பழத்தோல் ஆகிய இம்மூன்றையும் விழுதாகச் செய்து தயிருடன் பக்குவம் செய்த எண்ணெய் நெய் மருந்தை உட்கொள்ளச் செய்க. இவ்வாறு வாத சிலேத்தும அதிஸார, நோயைத் தீர்க்க கூடிய மருந்துகள் கூறப்பட்டன. 54-57

## 30. பித்த அதிஸாரத்திற்கு சிகிச்சை

முன் கூறிய மருந்து முறைகளில் தீக்ஷ்ணமும், வெப்பமும் கொண்டவற்றை நீக்கி மற்ற மருந்துகளைப் பித்த அதிஸாரத்தில்

பயன்படுத்த வேண்டும். பித்த அதிஸார நோயில் ஆம தோஷமும் சேர்ந்திருந்தால் பக்குமடையச்செய்ய முதலில் பட்டினி கிடக்கச்செய்து பிறகு யவாகூ எனும் கஞ்சியைப் பருகச் செய்ய வேண்டும். 58

## 31. பித்த அதிஸாரத்திற்கு யவாகூ

சிற்றாமுட்டி, பேராமுட்டி, மூவிலை, நெருஞ்சி, கண்டங் கத்திரி, சதாவரி ஆகியவற்றைச் சம அளவில் கலந்து 64 பலம் நீரில் சேர்த்து நான்கில் ஒரு பங்கு மிகுந்திருக்கக் காய்ச்சி வடிகட்டிக் கொள்க. நோயாளி இயற்கையாக உட்கொள்ளும் அரிசியில் நான்கில் ஒரு பங்கு அரிசியை மேற்படி கஷாயத்துடன் பக்குவம் செய்து சோறு நன்கு வெந்தபின் இறக்கி (குளிர்ந்தபின்) தேன் கலந்து அந்த யவாகூ (கஞ்சியை) உட்கொள்ளச் செய்க. நோயாளி உவர்ப்பை விருப்புவானாயின் தேனுக்கு மாறாக இந்துப்பு, மிளகு, சீரகம், ஆகியவற்றைத் தகுந்த அளவு கொண்டு தூளாக்கிக் கஞ்சியுடன் கலந்து உட்கொள்ளச் செய்க. 59

## 32. பித்த அதிஸாரத்திற்குப் பயற்றுக் கஞ்சி

சிற்றாமுட்டி, பேராமுட்டி முதலிய பொருள்களாலான கஷாயத்தில் பயறு, சிறுகடலை, மபூரம் எனும் பயறு ஆகியவற்றில் நோயாளிக்கு விருப்பமுள்ள பொருளைச் சேர்த்துக் கஞ்சி காய்ச்சி இந்துப்பு மிளகு, சீரகம் முதலியவற்றைச் சேர்த்துப் பருகச் செய்க. 60

மென்மையும், செரிமானத்தைத் தூண்டும் தன்மையும் கொண்ட கசப்புச் சுவையுள்ள பொருள்களைத் தந்து பித்த அதிஸாரத்தில் ஆமதோஷம் பக்குவம் பெறச் செய்யவேண்டும். 61

## 33. கஷாயங்கள்

1. மஞ்சள், அதிவிடயம், வட்டத் திருப்பி, குடசப்பாலை, ரஸாஞ்சனம்; 2. ரஸாஞ்சனம், மஞ்சள், மரமஞ்சள், குடசப்பாலை; 3. வட்டத் திருப்பி, சீந்தில் கொடி, நிலவேம்பு, கடுகரோகிணி என இம்மூன்று வகைக் கஷாயங்கள் பித்த அதிஸாரத்தில் பக்குவம் பெறச் செய்யக் கூடிய கஷாய வகைகளாகும். 62–63

## 34. ஆமத்துடன் கூடிய பித்தத்தைப் பக்குவம் செய்யும் முறைகள்

*1. கோரைக்கிழங்கு, குடசப்பாலை, நிலவேம்பு, ரஸாஞ்சனம்; 2. மரமஞ்சள் காஞ்சொரி, வில்வக்காய் கதுப்பு, குருவேர், சிவப்புச் சந்தனம்; 3. சிவப்புச் சந்தனம் குருவேர் கோரைக்கிழங்கு நிலவேம்பு, காஞ்சொரி; 4. தாமரைத் தண்டு சிவப்புச் சந்தனம், பாச்சோத்திப் பட்டை, சுக்கு, நீலாம்பல்; 5. வட்டத் திருப்பி கோரைக் கிழங்கு, மஞ்சள், மரமஞ்சள், திப்பிலி, 'குடசப்பாலை; 6. குடசப்பாலை காயும் பட்டையும், சுக்கு கோரைக்கிழங்கு வசம்பு என இந்த ஆறுவகைப் பொருள்களாலான கஷாயங்கள் நிலைமைக்கு ஏற்ப ஆமத்துடன் கூடிய பித்த அதிஸாரத்தில் பயன்படுத்தத்தக்கவை.*

*64–66*

## 35. ஆம அதிஸாரத்திற்கு வில்வாதி கஷாயம்

*வில்வக்காய் கதுப்பு, குடசப்பாலை, கோரைக்கிழங்கு, குருவேர், அதிவிடயம் ஆகியவற்றைச் சேர்த்துக் காய்ச்சிய கஷாயத்தைப் பருகுவதால் ஆமத்துடன் கூடிய பித்த அதிஸாரம் தணியும்.* 67

## 36. பித்த அதிஸாரத்திற்கு அதிமதுரம் முதலியவற்றின் கஷாயம்

*அதிமதுரம், தாமரை, வில்வக்காய் கதுப்பு, கோரைக்கிழங்கு, குருவேர், வெட்டிவேர், சுக்கு ஆகியவற்றைச் சம அளவில் கொண்டு மொத்தம் இரண்டு தோலா அளவாகக் கொண்டு பதினாறு பங்கு அல்லது எட்டு பங்கு நீர் சேர்த்து எட்டில் ஒரு பங்கு அல்லது நான்கில் ஒரு பங்கு மிகுந்திருக்கக் காய்ச்சி வடிகட்டிக் குளிர்ந்த பிறகு தேன் கலந்து பருகச் செய்தால் அது பித்த அதிஸாரத்தைத் தணிக்கும்.* 68

## 37. பக்குவ அதிஸாரத்திற்கு ஸம்ஸ்தம்பனம்

*அதிஸார நோய் கொண்டவனின் உடலில் கிரஹணி எனும் பகுதி மிகவும் மென்மையாகி இருக்கும். அதனால் பக்குவம் பெற்ற*

பிறகும் அடிக்கடி மலம் சிறிது சிறிதாக வெளிப்படும். இந்நிலையில் அந்நோயாளிக்குப் பட்டினி கிடத்தல், செரிமானத்தைத் தூண்டுதல் போன்ற முறைகளைத் தவிர்த்து ஸம்ஸ்தம்பன (பேதியைக் கட்டும்) சிகிச்சை முறையைப் பின்பற்ற வேண்டும். 69

## 38. பக்குவம் பெற்ற அதிஸாரத்திற்கு ஸ்தம்பன (பேதியைக் கட்டும்) முறைகள்

1. தொட்டால் சுருங்கி, காட்டாத்தி, மஞ்சிட்டி, பாச்சோத்திப் பட்டை, கோரைக்கிழங்கு; 2. இலவம் பாச்சோத்தி, வெட்பாலைப் பட்டை, மாதுளம் பழத்தோல்; 3. மாங்கொட்டைப்பருப்பு, பாச்சோத்தி வில்வப்பழக்கதுப்பு, ஞாழல், 4. அதிமதுரம் சுக்கு காட்டு வாகைப் பட்டை இவ்வாறு நான்கு முறைகள் கூறப் பட்டுள்ள இவற்றில் ஏதேனும் ஒரு வகையைத் தூள் செய்தோ, கஷாயம் காய்ச்சியோ தேவைக்கு ஏற்ப பக்குவம் பெற்ற அதிஸாரத்தில் பயன்படுத்துக. இந்தக் கஷாயத்தில் தேன் ஆறு உளுந்து எடை அரிசி கழுவிய நீர் ஒரு தோலா அளவு சேர்க்க. 70–72

## 39. கோரைக் கிழங்குக் கஷாயம்

கோரைக்கிழங்கை மட்டும் கொண்டு கஷாயம் காய்ச்சி அதில் தேன் கலந்து பக்குவம் பெற்ற அதிஸாரத்தில் பருகக் கொடுக்க வேண்டும். மற்றும் பக்குவம் பெற்ற அதிஸாரத்தில் நோயாளிக்கு பாச்சோத்தி முதலான கூட்டுப் பொருள்கள் அம்பஷ்டாதி கூட்டுப் பொருள், பிரியங்கு ஆதி கூட்டுப் பொருள் ஆகியவற்றாலான தூளையோ கஷாயத்தையோ பயன்படுத்த தகும். 73

## 40. பத்மாதி முறை

கண்டு பாரங்கி, தொட்டால் சிணுங்கி, அதிமதுரம், வில்வக்காய்க்கதுப்பு, நாவல் பிஞ்சு, அல்லது நாவல் கொட்டை ஆகியவற்றைச் சம அளவில் கொண்டு தூள்செய்து கொள்க. இந்தத் தூளில் 3 உளுந்து எடை கொண்டு 6 உளுந்து எடை தேன் கலந்து ஒரு தோலா வரை அரிசி கழுவிய நீருடன் சேர்த்துப் பருகச் செய்தால் பக்குவம் பெற்ற அதிஸார நோய் தணியும். காலை, நண்பகல், மாலை, என மூன்று வேளைகள் உட்கொள்ளச் செய்க. 74

## 41. இரத்தம் கலந்த பக்குவ அதிஸாரத்திற்கு மருந்து

பேராமுட்டி வேர்ப்பட்டைத் தூளை அத்திப்பழ அளவு கொண்டு தேனும், அரிசி கழுவிய நீரும் சேர்த்துப் பருகச் செய்தால் இரத்தம் கலந்து வெளியேறும் பக்குவம் பெற்ற அதிஸார நோய் தணியும். அல்லது பால் முதுக்கன் கிழங்கு, சிவப்புச் சந்தனம், கண்டு பாராங்கி, சர்க்கரை, கோரைக்கிழங்கு, தாமரை கேசரங்கள் ஆகிய வற்றைச் சம அளவில் கொண்டு தூளாக்கி இரண்டு முதல் நான்கு உளுந்து எடை வரை தேனும் அரிசி கழுவிய நீரும் கலந்து உட் கொள்ளச் செய்தால் இரத்தம் கலந்த பக்குவ அதிஸாரம் தணியும். 75

## 42. அதிஸாரத்தில் நெய் முறை

ஆம தோஷம் இல்லாத நிலையிலும் வலியுடன் துன்புறும் நோயாளிக்கு பட்டினி கிடத்தலால் இளைத்திருக்கும் நிலையில் உடலில் வறட்சித் தன்மையும் மிகுந்திருந்த நிலையில் செரிமான வலிமை அறிந்து அதற்கு ஏற்றபடி யவக்ஷாரம் கலந்த நெய்யைப் பருகச் செய்ய வேண்டும். 76

## 43. வலியுடன் கூடிய பித்த அதிஸாரத்திற்குச் சிற்றாமுட்டி நெய்

சிற்றாமுட்டி, கண்டங்கத்திரி, மூவிலை, சிறுகாஞ்சொரி அல்லது பேராமுட்டி ஆகியவற்றைச் சம கொண்டு (நான்கு பலம்) அளவில் கொண்டு நீர்விட்டு அரைத்து விழுதாகச் செய்க. அவ்விழுதின் அளவிற்கு நான்கு மடங்கு நெய்யும் நெய்யளவிற்கு நான்கு மடங்கு நீரும் சேர்த்து நெய் அளவு மிகுந்திருக்கக் காய்ச்சி வடிகட்டிக் கொள்க. இந்த நெய்யில் 1. தோலா, தேன் 6 உளுந்து எடை, அதிமதுரத் தூள், 1 உளுந்து எடை எனக் கலந்து வலியுடன் கூடிய அதிஸார நோய்க்குப் பயன்படுத்துக. 77

## 44. ஸந்நிபாத அதிஸாரத்திற்கு நெய் மருந்து

மரமஞ்சள், வில்வக்காய் கதுப்பு, திப்பிலி, திராட்சை கடுக ரோகிணி, குடசப் பாலை ஆகிய்வற்றின் விழுது நான்கு பலம், நெய்

---

★ பயஸ்யா – என்று மூலத்தில் உள்ளது. அதற்குப் பேராமுட்டி, சீகாகோலி, தொட்டால் சிணுங்கி என்றெல்லாம் பலவகையான பொருள்கள் கூறப்பட்டுள்ளன.

பதினாறு பலம் நீர் அறுபத்து நான்கு பலம் எனக் கொண்டு நெய்ப் பகுதி மட்டும் மிகுந்திருக்கக் காய்ச்சிக் கொள்க. இந்த நெய் மருந்து வாதம், பித்தம், கபம் முதலியவற்றால் தனித்தனியாகத் தோன்றியதும் ஆன அதிஸார நோயைப் போக்கும். 78

## 45. வலியுடன் கூடிய அதிஸாரத்திற்கு *வியோஷாதி கிருதம்

சுக்கு, மிளகு, திப்பிலி, சீரகம், கொடி வேலிவேர், செவியம், திப்பிலி வேர், மாதுளம் பழத் தோல் ஆகியவற்றை நான்கு பலங்கள் அளவில் கொண்டு நெய் 16 பலம், தயிர், 16 பலம் புளிக்காடி 14 பலம் எனும் அளவில் கலந்து நெய் அளவு மட்டும் மிகுந்திருக்கக் காய்ச்சுக. வலியுடன் கூடிய அதிஸார நோய் கொண்ட நோயாளிக்கு நாள்தோறும் 2, 3 முறைகள் பயன்படுத்துக. 79

## 46. வலியுடன் கூடிய அதிஸாரத்திற்குப் பால் நெய் தேன் முறைகள்

வலியுடன் கூடிய அதிஸாரத்தில் சர்க்கரை, ஓமம், வாகைப் பட்டை அதிமதுரம் ஆகியவற்றைச் சம அளவில் கலந்து தூளாக்கி அதில் மூன்று உளுந்து எடைத் தூளைப் பால் 5 தோலா, நெய் ஒரு தோலா ஒன்றரை தோலா என்ற அளவில் கொண்ட கலவையில் சேர்த்துப் பருகச் செய்க. 80

## 47. புடபாகத்தினால் தீர்க்கக்கூடிய அதிஸாரம்

துன்பம் இன்றித் தோஷம் நன்கு பக்குவம் பெற்ற அதிஸாரத்தில் செரிமான வலிமையும் நன்றாக உள்ளபோது பல நாட்களாகத் தொடர்ந்திருந்து பல நிறங்களுடன் மலம் வெளியேறும் அதிஸார நோய்க்குப் புடம் போட்டுப் பக்குவம் செய்த மருந்தைப் பயன்படுத்த வேண்டும். 81

## 48. புடம் போடும் முறை

காட்டு வாகைப்பட்டை, தாமரைக் கேசரம் ஆகிய இவ் விரண்டையும் சம அளவில் கொண்ட நீருடன் அரைத்து விழுதாகச்

* வியோஷா – சுக்கு

செய்க. இந்தப் பிண்டத்தை (விழுதை) குமிழன் மற்றும் தாமரை இலை ஆகியவற்றுக்குள் வைத்து நன்கு சுருட்டிக் கட்டி அதன் மேல் களிமண்ணைப் பிசைந்து அடர்த்தியாகப் பூசி அதை நெருப்புத் தணல்களுக்குள் வைத்துப் பக்குவம் செய்க. மேல்பூச்சு நன்றாகச் சிவந்த நிறம் கொண்டபிறகு எடுத்து மெல்ல மண்கூடை நீக்கி உள்ளிருக்கும் மருந்தை வேறுபடுத்துக. அம்மருந்திலிருந்து சுரசம் எடுக்கவும். அந்தச் சுரசம் குளிர்ந்த பின் ஒரு தோலா தேன் கலந்து அதிஸாரம் முதலான வயிற்று நோய் கொண்ட நோயாளிக்குப் பருகத் தரவும். இம்முறையில் கீரைப்பாலை, ஆடுதீண்டாப்பாளை, வட்டத்திருப்பி, பூலாங்கிழங்கு முதலியவற்றின் சுரசத்தையும் செய்து தேன் கலந்து அதிஸார நோய்க்குப் பயன்படுத்துக. 82–84

## 49. தித்திரிப்புட பாகம்

'ப் பறவையைப் பிடித்துக் கால்கள், இறகுகள் மூக்கு ஆகிய உறுப்புகளையும், வயிற்றில் உள்ள குடல் முதலிய உறுப்புகளையும் நீக்கிக் கொள்க. ஆலம் முதலான பாலுள்ள மரங்களின் பட்டையை விழுதாக அரைத்து அப்பறவையின் வயிற்றுக்குள் வைத்து உருண்டை போலாக்கி குமிழன் மற்றும் தாமரை இலையில் வைத்துச் சுருட்டி தர்ப்பையால் மூடிக்கட்டுக. பிறகு அதன்மேல் நீருடன் பிசைந்த களிமண்ணை, ஒரு அங்குலம் பருமனுக்கு அடர்த்தியாகப் பூசி கருங்காலி விறகுத் தணலுக்குள் வைத்துப் பக்குவம் செய்க. அம்மண் உருண்டை சிவப்பு நிறம் கொள்ளும் வரை பக்குவம் செய்து எடுக்கவும். பிறகு மண்ணை நீக்கியபின நன்றாக அழுத்திப் பிசைந்து மருந்திலிருந்து சுரசம் எடுக்கவும். அது குளிர்ந்தபின் அந்தச் சாற்றில் தேனும் சர்க்கரையும் கலந்து அதிஸாரம் முதலான வயிற்று நோய் கொண்டவருக்குப் பருகத் தரவும். 85–86

## 50. கப பித்த அதிஸாரத்திற்கு லோத்ராதி புடபாகம்

பாச்சோத்தி, சந்தனம், அதிமதுரம், மரமஞ்சள், வட்டத் திருப்பி, சர்க்கரை, தாமரை, வாகைப்பட்டை ஆகியவற்றைக் கொண்டு அரிசிகழுவிய நீர்விட்டு அரைத்து விழுதாகச் செய்க. அதை ஆல இலை முதலியவற்றில் வைத்துச் சுருட்டிச் சுற்றிலும் தர்ப்பையை மேல் வைத்துக் கட்டுக. பிறகு நீர் விட்டுப் பிசைந்த

களிமண்ணை ஓர் அங்குலப் பருமனுக்கு அடர்த்தியாகப் பூசி உருண்டை செய்க. அதைப் புகை இல்லாமல் தணலுக்குள் வைத்துப் பூச்சு மண் சிவந்து காணப்படும் வரை பக்குவம் செய்க. பிறகு மண்ணை நீக்கி எடுத்த மருந்தை அழுத்திப் பிசைந்து சுரசம் எடுக்கவும். குளிர்ந்த பின் அதில் தேன் சேர்த்துக் கப பித்தங்களால் தோன்றிய அதிஸாரத்திற்குப் பயன்படுத்துக. 67–88

## 51. ஆலம் முளை முதலானவற்றாலான புடபாக முறை

ஆலம் முதலான கூட்டுப் பொருள்களைச் சார்ந்த மரங்களின் முளைகளை அரைத்து விழுதாகச் செய்து லாவகம், கபிஞ்சலம் முதலான காட்டு உயிரினங்களின் புலாலுடன் கலந்து விழுதாகச் செய்து ஆலம் முதலான மரங்களின் இலைக்குள் வைத்துச் சுருட்டித் தர்ப்பையால் மூடிக்கட்டிக் களிமண்ணை அடர்த்தியாகப் பூசி முன் கூறிய மருந்துகளைப் போலப் பக்குவம் செய்க. பிறகு அம்மருந்து உருண்டையை அழுத்திப் பிசைந்து சுரசம் எடுத்துக் குளிர்ந்தபின் தேன்கலந்து அதிஸார நோயாளிக்குப் பருகத் தர வேண்டும். 89

## 52. அதிஸார நோய்களுக்குக் குடசப்பாலை முறை

பெரிய காய்களும், வெண்ணிற மலர்களும், மிக்க எண்ணெய்ப் பசை கொண்ட இலைகளும் உள்ள குடசப்பாலை மரப்பட்டை-யைக் கொண்ட பதினாறு மடங்கு, அல்லது எட்டு மடங்கு, அல்லது நான்கு மடங்கு நீர் சேர்த்துப் பாதி அளவு மிகுந்திருக்கக் காய்ச்சி இறக்கி வடிகட்டிய பிறகு பாகு போலப் பக்குவமாகும் வரை மீண்டும் காய்ச்சுக. அதில் நான்கில் ஒரு பங்கு அம்பஷ்டாதி அல்லது திப்பிலி முதலான கூட்டுப் பொருள்களின் தூளைக் கலந்து கலக்கிப் பக்குவம் செய்தபின் இறக்கிக் குளிர்ந்தபின் தேன் கலந்து பத்திரப்படுத்துக. மிகவும் கபத்துடன் இரத்தம் கலந்து மந்தமான அபானக்காற்றுள்ள நாள்பட்ட அதிஸாரம் கொண்ட அதிஸார நோய் கொண்டவனுக்குப் பயன்படுத்துக. அரை உளுந்து எடை முதல் ஓர் உளுந்து எடை வரை தேவைக்கு ஏற்ப நாள்தோறும் இரண்டு அல்லது மூன்று முறை உட்கொள்ளச் செய்க. 90

## 53. அதிஸாரத்திற்குக் கஞ்சி முறைகள்

ஓரிலை, சிற்றாமுட்டி வேர், வில்வக் காய்க் கதுப்பு, குருவேர், ஆம்பல் கிழங்கு, கொத்துமல்லிவிதை, சுக்கு ஆகியவை

அனைத்தும் சேர்ந்து ஒரு கர்ஷம் அளவு கொண்டு 64 தோலா நீர் விட்டுப் பக்குவம் செய்து பாதி அளவு நீர் மிகுந்திருக்கக் காய்ச்சி வடிகட்டுக. பிறகு அரிசி, பயறு, உளுந்து, எள் ஆகியவற்றில் ஒன்று தோஷத்திற்கும் நோயாளியின் விருப்பத்திற்கும் ஏற்பக் கொண்டு அதில் 32 தோலா மருந்துக் கஷாயத்தையும் கலந்து பக்குவம் செய்து அதில் இந்துப்பும், எண்ணெயில் தாளித்த சீரகமும் மிளகுத்தூளும் கலந்து நோயாளிக்கு உட்கொள்ளத் தருக. நோயாளி இனிப்புச் சுவையை விரும்புவாராயின் தேன் கலந்து கொடுக்கவும். அதிஸார நோயாளிக்கு இந்தப் பேயா எனும் கஞ்சி மிக்க நன்மை தரும். 91

வாகைப்பட்டை, ஞாழல் அதிமதுரம், மாதுளைத் துளிர் ஆகியவற்றைச் சம அளவில் ஒரு கர்ஷம் கொண்டு நீர் விட்டு அரைத்து விழுதாகச் செய்யவும். அதைத் தயிரில் கலந்து 64 தோலா நீர் சேர்த்து யவாகூ செய்க. இது எல்லா வகைப்பக்குவ அதிஸாரங்களையும் தணிக்கும். 92

## 54. வலியுடன் கூடிய ரத்த அதிஸாரத்திற்கு உரிய முறைகள்

ரஸாஞ்சனம், அதிவிடையம், குடசப்பாலைப்பட்டை, குடசப்பாலைவிதை, காட்டாத்திப்பூ, சுக்கு ஆகியவற்றைத் தனித் தனியாக அரைத்து அரிசி கழுவிய நீருடன் கலந்து தேன் சேர்த்துப் பருகக் கொடுக்க வேண்டும். தனித்தனியாக இந்த முறைகள் வலியுடன் கூடிய இ[illegible]த்தாதிஸாரத்தைப் போக்கும். 93–94

## 55. அதிஸாரத்தைப் போக்கும் முறைகள்

அதிமதுரம், வில்வக்காய்க்கதுப்பு, எனும் இவ்விரண்டையும் சம அளவில் கொண்ட தூளாக்கி இத்தூள் ஓர் உளுந்து எடை, சர்க்கரை அரை உளுந்து எடை, தேன் ஓர் உளுந்து எடை எனக் கலந்து உட்கொள்ளச் செய்தால் அதிஸாரம் தணியும். மற்றும் இதைப் போலவே சம்பா அரிசித்தூள், அறுபதாங்குறுவை அரிசித்தூளை இரண்டு உளுந்து எடை சர்க்கரையும் தேனும் சேர்த்து உட்கொள்ளச் செய்தால் அதிஸாரம் தணியும். மற்றும் இலந்தை வேர்பட்டைத் தூள் ஓர் உளுந்து எடை மையத்தூளாக்கி தேனுடன் குழைத்து உட்கொள்ளச் செய்தால் அதிஸாரம் தணியும். 95

## 56. அதிஸாரத்தைப் போக்கும் மரப்பட்டைகள்

இலந்தை மருதம், நாவல், மா, யானை வணங்கி, நீர்வஞ்சி ஆகியவற்றின் பட்டைகளைச் சம அளவில் கொண்டு மைய தூளாக்குக. பிறகு 2 உளுந்து எடை உள்ள தூளை ஓர் உளுந்து எடை சர்க்கரை, ஓர் உளுந்து எடை தேன் கலந்து உட்கொள்ளச் செய்தால் அதிஸாரம் தணியும். 96

## 57. இலந்தை முதலியவற்றால் ஆன (யவாகூ) கஞ்சி

முன் கூறிய இலந்தை முதலானவற்றின் பட்டைகள் மொத்தமாக நான்கு பலம் கொண்டு நன்கு தூள் செய்து 64 பலம் நீர்விட்டு நான்கில் ஒரு பங்கு மிகுந்திருக்கக் கஷாயம் காய்ச்சுக. அத்துடன் அரிசி அல்லது பயறு சேர்த்துக் கஞ்சி (யவாகூ) செய்து அல்லது யூஷம் எனும் கஞ்சி செய்து அதிஸார நோய் கொண்டவனுக்குப் பயன்படுத்துக. நாவறட்சி தோன்றினால் ஷடங்கம் எனும் மரபுக்கு ஏற்றபடி (ஒரு கர்ஷம் அளவு முன் கூறிய மரப்பட்டை ஒரு பிரஸ்தம் அளவு நீர் கலந்து பாதியளவு மிருந்திருக்கக் காய்ச்சிய கஷாயம் ஷடங்கம்) செய்த கஷாயத்தைப் பருகக் கொடுக்க வேண்டும். 97

## 58. இலவந்தளிர்

இலவந்தளிர் இலைகள் ஒரு பலம் அளவு கொண்டு அரைத்து அத்துடன் ஒரு பலம் நீர் சேர்த்து இரவு முழுவதும் ஊற வைக்கவும். மறுநாள் காலை நன்கு கலக்கி வடிகட்டி ஒரு தோலா எடை தேனும் அரை தோலா எடை அதிமதுரத் தூளும் கலந்து பருகச் செய்தால் அதிஸாரம் தணியும். 98

## 59. பால் பருகத் தக்க அதிஸார நோயாளி

மலத்தடை, அபான வாயுத்தடை ஆகியவற்றால் துன்பப்படும் அதிஸார நோய் வயிற்று வலியுடன் சிறிது சிறிதாக மலம் கழிக்கும்போது, கல்லிக் கல்லி வெளிவரும் போது மலத்துடன் இரத்தம் வெளிவரும் போது அத்தகைய அதிஸார, நோய் கொண்டவனுக்கு நாவறட்சி மிகுந்துள்ள போது பால் பருக[illegible] வேண்டும். அது அமிர்தம் போல [illegible]

அவ்வாறே எல்லாவகையான அதிஸார நோய்களிலும் முன் கூறிய இலக்கணங்கள் காணப்பட்டால் அவர்களுக்கு பால்சிறந்த பயனைத் தரும். 99-100

## 60. அதிஸாரத்தில் பருகத்தக்க பால்

ஆழாக்குப் பாலில் மூன்று மடங்கு நீர் சேர்த்துக் காய்ச்சிப் பால் மட்டும் மிகுந்திருக்கும் போது அல்லது மொத்தத்தில் பாதி அளவு மிகுந்திருக்கும் போது அடுப்பில் இருந்து இறக்கி நாள்பட்ட அதிஸார நோயாளிக்கு பருகத் தர வேண்டும். இது உடலில் மிகுந்துள்ள தோஷங்களைத் தணிக்கும். ஆகவே, அதிஸார நோயாளிக்கு இது மிகவும் பத்தியமானதாகக் கூறப்படுகிறது. 101

## 61. அதிஸார நோய்க்கு* ஸ்நேஹவிரேசனம்

அதிஸார நோயில் ஆம தோஷத்தை வெளியேற்றவும், அல்லது பக்குவமடைந்த அதிஸாரத்தில் வாதத்தால் வலி, வயிற்று வீக்கம், மலக்கட்டு போன்ற இலக்கணங்கள் காணப்பட்டாலும் ஸ்நேஹ விரேசனம் அதாவது பேதியாகச் செய்யும் மருந்துப் பொருள்களின் விழுது சேர்த்துக் காய்ச்சிய நெய் மருந்து, அல்லது பேதியாகச் செய்யும் ஆமணக்கு எண்ணெயைப் போன்றவற்றைப் பயன் படுத்துவது மிக்க நன்மை தரும். அல்லது நிரூஹ முறை சிகிச்சையை விளக்கும் அத்தியாயத்தில் கூறப்பட்டுள்ள எண்ணெய்ப் பசை மிக்க வஸ்தி முறைகளைப் பசை மிக்க வஸ்தி முறைகளைப் பயன்படுத்த வேண்டும். அவ்வாறே காட்டு வாகை, இலவம் போன்ற பொருள்களின் கஷாயம் அல்லது விழுது சேர்த்துக் காய்ச்சிய நெய் மருந்தைப் பருகச் செய்தலும் மிக்க நன்மை தரும். 102

## 62. இரத்தத்துடன் வெளியேறும் மலம் கொண்ட அதிஸாரத்திற்குச் சிகிச்சை

மலத்துடன் இரத்தப்பெருக்குக் காணப்பட்டால் அத்தகைய அதிஸார நோயில், மலம் வெளிவருவதற்கு முன்போ அல்லது பிறகோ இரத்தப்பெருக்கு காணப்பட்டால் வலி குடல் வஸ்தி குதம் ஆகிய பகுதிகளில் கத்தரிப்பது போன்ற வலி காணப்பட்டால்

* ஸ்நேஹவிரேசனம் – பேதியாகச் செய்ய எண்ணெய் மருந்தைப் பயன்படுத்தல்.

அத்தகைய நோயாளிக்குப் பாலுள்ள ஆலம், அரசு போன்ற மரங்களின் மிக்க இளசான துளிர் இலைகளின் விழுதைக் கொண்டு கஷாயம் காய்ச்சி அத்துடன் நெய் மருந்து செய்து அதில் தேன் சர்க்கரை ஆகியவற்றைச் சேர்த்துக் கொடுக்க வேண்டும். 103

## 63. இரத்தத்துடன் கூடிய அதிஸாரத்திற்கு தார்வ்யாதி நெய்

மரமஞ்சள் பட்டை சிறு திப்பிலி, சுக்கு, கொம்பரக்கு, குடசப்பாலை, கடுக ரோகிணி ஆகியவற்றை விழுதாகச் செய்து நெய் மருந்தாகச் செய்து அதிஸாரத்தைப் போக்கும் 'பேயா' எனும் கஞ்சியுடன் அல்லது யவாகூ எனும் கஞ்சியுடன் கலந்து ரத்தத்துடன் கூடிய அதிஸார நோய்க்கு பருகச் செய்ய வேண்டும். இவ்வாறு கொடுக்கப்பட்ட நெய் மருந்து தனித்தனியாக அந்தந்த தோஷங் களால் அல்லது மூன்று தோஷங்களும் கலந்தால் தோன்றும் அதிஸார நோய்களைப் போக்கும். 104–105

## 64. பக்குவம் பெற்ற அதிஸாரத்தில் வாந்தி எடுக்கச் செய்தல்

பக்குவம் பெற்ற அதிஸாரத்தில் கபம் மிகுந்திருக்குமானால் உடல் பளுவாக தோன்றுமானால் காய்ச்சல், அழற்சி, வாதச் சீற்றத்தால் மலத்தடை காணப்பட்டால் அத்தகைய நோயாளிக்கு கீழ்நோக்கிச் செல்லும் இரத்தபித்த நோய்க்குக் கூறியபடி வாந்தி எடுக்கச் செய்யும் முறையைப் பயன்படுத்தத்தகும். இம்முறை மிகவும் நலம் தரும். 106

## 65. அதிஸார நோய்க்கு வஸ்தி முறைகள்

பக்குவம் பெற்ற அதிஸாரத்தில் உடலில் தோஷங்கள் அதிக அளவில் சீற்றம் கொண்டிருந்த போது அபானவாயு முதலியன சீராக வெளியேறாத நிலையில் தர்ப்பை, நாணல் முதலான சிறுநீர்த் தடையை நீக்கும் மருந்துப் பொருள்களால் ஆன கஷாயம் கலந்து செய்த நெய் மருந்து அல்லது ஆமணக்கு எண்ணெய் முதலான வற்றால் விரைவாக ஆஸ்தாபன, அனுவாஸன வஸ்திகளில் ஒன்றைப் பயன்படுத்த வேண்டும். 107

## 66. முக்குதல் போன்ற துன்பங்களுடன் கூடிய அதிஸாரத்திற்குச் சிகிச்சை

*மலத்தை வெளியேற்ற அதிஸார நோய் கொண்டவன் மிகவும் முக்குவானானால் அவ்வாறு செய்தால் மலக்குடல் வாய் நழுவி வெளிவந்துவிடுமானால், அந்நிலையில் சிறு நீர்த்தடை, இடுப்பு வலி, இடுப்பு பிடிப்பு போன்ற துன்பங்கள் தோன்றுமானால் காகோலி முதலான இனிப்புச் சுவை கொண்ட கூட்டுப் பொருளின் விழுதை அல்லது சுரசத்தைச் சேர்த்து செய்த நெய், அல்லது எண்ணெய் மருந்து, அவ்வாறே மாதுளை, விளாம்பழம், புளிச்சைக் கீரை, புளிவஞ்சி, காடி முதலிய புளிப்புச் சுவை மிக்க பொருள் களைச் சேர்த்துச் செய்த நெய் அல்லது எண்ணெய் மருந்து கொண்டு அநுவாஸன வஸ்தி முறையைப் பயன்படுத்த வேண்டும். 108*

## 67. ஆஸனவாய்ப் பக்குவத்திற்கு மருந்து

*உடலுக்கு ஒவ்வாத உணவு, பழக்கவழக்கங்களால் பித்தம் சீற்றமடைந்துள்ள அதிஸார நோய் கொண்டவனுக்கு ஆஸனவாய் பக்குவமடைந்து (மிகவும் புண்ணாகி) இருந்தால் இளஞ்சூடுள்ள பால், கருப்பஞ்சாறு, சர்க்கரை கலந்த நீர், காகோலி முதலான இனிப்புச் சுவை கொண்ட பொருள்களின் கஷாயம் முதலிய வற்றால் ஆஸன வாய்ப்பகுதியை நனைத்துக் கொண்டிருக்க வேண்டும். மற்றும் இந்தப் பொருள்களின் விழுது, கஷாயம் முதலியவற்றாலான நெய்யைக் கொண்ட அநுவாஸன வஸ்தி முறையைப் பயன்படுத்த வேண்டும். 109*

## 68. வாத அதிஸாரத்திற்கு எண்ணெய் வஸ்தி

*வாதம் சீற்றமுறுவதால் தோன்றும் அதிஸாரத்திற்குத் தயிர், பால், ஏடு, சுரை எனும் மது, வில்வப்பழ விழுது ஆகியவற்றால் ஆன எண்ணெய் மருந்தால் அநுவாஸன வஸ்தி கொடுக்க வேண்டும். அவ்வாறே உணவுக்காக காஞ்சொரிவேர் விழுது சேர்த்து காய்ச்சிய பால் சிறந்ததாகும். (இங்கு தயிர், பால் ஏடு என்பதற்குத் தயிர் மீதுள்ள தெளிவு எனச் சில நூலாசிரியர்கள் விளக்கம் தந்துள்ளனர்) 110*

*1. தாரு – மரமஞ்சள்*

## 69. பிச்சாவஸ்தி முறை

சிறிது சிறிதாகப் பலமுறை இரத்தம் கலந்த வலியுடன் கூடி மலம் வெளிவரும் அதிஸார நோய் கொண்டவனுக்கு, அபான வாயுவும் தடைப்பட்டிருக்குமானால் அந்நிலையில் பிச்சாவஸ்தி கொடுப்பது மிக்க நன்மை தரும்.

(கொழகொழப்பு அடர்ந்த பொருள்களுடன் கூடிய வஸ்தி மருந்து கொண்டது, பிச்சாவஸ்தி எனப்படும்.) 111

## 70. ஆஸன வாய் வலிமையற்றுப் போதலுக்குச் சிகிச்சை

பல நாள் தொடர்ந்து அதிஸார நோயால் துன்புற்ற நோயாளியின் ஆஸனவாய்ப்பகுதி (சுருங்கி விரியும் தன் வலிமையிழந்து) வலிவற்றதாகி விடும். அத்தகைய நிலையில் ஆஸனவாயில் மருந்துப் பொருள் [illegible] பஞ்சு வைத்தல், ஸேகம் (மருந்து திரவத்தால் [illegible] துக் [illegible] கொண்டிருத்தல்) எண்ணெய் மருந்தை அநுவாஸன [illegible] யாக [illegible] பயன்படுத்தல் போன்ற முறைகளைக் கையாள வேண்டும். [illegible] றமும் காணப்பட்டால் முறைப்படி நெய் மருந்தைப் பயன் [illegible] க்துக. 112

## 71. அதிஸாரத்திற்கு [illegible] கபித்தாதி முறை

விளாம்பழம், இலவந்தளிர், பஞ்சி எனப்படும் வட்டத்திருப்பி வகை, ஆலம்பிஞ்சு [illegible] த்திக்காய் அல்லது [illegible] இலை, மாதுளந் தளிர் அல்லது மாதுளைவிதைகள் அல்லது மாதுளம் பழத்தோல், ஊசி மல்லிகை மொ[illegible] சிறுகாஞ்சொரி [illegible] கீரை ஆகியவற்றைத் தயிருடன் பக்குவம் செய்து அதிஸார நோய்க்கு பயன்படுத்த வேண்டும். 113

## 72. அதிஸாரத்திற்கு உணவு முறை

ஓரிலை [illegible] மூவிலை, கண்டங்கத்திரி, முள்ளுக்கத்திரி, சிற்றா முட்டி, நெருஞ்சி, வில்வக்காய், வட்டத்திருப்பி, சுக்கு, கொத்து மல்லி விதை எனும் பொருள்களுடன் கலந்த உணவுப்பொருளை

* கபித்தம் – விளாம்

அதிஸார நோயாளிக்குப் பயன்படுத்த வேண்டும். எள்ளின் விழுது, பயிற்றின் விழுது, பயிற்றின் சாறு ஆகியவையும் நன்மை தரும்.
114–115

## 73. இரத்த அதிஸாரம் தோன்றக் காரணம்

பித்த அதிஸார நோய் கொண்ட நோயாளி பித்தத்தைத் தோற்றுவிக்கும் உணவு, குடிநீர் ஆகியவற்றை அதிக அளவில் உட்கொள்வதால் பித்தம் மிகவும் சீற்றமடைந்து இரத்த அதிஸார நோயைத் தோற்றுவிக்கும். இந்நோயில் காய்ச்சல், வலி, நாவறட்சி, அழற்சி, கொடிய குதபாகம் ஆஸனவாய் பகுதி புண்ணாதல் போன்றவை ஏற்படும். 116

## 74. இரத்தாதி ஸாரத்திற்குச் சிகிச்சை

மலம் கழிக்கும் முன்போது, கழிந்தபின்போ அல்லது மலத்துடனோ இரத்தம் வெளியேறுமானால் அந்நிலையில் ஆலம், அரசு முதலான பாலுள்ள மரங்களின் இளந்தளிர் இலைகளின் விழுதை இரண்டு தோலா அளவு கொண்டு [illegible]னாறு தோலா பால், 64 தோலா (பதினாறு பலம்) நீர் சேர்த்[illegible]ால் அளவு மட்டும் மிகுந்திருக்க காய்ச்சி வடிகட்டி அத்துட[illegible]ந கர்ஷம் அளவு நெய் சேர்த்துப் பருகச் செய்க. அல்லது அந்த[illegible]லம் முதலானவற்றில் விழுது சேர்த்த பாலைக்காய்ச்சி வெண்[illegible] எடுத்து சர்க்கரை தேன் சேர்த்து உட்கொள்ளச் செய்து அதன் பிற[illegible]ாரைப் பருகச் செய்க.
117–118

முரளம், இலவம், இத்தி, யானை[illegible]ங்கி, [illegible]னிசம் எனும் மரங்களின் பட்டைகளை[illegible]ண்டு தூளாக்கி அதில் [illegible]று உளுந்து எடைத் தூ[illegible] அரைத்து ஐந்து தோலா [illegible]வுள்ள ஆட்டுப்பாலில் சேர்த்துக் கலந்து தேன் சேர்த்துப் பருகச் [illegible]ய்தால் இரத்த அதிஸாரம் நீங்கும். 119

## 75. இரத்த அதிஸாரத்திற்கு *மதுகாதி முறை

அதிமதுரம், சர்க்கரை, பாச்சோத்தி, குமிழன் கிழங்கு, நன்னாரி ஆகியவற்றைச் சம அளவில் கொண்டு தூளாக்கி அதில் மூன்று

* மதூகம் – அதிமதுரம்

உளுந்து எடை தேன்விட்டுக் குழைத்து ஆட்டுப்பாலைத் துணை மருந்தாக உட்கொள்ளச் செய்தால் இரத்த அதிஸாரம் நீங்கும். 120

## 76. இரத்த அதிஸாரத்திற்கு மஞ்சிட்டி முதலியன

மஞ்சிட்டி, நன்னாரி, பாச்சோத்தி, பதுமகம், வெண்தாமரை, நீலாம்பல், பாராங்கி, ஆகியவற்றைச் சம அளவில் கொண்டு தூளாக்கி அதில் மூன்று உளுந்து எடைத் தூளை ஆட்டுப்பாலுடன் உட்கொள்ளச் செய்தால் இரத்த அதிஸாரம் தணியும். 121

## 77. இரத்த அதிஸாரத்திற்கு மருந்துகள்

1. சர்க்கரை, ஆம்பல், பாச்சோத்தி, மஞ்சிட்டி, அதிமதுரம் எள், 2. எள், அதிமதுரம், மஞ்சிட்டி, ஆம்பல் மலர்; 3. எள், இலவம்பிசின் பாச்சோத்தி, அதிமதுரம் ஆம்பல் மலம்; 4. காஞ்சொரி, எள்ளின் விழுது இவ்வாறு கூறப்பட்ட நான்கு முறைகளில் ஒன்றின் மருந்துப் பொருள்களைச் சம அளவில் கொண்டு தூளாக்கி மூன்று உளுந்து எடைத் தூளைத் தேன் கலந்து ஆட்டுப்பாலுடன் உட்கொள்ளச் செய்தால் அதிஸாரம் தணியும். 122–124

## 78. ரத்த அதிஸாரத்திற்கு வில்வப் பிஞ்சு

இரத்தத்துடன் நீர்த்தன்மை மிகுந்து மலம் வெளியேறுமானால் அந்நோயாளிக்கு வில்வப் பிஞ்சின் கதுப்பைத்தூள் செய்து அதில் மூன்று உளுந்து எடை பாகு, தேன், எள் எண்ணெய் விட்டுக் குழைத்து உணவுக்கு முன் உட்கொள்ளச் செய்க. இம்முறை மிக்க நன்மை தருவதாகும். 125

## 79. வலியுடன் கூடிய இரத்த அதிஸாரத்திற்குப் பட்டுப்பூச்சி

கூண்டுக்குள் உள்ள பட்டுப்பூச்சியை அப்படியே நெய்யில் வறுத்து பொரிமா, சர்க்கரை, தேன் ஆகியவற்றை கலந்து உட்கொள்ளச் செய்தால் பித்தத்தின் சீற்றத்தால் தோன்றிய வலியுடன் கூடிய ரத்த அதிஸாரம் தணியும்.

(மூலத்தில் 'கோசகாரம்' என்ற சொல்லுக்கு மேல் தோல் நீக்கிய கரும்புத் துண்டு, எனப்பொருள் கூறியுள்ளார். ஆனால் கோசகாரம்

என்ற சொல்லுக்குப் பட்டைப் பூச்சி என்ற பொருள் சரக ஸம்ஹிதையில் காணப்படுகிறது.) 126

## 80. பித்தத்துடன் கூடிய இரத்த அதிஸாரத்திற்கு வில்வம்

வில்வப்பிஞ்சின் தூள் இரண்டு உளுந்து எடை, அதிமதுரத்தூள் ஓர் உளுந்து எடை, சர்க்கரை இரண்டு உளுந்து எடை, தேன் மூன்று உளுந்து எடை, அரிசி கழுவிய நீர் இரண்டு தோலா எனக்கொண்டு அனைத்தையும் சேர்த்து நாள்தோறும் மூன்று வேளை உட்கொள்ளச் செய்தால் பித்தச் சீற்றத்தால் தோன்றிய இரத்த அதிஸாரம் தணியும். 127

## 81. மேலும் சில முறைகள்

பித்த அதிஸாரத்திற்குக் கூறப்பட்ட மற்ற மலத்தைக் கட்டும் முறைகளை இரத்த அதிஸாரத்திற்கும் தேன், சர்க்கரை கலந்து பயன்படுத்த வேண்டும். அவ்வாறே முன்பு கூறப்பட்ட ஆலந்தளிர் முதலானவற்றின் புடபாக முறையின் சுரசத்தைத் தேன் கலந்து உட்கொள்ளச் செய்தால் இரத்த அதிஸாரம் தீரும். 128

## 82* ஸேக முறை

பித்த அதிஸார நோயால் தோன்றிய குதபாகத்திற்கு (ஆஸன வாய்ப்புண்ணானதற்கு, அப்பகுதியை நனைத்துக் கொண்டிருக்கப்) பயன்படும் மருந்து வகைகள் முன் கூறப்பட்டன. அவற்றைப் பித்தச் சீற்றத்தால் தோன்றிய ரத்த அதிஸாரத்தால் தோன்றும் குதபாகத்திலும், குதபாகத்தால் தோன்றும் துன்பத்தை தணிக்கவும் பயன்படுத்துக. அப்படியும் வேதனை தீராத போது முன்பு கூறிய பிச்சாவஸ்தியைப் பயன்படுத்த வேண்டும். 129

## 83. மலக்கட்டுடன் கூடிய இரத்த அதிஸாரத்திற்கு விரேசன மருந்து

செரிமான வலிமை மிகுந்துள்ள நோயாளி மலத்தடையுடன் மிகுந்த அளவில் தோஷங்களைக் கொண்ட மலத்தை வெளியேற்று வானாயின் அவனுக்கு வாயு விளங்கம், கடுக்காய், தான்றிக்காய், நெல்லிக்காய், திப்பிலி ஆகியவற்றின் கஷாயத்தை உட்கொள்ளச்

★ ஸேகம் – திரவ மருந்தால் நனைத்தல்.

செய்து ...யாகச் செய்க. அல்லது ஆமணக்கு வேர் சேர்த்து காய்... பாலைப் பருகச் செய்து பேதியாகச் செய்க. பிறகு ப... ...ரிலை முதலான வாதத்தைப் போக்குவதும் ...த் தூண்டுவதுமான மருந்துப் பொருள்களின் ...ன் செய்த அரிசி அல்லது பயிற்றின் கஞ்சியை உணவாகக் கொடுக்கவும். 130–131

## 84. நுரையுடன் கூடிய இரத்த அதிஸாரத்திற்குச் சிகிச்சை

செரிமான வலிமை (சடராக்னி) நன்றாக உள்ளவனான அதிஸார நோயாளி மிகுதியான மலம் இல்லாமல் நுரையுடன் கூடிய அதிஸார பேதி கொண்டிருந்தால் அவனுக்குப் பாகுடன் சுக்குத்தூள், தயிர், எண்ணெய், பால், நெய் ஆகியவற்றைக் கலந்து உட்கொள்ளச் செய்ய வேண்டும். 132

## 85. வேறு முறை

இலந்...பழத்தை (நீர் சேர்த்து) கொதிக்க வைத்து வெல்லமு... எண்ணெயும் கலந்து உட்கொள்ளச் செய்க. அல்லது இல...தம்பட்ட, வில்வக்காய் சதுப்பு இரண்டையும் பிஷ்டஸ் வேதன முறைப்படி (நீர் ஆவியில்) பக்குவம் செய்து அது குளிர்ந்த பிறகு வெல்லமும் எண்ணெயும் சேர்த்து உட்கொள்ளச் செய்தால் நுரைத்... வெளிவரும் அதிஸாரம் தணியும். 133

## 86. அதி... ...ந்... மலம் ...றந்துள்ள ... சிகிச்சை

அதிஸார ... நோயாளியின் குடலில் மலம் குறைந்துள்ள போது பாதி அ...ு ந... ஆவியில் பக்குவம் செய்யப்பட்ட யவ தானியத்தின் து... தயிருடன் உட்கொண்டு பிறகு மாவுப் பண்டத்தாலான ... ...வும் மதுவைப் பருகச் செய்க. 134

## 87. வேறுமு...

முயலின் ... இரத்தம ... (காஞ்சோரி) நெ... தயிர் ஆகியவற்... ...து பக்குவ... உட்கொள்ளச் செ...க. பிறகு மல... ...கப்படுத்தும் உ... ...வற்றான மென்மையான உணவை உட்கொள்ளச் செ... 135

## 88. மலம் குறைந்து போனதற்கு யூஷ முறை

இலந்தம் பழத்தைக் கஷாயமாகக் காய்ச்சி நெய், எண்ணெய் களுடன் தாளித்து அதில் தயிர், மாதுளம் பழச்சாறு ஆகியவற்றைக் கலந்து உணவுடன் பயன்படுத்துக. 136

பிடாலவணம், வில்வக்காய் கதுப்பு, சுக்கு எனும் இம்மூன்றை யும் காடியுடன் அரைத்து நெய், எண்ணெய்களால் தாளித்து தயிர் மேல் கலந்து உட்கொள்ளச் செய்க. 137

சடராக்னி (செரிமான வலிமை) நன்றாக இருந்து மலம் மிகக் குறைந்துள்ள நிலையில் வலியுடன் மலம் மிகக் குறைந்த அளவில் வெளிப்பட்டால் அல்லது நீராகப் பேதியாகும்போது கொடி வேலி முதலான சடராக்கினியை வளர்க்கும் மருந்து பொருள்களுடன் காட்டாத்தி வில்வபிஞ்சு முதலான மலத்தை அதிகப்படுத்தும் மருந்து பொருள்களின் தூளை கலந்து நெய்யும் தகுந்த அளவு கலந்து உட்கொள்ளச் செய்க. (மருந்து பொருள் தூள் மூன்று உளுந்து எடை, நெய் ஆறு உளுந்து எடை எனக் கொள்க.) 138

## 89. *பிரவாஹிகை தோன்றுதல்

உடலுக்கு ஒவ்வாத உணவை உட்கொண்டபோது வாதம் சீற்ற மடைந்து கபத்தை ஆஸன வாய் வழியாக வெளியேற தூண்டும். இவ்வாறு அடிக்கடி அதிகமாக முக்குவதால் வெளிவரும் இது 'பிரவாஹிகை' எனப்படும். 139

## 90. பிரவாஹிகை வகைகள்

வாத சீற்றத்தால் தோன்றிய பிரவாஹிகை வலியுடன் கூடியதாகும். பித்தத்தால் தோன்றிய பிரவாஹிகை எரிச்சலுடன் கூடியதாகும். கபத்தத்தால் தோன்றியது அதிக அளவு கபத்தையும், ரத்தத்தால் தோன்றியது அதிக அளவு ரத்தத்தையும் மலத்துடன் கலந்து வெளிப்படச் செய்யும். இந்நோய்க்கு காரணங்களான வற்றைப்பற்றிக் கபத்தால் தோன்றியது எண்ணெய் பசை கொண்ட பொருள்களை அளவுக்கு மீறி உண்பதாலும், வாதத்தால் தோன்றியது வறட்சித் தன்மை கொண்ட பொருள்களை மிகுதியாக உண்பதாலும்

* பிரவாஹிகை - சீதபேதி

பித்தத்தால் தோன்றியது உஷ்ண வீரியமுள்ள தீக்ஷ்ணமான பொருள்களை மிகுதியாக உண்பதாலும் தோன்று வதாகும். இந்நோய்களுக்கு உரிய இலக்கணங்கள் சிகிச்சை முறைகள் ஆகியவற்றை அவ்வாறே ஆமமாக இருத்தல், பக்குவம் பெறுதல் என்பன பற்றிய விளக்கமும் அதிஸ்ார நோய்க்குக் கூறியவற்றைப் போலவே என அறிந்து கொள்க. 140

## 91. பட்டினி கிடத்தல் முதலியவை பயன்தராத போது பிரவாஹிகைக்குச் சிகிச்சை

பட்டினி கிடத்தல் அவ்வாறே செரிமானத்தைத் தூண்டும் முறைகள் முதலியவற்றால் தணியாத கடுமையான பிரவாஹிகை நோய்க்கு தீபன – பாசன – ஸ்தம்பகப் பொருள் சேர்த்துக் காய்ச்சிய பாலை மட்டும் பருகச் செய்தால் நோய் விரைவில் தணியும். அவ்வாறே எண்ணெய், எள்ளின் விழுது, பிச்சில வஸ்தி எனும் முறைகளைப் பயன்படுத்தித் தணிக்க வேண்டும். 141

## 92. பிச்சாவஸ்தி முறை

இலவம் மலர்க்காம்புகளைப் பச்சையாகக் கொண்டு பச்சை தர்ப்பைகளால் சுற்றி புடபாக முறைப்படி பக்குவம் செய்து எடுத்து ரசத்தை பிழிந்து கொள்க. இந்தச் சாற்றில் சம அளவு சூடானபால், எண்ணெய் 2 தோலா, நெய் 2 தோலா அதிமதுரத் தூள் 1 தோலா எனக் கலந்து எச்சரிக்கையுடன் பிரவாஹகையில் மலமும் சிறுநீரும் வெளிபட்ட பிறகு வஸ்தியாகப் பயன்படுத்த வேண்டும். 142–143

## 93. ஆஸ்தாபன, அநுவாஸன வஸ்திகள்

பிரவாஹிகையில் முக்கிய போது வலி தோன்றினால் அந்நோயாளிக்கு பிருஹத் பஞ்ச மூலம் மற்றும் இலகு பஞ்ச மூலம் எனும் இவ்விரண்டு வகை கூட்டுப் பொருள்களின் கஷாயத்தால் ஆன பாலில் தேன் கலந்து ஆஸ்தாபன வஸ்தியாகப் பயன்படுத்துக. இது சிறந்த உபாயமாக கூறப்பட்டுள்ளது. அல்லது இரு வகைப் பஞ்சமூல கூட்டுப் பொருள்களாலான பாலுடன் எண்ணெய் கலந்து வஸ்தி மருந்தாக்கி அதனால் அநுவாஸன வஸ்தியாகப் பயன் படுத்தலாம். 144

## 94. வேறு எண்ணெய் முறைகள்

வாதத்தைப் போக்கும் கூட்டுப் பொருள்களில் கூறப்பட்டவை மருந்துப் பொருள்களின் விழுது, கஷாயம் ஐவகை உப்புகள் சேர்த்துச் செய்தவையான எண்ணெய் மருந்துகள் உணவைப் பக்குவப் படுத்தித் தருக. குடிநீர் வகைகளிலும் அவற்றைச் சேர்த்து பக்குவப் படுத்திக் கொடுக்க வேண்டும். அவ்வாறே பாச்சோத்திப் பட்டை, பிடாலவணம், வில்வக்காய் கதுப்பு, சுக்குமிளகு திப்பிலி என்பன வற்றைச் சம அளவு கொண்டு கலந்த தூளில் ஆறு உளுந்து எடை கொண்டு முன்கூறிய எண்ணெய் மருந்துடன் உட்கொள்ளச் செய்க. 145

## 95. பிரவாஹிகை நோயில் உணவு முறைகள்

நிஸ்ஸாரகம் எனப்படும் மலம் மிகக் குறைந்த பிரவாஹிகை யில் முன் கூறிய பாச்சோத்தி பட்டை முதலியவற்றின் தூளை உட்கொண்ட பிறகு பசி எடுத்ததும் தயிர், தயிர் மேல் தெளிவு, தேன் ஆகியவற்றுடன் சோறு அல்லது பயற்றின் கஞ்சி ஆகியவற்றை உண்ணலாம். அல்லது தூயத் தங்கத்தைக் காய்ச்சிப் பாலில் முக்கி எடுக்கவும். இவ்வாறு தங்கத்தை பல முறை முக்கி எடுத்தால் பால் கஞ்சி போலாகி விடும். அது குளிர்ந்த பிறகு அந்தப் பாலில் ஒன்றிரண்டு தோலா அளவு தேன் கலந்து கொடுக்கலாம். அல்லது அந்தப் பாலுடன் கலந்த சோற்றை உண்ணச் செய்யலாம். 146

## 96. வலியால் துன்பம் கொண்டவனுக்கு உணவு

பிரவாஹிகையில் தோன்றிய வலியால் துன்பப்படும் நோயாளிக்குச் சுக்கு, மிளகு, திப்பிலி, விதாரிகந்தா (முதுக்கன் கிழங்கு) ஆகியவற்றை சம அளவு கொண்டு விழுதாக்கி அவ்விழுது ஒரு பலம், பால் எட்டு பலம் நீர் 32 பலம் எனக் கலந்து பால் மட்டும் மிகுந்திருக்கக் காய்ச்சி அந்தப் பாலுடன் உணவு உட்கொள்ளச் செய்க. விதாரி கந்தா முதலான அல்லது ஒரிலை முதலான வாதத்தைப் போக்கும் பொருள்கள், வில்வம், வட்டத்திருப்பி முதலான மலத்தைக் கட்டும் பொருள்கள் கொடிவேலி, இஞ்சி முதலான ஜடராக்னியை வளர்க்கும் பொருள்கள் முதலியவற்றா லான கஷாயத்துடன் செய்யப்பட்ட கடயூஷம் எனப்படும் கஞ்சியை உட்கொள்ளச் செய்க. 147

நன்கு பக்குவம் செய்யப்பட்ட மீன் புலால் உட்கொள்ளலாம். அல்லது விஷ்கிரவர்கத்தில் கூறப்பட்ட உயிரினங்களின் புலால் சாற்றில் விதாரி கந்தாதி கூட்டுப் பொருள் அல்லது சாலபர்ணாதி கூட்டுப் பொருள்கள் ஆகிய வாதத்தைப் போக்கும் மருந்துப் பொருள்களின் விழுது மற்றும் கஷாயம் ஆகியவற்றால் செய்த நெய், எண்ணெய் முதலியவற்றைச் சேர்த்து உட்கொள்ளச் செய்க. அல்லது கருநிறமான் ஆடு, செம்மறி ஆடு ஆகியவற்றின் புலாலை ஆலந்தளிர் இலையுடன் பக்குவம் செய்து உட்கொள்ளச் செய்க. 148

## 97. ஆட்டு ரத்தத்தைப் பயன்படுத்தல்

யாகத்தில் பலியாகக் கொடுக்கத்தக்க இலக்கணங்களைக் கொண்ட ஆட்டின் அல்லது (கிடைக்காத போது) சாதாரண ஆட்டின் இரத்தத்தை நெய், எண்ணெய்களுடன் தாளித்துத் தயிரைச் சேர்த்து உட்கொள்ளச் செய்க. அல்லது மயில், தித்திரிப்புள் என்பனவற்றில் ஒன்றின் புலால் சாற்றை மீண்டும் பக்குவம் செய்து (யூஷமாகச் செய்து) அத்துடன் ஆட்டின் ரத்தத்தையும் முன் போலப் பக்குவம் செய்து கலந்து உட்கொள்ளச் செய்க. [illegible] கஞ்சிகளுடன் பொங்கல் போல் செய்த உணவை உட்கொள்ளச் செய்க. அல்லது நன்கு பக்குவம் செய்த உளுந்தை நெய்யின் மீதுள்ள தெளிவுடன் கலந்து மிளகுத் தூள் கலந்து தயிருடன் கலந்து உட்கொள்ளச் செய்க. 149

## 98. நிரூஹவஸ்தி முறைப்பற்றி விளக்கம்

அதிமதுரம், நீலாம்பல், ஆகியவற்றின் கஷாயத்தில் பால், தேன், நெய் ஆகியவற்றைக் கலந்து மிக்க வலியும் சிறுநீர்த்தடை (நீர்ச்சுருக்கம்) கொண்ட பிரவாஹிகை எனும் நோய்க்கு நிரூஹண வஸ்தியாகப் பயன்படுத்துக. இவ்வாறு கொடுக்கப்பட்ட நிரூஹண வஸ்தி அந்த நோயாளியின் மலத்துடன் வெளிவரும் ரத்தத்தை தணிப்பதுடன் எரிச்சலையும், காய்ச்சலையும் தணிக்கும். 150-151

## 99. அநுவாஸன வஸ்தி முறை

பிரவாஹிகை நோயில் வலியுடன் துன்புறும் நோயாளிக்குக் காகோலி முதலான இனிப்புச் சுவை கொண்ட கூட்டுப் பொருள் களின் விழுது, கஷாயங்களுடன் எண்ணெய் மருந்து செய்து அதை

இரவிலோ, பகலிலோ [illegible] போதும் அநுவாஸன வஸ்தி யாகக் கொடுக்க வேண்டும். [illegible] எண்ணெய் மருந்து வஸ்தி யாகக் கொடுக்கப்பட்ட போது அது [illegible] வழியே சென்று வலியைத் தணிக்கும். வாதமும் தணியும். வாதம் தணிந்தது பிரவாஹிகையும் தணியும். அதனால் பிரவாஹிகையில் மருத்[illegible]ன் வாதத்தைத் தணிக்க முயல வேண்டும். 152–153

## 100. பிரவாஹிகையைத் தணிக்கும் தீபன முறை

வட்டத்திருப்பி, ஓமம், குடசப்பாலைபட்டை, நீலாம்பல் சுக்கு திப்பிலி ஆகியவற்றைச் சம அளவில் கொண்டு தூள் செய்து இரண்டு முதல் நான்கு உளுந்து எடை வரை நாள்தோறும் மூன்று, நான்கு முறைகள் இளஞ்சூடுள்ள வெந்நீருடன் உட்கொள்ளச் செய்தால் பிரவாஹிகை தணியும். இவ்வாறே ஆட்டு விரையுடன் காய்ச்சிய பாலில் நெய் சேர்த்துப் பருகச் செய்தால் பிரவாஹிகை தணியும். 154

## 101. பிரவாஹிகைக்குச் சுக்கு முதலியவற்றைப் பயன்படுத்தல்

சுக்குத்தூள் ஓர் உளுந்து எடை, தும்பை (அல்லது குடசப் பாலை) தூள் ஓர் உளுந்து எடை கொண்டு ஓர் உளுந்து, எடை, தேன், ஓர் உளுந்து எடை எண்ணெயை சேர்த்து பக்குவம் செய்து இலேகியம் போல உட்கொள்ளச் செய்தால் பிரவாஹிகை நீங்கும். 155

## 102. பிரவாஹிகையில் யவாகூ (கஞ்சி)

யானை வணங்கி, ஆகாயத்தாமரை, மாதுளம்பட்டை ஆகிய வற்றை நான்கு பலம் அளவு கொண்டு 64 பலம் நீர் விட்டு கொதிக்க வைத்து 16 பலம் மிகுந்திருக்கும் வரை பக்குவம் செய்து குளிர்ந்த பிறகு வடிகட்டி அந்தக் கஷாயத்தில் நோயாளி உண்ணும் அளவு அரிசி அல்லது பயிற்றின் பருப்பு சேர்த்து யூஷம் எனும் கஞ்சி காய்ச்சி அதில் இரண்டு உளுந்து எடை வில்வக்காய் கதுப்பின் தூள் சேர்த்து நெய் அல்லது எண்ணெயால் தாளித்து உட்கொள்ளச் செய்க. இந்த யவாகூ பிரவாஹிகை நோயில் மிகவும் பத்தியமான உணவாகும். யவாகூ பருகிய பிறகு கறந்த சூடுடன் கூடிய பாலைப் பருகத் தர வேண்டும். 156

## 103. பிரவாஹிகையில் பத்திய முறை

அதிஸாரம், பிரவாஹிகை முதலான வயிற்று நோய்களில் எளிதில் செரிமானமாகக் கூடிய அரிசி முதலானவை பத்தியங்களாகும். சடராக்கினியைத் தூண்டக் கூடிய கொடி வேலி, சுக்கு முதலான பொருள்கள் எண்ணெய்ப்பசை கொண்ட உணவு முதலானவற்றைப் பயன்படுத்த வேண்டும். 157

## 104. யவாகூவின் தன்மைகள்

யவாகூ எனும் கஞ்சி நாவறட்சியைத் தணிக்கும் எளிதில் செரிமானமாகும். சடராக்கினியை வளர்க்கும். சிறுநீரை வெளியேறச் செய்து சிறுநீர் குண்டிகையைத் தூய்மைப்படுத்தும். அதனால் காய்ச்சலிலும், அதிஸாரத்திலும் கஞ்சி (யவாகூ) மிகவும் நன்மை விளைவிப்பதாகும். 158

## 105. அதிஸாரம் முதலியவற்றிற்குச் சிறப்புச் சிகிச்சை

அதிஸாரத்தில் அந்நோய் தோன்றியதற்குக் காரணமானதற்கு மாறான சிகிச்சை முறையைக் கையாள்வது சிறந்ததாகும். அதாவது வறண்ட உணவுப் பொருள், வறட்சியைத் தோற்றுவிக்கும் செய்கைகள் முதலியவற்றால் தோன்றிய அதிஸாரத்திற்கு எண்ணெய் பசையைத் தோற்றுவிக்கும் மருந்துப் பொருள்களால் சிகிச்சை செய்யத்தகும். எண்ணெய்ப்பசை மிக்க உணவு, பழக்க வழக்கங்களால் தோன்றிய அதிஸாரத்திற்கு வறட்சித் தன்மை கொண்ட பொருள்களால் சிகிச்சை செய்ய வேண்டும். மிகவும் அச்சம் கொள்வதால் தோன்றிய அதிஸாரத்திற்கு ஆறுதல் மொழிகளால் தைரியம் ஊட்டும் வகையில் மனத்தைத் தேறுதல் பெறச் செய்ய வேண்டும். (மக்கள் இழப்பு முதலியவற்றால் தோன்றிய) மிக்க வருத்தத்தால் தோன்றிய அதிஸாரத்திற்கு அந்த வருத்தத்தைப் போக்கும் உத்திகளைக் கொண்டு சிகிச்சை செய்ய வேண்டும். நச்சுத் தன்மை கொண்ட பொருள்களால் தோன்றிய அதிஸாரத்திற்கு நஞ்சைப் போக்கும் முறைகளாலும், மூல நோயால் தோன்றிய அதிஸாரத்திற்கு அந்நோயைத் தணிக்கும் முறைகளாலும், கிருமிகளால் தோன்றி அதிஸாரத்திற்கு கிருமிகளை அழிக்கும் பொருள்களாலும் சிகிச்சை செய்ய வேண்டும். இம்முறைகளுடன் அதிஸாரத்தைத் தணிக்கும் சிகிச்சைகளைக் கலந்தே பயன்படுத்த

வேண்டும் இத்தகைய சிகிச்சை முறையால் நன்மை விளைவிக்கும் அதிஸார நோயில் உபத்திரவமாகத் தோன்றும், வாந்தி, நினைவிழத்தல், மிக்க நாவறட்சி முதலியவற்றிற்கு அதிஸார நோய்க்குக் கூடாத முறைகளைத் தவிர்த்தே தக்க முறை அறிந்து சிகிச்சை செய்ய வேண்டும். *159-160*

## 106. அதிஸார, நோய்க்குத் தோஷத்திற்கு ஏற்ப சிகிச்சை

காய்ச்சலுடன் கூடிய அதிஸாரத்தில், மூன்று தோஷங்களும் சேர்ந்தோ, எவையேனும் இரண்டு தோஷங்கள் சேர்ந்தோ, தோன்றும் அதிஸார நோய்களில் முதலில் பித்தத்தை தணிக்கும் முறையைக் கையாள வேண்டும். காய்ச்சல் மற்றும் அதிஸாரத்தைத் தவிர்த்து வேறு நோய்களில் மூன்று அல்லது இரண்டு தோஷங்கள் கலந்திருந்தால் முதலில் வாதத்தைத் தணிக்கும் முறையைக் கையாளவேண்டும். *161*

## 107. அதிஸாரம் தணிந்த அறிகுறிகள்

அதிஸார நோயாளிக்குச் சிகிச்சை செய்த பிறகு அல்லது உடல் நலம் கொண்டு உள்ளவனுக்கு சிறுநீரும், அபானவாயுவும் வெளி வராமல் மலம் வெளிப்படுமானால், சடராக்னி வலிமை கொண்டி ருக்குமானால், வயிறு லேசாக இருக்குமானால் அதிஸாரம் முதலான வயிற்று நோய் தீர்ந்ததாக அறிய வேண்டும். *162*

## 108. மூன்று வகையான நோய்கள்

சில நோய்கள் முற்பிறவி வினைப் பயனாகத் தோன்றும். சில நோய்கள் வாத பித்த கபங்கள் எனும் தோஷங்கள் சீற்றம் பெறுவ தால் தோன்றும். மேலும் சில முற்பிறவி வினை மற்றும் தோஷங் களின் சீற்றம் எனும் இரண்டு சேர்ந்ததால் தோன்றும். இவற்றில் வினை காரணமாகத் தோன்றும் நோய் உடலுக்குள் தோஷம் சீற்றம் அடையாமலும், புறக்காரணங்களான நஞ்சு, கிருமிகள் முதலியன வற்றின் தொடர்பு இல்லாமலும் தோன்றக் கூடும். *163*

## 109. நோய் தோன்றிய காரணத்திற்கு ஏற்ப சிகிச்சை

முற்பிறவி தீ வினையின் பயனாகத் தோன்றும் நோய் மருந்து களால் தீராது. தக்க கழிவிடை, மந்திரசபம், ஓமம் செய்தல் முதலிய

வற்றால் வினையைத் தீர்த்துக் கொள்வதால்தான் தணிக்க முடியும். தோஷங்களால் தோன்றிய நோய்களுக்கு அந்தந்த தோஷங்களைத் தணிக்கும் முறைகளைக் கையாண்டு சிகிச்சை செய்தால் அவை தணியும். 164–165

சிறிய காரணங்களால் தோன்றியதாயினும் மிகுந்த துன்பத்தை விளைவித்தாலும், அல்லது வெகு தோஷங்களால் தோன்றியும் நோய் குறைந்த அளவில் துன்பம் தந்தாலும் அந்நோய்வினையின் பயனாகத் தோன்றியது என்று உணர்க. அவற்றிற்கு வினையைப் போக்கும் முறைகளோடு தோஷங்களைத் தணிக்கும் முறைகளையும் சேர்த்தே சிகிச்சை செய்ய வேண்டும். அதாவது யக்ஞம், தானம், மந்திரம், பலி வழங்குதல், காணிக்கை செலுத்துதல், சூரியன் முதலான தேவதைகளை வழிபடுதல், குரு போன்ற முதியவர்களை வணங்குதல் முதலியவற்றால் வினையையும், எண்ணெய்ப் பசை தோற்றுவித்தல், வாந்தி எடுக்கச் செய்தல், பேதியாகச் செய்தல் போன்ற தகுந்த சிகிச்சை முறைகளைக் கொண்டு தோஷங்களையும் நீக்க வேண்டும். இவ்வாறு வினையையும், தோஷத்தின் சீற்றத்தையும் நீக்குவதால் வினையாலும், தோஷத்தாலும் தோன்றிய நோய் தணியும். 165

## 110. கிரகணி நோய் விளக்கம்

செரிமானத்தைத் தோற்றுவிக்கும் பாசகாக்னியைக் குறைக்கும் காரணங்களால் கிரகணி எனும் நோய் தோன்றும். அதிஸார நோய் தணிந்த பிறகு (அல்லது அந்நோய் தோன்றாத போதும்) சடராக்கினி வலிமை குறைந்துள்ள நோயாளிக்கு கூடாத உணவு உட்கொள்ளுதல், தகாத செயல்களைப் புரிதல் என்பனபவற்றால் அந்நோயாளியின் பாசகாக்னி (உணவை செரிமானமடையச் செய்யும் உடல்) வெப்பம் கோளாறு பெற்று ஸங்கிரகணி எனும் நோயைத் தோற்றுவிக்கும். எனவே அதிஸார நோய்கொண்ட போதும், அந்நோய் நீங்கிய பிறகும் அந்நோயாளிக்கும் அல்லது சடராக்கினியும், பிராண சக்தியும் வலிமை குறைந்துள்ளவனுக்கும் இயற்கையான வலிமை பெறும் வரை பேதியாகச் செய்தவனுக்குப் போலப் பத்திய முறைகளைக் கையாளச் செய்ய வேண்டும்.

166–168

## 111. கிரகணி என்பதன் விளக்கம்

வயிற்றுக்கும், பக்குவாசயத்திற்கும் (பெருங்குடலுக்கும் உணவுப்பைக்கும்) இடையில் இருப்பதும், பித்தத்தைத் தாங்குவதும் ஆன ஆறாவது கலையான பித்ததரை என்பது கிரகணி எனும் பெயர் கொண்ட உறுப்பாகும். 169

கிரகணி எனும் உறுப்பின் வலிமை உஷ்ணமாகும். அந்த அக்னி (வெப்பம்) கிரகணியைச் சார்ந்து இருக்கும். அந்த அக்னி வலிமை குறைந்து போனால் கிரகணி எனும் கலையும் கேடுறும். 170

## 112. கிரகணி நோய் வகைகள்

வாதத்தால் தோன்றியது, பித்தத்தால் தோன்றியது, கபத்தால் தோன்றியது, மூன்று தோஷங்களும் கலந்துள்ளதால் தோன்றியது எனக் கிரகணி நோய் நான்கு வகைப்படும். மிகவும் சீற்றமடைந்த இந்தத் தோஷங்களால் கொடுக்கப்பட்ட கிரகணி உண்ட உணவைச் சரியாகப் பக்குவம் செய்ய இயலாமல் ஆமம் (பக்குவம் பெறாத) என்பதன் தோற்றத்தில் வெளியேற்றும். 171

தோஷங்களால் கேடுற்ற கிரகணி உண்ட உணவைச் சில சமயம் பக்குவம் செய்தும், சில சமயம் பக்குவம் செய்யாமலும் பல முறை மலமாக வெளியேற்றும். அவ்வாறு மலம் கழிக்கும்போது வயிற்றில் துன்பமும் உண்டாகும். மலத்தில் கெட்ட நாற்றமும் தோன்றும். சில நேரங்களில் இம்மலம் கட்டியாகவும், சில நேரங்களில் நீர்த்தன்மை கொண்டும் வெளிப்படும். இத்தகைய நோயை ஆயுர்வேதம் அறிந்த மருத்துவர் 'கிரகணி நோய்' என்பர். 172

## 113. கிரகணி நோய் இலக்கணம்

கிரகணி நோய் தோன்றிய போது உணவில் எரிச்சல், உடல் உறுப்புகளில் தளர்ச்சி, சோம்பல், நாவறட்சி, சோர்வு உடல் வலிமை குறைதல், உணவில் சுவையின்மை, இருமல், காதுகளில் ஒலி தோன்றுதல், குடல் இரைச்சல் போன்ற இலக்கணங்கள் காணப்படும். 173

கிரகணி நோய் தோன்றியதும் நோயாளியின் கால் கைகளில் வீக்கம் தோன்றும் எல்லா வகையான சுவைகளிலும் விருப்பம் (ஆசை) உண்டாகும். நாவறட்சி காணப்படும். அவ்வப்

பொழுது வாந்தியும் உண்டாகும். காய்ச்சலும் தோன்றும். வாய் சுவையின்றி இருக்கும். உடல் முழுவதிலும் எரிச்சல் காணப்படும். வாயில் நீர்ப்பெருக்கம், புளியேப்பம், தோன்றும். வாயிலிருந்து காய்ச்சிய இரும்பை நீரில் முக்கும்போது தோன்றும் மணம் உணவுப் பொருள் அழுகிப் போனால் மணம் கொண்டு காற்று வீசும். அல்லது அத்தகைய உமிழ் நீர் பெருகும். வாய்ச்சுவை கெடும். தமகசுவாசமும், சுவையின்மையும் காணப்படும். 174–175

## 114. வாதம் முதலியவற்றாலான கிரகணி இலக்கணம்

கிரகணி நோயில் வாதம் சீற்றமுற்றிருந்தால் ஆஸனவாய், இதயம், விலாப்பகுதி, வயிறு, மூளை போன்ற உறுப்புகளில் வலி தோன்றும். பித்தம் மிகுந்திருந்தால் எரிச்சல், கபம் மிகுதியாகக் காணப்பட்டால் உடல் பருவாகத் தோன்றும். மூன்று தோஷங் களும் சீற்றம் பெற்றிருந்தால் மூன்று தோஷங்களின் இலக்கணங் களும் கலந்து தோன்றும். 176

## 115. கிரகணி நோயில் மருத்துவன் இதய நோய் முதலியனவாக மருள் கொள்ளுதல்

வாதம், பித்தம், கபம் எனும் தோஷங்களின் நிறங்களுக்கு ஏற்ப நோயாளியின் நகத்தில் நிறம் தோன்றும், அவ்வாறே மலம், சிறுநீர், கண்கள், முகம் ஆகியவற்றில் நிறத்தையும் கவனித்து கிரகணி நோய் என்பதை மருத்துவன் உறுதிப்படுத்திக் கொள்ள வேண்டும். ஏனெனில், சில இடங்களில் இந்நோயில் இதய நோய், பாண்டு, வயிற்று நோய், குன்மம், மூலம், மண்ணீரல் வீக்கம் எனும் ஐயப்பாடு உண்டாக்கக் கூடும் 117

## 116. கிரகணி நோய்க்குச் சிகிச்சை

வாதம் முதலான சீற்றமுற்ற தோஷத்திற்கு ஏற்ப அதாவது வாதம் சீற்றமுற்றபோது நிரூஹணவஸ்தி, பித்தம் சீற்றமுற்ற போது மென்மையான மருந்துகளால் பேதியாகச் செய்தல், கபம் மிகுந்துள்ள போது வாந்தி எடுக்கச் செய்தல் எனும் முறைகளால் தூய்மைப்படுத்தி முறையே பஞ்சகோலம், கொடி வேலி முதலான [illegible]மானத்தைத் தூண்டும் முறைகளாலான கஷாயம் (கஞ்சி [illegible]ளான) பேயா விலேபி யூஷம் முதலியவற்றுடன் உணவு

செய்து உண்ணக் கொடுக்க வேண்டும். பிறகு மஞ்சள் முதலான பாசன (செரிமானத்தைத் தூண்டும்) கூட்டுப் பொருள், அம்பஷ்டாதி (மலத்தைக் கட்டும்) ஸங்கிராஹிக் கூட்டுப் பொருள், திப்பிலி முதலான சடராக்னியைத் தூண்டும் பொருள் முதலியவற்றாலான கஷாயம், அல்லது தூள் செய்து தோஷம், காலம் நோயாளிக்கு உடலுக்கு ஒவ்வுதல் (பழக்கமானது) முதலியவற்றையும் ஆராய்ந்து சுரை (மதுவகை) ஆஸவம், அரிஷ்டம், நெய், எண்ணெய், பசு, ஆடு முதலியவற்றின் சிறுநீர், இளஞ்சூடுள்ள நீர் போன்றவற்றில் ஏதேனும் ஒன்றுடன் காலை வேளையில் உட்கொள்ளச் செய்க. அல்லது கூறிய மூவகைக் கூட்டுப் பொருள்களில் தகுந்த ஒருவகைப் பொருள்களின் தூளை மோருடன் உட்கொள்ளச் செய்க. அல்லது கூட்டுப் பொருள்களின் தூள் ஏதும் இன்றி மோரை மட்டும் பருகச் செய்தல் கிரகணி நோயில் மிகவும் நன்மை தரும். மற்றும் கிருமி நோய், குன்ம நோய், வயிற்று நோய், மூல நோய் போன்றவற்றைத் தணிக்கும் முறைகளும் பயன்படுத்தத் தக்கவையாகும். *178–180*

மகாவாத வியாதி பிரகரணத்தில் கூறிய ஹிங்க்வாதி சூர்ணம் அல்லது மண்ணீரல் நோயைப் போக்கவல்ல ஷட்பலகிருதம் எனும் மருந்தை அதிஸாரம், பிரவாஹிகை, ஸங்கிரகணி எனும் நோய்களிலும் நன்மை தரவல்லவையாகக் கூறப்பட்டுள்ளது. *181*

## 117. சாங்கேரீ கிருதம்

திரவிய ஸங்கிரகணீய அத்தியாயத்தில் கூறிய திப்பிலி முதலான கூட்டுப் பொருள்களின் விழுது 4 பலம், நெய் 16 பலம், புளியாரைக் கீரையின் சுரசம் 64 பலம் எனச் சேர்த்து நன்கு நெய் மருந்து செய்க. இந்த நெய் மருந்து (சாங்கேரீ கிருதம்) அதிஸாரம், பிரவாஹிகை, ஸங்கிரகணீ எனும் நோய்கள் கொண்டவர்களுக்கு மிகவும் நன்மை தருவதாகும்.

பாசகாக்கினியை (செரிமானமாக்கும் உடல் வெப்பத்தை) மிகச் செய்யும் உணவு வகைகள், குடிநீர் வகைகள் ஸங்கிரகணி நோயிலும் நன்மை விளைவிக்கும். *183–184*

**சிறுங்கட்டூர், நடாதூர் எஸ்.என். ஸ்ரீராமதேசிகன் எழுதிய**
**அஷ்டாங்கஹ்ருத ஸம்ஹிதை உத்தரஸ்தானம் தமிழாக்க நூலின்**
**அதிஸாரபிரதிஷேதம் எனும் நாற்பதாம் அத்தியாயம்**
**முற்றும்**

# சோஷபிரதிஷேதம்

# எனும்

## நாற்பத்தொன்றாம் அத்தியாயம்

### 1. க்ஷய நோய் தோன்றுதல்

இனி க்ஷயம் எனும் நோய்க்கு உரிய சிகிச்சை முறைகளை ஸுசுருதர் முதலான சீடர்களுக்கு தந்வந்தரி பகவான் உபதேசம் செய்த முறையை விளக்குகிறோம்.

பல நோய்களுக்குத் தான் காரணமாகவும், பல நோய்களைத் தனக்கு முற்குறிகளாகவும் கொண்டு எளிதில் தன்னை அறிந்து கொள்ள இலயாத வகையில் உள்ளதாக மிகவும் சிரமப்பட்டுச் சிகிச்சை செய்வதாலும் தீர்க்க இயலாததாகி மிக்க வலிமை கொண்ட நோய் ஆகையால் சோஷம் எனும் க்ஷயம் நோய்களுக்கு அரசனைப் போன்றதாகக் கூறப்படுகிறது.

### 2. சோஷம் எனும் பெயர்க் காரணம்

இரசம், இரத்தம் முதலான தாதுக்களை உலர்ந்து போகச் செய்துவிடுவதால் இந்நோய் சோஷம் எனப்பட்டது. உடலின் உள்ளுறுப்புகளின் செயல்களையும், புற உறுப்புகளின் செயல் களையும் அழித்து விடுவதால் க்ஷயம் எனும் பெயர் கொண்ட தாயிற்று. 4-5

**சோஷம் க்ஷயம் (T.B.) அந்நோய்க்கு உரிய சிகிச்சையின் விளக்கம் கொண்டிருப்பதால் இந்த அத்தியாயம் சோஷ பிரதிஷேதம் எனும் பெயர் பெற்றது.**

### 3. ராஜயக்ஷ்மா வகைகள்

வேறு வேறு தோஷங்களின் தொடர்பால் பலவகையான ராஜ யக்ஷ்மா எனும் க்ஷய நோய் தோன்றும் என மருத்துவ ஆசிரியர்கள் சிலர் வகைப்படுத்துகின்றனர். 6

### 4. சோஷநோய் ஒன்றே என அறுதியிடல்

வாதம், பித்தம், கபம் எனும் தோஷங்களால் தோன்றும் குரல் மாறுபாடு, வலி முதலான பதினொன்று இலக்கணங்களைக் கொண்டது இந்நோய். இதற்கு உரிய சிகிச்சை முறையையும் (வாதபித்தம் முதலான தனித்தனிவகைகளுக்கு எனக் கூறாமல்) ஒரே வகையைக் கூறியுள்ளன. முன்காலத்தில் பிரஜாபதி எனும் பிரும்மா வின் சினத்தால் ஒரேவகையான ராஜயக்ஷ்மா நோய் தோன்றியது. ஆகவே, மூன்று தோஷங்களும் சீற்றமுறுவதால் தோன்றும் க்ஷய நோய் வகை ஒன்றே என்றும், மூன்று தோஷங்களின் சீற்றத்தால் வேறு வேறு இலக்கணங்கள் ஒன்றுகூடி இந்நோயில் தோன்று கின்றன எனவும் அறிக. 7–8

### 5. க்ஷய நோய் தோன்றக் காரணம்

பலவேறு காரணங்களால் வாத பித்த கபங்கள் சீற்றம் கொண்டு உடலில் பரவுதலால் ரசம் முதலாக விந்து வரை உள்ள தாதுக்ககள் குறைந்து போவதாலும், வாதம், சிறுநீர், மலம் முதலானவற்றின் வேகத்தைத் தடுத்து அடக்கிக் கொள்வதாலும், தன் உடல் வலிமைக்கும் மன வலிமைக்கும் மீறிய செயல்களைத் துணிச்ச லுடன் செய்வதாலும், மனம் தாக்குதலுக்கு உட்படுவதாலும், உடலுக்கு ஒவ்வாத ஒன்றுக்கொன்று மாறான தன்மை கொண்ட உணவுப் பொருள்களைக் கலந்து உண்பதாலும் க்ஷயம் எனும் நோய் தோன்றும். 9

### 6. க்ஷய நோய் தோன்றுதல்

**கபத்தை முன்னிலையில் கொண்ட தோஷங்களால் ரசத்தைத் தாங்கும் ஸ்ரோதஸ்கள் தடைபட்டு விடுவதால் அல்லது அளவுக்கு மீறிக் கலவியில் ஈடுபடுவதால் விந்து குறைந்து போவதால் மற்ற தாதுக்களும் குறைந்து விடுவதால் உடல் நாளுக்கு நாள் உலர்ந்து போகத் துவங்கும்.** 10

# சோஷபிரதிஷேதம்

# எனும்

## நாற்பத்தொன்றாம் அத்தியாயம்

### 1. க்ஷய நோய் தோன்றுதல்

இனி க்ஷயம் எனும் நோய்க்கு உரிய சிகிச்சை முறைகளை ஸுசுருதர் முதலான சீடர்களுக்கு தந்வந்தரி பகவான் உபதேசம் செய்த முறையை விளக்குகிறோம்.

பல நோய்களுக்குத் தான் காரணமாகவும், பல நோய்களைத் தனக்கு முற்குறிகளாகவும் கொண்டு எளிதில் தன்னை அறிந்து கொள்ள இலயாத வகையில் உள்ளதாக மிகவும் சிரமப்பட்டுச் சிகிச்சை செய்வதாலும் தீர்க்க இயலாததாகி மிக்க வலிமை கொண்ட நோய் ஆகையால் சோஷம் எனும் க்ஷயம் நோய்களுக்கு அரசனைப் போன்றதாகக் கூறப்படுகிறது.

### 2. சோஷம் எனும் பெயர்க் காரணம்

ரசம், இரத்தம் முதலான தாதுக்களை உலர்ந்து போகச் செய்துவிடுவதால் இந்நோய் சோஷம் எனப்பட்டது. உடலின் உள்ளுறுப்புகளின் செயல்களையும், புற உறுப்புகளின் செயல் களையும் அழித்து விடுவதால் க்ஷயம் எனும் பெயர் கொண்ட தாயிற்று. 4-5

**சோஷம் க்ஷயம் (T.B.) அந்நோய்க்கு உரிய சிகிச்சையின் விளக்கம் கொண்டிருப்பதால் இந்த அத்தியாயம் சோஷ பிரதிஷேதம் எனும் பெயர் பெற்றது.**

### 3. ராஜயக்ஷ்மா வகைகள்

வேறு வேறு தோஷங்களின் தொடர்பால் பலவகையான ராஜ யக்ஷ்மா எனும் க்ஷய நோய் தோன்றும் என மருத்துவ ஆசிரியர்கள் சிலர் வகைப்படுத்துகின்றனர். 6

### 4. சோஷநோய் ஒன்றே என அறுதியிடல்

வாதம், பித்தம், கபம் எனும் தோஷங்களால் தோன்றும் குரல் மாறுபாடு, வலி முதலான பதினொன்று இலக்கணங்களைக் கொண்டது இந்நோய். இதற்கு உரிய சிகிச்சை முறையையும் (வாதபித்தம் முதலான தனித்தனிவகைகளுக்கு எனக் கூறாமல்) ஒரே வகையைக் கூறியுள்ளன. முன்காலத்தில் பிரஜாபதி எனும் பிரும்மா வின் சினத்தால் ஒரேவகையான ராஜயக்ஷ்மா நோய் தோன்றியது. ஆகவே, மூன்று தோஷங்களும் சீற்றமுறுவதால் தோன்றும் க்ஷய நோய் வகை ஒன்றே என்றும், மூன்று தோஷங்களின் சீற்றத்தால் வேறு வேறு இலக்கணங்கள் ஒன்றுகூடி இந்நோயில் தோன்று கின்றன எனவும் அறிக. 7–8

### 5. க்ஷய நோய் தோன்றக் காரணம்

பலவேறு காரணங்களால் வாத பித்த கபங்கள் சீற்றம் கொண்டு உடலில் பரவுதலால் ரசம் முதலாக விந்து வரை உள்ள தாதுக்ககள் குறைந்து போவதாலும், வாதம், சிறுநீர், மலம் முதலானவற்றின் வேகத்தைத் தடுத்து அடக்கிக் கொள்வதாலும், தன் உடல் வலிமைக்கும் மன வலிமைக்கும் மீறிய செயல்களைத் துணிச்ச லுடன் செய்வதாலும், மனம் தாக்குதலுக்கு உட்படுவதாலும், உடலுக்கு ஒவ்வாத ஒன்றுக்கொன்று மாறான தன்மை கொண்ட உணவுப் பொருள்களைக் கலந்து உண்பதாலும் க்ஷயம் எனும் நோய் தோன்றும். 9

### 6. க்ஷய நோய் தோன்றுதல்

**கபத்தை முன்னிலையில் கொண்ட தோஷங்களால் ரசத்தைத் தாங்கும் ஸ்ரோதஸ்கள் தடைபட்டு விடுவதால் அல்லது அளவுக்கு மீறிக் கலவியில் ஈடுபடுவதால் விந்து குறைந்து போவதால் மற்ற தாதுக்களும் குறைந்து விடுவதால் உடல் நாளுக்கு நாள் உலர்ந்து போகத் துவங்கும்.** 10

## 7. க்ஷய நோய்க்கு முற்குறிகள்

மேல் மூச்சு வாங்குதல், உடலுறுப்புகளில் வலி, வாயிலிருந்து மிகுதியாகக் கபம் வெளிவருதல், உள்தாடை அண்ணப் பகுதிகள் உலர்ந்து போதல், வாந்தி, சடராக்னிக் குறைவு, வெறி,விடாத ஜலதோஷம், இருமல், மிக்க உறக்கம் என்பன க்ஷய நோய்க்கு முற்குறிகளாகும். இரத்தம் குறைந்து போவதால் நோயாளியின் கண்கள் வெளிறியிருக்கும். புலால் உணவிலும், கலவி புரிவதிலும் விருப்பம் மிகுந்திருக்கும். மற்றும் அந்நோயாளியின் கனவில் தான் காகம், கிளி, மயில், கழுகு, குரங்கு, ஓணான் முதலியவற்றின் மீது ஏறிச் செல்வது போன்ற காட்சிகள் காணப்படும். ஆறுகள் நீர்வற்றிக் காணப்படும். மரங்கள் இலை உதிர்ந்து பட்டுப் போனவை போன்ற காட்சி கனவில் காணப்படும். சுழற்காற்று, புகை, பெருந்தீ சூழ்ந்திருப்பது போன்ற காட்சிகளைக் கனவில் காண்பான். *11–12*

## 8. க்ஷய நோய் இலக்கணம்

உணவில் விருப்பமின்மை, காய்ச்சல், மேல்மூச்சு, இருமல், உமிழ்நீரில் இரத்தம் வெளிப்படுதல், குரல் மாறுபடுதல் என்பன ஆறும் க்ஷய நோய்க்கு இலக்கணங்களாகும். *13*

## 9. தோஷங்களைச் சார்ந்து காணப்படும் இலக்கணங்கள்

வாதத்தால் குரல் மாறுபாடு, வலி, பிடரி விலாப் பகுதிகளில் சுருக்கம், பித்தத்தால் காய்ச்சல், அழற்சி, அதிஸாரம், உமிழ்நீரில் இரத்தம் வெளிப்படுதல் தலை கபத்தால் நிரம்பியிருத்தல், உணவில் விருப்பம் இன்மை, இருமல், தொண்டையில் அரிப்பு என மூன்று தோஷங்களால் பதினொன்று இலக்கணங்கள் க்ஷய நோயில் தோன்றும். *14–15*

## 10. சிகிச்சையால் தீர்க்க இயலாத க்ஷய நோய் இலக்கணம்

முன்கூறிய பதினொன்று இலக்கணங்களும் கொண்டது, அல்லது இருமல், அதிஸாரம், விலாவலி, குரல் மாறுபாடு, சுவை யின்மை, காய்ச்சல் எனும் ஆறு இலக்கணங்களைக் கொண்டது, அல்லது இருமல் இழுப்பு, உமிழ் நீரில் இரத்தம் கலந்து வெளிப் படுதல் எனும் மூன்று இலக்கணங்களையும் கொண்டதுமான க்ஷய

நோய்க்கு புகழை விரும்பும் மருத்துவன் சிகிச்சையை மேற்கொள்ளக் கூடாது. 16-17

அதிக அளவில் அல்லது நிறைவாக உணவு உட்கொண்டு வந்தாலும் உடல் இளைத்துக் கொண்டிருக்குமானால், அதிஸாரம் தோன்றினால், விதைகளில், வயிற்றில் வீக்கம் காணப்பட்டால் அத்தகைய கூடிய நோய் கொண்டவனுக்குச் சிகிச்சை செய்யக் கூடாது. (செய்வதால் எத்தகைய பலனும் விளையாது என்பதாம்.) 18

## 11. மிக்க வலிமை கொண்ட க்ஷயம்

இரத்தம் குறைந்து போவதால் கண்கள் வெளிறியவனும், உணவில் வெறுப்பு கொண்டவனும் மேல்மூச்சு வாங்குவது மிகுதியாகக் காணப்பட்டவனும், மிக்க சிரமப்பட்டு அதிக அளவில் சிறுநீர் கழிப்பவனும் ஆனபோது நோயாளியை இந்நோய் கொன்று விடும். 19

## 12. சிகிச்சைக்கு உட்படும் க்ஷய நோய்

காய்ச்சல் தொடர்ந்து இல்லாமை, உடல் வலிமை மனவலிமை கொண்டிருத்தல், கடுமையான வீரியம் கொண்ட மருந்துகளையும், தூய்மைப்படுத்தும் ஐவகை சிகிச்சைகளையும் பொருத்துக் கொள்ளக் கூடிய நிலை, புலன் அடக்கம், சடராக்னி நன்கு விளங்குதல், மாமிசம் முதலிய தாதுக்கள் இளைக்காமை, ஆகியவற்றுடன் கூடியவனுக்குத் தோன்றிய க்ஷய நோயைச் சிகிச்சையால் தீர்க்க முயலும். 20

## 13. வேறு கொள்கைப்படி க்ஷய இலக்கணம்

அளவுக்கு மீறி கலவியில் ஈடுபடுதல் மிக்க வருத்தம், முதுமை, அளவுக்கு மீறிய உடற்பயிற்சி வெகுதொலைவு நடத்தல், பட்டினி கிடத்தல், விரணம், மார்பு தாக்கப்படுவதால் துன்புறுதல், எனும் இவற்றால் க்ஷய நோய் தோன்றும் என வேறு மருத்துவ நூலாசிரியர் கூறுகிறார். 21

## 14. [1]வியவா சோஷி இலக்கணம்

அளவுக்கு மீறிக் கலவியில் ஈடுபடுவதால் தோன்றிய க்ஷய நோயால் துன்புறுபவன் மருத்துவ நூலில் விந்து அழிவதால்

1. வியவாயம் - கலவி அதனால் க்ஷய நோய் கொண்டவன் வியவா சோஷி.

தோன்றுவதாகக் கூறிய இலக்கணங்களுடன் பாண்டு நோய் கொண்டு காணப்படுவான். இந்நோய்க்கு முற்குறியாக தாதுக்கள் குறைந்து கொண்டே வரும். 22

### 15. சோக சோஷி இலக்கணம்

தாங்க முடியாத வருத்தம் கொள்வதால் தோன்றும் க்ஷய நோயால் துன்புறுபவன் எப்போதும் ஏதோ தியானத்தில் மூழ்கி இருப்பான். அவனுடைய கைகால் முதலான உறுப்புகள் தளர்ந்து காணப்படும். விதை ஆண்குறி முதலியவற்றில் வலி என்பதைத் தவிர்த்து மற்றும் உடல் வெளிறிப்போதல் முதலான வியவாய சோஷிக்கு உரிய இலக்கணங்களைக் கொண்டிருப்பான். 23

### 16. ஜரா [1]சோஷி இலக்கணம்

முதுமை மிகுவதால் தோன்றிய க்ஷயநோய் கொண்டவன் உடல் மிகவும் இளைத்திருக்கும். உடல் வலிமை, அறிவாற்றல், வீரியம், புலன்கள் முதலியன வலிமையற்றுக் காணப்படும். உடல்நடுக்கம் கொள்ளும். உணவில் விருப்பம் இருக்காது. குரல் உடைந்த வெண்கலப் பாத்திரத்தின் ஒலியைப் போல இருக்கும். கபம் இன்றியே நோயாளி எச்சிலைத் துப்பிக் கொண்டிருப்பான். சளி இன்றியே மேல் மூச்சு வாங்கிக் கொண்டிருக்கும். உடல் பளுவாகத் தோன்றும். எந்தச் செயலும் புரிவதில் விருப்பம் தோன்றாது. வாய், கண், மூக்கு ஆகியவற்றிலிருந்து நீர் பெருக்கிக் கொண்டிருக்கும். அவனுடைய மலம் வறண்டு உலர்ந்து இருக்கும். உடற்பொலிவும் குறைந்து உடல் வறண்டு காணப்படும். 24-25

### 17. [2]அத்வ சோஷி இலக்கணம்

வெகு தொலைவு வழி நடப்பதால் சோஷ நோய் கொண்டவனின் உடல் உறுப்புகள் மிகத் தளர்ந்து காணப்படும். முகப்பொலிவு உலர்ந்து வறண்டு காணப்படும். கால் கை போன்ற

---

1. ஜரா – முதுமை. அதனால் தோன்றும் க்ஷய நோய் கொண்டவன் ஜரா சோஷி
2. அத்வசோஷி – வெகு தொலைவு வழிநடப்பதால் தோன்றிய க்ஷய நோய் கொண்டவன்;

உறுப்புகள் தொடு உணர்ச்சி அற்றவையாகக் காணப்படும். அவனுடைய மண்ணீரல், தொண்டை, வாய் போன்ற உறுப்புகள் மிகவும் உலர்ந்து போய் இருக்கும். 26

## 18. [1]வியாயாம சோஷி இலக்கணம்

அளவுக்கு மீறி உடற்பயிற்சி செய்வதால் தோன்றிய சோஷ நோய் கொண்டவன், வழிநடையால் தோன்றிய க்ஷய நோய்க்குக் கூறிய இலக்கணங்கள் மிகுதியாகக் கொண்டிருப்பான். காயம் தவிர மற்ற மார்பு தாக்கப்படுவதால் தோன்றிய க்ஷய நோய் இலக்கணங்களையும் கொண்டிருப்பான். 27

## 19. [2]விரண சோஷி இலக்கணம்

உடலில் விரணம் தோன்றியதால் இரத்தப்பெருக்கு மிகுந்து க்ஷய நோய் கொண்டவன் விரணத்தால் தோன்றிய துன்பத்தாலும், உணவுக் கட்டுப்பாடு (கடுமையான பத்திய முறை) காரணமாகவும் உணவின் அளவு குறைந்து போவதால் க்ஷய நோய் தோன்றியவனாகிறான். இது சிகிச்சைக்கு உட்படாத நோயாகும். 28

## 20. [3]உரக்ஷத்தால் தோன்றும் சோஷ நோய் இலக்கணம்

அளவுக்கு மீறிய உடற்பயிற்சி, மிக்க சுமையைத் தாங்குதல், உரக்க வெகுநேரம் வாசித்தல், (உறக்கத்தில்) பிறருக்குப் பாடம் சொல்லிக் கொடுத்தல், அடிபடுதல், அளவுக்கு மீறிக் கலவியில் ஈடுபடுதல், மார்புப் பகுதியைத் தாக்கக் கூடிய வில்லில் நாண் ஏற்றி இழுத்தல், போன்றவற்றால் மார்புப் பகுதி சிதைவுறும். மார்பில் விரணம் தோன்றும். அதிலிருந்து இரத்தம், சீழ், கபம் ஆகியவை பெருகும். அந்நிலையில் இருமல் தோன்றினால் வாந்தியாகும். வாந்தியில் மஞ்சள், சிவப்பு, கறுப்பு, கிறுஞ்சிவப்பு நிற திரவம் வெளிப்படும். வாந்தியில் இந்த நிறங்களைக் கொண்ட பொருள்கள் காணப்படும். மார்பில் மிக்க எரிச்சல் தோன்றும். அழற்சியும் துன்பமும் மிகுந்து நோயாளி நினைவிழந்து கிடப்பான். அவனுடைய வாயிலும், மூச்சிலும் கெட்ட நாற்றம் வீசிக்கொண்டிருக்கும்.

---

1. வியாயாமம் - உடற்பயிற்சி விரணசோஷி; 2. விரணத்தால் தோன்றிய க்ஷய நோய் கொண்டவன் விரணசோஷி; 3. உரக்ஷதம் - மார்பு தாக்கப்படுதல்.

அவனுடைய தொண்டையிலிருந்து வெளிவரும் சொற்களும், குரலும் உடைந்தவையாகத் தோன்றும். 29–31

## 21. வேறு ஆசிரியர்கள் சிலரின் கொள்கை

அளவுக்கு மீறிய கலவியால் தோன்றும் சோஷம் முதலானவை வேறு வேறு காரணங்களால் தோன்றுவன ஆகையால் இவை சோஷம் எனும் க்ஷய நோய் வகைகளாகும் எனச்சில மருத்துவ நூல் ஆசிரியர்கள் கூறுகின்றனர். ஆனால் ஸுசுருதருடைய கருத்து பின்வருமாறு : இந்த ஏழுவகை சோஷ நோய்களில் ராஜயக்ஷ்மாவுக்குக் கூறிய மூன்று தோஷங்களாலும் தோன்றும் பதினொன்று இலக்கணங்கள் காணப்படவில்லை. ஆகையால் இவை ஏழும் தாது க்ஷயம் என்பதைச் சேர்ந்த நோய்களே அன்றி ராஜ யக்ஷ்மாவின் வகைகளாக இவற்றிற்குத் தக்க சிகிச்சை முறைகள் தோஷதாது மல க்ஷய விருத்தி விஞ்ஞானீயம் எனும் அத்தியாயத்தில் கூறப்பட்டுள்ளன. 32–33

## 22. ராஜயக்ஷ்மாவுக்குப் பொது சிகிச்சை

முதன்முதலில் யக்ஷ்மா எனும் இந்நோய்க்கு ஸ்திராதி கணக்கூட்டுப் பொருள்களாலான விழுது மற்றும் கஷாயம் கலந்து ஆடு அல்லது செம்மறியாட்டு நெய்யுடன் கூடிய மருந்தால் எண்ணெய்ப் பசை உண்டாக்கி மென்மையான மருந்துப் பொருள்களால் நோயாளியின் உடலின் மேற்பகுதி, கீழ்ப் பகுதிகளைத் தூய்மைப்படுத்தும் (பேதியாகச் செய்தல், வாந்தி எடுக்கச் செய்தல் எனும்) முறைகளைப் பயன்படுத்த வேண்டும். பிறகு ஆஸ்தாபன வஸ்தி முறையையும், சிரோவிரேசன முறையையும் பயன்படுத்துக. இவ்வாறு ஒவ்வொரு தூய்மைப்படுத்தும் முறையைப் பயன்படுத்தியதும் பசி தோன்றியபோது யவதானியக் கஞ்சி அல்லது யவதானியச் சோறு, கோதுமை, சம்பா அரிசி முதலியவற்றாலான உணவை புலால்சாற்றுடன் உட்கொள்ளச் செய்க. செரிமானத்தைத் தூண்டும் சடராக்னி நன்கு வளர்ந்த பிறகு தூய்மைப் படுத்தும் முறைகளால் துன்பங்கள் தணிந்த நோயாளிக்கு உடலைச் செழிப்புறச் செய்யும் பிரும்மஹண சிகிச்சையை மேற்கொள்ள வேண்டும். 34–35

## 23. வியவாய சோஷத்திற்கு பிரும்ஹண முறை

அளவுக்கு மீறிய கலவியால் தோன்றும் வியவாய சோஷ நோய் கொண்ட நோயாளிக்கு வாத நோய் இலக்கணங்கள் பொதுவாக மிகுந்து காணப்படும். அதனால் எண்ணெய்ப் பசை கொண்டு வாதத்தைத் தணிக்கும் பொருள்களால் உடலைச் செழிப்புறச் செய்யும் முறைகளைக் கையாள வேண்டும். 36

## 24. சோஷ நோய்கொண்டவர்களுக்குப் பயன்படத்தக்க புலால்

காகம், கோட்டான், கீரி, பூனை, மண்புழு, வியாளம், (சிங்கம்போன்ற ஒருவகைக் கொடிய விலங்கு) மற்றும் நிலத்தில் துளை செய்து வாழும் எலி முதலியவை, கழுகு ஆகியவற்றின் புலாலைக் கடுகு எண்ணெய், இந்துப்புகளுடன் பக்குவம் செய்து இதமான உணவு எனக் கூறி (எதன் புலால் எனக் கூறாமல்) உட்கொள்ளச் செய்க. மற்றும் காட்டு விலங்குகளின் புலால், பயிறு, துவரை ஆகியவற்றின் சாற்றுடன் பக்குவம் செய்து சுவையாக இருக்கும்படிச் செய்து உட்கொள்ளச் செய்க. அவ்வாறே கழுதை, ஒட்டகம், யானை, குதிரை ஆகியவற்றின் புலாலை நன்கு பக்குவப்படுத்தி உட்கொள்ளச் செய்க. அத்துடன் திராட்சையாலான ஆஸவம், அரிஷ்டம் நல்ல மது போன்றவற்றைப் பருகச் செய்க. அல்லது எருக்கு, சீந்தில் கொடி ஆகியவற்றின் க்ஷார நீரில் இரவு முழுவதும் ஊற வைத்து உலர்த்திய யவதானிய மாவினால் செய்த தின்பண்டங்களை உட்கொள்ளச் செய்க. உணவின்போது யவாகூ எனும் கஞ்சியுடன் ஆடு அல்லது செம்மறியாட்டின் நெய்யை உட்கொள்ள செய்க. அல்லது க்ஷயத்தால் துன்புறும் நோயாளிக்குச் சுக்கு, மிளகு, திப்பிலி, செவியம், வாயுவிளங்கம் ஆகியவற்றின் தூள் (ஓர் உளுந்து 8 எடை முதல் மூன்று உளுந்து எடைவரை) நாள்தோறும் காலை, நண்பகல், மாலை எனும் மூன்று வேளை களிலும் நெய்யும் தேனும் கலந்து உட்கொள்ளச் செய்க. 37–40

## 25. க்ஷய நோய்க்கு நெய்மருந்து

புலால் உண்ணும் விலங்குகளின் புலால் உண்ணும் பறவை களின் புலாலை விழுதுபோல அரைத்து அவற்றின் புலால் சாற்றுடன் கலந்து செய்த நெய்மருந்தைத் தேனும் திப்பிலித் தூளும்

கலந்து நாள்தோறும் மூன்று வேளைகள் உட்கொள்ளச் செய்க. இதனால் க்ஷய நோய் தணியும். இவ்வாறே திராட்சை, சர்க்கரை, திப்பிலி, ஆகியவற்றால் இலேகியம் செய்து தேன், எண்ணெய் ஆகியவற்றுடன் நாள்தோறும் உட்கொள்ளச் செய்தால் க்ஷய நோய் தணியும். 41

## 26. அச்வகந்தாதி சூரணம்

அமுக்கராக் கிழங்கு, எள், உளுந்து ஆகியவற்றைச் சம அளவில் கொண்டு தூளாக்கி மூன்று உளுந்து எடை கொண்டு ஆட்டு நெய், தேன் கலந்து நாள்தோறும் மூன்றுமுறை உட்கொள்ளச்செய்க. அல்லது சர்க்கரை 5 தோலா, அமுக்ராக் கிழங்குத் தூள் 5 தோலா, திப்பிலித் தூள் 2.5 தோலா, எனக் கொண்டு நன்றாகக் கலந்து கண்ணாடிக் குப்பியில் வைக்கவும். இந்தத் தூளில் ஒரு உளுந்து எடை ஆறு 6 உளுந்து எடை நெய் எட்டு உளுந்து எடை தேன் கலந்து நாள்தோறும் மூன்றுமுறை உட்கொள்ளச் செய்க. இதனால் யக்ஷ்மா எனும் நோய் தணியும். 42

## 27. அசுவகந்தாக்ஷீரம்

அமுக்காரக் கிழங்கின் விழுது 4 தோலா பால் 32 தோலா பாலின் அளவுக்கு நான்கு மடங்கு (128 தோலா) நீர் எனக் கொண்டு பால் மட்டும் மிகுந்திருக்கக் காய்ச்சி குளிர்ந்த பின் வடிகட்டிப் பருகச் செய்தால் இளைத்த உடல் செழிப்புறும் அல்லது அமுக்கராக் கிழங்கின் விழுதில் பக்குவமடைந்த பாலில் தயிர் கலந்து வைத்து மறுநாள் அதைக் கடைந்து நெய் எடுத்து நிறைவாகச் சர்க்கரை கலந்து காலையில் உட்கொள்ளச் செய்க. பிறகு பாலைத்துணையாகப் பருகவும். இவ்வாறு ஒன்றிரண்டு மாதங்கள் பாலையோ, பாலிலிருந்து செய்த நெய்யையோ பயன்படுத்தினால் ராஜ யக்ஷ்மா எனும் நோய் தணியும். 43

## 28. ஆடாதொடை நெய்

யக்ஷ்மா நோயில் உடலைச் செழிப்புறச்செய்ய அமுக்ராக் கிழங்குத் தூள், யவதானியத் தூள், மற்றும் வெள்ளைச் சாரடை,

---

அசுவகந்தா – அமுக்காரக்கிழங்கு

சிவப்புச் சாரடைத் தூள் ஆகியவற்றைச் சம அளவில் பயன்படுத்தினால் ராஜயக்ஷ்மா தணியும். இவ்வாறே ஆடாதொடை கிளை, இலை, வேர் ஆகியவற்றின் கஷாயம் காய்ச்சி அக்கஷாயம் 64 தோலா, ஆடாதொடை மலர்களின் விழுது 4 பலம், நெய் 16 பலம் எனக் கொண்டு வந்து நெய் மிகுந்திருக்கக் காய்ச்சி வடிகட்டிக் கொள்க.

இந்நெய் உளுந்து எடை, ஒரு தோலா தேன் கூட்டி உண்டால் ராஜயக்ஷ்மா நோய் தணியும்.

இந்த வாஸகாதி நெய் மருந்து ராஜயக்ஷ்மா கடுமையான இருமல், பாண்டு நோய் ஆகியவற்றைத் தணிக்கும். 44-45

## 29. யக்ஷ்ம நோயைப் போக்கும் நெய் மருந்து

பசு, குதிரை, யானை, ஆடு, செம்மறியாடு எனும் இவ்வைந்தின் சாணச்சாறு ஒவ்வொரு பகுதி, வட்டத்திருப்பிக் கஷாயம் ஒரு பங்கு, மஞ்சள் கஷாயம் ஒரு பங்கு, கருங்காலிப் பட்டைக்கஷாயம் ஒருபங்கு, பசுவின் பால் ஒரு பங்கு, பசு நெய் ஒரு பங்கு, நீர் ஒரு பங்கு, கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய், காகோலீ முதலான கூட்டுப் பொருள்கள், அல்லது அஷ்டவர்கத்தைச் சேர்ந்த மருந்துப் பொருள்கள், சுக்கு, மிளகு, திப்பிலி, தேவதாரு ஆகிய இவை அனைத்தும் சம அளவு எனக் கொண்டு விழுதாகச் செய்து நான்கு மடங்கு நெய் கலந்து முறைப்படி நெய் செய்க. இந்த மருந்தில் நாள்தோறும் 6 உளுந்து எடை கொண்டு எட்டு உளுந்து எடை தேன்கலந்து உட்கொள்ளச் செய்தால் ராஜயக்ஷ்மா எனும் நோய் தணியும். 46-47

## 30. [1]திவிபஞ்சமூலி கிருதம்

இலகு பஞ்ச மூலம், பிருகத் (பெரும்) பஞ்சமூலம் எனும் இருவகைக் கூட்டுப் பொருள், மாவிலங்கப்பட்டை, புங்கன் பட்டை, சேராங் கொட்டை வில்வப் பழக்கதுப்பு, சாரடை வேர், யவதானியம், கொள்ளு, இலந்தைப் பழம், சிறுதேக்கு, வட்டத்திருப்பி, கொடிவேலிப் பட்டை, கடம்பப்பட்டை ஆகிய இவற்றைச் சம அளவில் கொண்டு இடித்துக் கஷாயம் காய்ச்சி

1. த்விபஞ்சமூலி – இருவகைப் பஞ்சமூலங்கள் (லகுபஞ்சமூலம், குருபஞ்சமூலம் என்பன)

வடிகட்டி அக்கஷாயம் 6 ஆடகம், நெய் ஓர் ஆடகம், சுக்கு, மிளகு, திப்பிலி, கள்ளிப் பால், கடுக்காய், செவியம், தேவதாரு, இந்துப்பு ஆகியவற்றைச் சம அளவு கொண்டு இவற்றின் விழுது நெய்யில் நான்கில் ஒரு பங்கு அளவாகச் சேர்த்து முறைப்படி நெய் மருந்து செய்க. இந்த மருந்து ஆறு உளுந்து எடை முதல் எட்டு உளுந்து எடைவரை தேன் அல்லது பாலுடன் உட்கொள்ளச் செய்தால் சோஷம், எட்டுவகை வயிற்று நோய்கள், இருபது வ்கை நீரிழிவு, நோய்கள், வாத நோய் முதலியன தீரும். *48–50*

### 31. ராஜயக்ஷ்மாவுக்கு நெய் மருந்து

பசு, குதிரை, செம்மறியாடு, ஆடு, யானை, கருநிறமான், கழுதை, ஒட்டகம் எனும் விலங்குகளின் சாணச்சாறு, அவற்றின் பால், பசு தவிர, ஏனைய விலங்குகளின் புலால் சாறு, மற்றும் இரத்தம் ஆகிய இவற்றுடன் திராட்சை, அமுக்கராக் கிழங்கு, திப்பிலி, சர்க்கரை ஆகியவற்றின் விழுது, நெய் ஆகியவற்றைச் சேர்த்து முறைப்படி நெய் மருந்து செய்க. நாள்தோறும் தகுந்த அளவு இம்மருந்தை உட்கொண்டுவந்தால் ராஜயக்ஷ்மா எனும் நோய் தணியும். *51*

### 32. ஏலாதி கிருதம்

ஏலக்காய், ஓமம், நெல்லிக்காய், கடுக்காய், தான்றிக் காய், கருங்காலிச்சாறு, வேப்பஞ்சாறு, ஸர்ஜரஸம், சாலமரச் சாறு, வாயுவிளங்கம், சேராங்கொட்டை, சித்ர மூலப்பட்டை, வசம்பு, சுக்கு, மிளகு, திப்பிலி கோரைக்கிழங்கு, சௌராஷ்டிர மண் எனும் இவற்றைச் சம அளவில் கொண்டு இடித்துக் கஷாயம் காய்ச்சுக. இந்தக் கஷாயம் 4 பிரஸ்தம், நெய் ஒரு பிரஸ்தம், சேர்த்து முறைப்படி நெய் காய்ச்சி வடிகட்டுக. பிறகு, கற்கண்டுத்தூள் 30 பலம், மூங்கில் உப்பு 6 பலம் தேன் இரண்டு பிரஸ்தம் அளவு சேர்த்து மத்தினால் நன்கு கடைக. இது ஏலாதி கிருதம் எனும் நெய் மருந்தாகும். இதில் நாள்தோறும் ஒரு பலம் அளவு காலை வேளையில் உட்கொண்டு பாலைத் துணை மருந்தாகப் பருகவும். இம்மருந்து அறிவாற்றலை வளர்க்கும். மிகவும் புனிதமானது. கண்களுக்கு நன்மை தரும். ஆயுளை வளர்க்கும். விரைவில் ராஜயக்ஷ்மா பாண்டு, பகந்தரம், சுவாசம், குரல் மாறுபாடு, இருமல், இதய நோய், மண்ணீரல் வீக்கம், குன்மம், கிராகனி, எனும் நோய்களைப் போக்கும். இது சிறந்த ரஸாயனமாகும்.

ம்மருந்தை உட்கொண்டால் பத்தியம் ஏதும் இல்லை. (விடத்தக்க பொருள் என்பது இல்லை.) 52–56

## 33. வேறு நெய் மருந்துகள்

மண்ணீரல் வீக்கத்திற்குக் கூறிய ஷட்பலகிருதம், மற்றும் மூன்று வகை நெய் மருந்துகள், இந்த ராஜயக்ஷ்மாநோயிலும் பயன் படுத்தத் தக்கவை. குரல் மாறுபாடு போன்ற துன்பங்கள் தோன்றிய போது அந்தந்த துன்பங்களைப் போக்குவதற்குக் கூறிய மருந்து களையும் பயன்படுத்துக. 57

## 34. ஆட்டுப் பிழுக்கை முதலியவற்றைப் பயன்படுத்தல்

ஆட்டுப் பிழுக்கை, ஆட்டின் சிறுநீர், ஆட்டுப்பால், ஆட்டு நெய், ஆட்டு இரத்தம் முதலியவற்றைக் குளியல், உடலின்மேல் தேய்த்துக் கொள்ளுதல், உட்கொள்ளுதல் எனும் முறைகளில் தக்கபடி பயன்படுத்துதல், ஆட்டுமந்தையுடன் கூடி வசித்தல் எனும் முறைகளை ஒரு மாதகாலம் பயன்படுத்தினால் ராஜயக்ஷ்மா முழுமையாகத் தீர்ந்துவிடும். 58

## 35. க்ஷயத்திற்கு வெள்ளைப்பூண்டு முதலியவற்றைப் பயன்படுத்தல்

மருத்துவ நூல் கூறிய முறைப்படி வெள்ளைப்பூண்டின் சாற்றைப் பயன்படுத்தல், நாகபலையின் சுரசம் அல்லது தூளைப் பாலுடன் உட்கொள்ளுதல், வர்த்மான பிப்பலி எனும் முறைப்படித் திப்பிலியைப் பயன்படுத்தல், சிலாஹித்து என்பதை முறைப்படி பயன்படுத்தல் ஆகியவற்றில் ஒன்றை மேற் கொண்டால் ராஜயக்ஷ்மா நோய் தீரும். 59

## 36. சோஷ நோயில் விலக்கத்தக்கவை

கவலை, கலவி, சினம், பொறாமை, முதலியவற்றை விலக்கிச் சிறந்த உணவு, பருகத்தக்கவை முதலிவற்றை மேற்கொண்டு மருத்துவர், அந்தணர், குரு, முதியவர் ஆகியவர்களைப் போற்றி வந்தால் ராஜ யக்ஷ்மா நோய் தணியும். நல்லோரைச் சார்ந்து நல்லுரைகளைக் கேட்டல் முதலிய புனிதச் செயல்களில் ஈடுபடுதல் தகும். 60

**சிறுங்கட்டூர், நடாதூர் எஸ்.என். ஸ்ரீராமதேசிகன் எழுதிய ஸம்ஸ்கருத ஸம்ஹிதை உத்தரஸ்தானம் தமிழாக்க நூலின் சோஷபிரதிஷேதம் எனும் நாற்பத்தொன்றாம் அத்தியாயம் முற்றும்**

# குல்மபிரதி ஷேதம்

## எனும்

## நாற்பத்திரண்டாம அத்தியாயம்

இனி தந்வந்திரி பகவான் ஸுச்ருதர் முதலான சீடர்களு உபதேசம் செய்தபடி குன்ம நோய்க்கு உரிய சிகிச்சை முறைகளை விளக்குவோம். *1–2*

### *1.* குன்ம நோய் தோன்றுதல்

ஸுச்ருதஸம்ஹிதை ஸூத்ர, ஸ்தானத்தில் விரண, பிரச்னாதி காரம் எனும் இருபத்தோராம் அத்தியாயத்தில் கூறியபடி வலிமை கொண்டவருடன் போராடுதல் முதலான காரணங்களால் பித்தத்தை யும், பகலில் உறங்குதல், உடற்பயிற்சியின்மை முதலிய காரணங் களால் கபத்தையும் சீற்றமடையச் செய்து குடலில் சேர்ந்து குன்மம் எனும் நோயைத் தோற்றுவிக்கும். இந்தக் குன்ம நோய் ஐவகைப் படும். *3*

### *2.* குன்மத் தோற்றம்

இதயம், சிறுநீர்க்குண்டிகை, ஆகியவற்றிற்கு இடையில் அசைவது, அசையாதது, சில நேரங்களில் பருப்பது, சில நேரங்களில் சிறுத்தும் காணப்படுவது எனும் தோற்றங்களுடன் உருண்டையாகக் காணப்படுவது குன்மம் எனப்படும் *4*

---

குல்மம் – குன்மம் எனும் வயிற்றுக்குள் தோன்றும்கட்டி, அதற்கு உரிய சிகிச்சை முறைகளை விளக்குவதால் இந்த அத்தியாயம் குல்மபிரதிஷேதம் எனும் பெயர் பெற்றது.

## 3. குன்ம நோய் தோன்றும் பகுதிகள்

இருவிலாப்பகுதிகள், இதயம், தொப்புள், சிறுநீர்க்குண்டிகை எனும் இப்பகுதிகளைச் சார்ந்து குன்மம் தோன்றும். 5

## 4. குன்ம நோய் விளக்கம்

சீற்றம் பெற்ற வாதத்தைக் காரணமாகக் கொண்டு, கிழங்கைப் போல மறைந்துள்ள வேரைக் கொண்டதாகி புதர்போலப் பரவிக் காணப்படுவதால் இந்நோய் குன்மம் எனப்பட்டது. குல்மம் – புதர். புதர் பரவியுள்ளது போலக் காணப்படுவதால் இப்பெயர் பெற்றது. குல்மம் எனும் வடமொழிச் சொல் தமிழில் குன்மம் ஆயிற்று. 6

## 5. குன்மம் பக்குவம் பெறாமை

நீர்க்குமிழி நீரிலேயே தோன்றுவதுபோலக் குன்மம் தனக்குக் காரணமான தோஷத்தில் வளர்ந்து அங்கேயே பரவியிருக்கும். ஆகையால் குன்மம் பக்குவம் பெறுவது இல்லை. 7

## 6. குன்ம வகைகள்

வாதம், பித்தம், கபம் என்பன தனித் தனியாகச் சீற்றம் பெறுவதால் மூன்று வகை, மூன்றும் கலந்து தோற்றுவிப்பது ஒரு வகை, இரத்தம் கெடுவதால் தோன்றுவது ஒருவகை எனக் குன்ம நோய் ஐந்து வகைப்படும். 8

## 7. குன்மத்திற்கு முற்குறிகள்

குன்ம நோய் தோன்றுவதற்கு முன் உறுப்புகளில் தளர்ச்சி, சடராக்னிக் குறைவு, வயிற்றில் வாயு தாங்கி குடகுட என ஒலித்துக் கொண்டிருத்தல், குடலில் தனிப்பட்ட வகையில் இரைச்சல், மலம், சிறுநீர், அபானவாயு என்பன வெளிவராமல் தடைப்படுதல், நிறைவாக உணவு உட்கொண்டபோது தாங்க இயலாமை, உணவில் வெறுப்பு, வாயு மேல் நோக்கிப் பரவுதல் என்பன இந்நோய்க்கு முற்குறிகளாகும்.ள 9

## 8. வாத குன்ம இலக்கணம்

இதயம், வயிறு எனும் இப்பகுதிகளில் வலி, வாய், தொண்டை ஆகியவை உலர்ந்து அடிக்கடி நாவறட்சி தோன்றுதல், அபானவாயு தடைப்படுதல், சடராக்கனி கோளாறு, மறந்துபோதல், நடுக்கம், மற்றும் வாதத்தால் தோன்றக் கூடிய இலக்கணங்களும் வாத குன்மத்தில் காணப்படும். 10

## 9. பித்த குன்ம இலக்கணம்

மிக்க வியர்த்தல், காய்ச்சல், உணவு உட்கொண்டதும், உணவுக்குழாய் சிறுகுடல் எனும் பகுதிகளில் எரிச்சல், அழற்சி, நாவறட்சி, உறுப்புகளில் சிவப்பு நிறம் தோன்றுதல், வாயில் கார்ப்புச் சுவை தோன்தல் மற்றும் பித்தத்தால் தோன்றக் கூடிய இலக்கணங்களும் பித்த குன்மத்தில் காணப்படும். 11

## 10. கபகுன்ம இலக்கணம்

உறுப்புகளில் அசைவின்மை, (மரத்துப் போதல்) உடலின் மேல் ஈரத்துணி போர்த்தியது போலிருத்தல், உணவில் சுவை தோன்றாமை, உறுப்புகளில் சோர்வு, வாந்தி, வாயிலிருந்து எச்சில் ஒழுகுதல், வாய் இனித்தல், பளுத்தன்மை, குளுமை போன்ற கபத்தால் தோன்றும் கோளாறுகள் கபகுன்மத்தில் காணப்படும். 12

## 11. ஸந்நிபாத குன்ம இலக்கணம்

வாத பித்த கபங்களால் தோன்றும் இலக்கணங்கள் அனைத்தும் மூன்று தோஷங்களின் சீற்றத்தால் தோன்றும் குன்மத்தில் காணப் படும். இந்நோய் சிகிச்சைக்கு உட்படாததாகும். இனி இரத்த குன்ம இலக்கணங்கள் கூறப்படுகின்றன.

## 12. இரத்த குன்ம இலக்கணம்

பிள்ளைப் பேற்றின் போது மங்கை உடலுக்கு ஒவ்வாத இதம் தராத உணவை உட்கொண்டால், கருவுற்ற ஆறு மாதங்களில் கருச்சிதைவு ஏற்படும்போது கூடாத உணவை உட்கொள்ளுதல்,

அல்லது மாதவிடாய் கொண்டபோது கூடாதவற்றைப் பின்பற்றுதல் எனும் காரணங்களால் வாதம் சீற்றமடைந்து ருது காலத்தில் தோன்றும் கெட்ட இரத்தத்தைத் தடுத்து வலி அழற்சி மிகுந்த இரத்த குன்மத்தைத் தோற்றுவிக்கும். இதன் இலக்கணங்கள் பித்த குன்மத்திற்குக் கூறியவைகளேயாகும். அத்துடன் பின்வரும் இலக்கணங்களும் காணப்படும். கருவுற்றவளுக்குப் போல வயிறு பருத்தல், வாந்தியாதல், உணவில் விருப்பின்மை, மார்பகக் காம்புகள் கறுத்தல் போன்ற இலக்கணங்கள் காணப்படும். இந்த இரத்த குன்மத்திற்குச் சிகிச்சை ஒன்பது அல்லது பத்து மாதங்கள் கடந்த பிறகே மேற்கொள்ள வேண்டும். ஆயுர்வேத மருத்துவத்தில் நன்கு தேர்ச்சி பெற்றவர்கள் இத்தகைய இலக்கணங்களைக் கொண்டது இரத்த குன்மம் என்பர். 14-15

## 13. வாத குன்மத்திற்குச் சிகிச்சை

வாத குன்மத்தால் துன்புறுகிறவனுக்கு முதலில் எண்ணெய் மருந்தைப் பருகச் செய்தல், எண்ணெய்க் குளியல் முதலிவற்றால் எண்ணெய்ப் பசை தோற்றுவித்துப் பிறகு ஆமணக்கு எண்ணெயை உட்கொள்வதால் பேதியாகச் செய்விக்க வேண்டும். பிறகு தக்க சமயத்தில் அநுவாஸன, நிரூஹண வஸ்தி முறைகளைப் பயன்படுத்த வேண்டும். 16

## 14. பித்த குன்மத்திற்குச் சிகிச்சை

பித்த குன்மத்தால் துன்புறும் நோயாளிக்குக் காகோலி முதலான கூட்டுப் பொருள்களின் விழுது, அவற்றின் கஷாயம் ஆகியவற்றாலான நெய் மருந்தால் எண்ணெய்ப்பசை தோற்றுவித்து சரக்கொன்றை முதலான கூட்டுப் பொருள்களால் இனிப்புச் சுவைகொண்ட மருந்துகள், அல்லது திராட்சை, குல்கந்து, சீமை அத்திப்பழம், பால், கருப்பஞ்சாறு, முதலியவற்றால் பேதியாகச் செய்ய வேண்டும். பிறகு நிரூஹண வஸ்தியால் சிகிச்சை செய்ய வேண்டும். 17

## 15. கபகுன்மத்திற்குச் சிகிச்சை

கபகுன்மத்தால் துன்புறும் நோயாளிக்கு முதன்முதலாகத் திப்பிலி முதலியவற்றாலான நெய்மருந்தை உட்கொள்ளச் செய்தல்,

எண்ணெய்க் குளியல் முதலியவற்றால் எண்ணெய்ப் பசை தோற்றுவித்துப் பிறகு நேர்வாளம், முதலியவற்றாலான தீக்ஷ்ணத் தன்மை கொண்ட மருந்துகளால் பேதியாகச் செய்ய வேண்டும். பிறகு தீக்ஷ்ணத் தன்மை கொண்ட மருந்துப் பொருள்களின் விழுது, கஷாயம் முதலியவற்றாலான நெய்யால் நிரூஹண வஸ்தி கொடுத்துச் சிகிச்சை செய்ய வேண்டும். 18

## 16. ஸந்நிபாத குன்மத்திற்குச் சிகிச்சை

ஸந்நிபாதத்தால் தோன்றிய குன்மத்திற்கு மூன்று தோஷங்களையும் தணிக்கவல்ல சிகிச்சையைச் செய்ய வேண்டும். 19

## 17. இரத்த குன்மத்திற்குச் சிகிச்சை

பித்த குன்மத்திற்குக் கூறிய சிகிச்சைகளை மேற்கொண்டு புரசக்ஷார நீரைக் கொண்டு செய்த நெய் மருந்தை உட்கொள்ளச் செய்க. மற்றும் திப்பிலி முதலான கூட்டுப்பொருள்களின் விழுதும் கஷாயமும் சேர்த்துச் செய்த நெய் மருந்தால் உத்தர வஸ்தி கொடுக்க வேண்டும் அல்லது வெப்பத் தன்மை கொண்ட முள்ளங்கி விதைக் கஷாயம். ரஜாப்ரவர்தனிபடி, ஏல்யாதிவடி, குன்ம வஜ்ரிணி முதலியவற்றை விடாமல் பயன்படுத்தல் செய்க. இரத்த குன்மத்தைச் சிதையச் செய்ய வேண்டும். பிறகு ரக்த பிரதர (இரத்தப் பெரும்பாடு) நோய்க்குக் கூறிய சிகிச்சை முறைகளைப் பின்பற்ற வேண்டும். 20-21

## 18 . வாத குன்மத்திற்கு அநுவாஸனம்

நீர்ப்பாங்கான நிலத்தில் வாழும் விலங்குகளின், நீர்வாழ் மீன் முதலான உயிரினங்களின் கொழுப்பு, நிணநீர், எண்ணெய், நெய், தயிர் ஆகிய இவற்றைத் தக்க அளவில் கொண்டு நான்கு மடங்கு நீர் சேர்த்து எண்ணெய்ப் பகுதி மட்டும் மிகுந்திருக்கக் காய்ச்சி வாத குன்மத்திற்கு அனுவாஸன வஸ்தியாகப் பயன்படுத்த வேண்டும். 22

## 19. பித்த, கப குன்மங்களுக்கு அனுவாஸனம்

பித்த குன்மத்திற்குக் காட்டுப் பகுதியில் வாழும் விலங்குகள், ஒற்றைக் குளம்புள்ள குதிரை முதலான விலங்குகளின் நிணநீர்,

நெய் ஆகியவற்றுடன் நான்கு மடங்கு நீர் சேர்த்துப் பக்குவம் செய்து அல்லது பித்தத்தைத் தணிக்கும் மருந்துப் பொருட்களின் விழுதும் கஷாயம் சேர்த்துப் பக்குவம் செய்து அநுபாஸன வஸ்தியாகப் பயன்படுத்தவேண்டும். அவ்வாறே கபத்தால் தோன்றும் குன்மத்திற்கு காட்டுப் பகுதியில் வாழும் விலங்குகளின் கொழுப்பு, எண்ணெய் ஆகியவற்றைக் கலந்து பக்குவம் செய்து அநுவாஸன வஸ்தியாகப் பயன்படுத்த வேண்டும். 23

## 20. வாத குன்மத்திற்கு ஷடங்ககிருதம்

நெல்லிக்கனி சுரசம் 4 பிரஸ்தம், திப்பிலி, திப்பிலி வேர், செவியம், கொடிவேலி, சுக்கு, யவக்ஷாரம் இந்த ஆறையும் சம அளவில் கலந்து நான்கு பலம் அளவு கொண்டு விழுதாகச் செய்து பிறகு இதில் ஒருபிரஸ்தம் நெய் கலந்து நெய்ப் பகுதி மட்டும் மிகுந் திருக்கக் காய்ச்சுக. நாள்தோறும் ஷடங்ககிருதம் எனும் இந்த நெய் மருந்து ஒரு தோலா அளவு கொண்டு அத்துடன் 6 உளுந்து எடைச் சர்க்கரை, இந்துப்பு மூன்று உளுந்து எடை கலந்து மூன்று வேளைகள் அல்லது இருவேளைகள் உட்கொள்ளச் செய்தால் வாத குன்மம் தணியும். 24

## 21. சித்ரகாதிகிருதம்

சித்ரமூலம், சுக்கு, மிளகு, திப்பிலி, இந்துப்பு, கருஞ்சீரகம், செவியம், மாதுளம்விதை, ஓமம், திப்பிலிவேர், சீரகம், கொத்து மல்லிவிதை எனும் இவற்றைச் சம அளவில் நான்கு பலம் அளவு கொண்டு விழுதாகச் செய்க. பிறகு தயிர் ஒரு பிரஸ்தம், காடி, இலந்தை இலை அல்லது வேர் கஷாயம், முள்ளங்கி சுரசம் இவை ஒவ்வொன்றும் நெய் அளவிற்கு நான்கு மடங்கு நெய் ஒரு பிரஸ்தம் அளவு கொண்டு அனைத்தையும் கலந்து நெய் மட்டும் மிகுந்திருக்கக் காய்ச்சுக. இது சித்திரகாதி கிருதம் எனப்படும். இந்த நெய் மருந்து 6 உளுந்து எடைமுதல் ஒரு தோலா வரை நாள்தோறும் மூன்று வேளை, அல்லது இரண்டு வேளை உட்கொள்ளச் செய்தால் வாத குன்மம், சடராக்னிக் குறைவு, வயிற்றில் வாயு சேருதல், வயிற்று வலி முதலியன தீரும். 25-26

## 22. [1]ஹிங்க்வாதி கிருதம்

பெருங்காயம், சௌவர்சல உப்பு, சீரகம், பிடாலவணம், மாதுளவகை, ஓமம், புஷ்கரமூலம், சுக்கு, மிளகு, திப்பிலி, கொத்து மல்லி விதை, புளிவஞ்சி, யவக்ஷாரம், கொடி வேலி, பூலாங் கிழங்கு, வசம்பு, ஏலக்காய், துளசி, ஆகியவற்றைச் சம அளவில் நான்கு பலம் அளவு கொண்டு இடித்து நீர்விட்டு அரைத்து விழுதாகச் செய்க. அத்துடன் ஒரு பிரஸ்தம் நெய், ஒருபிரஸ்தம் தயிர் நான்கு பிரஸ்தம் நீர் ஆகிவற்றைக் கலந்து முறைப்படி நெய் காய்ச்சுக. இது ஹிங்க்வாதி கிருதம் எனப்படும். இது வயிற்று வலி, வயிற்று உப்புசம் (வீக்கம்) வாத குன்மம் எனும் நோய்களைத் தணிக்கும். 27–28

## 23. தாதிக கிருதம்

பிடாலவணம், மாதுளை விதை, இந்துப்பு, கொடிவேலி, சுக்கு, மிளகு, திப்பிலி, வெண்சீரகம், பெருங்காயம், சௌவர்ச்சல உப்பு, யவக்ஷாரம், கோஷம், புளிவஞ்சி, புளிச்சைக் கீரை ஆகியவற்றைச் சம அளவு நான்கு பலம் கொண்டு விழுதாக்குக. அத்துடன் துரிஞ்சிப் பழச்சாறு 4 பிரஸ்தம், நெய் 1 பிரஸ்தம், தயிர் 4 பிரதஸ்தம், நீர் 4 பிரஸ்தம் எனக்கலந்து முறைப்படி நெய் காய்ச்சுக. இது தாதிககிருதம் எனப்படும். இது குன்மம், மண்ணீரல் வீக்கம், பெருவயிறு, வயிற்றுவலி ஆகியவற்றைத் தணிக்கும். 29–30

## 24. [2]ரஸோனாதிகிருதம்

வெள்ளைப் பூண்டு சுரசம் பெரும்பஞ்ச மூலக் கஷாயம், சுரை எனும் கள், காடி, தயிர்த் தெளிவு, முள்ளங்கிச் சாறு, ஆகியவற்றைச் சம அளவு மொத்தமாக நான்கு பலம் அளவு கொண்டு நெய் ஒரு பிரஸ்தம், சுக்கு, மிளகு, திப்பிலி, மாதுளை விதை, புளி, ஓமம், ஆகியவற்றைச் சம அளவு மொத்தமாக நான்கு பலம் அளவு கொண்டு நெய் ஒரு பிரஸ்தம், சுக்கு, மிளகு, திப்பிலி, மாதுளை விதை, புளி, ஓமம், செவியம், இந்துப்பு, பெருங்காயம், புளிவஞ்சி, வெண்சிரகம், கருஞ்சீரகம் ஆகியவற்றை நீருடன் அரைத்த விழுது

---

1. ஹிங்க்வாதி – பெருங்காயம் முதலியவை
2. ரஸோநம் – வெள்ளைப்பூண்டு

நான்கு பலம் கொள்க. அனைத்தையும் ஈயம் பூசிய பாத்திரத்தில் மெல்ல மெல்ல நெய் மட்டும் மிகுந்திருக்கக் காய்ச்சுக. இதுதவிர லோஹ கிருதம் எனப்படும். இந்நெய் மருந்து குன்மம், ஸங்கிரகணி, மூலம் பைத்தியம், இழுப்பு, க்ஷயம், காய்ச்சல், இருமல், கால்கை வலி, சடராக்னிக் குறைவு, மண்ணீரல் வீக்கம், அதனால் தோன்றும் வயிற்று வலி, உபாத நோய்கள் ஆகியவற்றைத் தணிக்கும். 31–33

## 25. [1]தத்யாதி கிருதம்

தயிர் 4 பிரஸ்தம், ஸௌவீரகம் எனும் மது ஒரு ஆடகம், நெய், ஒரு ஆடகம், பயிற்றின் கஷாயம் ஒரு ஆடகம், கொள்ளின் கஷாயம் ஒரு ஆடகம், ஸௌவர்ச்சல உப்பு, ஸர்ஜக்ஷாரம், தேவாரு சூரணம், இந்துப்பு எனும் இவை ஒவ்வொன்றும் இரண்டு பலம் வீதம் கொண்டு 4 ஆடகம் நீர் சேர்த்து நெய் அளவு மிகுந்திருக்கக் காய்ச்சுக. இது தத்யாதி கிருதம் எனப்படும். இது வாத குன்மத்தைப் போக்கும் சடராக்னியை வளர்க்கும். 34–35

## 26. திருண மூலாதி கிருதம் முதலியன

தர்ப்பை, நாணல், கரும்பு முதலியன திருணபஞ்ச மூலங்களைக் கஷாயம் காய்ச்சி அக்கக்ஷாயம் 4 பிரஸ்தம் கொண்டு அத்துடன் ஜீவநீய கூட்டுப் பொருள்களின் விழுது 4 பலம், நெய் ஒரு பிரஸ்தம் எனக்கலந்து முறையாக நெய்மருந்து செய்க. அல்லது நியக்ரோதாதி கூட்டுப்பொருள்களின் கஷாயம் அல்லது உத்பலாதி கணக் கூட்டுப் பொருள்களின் சுரசம் அல்லது கஷாயம் கொண்டு அத்துடன் ஜீவனீய கணப்பொருள்களின் விழுதும் நெய்யும் கலந்து நெய்மருந்து செய்க. இம் மூவகை நெய் மருந்துகளும் இரத்த பித்தத்தால் தோன்றிய குன்மம் அல்லது குன்மம் பிளவுபடும்போது தோன்றும் இரத்த பித்தம் ஆகியவற்றைத் தணிக்கும். 36–37

## 27. கபகுன்மத்திற்கு நெய் மருந்துகள்

ஆரக்வதாதி கணக்கூட்டுப் பொருள்களின் கஷாயம் நான்கு பிரஸ்தம் கொண்டு அத்துடன் திப்பிலி முதலான தீபநீயகணக் ட்டுப் பொருள்களின் விழுது 4 பலம் அளவு, நெய் ஒரு பிரஸ்தம்

1. தத்யாதி – தயிர் முதலியவை

சேர்த்து நெய் மருந்து செய்க அல்லது ஒரு பிரஸ்தம் நெய்யில் தீபனிய கணக்கூட்டுப் பொருள்களின் விழுது 4 பலம், க்ஷார வர்கப் பொருள்களின் சாம்பல்நீர் 4 பிரஸ்தம் சேர்த்து நெய் மருந்து செய்க. அல்லது ஒரு பிரஸ்தம் நெய், தீபனீய கூட்டுப்பொருள்களின் விழுது 4 பலம் மூத்ராஷிடகத்தில் கூறிய உயிரினங்களில் சிறுநீர் 4 பிரஸ்தம் சேர்த்து நெய் மருந்து செய்க. இம்மருந்துகள் கப குன்மத்தைத் தணிக்கும். 38

## 28. ஸந்நிபாத குன்ம சிகிச்சை

மூன்று தோஷங்களும் சீற்றமடைந்ததால் தோன்றிய குன்மத்திற்கு அதிக அளவில் சீற்றமடைந்த தோஷத்திற்குத் தக்க முறையில் சிகிச்சை செய்க. அல்லது ஸந்நிபாதத்தால் தோன்றிய குன்மத்திற்கு வாத வியாதிபிரகரணத்தில் கூறிய ஹிங்க்வாதி சூரணத்தை உட்கொள்ளச் செய்க அல்லது மண்ணீரல் வீக்கத்திற்குக் கூறிய சிகிச்சையில் ஷட்பலகிருதம் எனும் மருந்தை உட்கொள்ளச் செய்க. அல்லது வாதவியாதிபிர கரணத்தில் கூறிய தைல்வக கிருதம் என்பதைத் தகுந்த நேரத்தில் பேதியாகச் செய்வதற்கு உட்கொள்ளச் செய்க. 39–40

## 29. க்ஷாராவலேஹம்

எள்ளுச் செடி, நீர்முள்ளிச் செடி, புரச வேர் மற்றும் புரசக் கட்டை கடுகுச் செடியின் ஐந்து பகுதிகள் (வேர், கட்டை, இலை, மலர், காய் ஆகியவை) யவதானியச் செடி அல்லது தண்டு, முள்ளங்கி ஆகியவற்றைச் சம அளவில் கொண்டு எரித்துச் சம்பலாக்குக. பசு, ஆடு, செம்மறியாடு, கழுதை, யானை, எருமை ஆகியவற்றின் சிறுநீர் சம அளவில் கலந்த கலவை ஆறுமடங்கு அல்லது நான்கு மடங்கு கொண்டு அதில் இருபத்தோரு முறை முன்செய்த சாம்பலைப் போட்டுக் கழுவி வடிகட்டுக. இந்த க்ஷார உதகம் எனும் நீரில் கோஷ்டம், இந்துப்பு, அதிமதுரம், சுக்கு, வாயு விடங்கம், ஓமம் ஆகியவற்றின் தூள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு பலம் வீதம் கொண்டு கடலுப்பு பத்து பலம் சேர்த்து அனைத்தையும் இரும்புப் பாத்திரத்தில் இட்டு மெல்ல எரியும் தீயில் (மந்தாக்னியில்) இலேகியம் போலப்பக்குவம் செய்க. இது க்ஷாராவலேஹம் எனப்படும். இதில் தகுந்த அளவு (ஆறு உளுந்து

எடை) கொண்டு தயிர், சுரை எனும் மது, நெய், காடி, வெந்நீர், கொள்ளுக் கஷாயம், ஆகியவற்றில் ஏதேனும் ஒன்றுடன் சேர்த்து உட்கொள்ளச் செய்தால் எல்லா வகையான குன்மங்களும், வாத விகாரங்களும் தீரும். இதில் சிறிதும் ஐயம் கொள்ள வேண்டாம். 41–44

## 30. ஸ்வர்ஜிக்ஷார முறை

ஸ்வர்ஜக்ஷாரம் இரண்டு குன்றி மணி எடை, கோஷ்டத்தின் தூள் அல்லது க்ஷாரம் நான்கு குன்றிமணி எடை எண்ணெயும் கலந்து உட்கொள்ளச் செய்க. அவ்வாறே யவக்ஷாரம் இரண்டு குன்றி மணி எடை எண்ணெயுடன் உட்கொள்ளச் செய்க. அல்லது தாழம் விழுதை எரித்துச் செய்த சாம்பல் இரண்டு குன்றிமணி எடை எண்ணெயுடன் கலந்து உட்கொள்ளச் செய்தால் வாதத்தால் தோன்றிய குன்மம் தீரும். 45

ஸ்வர்ஜக்ஷாரம் இரண்டு குன்றிமணி எடை, கோஷ்டத்தூள் நான்கு குன்றிமணி எடை இந்துப்பு இரண்டு குன்றிமணி எடை எனக் கலந்து இளஞ்சூடுள்ள நீருடன் உட்கொள்ளச் செய்தால் வாத குன்மம் தணியும். 46

## 31. [1]விருச்சீலாதி அரிஷ்டம்

வெள்ளைச் சாரடை, வெள்ளை ஆமணக்கு வேர், சிவப்புச் சாரடை, சிறுகண்டங்கத்தரி, பெருங்கண்டங்கத்தரி கொடிவேலி வேர், ஆகியவற்றை நான்கு பிரஸ்தம் அளவு கொண்டு இடித்து நான்கு துரோணம் அளவுள்ள நீரில் இட்டுப் பக்குவம் செய்து நான்கில் ஒரு பங்கு மிகுந்திருக்கும்போது வடிகட்டுக. திப்பிலித் தூள், கொடி வேலித்தூள், தேன் கலந்து அதை உட்பகுதியில் பூசிய பாத்திரத்தில் முன் செய்த கஷாயத்தை நிரப்பித் தேன் ஒரு பிரஸ்தம், கடுக்காய்த்தூள் அரை பிரஸ்தம் சேர்த்து மடக்கால் மூடிச் சீலைமண் பூசி உலர்ந்தபின் அப்பாத்திரத்தைப் பத்து நாட்கள் உமிக் குவியலுக்குள் வைத்திருக்கவும். பிறகு அதை வடிகட்டிக் கண்ணாடிக் குப்பியில் பத்திரப்படுத்துக. காலையிலும் மாலையிலும் உணவு செரிமானமடைந்த பிறகு இந்த அரிஷ்டத்தில் இரண்டு தோலா அளவு உட்கொண்டு வந்தால் குன்மம், சடராக்னிக் குறை, சுவையின்மை ஆகியவை தீரும். 47–49

1. விருச்சிவம் – சாரடை

## 32. பாடாதி சூரணம்

வட்டத் திருப்பி, பெரிய நேர்வாள வேர், மஞ்சள், சுக்கு, மிளகு, திப்பிலி கடுக்காய், தான்றிக்காய், நெல்லிக்காய், கொடி வேலிப்பட்டை, இந்துப்பு, குடசப்பாலை இவற்றில் ஒவ்வொன்றின் தூள் ஒவ்வொரு தோலா இவை அனைத்தின் எடைக்குச் சம அளவு பழைய வெல்லம் சேர்த்துக் கொள்க. இது பாடாதி சூரணமாகும். இந்தத் தூளில் மூன்று உளுந்து எடை முதல் ஆறு உளுந்து எடைவரை நாள்தோறும் உட்கொள்க. அல்லது இந்தத் தூள் மருந்துடன் அரைக்கடுக்காயின் தூளைக் கலந்து நான்கு மடங்கு பசுவின் சிறுநீரில் இட்டுப் பக்குவம் செய்து அது கெட்டிப்பட்டதும் மூன்று உளுந்து எடை கொண்ட மாத்திரைகளாகச் செய்து உணர்த்திக் கண்ணாடிக் குப்பியில் வைக்கவும். நாள்தோறும் காலையிலும் மாலையிலும் உணவுக்கு முன் ஒன்று அல்லது இரண்டு மாத்திரை வீதம் இளஞ்சூடுள்ள வெந்நீருடன் உட்கொண்டால் குன்மம், மண்ணீரல் வீக்கம், சடராக்னிக் குறைவு, இதய நோய், கிரகணி, கடுமையான பாண்டு நோய் ஆகியவை தணியும். 50–52

## 33. குன்மத்தில் இரத்தத்தை வெளியேற்றுதல்

மிக்க வலியுடன் மேல்நோக்கி எழும்பி அசைவின்றி அல்லது சிறிதளவு அசைந்து கொண்டிருப்பதாகி அழற்சி, எரிச்சல் ஆகிய துன்பங்களை விளைவித்துக் கொண்டிருக்கும் குன்ம நோயில், அட்டைப்பூச்சிகளைக் கொண்டு அல்லது சிரையைக் கீறிக்கெட்ட இரத்தத்தை வெளியேற்ற வேண்டும். 53

## 34. குன்மத்திற்கு காட்டுவாழ் விலங்குகளின் புலாலைப் பயன்படுத்துதல்

காட்டில் வாழும் விலங்குகள், பறவைகள் ஆகியவற்றில் புலாலை நீருடன் கொதிக்க வைத்து வடிகட்டி எண்ணெய் மஸாலான பொருள்கள் ஆகியவற்றுடன் பக்குவம் செய்து சிறிது இந்துப்பு, சுக்கு, மிளகு, திப்பிலித் தூள் ஆகியவற்றையும் சேர்த்து மூன்று குன்றி மணி அளவு மேற்படி திரவத்துடன் கலந்து பருகச் செய்தால் குன்மநோயில் மிக்க நன்மை உண்டாகும். 54

1. பாடாதி – வட்டத் திருப்பி முதலான

## 35. குன்ம நோயில் பருகத் தக்கவை

பத்ரதாரு முதலான வாதத்தைப் போக்கும் மருந்துப் பொருள்களுடன் பயறு முதலியவற்றைச் சேர்த்துக் கஞ்சி செய்து மசாலாப் பொருள்களுடன் பக்குவம் செய்து உட்கொள்ளச் செய்க. கொள்ளை நான்கு மடங்கு நீர்விட்டுக் கொதிக்க வைத்து நான்கில் ஒரு பங்கு நீர் மிகுந்திருக்கக் காய்ச்சுக. அதை வடிகட்டி முன்போலப் பக்குவம் செய்து பருகச் செய்க. விளா, மாதுளை, மோர், புளியாரை, மிளகு, சீரகம், கொடிவேலி ஆகியவற்றைத் தகுந்த அளவு கொண்டு நான்கு மடங்கு அல்லது ஆறு மடங்கு நீர்விட்டுக் கொதிக்க வைத்து வடிகட்டிப் பெருபஞ்ச மூலத்தூள் சேர்த்துப் பயன்படுத்துக. அல்லது பஞ்சமூலப் பொருள்களையும் முன்கூறும் விளாமுதலான வற்றுடன் சேர்த்துக் காய்ச்சி வடிகட்டி மசாலா பொருள்களுடன் பக்குவம் செய்து குன்ம நோய் கொண்டவனைப் பருகச் செய்தால் மிக்க நன்மை உண்டாகும். 55

## 36. குன்மத்தில் மலத்தடை கொண்டபோது ஆர்த்ரகக்ஷீரம்

குன்ம நோயில் மலமும், அபான வாயுவும் தடைப் பட்டிருக்கும்போது பாலில் இஞ்சியும் நீரும் சேர்த்துக் காய்ச்சிப் பருகச் செய்க. அவ்வாறே ஸ்வேதாத்லாயத்தில் கூறப்பட்ட கும்பீகம், பிண்டஸ் வேதம் முதலான முறைகளால் உடல் வியர்க்கச் செய்க. 56

## 37. குன்மத்தில் பேதியாகச் செய்யும் முறை

பொதுவாக எல்லாவகையான குன்மங்களிலும் மலத்தடை இருக்கும். எனவே முதன்முதலாகக் கஷ்டப்பட்டுப் பேதியாகச் செய்ய வேண்டியிருக்கும். அதனால் கருங்குடலும், மலத்தடையும் கொண்டுள்ள குன்ம நோயாளிகளுக்கு முறையாக எண்ணெய்ப் பசை உண்டாக்கி உடல் வியர்க்கச் செய்து பிறகு பேதியாகச் செய்யும் முறையைப் பயன்படுத்த வேண்டும். 57

## 38. குன்ம நோயில் மேல் பூச்சு முதலியன

பேதியாகச் செய்து பிறகு விரலால் குன்மப்பகுதியைத் தேய்த்தல், எண்ணெய்ப்பூசித் தேய்த்தல், சுடுதல், சால்வணம் முதலிய முறைகளால் வியர்க்கச் செய்தல் போன்ற முறைகளைப்

பயன்படுத்துக. மற்றும் வயிற்று நோய் அதிகாரத்தில் கூறிய பலவகை நெய் மருந்துகள் சிறுநீர் முறைகள், பலவகை வத்திகள் ஆகியவற்றைப் பயன்படுத்த வேண்டும். வர்த்நோய் அத்தியாயத்தில் கூறிய பஞ்சலவணம், ஸ்நேஹலவணம், கல்யாணலவணம் முதலியவற்றைப் பயன்படுத்த வேண்டும். 58–59

### 39. மலத்தடையைப் போக்கும் முறை

அபான வாயு, மற்றும் மலம் தடைப்பட்டபோது கடல் உப்பு, இஞ்சி, கடுகு, மிளகு ஆகியவற்றைச் சம அளவில் கொண்டு நீர்விட்டு அரைத்து இலந்தைக் கொட்டை அளவுள்ள வத்திகளாகச் செய்து உலர்த்தி ஆஸனவாயில் வைத்துக் கொண்டிருக்கச் செய்க. 60

### 40. அரிஷ்டத்தைப் பயன்படுத்தல்

நேர்வாள வேர், கொடிவேலி வேர், வாதத்தைப் போக்கும் மருந்துப் பொருள்கள் ஆகியவற்றைக் கொண்டு சூத்திரஸ்தானத்தில் கூறிய பேதியாகச் செய்யும் முறைக்கான ஆஸவமுறைப்படி அஸவம், அரிஷ்டம் ஆகியவற்றைச் செய்து பயன்படுத்துக – அல்லது இந்த அத்தியாயத்தில் 47வது சுலோகத்தில் கூறிய விருச்சி வாத்யரிஷ்டம் எனும் முறைப்படி நேர்வாளக் கொடிவேலி முதலான பொருள்களின் கஷாயத்தில் தேன் மற்றும் கடுக்காய்த் தூள் கலந்து ஆஸவமாகவே, அரிஷ்டமாசவோ செய்து குன்மத்தைத் தணிக்கப் பயன் படுத்துக. 61

குன்ம நோயில் புங்கன், சரக்கொன்றை ஆகியவற்றின் தளிர்களை நெய்யில் வறுத்து உட்கொள்ளச் செய்க. மேல் நோக்கிய வாதம் (ஏப்பம்) மிகுந்துள்ள குன்ம நோயாளிக்கு நிரூஹணவஸ்தியைப் பயன்படுத்தக்கூடாது. 62

### 41. சிவதை முதலியவற்றைப் பயன்படுத்தல்

சிவதை மற்றும் சுக்கு ஆகியவற்றை இரண்டிரண்டு உளுந்து எடை வீதம் கொண்டு தூளாக்கி வெல்லத்துடன் உட்கொள்ளச் செய்க. அல்லது மூன்று உளுந்து எடை வெல்லத்தில் ஆறு உளுந்து எடை கடுக்காய்த் தூள் சேர்த்து உட்கொள்ளச் செய்க. அல்லது குங்கிலியம், சிவதை, நேர்வாள வேர், இந்துப்பு, வசம்பு,

ஆகியவற்றைச் சம அளவு கொண்டு இரத்தம் மூன்று உளுந்து எடை முதல் ஆறு உளுந்து எடை வரை தோஷம், காலம், நோயாளியின் வயது நோயின் வலிமை ஆகியவற்றிற்கு ஏற்பப் பசுவின் சிறுநீர், மது, பால், திராட்சைச் சாறு ஆகியவற்றில் ஏதேனும் ஒன்றுடன் உட்கொள்ளச் செய்க. உலகைப் பழத்தை நெருப்பில் சுட்டு இந்துப்புத்தூள் சேர்த்துச் சிறுநீர், மது, பால், திராட்சைச் சாறு ஆகியவற்றில் ஒன்றுடன் உட்கொள்ளச் செய்க. 63-64

## 42. குன்மத்தில் சுரையைப் பயன்படுத்தல்

திப்பிலி, திப்பிலிவேர், செவியம், சித்திர மூலம், இந்துப்பு, எனும் இவற்றைச் சம அளவில் கொண்டு தூளாக்கி இரண்டு முதல் நான்கு உளுந்து எடை வரை இரண்டு தோலா சுரையைத் துணை மருந்தாகக் கொண்டு வயிற்று உப்புசம் போன்றவை தோன்றிய நிலையில் உட்கொள்ளச் செய்தால் குன்மம் தணியும். 65

## 43. அபான வாயு, மலம் தடைப்பட்டபோது குன்மத்தில் பத்திய முறை

குன்ம நோய் கொண்டுள்ள நோயாளிக்கு மலமும் அபான வாயுவும் தடைப்பட்டுள்ள நிலையில் பாலுடன் யாவதானி யத்தைப் பாயசம் போலப் பக்குவம் செய்து உட்கொள்ளச் செய்க. பாதியளவு சுண்டிய கோதுமையுடன் மிகுந்த அளவு எண்ணெயைக் கலந்து பக்குவம் செய்து இந்துப்பு சேர்த்து உட்கொள்ளச் செய்க. 66

## 44. குன்மத்தில் தோன்றிய வலி

குன்ம நோய் கொண்டவனுக்கு வலி தோன்றுமாயின் அது ஆழமாகக் குத்திக் கொண்டுள்ள ஆணியால் தோன்றுவது போன்ற வலி உண்டாகும். 67

## 45. குன்மத்தில் தோன்றிய வலியின் வேறுபாடுகள்

வாதத்தால் தோன்றிய குன்மத்தில் வலி தோன்றினால் மலம், சிறுநீர், ஆகியவை தடைப்படும். மூச்சிழுத்து விடுவதில் துன்பம் விளையும். உடல் உறுப்புகள் கடினமாதல் அல்லது மரத்துப்

போதல் உண்டாகும். பித்தத்தாலான குன்மத்தில் தோன்றிய வலியில் நாவறட்சி, அழற்சி, தலைச்சுற்று, உணவு செரிமான மடையாமையால் வலிமிகுதல் என்பன காணப்படும். கபத்தால் தோன்றிய குன்மத்தில் வலி ஏற்படுமாயின் மயிர்க்கூச்சம், உணவில் விருப்பமின்மை, வாந்தி, உணவு உட்கொண்டதும் வலிமிகுதல், உறுப்புகளில் அசைவு இன்மை என்பன தோன்றும். இவ்வாறு முறையே வாத பித்த கபங்களாலான வலி வேறுபாடுகளை உணர்க. இரண்டிரண்டு தோஷங்கள் கலந்து தோன்றியபோது அந்தந்த தோஷங்களுக்கு உரிய இலக்கணங்கள் கலந்து காணப்படும். மூன்று தோஷங்களாலும் தோன்றிய ஸந்நிபாத குன்மத்தாலான வலியில் மூன்று தோஷங்களுக்கும் கூறிய இலக்கணங்கள் கலந்து காணப்படும். அந்தந்த இலக்கணங்களை நன்கு அறிந்து தக்க சிகிச்சையை மேற்கொள்ள வேண்டும். 68–69

## 46. தோஷங்களால் தோன்றும் வலிக்குச் சிகிச்சை

வாதத்தால் தோன்றிய குன்மத்தில் காணப்படும் வலிக்குக் கடுக்காய், இந்துப்பு, சௌவர்ச்சல உப்பு, பிடாலவணம், யவக்ஷாரம், ஓமம், பெருங்காயம், கொத்துமல்லி விதை, புஷ்கர மூலம், மஞ்சள், வாயு விடங்கம், புளிவஞ்சி என்பனவற்றைச் சம அளவில் கொண்டு தூள் செய்து மூன்று உளுந்து எடை முதல் ஆறு உளுந்து எடைவரை புளிக்காடியைத் துணை மருந்தாக்கி உட்கொள்ளச் செய்க. பித்த குன்மத்தில் தோன்றும் வலிக்கு பால் முதுக்கன் கிழங்கு, திரிபலை, சதாவரி, சர்க்கரை, குமிழன், அதிமதுரம், பேரிச்சம்பழம், வெண்சந்தனம் எனும் இவற்றைச் சம அளவில் கொண்டு தூளாக்கி மூன்று உளுந்து எடை முதல்ஆறு உளுந்து எடை வரை இளஞ்சூடுள்ள பாலுடன் உட்கொள்ளச் செய்க. கபத்தலான குன்மத்தால் தோன்றிய வலிக்கு வசம்பு, அதிவிடயம், தேவதாரு, கடுக்காய் மிளகு குடசப்பாலை, திப்பிலி, திப்பிலி வேர், செவியம், சுக்கு, யவக்ஷாரம், கொடி வேலி வேர் எனும் இவற்றைச் சம அளவில் கொண்டு தூளாக்கி மூன்று உளுந்து எடை முதல் ஆறு உளுந்து எடைவரை வெந்நீருடன் உட்கொள்ளச் செய்க. இவ்வாறே இரண்டிரண்டு தோஷங்களால் தோன்றும் குன்மத்தாலான வலிக்கு அந்தந்த தோஷங்களுக்குக் கூறிய மருந்து பொருள்களைக் கலந்து பயன்படுத்துக. ஸந்நிபாதத்தாலான குன்மத்தில் தோன்றும் வலிக்கு மூன்று வகை மருந்துப் பொருள் களையும் கலந்து பயன்படுத்துக. 70–73

## 47. தோஷங்களாலான வலிக்குப் பொது சிகிச்சை

வாதத்தால் தோன்றும் வலிக்கு எண்ணெயை உடல்மேல் ஊற்றிக் கொண்டிருத்தல், எண்ணெய் நிரம்பியுள்ள மரத்தொட்டியில் மூழ்கி இருத்தல், எண்ணெயைத் தேய்த்துக் கொண்டு குளித்தல், வாதத்தைத் தணிக்கும் பொருள்களுடன் கூடிய உணவை உட்கொள்ளுதல் என்பன செய்யத் தக்கவை. பித்தத்தால் தோன்றும் வலிக்கு குளிர்ந்த நீர் நிரம்பிய பாத்திரத்தை வலிகொண்ட உறுப்பில் தாங்கிக் கொண்டிருத்தல் இதம் பயக்கும். கபத்தாலான வலிக்கு வாந்தி எடுத்தல், உடலைத் தேய்த்தல், (பிசைந்து விடுதல், வியர்க்கச் செய்தல், பட்டினி கிடத்தல்) கபத்தைத் தணிக்கும் லேகனம் முதலானவை செய்யத் தக்கவை. தோஷங்களுக்கு ஏற்ப நோயின் நிலைக்குத் தக்கபடி எண்ணெய்ப்பசை தோற்றுவித்தல் முதலான முறைகள் அனைத்தும் குன்மத்தால் தோன்றிய வலியில் பயன் படுத்தத் தக்கவை. 74–75

## 48. குன்மத்திற்குப் பத்தியம்

உலர்ந்த புலால், முள்ளங்கி, மீன, உலர்ந்த காய்கறிகள், பருப்பு வகைகள், உருளைக் கிழங்கு, பழங்கள் ஆகியவற்றைக் குன்ம நோய் கொண்டவன் விலக்க வேண்டும். 76

## 49. குன்மமின்றி வயிற்றில் வலி மட்டும் தோன்றுதல்

குன்ம நோய் இன்றியும் குன்மம் தோன்றக் கூடிய பகுதிகளில் வலி தோன்றக் கூடும். அதன் இலக்கணம், தோற்றம், சிகிச்சை முறைகள் ஆகியவை இனி விளக்கப்படுகின்றன. 77

## 50. வலி இலக்கணமும், தோற்றமும்

அபான வாயு சிறுநீர், மலம் ஆகியவை வெளிவர விரையும் போது அவற்றைத் தடுத்தல், அளவுக்கு மீறி உணவு உட்கொள்ளுதல், உண்ட உணவு செரியாமை, ஒருமுறை உண்டதும் மீண்டும் எதையேனும் உண்ணுதல், ஒன்றுக்கொன்று மாறான தன்மை கொண்ட பொருள்களைக் கலந்து உட்கொள்ளுதல், பசி தோன்றிய

---

லேகனம் – கீறி எடுத்தல்

போது நீரைப்பருகுதல், அல்லது திரவப் பொருளை உட்கொள்ளுதல், முளைத்த அல்லது முளை சிதைந்த தானியத்தை உட்கொள்ளுதல், மாவாலான தின்பண்டங்களை அளவுக்கு மீறி உட்கொள்ளுதல், உலர்ந்த புலாலை உட்கொள்ளுதல் போன்ற தோஷத்தைச் சீற்றமுறச் செய்யும் பொருள்களை உட்கொள்வதால் குடலில் வாயு சீற்றமடைந்து கொடிய வலியைத் தோற்றுவிக்கும். இந்த வலிதரும் துன்பத்தால் மூச்சு தடைப்படும். மூச்சு இழுத்து விடுவதில் மிக்க துன்பம் தோன்றும். 78–80

## 51. சூலம் எனும் பெயர்க்காரணம்

உடலில் சூலம் போன்ற பொருள் பொத்துக் கொள்வதால் தோன்றும் வலியைப் போன்ற துன்பத்தை விளைவிப்பதால் வலி எனும் நோய்க்குச் சூலம் எனும் பெயர் ஆயிற்று. 8

## 52. வாத வலிக்கு இலக்கணம்

உணவை உட்கொள்ளாத போது அதாவது வெற்று வயிற்றுடன் இருக்கும் போதும் வயிற்றில் கடுமையான வலிதோன்றுதல், வலி தோன்றியபோது உடல் உறுப்புகள் மரத்துப் போதல் (கடினமாதல்) மூச்சு இழுத்து விடுவது மிகவும் கஷ்டமாக இருத்தல், அபானவாயு, சிறுநீர் மலம் ஆகியவை மிகவும் சிரமப்பட்டு வெளிவிடுதல் எனும் இலக்கணங்கள் காணப்பட்டால் அது வாத சீற்றத்தால் தோன்றிய வலி என உணர்க. 82–83

## 53. பித்தத்தால் தோன்றும் வலி இலக்கணம்

நாவறட்சி, அழற்சி, வெறி, நினைவிழத்தல், வலி மிகவும் கடுமையாதல், குளிர்ந்த உணவில், குளிர்ந்த பொருளுடன் கூடியிருத்தல் போன்றவற்றில் விருப்பம் தோன்றுதல், குளிர்ச்சி தரும் பணி விடைகளால் வலி குறைதல், எனும் இலக்கணங்கள் காணப்பட்டால் அது பித்தச் சீற்றத்தால் தோன்றிய வலி என்று உணர்க. 84

## 54. கபத்தால் தோன்றும் வலி இலக்கணம்

நாக்கு பசை கொண்டு ஒட்டும் தன்மை கொண்டிருத்தல், குடல் வாயு கபம் முதலியவற்றால் நிரம்பி இருத்தல், உடல் முழுவதும்

பளுவாகத் தோன்றுதல் எனும் இலக்கணங்கள் காணப்பட்டால் அது கபத்தின் சீற்றத்தால் தோன்றிய வலி என்று உணர்க. 85-86

## 55. ஸந்நிபாதத்தால் தோன்றும் வலியின் இலக்கணம்

வாத பித்த கபங்களால் தோன்றும் வலி வகைகளுக்கு உரிய இலக்கணங்கள் கலந்து காணப்பட்டால் அது ஸந்நிபாதத்தால் தோன்றிய வலி என்று உணர்க. 87

## 56. வலிக்குச் சிகிச்சை முறைகள்

தோஷங்களால் வேறுபட்ட வயிற்றுவலி வகைகளுக்கு உரிய இலக்கணங்கள் கூறப்பட்டன. இனி அவற்றிற்கு உரிய சிகிச்சை முறைகள் விளக்கப்படுகின்றன. வயிற்று வலி நோயில் சீற்றமடைந்த வாயு முக்கிய இடம் பெறுகிறது. அது விரைவில் பரவி உடலுக்குத் துன்பம் விளைவிக்கும். எனவே முதன்முதலில் விரைந்து அதை (வாதச்சீற்றத்தைத்) தணிக்க முற்பட வேண்டும். 88

## 57. வாதத்தாலான வலியில் வியர்க்கச் செய்தல்

வாதத்தாலான வலியில் வலி தோன்றிய உடற் பகுதியில் பாயசம் (பாற்சோறு), பொங்கல் அல்லது இளஞ்சூடுள்ள எண்ணெய்ப்பசை கொண்ட புலால் முதலியவற்றால் வியர்க்கச் செய்ய வேண்டும். 89

## 58. வாதத்தால் தோன்றும் வலியில் உணவு

வாதத்தால் வயிற்றுவலி கொண்ட நோயாளிக்கு சிவதையுடன் வெப்பம் கொண்டுள்ள உணவைத் தரவேண்டும் அல்லது மணிபுங்கன் தளிர் இலைகளை எண்ணெயில் வதக்கி உட்கொள்ளச் செய்க. 90

தித்திரி முதலான வானத்தில பறக்கும் பறவைகள் காட்டில வாழும் விலங்குகளின் புலால் சாறு ஆகியவற்றை எண்ணெயுடன் பக்குவம் செய்து அல்லது பொந்துகளில் வாழும் உடும்பு முதலியவற்றின் புலாலை எண்ணெயுடன் பக்குவம் செய்து வாதத்தால் தோன்றும் வலி கொண்ட நோயாளிக்கு உண்ணக் கொடுக்க வேண்டும். 91

## 59. வாதத்தால் தோன்றும் வலிக்கு மது வகைகள்

வாதத்தால் தோன்றும் வயிற்று வலியில் சுரைஎனும் மது புளிக்காடி, சுக்தம் எனும் மது, தயிர் மீதுள்ள தெளிவு, சம அளவு நீர்கலந்த மோர், தயிர் ஆகியவற்றை இயற்கை, தோஷவலிமை, பருவம், நோயாளியின் விருப்பம் முதலியவற்றிற்கு ஏற்பப் பருகத் தரவேண்டும். 92

## 60. வாத வலிக்குக் கொள்ளுக் கஞ்சி

கொள்ளை யூஷம் எனும் கஞ்சியாகச் செய்து மாதுளைச் சுரசம் போன்றவை சேர்த்துப் புளிப்புச் சுவை தோற்றுவித்து அல்லது லாவகம் எனும் பறவையின் புலால் சாறு கலந்து அதில் சிறிது இந்துப்புத் தூள், மிளகுத் தூளும் கலந்து வாதத்தாலான வயிற்றுவலி கொண்டவனுக்கு உண்ணக் கொடுக்க வேண்டும். 93

## 61. வாதவலிக்கு விடங்காதி சூரணம்

வாயுவிளங்கம், முருங்கைப் பட்டை, கம்பிப்பாலை, கடுக்காய், சிவப்புச்சிவதை, புளிவஞ்சி, துளசி, யானைவணங்கி, ஆகியவற்றைச் சம அளவு கொண்டு தூளாக்கி எட்டில் ஒரு பங்கு சௌவர்சலஉப்புத்தூள் சேர்த்து மூன்று உளுந்து எடை முதல் ஆறு உளுந்து எடை வரை மதுவைத் துணை மருந்தாகச் செய்து வாதத்தால் தோன்றும் வயிற்று வலி நோயிற்குப் பயன்படுத்த வேண்டும். 94–95

## 62. வாத வலிக்கு பிருத்விகாதி சூரணம்

கருஞ்சீரகம், வெண்சீரகம், செவியம், ஓமம், சுக்கு, மிளகு, திப்பிலி, கொடி வேலிப்பட்டை, மோடி (திப்பிலி வேர்) இந்துப்பு எனும் இவற்றைச் சம அளவில் கொண்டு தூளாக்குக. இதில் இரண்டு அல்லது நான்கு உளுந்து எடை இளஞ்சூடுள்ள பால், அல்லது வெந்நீருடன் உட்கொள்ளச் செய்தால் வாதத்தால் தோன்றும் வயிற்றுவலி நீங்கும். அல்லது கம்பிப் பாலையை யூஷம் எனும் கஞ்சியாகச் செய்து மது ஆஸவம், மதுசுக்தம், சுரை எனும் மது எனும் இவற்றில் ஒன்றைத் துணை மருந்தாகச் செய்து உட்கொள்ளச் செய்க. 96–97

### 63. மற்றொரு முறை

அல்லது முன்கூறிய கருஞ்சீரகம் முதலியவற்றாலான சூரணத்தைத் துரிஞ்சிப் பழச் சாற்றில் மூன்று நாட்கள் ஊற வைத்துப் பாவனை செய்து அரைத்துப் பிறகு இலந்தைப் பழச்சாற்றில் மூன்று அல்லது ஏழு முறை பாவனை செய்து அந்தத் தூளின் அளவில் எட்டில் ஒரு பங்கு பெருங்காயத்தையும் சேர்த்து நன்கு அரைத்து உலர்த்துக. இந்தத் தூளில் இரண்டு முதல் நான்கு உளுந்து எடைவரை துரிஞ்சிப்பழச்சாறும், சர்க்கரையும் கலந்து உட்கொள்ளச் செய்தால் வாதத்தாலான வயிற்று வலி நீங்கும். 98

### 64. வாதவலிக்கு வத்தி

முன்கூறிய கருஞ்சீரகம் முதலானவற்றின் தூளைக் கல்வத்தில் இட்டு மாதுளம்பழச் சுரசம் அல்லது கஷாயத்துடன் ஒருநாள் முழுவதும் அரைத்து யவ தானிய அளவுள்ள வத்திகளாகச் செய்க அல்லது மாத்திரைகளாக்குக. இம்மருந்தை வெல்லம், எண்ணெய் ஆகியவற்றுடனோ அல்லது மதுவுடனோ உட்கொள்ளச் செய்தால் வாதத்தால் தோன்றும் வயிற்றுவலி நீங்கும். 99-100

### 65. பசியால் தோன்றும் வலிக்கு உணவு

வாதத்தால் வயிற்று வலி கொண்டவனுக்கு பசியும் தோன்றி வலி மிகுமானால் எளிதில் செரிமானமாகக் கூடிய உடலைச் செழிப்புறச் செய்யும் உணவு இதமாகும். சூடான பாலுடன் உணவு உட்கொள்ளச் செய்தல் இளஞ்சூடுள்ள யவாகூ எனும் கஞ்சி, அல்லது எண்ணெயுடன் பக்குவம் செய்த இளஞ்சூடுள்ள புலால் சாறு ஆகியவற்றுடன் உணவு உட்கொள்ளச் செய்தல் நன்மை தரும். 101

### 66. வாத வலியில் உணவு

வாதத்தால் வயிற்று வலி தோன்றியபோது உடல் வறண்டு காணப்படும். நோயாளிக்கு எண்ணெய்ப் பசை மிக்க உணவு தரவேண்டும். சிறப்பாகச் சுக்கு, மிளகு ஆகியவற்றைச் சேர்த்து நெய்யுடன் நன்கு பக்குவம் செய்த உணவு, உட்கொள்ளச் செய்து பிறகு வாருணி எனும் மதுவைத் துணை உணவாகப் பருகச் செய்வது வாதத்தாலான வயிற்று வலி கொண்டவனுக்குச் சுகம் தரும்.

வ்வாறு வாதத்தால் தோன்றும் வயிற்று வலிக்குச் சிகிச்சை முறைகள் விளக்கப்பட்டன. 102–103

## 67. பித்தத்தால் தோன்றும் வயிற்று வலிக்குச் சிகிச்சை

இனி பித்தச் சீற்றத்தால் தோன்றும் வயிற்று வலிக்குச் சிகிச்சை முறைகள் விளக்கப்படுகின்றன. பித்தச் சீற்றத்தால் வயிற்றுவலி தோன்றியபோது முதன்முதலில் தொண்டைவரை குளிர்ந்த நீரைப் பருகி தொண்டைக்குள் விரல்விட்டுச் சுகமாக வாந்தி எடுக்கவேண்டும். பிறகு குளிர்ச்சி தரும் பொருள்களையும் பயன்படுத்த வேண்டும். வெப்பம் தரும் பொருள்களை விலக்க வேண்டும். மணி, வெள்ளி, செம்பு ஆகியவற்றாலான பாத்திரத்தில் குளிர்ந்த நீரை நிரப்பி வலியுடன் கூடிய உடற்பகுதியில் அப்பாத்திரத்தை வைத்துக் கொண்டிருக்க வேண்டும். 105

## 68. பித்தத்தாலான வலியில் பொது சிகிச்சை

பித்தத்தால் தோன்றும் வயிற்று வலி கொண்டவர்களுக்கு வெல்லம், சம்பா அரிசி யவதானியம், பால், நெய், பேதியாகச் செய்யும் முறை, காட்டில் வாழும் விலங்குகளின் புலால் சாறு ஆகியவை நன்மை தரும். பித்தத்தைத் தணிக்கும் துவர்ப்பு, இனிப்பு கசப்புச் சுவை கொண்டவற்றைப் பயன்படுத்த வேண்டும். பிதத்தை வளர்க்கும் பொருள்களை விலக்க வேண்டும். புரச இலையை உண்ணும் விலங்குகளின் புலால் சாறு, காட்டில் வாழும் விலங்குகளின் புலால் சாறு கலந்த யூஷம் எனும் கஞ்சியில் சர்க்கரை கலந்து பயன்படுத்த வேண்டும். 106–107

## 69. பித்தவலிக்குப் பேரீச்சை முதலியன

பேரிச்சை, திராட்சை, நீரில் தோன்றும் தாமரைக் கிழங்கு தண்டு ஆகியவற்றை நீருடன் அரைத்துச் சர்க்கரை கலந்து பயன்படுத்த வேண்டும். 108

## 70. கபத்தால் தோன்றும் வயிற்றுவலிக்குச் சிகிச்சை

உணவு உட்கொண்டதும் கபத்தால் தோன்றும் வயிற்று வலி மிக்க துன்பம் தரும். அதனால் நீரில் திப்பிலித் தூள் கலந்து தொண்டை வரை உட்கொண்டு வாந்தி எடுக்கச் செய்ய வேண்டும். 109

## 71. கபத்தாலான வலிக்கு வறண்ட பொருளால் வியர்க்கச் செய்தல்

கபத்தால் வயிற்று வலி தோன்றியபோது செங்கல், மணல் போன்ற வறண்ட பொருள்களைச் சூடாக்கி அதனால் உடல் வியர்க்கும்படிச் செய்ய வேண்டும். மேலும் வெப்பத்தைத் தோற்றுவிக்கும் பணிவிடைகள் நன்மைதரும். திப்பிலி, சுக்கு ஆகியவற்றைத் தூளாகவோ, கஷாயமாகவோ செய்து பயன் படுத்துவது நன்மை தரும். 110

## 72. கபத்தாலான வலிக்கு வட்டத்திருப்பி முதலியவற்றின் தூள்

வட்டத் திருப்பி, வசம்பு, சுக்கு, மிளகு, திப்பிலி, கடுகரோகிணி ஆகியவற்றைச் சம அளவில் கலந்து தூள் செய்து அதில் இரண்டு முதல்நான்கு உளுந்து எடை கொண்டு கொடி வேலிக் கஷாயத்தைத் துணை மருந்தாக உட்கொள்ளச் செய்க. அல்லது கருந்துளசியைத் தூளாக்கிச் சேர்த்த யூஷம் எனும் கஞ்சியை உட்கொள்ளச் செய்க. 111

## 73.* ஏரண்ட துவதசகக் கஷாயம்

ஆமணக்குக் கொட்டையும் வேரும், நெருஞ்சிவேர், ஓரிலை, மூவிலை, பண்டங்கத்தரி, முள்ளுக் கத்திரி பெரிய இலைகளைக் கொண்ட ஓரிலை, ஸஹதேவி காட்டுப் பயறு காட்டு உளுந்து, நீர் முள்ளிவேர் ஆகிய இவற்றைச் சம அளவாக அனைத்தும் நான்கு பிரஸ்தம் அளவில் கொண்டு ஒரு துரோணம் அளவு நீர் சேர்த்து நான்கில் ஒரு பங்கு மிகுந்திருக்கக் கஷாயம் காய்ச்சுக. அத்துடன் தகுந்த அளவு (அதிக அளவு கஷாயம் கார்ப்புச்சுவை கொள்ளா தவாறு) சேர்த்து மண்பாத்திரத்தில் பத்திரப்படுத்துக. நாவறட்சி தோன்றிய பொழுதெல்லாம் நீருக்கு மாறாக இந்தக் கஷாயத்தைப் பருகச் செய்க. இவ்வாறு நாள் முழுவதும் பருகுவதால் வாதத்தாலான வலி, பித்தத்தாலான வலி, மற்றும் கபத்தால் தோன்றிய வலி, ஸந்நிபாதவலி போன்றவை தீரும். காற்றால்

---

*ஏரண்டத்வாதசக - ஆமணக்கு முதலான பன்னிரண்டு பொருள்கள்.

மேகம் சிதறுண்டு போவது போல இந்தக் கஷாயத்தால் அந்நோய்கள் சிதறிப் போகும்.

*112–115*

## 74. கபத்தாலான வலிக்குப் பிப்பல்யாதி பற்பம்

திப்பிலி, ஸர்ஜக்ஷாரம்; யவக்ஷாரம், கொடிவேலி வேர், வெட்டி வேர் எனும் இவற்றைச் சம அளவில் கொண்டு எரித்துச் சாம்பலாக்குக. இது பிப்பல்யாதி பற்பமாகும். இதில் நான்கு குன்றிமணி முதல் ஓர் உளுந்து எடை வரை கொண்டு வெந்நீருடன் உட்கொள்ளச் செய்தால் கபத்தாலான வலி நீங்கும். *116–117*

## 75. விலாவலி முதலியவற்றின் இலக்கணம்

தவறான உணவு, பழக்கவழக்கங்களால் சீற்றம் அடைந்த கபம் விலாப்பகுதியில் தங்கி வாயுவைத் தடுக்கும். அவ்வாறு தடைப் பட்டவாதம் விரைவில் வயிற்றில் வீக்கத்தையும் குடகுட எனும் ஒலியையும் தோற்றுவிக்கும். அப்பொழுது விலாப் பகுதிகளில் ஊசியால் குத்துவது போன்ற வலி தோன்றும். வலியின் துன்பம் தாளாமல் நோயாளி மூச்சுவிடவும் மிகவும் கஷ்டப்பட்டுக் கொண்டு உணவில் விருப்பமின்றி இருப்பான். துன்பத்தில் உறக்கமும் கொள்ளான். இவ்வாறு கபமும் வாதமும் சீற்றமுறுவதால் தோன்றும் நோய் பார்ச்வசூலை அல்லது பக்க (விலா) வலி எனப்படும். *118–119*

## 76. விலாவலிக்கு புஷ்கராதி சூரணம்

புஷ்கர மூலம், தூய பெருங்காயம், சௌவர்ச்சல உப்பு, பிடாலவணம், இந்துப்பு, கொத்துமல்லி விதை, கடுக்காய் எனும் இவற்றைச் சம அளவில் கொண்டு தூளாக்குக. இது புஷ்கர மூலாதி சூரணமாகும். இதில் இரண்டு முதல் நான்கு உளுந்து எடைவரை யவ கஷாயத்தை அநுபானமாகக் கொண்டு உட்கொள்ளச் செய்தால் பார்ச்வசூலை, வயிற்றுவலி, வஸ்தி (சிறுநீர்க்குண்டிகை) வலி, ஆகியவற்றில் மிக்க பயன்தரும். மண்ணீரல் வீக்கத்திற்கு உரிய சிகிச்சையைக் கூறும் அத்தியாயத்தில் கூறிய ஷட்பல கிருதம்

---

1. பிப்பல்யாதி – திப்பிலி முதலான

இரண்டு தோலா அளவு கொண்டு அதில் தூய பெருங்காயம் நான்கு குன்றி மணி எடை கலந்து உட்கொள்ளச் செய்க. 120-121

## 77. வேறு முறை

பாலைக் காய்ச்சிச் (சூடுள்ள போதே) துரிஞ்சிப்பழச் சாற்றைக் கலந்து உட்கொள்ளச் செய்தால் விலா வலி தீரும் அல்லது ஆமணக்கு எண்ணெயை மது, தயிர்த்தெளிவு பால், புலால்சாறு ஆகியவற்றில் ஒன்றுடன் நோயாளியின் இயற்கை காலம் முதலியவற்றிற்கு ஏற்ப உட்கொள்ளச் செய்க. பசி எடுத்ததும் பால் அல்லது காட்டு விலங்கு காட்டுப் பறவைகளின் புலால் சாற்றுடன் உணவு உட்கொள்ளச் செய்க. 122-123

## 78. வயிற்றுவலி இலக்கணம்

தவறான உணவு, பழக்கவழக்கங்கள் முதலியவற்றால் சீற்றம் பெற்ற வாயு முதலில் ஜடராக்னியின் வலிமையைக் குறைக்கும். பிறகு வயிற்றில் மேலும் மிகுந்த அளவில் சீற்றம் பெற்ற நோயாளி உண்ட உணவை வயிற்றுக்குள் அசையாமல் இருக்கச் செய்து சீராகச் செரிமானமடைய விடாமற் செய்து விடும். அந்நிலையில் நோயாளி மிகவும் சிரமப்பட்டு மூச்சு விட்டுக் கொண்டிருப்பான். அப்பொழுது பக்குவம் பெறாத உணவுச் சாறு, மல தோஷம் ஆகியவற்றால் துன்புற்று நோயாளி படுக்கவோ, உட்காரவோ, நிற்கவோ முடியாமல் சிரமப்படுவான். இவ்வாறு சீற்றம் பெற்ற வாயு மற்றும் ஆம (உணவு செரிமானமாகாத) தோஷங்களால் வயிற்றில் தோன்றும் வலி வயிற்று வலி (குக்ஷிசூலை) எனப்படும். 124-125

## 79. வயிற்று வலிக்குச் சிகிச்சை

நோயாளியின் உடலில் உள்ள தோஷத்தின் வலிமையை அறிந்து அதற்கு ஏற்ப வாந்தி எடுக்கச் செய்வதோ, அல்லது பட்டினி கிடத்தலோ மேற்கொள்ள வேண்டும். பிறகு மாதுளம் பழச்சாறு, மோர் ஆகியவற்றில் பெருங்காயம், இந்துப்பு, பஞ்சகோலம் முதலான செரிமானத்தைத் தூண்டும் மருந்துப் பொருள்களின் தூளைக் கலந்து பேயா விலேபி முதலான கஞ்சிவகைகளுடன் உட்கொள்ளச் செய்க. 126

## 80. வயிற்றுவலிக்கு நகராதி[1] கஷாயம்

சுக்கு, ஓமம், செவியம், ஸௌவர்சலஉப்பு, பிடாலவணம் சிவதை விதை, சிவப்பு, அல்லது வெள்ளை ஆமணக்கு விதை, கண்டங்கத்தரி, முள்ளுக்கத்தரி விதைகள் ஆகியவற்றைச் சம அளவில் கொண்டு நான்கு மடங்கு நீர்விட்டுக் காய்ச்சி நான்கில் ஒருமடங்கு மிகுந்திருக்கக் கஷாயம் செய்க. இதில் தகுந்த அளவு உட்கொள்ளச் செய்தால் வயிற்றுவலி நீங்கும். 127–128

## 81. வயிற்று வலிக்கு பேதியாகச் செய்தல்

வசம்பு, சௌவர்ச்சல உப்பு, பெருங்காயம், கோஷ்டம், அதிவிடயம், கடுக்காய், குடசப்பாலை எனும் இவை ஒவ்வொன்றும் ஒரு தோலா (ஸௌவர்ச்சலம் 6 உளுந்து எடை) பெருங்காயம் 3 உளுந்து எடை) வீதம் கொண்டு தூளாக்குக. இதில் மூன்று முதல் ஆறு உளுந்து எடை வரை கொண்டு இளஞ்சூடுள்ள நீருடன் உட்கொள்ளச் செய்தால் வயிற்று வலியைப் போக்கும். நோயாளியின் உடலில் உள்ள தோஷங்களின் வலிமை, நோயாளியின் உடல் வலிமை முதலியவற்றைக் கண்டு மிகுந்த அளவு இளஞ்சூடுள்ள நீருடன் பேதியாகச் செய்வதற்காகப் பயன்படுத்துக. 129

## 82. வயிற்றுவலிக்கு வஸ்தி முறை

வயிற்று வலி கொண்ட நோயாளிக்கு சீற்றமுற்ற தோஷங்களை வெளியேற்ற ஏரண்டாதி தைலம் (ஆமணக்கு எண்ணெய்) அல்லது ஹிங்க்வாதி கிருதம் என்பதால் எண்ணெய் வஸ்தி மற்றும் நிருஹவஸ்தி கொடுப்பது நலம் தரும். 130

## 83. வயிற்று வலி ஒற்றடம் கொடுத்தல் முதலியன

வயிற்று வலியில் சால்வணாதி உபநாஹம், எண்ணெய் மருந்தைப் பயன்படுத்தல், மருந்து திரவத்தை உடல் மேல் ஊற்றிக் கொண்டிருத்தல் புளிப்புக்காடியைக் கொண்டு வயிற்றை நனைத்துக் கொண்டிருத்தல், வாதத்தைத் தணிக்கும் மருந்துப் பொருள்களின் கஷாயத்தால் நிரப்பிய தொட்டியில் மூழ்கியிருக்கச் செய்தல் போன்ற முறைகளைப் பயன்படுத்த வேண்டும். 131

---

1. நாகரம் – சுக்கு

## 84. இதயவலியின் இலக்கணம்

தவறான உணவு, பழக்கவழக்கங்கள் முதலியவற்றால் சீற்றம் பெற்ற கபமும் பித்தமும் தடுப்பதால் தடைப்பட்ட வாயு உணவு ரஸத்துடன் கலந்து இதயத்தை அடைந்து தங்கிவிடுவதால் அங்கு வலி தோன்றும். இந்த வலியாலான துன்பத்தால் அந்நோயாளியின் மூச்சு வெளிப்படுதல் மிகவும் தடைப்படும். இத்தகைய இலக்கணம் கொண்ட நோய் இதயவலி எனப்படும். இது உணவு ரசமும் வாயுவும் கலப்பதால் தோன்றும். *132*

## 85. இதயசூலைக்குச் சிகிச்சை

ய நோய்களுக்குக் கூறிய சிகிச்சை முறைகளுக்குத் தகுந்தபடி இதய சூலை எனும் நோயில் பயன்படுத்த வேண்டும். *133*

## 86. வஸ்தி சூலை இலக்கணம்

சிறுநீர், மலம் ஆகியவற்றின் வேகத்தைத் தடுப்பதால் வாயு சீற்றம் பெற்று சிறுநீர்க் குண்டிகை (வஸ்தியில்) தங்கி அதை நான்கு பக்கங்களிலும் சூழ்ந்து கொள்ளும் அதனால் நோயாளிக்குச் சிறுநீர்க் குண்டிகை, தொடை இடுக்கு, தொப்புள் எனும் பகுதிகளில் வலி தோன்றும். மற்றும் மலம், சிறுநீர், அபான வாயு என்பன வெளியேறாமல் தடைப்படும். இது வஸ்தி சூலை எனும் நோயாகும். *134*

## 87. மூத்திர சூலை (நீர்ச்சுருக்கு) இலக்கணம்

தவறான உணவு, பழக்க வழக்கங்கள் ஆகியவற்றால் சீற்றமடைந்த வாயு ஆண் குறி, குடல் எனும் பகுதிகளில் துன்பத்தைத் தோற்றுவிக்கும். சிறுநீரை வெளிவராமல் தடுக்கும். அப்பொழுது தொப்புள், தொடை இடுக்குள், விலாப்பக்கங்கள், வயிற்றின் முழுப்பகுதி ஆகியவற்றால் வலி தோன்றும் இது மூத்திர சூலை எனப்படும். இது சீற்றமடைந்த உபாயத்தால் தோன்றுவதாகும். *135*

## 88. விஷ்டா சூலை (மலச்சூலை) இலக்கணம்

வறட்சித் தன்மை கொண்ட உணவு, பழக்கவழக்கங்கள் ஆகியவற்றால் முதலில் குடலில் உள்ள வாதம் சீற்றம் பெற்று மலத்தை வெளியேறாமல் தடுக்கும். பிறகு சடராக்னியின் வலிமையைக் குறைத்து குடற்பகுதியில் உள்ள எல்லா ஸ்ரோதஸ் வழிகளையும் சுற்றிக் கொண்டு இடது பக்கம் அல்லது வலது பக்கத்தில் கடும் வலியைத் தோற்றவிக்கும். தடுக்கப்பட்டுச் சீற்றமுற்றவாதம் மிக்க ஒலியைத் தோற்றுவித்துக் கொண்டு வயிற்றுக்குள் முழுப்பகுதியிலும் விரைவாகப் பரவும். இந்நிலையில் நோயாளிக்கு நாவறட்சி மிகும். தலைசுற்றும். நினைவிழத்தலும் தோன்றும். மலத்தை வெளியேற்றிய பிறகு அல்லது சிறுநீரை வெளியேற்றிய பிறகும் துன்பம் தணியாது. இத்தகைய இலக்கணங்களைக் கொண்ட நோய் விஷ்ட சூலை எனப்படும். இது மிகவும் துன்பம் விளைவிக்கும் நோயாகும். *136–139*

## 89. விஷ்டா சூலைக்குச் சிகிச்சை

தோஷத்தின் சீற்றம், நோயின் இலக்கணம், சிகிச்சைமுறைகள் நன்கு அறிந்துள்ள மருத்துவன் விரைவாக தோஷத்தைத் தணிக்கும் சிகிச்சை மேற்கொள்ள வேண்டும். அதாவது பேதியாகச் செய்தல், வாந்தி எடுக்கச் செய்தல் எனும் முறைகளால் உடலைத் தூய்மைப் படுத்த வேண்டும். பிறகு வியர்க்கச் செய்யும் முறை, நிரூஹண வஸ்தி, எண்ணெய்வஸ்தி ஆகியவற்றைப் பயன்படுத்தவேண்டும். முன்கூறிய குடலைத் தூய்மைப்படுத்தும் சூரணம், கஷாயம் போன்றவைவற்றைப் பயன்படுத்த வேண்டும். மற்றும் உதாவர்த்தம் எனும் நோயைப் போக்கும் முறைகளையும், மேலும் நோயாளிக்குச் சுகம் தரக் கூடிய உணவு முறைகள் முதலானவற்றைப் பயன்படுத்த வேண்டும். *140–141*

## 90. அவிபாக சூல இலக்கணம்

அளவுக்கு மீறி உட்கொள்ளப்பட்ட உணவு சடராக்னி குறைந்திருப்பதால் குடற்பகுதியில் நிலையாகத் தங்கிவிடும். அப்பொழுது சீற்றமடைந்த வாதம் மலத்தைச் சூழ்ந்து கொண்டுவிடும். அதனால் பக்குவம் பெறாத உணவு கொடிய வலியைத் தோற்றுவிக்கும். மேலும், நினைவிழத்தல், வயிற்று வீக்கம், அழற்சி, இதயத்தில்

கலக்கம் தோன்றும். இது விலம்பிகா எனும் நோயாகும். மற்றும் தானாகவே (மருந்தின்றி) பேதியாதல், வாந்தியாதல், உடல் நடுக்கம் போன்ற இலக்கணங்கள் காணப்படும். முடிவில் நினை விழத்தலும் ஏற்படும். உண்ட உணவு செரிமான மாகாமையில் இருப்பதால் தோன்றிய இந்நோய் உணவின் தோஷத்தால் தோன்றாது என்று உணர்க. *143–144*

## 91. அவிபாக சூல சிகிச்சை

வாந்தி எடுக்கச் செய்தல், பட்டினி கிடத்தல், வியர்க்கச் செய்தல், உணவை பக்குவம் செய்யும் மருந்து முறைகள், வலியைப் போக்கும் பலவர்த்திகள், க்ஷார மருந்து, மாத்திரைகள் போன்றவற்றைப் பயன்படுத்துவது நல்லது மற்றும் எல்லாவகையான வலிகளில் காரணம், தோஷம், நோயின் தன்மை, நோயாளியின் தன்மை, காலம், தேசம் முதலியவற்றை நன்கு ஆராய்ந்து சிகிச்சை செய்ய வேண்டும். குன்மத்தால் தோன்றிய வலியில் வாதம் முதலிய வற்றின் நிலையை அறிந்து தகுந்தபடி தூய்மைப்படுத்தும் முறை, பட்டினி கிடத்தல், வியர்க்கச் செய்தல், சடராக்னியைத் தூண்டும் மருந்து, செரிமானமாகச் செய்யும் மருந்து அர்க்கம், கஷாயம், க்ஷாரம், ஆஸவம், அரிஷ்டம், சூர்ணம் முதலியவற்றைப் பயன்படுத்த வேண்டும்.

**சிறுங்கட்டூர், நடாதூர் எஸ்.என். ஸ்ரீராமதேசிகன் எழுதிய ஸம்ஸ்க்ருத ஸம்ஹிதை உத்தரஸ்தானம் தமிழாக்க நூலின் குன்ம பிரதிஷேதம் எனும் நாற்பத்தி இரண்டாம் அத்தியாயம் முற்றும்**

# ஹ்ருத்ரோக பிரதிஷேதம்

## எனும்

## நாற்பத்திமூன்றும் அத்தியாயம்

இனி ஸுசுருதர்முதலான சீடர்களுக்குத் தன்வந்தரி பகவான் உபதேசம் செய்தபடி இதய நோய்க்கு உரிய சிகிச்சை முறைகளை விளக்குவோம். 1–2

### 1. இதயநோய் இலக்கணம்

மலம், சிறுநீர் முதலியவை வெளிவர இருக்கும்போது அவற்றின் வேகத்தைத் தடுத்தல், வெப்பம் தருவதும், வறட்சித் தன்மை கொண்டதுமான உணவை அளவுக்கு மீறிப் பயன்படுத்தல், உடலுக்கு ஒவ்வாத உணவை உட்கொள்ளுதல், போன்றவற்றால் கேடுற்ற தோஷங்கள் இதயத்தை அடைந்து அங்கு இரத்தத்தைக் கெடுப்பதால் இதயத்தில் துன்பம் தோன்றும். அது இதய நோய் எனப்படும். 3–4

### 2. இதய நோய்களின் எண்ணிக்கை

வாதம், பித்தம், கபம் ஆகிய தோஷங்கள் தனித்தனியே கேடுறுவதால் தோன்றும் இதயநோய் மூவகை, கிருமிகளால் தோன்றும் இதயநோய் ஒருவகை ஆகமொத்தம் இதய நோய் நான்கு வகைப்படும். இனி இவற்றின் இலக்கணங்களும், சிகிச்சை முறைகளும் தனித்தனியாக விளக்கப்படுகின்றன. 5

---

ஹ்ருத்ரோகபிரதிஷேதம் – இதயநோய்களுக்கு உரிய சிகிச்சை முறைகளை விளக்குவதால் இந்த அத்தியாயம் ஹ்ருத்ரோக பிரதிஷேதம் எனும் பெயர் பெற்றது.

### 3. வாதத்தால் தோன்றும் இதய நோய் இலக்கணம்

வாதத்தால் தோன்றிய இதய நோயில் இதயம் இறுகப்பிடிப்பது போலவும், ஊசியால் குத்துவது போலவும், மத்தினால் இதயத்தைக் கடைவது போலவும், கூரிய கருவியால் பிளப்பது போலவும், இதயம் வெடித்துவிடுவது போலவும் துன்பம் தோன்றும். 6

### 4. பித்தத்தால் தோன்றும் இதய நோய் இலக்கணம்

பித்தத்தினால் தோன்றும் இதயநோயில் நாவறட்சி, வெப்பம், அழற்சி, உலர்ந்து போதல், இதயம் கலங்குதல், புகை வெளிவருவது போன்ற உணர்ச்சி, நினைவிழத்தல், அதிக அளவு வியர்த்தல் எனும் இலக்கணங்கள் காணப்படும். 7

### 5. கபத்தால் தோன்றும் இதய நோயின் இலக்கணம்

கபம் இதயத்தைச் சூழ்ந்து கொண்டபோது உடல் பளுவாகத் தோன்றுதல், கபம், உமிழ் நீர் பெருக்கம், உணவில் விருப்பம் தோன்றாமை, இதயம் முதலியன அசைவற்றுப் போதல், சடராக்னிக் குறைவு எனும் இலக்கணங்கள் காணப்படும். 8

### 6. கிருமிகளால் தோன்றிய இதயநோய் இலக்கணம்

மூன்று தோஷங்களும் கேடுறுவதுடன் கிருமிகளால் தோற்றுவிக்கப்படும் இதயநோயில் நாவில் கொழகொழப்பு குமட்டல், அடிக்கடி எச்சில் துப்புதல், ஊசியால் குத்துவது போல இதயத்தில் வலி, உமிழ் நீர்ப் பெருக்கம், கண்கள் இருண்டு போதல், சுவையின்மை, கண்களைச் சுற்றிலும், அடிப்பகுதியிலும் கருநிறம் தோன்றுதல் உடல் உலர்ந்து போதல் எனும் இலக்கணங்கள் காணப்படும். 9

### 7. இதய நோயில் தோன்றும் உபத்திரவங்கள்

வாத பித்தங்களால் தோன்றும் இதய நோயில் தலைசுற்றல், சோர்வு, உடல் உறுப்புகள் தளர்ந்து போதல், முகமும், (வாயும்) தாதுக்களும் உலர்ந்துபோதல் போன்ற உபத்ரவங்கள் தோன்றும். இவ்வாறே கிருமிகளால் தோன்றும் இதய நோயில் சிலேத்துமத்தால் தோன்றும் கிருமிகளால் துன்பம் நேரும். 1

## 8. வாதத்தால் தோன்றும் இதய நோய்க்குச் சிகிச்சை

வாதத்தால் தோன்றிய இதய நோய் கொண்டவனுக்கு முதலில் எண்ணெய்ப் பசையைத் தோற்றுவித்துச் தச மூல கஷாயத்தில் உப்பும் நெய்யும் (எண்ணெயும்) சேர்த்துத் தொண்டை வரை உட்கொள்ளச் செய்து விரலை விட்டுக் குடைந்து வாந்தி எடுக்கச் செய்ய வேண்டும். 11

## 9. வாதத்தாலான இதய நோய்க்குப் பிப்பல்யாதி சூரணம்

சிறு திப்பிலி, ஏலக்காய், வசம்பு, தூய பெருங்காயம், யவக்ஷாரம், இந்துப்பு, ஸௌவர்ச்சல உப்பு, சுக்கு, ஓமம் எனும் இவற்றைச் சம அளவு கொண்டு தூளாக்குக. முன்கூறியபடி உடலைத் தூய்மைப்படுத்திக் கொண்ட நோயாளி இந்தச் சூரணத்தில் இரண்டு முதல் நான்கு உளுந்து எடைவரை பழச்சாறு, காடி, கொள்ளுக் கஷாயம், மது, ஆஸவம் எனும் இவற்றுடனாவது அல்லது நெய், எண்ணெய், வசை, கொழுப்பு எனும் நான்கு வகை எண்ணெய்களில் ஏதேனும் ஒன்றுடனாவது உட்கொள்ளச் செய்க. 12–13

## 10. வாதத்தாலான இதய நோயில் பத்தியம்

வாதத்தாலான இதயநோயில் பழைய சம்பா அரிசிச் சோற்றுடன் காட்டில் வாழும் விலங்குகள், பறவைகள் ஆகியவற்றின் புலால் சாறு மற்றும் நெய் ஆகியவற்றுடன் உட்கொள்ளச் செய்க. பித்ரதாரு முதலான கூட்டுப் பொருள்களில் வாதத்தைப் போக்கும் மருந்துப் பொருள்களின் விழுதையும் கஷாயத்தையும் சேர்த்துச் செய்த எண்ணெய் மருந்தைக் கொண்டு தக்க அளவு வஸ்தி முறையைப் பயன்படுத்த வேண்டும். 14

## 11. பித்தத்தாலான இதய நோய்க்குச் சிகிச்சை

பித்தத்தால் தோன்றிய இதயநோயில் பெருங்குமிழன் தூள் 3 உளுந்து எடை, அதிமதுரத் தூள் 2 உளுந்து எடை, தேன் ஒரு தோலா சர்க்கரை 2 தோலா தாமரை அல்லது கோஷ்டத்தின் தூள் உளுந்து எடை எனக்கொண்டு நீரில் கலந்து தொண்டைவரை பருகச் செய்து வாந்தி எடுக்கச் செய்க. வாந்தி எடுத்தபிறகு ஜீவநிய கணத்தைச் சேர்ந்த இனிப்புச் சுவை கொண்ட கூட்டுப் பொருள்களின் விழுது

மற்றும் கஷாயத்துடன் செய்த நெய் மருந்து அல்லது காகோலி முதலான கூட்டுப்பொருள்களின் விழுதும் கஷாயமும் சேர்த்துச் செய்த நெய் மருந்து அவ்வாறே பித்தக் காய்ச்சலுக்குக் கூறிய சிகிச்சை முறையில் பித்தத்தைத் தணிக்கும் பொருள்களின் கஷாயம் முதலியவற்றை உட்கொள்ளச் செய்க. 15

## 12. பித்தத்தலான இதய நோயில் வஸ்தி முறை

பித்தத்தால் தோன்றிய இதய நோய் கொண்டவனுக்கு மருத்துவன் முதலில் மான் முதலான விலங்குகளின் புலால் சாற்றுடன் இனிப்புச் சுவை கொண்ட பொருள்களைச் சேர்த்து நெய்யுடன் பக்குவம் செய்து மனநிறைவு ஏற்படும் வரை பருகச் செய்க. அதன்பிறகு அதிமதுரத்தின் விழுதும் கஷாயமும் கலந்து செய்த எண்ணெயில் தேன் கலந்து எண்ணெய் வஸ்தி முறையாகப் பயன்படுத்தவேண்டும். 16

## 13. கபத்தாலான இதய நோய் சிகிச்சை

கபத்தால் தோன்றிய இதய நோயில் முதலில் வசம்பு, வேம்பு, ஆகியவற்றின் கஷாயத்தைத் தொண்டை வரை உட்கொள்ளச் செய்து வாந்தி எடுக்கச் செய்க. அதன் பிறகு வாதத்தால் இதய நோய்க்குக் கூறிய வாதத்தைப் போக்கும் பொருள்களின் தூளை இளஞ்சூடுள்ள வெந்நீருடன் உட்கொள்ளச் செய்க. அவ்வாறே வாதத்தலான இதய நோய்க்குக் கூறிய பழைய அறுபதாங்குறுவை அரிசிச் சோற்றைக் காட்டு வாழ்விலங்குகளும், மற்றும் பறவைகளின் புலால் சாற்றுடன் நெய்யுடன் உட்கொள்ளச் செய்க. 17

## 14. வேறு முறை

தூய்மைப் படுத்தல், மற்றும் தணித்தல் எனும் செயல்களுக்குக் கூறிய மருக்காரை முதலிவற்றைப் பயன்படுத்தல் அல்லது திரவிய ஸங்கிரஹணீய அத்தியாயத்தில் கூறிய கோரைக்கிழங்கு முதலியவற்றின் அல்லது திரிபலையின் அல்லது கஷாயத்தை உட்கொள்ளச் செய்க. அல்லது கருஞ்சிவதைத் தூள் 3 உளுந்து எடை நெய்யுடன் கலந்து உட்கொள்ளச் செய்து பேதியாகச் செய்க. மற்றும் மூடகற்பத்திற்கான சிகிச்சை முறையில் கூறிய பலாசைலத்தை வஸ்தி முறையில் பயன்படுத்துக. 18-19

## 15. கிருமியால் தோன்றிய இதய நோய்க்குச் சிகிச்சை

கிருமிகளால் தோன்றிய இதய நோய்க்கு முதலில் எண்ணெய்ப் பசையைத் தோற்றுவித்து அரிசிச் சோற்றை புலால் அல்லது புலால் சாற்றுடன் உட்கொள்ளச் செய்க. அல்லது வறுத்த எள்ளைத் தூளாக்கித் தயிருடன் மூன்று நாட்கள் உட்கொள்ளச் செய்து பிறகு நான்காவது நாள் முன்கூறிய பேதியாகச் செய்யும் முறையைப் பின்பற்றுக. 20

## 16. கிருமியால் தோன்றிய இதய நோயில் பேதியாகச் செய்தல்

நறுமணப் பொருள்களான இலவங்கப்பட்டை, ஏலக்காய், )லவங்க பத்திரி, சிறுநாகப்பூ ஆகியவற்றின் தூளுடன் இந்துப்பு கலந்து பேதியாகக் கொடுக்க வேண்டும். பேதியான பிறகு காடியுடன் வாயு விளங்கத் தூள் கலந்து உட்கொள்ளச் செய்க. 5

அவ்வாறே சிரகத் தூளைச் சர்க்கரை கலந்து பேதியாகச் செய்யும் மருந்துகளைக் கலந்து அதனால் பேதியாதல் செய்க. இவ்வாறு இந்த மருந்துகளைப் பயன்படுத்துவதால் இதயப் பகுதியைச் சார்ந்துள்ள கிருமிகள் மலத்துடன் வெளிவந்துவிடும். அவை வெளிப்பட்டவுடன் வாயுவிளங்கக் கஷாயத்துடன் செய்த யவ தானியத்தூளைப் பயன்படுத்துக. 22

**சிறுங்கட்டூர், நடாதூர் எஸ்.என். ஸ்ரீராமதேசிகன் எழுதிய ஸுச்ருத ஸம்ஹிதை உத்தரஸ்தானம் தமிழாக்க நூலின் இதய நோய்ச் சிகிச்சை எனும் நாற்பத்தி மூன்றாம் அத்தியாயம் முற்றும்**

# பாண்டு ரோக பிரதிஷேதம்

## எனும்

### நாற்பத்தி நான்காம் அத்தியாயம்

இனி ஸுசுருதர் முதலான சீடர்களுக்கு தன்வந்தரி பகவான் உபதேசம் செய்தபடி பாண்டு நோய்க்கு உரிய சிகிச்சை முறைகளை விளக்குவோம். 1-2

### 1. பாண்டு நோய்க்குக் காரணம்

அளவுக்கு மீறிக் கலவியில் ஈடுபடுதல், புளிப்பு, உவர்ப்புச் சுவைகளைக் கொண்ட பொருள்களை அளவுக்கு மீறிப் பயன் படுத்தல், மதுவை மிகுதியாகப் பருகுதல், மண்ணைத் தின்பது, பகலில் உறங்குவது, மிகவும் தீக்ஷ்ணமான பொருள்களைப் பயன்படுத்தல், எனும் இச்செயல்களால் சீற்றமுற்ற தோஷத்தால் மெய்த்தோல் மற்றும் இரத்தம் வெண்மை அல்லது மஞ்சள் நிறத்தைக் கொண்டுவிடும். இது பாண்டு நோய் எனப்படும். 3

### 2. பாண்டு நோய் வகைகள்

வாத பித்த கபங்களால் தனித்தனியாகத் தோன்றுபவை மூன்று வகைகள், மூன்றும் ஒன்றாக இணைந்து சீற்றம் பெறுவதால் தோன்றுவது ஒன்று என நான்காவது வகை எனப் பாண்டு நோய் நான்கு வகைப்படும். 4

பாண்டு சோகை - இந்நோய்க்கு உரிய சிகிச்சை முறைகளை விலக்குவதால் இந்த அத்தியாயம் பாண்டுரோக பிரதிஷேதம் எனும் பெயர் பெற்றது.

## 3. பாண்டு நோய்க்கு முற்குறி

உடலின் மேல் தோலில் வெடிப்புகள் தோன்றுதல், உமிழ்நீர் மிகுதியாகத் தோன்றுவதால் அடிக்கடி எச்சில் துப்புதல் உடல் உறுப்புகளில் தளர்ச்சி, மண்ணைத் தின்பதில் விருப்பம், கண்களில் வீக்கம், மலமும் சிறுநீரும் மஞ்சள் நிறம் கொண்டிருத்தல், உணவு செரியாமை என்பன பாண்டு நோய்க்கு முற்குறிகளாகும். 5

## 4. பாண்டு நோயின் வேறு பெயர்கள்

காமாலை, அபாநகி, பாண்டு நோய், கும்பம், லாகரகம் அலஸகம் அலசம் எனப் பல பெயர்களில் இந்நோய் குறிப்பிடப் படுகிறது. 6

## 5. வாதத்தால் தோன்றும் பாண்டு நோய் இலக்கணம்

கண்கள் கருநிறம் கொண்டிருத்தல், உடல்மேல் கறுப்பு அல்லது நீல நிறத்தில் நரம்புகள் தோன்றுதல், மலம், சிறுநீர், நகம், முகம் ஆகியவை கருநிறம் கொள்ளுதல் மற்றும் வாதத்தால் தோன்றக் கூடிய உபத்திரவங்கள் காணப்படுதல் என்பன வாதத்தால் தோன்றிய பாண்டு நோய் இலக்கணங்களாகும். 7

பாண்டு சோகை அந்நோய்க்கு உரிய சிகிச்சை முறைகளை விளக்குவதால் இந்த அத்தியாயம் பாண்டு ரோக பிரதிஷேதம் எனும் பெயர் பெற்றது.

## 6. பித்தத்தால் தோன்றிய பாண்டு நோய் இலக்கணங்கள்

கண்கள் மஞ்சள் நிறம் கொண்டிருத்தல், உடலில் சிரைகள் மஞ்சள் நிறம் கொண்டு காணப்படுதல், மலம், சிறுநீர், நகம், முகம் ஆகியவை மஞ்சள் நிறம் கொள்ளுதல், அழற்சி, நாவறட்சி போன்ற பித்தச்சீற்றத்தால் தோன்றக்கூடிய உபத்ரவங்கள்காணப்படுதல் என்பன பித்தத்தால் தோன்றும் பாண்டு நோய் இலக்கணங்களாகும். 8

## 7. சிலேத்துமத்தாலான பாண்டு நோய் இலக்கணம்

கண்கள் வெண்ணிறம் கொண்டிருத்தல், உடல் முழுவதிலும் சிரைகள் வெள்ளையும் கொண்டு காணப்படுதல், மலம், சிறுநீர்,

நகம், முகம் ஆகியவை வெண்மையாகக் காணப்படுதல், சோம்பல், சோர்வு போன்ற கபத்தால் தோன்றும் மற்ற இலக்கணங்கள் கொண்டிருத்தல் என்பன கபத்தால் தோன்றிய பாண்டு நோயின் இலக்கணங்களாகும். 9

## 8. மூன்று தோஷங்களாலும் தோன்றும் பாண்டு நோய் இலக்கணம்

முன்பு வாதம் முதலியவற்றிற்கு வேறு வேறாகக் கூறிய இலக்கணங்கள் கலந்து காணப்பட்டால் மூன்று தோஷங்களும் சீற்றம் பெறுவதால் தோன்றிய பாண்டு நோய் என்று அறிக. 10

## 9. காமாலை இலக்கணம்

பாண்டு நோய் அல்லது வேறு நோய்கள் தணிந்தபின் உடனே தயிர், புளி போன்ற புளிப்புச் சுவைமிக்க பொருள்களை அதிக அளவில் உட்கொண்டால், அல்லது வேறு கூடாத (அபத்திய) வற்றைப் பயன்படுத்தினால் பித்தம் சீற்றம் பெற்று உடலை வெண்ணிறம் அல்லது மஞ்சள் நிறம் கொள்ளச் செய்து சோம்பல் முதலிய இலக்கணங்களைத் தோற்றுவிக்கும். அந்நோய் காமாலை எனப்படும். கும்பஸம் என்பது காமாலையில் ஒரு வகையாகும். இதில் உடலில் மிக்க வீக்கம், இணைப்புகளில் வலி எனும் துன்பங்கள் தோன்றும். 12

## 10. லாவர காலஸக இலக்கணம்

இந்தக் கும்ப காமாலையில் தகுந்த சிகிச்சை செய்யாவிடில் காய்ச்சல், உறுப்புகளில் வலி, தலைசுற்றல், உறுப்புகள் விட்டுப் போதல் போன்ற வலி, சோம்பல், உடல்வலிமையும், மாமிசம் முதலான தாதுக்களும் குறைந்து போதல், போன்ற இலக்கணங்கள் தோன்றும். இது லாவரகம், லாவரகாலஸகம் எனும் பெயர்களைக் கொண்டதாகும். 13

## 11. ஹலீமக இலக்கணம்

கும்பசம் எனும் நோய் கொண்டவன் கூடாதஉணவு, தகாத பழக்கவழக்கங்கள் ஆகியவற்றை மேற்கொண்டால் வாதமும்

பித்தமும் சிற்றமடைந்து மஞ்சளும் நீலமும் உறுப்புகளாகத் தோன்றும். அந்நிலையில் நோய் ஹலீமகம் எனப்படும். 14

## 12. பாண்டு நோயில் தோன்றும் உபத்திரவங்கள்

உணவில் விருப்பமின்மை, நாவறட்சி, வாந்தி, காய்ச்சல், மூளையில் துன்பம், சடராக்னிக் குறைவு, சோபை, தொண்டையில் வலிவின்மை, அல்லது தொண்டையில் வீக்கம், உடலுறுப்புகளில் வலிவின்மை, நினைவிழுத்தல், இதயத்தில் வலி போன்றவை பாண்டு நோயில் தோன்றக் கூடிய உபத்திரவங்களாகும். 15

## 13. பாண்டு நோய்க்குச் சிகிச்சை

இந்த அத்தியாயத்தின் முடிவில் சிகிச்சைக்கு உட்படாத பாண்டுநோய்க்குக் கூறிய இலக்கணங்கள் காணப்படாத நோயாளிக்கு உற்ற நோய் சிகிச்சைக்கு உட்பட்டது என்று அறியவும். அத்தகைய நோயாளிக்கு முதன்முதலாக கட்வரகிருதம், கல்யாண கிருதம், தாதிக கிருதம், மஹாதிக்த கிருதம், பஞ்ச திக்த கிருதம் எனும் இந்நெய்மருந்துகளில் ஏதேனும் ஒன்றைக் கொண்டு எண்ணெய்ப் பசையைத் தோற்றுவிக்க வேண்டும். பிறகு வாந்தி எடுக்கச் செய்து உடல் மேல் பகுதியையும், பேதியாகச் செய்து உடலின் கீழ்ப்பகுதியையும் தூய்மைப்படுத்த வேண்டும். பிறகு மிகுந்துள்ள தோஷத்தைப் போக்க கடுக்காய்த்தூள் மூன்று உளுந்து எடை அரை தோலா தேன் ஒரு தோலா நெய் கலந்து உட்கொள்ளச் செய்க. அல்லது சிவதை முதலான பேதியாகச் செய்யும் மருந்துப் பொருள்களின் விழுதும் கஷாயமும் சேர்த்துச் செய்த நெய் மருந்தை உட்கொள்ளச் செய்க. அல்லது மேலும் இவ்வாறே பேதியாகச் செய்யும் நெய் மருந்து முறைகளைத் தக்க துணை மருந்துடன் உட்கொள்ளச் செய்க. 16–17

## 14. பேதியாகச் செய்தபின் சிகிச்சை

பாண்டு நோயில் பேதியாகச் செய்தபிறகு பசுவின் சிறுநீர் அல்லது எருமையின் சிறுநீர் எட்டு பலம் கொண்டு அதில் நேர்வாள வேர் அரைப்பலம் சேர்த்துப் பக்குவம் செய்க. நான்கில் ஒரு பங்கு மிகுந்திருக்கும்போது அதில் இரண்டு பலம் அளவு உட்கொள்ளச்

செய்க. அல்லது கடுக்காய் கஷாயத்தில் வெல்லத்தைப் பக்குவம் செய்து உட்கொள்ளத் தருக. அல்லது சரக்கொன்றை முதலான கூட்டுப் பொருள்களின் கஷாயத்தைப் பருகச் செய். 18

## 15. பாண்டு நோய்க்கு இலேகியங்கள்

இரும்பு பற்பம், சுக்கு, மிளகு, திப்பிலி, வாயு விளங்கம், ஆகியவற்றின் தூள் என இவற்றைச் சம அளவில் கொண்டு சேர்த்து மூன்று குன்றி மணி எடை அளவுள்ள மருந்தைத் தேனும் நெய்யும் விட்டுக் குழைத்து உட்கொள்ளச் செய்க. அல்லது மஞ்சள் தூள் மூன்று உளுந்து எடை திரிபலைத்தூள் மூன்று உளுந்து எடை சேர்த்து அல்லது திரிபலையின் இரண்டு பல அளவுள்ள கஷாயத்தைத் துணை மருந்தாகச் செய்து உட்கொள்ளச் செய்க. அல்லது மஞ்சள் தூள் மூன்று உளுந்து எடை, திரிபலைத்தூள் மூன்று உளுந்து எடை சேர்த்துக் கலந்து உட்கொள்ளச் செய்க. மருத்துவ நூல் கூறும் நவாயசம் முதலான மற்ற மருந்துகளையும் பயன்படுத்தலாம். 19

## 16. பாண்டு நோயில் தூய்மைப்படுத்தும் முறை

பாண்டு நோயில் தாதுக்களிலும், சுரோதஸ்களிலும், ஆமசயங்களிலும் சேர்ந்துள்ள தோஷங்களைச் சிறுசிறு அளவில் வாந்தி எடுக்கச் செய்தல், பேதியாகச் செய்தல் எனும் முறைகளால் பலமுறை வெளியேற்ற வேண்டும். பலமுறை அவ்வாறு வெளி யேற்றப்படாமல் ஒரே முறையில் தோஷங்கள் முழுமையாக வெளியேறச் செய்ய முயன்றால் தோஷம் உறுப்புகளில் தங்கி வீக்கத்தைத் தோற்றுவிக்கும். 20

## 17. பாண்டு நோயை நீக்கும் மருந்துகள்

நெல்லிக்கனிச்சாறு ஒரு தோலா கொண்டு அதில் ஆறு உளுந்து எடை தேன் கலந்து உட்கொள்ளச் செய்தல், கரும்புச் சுரசம் 5 முதல் 10 தோலா அளவு கொண்டு ஒன்று அல்லது இரண்டு தோலா தேன் கலந்து உட்கொள்ளச் செய்தல், யவதானியம், கோதுமை கடலை ஆகியவற்றின் சத்துமாவைக் கலந்து நீருடன் கலந்து தேன் சேர்த்து உட்கொள்ளச் செய்தல் என்னும் முறைகள் மிக்க நன்மை தருபவையாகும். 21

## 18. பிருஹத்யாதி கிருதம்

கண்டங்கத்தரி, முள்ளுக்கத்திரி, மஞ்சள், வாகை வேர்கசப்புக் கோவை வேர், மணித் தக்காளி வேர், கசப்புப் புடலை வேர், நிலக்கடம்பக்கிழங்கு (செவ்வல்லிக் கிழங்கு) ஆகியவற்றைச் சம அளவில் சேர்த்து நான்கு பிரஸ்தம் அளவு கொண்டு பதினாறு பிரஸ்தம் நீர்விட்டுக் கஷாயம் காய்ச்சி நான்கு பிரஸ்தம் அளவு மிகுந்திருக்கும்போது வடிகட்டிக் கொள்க. அத்துடன் ஒரு பிரஸ்தம் நெய் சேர்த்து முன்கூறிய கஷாய மருந்துப் பொருள்களின் விழுது நான்கு பலம் சேர்த்து முறைப்படி நெய் மருந்து செய்க. இந்த மருந்தில் ஆறு உளுந்து எடை முதல் ஒரு தோலா அளவு நாள் தோறும் இளஞ்சூடுள்ள பாலைத் துணை மருந்தாக உட்கொள்ளச் செய்க. இதனால் பாண்டு நோய் தணியும். அல்லது சடராக்னியின் வலிமைக்கு ஏற்றவாறு திப்பிலித் தூளைப் பாலைத் துணை மருந்தாக உட்கொள்ளச் செய்தால் பாண்டு நோய் தணியும். 22

## 19. பாண்டு நோய்க்கு அதிமதுரக் கஷாயம்

அதிமதுரத்தைக் கஷாயம் செய்து அத்துடன் தேன் கலந்து உட்கொள்ளச் செய்க. அல்லது அதிமதுரத் தூளைத் தேனுடன் உட்கொள்ளச் செய்தால் பாண்டு நோய் தணியும். 23

## 20. பாண்டு நோய்க்குத் திரிபலாதி சூரணம்

திரிபலைத் தூள் இரண்டு உளுந்து எடை உலோக பற்பம் ஒரு குன்றிமணி எடை கலந்து தேன் விட்டுக் குழைத்து உட்கொள்ளச் செய்க. இதற்கு இரண்டு தோலா பசுவின் சிறுநீரைத் துணை மருந்தாகக் கொள்க. பல நாட்கள் இம்மருந்தைப் பயன்படுத்தினால் பாண்டு நோய் தணியும். அல்லது பிரவாள (பவழ பற்பம் ஒரு குன்றி மணி எடை, முத்து பற்பம் ஒருகுன்றி மணி எடை தூய ரசாஞ்சனம் இருகுன்றி மணி எடை, சங்க பற்பம் ஒரு குன்றி மணி எடை தூய சுவர்ண கைரிகம் இருகுன்றி மணி எடை எனக்கொண்டு அனைத்தையும் கலந்து தேன் விட்டுக் குழைத்து உட்கொண்டு உடனே ஒரு தோலா அளவு பசுவின் சிறுநீரைத் துணை மருந்தாகப்

1. பிருஹதி – கண்டங்கத்தரி

பயன்படுத்தச் செய்க. இவ்வாறு பல நாட்கள் இம்முறையைப் பின்பற்றினால் பாண்டு நோய் தணியும். 24

## 21. பாண்டு நோய்க்கு ஆட்டுப் பிழுக்கை

ஆட்டுப் பிழுக்கை 4 பலம், பிடாலவணம் ஒரு பலம், மஞ்சள் ஒருபலம், இந்துப்பு ஒரு பலம் என்ற அளவில் கொண்டு அனைத்தையும் சேர்த்து அரைத்துக் கொள்க. இந்தத் தூளில் மூன்று உளுந்து எடை முதல், ஆறு உளுந்து எடை வரை தேன்விட்டுக் குழைத்து உட்கொள்ளச் செய்தால் பசி எடுத்ததும் இதமான உணவை உட்கொள்ளச் செய்தால் பாண்டு நோய் தணியும். 25

## 22. மண்டூரம் முதலியவற்றாலான மருந்து

மண்டூர பற்பம் ஒரு தோலா, உலோக பற்பம் ஒரு தோலா, கொடி வேலித்தூள் ஒரு தோலா, வாயுவிளங்கத் தூள் ஒரு தோலா, கடுக்காய்த் தூள் ஒரு தோலா சுக்குத்தூள் ஒரு தோலா மிளகுத் தூள் ஒரு தோலா, திப்பிலித் தூள் ஒரு தோலா எட்டு தோலா சுவர்ணமாக்ஷிக பற்பம் எனக் கொண்டு அனைத்தையும் சேர்த்து அரைத்து பசுவின் நீரில் பாவனை செய்து அரைத்து இந்த மருந்தில் மூன்று முதல் ஆறு குன்றிமணி எடை வரை தேன் விட்டுக் குழைத்து உட்கொள்ளச் செய்க. இதைச் சில நாள்கள் பயன்படுத்தினால் கடுமையான பாண்டு நோயும் தீரும். 26

## 23. [1]விபீதகாதி வடகம்

தான்றிக்காய்த்தோல் தூள், மண்டூர பற்பம், சுக்குத் தூள், கரு எள்ளின் தூள் ஆகியவற்றைச் சம அளவில் கொண்டு அனைத்திற்கும் சம அளவு வெல்லம் கலந்து ஒவ்வோர் உளுந்து எடை அளவுள்ள மாத்திரைகள் செய்து உலர்த்திக் கொள்க. இது விபீதக்காதி வடகம் எனப்படும். மோரை அநுபானமாகக் கொண்டு இந்த மருந்தைப் பயன்படுத்தி வந்தால் சில நாட்களில் பாண்டு நோய் தீரும். 27

1. விபீதக் – தான்றிக்காய்.

## 24. பாண்டு நோய்க்கு ஸௌவர்ச்சலாதி முறை

ஸௌவர்ச்சல உப்பு, தூய பெருங்காயம், நில வேம்பு ஆகிய இவற்றின் தூள் ஒவ்வொன்றும் பட்டாணி அளவு கொண்டு கலந்து இளஞ்சூடுள்ள நீருடன் உட்கொள்ளச் செய்க. அல்லது பெருங்குரும்பை மஞ்சள், நெல்லி முள்ளி என்பனவற்றைச் சம அளவில் கொண்டு தூள் செய்து ஏழு நாட்கள் பசுவின் சிறுநீருடன், பாவனை செய்து அரைத்துக் கொள்க. இதில் நாள்தோறும் 3 முதல் ஆறு உளுந்து எடை வரை தேன் விட்டுக் குழைத்து உட்கொள்ளச் செய்க. இதனால் பாண்டு நோய் தணியும். 28

## 25. சிற்றாமுட்டி, முருங்கை முறைகள்

சிற்றாமுட்டி கொடிவேலி ஆகியவற்றின் வேர்களைச் சம அளவில் கலந்து ஒரு தோலா அளவு கொண்டு வெந்நீருடன் பாண்டு நோய் கொண்டவனை உட்கொள்ளச் செய்க. பசி எடுத்தவுடன் தகுந்த உணவை உட்கொள்ளச் செய்க. அல்லது முருங்கை விதைத் தூளையும், இந்துப்பையும் சம அளவில் கலந்து இளஞ்சூடுள்ள நீருடன் உட்கொள்ளச் செய்க. பசி எடுத்ததும் பாலை மட்டும் பருகச் செய்க. இம்முறைகளைச் சில நாட்கள் பயன்படுத்திவந்தால் பாண்டு நோய் தணியும். 29

## 25 அ. பாண்டு நோய்க்கு ஆலம் முதலியவற்றைப் பயன்படுத்தல்

ஆலம் முதலியவற்றின் சீத கஷாயத்தின் சர்க்கரை ஒரு தோலா தேன் ஆறு உளுந்து எடை கலந்து உட்கொள்ளச் செய்க. பசி எடுத்ததும் தகுந்த பத்தியமான உணவை உட்கொள்ளச் செய்க. சாலசாராதி கணத்தைச் சேர்ந்த கூட்டுப் பொருள்களின் சாரமான (வைரம்பாய்ந்த) பகுதியின் தூள் ஒன்று முதல் மூன்று உளுந்து எடை கொண்டு தேன் கலந்து உட்கொள்ளச் செய்க. அல்லது நெல்லி முள்ளித்தூள் ஒன்று முதல் மூன்று உளுந்து எடை கொண்டு தேனுடன் உட்கொள்ளச் செய்க. இவ்வாறு இந்த மருந்துகளைச் சில நாட்கள் பயனபடுத்தி வந்தால் பாண்டு நோய் தணியும். 30

## 26. வாயுவிளங்க லேஹியம்

வாயு விளங்கம், கோரைக்கிழங்கு, கடுக்காய், தான்றிக்காய், நெல்லிக்காய், ஓமம், பேரிச்சம்பழம், சுக்கு, மிளகு, திப்பிலி, கொடிவேலி வேர் எனும் இவற்றைச் சம அளவில் கொண்டு இடித்து மொத்தம் நான்கு பலன்கள் என கொள்க. பிறகு சால சாராதிகணக் கூட்டுப் பொருள் ஒரு பிரஸ்தம் அளவு கொண்டு நான்கு பிரஸ்தம் நீர்விட்டு ஒரு பிரஸ்தம் அளவுகஷாயம் காய்ச்சி வடிகட்டிக் கொள்க. இந்த ஒரு பிரஸ்தக கஷாய நீரில் நான்கு பலம் வெல்லம், நான்கு பலம் சர்க்கரை, நான்கு பலம் நெய் கலந்து பக்குவம் செய்து அதில் முன் செய்த வாயுவிடங்காதித் தூளைக் கலந்து தேன் நான்கு பலம் கலந்து நன்றாகச் சேர்க்கவும். இது வாயு விளங்காதி லேகியமாகும். இதை மாவிலங்கை மரக் கட்டையாலான பாத்திரத்தில் வைத்திருக்கவும். இந்த லேகியத்தில் மூன்று முதல் ஆறு உளுந்து எடைவரை இளஞ்சூடுள்ள வெந்நீருடன்அல்லது இளஞ்சூடுள்ள பாலுடன் உட்கொள்ளச் செய்க. இதனால் வீக்கத்துடன் கூடிய பாண்டு நோய், கடுமையான காமாலை ஆகிய நோய்கள் தணியும். 31–32

## 27. காமாலைக்குச் சிகிச்சை

மூன்று உளுந்து எடை முதல், ஆறு உளுந்து எடை வரை வெண் சிவதைத் தூள் உளுந்து எடை கொண்டு சம அளவு சர்க்கரையுடன் கலந்து உட்கொள்ளச் செய்க. அல்லது குடசப்பாலை அல்லது சுக்குத் தூள் மூன்று முதல் ஆறு உளுந்து எடைவரை ஒரு தோலா வெல்லம் கலந்து உட்கொள்ளச் செய்க. இவ்வாறு செய்வதால் காமாலை நோய் தணியும். 33

## 28. காலேயகாதி கிருதம்

மரமஞ்சள் விழுதைச் சம அளவு கருங்குங்கிலியம் விழுதும் கஷாயமும் கலந்து செய்த நெய் மருந்து ஆறு உளுந்து எடை முதல் ஒருதோலா அளவு வரை கொண்டு மஞ்சள்தூள் மூன்று முதல் ஆறு உளுந்து எடைவரை கலந்து ஒரு தோலா அளவு வரை உட்கொள்ளச் செய்தால் காமாலை நோய் தீரும். 34

## 29. கும்பகாமாலைக்குச் சிகிச்சை

சுவர்ண பாஷிக பற்பம் இரண்டு குன்றிமணி எடை கொண்டு தேன் விட்டுக் குழைத்து உட்கொள்ளச் செய்க. உடனே இரு தோலா பசுவின் சிறுநீரைப் பருகச் செய்க. அல்லது பசுவின் சிறுநீர் அல்லது திரிபலை கஷாயத்துடன் சிலாஜித்து பற்பம் செய்து அதில் இரண்டு முதல் 3 குன்றி மணி எடை தேன் கலந்து உட்கொள்ளச் செய்து உடன் இரு தோலா பசுவின் சிறுநீரை உட்கொள்ளச் செய்க. இவ்வாறு சுவர்ண மாக்ஷிகம்; அல்லது சிலாஜித்து என்பதைப் பயன்படுத்தினால் கும்பகாமாலை தீரும். 35

## 30. கும்பகாமாலைக்கு மண்டூரம்

மண்டூரத்தை ஒரு மாத காலம் பசுவின் சிறுநீரில் ஊறவைத்துப் பிறகு பசுவின் சிறுநீர் விட்டு அரைத்துப் பதினைந்து அல்லது இருபது முறை புடம் செய்து பற்பமாகச் செய்து அந்தப் பற்பத்தில் ஒன்று முதல் இரண்டு குன்றிமணி அளவு தேன்விட்டுக் குழைத்து ஒரு மாத காலம் உட்கொள்ளச் செய்தால் கும்பகாமாலை தணியும். 36

மண்டூகத்தைத் தான்றிக் கட்டைத் தணலில் வறுத்துப் பசுவின் சிறுநீரில் முக்க வேண்டும். இவ்வாறு ஒவ்வொரு முறையும் வேறு வேறு தணலில் வறுத்து வேறு வேறு பாத்திரத்தில் வைத்த சிறுநீரில் முக்கி எடுக்கவும்.

பிறகு அதைப் பசுவின் சிறுநீருடன் அரைத்து மாத்திரை தூளாக்கிக் கஜபுடம் போடவும். இவ்வாறு 15–20 முறை பற்பம் போட்டுப் பற்பமாகச் செய்க. இதில் இரண்டு அல்லது மூன்று குன்றி மணி எடை கொண்டு தேன் விட்டுக் குழைத்துச் சில நாட்கள் உட்கொள்ளச் செய்தால் கும்ப காமாலை தணியும். 37

## 31. ஸைந்தவமண்டூர முறை

இந்துப்புவை தான்றிக்காயைத் தணலில் காய்ச்சிப் பசுவின் சிறுநீரில் முக்கவும். பிறகு மண்டூரத்தையும் தான்றிக் கட்டைத் தீயில் வறுத்துப் பசுவின் சிறுநீரில் முக்கவும். இவ்வாறு இந்த மண்டூரத்தைப் பலமுறை செய்து அதாவது குறைந்தது ஏழு முறை செய்து பிறகு பசுவின் சிறுநீருடன் நன்கு அரைத்து முன் செய்த இந்துப்புத் தூளுடன் சம அளவு சேர்க்கவும். இரண்டையும்

அரைத்துப் பசுவின் சிறுநீரில் பக்குவம் செய்க. பக்குவம் செய்யும்போது மருந்து எரிந்துவிடாமல் கிளறிக்கொண்டே இருக்கவும். நன்கு காய்ந்த பிறகு இறக்கி நன்றாக அரைத்துப் பத்திரப்படுத்துக. இதில் இரண்டு முதல் நான்கு குன்றிமணி எடை மோருடன் உட்கொள்ளச் செய்து மருந்து செரிமானமடைந்ததும் மோருடன் உணவு உட்கொள்ளச் செய்க. இவ்வாறு இம்மருந்தைப் பயன்படுத்தினால் பாண்டு நோய் (கும்ப காமாலை) தணியும். செரிமான வலிமையும் மிகும். *38–39*

## 32. லாகவரகம் எனும் பாண்டு நோய்க்குச் சிகிச்சை

திராட்சை, சீந்தில்கொடி, நெல்லிக்காய் ஆகிய இவற்றில் விழுது 4 பலம், நெய் ஒரு பிரஸ்தம், நெல்லிச்சுரசம் 4 பிரஸ்தம் எனக்கொண்டு நெய் மருந்து செய்க. நாள்தோறும் இந்நெய் மருந்தில் ஒன்று அல்லது இரண்டு தோலா அளவு இளஞ்சூடுள்ள பால் அல்லது வெந்நீருடன் உட்கொள்ளச் செய்க. இதனால் லாகவரம் எனும் நோய் தணியும். *40*

## 33. பாண்டு நோயில் பத்திய முறை

பாண்டு அதைச் சார்ந்த காமாலை, கும்பகாமாலை, லாவரகம், பாநகீ, ஹலீமகம் எனும் நோய்கள் உள்ளவர்கள் வெல்லம் கலந்து செய்த அரிஷ்டம் அபயாரிஷ்டம், முதலியவற்றை தேன் மற்றும் சர்க்கரையுடன் உட்கொள்க. அல்லது மது ஆஸவம், சரிக்காஸவம் ஆகியவற்றைப் பயன்படுத்துக. மேலும் குஷ்ட சிகிச்சைக்குக் கூறிய மூத்ராஸவம், யானைக்கால் நோய்க்குக் கூறிய க்ஷாரங்களாலான ஆஸவம், ஆகியவற்றைப் பயன்படுத்துக. மற்றும் காட்டில் வாழும் விலங்குகள், பறவைகளின் புலால் சாற்றை எண்ணெயுடன் பக்குவம் செய்து அதில் நெல்லிக்கனித் தூள் அல்ல துசுரசம் சேர்த்து அல்லது நன்றாகப் பழுத்த இலந்தைப் பழத் தூளைக் கலந்து உட்கொள்ளச் செய்க. மற்றும் சோபைக்குச் சிகிச்சை கூறிய அதிகாரத்தில் கூறிய தேவதாரு சுக்கு முதலியவற்றின் கஷாயம் அல்லது தூள்களைப் பயன்படுத்துக. இவ்வாறு அறுபது நாள் குறுவை, யவதானியம் ஆகியவற்றாலான உணவை உட்கொள்ளச் செய்க. *41*

# இரத்தபித்த பிரதிஷேதம்

## எனும்

## நாற்பத்தைந்தாம் அத்தியாயம்

இனி தன்வந்தரி பகவான் ஸுசுருதர் முதலான சீடர்கட்கு உபதேசம் செய்தபடி இரத்த பித்த நோய்க்கு உரிய சிகிச்சை முறைகளை விளக்குவோம். 1–2

### 1. இரத்த பித்த நோய் தோன்றக் காரணம்

சினம், வருத்தம், அச்சம், அளவுக்கு மீறிய உழைப்பு, நாடு – காலம் – உடலுக்கு ஏற்றது. ஒன்றோடொன்று பொருள்கள் சேர்வதால் தன்மைகள் மாறுபடுதல் போன்றவற்றைக் கணக்கிடாமல் அவற்றிற்கு மாறான உணவு உட்கொள்ளுதல் புகை, தீ ஆகியவை அதிக அளவில் உள்ள சூழ்நிலையில் பல மணி நேரம் இருத்தல், கார்ப்பு – புளிப்பு – உவர்ப்புச் சுவை கொண்ட பொருள்களை அளவுக்கு மீறிப் பயன்படுத்தல், காரப்பொருள், தீக்ஷ்ணகுணமுள்ளவை, வெப்பம் மிகுதியாகத் தோற்றுவிப்பவை அழற்சியைத் தோற்றுவிப்பவையு மான பொருள்களை நாள்தோறும் பயன்படுத்தல் எனும் காரணங் களால் ரசம் (உட்கொண்ட வரையில்சாறு, பித்தத்தைச் சீற்றமுறச் செய்யும். அந்நிலையில் பித்தம் தனக்குக் காரணமான எண்ணெய்ப் பசை, வெப்பம், தீக்ஷ்ணம் போன்ற ரத்த குணங்களால் சீற்ற மடைந்து இரத்தத்தையும் கேடுறச் செய்யும். அந்தக் கேடுற்றரத்தம் மூக்கு, காது, வாய் போன்ற உடல் மேல் பகுதி உறுப்புகளின் வழி யாகவும் சிறுநீர் வழி, பெண்குறி, ஆஸனவாய் எனும் உறுப்புகளின்

---

இரத்த பித்தம் எனும் நோய்க்குரிய சிகிச்சை முறைகளை விளக்குவதால் இந்த அத்தியாயம் இரத்தபித்த பிரதிஷேதம் எனும் பெயர் பெற்றது.

## 34. பாண்டு நோய்கள் உபத்ரவத்திற்குச் சிகிச்சை

சுவசம், அதிஸாரம், சுவையின்மை, இருமல், நினைவிழத்தல், நாவறட்சி, வாந்தி, வலி, காய்ச்சல், வீக்கம், அழற்சி, உணவு செரியாமை, குரல் மாறுபாடு, உடல் உறுப்புகள் தளர்ந்து போதல் எனும் இந்த உபத்திரவங்களுக்கு அதற்குச் சாஸ்திரத்தில் கூறிய சிகிச்சையை மேற்கொள்க. 42

## 35. உட்படும் பாண்டு நோய்

பாண்டு நோயில் கை, கால், முகம் ஆகியவற்றில் வீக்கம் உறுப்புகள் உலர்ந்து போதல், அல்லது கை கால்கள் உலர்ந்து நடுவில் வீங்குதல், குதம், விரைகள், ஆண்குறி ஆகியவற்றில் வீக்கம், நினைவிழத்தல், உறுப்புகளில் அசைவின்றிப் படுத்திருத்தல், அதிஸாரம், காய்ச்சல் என்பன தோன்றுதல், போன்ற துன்பங்கள் காணப்பட்டால் அத்தகை நிலையில் நோய் சிகிச்சையால் தீர்க்க )யலாதது என்று அறிக.

43

**சிறுங்கட்டூர், நடாதூர் எஸ்.என். ஸ்ரீராமதேசிகன் எழுதிய ஸ⁻கருத ஸம்ஹிதை உத்தரஸ்தானம் தமிழாக்க நூலின் பாண்டு ரோக பிரதிஷேதம் எனும் நாற்பத்திநான்காம் அத்தியாயம் முற்றும்**

வழியாகவும் சில நேரங்களின் இரண்டு வழியாகவும் அதாவது மேல் கீழ் உறுப்புகளில் வழியாகவும் வெளியேறத் துவங்கும்.

3, 4-5

## 2. இரத்தம் வெளியேறும் வழிகள்

சீற்றமடைந்த பித்தத்தால் கேடுற்ற இரத்தம் ஆமாசயத்தில மேற்பகுதியை அடைந்து வாய் மூக்கு போன்ற உடல் மேல்பகுதி உறுப்புகளின் வழியாக வெளிப்படும். இரத்தம் கேடுற்று பக்கு வாசயத்தை அடைந்த போது பெருங்குடல் வழியாக ஆஸனவாய், சிறுநீர்வழி ஆகியவற்றால் வெளிப்படும். ஆமாசயம், பக்வாசயம் எனும் இரண்டு பகுதிகளிலும் கேடுற்ற இரத்தம் சேர்ந்தபோது மேல் கீழ் வழிகள் இரண்டினாலும் வெளிப்படத் துவங்கும். மருத்துவ நூலாசிரியர்கள் பலர் கல்லீரலைச் சார்ந்த கெட்ட இரத்தம் மேல் வழியாகவும், மண்ணீரலைச் சார்ந்து கேடுற்ற இரத்தம் கீழ் வழியாகவும் வெளியேறும் என்கின்றனர்.

## 3. சிகிச்சைக்கு உட்படுவதும், உட்படாததுமான இரத்த பித்த நோய்கள்.

மேல் நோக்கி வெளிப்படும் இரத்தபித்த நோய் சிகிச்சையால் தீர்க்கக் கூடியதாகும். கீழ்வழியில் வெளிப்படும் இரத்தப் பித்தம் நாள் கடக்கக் கூடியதாகும். இருவழிகளாலும் வெளிப்படும் இரத்த பித்த நோய் சிகிச்சையால் தீர்க்க இயலாததாகும். 3

## 4. இரத்த பித்த நோய்க்கு முற்குறிகள்

உடலுறுப்புகளில் தளர்ச்சி, குளிர்ச்சி தரும் பொருள்களில் விருப்பம் மிகுதல், தொண்டையிலிருந்து புகை வெளிவருவது போலவும், தொண்டை புகையால் சூழ்ந்திருப்பது போலவும் உணர்ச்சி ஏற்படுதல், வாந்தி, வெளிவிடும் மூச்சில் இரும்பு அல்லது இரத்தத்தின் மணம் எனும் இலக்கணங்கள் காணப் பட்டால் இரத்தபித்த நோய் தோன்றக் கூடும் என்று அறிக. 8

## 5. இரத்தபித்த ாய் வகைகள்

சோணித வர்ணனீயம் எனும் அத்தியாயத்தில் கூறப்பட்டபடி நுரை சிவப்பு நிறம் ஆகிய புறத்தோற்றங்களுடன் கூடிய

இரத்தத்தின் இலக்கணங்களால் இரத்த பித்த நோய் ஏழு வகைப் படும் என்று உணர்க. (தனித்தனியாக தோஷங்களுடன் கூடியது மூன்று வகை, இரண்டிரண்டு தோஷங்களில் சேர்க்கையால் மூன்று வகை, மூன்று தோஷங்களும் சேர்ந்திருப்பதால் ஒன்று ஆக ஏழு வகை என்று அறிக.) 9

## 6. இரத்தபித்தத்தால் தோன்றும் உபத்ரவங்கள்

வலிவின்மை, பெருமூச்சு, இருமல், காய்ச்சல், வாந்தி, மயக்கம், (வெறி), சோம்பல், அழற்சி, நினைவிழத்தல், உணவு உண்ட உடனே எரிச்சல் தோன்றுதல், தைரியம் குறைதல், இதயத்தில் தாங்க இயலாத வலி, மிக்க நாவறட்சி, குரல் மாறுபடுதல், தலைவலி கெட்ட நாற்றம் உடைத்தல், வெளிப்பட்ட இரத்தம் புலால் கழுவிய நீரின் தோற்றத்தில், சுகானுபவத்தில் விருப்ப மின்மை போன்ற இலக்கணங்கள் இரத்த நலிந்த நோய்க்கு உரியவையாகும். 10

## 7. சிகிச்சைக்கு உட்படாத இரத்த பித்த இலக்கணம்

புலால் கழுவிய நீரைப் போன்றிருப்பது, அழுகியது போலக் காணப்படுவது, கெட்ட நாற்றமுடையது சேற்றுடன் கூடிய நீரைப் போலக் கொழுப்புடனும் சீழுடனும் கூடியது பழுத்த நாவற்பழம் போலவும், கல்லீரல் போலவும் நிறம் கொண்டது, கருநிறம் அல்லது நீல நிறமுள்ளது, பீளை நாற்றம் கொண்டது முன்கூறிய வலிவின்மை போன்ற இலக்கணங்கள் உள்ளது வானவில் போலப் பல நிறங்களைக் கொண்டது என இத்தகைய இரத்தம் வெளிப் படுவதான இரத்தபித்த நோய் கொண்டவனுக்குச் சிகிச்சை புரிவதைக் கைவிடவேண்டும். (எத்தகைய சிகிச்சையும் பயன் )ல்லை என்பதாம்.) 11

## 8. வலிமை கொண்ட ரத்தபித்த நோயில் தடுப்பு முறையை விலக்குதல்

வலிமை கொண்டவனும், உணவு உட்கொள்பவனுமான நோயாளிக்கு மிக்க வலிமை கொண்டுள்ள இரத்த பித்த நோயில் முதன் முதலில் இரத்தம் வெளிவராமல் தடுத்து நிறுத்தும் மருந்து

களைப் பயன்படுத்தக் கூடாது. அவ்வாறு பயன்படுத்தினால் தடுத்து நிறுத்தப்பட்ட கெட்ட ரத்தம் பாண்டு, கிரஹணி, குட்டம், மண்ணீரல் வீக்கம், குன்மம், காய்ச்சல் போன்ற நோய்களைத் தோற்றுவிக்கும். 12

## 9. இரத்தபித்த நோய்க்குச் சிகிச்சை முறை

தூய்மைப்படுத்தத் தக்க உடல் கொண்டவனும் வலிமை கொண்டுள்ளவனுமான நோயாளிக்குக் கீழ் வழியாக இரத்தம் வெளிவரும் பல தோஷங்களுடன் கூடியதுமான இரத்தபித்த நோயில் வாந்தி எடுக்கச் செய்து நோயை வெல்ல வேண்டும். 13

## 10. இரத்த பித்த நோயில் அபதர்ப்பண முறை

தோஷம் அதிக அளவில் உடலில் மாமிசப்பகுதி மிகுந்துள்ள வனும் சடராக்னியின் வலிமை கொண்டுள்ளவனும் ஆன நோயாளிக்கு முதலில் 'அபதர்ப்பண சிகிச்சை' (பட்டினி கிடக்கச் செய்தல்) என்பதைக் கையாள வேண்டும். 14

## 11. அபதர்ப்பணத்திற்குப்பின் செய்ய வேண்டிய சிகிச்சை

இவ்வாறு இரத்தபித்த நோயாளிக்கு பட்டினி கிடத்தும் சிகிச்சையைச் செய்து சோறு மிகக் குறைந்த அளவில் கொண்ட பேயா எனும் கஞ்சியைப் பருகத் தர வேண்டும். நறுமணப் பொருள்களைக் கொண்டதும், எண்ணெய்ப்பசை கொண்டதுமான பால் சாறு, பயிற்றின் கஞ்சி ஆகியவற்றைக் கொடுக்க வேண்டும். மேலும் உடலைச் செழிப்புறச் செய்வதும், செரிமானத்தைத் தூண்டுவதும் ஆன இலேகியம் போன்றவற்றையும் நெய் மருந்து களையும் பயன்படுத்த வேண்டும். 15

## 12. இரத்தபித்த நோயில் வாந்தி எடுக்கச் செய்ய, பேதியாகச் செய்யப்பயன்படுத்த வேண்டிய மருந்துப் பொருள்கள்

இரத்தபித்த நோயில் திராட்சை, அதிமதுரம், குமிழன் பட்டை, ஆகியவற்றை மொத்தம் இரண்டு தோலா அளவு கொண்டு 32

---

அபதர்ப்பணம் : உடல் செழிப்பைக் குறைப்பதுமான சிகிச்சை

தோலா நீர் விட்டுக் காய்ச்சி நான்கில் ஒரு பங்கு மிகுந்திருக்கும் போது வடிகட்டிச் சர்க்கரை கலந்து பேதியாகக் கொடுக்க வேண்டும். அவ்வாறே அதிமதுரத் தூளைத் தேனுடன் சேர்த்து வாந்தி எடுக்கச் செய்வதற்குக் கூறிய முறைப்படிப் பயன்படுத்தி வாந்தி எடுக்கச் செய்க வேண்டும். 16

## 13. இரத்தபித்த நோய்க்குப் பத்திய முறை

உத்பலாதி கணைக் கூட்டுப் பொருள்களுடன் சேர்த்துக் காய்ச்சிக் குளிர வைத்த நீர் (பித்தச் சீற்றமுள்ள இரத்த பித்தத்திற்கும்) காட்டில் வாழும் விலங்குகள், பறவைகள் ஆகியவற்றின் கொதிக்க வைத்த புலால் சாறு, (வாத சீற்றமுள்ள இரத்த பித்தத்திற்கும்) பட்டாணிக் கஞ்சி (கபச்சீற்றமுள்ள இரத்த பித்தத்திற்கும்) பருகத் தரவேண்டும் சம்பா அரிசி அறுபதாங்குறுவை அரிசிச் சோறு மூன்று வகையான இரத்த பித்த நோய்களில் பத்தியமாகும். மற்றும் புடலை இலை, நரிவிலிப்பழம், பாகற்பழம் புளியாரை, ஊசி மல்லிகை இலை, ஆலம் தளிர், முல்லைக் கொடி இலை, நெல்லிக்கனிச் சாறு, மாதுளைச் சாறு ஆகியவற்றால் புளிப்புச் சுவையுண்டாக்கி உட்கொள்ளச் செய்க. மற்றும் புறா, சங்குக்குள் உள்ள (நத்தை போன்ற) பூச்சி, ஆமை ஆகியவற்றின் புலால் சாற்றை அல்லது கஞ்சியை அதிக அளவு நெய் சேர்த்துப் பக்குவம் செய்து உட்கொள்ளச் செய்க. உத்பலாதி கூட்டுப் பொருள்களின் விழுது சேர்த்துக் காய்ச்சிய பால் ஏட்டுடன் தேன் கலந்து சர்க்கரையும் கலந்து உட்கொள்ளச் செய்வது நன்மை தரும். ஆலம் முதலான குளிர்ச்சி தரும் கூட்டுப் பொருள்களினால் செய்த அல்லது சந்தனம் கர்ப்பூரம் முதலியவற்றாலான மேல் பூச்சைப் பயன்படுத்த வேண்டும். காகோலி முதலான இனிப்புச் சுவை கொண்ட கூட்டுப் பொருள்களினால் செய்த அல்லது சந்தனம் கர்ப்பூரம் முதலிய வற்றாலான மேல் பூச்சைப் பயன்படுத்த வேண்டும். காகோலி முதலான இனிப்புச் சுவை கொண்ட கூட்டுப் பொருள்களாலான கஞ்சி அல்லது கஷாயம் பால் முதலியவற்றைப் பருகச் செய்க. காகோலி முதலான கூட்டுப் பொருள் அல்லது ஜீவனீய கணத்தைச் சேர்ந்த கூட்டுப் பொருள்களின் விழுது பற்றும் கஷாயம் கலந்து செய்த பலவகை நெய் மருந்துகளை இரத்தபித்த நோயாளிக்குக் கொடுப்பது மிக நல்ல பலனைத் தரும். 17-19

## 14. இரத்த பித்தத்திற்கு நான்கு வகை இலேகியங்கள்

இலுப்பை மலர், முருங்கை மலர், செம்மந்தாரை மணி, ஞாழல் மலர் என இந்நான்கு வகை மலர்களின் தூள்களில் ஏதேனும் ஒன்றை மூன்று முதல் ஆறு உளுந்து எடை வரை தேன் விட்டுக் குழைத்து உட்கொள்ளச் செய்க. அல்லது இந்நான்கு வகை மலர்களின் தூள்களைக் கலந்து மூன்று முதல் ஆறு உளுந்து எடை வரை தேன் விட்டுக் குழைத்து உட்கொள்ளச் செய்க. அல்லது இம்மலர்த் தூள்களை இரண்டு மணிநேரம் இடைவெளி விட்டுத் தனித்தனியாகவும் தேனுடன் குழைத்து உட்கொள்ளச் செய்க. 20

## 15. இரத்த பித்தத்திற்கு வேறு இலேகியங்கள்

- அருகம்புல் மற்றும் ஆலம் தளிர் ஆகிய இரண்டையும் ஆறு உளுந்து எடை வீதம் கொண்டு அரைத்து ஆறு உளுந்து எடை தேன் கலந்து உட்கொள்ளச் செய்க. அல்லது ஆடாதொடை இளந் தளிர்களை அரைத்துத் தேனுடன் உட்கொள்ளச் செய்க. மற்றும் பேரீச்சங்காய்த் தூளைத் தேன் விட்டுக் குழைத்து உட்கொள்ளச் செய்க. பேரீச்சைப் போன்ற தன்மையுள்ள வேறு குமிழன் பழம் போன்றவற்றின் தூளையும் இரத்தபித்த நோயில் தேனுடன் உட்கொள்ளச் செய்யலாம். 2

## 16. மேலும் சில முறைகள்

இரத்த அதிஸாரத்திற்குக் கூறிய மருந்து முறைகளையும் இரத்தபித்த நோய்க்குத் தக்கபடி பயன்படுத்தலாம். 22

வெள்ளைக் கரும்பைத் துண்டுகளாக இடித்துப் புது மண் பானையில் இட்டு நீர்விட்டு நிரப்புக. அந்தப்பானையை வைக்கவும். இரவில் திறந்த வெளியில் வானம் தூய்மை கொண்டிருக்கும்போது வைக்கவும் மறுநாள் காலையில் இந்நீரை வடிகட்டி அல்லது அந்தக் கரும்புத் துண்டுகளை நசுக்கிச் சாறு பிழிந்து அதில் நீலாம்பல் தூள் மூன்று முதல் ஆறு உளுந்து எடை வரை கலந்து தேன் ஆறு உளுந்து எடை முதல் ஒரு தோலா எடை வரை சேர்த்து இரத்தபித்த நோயாளிக்குப் பருகத் தரவும். 23

## 17. இரத்தபித்தத்திற்குச் சீத கஷாயம்

நாவல், மா, மருத மரப்பட்டைகளைச் சம அளவில் மொத்தம் ஒருபலம் கொண்டு அல்லது நான்கு தோலா அளவு கொண்டு இடித்து இருபத்து நான்கு தோலா நீரில் இரவு முழுவதும் ஊற வைக்கவும். மறுநாள் வடிகட்டி ஆறு உளுந்து எடை முதல் ஒரு தோலா வரை தேனுடன் இரத்தபித்த நோயாளியைப் பருகச் செய்க. அல்லது அத்தியின் பச்சைக் காய்களை அல்லது உலர்ந்தவை யானதால் நீர்விட்டு அரைத்து ஒரு பலம் அளவு சுரசம் செய்து ஆறு உளுந்து எடை தேன்கலந்து உட்கொள்ளச் செய்தால் இரத்தபித்த நோய் தணியும். 24

## 18. இரத்தபித்தத்திற்கு ஆறு முறைகள்

கக்கரிக் கொடி வேர்த்தூள் ஒரு தோலா எடை கொண்டு ஒரு தோலா தேனும் நான்கு தோலா அளவு அரிசி கழுவிய நீரும் கலந்து இரத்தபித்த நோயாளிக்குப் பருகத் தரவும். 2. அதிமதுரத் தூள் ஒரு கர்ஷம் அளவு கொண்டு ஒருகர்ஷம் அளவு தேனுடன் நான்கு தோலா அரிசி கழுவிய நீரும் கலந்து உட்கொள்ளச் செய்க. 3. சந்தனம், அதிமதுரம், பாச்சோத்திப்பட்டை எனும் இம் மூன்றையும் சம அளவு மொத்தம் ஒரு கர்ஷம் அளவுக்குத் தூள் செய்து ஒரு கர்ஷம் தேனும் நான்கு தோலா அரிசி கழுவிய நீரும் சேர்த்துப் பருகச் செய்க. 4. புங்கங்காய் விதையைத் தூளைக் கலந்து சிறிது சூடாக்கித் தயிர்த் தெளிவுடன் மூன்று நாட்கள் இரத்தபித்த நோயாளியைப் பருகச் செய்க. இவ்வாறு இரத்த பித்த நோயைத் தணிக்கவல்ல ஆறு முறைகள் கூறப்பட்டுள்ளன. 25-28

## 19. மூக்கின் வழியாக வெளிவரும் இரத்த பித்தத்திற்குச் சிகிச்சை

கக்கரிக் கொடிவேர் விழுது முதலான முன்கூறிய ஆறுவகை மூலிகைகளில் விழுதைக் கொண்டு மூக்கு வழியாக வெளிவரும் ரத்தபித்த நோய்க்கு அவபீடன நசியம் எனும் மூக்கிலிடு மருந்தாகப் பயன்படுத்துக. 29

## 20. இரத்தபித்தத்தில் அதிக அளவு இரத்தம் வெளியேறியதற்குச் சிகிச்சை

இரத்த பித்த நோயில் அதிக அளவில் இரத்தம் வெளியேறிய நோயாளிக்கு அப்பொழுது கொல்லப்பட்ட ஆடு அல்லது மானின் இரத்தத்தில் தேன் கலந்து பருகத் தர வேண்டும் அல்லது ஆட்டின் புதிதாக எடுக்கப்பட்ட கல்லீரலைப் பித்தத்துடன் உட்கொள்ளச் செய்ய வேண்டும். 30

## 21. இரத்தத்திற்கு இரு நெய் மருந்துகள்

புரச மரத்தின் உள்பட்டையின் சுரசம் நான்கு பிரஸ்தம், அதன் விழுது நான்கு பலம் நெய் பதினாறு பலம் (ஒரு பிரஸ்தம்) எனக் கலந்து முறைப்படி நெய்ப்பக்குவம் செய்க. குளிர்ந்த பின் அதில் ஆறு உளுந்து எடை முதல் ஒரு தோலா வரை கொண்டு அத்துடன் ஆறு உளுந்து எடை தேன் கலந்து இரத்த பித்தம் நோய் கொண்டவனுக்குத் தரவும். அல்லது ஆலம், அரசு, அத்திமுதலான வனஸ்பதிகளின் உள்பட்டையின் சுரசம் நான்கு பிரஸ்தம் புதுப்பாலிலிருந்து எடுத்த நெய் ஒரு பிரஸ்தம், முன்கூறிய வனஸ்பதிகளின் விழுது களை அல்லது உள்பட்டையின் விழுது நான்கு பலம் என்ற அளவில் கொண்டு முறைப்படி நெய் மருந்து செய்க. அதில் ஆறு உளுந்து எடை முதல் ஒரு தோலா அளவு வரை கொண்டு சம அளவு சர்க்கரை சேர்த்து உட் கொள்ளச் செய்தால் பித்த நோய் தணியும். 31

## 22. திராட்சை முதலியவற்றின் சீத கஷாயம்

திராட்சை, வெட்டி வேர், பதுமகம், சர்க்கரை எனும் இவற்றில் ஒவ்வொன்றும் ஒவ்வொரு பலம் வீதம் கொண்டு அனைத்தையும் அரைத்து ஒரு பலம் அளவுள்ள நீரில் இரவில் ஊற வைக்கவும். மறுநாள் காலையில் கையால் நன்றாகப் பிசைந்து வடிகட்டி சிறிது சிறிதாக நாள் முழுவதும் பருகச் செய்க அல்லது இதை ஆறு பங்காகச் செய்து இரண்டிரண்டு மணி நேரம் இடைவிட்டுப் பருகச் செய்க. இது இரத்த பித்த நோயைத் தணிக்கும். அல்லது பச்சைப் பால் அரை பங்கு, தூய நீர், அரை பங்கு எனக் கலந்து சிறிது சிறிதாக நாள்தோறும் பருகச் செய்தால் இரத்த பித்த நோய் தணியும். 32

## 23. இரத்த பித்தத்திற்கு வேறு முறைகள்

-குதிரையின் சாணத்தைப் பிழிந்து எடுத்த சுரசத்தில் சம அளவு தேன் கலந்து உட்கொள்ளச் செய்தல். 2. ஆடாதொடை சுரசத்தில் சர்க்கரையும் தேனும் கலந்து பருகச் செய்தல் 3. பருப்புக் கீரை விதைத்தூள் மூன்று உளுந்து எடை கொண்டு தேன் விட்டுக் குழைத்து உட்கொள்ளச் செய்தல் 4. சிறுகீரை விதை அல்லது வேரின் தூள் மூன்று உளுந்து எடை கொண்டு தேனில் கலந்து உட்கொள்ளச் செய்தல் எனும் முறைகளால் இரத்த பித்த நோய் தணியும். 33

## 24. இரத்த பித்தத்திற்குப் பொரித்தூள் முதலியன

1. பொரி, ரசாஞ்சனம் – இவ்விரண்டையும் சம அளவில் கலந்து தூளாக்கி மூன்று முதல் ஆறு உளுந்து எடை வரை தேனுடன் குழைத்து உட்கொள்ளச் செய்தல் 2. மூங்கில் உப்பு தாளி செய்து சர்க்கரையும் தேனும் கலந்து உட்கொள்ளச் செய்தல் 3. திராட்சை சர்க்கரை கடுகரோகிணி எனும் இவற்றைச் சம அளவு கொண்டு தூளாக்கி ஆறு உளுந்து எடை குளிர்ந்த நீருடன் உட்கொள்ளச் செய்தல் அல்லது இவற்றுடன் அதிமதுரத் தூள் ஒன்றிரண்டு உளுந்து எடை கலந்து நீருடன் உட்கொள்ளச் செய்தல் எனும் முறைகளால் ரத்தபித்த நோய் தணியும். 34

## 25. இரத்த பித்த நோய்க்குக் கடுக்காய்த் தூள்

கடுக்காய், *ஹிம்ஸ்ரா எனும் செடியின் வேர், மஞ்சள் என்பன வற்றைச் சம அளவு கொண்டு தூளாக்கி மூன்று முதல் ஆறு உளுந்து எடைவரை நெய்யுடன் கலந்து உட்கொள்ளச் செய்தால் இரத்த பித்த நோய் தணியும். 35

## 26. இரத்தபித்தத்திற்கு ஆடாதொடை கஷாயம் முதலியன

ஆடாதொடை இலை, வேர், மலர், பட்டை, காய் என்பன வற்றைக் கலந்து கஷாயம் காய்ச்சி நான்கு தோலா எடை கொண்டு நீலாம்பல் தோன்றும் இடத்தில் உள்ள மண் ஓர் உளுந்து எடை ஞாழல்தூள் ஒரு உளுந்து எடை, பாச்சோத்தித்தாள் ஓர் உளுந்து

---

*ஹிம்ஸ்ரா, (அஹிம்ஸ்ரா எனவும் சிலர்) எனும் மூலிகைக்கு உரிய தமிழ்ப் பெயர் தெரிய வரவில்லை. எந்த நிகண்டுவிலும் இதைப்பற்றிய விளக்கம் காணப்படவில்லை.

எடை தூய ஸௌவீராஞ்சனத் தூள் நான்கு குன்றி மணி எடை தாமரைக் கேசரம் தூள் ஓர் உளுந்து எடை சர்க்கரை ஒரு தோலா தேன் ஆறு உளுந்து எடை அல்லது ஒரு தோலா எனக் கலந்து பருகச் செய்தால் இரத்தபித்த நோயால் தோன்றும் கடும்துன்பம் நீங்கும். 36

## 27. இரத்த பித்தத்திற்குக் கருங்காலி முதலியவற்றின் மலர்கள்

கருங்காலி, நாவல், மருதம், செம்மந்தாரை, வாகை, பார்சோத்தி, சுரோருதாஞ்சனம், இலவம், முருங்கை ஆகியவற்றின் மலர்களை சம அளவில் கொண்டு தூளாக்கி மூன்று முதல் ஆறு எடை வரை தேனுடன் உட்கொள்ளச் செய்தால் பித்தம் தணியும். 37

## வேறு முறைகள்

1. தாமரை மலர்ச் சாம்பலை நீரில் கலந்து தேன் கலந்து பருகச் செய்தல், 2. புங்கன் விதைத்தூள் ஒன்று முதல் மூன்று உளுந்து எடைவரை தேனும் நெய்யும் கலந்து உட்கொள்ளச் செய்தல் 3. நாவல் பட்டை, மருதம்பட்டை மாமரப்பட்டை, இம்மூன்றையும் சம அளவில் கொண்டு ஒரு பலம் அளவு கொண்டு பதினாறு மடங்கு நீர் சேர்த்து எட்டில் ஒரு பங்கு மிகுந்திருக்கக் காய்ச்சி வடிகட்டி அத்துடன் இரண்டு தோலா சர்க்கரை கலந்து அல்லது தேன் கலந்து உட்கொள்ளச் செய்தல் ஆகிய மூன்றும் இரத்த பித்தத்தைத் தணிக்கவல்லவை ஆகும். 38

துரிஞ்சி வேர் மற்றும் மலர் சேர்ந்து ஒருபலம் அளவு கொண்டு நீர்விட்டு அரைத்து அரிசி கழுவிய நீரில் கலந்து வடிகட்டிப் பருகச் செய்தால் இரத்த பித்தம் தணியும். 39

## 28. மூக்கு வழியே வெளிவரும் ரத்தபித்தத்திற்குச் சிகிச்சை

மூக்கின் வழியாக இரத்தம் வெளிவரும்போது நீரில் சர்க்கரை கலந்து துணியில் வடிகட்டி மூக்கு வழியாக உறிஞ்சச் செய்க. அல்லது பச்சைப் பாலை வடிகட்டி மூக்கின் வழியாக உறிஞ்சச் செய்க. அல்லது திராட்சைச் சாற்றில் சர்க்கரை கலந்து வடிகட்டி

மூக்கின் வழியாக உறிஞ்சச் செய்க. பச்சைப் பாலைக் கலந்து எடுத்த வெண்ணெயினை நெய்யை மூக்கின் வழியாக உறிஞ்சச் செய்க. அல்லது கருப்பஞ் சாற்றில் பனிக்கட்டியைச் சேர்த்து குளுமைப் படுத்தி அதை மூக்கின் வழியாக உறிஞ்சச் செய்க. 40

## 29. இரத்த பித்தத்திற்குப் பணிவிடைகள்

இரத்த பித்தத்தில் சிறப்பாகக் குளிர்ச்சி தரும் மற்றும் இனிய சுவை கொண்ட உணவு முதலியவற்றைப் பயன்படுத்த வேண்டும். 41

## 30. இரத்தபித்தத்திற்கு வஸ்தி முறை

விதாரி கந்தாதி கணத்தைச் சார்ந்த கூட்டுப் பொருள்களை சர்க்கரை ஆகியவற்றைக் கலந்து இரத்த பித்த நோயில் ஆஸ்தா பனவஸ்தியாகப் பயன்படுத்த வேண்டும் மற்றும் முன் கூறிய விதாரி கந்தாதி கணப்பொருள்களாலான விழுது கலந்த பாலில் நெய்ப்பக்குவம் செய்து அதை இரத்தபித்த நோயில் அநுவாஸன வஸ்தியாகப் பயன்படுத்துக. 42

## 31. இரத்தபித்தத்தில் வேறு வஸ்தி முறைகள்

ஞாழல் மலர், பாச்சோத்திப் பட்டை, ஸௌவீராஞ்சனம், காவிக்கல், நீலாம்பல் அல்லது சிறுநாகப்பூ, சுவர்ணகைரிகம், காலீ யகம் (மரமஞ்சளைப் போன்ற பொருள் அல்லது சந்தனம்) சிவப்புச் சந்தனம், சர்க்கரை, அமுக்கராக் கிழங்கு, கோரைக் கிழங்கு, அதிமதுரம், தாமரைத் தண்டு, சிவப்புத் தாமரை - இவற்றைச் சம அளவு கொண்டு சிறிது நீர்விட்டு நன்கு அரைத்து விழுதாக்குக. இந்த விழுது 2 பலம் பால் 10 பலம், தேன் 4 பலம், நெய் 4 பலம், எனக் கலந்து அனைத்தையும் ஒன்றேகால் பிரஸ்தம் அளவுள்ள மருந்தை நிரூஹணவஸ்தியாகப் பயன்படுத்துக. பிறகு குளிர்ந்த நீரில் நோயாளியின் கைகால்களைக் கழுவி பால் கலந்த சோற்றை உண்ணச் செய்க. அதன்பிறகு அதிமதுர விழுது மற்றும் அதன் கஷாயம் கொண்டு செய்த ஆறு அல்லது மூன்று பலம் நெய் மருந்தை அநுவாஸன அல்லது எண்ணெய் வஸ்தி முறையைச் செய்க. இந்த வஸ்தி முறைகள் கீழ் வழியாக வெளிவரும் இரத்த பித்தம், அதிஸாரம், கடுமையான இரத்தாதிஸாரம் எனும் நோய் களைத் தணிக்கும். 43-44

## 32. வேறு வகை இரத்த பித்தங்களுக்குச் சிகிச்சை முறை

சிறுநீர்ப்பை, சிறுநீர்க் குண்டிகை அல்லது சிறு நீர் வழியாக வெளிவரும் இரத்தபித்த நோயில் முன்கூறிய ஆஸ்தாபன அநுவாஸன வஸ்திகளை அதாவது அம்முறைகளில் கூறிய மருந்துப் பொருள்களாலான உத்தரவஸ்தியைப் பயன்படுத்த வேண்டும். மூலநோயில் முளைகளின் வழியாக இரத்தம் மிகுந்த அளவில் வெளிப்படும்போது இரத்த பித்தத்திற்குப் போலவே சிகிச்சை செய்க. 46

பெண்களுக்குத் தோன்றும் அஸ்ருத்தரம் எனும் (இரத்தப் பெரும்பாடு) நோய் மற்றும் ஆண் பெண் நோயாளிகளில் அறுவைச் சிகிச்சை செய்வதால் இரத்தம் அதிக அளவு வெளியேறியபோதும் இரத்தபித்த நோய்க்குக் கூறிய சிகிச்சை முறைகளை தகுந்தபடி பயன்படுத்த வேண்டும்.

## 33. இரத்தபித்தம் அஸ்ருத்தரம் எனும் நோய்களின் தன்மைகள்

இரத்த பித்தம், அஸ்ருத்தரம், அவ்வாறே அறுவைச் சிகிச்சையில் இரத்தம் வெளிப்படுதல் எனும் நோய்களில் வாதம் பித்தம்கபம் எனும் மூன்று தோஷங்கள் தனித்தனியாகவோ இரண்டிரண்டு கலந்தோ அல்லது மூன்றும் கலந்தோ சீற்றமுற்ற நிலையில் ஸுச்ருத ஸம்ஹிதை - ஸூத்ரஸ்தானத்தில சோணித் வர்ணனையே அத்தியாயத்தில் கூறியபடி இலக்கணங்களை நன்கு அறிந்து பிறகு தக்க சிகிச்சையை மேற்கொள்ள வேண்டும். 48

**சிறுங்கட்டூர், நடாதூர் எஸ்.என். ஸ்ரீராமதேசிகன் எழுதிய ஸுச்ருத ஸம்ஹிதை உத்தரஸ்தானம் தமிழாக்க நூலின் இரத்த பித்த பிரதிஷேதம் எனும் நாற்பத்தைந்தாம் அத்தியாயம் முற்றும்.**

# மூர்ச்சா பிரதிஷேதம்

## எனும்

## நாற்பத்தாறாவது அத்தியாயம்

இனி ஸுசுருதர் முதலான சீடர்களுக்குத் தன்வந்திரி பகவான் உபதேசம் செய்தபடி மூர்ச்சை எனும் நினைவிழத்தலுக்கு உரிய சிகிச்சை முறைகளை விளக்குவோம். 1, 2

### 1. மூர்ச்சையின் இலக்கணம்

உடல் மிக்க இளைத்தவர், வாதம் முதலிய தோஷங்கள் அதிக அளவு சீற்றமுற்றவர், ஒன்றுக்கொன்று மாறான அல்லது தனக்கு ஒவ்வாத உணவை உட்கொள்பவர், ஆகிய இவர்களுக்கு மலம், சிறுநீர் முதலியவை வெளியேற இருப்பதைத் தடுக்கக் கூடாத நிலையில் தடுத்த போதும், அதிக அளவு காயம்பட்ட போதும், மனம் மிக்கவலிமை இழந்தபோதும், மனத்தில் சத்துவ குணம் மிகக் குறைந்த போதும், புறத்தே உள்ள புலன்களான கண், காது முதலியனவும் மற்றும் மனத்தைத் தாங்கும் சுரோதஸ்களும் விகாரமடைந்த தோஷங்களைக் கொண்டிருக்கும்போதும் மூர்ச்சை உண்டாகும். 3, 4

வாதம் முதலான தோஷங்களால் உணர்வு நரம்புகள் குழப்பப் பட்டபோது கண்களின் முன் சுகம், துக்கம் எனும் பகுத்தறிவை அழிக்கும் இருள் சூழும். இவ்வாறு சுகதுக்கங்களின் உணர்ச்சி அற்ற பிறகு மனிதன் உலர்ந்த கட்டை போல விழுந்து கிடப்பான். இந்நிலை மயக்கம் அல்லது மூர்ச்சை எனப்படும். இது ஆறு வகைப்படும். 5, 6

---

*மூர்ச்சா – நினைவிழத்தல். அதற்குரிய சிகிச்சை முறைகளை விளக்குவதால் இந்த அத்தியாயம் மூர்ச்சா பிரதிஷேதம் எனும் பெயர் பெற்றது.*

## 2. மூர்ச்சை நோய்களின் வகைகள்

வாதம், பித்தம், கபம், இரத்தம், மதுவைப் பருகுதல், நஞ்சு எனும் இவற்றைக் கொண்டு மூர்ச்சை எனும் நோய் ஆறு வகைப் படும். ஆனால் இந்த எல்லா வகைகளிலும் பித்தம் முக்கிய இடம் பெறுகிறது. 7

## 3. மூர்ச்சையின் முற்குறிகள்

இதயத்தில் வலி, கொட்டாவி மிகுதல், எந்தச் செயலிலும் விருப்பம் இன்மை, அறிவாற்றல் மிகக்குறைந்து போதல், வலிமை குறைந்து போதல் என்பன எல்லா வகை மூர்ச்சை நோய்களுக்கும் முற்குறிகளாகும். 8

## 4. மூர்ச்சையின் இலக்கணம்

மூர்ச்சை நோயின் இலக்கணம் சிறப்பாக அபஸ்மாரம் எனும் நோயின் இலக்கணங்களுக்குச் சமமாக இருக்கும். 9

## 5. ல தோன்றும மூாசசை

நிலம், நீர் எனும் இவ்விரண்டும் தமோ குணத்தை மிகுதியாகக் கொண்டவை. ஆகவே இரத்தத்தின் மணமும் நிலம் மற்றும் நீரின் குணங்களாலானது. அதனால் சிலர் இரத்தத்தின் மணம் நுகர நேர்ந்தால் மூர்ச்சை அடைந்து விடுகின்றனர். சிலர் இரத்தத்தைக் கண்டதும் நினைவிழந்து விடுகின்றனர். அதனால் மருத்துவ நூலாசிரியர்கள் சிலர் இது (நினைவிழத்தல்) இரத்தத்தின் இயற்கைத் தன்மை என்கின்றனர். 10

## 6. நஞ்சினால் தோன்றும் மூர்ச்சை

நஞ்சு மற்றும் மதுவில் இலேசு, வறட்சி போன்ற (ஓஜஸ் எனும் தாதுவுக்கு மாறான) பத்து தன்மைகள் மற்ற பொருள்களில் இருப்பதை விட அதிக அளவில் உள்ளன. இந்தத் தன்மைகளால் விஷமும், மதுவும் மூர்ச்சையைத் தோற்றுவிக்கின்றன. 11, 12

## 7. மதுவினால் தோன்றும் மூர்ச்சை

மதுவினால் தோன்றும் மூர்ச்சையில் உண்ட மது பக்குவம் பெறும் வரை நோயாளி பிதற்றிக் கொண்டும், புலம்பிக் கொண்டும், தன் நிலையற்ற மனம் கொண்டும் நினைவிழந்து கிடப்பார். 13

## 8. விஷத்தாலான மூர்ச்சையின் இலக்கணம்

விஷத்தால் தோன்றும் மூர்ச்சையில் முதன் முதலாக உடல் நடுக்கம், அடிக்கடி உறக்கத்தில் ஆழ்தல், அல்லது சோம்பல், தூங்கி வழிதல், நாவறட்சி, இருள் சூழ்தல் அதாவது கண்கள் இருண்டு போதல் எனும் இலக்கணங்கள் காணப்படும். ஆனால், விஷத்தின் வகைக்கு இணங்க அதற்கு உரிய வேறு இலக்கணங்கள் அதிக அளவில் காணப்படும். 14

## 9. நினைவிழத்தலுக்குச் சிகிச்சை

குளிர்ந்த நீரை முகத்தில், உடலின் மேல் தெளித்தல், குளிர்ந்த நீரில் மூழ்குதல், முத்து, ஸ்படிகம் போன்றவற்றை உடலில் படும் படி அணிதல், சந்தனம், தாமரை முதலியவற்றாலான பூச்சை முகத்தில் பூசிக்கொள்ளுதல், வெட்டிவேர் விசிறியை குளிர்ந்த நீரில் தோய்த்து அதன் காற்றை அநுபவித்தல், சந்தனம், வெட்டிவேர், பச்சைக் கர்ப்பூரம், தாழை மலர் முதலான நறுமணப் பொருள் களாலான குளிர்ந்த குடிநீர் வகைகளைப் பயன்படுத்துதல் என்பன எல்லாவகை மூர்ச்சை நோய்களிலும் பயன்படுத்தத் தக்கவை. 15

சர்க்கரை, சாரைப்பருப்பு, கருப்பஞ்சாறு, இம்மூன்றையும் கலந்து பானகம் செய்க. அல்லது பேரீச்சை குமிழன் இவ்விரண்டை யும் சரிசமமாகச் செய்து பானகம் செய்க. இந்த சுரதத்தில் திராட்சையை அரைத்துக் கலக்கவும். மற்றும் இலுப்பை மலரின் சுரசமும் சேர்த்துக் கொதிக்க வைத்து அது குளிர்ந்த பின் பாகைப் போலப் பயன்படுத்துக. இவ்வாறே ஜீவநியகணத்தைச் சேர்ந்த கூட்டுப் பொருள்களின் கஷாயத்தால் செய்த நெய் மருந்தை மூர்ச்சை நோய்க்குப் பயன்படுத்துக. 16

காகோலி முதலான இனிப்புச்சுவை கொண்ட கூட்டுப் பொருள்களின் விழுது சேர்த்துச் செய்த பால், அல்லது காட்டில் வசிக்கும் விலங்குகள், பறவைகள் ஆகியவற்றின் புலால் சாற்றுடன்

கலந்த மாதுளம் பழச்சாறு, யவ தானியம், சிவப்புச் சம்பா அரிசி இவற்றாலான சோறு, பட்டாணி ஆகியவற்றை எல்லா வகையான மூர்ச்சை நோய்களிலும் பயன்படுத்தலாம். 17

## 10. மூர்ச்சை நோயில் சிறுநாகப்பூ முதலியவற்றைப் பயன்படுத்தல்

சிறுநாகப்பூ, மிளகு, வெட்டி வேர், இலந்தைப்பழம், கதுப்பு ஆகியவற்றைச் சமஅளவில் கொண்டு தூளாக்கி மூன்று உளுந்து எடை முதல் ஆறு உளுந்து எடை வரை கொண்டு குளிர்ந்த நீரை அனுபானமாகக் கொண்டு உட்கொள்ளச் செய்க. மற்றும் தாமரைத் தண்டு அல்லது தாமரைக்கிழங்கு ஆகியவற்றையும் குளிர்ந்த நீர் விட்டு அரைத்து உட்கொள்ளச் செய்க. இவ்வாறே திப்பிலித்தூள் இரண்டு முதல் நான்கு குன்றிமணி அளவு, மூன்று முதல் ஆறு உளுந்து எடை வரை கடுக்காய்த்தூள் சேர்த்து இரண்டு மடங்கு சர்க்கரையும் சேர்த்து குளிர்ந்த நீருடன் எல்லாவகை மூர்ச்சை நோய்களிலும் பயன்படுத்துக. 18

## 11. மூர்ச்சைக்குப் பொது முறைகள்

நினைவிழந்த நோயாளியின் மூக்கையும், வாயையும் சில நொடிகள் மூடிப்பிடித்துக் கொள்ள வேண்டும் (இவ்வாறு செய்வதால் உடலுக்குள் பரவியுள்ள வாயு வெளியேற முற்பட்டு உணர்வு ஸ்ரோதஸ்களைத் தடுத்துள்ள தடையை அகற்றி விடும்.) அதனால் மூர்ச்சை நோய் நீங்கும். பிறகு தாய்ப்பால் பருகச் செய்க. ஏனெனில் தாய்ப்பால் குளுமைத் தன்மை கொண்டது. இந்தப் பணி விடைகள் செய்தும் அடிக்கடி நினைவு தவறுமானால் நாயுருவி விதை, திப்பிலி போன்ற தீஷ்ணத் தன்மை கொண்ட சிரோவிரேசனப் பொருள்களை முகரச் செய்து வாந்தி எடுக்கச் செய்து நோயை அகற்ற வேண்டும். 19

## 12. மூர்ச்சை நோய்க்கு நெய் மருந்து

கடுக்காய்க் கஷாயத்தில் செய்த நெய் மருந்து, அல்லது நெல்லிக்கனி சுரசத்துடன் செய்த நெய் மருந்து எல்லாவகை

மூர்ச்சைக்கும், பயன்படுத்தத் தக்கது. மற்றும் திராட்சை, சர்க்கரை, மாதுளம்பழம், மாதுளை விதை, பொரி, நீலாம்பல், தாமரை ஆகியவற்றைச் சேர்த்துக் கஷாயம் காய்ச்சிக் குளிர வைத்துப் பருகச் செய்தால் மூர்ச்சை நோய் தணியும். பித்தக் காய்ச்சலைத் தணிக்கும் கஷாயமும் பயன்படுத்தத் தகும். 20

## 13. நினைவு தவறுதலில் ஒரு வகையான ஸந்நியாஸ நோய் )லக்கணம்

தவறான உணவு, பழக்கவழக்கங்களால் வாத பித்த கபங்கள் மற்றும் ரஜோகுணமோ குணங்கள் ஆகியவை அதிக அளவில் சீற்றமடைந்தபோது மனிதன் முதலில் மூர்ச்சை அடைவான். இந்நிலையில் தமோகுணம் மிகுதியாகும். அதனால் நோயாளி திரும்ப நினைவு பெறுவதில்லை. இத்தகைய சிகிச்சைக்கு எளிதில் உட்படாத நோய் 'ஸந்யாச' நோய் எனப்படும். 21

## 14. ஸந்யாச நோய்க்குச் சிகிச்சை

பச்சை (சுடப்படாத) மண் சட்டி நீரில் விழுந்தால் அது (மண்) நீரில் கரைவதற்கு முன்பே எடுத்து விட வேண்டும். அதைப்போல விரைவில் மரணம் அடையக் கூடிய ஸந்யாச நோயாளியை உடல் வியர்ப்பதற்கு முன்பே தக்க சிகிச்சை செய்து காப்பாற்ற வேண்டும். 22

திப்பிலி, நாயுருவி, வாயு விடங்கம் ஆகிய தீக்ஷ்ணத் தன்மை கொண்ட பொருள்களாலான மை, அத்தகைய தீக்ஷ்ணப் பொருள்களால் குளிக்கச் செய்தல், அத்தகைய தீக்ஷ்ணப்பொருள்களாலான புகையை நோயாளியின் மூக்கில் பரவச் செய்தல், நகம், நக சதைப்பகுதியில் ஊசி போன்ற கூரிய கருவியால் குத்துதல், மிக்க அதிக அளவில் உள்ள ஒலிகளை நோயாளியின் காதுகளில் படும்படி ஒலித்தல், பேரொலி நோயாளியின் காதருகில் ஒலிக்கச் செய்தல் போன்ற பலவகை உத்திகளால் சிகிச்சை செய்தல், நோயாளியின் உடலை அல்லது உறுப்புகளை வேகமாக அசைத்தல், காஞ்சொரிக் காயை நோயாளியின் மென்மையான உறுப்புகளில் நினைவு திரும்பும் வரை தேய்த்தல் போன்ற சிகிச்சைகளை மேற்கொள்ள வேண்டும். 23

இத்தகைய சிகிச்சைகளால் நோய் நீங்காவிடில் மலமும் சிறுநீரும் தடைப்பட்டு, வாயிலிருந்து உமிழ் நீர் பெருகுதல், பெரு மூச்சு முதலியனவும் காணப்பட்டால் அத்தகையவருக்குச் சிகிச்சை செய்வதை கை விடவேண்டும். 24

## 15. நினைவு திரும்பியதும் மேற்கொள்ளத் தக்கவை

முன் கூறிய தீக்ஷ்ணத் தன்மையுள்ள சிகிச்சைகளால் நோயாளிக்கு நினைவு திரும்பினால் தீக்ஷ்ணமான மருந்துப்பொருள்களால் வாந்தி எடுக்கச் செய்தல், பேதியாகச் செய்தல் எனும் முறைகளால் உடலின் மேற்பகுதியையும், கீழ்ப்பகுதியையும் தூய்மைப் படுத்தி முறைப்படி இலேசான பத்தியமான உணவைத் தர வேண்டும். திரிபலை, கொடிவேலி, சுக்கு, திப்பிலி, மிளகு, சிலாசத்து சர்க்கரையுடன் ஒரு மாதம் வரை உட்கொள்ளச் செய்க. சிறப்பாகப் பழைய நெய்யை உட்கொள்ளச் செய்க. 25

பலவகை தோஷங்களால் தோன்றும் பலவகைக் காய்ச்சல் களுக்குக் கூறப்பட்ட கஷாய முறைகளை அந்தந்த தோஷங் களாலான மூர்ச்சை நோயைத் தணிக்கப் பயன் படுத்துக. நஞ்சா லான நினைவிழத்தல் நோய்க்கு அந்த விஷத்திற்குத் தக்க சிகிச்சை யைக் கையாள வேண்டும். 26

**சிறுங்கட்டூர், நடாதூர் எஸ்.என். ஸ்ரீராமதேசிகன் எழுதிய ஸுச்ருத ஸம்ஹிதை உத்தரஸ்தானம் தமிழாக்க நூலின் மூர்ச்சாபிரதிஷேதம் எனும் நாற்பத்தாறாம் அத்தியாயம் முற்றும்.**

# பானாத்யய பிரதிஷேதம

# எனும்

## நாற்பத்து ஏழாம் அத்தியாயம்

இனி தன்வந்திரி பகவான் ஸுசுருதர் முதலான சீடர்களுக்கு உபதேசம் செய்தபடி பானாத்யய பிரதிஷேதம் எனும் மது வெறிக்கான சிகிச்சை முறைகளை விளக்குவோம். 1,2

### 1. மதுவின் தன்மைகள்

மது உஷ்ணத்தன்மை, தீஷ்ணம் கொண்டது. நுட்பமானது. விசதம் அதாவது உடலைச் சுண்டச் செய்யும் தன்மை கொண்டது. வறட்சித் தன்மையுள்ளது. விரைவாகச் செயல்படக்கூடியது. பக்குவம் பெறுவதற்கு முன்னதாகவே தன் வலிமையைக் காட்டக் கூடியது. உடல் முழுவதும் பரவி இணைப்புகளை நெகிழச் செய்யக்கூடியதும் ஆகும். 3

### 2. மதுவின் செயல்கள்

மது வெப்பத்தை மிகச் செய்யும். பித்தத்தைச் சீற்றமுறச் செய்யும். அதனால் குளிர்ச்சியை உண்டாக்கும் பணிவிடைகளுக்கு ஏற்றது. தீஷ்ணத்தன்மை கொண்டிருப்பதால் மனத்தில் செயலை (சுரோதஸ்களில் மனம் பரவுதலை) தடுத்து கெடுக்கக்கூடியது. நுட்பமானது ஆகையால் உடலில் உள்ள மிக நுட்பமான உறுப்பு களிலும் ஊடுருவிச் செல்லக்கூடியது. விசதத்தன்மை கொண்டது ஆகையால் கபத்தையும், விந்துவையும் அழித்துவிடக் கூடியது.

---

**பான அத்யயம் - குடிவெறி, அளவுக்கு மீறி மதுவைப் பருகுவதால் தோன்றும் வெறிக்கு உரிய சிகிச்சை முறைகளை விளக்குவதால் இந்த அத்தியாயம் இப்பெயர் பெற்றது.**

வறட்சித் தன்மை கொண்டது. ஆகையால் வாதத்தைச் சீற்றமுறச் செய்யக் கூடியது. மது விரைவாகச் செயல்படக்கூடியது. விய வாயி அதாவது பக்குவம் பெறுவதற்கு முன்பே உடலில் பரவித் தன் தன்மையை வெளிப்படுத்துவது ஆகையால் மகிழ்ச்சியூட்டுவது. விகாசி ஆகையால் எளிதில் உடல் முழுவதும் பரவக் கூடியது என்பது அறிக. 4,5

## 3. மதுவின் சுவை முதலியன

முற்கூறிய தன்மைகளைக் கொண்ட மது சிறப்பாகப் புளிப்புச் சுவை கொண்டது. சுவையூட்டுவது. சடராக்னியைத் தூண்டக் கூடியதுமாகும். உவர்ப்பு தவிர மற்ற ஐந்து சுவைகளும் மதுவில் உள்ளன என்று சிலர் (மருத்துவ நூலாசிரியர்கள்) கூறுகின்றனர். 6

## 4. மதுவை மிதமாகப் பருகுவதால் நன்மை

முறைப்படி அளவோடு மதுவைப் பருகினால் அதாவது எண்ணெய்ப்பசை மிக்க உணவுடனும், புலால் போன்ற உணவுப் பொருள்களுடனும் மதுவை உட்கொண்டால் அது ஆயுளையும் வலிமையையும் உடலையும் வளர்க்கும். முறையாகப் பருகினால் மது உடலுக்கு அழகையும், மனத்திற்குத் தெளிவையும், தைரியம், பொலிவு போன்ற குணங்களையும் வளர்க்கும். 7,8

## 5. முறைதவறி மதுவைப் பருகுவதால் தீமைகள்

அறிவிலியானவன் தக்க உணவுடன் அல்லாது அளவுக்கு மீறி மதுவைப் பருகுவதால் நெருப்பைப் போன்ற உஷ்ணத் தன்மை கொண்ட மது சடாரக்கினியுடன் சேர்ந்து போதையைத் தோற்று விக்கும். 9

## 6. அளவுக்கு மீறிய குடியின் விளைவுகள்

அளவுக்கு மீறி மதுவைப் பருகுவதால் மதத்திற்கு (போதைக்கு) வசப்பட்டு, புத்தி முதலியன தம் இயற்கைத் தன்மையை இழந்து விடுவதால் ஒளித்து வைக்கத் தக்க தன் மறைவான செயல்களையும் வெளிப்படுத்து விடுவார். 10

## 7. மதுவைப் பருகும் நிலைகள்

முதல் நிலை, நடுநிலை, பிற்பட்ட நிலை என மதுவைப் பருகுவதில் மூன்று நிலைகள் உள்ளன.

முதல் நிலையின் இலக்கணங்களாவன; அதாவது மதுவைப் பருகிய உடன் உடலில் வலிமை மிகுந்தது போன்ற உணர்வு, மகிழ்ச்சி, எல்லாச் செயல்களிலும், உடலின் மேலும் விருப்பம் மிகுதல், கலவிக்கு ஊக்கம், புலன்களுக்கு திருப்தி, தனக்குத்தானே அல்லது பிறருடன் மிக்க உரையாடல் எனும் இலக்கணங்கள் காணப்படும். 11, 12

## 8. மதுவின் நன்மை, தீமைகள்

கபம் மிகுந்து இயற்கையாகவே கபத்தன்மை மிகுந்துள்ள உடல் கொண்டவர், பித்தம் உடலில் குறைந்த அளவு கொண்டவர், எண்ணெய்ப்பசை மிகுந்த உடல் கொண்டவர் ஆகியோர் அளவோடு மதுவைப் பருகுவதால், அவர்க்கு அது மிக்க துன்பம் விளைவிப்ப தில்லை; ஆனால் உடலில் கபம் குறைந்துள்ள, பித்தம் இயற்கை யாக மிகுந்துறறவர் வறண்ட மதுவை அளவுக்கு மீறிப் பருகுவதால் மது மிக்க துன்பத்தை விளைவிக்கும். உணவின்றி அதாவது வெறும் வயிறு கொண்டுள்ள போது அல்லது இடைவிடாமல் மதுவைப் பருகினால் மதாத்யயம் கள்வெறி போன்ற கடும் நோய்கள் தோன்றலாம். அதனால் உடலும் அழிந்து போகக்கூடும். 13, 14

## 9. மதுவால் தோன்றும் குணக்கேடுகள்

சினம், அச்சம், நாவறட்சி வருத்தத்தால் மனக்கலக்கம், மிக்க பசிகொண்டிருத்தல், அதிக உடற்பயிற்சி அல்லது வெகுதொலைவு வழி நடப்பதாலான சோர்வு, மலம், சிறுநீர் போன்றவற்றின் வேகங்களைத் தடுத்த நிலை, உணவு செரிமானமடை யாத நிலை, ஆகியவற்றிலும் அல்லது உணவு உண்ட பிறகு வலிமையற்றவரால் வெப்பம் மிகுந்துள்ள நிலையிலும் மதுவைப் பருகினால் மது வெறி போன்ற துன்பங்கள் தோன்றும். 15,16

## 10. முறை தவறிப் பருகிய மதுவால் தோன்றும் நோய்கள்

முறை தவறிய மதுபானத்தால் பானாத்யயம், பரமதம், பானாசிரணம். பானவிப்ரமம் எனும் நோய்கள் தோன்றும். 17

## 11. பானத்யயத்தின் இலக்கணம்

வாதத்தால் தோன்றிய பானாத்யயத்தில் உடல் உறுப்புகளில் செயலற்ற தன்மை, உறுப்புகளில் சிதைவு, இதயப்பிடிப்பு, உடல் முழுவதிலும் அல்லது இதயத்தில் ஊசியால் குத்துவது போன்ற துன்பம் உண்டாகும். பித்தத்தாலான பானாத்யயத்தில் உடல் மிகவும் வியர்த்தல், பிதற்றல், வாய் உலர்ந்து போதல், எரிச்சல், நினைவிழத்தல், முகத்திலும் கண்களிலும் மஞ்சள் நிறம் தோன்றுதல் எனும் இலக்கணங்கள் காணப்படும் கபத்தாலான பானாத்யயத்தில் வாந்தி, குளிர் மிகுதியாதல், அதிக அளவு கபம் வெளிப்படுதல் எனும் இலக்கணங்கள் காணப்படும். மூன்று தோஷங்களாலும் தோன்றிய பானாத்யயத்தில் மூன்று தோஷங் களினாலும் தோன்றும் இலக்கணங்கள் கலந்து காணப்படும். 18

## 12. பரமதத்தின் இலக்கணம்

பரமதம் எனப்படும், மதுவெறி நோயில் வெப்பமும், குருத்தன்மையும் மிகுந்து காணப்படும். வாய் சுவை உணரும் தன்மையை இழக்கும். கபம் மிகுதியாகும். சுவையின்மை, மலம், சிறுநீர் ஆகியவை தடைப்படுதல், மிக்க நாவறட்சி தலைவலி, ணைப்புகள் விட்டுப்போதல் போன்ற வலி எனும் லக்கணங்கள் காணப்படும். 19

## 13. பானாசீர்ண இலக்கணம்

பருகிய மது செரிமானமடையாமையால் வயிற்று உப்புசம் ஏப்பம், மிகுதல், வாந்தி வாய்புளித்தல், உண்ட உணவு செரியாமை, உடல் முழுவதும் எரிச்சல் எனும் இலக்கணங்கள் காணப்படும். மேலும் பித்தம் சீற்றமடைவதால் தோன்றக்கூடிய இலக்கணங்கள் காணப்படும். 20

## 14. பானவிப்ரமம் எனும் நோயின் இலக்கணம்

யம், உடல் உறுப்புகள் ஆகியவற்றில் ஊசியால் குத்துவது போன்றவலி, வாந்தி, காய்ச்சல், தொண்டையில் புகை மண்டி யிருப்பது போன்ற உணர்ச்சி, நினைவிழத்தல், கபப்பெருக்கு, ளைப்பகுதியில் வலி, உணவு செரியாமை, உடலில் அழற்சி, ணவுப் பொருள்கள் ஆகியவற்றில் வெறுப்பு எனும்

இலக்கணங்கள் பானவிப்ரமம் எனும் நோயின் இலக்கணங்களாகும். 21

## 15. சிகிச்சைக்கு உட்படாத மதாத்யய இலக்கணம்

மேல் உதடு தொங்கிக் கொண்டிருத்தல், உடல் புறப்பகுதியில் மிக்க குளிரும் உட்பகுதியில் மிக்க அழற்சியும் தோன்றுதல், வாய் முகம் போன்றவை எண்ணெய் பூசியதைப் போல் காணப்படுதல் எனும் இலக்கணங்கள் உடன் கூடிய மதாத்யயம் சிகிச்சையால் தீர்க்க இயலாததாகும். 22

## 16. மதுபானத்தால் தோன்றும் துன்பங்கள்

முறை தவறி அல்லது அளவுக்கு மீறி மதுவைப் பருகுவதால் தோன்றும் பானாத்யய நோயில் விக்கல், வாந்தி, நடுக்கம், விலாவலி, இருமல், தலைசுற்றல் எனும் உபத்ரவங்கள் தோன்றும். இத்தகைய பானாத்யயம், அதனால் தோன்றும் உபத்ரவங்கள் ஆகியவற்றைப் போக்குவதற்கான நான் கூறும் சிகிச்சை முறைகளைத் தெளிவாக, முழுமையாகக் கேள். 23

## 17. வாதத்தாலான மதாத்யயத்திற்குச் சிகிச்சை

வாதத்தால் தோன்றும் மதாத்யயத்தில் புளிச்சக்கீரை, மிளகு, இஞ்சி, ஓமம், கோஷ்டம் ஆகியவற்றின் தூளை மதுவில் கலந்து அதில் சிறிதளவு சௌவர்சல உப்பும் சேர்த்து நோயாளியைப் பருகச் செய்க. அல்லது மதுவில் பெரும் ஏலக்காய், ஓமம், சுக்கு, தூய பெருங்காயம், சௌவர்சல உப்பு ஆகியவற்றின் தூளைச் சிறுகச் சிறுக அளவோடு கலந்து பருகச் செய்க. இம்முறைகள் வாதத்தால் தோன்றும் மதாத்யயத்தைப் போக்கி நலம் விளைவிக்க வல்லவையாகும். 24

## 18. வாதமதாத்யயத்திற்குப் பானகம்

**எரிமா, மாங்காய், மாதுளை விதை, துரிஞ்சிப்பழம் ஆகியவற்றை நான்கு மடங்கு நீர் விட்டுக் கொதிக்க வைத்து நான்கில் ஒரு பங்கு மிகுந்திருக்கும்போது வடிகட்டி ஷாடபம் எனும் பானகம் முறையாகச் செய்து பயன்படுத்துக. அல்லது நீர்ப்பாங்கான நிலப் பகுதியில் வாழும் விலங்குகள், பறவைகள் ஆகியவற்றின்**

புலாலைப் பக்குவம் செய்து அந்தச் சாற்றினில் மாதுளை சாரை முதலியவற்றின் பழங்களின் சாறுகளைச் கலந்து அதில் பெருங் காயம் போன்றவற்றால் மணம் கொள்ளச் செய்து பருகச் செய்க. 25

## 19. பித்தச் சீற்றத்தால் தோன்றும் மதுவெறிக்குச் சிகிச்சை

பித்தம் சீற்றமுள்ள நிலையில் மதுவினால் தோன்றிய வெறிக்கு சீந்தில் கொடியைத் தவிர்த்து மற்றவையான காகோலி முதலிய இனிப்புச் சுவை கொண்ட மருந்துப் பொருள்களின் கஷாயத்தில் மதுவை கலந்து அதில் தேனும் சர்க்கரையும் சேர்த்து ஏலக்காய், இலவங்கப்பட்டை, ஜாதிபத்திரி போன்றவற்றின் தூளைக் கலந்து நறுமணம் தோன்றச் செய்து பருகச் செய்க. அந்த மதுவைப் பருகிய பிறகு வேறு மதுவில் போதிய அளவு சுக்கின் சாறு கலந்து வயிறு முட்டப்பருகச் செய்க. பிறகு சிறிது நேரம் சென்றதும் வாந்தி எடுக்கச் செய்க. வாந்தி எடுத்த பிறகு லாவகப்புள், மான் தித்திரிப் புள் போன்றவற்றின் புலாலைப் பக்குவம் செய்து அதன் சாற்றைப் பருகச் செய்க. இந்த புலால் சாற்றில் மாதுளை போன்ற புளிப்புச் சுவையுள்ள பொருள்களைச் சேர்க்கக் கூடாது. அல்லது பயிற்றை பக்குவம் செய்து வடிகட்டி அதில் நெய்யும், சர்க்கரையும் கலந்து பருகச் செய்க. 26,27

## 20. கபத்தின் சீற்றத்தாலான மதுவெறிக்குச் சிகிச்சை

கபம் சீற்றமடைந்துள்ளபோது தோன்றும் மது வெறிக்கு முதலில் கசப்புக்கோவை நீர்வஞ்சிக்காய் முதலியவற்றின் கஷாயத்தில் மதுவைக் கலந்து பருகச் செய்து வாந்தி எடுக்கச் செய்க. பிறகு காட்டில் வாழும் விலங்குகள் பறவைகள் ஆகியவற்றின் புலால் சாற்றைக் கசப்பு, கார்ப்புச் சுவைகள் கொண்ட பொருள் களுடன் பக்குவம் செய்து பருகச் செய்க. அல்லது காஞ்சொரி முதலான கசப்புச் சுவை கொண்டவையும் திப்பிலி முதலான கார்ப்புச் சுவை கொண்ட பொருள்களையும் சேர்த்து பயிற்றின் கஞ்சி செய்க உட்கொள்ளச் செய்க. 28

கபத்தாலான மதுவெறியில் யவதானியத்தால் செய்த கஞ்சி வகைகள் மற்றும் அதனாலான உணவுப்பொருள் வகைகளை உட்கொள்ளச் செய்க. காட்டில் வாழும் விலங்குகள், பறவைகள் முதலியவற்றின் புலால் மற்றும் கபத்தைத் தோற்றுவிக்காத உணவு முதலியவற்றைப் பயன்படுத்த வேண்டும். 29

## 21. இரண்டு தோஷங்களால் அல்லது ஸந்நிபாதத்தாலான மது வெறிக்குச் சிகிச்சை

ஸந்நிபாதத்தால் தோன்றும் மது வெறிக்கு எல்லா தோஷங்களையும் போக்கவல்ல சிகிச்சை முறைகளைக் கையாள வேண்டும். இரண்டு தோஷங்கள் கலந்ததாலான மது வெறிக்கு நன்கு ஆராய்ந்து நோயாளியின் உடலில் அவ்விரண்டு தோஷங்களிலும் அதிக அளவு சீற்றமுள்ள தோஷத்தைத் தணிக்கத் தக்க சிகிச்சையைச் செய்ய வேண்டும். மற்றும் பொதுவான, சிறப்பான உணவு வகைகளை நோயாளியின் விருப்பத்திற்கு இணங்க ஆனால் இதமானவற்றை அறிந்து பயன்படுத்தல் செய்க. இனி கூறப்போகும் முறைகளையும் தகுந்தபடி பயன்படுத்துக. 30

## 22. எல்லாவகையான மது வெறிக்கும் பொதுவான சிகிச்சை

இலவங்கப்பட்டை, சிறுநாகப்பூ, திப்பிலி, ஏலக்காய், இலுப்பைப்பூ, கொத்துமல்லி விதை, சீரகம், மிளகு எனும் இவற்றைச் சம அளவில் கொண்டு இடித்து துணியால் சலித்துக் கொள்க. இந்தத்தூளில் மூன்று முதல் ஆறு உளுந்து எடை வரை கொண்டு விளாங்காய்ச்சுரச நீர், பெரிய ஈச்சம் பழச்சாறு ஆகியவற்றுடன் கலந்து துணியால் வடிகட்டி மதுவெறிக்குப் பருகச் செய்க. 31

## 23. மதுவெறியில் மேல்பூச்சு

குருவேர், தாமரை, கைவர்த்தம் எனப்படும் கோரைக்கிழங்கு, அரளிப்பூ, தாமரை மலர்கள் ஆகியவற்றை சேர்த்து அரைத்து உடலின் மேல் பூசினால் மதுவாலான வெறி தணியும். அவ்வாறே நன்னாரி முதலான கூட்டுப் பொருள்களைப் பதுமுகத்துடன் அரைத்து மிகக் குளிர்ந்த நீரில் கலந்து அந்நீரைக் கொண்டு மதுவெறி கொண்டவரைக் குளிப்பாட்டினால் வெறி தணியும். 32

## 24. மதுவெறிக்குப் பானகம்

இலவங்கப்பட்டை, ஜாதிபத்திரி, ஏலக்காய், சிறுநாகப்பூ, நரிவலியின் தளிர் இலைகள் மற்றும் பட்டை, வெல்லம், திராட்சை

ஆகியவற்றைத் தகுந்த அளவு கொண்டு, அரைத்து வடிகட்டி நறுமணம் கொண்ட பானகம்செய்க. மதுவெறி கொண்டவருக்குப் பருகத் தர வேண்டும். 33

அதிமதுரம், கோஷ்டம், திராட்சை, கக்கரி விதை (வெள்ளரி விதை) அல்லது வேர் ஆகியவற்றைச் சம அளவில் கொண்டு நீர் விட்டு நன்றாக அரைத்து நீரில் கலந்து மதுவெறி கொண்டவரைப் பருகச் செய்க. அல்லது காட்டுப் பருத்திவேர், நாகபலை, சூரிய காந்திவேர் ஆகியவற்றைச் சம அளவில் கொண்டு நீர் விட்டு அரைத்து நாள்தோறும் மூன்று வேளை நீருடன் கலந்து பல நாட்கள் பருகச் செய்தால் மதுவெறி தணியும். 34

## 25. பரமதம் எனும் மதுவெறிக்குப் பானகம்

குமிழன், மரமஞ்சள், பிடாலவணம், மாதுளை விதை, திப்பிலி, திராட்சை எனும் இவற்றைச் சம அளவில் கொண்டு சிறிது நீர்விட்டு அரைத்து நீரில் கலந்து வடிகட்டிப் பானகம் செய்து அதில் சிறிதளவு துரிஞ்சிப்பழச் சாறு விட்டுப் பருகச் செய்தால் பரமதம் எனும் மதுவெறி நோய் விரைவில் தணியும். 35

## 26. திராட்சாதி பானகம்

திராட்சை, சர்க்கரை, அதிமதுரம், வெண்சீரகம், கொத்துமல்லி விதை, திப்பிலி, சிவதை இவற்றைத் தகுந்த அளவில் கொண்டு நீர்விட்டு அரைத்து விழுதாகச் செய்க. பிறகு அதை நீரில் கலந்து வடிகட்டித் துரிஞ்சிப் பழச்சாறு கலந்து புளிப்புச் சுவை தோற்று வித்துப் பருகச் செய்க. இவ்வாறே காட்டு வாழ் விலங்குகள், மற்றும் பறவைகளில் புலால் சாற்றுடன் சிறிது சௌவர்ச்சல உப்பு கலந்து மாதுளை முதலான புளிப்புச் சுவை கொண்ட பழங்களின் சுரசத்துடன் சேர்த்துப் புளிப்புச் சுவையுண்டாக்கிப் பருகச் செய்க. மேலும் சிறுதேக்குக் கஷாயத்தை நோயாளியின் உடலின் மேல் ஊற்றி நனைத்துக் கொண்டிருக்கவும். 36

## 27. பானா சிரணத்திற்குச் சிகிச்சை

கசப்புச் சுரை, கசப்புப்பீர்க்கு, குடசப்பாலை, பேய் அத்தி எனும் இவற்றைச் சமஅளவில் கொண்டு (இரண்டு தோலா அளவு

கொண்டு) நீர்விட்டு அரைத்து விழுதாகச் செய்து பாலுடன் பக்குவம் செய்து அதில் நான்கு பலம் அளவு கொண்டு பானா சிரண நோயில் வாந்தி எடுக்கக் கொடுக்க வேண்டும். பிறகு மாலை வேளையில் சடராக்னி வளர்ச்சி பெற மதுவைப் பருகச் செய்க. 37

## 28. பானா சிரணத்திற்கு நான்கு முறைகள்

1. இலவங்கப்பட்டை, திப்பிலி, சிறுநாகப்பூ, பிடாலவணம் எனும் இவற்றைச் சம அளவில் கொண்டு தூளாக்கி அதில் மூன்று முதல் ஆறு உளுந்து எடை வரை இரு தோலா மதுவில் சேர்த்துப் பருகச் செய்க. (2) தூய பெருங்காயம், மிளகு, ஏலக்காய், ஆகிய இவற்றைத் தூளாக்கி மதுவிற் கலந்து அத்துடன் புளிப்புச் சுவை கொண்ட மாதுளை, துரிஞ்சி போன்ற பழங்களின் சாறு சிறிது கலந்து புளிப்புச் சுவையுண்டாக்கிப் பருகச் செய்க. (3) இந்துப்பு, பிடாலவணம், இலவங்கப்பட்டை எனும் இவற்றின் தூளை மதுவில் கலந்து அத்துடன் இளஞ்சூடுள்ள நீர் சிறிது சேர்த்துப் பருகச் செய்க. (4) செவியம், ஏலக்காய், பெருங்காயம், திப்பிலி வேர், சுக்கு ஆகியவற்றின் தூளை மதுவில் கலந்து பருகச் செய்க. இவற்றுடன் இதயத்திற்கு நன்மை தரும் பயற்றின் கஞ்சி, முதலியவற்றைப் பயன் படுத்துவதால் மிக்க நன்மை உண்டாகும். 38

## 29. பானவிப்ரமத்திற்குத் திராட்சாதி பானகம் முதலியன

(1) திராட்சை, விளாம், துரிஞ்சி, மாதுளை ஆகியவற்றின் பழங்கள் அல்லது மாதுளம்பழம் கொண்டு முறைப்படி பானகம் செய்து அதில் அதிக அளவு தேனும், சர்க்கரையும் கலந்து பருகச் செய்தால் மதுவால் தோன்றும் தலைசுற்றல் நீங்கும், (2) எரிமா, இலந்தைப்பழம், ஆகியவற்றுடன் முறைப்படி பானகம் செய்து பருகச் செய்க. (3) பேரிச்சம்பழம் பிரப்பம் பழம், மூங்கில் குருத்து, ஈச்சம் பழம், திராட்சை இலந்தை ஆகியவற்றாலான பானகத்தில் சர்க்கரை மற்றும் குமிழன்பழத்தூள் அல்லது சுரசத்தைக் கலந்து பருகச் செய்தால் பானவிப்ரமம் தணியும், (4) பால் உள்ள ஆலம் முதலான மரங்களின் இலை, தாமரைத் தண்டு, வெண்சீரகம், சிறுநாகப்பூ, சாதிபத்திரி, ஏலயிலுகம், வெள்ளை நன்னாரி, பதுமுகம், எரிமா, களாக்காய், விளாம்பழம், இலந்தைப்பழம், புளிவஞ்சி, பிரப்பம்பழம், சீரகம், மாதுளம்பழம் எனும் இவற்றைச்

சம அளவில் கொண்டு சமஅளவு அதிமதுரமும் தாமரையும் சேர்த்து குளிர்ந்த நீருடன் அரைத்து பானகம் செய்து பருகச் செய்க. இம்முறைகளால் பானவிப்ரமம் தீரும். 39–41

## 30. பானாத்யயம் முதலான ஏழு நோய்களுக்குச் சிகிச்சை

மிளகு, வெள்ளைச் சீரகம், சிறுநாகப்பூ, இலவங்கப்பட்டை, சாதிபத்திரி, சுக்கு, செவியம், ஏலக்காய் எனும் இவற்றை மையத் தூளாக்கி துணியில் சலித்து அதில் புகை முதலியவற்றால் புகை போட்டு, புலால் சாற்றில் கலந்து பயன்படுத்தினால் அளவுக்கு மீறி மதுவைப் பருகுவதால் தோன்றிய நோய்கள் தணியும். 42

## 31. மதுவெறிநோய்களுக்குப் பத்திய முறை

மது வெறியில் இசைக்கருவிகளை இனிமையாக ஒலிக்கச் செய்தல், மென்மையான படுக்கைகள், மனதிற்கு இனிய தோற்றங்கள், சுவை மிகுந்த உணவுப்பொருள்கள், நறுமண மணம் கொண்ட சந்தனம், மலர் மாலை முதலியவற்றை நோயாளிக்குக் கொடுக்க வேண்டும். பௌஷ்டாகம் (வெல்லத்தாலானது) மாத்வீகம் (திராட்சை சாறாலானது) போன்ற இலேசான மது, மனத்திற்கு இனிய உணவு, பழக்க வழக்கங்கள், ஆகியவற்றை இடையின்றி பயன்படுத்த வேண்டும். மற்றும் நன்கு பருத்த பின்தட்டுகளும், தொடைகளும், கொங்கைகளும் கொண்டவர்களான அழகிய மங்கைகள் அத்தகைய (மதுவெறி கொண்ட) நோயாளியைச் சூழ்ந்திருந்தால் அவருடைய ஐம்புலன்களும் தணிவு பெறும். அதனால் மதுவெறி தணியும். 43–44

பூசணிச்சுரசத்தில் சர்க்கரை, இலுப்பைப்பூ அல்லது பழங்களின் சாறு, இலவங்கப்பட்டை, ஏலக்காய், சாதிபத்திரி, ஆகியவற்றின் தூள் அவ்வாறே சிறுநாகப்பூ, வெண்சீரகம், திப்பிலி, மிளகு ஆகியவற்றின் தூள் தகுந்த அளவு கலந்து மது வெறி கொண்டவருக்குப் பருகத் தரவேண்டும் 45

சாரடை, அதிமதுரம், இலுப்பை, கொம்பரக்கு, இலவங்கப் பட்டை, மந்தாரைத் தளிர், சீரகம், திராட்சை, திப்பிலி, சிறுநாகப்பூ எனும் இவற்றைச் சம அளவில் கலந்து இரண்டு தோலா அளவு கொண்டு பால்விட்டு அரைத்துப் பாலில் கலந்து வடிகட்டிச் சுகத்தை விரும்பும் மதுவெறி கொண்ட நோயாளியைப் பருகச் செய்க. 46

## 32. மதுவெறிக்கு மதுவால் சிகிச்சை செய்தல்

சுரை, ஆஸவம், சீது, வாருணி போன்ற மதுவகைகளில் மதுவெறியைத் தோற்றுவித்த மதுவையே அளவோடு பருகச் செய்தால் மது வெறி தணியும். வேறு வகை மதுவைப் பருகச் செய்வதால் நோயாளி நிலை தவறியவராவார். 47

மன்னர்களால் தண்டனைக்கு உள்ளானவன், அந்தத் தண்டனையிலிருந்து விடுதலை பெற வேண்டுமானால், அந்த மன்னனையே உபாயத்தால் தன்பால் அருள் கொள்ளுமாறு செய்துகொள்வது ஒன்றே வழியாகும். அதைப்போல எவ்வகை மதுவால் வெறி தோன்றுமோ அவ்வகையான மதுவை முறையாகப் பருகுவதாலேயே அந்த வெறியை நீக்கிக் கொள்ள வேண்டும் என்பதாம் வேறு மருந்துகள் பயன் தரா என்பது கருத்தாகும். 48

## 33. மதுவை விடுவதால் விளைவு

சில காலம் மதுவைப் பருகுவதைக் கைவிட்டுப் பிறகு மீண்டும் பருகினால் பானாத்யயத்தால் தோன்றும் துவம்ஸகம், விக்ஷேபகம் முதலான துன்பங்கள் தலை தூக்கும். 49

## 34. மதுவால் நாவறட்சி தோன்றக் காரணம்

மதுவில் நெருப்பு மற்றும் வாயுவின் தன்மைகள் மிகுந்திருப்பதால் அது உடலில் நீரை தாங்கிப் பரவச்செய்யும் சுரோதஸ்களையும், உடலில் உள்ள நீரையும் உலர்த்தி வற்றிப் போகச் செய்து விடும். அதனால் மது மிக்க நா வறட்சியைத் தோற்றுவிக்கும் 50

## 35. மதுவால் தோன்றும் நாவறட்சிக்குச் சிகிச்சை

பாதிரி, தாமரை, தாமரைக்கிழங்கு, காட்டுப்பயறு ஆகியவற்றை நீரில் இட்டுக் காய்ச்சிக் குளிர வைத்து அதில் பனிக்கட்டியைச் சேர்த்து மேலும் குளிர்ச்சி தோற்றுவிக்கவும். அதில் இரண்டு குன்றிமணி எடை திப்பிலித் தூளைக் கலந்து மதுவால் தோன்றிய நா வறட்சி கொண்டவரைப் பருகச் செய்தால் நாவறட்சி தணியும். 51

நெய், எண்ணெய், கொழுப்பு, மஜ்ஜை (எலும்புக்குள் உள்ள சோறு) எனும் நான்கும் சம அளவு கலந்து ஒரு பிரஸ்தம், கரிசலாங் கண்ணிச் சாறு ஒரு பிரஸ்தம், வில்வம் மற்றும் யவதானியக் கஷாயம் இரண்டு பிரஸ்தம், ஏலாதி கணத்தைச் சேர்ந்த நறுமணப் பொருள்கள் சமஅளவு எனக் கலந்து நான்கு பலம் எனும் அளவில் கொண்டு நீர்விட்டு அரைத்து விழுதாகச் செய்து அனைத்தையும் சேர்த்து எண்ணெய் - பகுதி மட்டும் மிகுந்திருக்கச் காய்ச்சுக. மதுவெறியால் தோன்றும் அழற்சி மற்றும் நாவறட்சிக்கு இந்த எண்ணெயை உடல் முழுவதும் தேய்த்துக் குளிக்கச் செய்க. இனிப்புச் சுவையும், குளுமைத் தன்மையும் கொண்ட பொருள் களாலான கஷாயத்தில் பனிக்கட்டி முதலியவற்றைச் சேர்த்து மேலும் குளிர்ச்சி கொள்ளச் செய்து அதைக் கொண்டு எரிச்சல் மிகுந்துள்ள உடற்பகுதியை நனைத்துக் கொண்டிருக்க வேண்டும். 52

தோஷத்தால் தோன்றிய துன்பத்திற்கு அந்தத் தோஷத்திற்கு மாறான தன்மை கொண்ட உணவு பொருள்களைப் பயன்படுத்த வேண்டும். எனவே, இனிப்புச்சுவை மிக்கவையும், குளிர்ச்சியைத் தோற்றுவிப்பவையும், நறுமணம் கொண்டவையுமான இதயத் திற்கு இதமான உணவுப் பொருள்களைப் பயன்படுத்த வேண்டும். 53

## 36. மதுவால் தோன்றும் அழற்சி

முறையற்ற மது பானத்தால் தோன்றும் வெப்பம் உடலில் உள்ள இரத்தத்துடனும், பித்தத்துடனும் சேர்ந்து தோல் பகுதியைச் சார்ந்து கடுமையான எரிச்சலைத் தோற்றுவிக்கும். அந்நிலையில் பித்தச் சீற்றத்திற்குக் கூறிய முறைப்படி மிக்க குளிர்ச்சியைத் தோற்றுவிக்கும் சிகிச்சை முறைகளைக் கையாள வேண்டும். 54

## 37. செல்வம் மிகுந்தவர்களுக்குத் தோன்றும் அழற்சிக்குத் சிகிச்சை

செல்வம் மிக்கவர்களுக்குத் தோன்றும் மதுவெறியாலான அழற்சிக்கு உரிய சிகிச்சை பின்வருமாறு : முதலில் குளிர்ச்சி தரும் சந்தனப் பூச்சை உடலில் பூச வேண்டும். குளிர்ச்சி தரும் நிலாவில் இருக்கச் செய்து, முத்துமாலை, பன்னீர் முதலியவற்றைத் தாங்கச் செய்து மேலும் குளிர்ச்சியூட்ட வேண்டும். முத்துமாலைகள்

தாமரைத் தண்டுகளாலான வளையல்கள் முதலியவற்றை அணிந்த இளமங்கையர் குளிர்ச்சி தரும் படுக்கையில் உள்ள அவரை அணைத்துக் கொண்டிருக்க வேண்டும். அல்லது குளிர்ந்த நீர்த் துளிகள் உள்ள தாமரை இலைகளாலான படுக்கையில் படுத்திருக்கச் செய்ய வேண்டும். 55, 56

வெட்டிவேர் அல்லது தாமரை இலைகளைக் கொண்டு செய்த விசிறியை குளிர்ந்த நீரில் நனைத்து இளமங்கையர் அவருக்கு வீசிப் பணிவிடை செய்ய வேண்டும். நறுமணம் கொண்ட செந்தாமரை, வெண்தாமரை, நீர்ப்பாசி வகைகள் முதலியவற்றாலான படுக்கையில் இருக்கச் செய்க. நடக்கக் கூடிய நிலையில் இருந்தால் அவரை நறுமண மலர்களைக் கொண்ட தோட்டத்தில் குளிர்ச்சியும், நறு மணமும் கொண்ட தென்றலை அனுபவிக்கும்படி உலாவச் செய்ய வேண்டும். 57

மதுவெறியால் தோன்றும் அழற்சியால் நாவறட்சி மிகுந்துள்ள வருக்கு வெட்டிவேர், தாமரை, சந்தனம், நறுமணப்பொருள்கள் ஆகியவற்றால் மணம் தோற்றுவிக்கப்பட்ட நீரை உடலின் மேல் ஊற்றிக் கொண்டிருக்க வேண்டும்.

நீர்த்தொட்டியில் உள்ள பழைய நீரை நீக்கிச் சேறு முதலியவற்றை அகற்றிப் புதுநீரை நிரப்பி அதில் தாமரை, ஆம்பல் முதலிய மலர்களை இட்டு நறுமணப் பொருட்களையும் சேர்த்து வைக்கவும். பிறகு தான் உடலில் சந்தனம் பூசி இள மங்கையர் தொடுவதால் புல்லரிப்புடன் கூடிய உடல் கொண்டவராகிய அவரை அந்தத் தொட்டியில் மூழ்கிக் குளிக்கச் செய்ய வேண்டும்.

தாமரைக்கொடி போன்ற குளிர்ச்சி தரும் கைகளும், குளிர்ச்சி தரும் பருத்த தொடைகளும், கடினமான கொங்கைகளும் கொண்ட இளமங்கையர் அந்நீர்த்தொட்டியில் இறங்கித் தம் உறுப்புகளால் அவருக்குப் புல்லரிப்பும் மகிழ்ச்சியும் தோன்றத் தழுவிக்கொண்டு இனிய உரையாடல்களால் மனமகிழ்ச்சியைத் தோற்றுவித்துக் கொண்டிருக்க வேண்டும் 58 – 60

கார்ப்பருவத்தில் முகில் சூழ்ந்துள்ள நாட்களில் மழைபொழி வதற்கு முன் இருள் சூழ்ந்திருக்கும். அந்தத் தோற்றம் கொண்டு குழாய்களால் குளிர்ந்த நீரை நிரப்பிக் கொண்டிருப்பதும், நறுமணப் பொருள்களைத் தரையிலும், சுவர்களிலும் பூசுவதால் மணம் நிரம்பியுள்ளதுமானதும், சடாமஞ்சி கோரைக்கிழங்கு, குங்குமப்பூ,

தாமரை இதழ்கள், மல்லி மலர், சாதி மல்லி, ஆம்பல் கடம்ப மலர், பவழமல்லி, புன்னை மலர், சிறுநாகப்பூ மலர், சிவந்த அரளிமலர் போன்றவை தூவப்பட்டுள்ளதும், தாமரை சிவந்த மகரந்தங்கள் நிரம்பியுள்ளதுமான தாராகிருஹம் எனப்படும் குளிர்ச்சி மிகுந்த இல்லத்தில் அவரை இருக்கச் செய்ய வேண்டும்.

இயந்திரக் குழாய்கள் குளிர்ந்த நீரைத் தெளித்துக் கொண்டிருக்க குளிர்ச்சி தரும் மலர்மாலைகளை அணிந்து அந்தத் தாராகிருஹத்தில் வசித்து குளிர்ச்சி மிக்க பொருள்களைப் பற்றிய உரையாடல்களில் மூழ்கி இருக்கவேண்டும். மற்றும் மதுவெறியால் அழற்சி மிகுந்து வாடிய அப்புருடனுக்கு விருப்பமான பருத்த தொடை, கடினமான கொங்கைகள் கொண்ட இளமங்கையர்கள் தம் உடலில் பச்சைக்கற்பூரம், முதலியவற்றைப் பூசிக் கொண்டு இனிய உரையாடல்களையும் தழுவுவதாலும் மகிழ்ச்சியூட்டிக் கலவியில் ஈடுபட வேண்டும்.

தனிமையில் அவ்வாறு கூடியுள்ள இளமங்கையர்கள் தம் அழகாலும் செய்கைகளாலும் உரையாடல்களாலும் அவருக்கு மகிழ்ச்சியூட்டிக் கொண்டிருந்தால் பித்தச் சீற்றத்தாலான மதுவெறியால் தோன்றும் அழற்சி தணியும். 61–65

## 38. நாவறட்சி, அழற்சி முதலியவற்றிற்குச் சிகிச்சை

நாவறட்சி, அழற்சி, இரத்த பித்தம் முதலியவற்றிற்கு முன் கூறப்பட்ட தாராகிருஹத்தில் வசித்தல், இளமங்கையருடன் கலவி போன்றவற்றைப் பொதுவாகச் செய்ய வேண்டும். இனி எல்லா வகையான அழற்சியிலும் சிறப்பாகச் செய்யத் தக்க சிகிச்சை முறைகள் கூறப்படுகின்றன. 66

## 39. இரத்தத்தால் தோன்றும் அழற்சி

தவறான உணவு, கூடாத பழக்கவழக்கங்கள் ஆகியவற்றால் சீற்றம் மிகுந்து வளர்ந்த இரத்தம் உடலில் பரவிய போது அது எரிச்சலைத் தோற்றுவிக்கும். அந்நோயாளியின் முகம் செம்பு போலச் சிவந்திருக்கும். கண்களும் சிவந்திருக்கும். அவருடலிலிருந்து இரும்பின் நாற்றத்திற்கு இணையான மணமும் வீசும். அவர் தன்னை நெருப்பு சூழ்ந்திருப்பது போன்ற துன்பம் கொண்டவராக உணர்வார். 67, 68

## 40. இரத்தத்தாலான அழற்சிக்குச் சிகிச்

இரத்தத்தால் அழற்சி மிகுந்துள்ளவரை முதன்முதலில் முறைப்படி பட்டினி இருக்கச்செய்து முறையாகப் பேயா முதலான உணவுமுறைகளால் உடல் செழிப்புறச் செய்ய வேண்டும். இம்முறையால் எரிச்சல் தணியாதபோது முதலில் அவருக்கு, காட்டில் வாழும் விலங்குகளின் புலால் சாற்றினால் நிறைவு படுத்திப் பிறகு தோள், முழங்கால் கீழ்ப் (ஆடுசதை) பகுதியில் உள்ள ரோகினி எனும் சிரையை முறைப்படி கீறி இரத்தத்தை வெளியேற்ற வேண்டும். 69

## 41. பித்தத்தால் தோன்றும் அழற்சிக்குச் சிகிச்சை

பித்தச் சீற்றத்தால் தோன்றும் அழற்சிக்குப் பித்தக்காய்ச்ச லுக்குக் கூறப்பட்ட இலக்கணங்கள் காணப்படும். ஆகையால் பித்தத்தாலான அழற்சிக்கு உரிய சிகிச்சைகளைப் பித்தக் காய்ச்ச லுக்குக் கூறப்பட்ட முறைகளைப் பின்பற்றி செய்ய வேண்டும். 70

## 42. நாவறட்சியைத் தடுப்பதால் தோன்றும் அழற்சி

மதுவைப்பருகிய பிறகு அதன் கடும் வெப்பத்தால் தோன்றும் நாவறட்சியைத் தடுப்பதால் உடலில் உள்ள நீர் வற்றிப்போகும். அதனால் பித்தம் வளர்ச்சி பெறும். அதனால் தோன்றும் வெப்பம் அறிவாற்றல் (மதுவால்) குறைந்துள்ள அந்நோயாளியின் உடலுக்குள் உள்ள உறுப்புகளிலும், புறஉறுப்புகளிலும் கடும் அழற்சியைத் தோற்றுவிக்கும். தொண்டை, அன்னம், உதடு, போன்றவை மிக்க உலர்ந்து நாக்கு வெளியே நீட்டிக்கொண்டு நடுங்கிக் கொண் டிருக்கும் 71

## 43. அழற்சிக்குச் சிகிச்சை

நாவறட்சியை அடக்குவதால் தோன்றிய அழற்சிக்கு முதன்முதலாக உடலில் வளர்ந்துள்ள பித்தத்தைத் தணிக்க இனிப்புச்சுவையும், குளுமைத் தண்மையும் கொண்ட குடிநீர் மற்றும் உணவு வகைகளைப் பயன்படுத்த வேண்டும். குளிர்ச்சி தரும் பணி விடைகளைச் செய்ய வேண்டும். குளிர்ந்த நீர், கருப்பஞ்சாறு, சர்க்கரை கலந்த பால் முதலியவற்றைப் பயன்படுத்த வேண்டும். பித்தக் காய்ச்சலுக்குக் கூறப்பட்ட சிகிச்சை முறைகளைக் கையாள வேண்டும் 72

## 44. குடலில் இரத்தம் சேர்வதற்குச் சிகிச்சை

புற உடலில் படும் காயங்கள், அல்லது உடலுக்குள் உறுப்புகளில் மிக்க அழுத்தம், கட்டி முதலியன தோன்றுதல் போன்ற காரணங்களால் இரத்தப் பெருக்கு ஏற்பட்டு குடலில் ரத்தம் சேர்ந்துள்ள போது கடும் அழற்சி தோன்றும். இவ்வாறு இரத்தம் குடலில் சேர்ந்துள்ளதன் இலக்கணம், அதனால் தோன்றும் அழற்சியின் இலக்கணம், அதற்கு உரிய சிகிச்சை முறைகள் முதலியன ஸத்யோவிரணீய அத்தியாயத்தில் விளக்கப்பட்டுள்ளன. அம்முறைகளைப் பயன்படுத்தி சிகிச்சை செய்க. 73

## 45. தாதுக்கள் குறைந்து போவதால் தோன்றும் அழற்சி

இரசம், இரத்தம் முதலான தாதுக்கள் குறைந்து போவதால் அழற்சி உண்டாகும். அது தாதுக் குறைவால் தோன்றும் அழற்சி எனப்படும். அதில் நினைவிழத்தல், நாவறட்சி, குரல் மாறுபாடு, போன்றவற்றால் நோயாளி செயலற்றுத் துன்புற்றிருப்பார். அந்நிலையில் இரத்த பித்தத்திற்கு உரிய சிகிச்சை முறைகளைக் கையாண்டு எண்ணெய்ப் பசை மிக்கவையும், வாதத்தைத் தணிப்பவையுமான சிகிச்சைகள் மிக்க நன்மை தருவனவாகும்.

74–75

## 46. இரத்தம் கலந்த உணவால் தோன்றும் அழற்சி

இரத்தம் கலந்த உணவை உட்கொள்ளுதல், மிக்க வருத்தம் கொண்டுள்ள போது உணவு உட்கொள்ளுதல் போன்ற காரணங்களால் மிக்க அழற்சி தோன்றும். அத்தகையவர், மிகுந்த நாவறட்சி, நினைவு தவறுதல் போன்ற துன்பங்கள் கொண்டு அரற்றிக் கொண்டிருப்பார். அந்நிலையில் நோயாளிக்கு விருப்பமான ஒலிகளையும், தொடு உணர்ச்சிகளையும் தோற்றுவித்தல், நண்பர்கள் அவரைச் சூழ்ந்து கொண்டிருத்தல், பால், புலால்சாறு முதலியவற்றுடன் உணவு அளித்தல், மற்றும் முன் அழற்சியைத் தணிக்கக் கூறப்பட்ட சிகிச்சை முறைகளைக் கையாள வேண்டும். 76 – 77

## 47. தாக்குண்டதால் தோன்றும் அழற்சிக்குச் சிகிச்சை

இதயம், சிறுநீர்க்குண்டிகை, சிரைகள் போன்ற மர்மஸ்தானங்களில் (உயிர் நிலை) அடிபடுவதால் தோன்றும் அழற்சி, மிக்க துன்பம் விளைவிப்பதும், சிகிச்சையால் தீர்க்க இயலாததும் ஆகும். மற்றும் உடலுக்குள் மிக்க அழற்சி தோன்றியிருந்தும் புறஉடல்

குளிர்ந்திருக்கக் கூடும். இத்தகைய நோய்கள் சிகிச்சைக்கு உட்படாதவை, எனவே கைவிடத் தக்கவையாகும். – 78

## 48. துன்பம் தணிந்த பின் செய்யத் தக்கவை

முன் கூறியபடி மதுவைப் பருகுவதால் தோன்றும் துன்பங்களுக்குச் சிகிச்சை செய்த பிறகு (பித்தச் சீற்றம் முதலான) தோஷங்களுக்கு உரிய தூய்மைப் படுத்தும் சிகிச்சை முறைகள் செய்யத் தக்கவை. அதாவது மதுவால் தோன்றும் துன்பங்கள் பித்தச் சீற்றத்தால் ஆனவை. ஆகையால் பேதியாகச் செய்தல் எனும் முறையைக் கையாள வேண்டும். 79

வெண்சீரகம், இஞ்சி, சுக்கு, சௌவர்சல உப்பு எனும் இவற்றின் தகுந்தளவு தூள், அரைப்பங்கு நீர் அரைப் பங்கு மதுவும் கலந்து ஏலக்காய் முதலான நறுமணப் பொருள்களையும் சேர்த்து நோயாளியின் மனத்திற்கு மகிழ்ச்சியூட்டும் வகையிற் பருகச் செய்ய வேண்டும். இத்தகைய மது தற்காலத்திற்கு நாவறட்சியைத் தணிக்கும். 80

## 49. மதுபான முறை

குளிர்ந்த நீரால் உடலை நனைத்துக் கொண்டு நறுமணமுள்ள சந்தனம் பூசி, நறுமண மலர் மாலை அணிந்து, உணவுடன் புலாலை உண்டு, சுரை எனும் மதுவைப் பருகுவதால் பானாத்யயம் முதலான நோய்கள் தோன்றா. மனத்தைக் கெடுக்கும் போதையும் தோன்றாது. 81

**சிறுங்கட்டூர், நடாதூர் எஸ்.என். ஸ்ரீராமதேசிகன் எழுதிய ஸம்ஸ்க்ருத ஸம்ஹிதை உத்தரஸ்தானம் தமிழாக்க நூலின் பானாத்யயப்ரதிஷேதம் எனும் நாற்பத்தேழாம் அத்தியாயம் முற்றும்**

# திருஷ்ணாபிரதிஷேதம்

## எனும்

## நாற்பத்தெட்டாம் அத்தியாயம்

இனி தன்வந்திரி பகவான் ஸுசுருதர் முதலான சீடர்களுக்கு உபதேசம் செய்தபடி நாவறட்சிக்கு உரிய சிகிச்சை முறைகளை விளக்குவோம் *1–2*

### 1. நாவறட்சி விளக்கம்

பலமுறை நீரைப்பருகியும் மனநிறைவின்றி மேலும் மேலும் நிறைய பருக விரும்புகிறவன் நா வறட்சியால் துன்புறுபவர் என அறிய வேண்டும். *3*

### 2. நாவறட்சி இலக்கணமும், தோற்றமும்

உடலாலும், மனத்தாலும் மிகவும் குழப்பம் அடைதல், பெருங்கவலை (துக்கம்), சோர்வு, மதுவைப் பருகுவதால் தோன்றும் வறட்சி, உலர்ந்த நிலை, வெப்பம், கார்ப்புச் சுவை என்பனவற்றைக் கொண்ட பொருள்களை மிகுந்த அளவில் பயன்படுத்துதல். இரசம் இரத்தம் முதலான தாதுக்கள் குறைந்து போதல், பட்டினி கிடத்தல், வெய்யிலில் அதிக நேரம் இருத்தல் முதலிய காரணங்களால் பித்தமும் வாதமும் சீற்றமடைந்து ஒன்றோடொன்று சேர்ந்து உடலில் உள்ள நீரைத்தாங்கும் ஸ்ரோதஸ்களைக் கெடுத்து விடும். அதனால் கடும் நா வறட்சி எனும் நோய் தோன்றும் *4,5*

**திருஷ்ணா – நாவறட்சி. அதற்குரிய சிகிச்சை முறைகளை விளக்குவதால் இந்த அத்தியாயம் திருஷ்ணா பிரதிஷேதம் எனும் பெயர் பெற்றது.**

## 3. நாவறட்சி வகைகள்

வாதம்,பித்தம், கபம் எனும் தோஷங்களின் சீற்றத்தால் தோன்றும் நாவறட்சி மூன்று வகைகள், விரணம் (காயம்) என்பதால் தோன்றுவது ஒன்று. ரஸக்ஷயத்தால் தோன்றுவது ஒன்று, ஆமதோஷத்தால் (உணவு செரிமானமடையாமல்) தோன்றுவது ஒன்று, எண்ணெய்ப் பசை, குருத் தன்மை, வெப்பம் தோற்றுவிக்கும் தன்மை, வறட்சி கொண்டது என இத்தகைய உணவை உட்கொள்வதால் தோன்றுவது ஒன்று என நா வறட்சி ஏழு வகைப்படும். 6

## 4. நாவறட்சிக்கு முற்குறிகள்

நா வறட்சி எனும் நோய் தோன்றுவதற்கு முன் அண்ணம், உதடு தொண்டை, வாய் என்பன கடுமையாக உலர்ந்து போகும். இவை உறுப்புகளில் தோன்றும் அறிகுறிகள், அழற்சி, எரிச்சல். மயக்கம், தலைசுற்றல், பிதற்றல் போன்ற உடல் முழுவதையும் சார்ந்த அறிகுறிகள் சிறப்பாக வளர்ந்து காணப்படும். 7

## 5. வாதத்தால் தோன்றும் நா வறட்சி இலக்கணம்

வாத சீற்றத்தால் தோன்றும் நா வறட்சியில் வாய் உலர்ந்து போதல், பொட்டின் பகுதி, தலை ஆகியவற்றில் ஊசியால் குத்துவது போன்ற வலி, தாது அல்லது ரசம், நீர் ஆகியவற்றைத் தாங்கும் குழாய் வழி (சுரோதஸ்) களில் தடை, (அடைப்பு) தோன்றுதல், வாய் சுவையறியாமை, குளிர்ந்த நீரைப்பருகுவதால் நா வறட்சி மிகுதல் எனும் இலக்கணங்கள் காணப்படும் 8

## 6. பித்தத்தால் நா வறட்சி இலக்கணம்

பித்தம் சீற்றம் பெறுவதால் தோன்றும் நா வறட்சியில் நினைவிழத்தல், பொருத்தமற்ற பேச்சு, உணவில் விருப்பம் இன்மை, வாய் உலர்ந்து போதல், கண்கள் மஞ்சள் நிறம் பெறுதல், உடலில் (சிறப்பாக வாய் தொண்டை ஆகியவற்றில்) எரிச்சல், குளிர்ந்த பொருள்களில் விருப்பம் மிகுதல், வாய் கசத்தல், வாயிலிருந்து புகை வெளிவருவது போன்ற உணர்ச்சி ஆகியவை காணப்படும். 9

## 7. கபச் சீற்றத்தாலான நாவறட்சி இலக்கணம்

முதலில் தவறான உணவு முறைகளை மேற்கொள்வதால் கபம் சீற்றம் பெறும். பிறகு இந்தக் கபத்தால் வாதமும், பித்தமும், சூழ்ந்து

கொள்ளப்படும். அவ்வாறு சூழ்ந்து கொள்ளப்பட்ட வாதத்தின் வறட்சித் தன்மையாலும், பித்தத்தின் வெப்பத்தாலும் கபமும் உலர்ந்து போகும். அதனால் கபத்தின் அடியாக நா வறட்சி தோன்றும். அந்நோய் மிக்க உறக்கம், உடல் முழுவதும் அல்லது வயிற்றில் பளுவாகத் தோன்றுதல், வாய் இனித்தல் முதலான இலக்கணங்கள் காணப்படும். கபத்தால் தோன்றிய நாவறட்சி கொண்டவரின் உடல் மிகவும் உலர்ந்து காணப்படும். மற்றும் தொண்டையில் கபம் ஈஷிக்கொள்வதால் வாயில் கொழகொழப்பு, குளிர் காய்ச்சல், வாந்தி, சுவையின்மை, கால் கைகளும் தலையும் மிக்க பளுவாகத் தோன்றுதல், கைகால்களில் வீக்கம், உணவு சீராகச் செரிமான மாகாமை எனும் இலக்கணங்கள் காணப்படும். இந்த நாவறட்சி யால் துன்புறுபவர் அதிக நீர் வேட்கை கொள்வதில்லை. *10, 11*

## 8. க்ஷயம்படுதலால் தோன்றும் நாவறட்சியின் இலக்கணம்

தாக்குதலுக்கு உட்பட்ட அல்லது அடிபட்ட அல்லது விரணம் கொண்டவனுக்கு முதலில் துன்பம் மிகும். அடுத்து இரத்தப் பெருக்கு தோன்றும். அதனால் நாவறட்சி தோன்றும். இது நான்காவது வகையான நாவறட்சியாகும். அந்நோயாளி நீரை மிகுந்த அளவில் பருகிக் கொண்டிருந்தாலும் இரவும் பகலும் மிக்க துன்பங் கொண்டிருப்பார் *12*

## 9. க்ஷயத்தால் தோன்றும் நாவறட்சி இலக்கணம்

உடலில் ரசம் எனும் தாது குறைந்து போவதால் தோன்றும். நாவறட்சி க்ஷயத்தால் தோன்றும் நாவறட்சி எனப்படும். இத்தகைய நோயாளியின் உடல் நாளுக்கு நாள் உலர்ந்து போகும். அவருடைய உடல் முழுவதும் சிறப்பாக வாய் அண்ணம், தொண்டை ஆகிய பகுதிகளில் எரிச்சல் மிகும். அவர் மிகுந்த நீர்வேட்கை கொண்டுஅதிக அளவில் நீரைப் பருகுவார். இந்நோயைச் சிலர் (மருத்துவ நூலாசிரியர்கள் ) ஸந்நிபாதத்தால் தோன்றும் நாவறட்சி என்பர். இந்நோயில் ரசதாதுக்குறைவதால் தோன்றும் இதயத்தில் வலி, நடுக்கம் முதலான இலக்கணங்கள் அனைத்தும் காணப்படும் என்பதை மருத்துவர் உணர்ந்து கொள்ள வேண்டும். *13*

## 10. ஆமத்தால் தோன்றும் நாவறட்சி இலக்கணம்

ஆமத்தால் தோன்றும் நாவறட்சியில் மூன்று தோஷங்களையும் சார்ந்த இலக்கணங்கள் காணப்படும். சிறப்பாக இதயத்தில் வலி, வாயில் எச்சில், அதிக அளவில் சுரத்தல் உடலில் உறுப்புகள் தளர்ச்சி எனும் இலக்கணங்கள் காணப்படும். *14*

## 11. பக்ததிருஷ்ணா எனும் நாவறட்சி இலக்கணம்

மிக்க எண்ணெய்பசை கொண்டு அடர்த்தியாகியவை, புளிப்பு, கார்ப்பு, உவர்ப்புச் சுவைகள் கொண்டவையுமான உணவுப் பொருள்களை உண்பதால் நாவறட்சி மிகும். இது பக்ததிருஷ்ணா எனப்படும் *15*

## 12. சிகிச்சைக்கு உட்படாத நாவறட்சி இலக்கணம்

உடல் இளைத்து மனக்கலக்கம் கொண்டு காது செவிடாகி நாவறட்சி மிகுவதால் நாக்கு வெளியே தொங்கிக் கொண்டிருக்கும் நிலையில் உள்ள நோயாளிக்குச் சிகிச்சையைக் கைவிட வேண்டும். (சிகிச்சை செய்வதால் பயன் இல்லை என்பதாம்) *16*

## 13. நா வறட்சிக்குப் பொது சிகிச்சை

நோயாளிக்கு நாவறட்சி மிகுந்த வயிற்றில் உண்ட உணவு, நீர்ப்பாங்கான பொருள்கள் நிரம்ப உள்ளபோது நீரில் திப்பிலித் தூளைச் சேர்த்துப் பருகச் செய்து வாந்தி எடுக்கச் செய்க. பிறகு நோயாளிக்கு உமிழ்நீர் சுரப்பதற்காக மாதுளை, எரிமா, துரிஞ்சிப் பழம் போன்ற நன்மை பயக்கும் பொருள்களைக் காட்டி அல்லது உணவு உட்கொள்ளச் செய்து அவருக்கு விருப்பத்தைத் தோற்றுவிக்க வேண்டும். *17*

## 14. வாதம் முதலான தோஷங்களுக்குச் சிகிச்சை

சாறும், வீரியமும் மிகுந்த குளுமைத் தன்மை மிக்க பணிவிடைகளால் வாத, பித்த, கபங்களால் தோன்றும் மூவகை நாவறட்சி

ஆமம் - செரிமானமாகாமையால் உணவுச் சாறு சிரணப்பையில் தங்குதல்.

நோய்களைத் தணிக்க வேண்டும். வாய்ச்சுவை மாறுபட்டால், மது, புளிப்புக்காடி, துரிஞ்சிப்பழச்சாறு முதலிய புளிப்புச் சுவை மிக்க சாறு வகைகளால் வாய் கொப்பளிக்கச் செய்க. அல்லது நெல்லிக் கனித் தூளை வாயில் வைத்துக் கொள்ளச் செய்க. 18

## 15. நா வறட்சியைத் தணிக்கும் நீர்

தங்கம், வெள்ளி ஆகியவற்றாலான கம்பியை நெருப்பில் காய்ச்சி அதை நீரில் முக்கி எடுத்து அந்நீரைப் பருகச் செய்தால் நாவறட்சி தணியும். அவ்வாறே தூய்மையான இடத்திலிருந்து எடுத்த மண் அல்லது செங்கல் ஆகியவற்றை நெருப்பில் காய்ச்சி நீரில் முக்கி அந்த நீரைப் பருகச் செய்தால் நாவறட்சி தணியும். 19

## 16. வாதத்தால் தோன்றும் நாவறட்சிக்குச் சிகிச்சை

)லகு பஞ்சமூலம் அல்லது பெரும்பஞ்சமூலம் ஆகியவற்றைக் கஷாயம் காய்ச்சி அல்லது விதாரிகந்தாதி, கணத்தைச் சேர்ந்த கூட்டுப் பொருள்களைக் கஷாயம் காய்ச்சிப் பருகச் செய்தால் வாதத்தாலான நாவறட்சி தணியும். 20

## 17. பித்தத்தாலான நாவறட்சிக்குச் சிகிச்சை

நீலாம்பல் முதலான (உத்பலாதி) கூட்டுப்பொருள், நன்னாரி முதலான (சாரிபாதி) கூட்டுப்பொருள், காகோலி முதலான கூட்டுப்பொருள் ஆகியவற்றைக் கொண்டு கஷாயம் காய்ச்சி அதில் சர்க்கரை சேர்த்துக் குளிர வைத்து ஆறு உளுந்து எடை தேன் கலந்து பருகச் செய்தால் பித்தத்தாலான நாவறட்சி தணியும். 21

## 18. கபத்தாலான நாவறட்சிக்குச் சிகிச்சை

வில்வப்பட்டை, துவரைச் செடி வேர், இலகுபஞ்சமூலம், பொருள்கள், தர்ப்பை வேர் ஆகியவற்றாலான கஷாயத்தைப் பருகச் செய்தால் கபத்தாலான நாவறட்சி தணியும். மற்றும் கபத்தாலான நா வறட்சிக்கு வேப்பிலை (வேப்பம் பூ) சேர்த்துக் காய்ச்சிய கஷாயத்தைப் பருகச் செய்து வாந்தி எடுக்கச் செய்தல் நாவறட்சிக்கு நன்மை தரும். 22

## 19. எல்லாவகை நாவறட்சியிலும் பித்தத்தைத் தணித்தல்

எல்லா வகை நாவறட்சியிலும், பித்தத்தைத் தணிக்கவல்ல சிகிச்சை செய்வதால் நாவறட்சி தணியும். அல்லது நன்கு பழுத்த

அத்திப்பழத்தாலான சுரசம் அல்லது கஷாயத்தில் சர்க்கரை கலந்து பருகச் செய்தால் எல்லாவகையான நாவறட்சிகளும் தணியும். இவ்வாறே நன்னாரி (சாரிபாதி) முதலான கூட்டுப்பொருள்களான குளிர்ந்த நீரைப் பருகச் செய்தால் நாவறட்சி, அந்நோயாலான துன்பம், சோர்வு முதலியன தீரும். 23

## 20. காயம் படுதலாலான நாவறட்சிக்குச் சிகிச்சை

கசேரு, சிருங்காடகம், தாமரைக்கிழங்கு, வாழைக்கிழங்கு, தாமரைத் தண்டு, கரும்பு வேர் ஆகியவற்றாலான நீர் அல்லது கஷாயத்தைப் பருகச் செய்தால், காயம் படுதலாலான நாவறட்சி தணியும். 24

## 21. வேறு முறை

பொரி, தாமரை, வெட்டிவேர், சந்தனம் ஆகியவற்றை நீரில் சேர்த்து அந்நீரைக் காற்றோட்டம் உள்ள இடத்தில் இரவு முழுவதும் திறந்த வைத்து, காலையில் அந்நீரில் நறுமணமலர்களைச் சேர்த்து அதில் சர்க்கரை, தேன் ஒரு தோலா எடை திராட்சைப்பழ விழுது கலந்து பருகச் செய்தால் நாவறட்சி தணியும் 25

## 21. மேலும் சில முறைகள்

திருணபஞ்ச மூலக் கூட்டுப்பொருள்கள், சாரிபாதி கணக்கூட்டுப் பொருள்கள் என்பனவற்றையும், அவ்வாறே உத்பலாதிகணக் கூட்டுப்பொருள்கள், விதார்கந்தாதி கூட்டுப் பொருள்களையும் சேர்த்து முன்போல அதாவது இந்தப் பொருள்களை இடித்து மாலையில் நீரில்சேர்த்து காற்றோட்டமுள்ள இடத்தில் மூடாமல் வைத்திருந்து மறுநாள் காலையில் நன்றாகக் கலக்கித் துணியில் வடிகட்டி அதில் சர்க்கரையும், தேனும், திராட்சை விழுதும் கலந்து நாவறட்சியால் துன்புறும் நோயாளிக்குப் பருகத் தருக. 26

## 22. காயம்படுதலாலான நாவறட்சிக்கு ஆறு வகைப் பானங்கள்

இலுப்பைப்பூ முதலானவற்றையும் (முருங்கைப்பூ, மந்தாரை மலர், ஞாழல்பூ) அவ்வாறே சாரைப்பருப்பு, மலைமாம்பழம்,

எரிமா எனுமிவற்றையும் இந்த ஆறு பொருள்களை இடித்து நீரில் இட்டு இரவில் திறந்த வெளியில் காற்றாட வைத்து மறுநாள் காலையில் சர்க்கரையும் தேனும் கலந்து காயம்படுவதால் தோன்றும் நாவறட்சி நோய் கண்டவருக்குப் பருகத் தருக. 27

## 23. வேறு சில முறைகள்

காட்டுப்பருத்தி, மற்றும் சாதாரண பருத்தி விதைகளைச் நீருடன் சேர்த்து அரைத்து அல்லது தனித்தனியாக அரைத்து நீரில் கலந்து வடிகட்டிச் சர்க்கரையும் தேனும் கலந்து பருகச் செய்தால் காயம்படுதலால் தோன்றும் நாவறட்சி தணியும். இம்முறைகளை தவிர இந்நோய்க்குத் துன்பம் தணிய சல்யதந்திரத்தில் கூறப்பட்ட முறைகளையும் பின்பற்ற வேண்டும். இவ்வாறு பலமுறைகளில் நாவறட்சியைத் தணிக்கும் புலால் சாறு, மான் முதலியவற்றின் புது இரத்தம் ஆகியவற்றைப் பருகச் செய்து சிகிச்சை செய்ய வேண்டும். 28

## 24. க்ஷயநோயாலான நாவறட்சிக்குச் சிகிச்சை

பாலைக்கடைந்து எடுத்த வெண்ணெயாலான நெய் அல்லது இளஞ்சூடுள்ள (நெய்யில் இடப்பட்ட) நெய் என்பதைப் பருகுவதால் க்ஷயத்தால் தோன்றும் நா வறட்சி தணியும். இவ்வாறே நன்கு பக்குவம் செய்த புலால் சாறு அல்லது அதிமதுரக் கக்ஷாயம் அல்லது பனீநீரைப் பருகச் செய்வதால் க்ஷயத்தாலான நா வறட்சி தணியும். 29

## 25. ஆம தோஷத்தாலான நாவறட்சிக்குச் சிகிச்சை

ஆமதோஷத்தால் தோன்றும் நாவறட்சிக்கு திப்பிலி முதலான செரிமானத்தைத் தூண்டும் கூட்டுப்பொருள்களுடன் வில்வ பழம் அல்லது பட்டை மற்றும் வசம்பு ஆகியவற்றைச் சேர்த்துக் கஷாயம் காய்ச்சிப் பருகச் செய்க. மற்றும் எரிமா, தூய்மைப்படுத்திய சேராங்கொட்டை, சிற்றாமுட்டியுடன் திப்பிலி முதலான கூட்டுப் பொருள்களைக் கலந்து கஷாயம் காய்ச்சிப் பருகச் செய்தால் ஆமத்தால் (அசிரணத்தால்) தோன்றும் நா வறட்சி தணியும் 30

## 26. பக்தத்தாலான நாவறட்சிக்குச் சிகிச்சை

எளிதில் செரிமானமாகாத உணவை (பக்தத்தாலான) உணவை உட்கொள்ளுவதால் தோன்றிய நாவறட்சியில் வாந்தி எடுக்கச் செய்து அந்நோயைத் தணிக்க வேண்டும். மற்றும் க்ஷயத்தாலான நாவறட்சியைத் தவிர மற்ற எல்லா வகை நாவறட்சி நோய்களிலும் வாந்தி எடுக்கச் செய்தல் நன்மை தரும். 31

## 27. சோர்விலான நாவறட்சிக்குச் சிகிச்சை

மிக்க களைப்பினால் தோன்றும் வாதத்தாலான நாவறட்சியைப் புலால் சாறு தணிக்கும். வெல்லப்பானகத்தை பருகச் செய்யவேண்டும். நாவறட்சி பித்ததோஷத்தை மிகுதியாகக் கொண்டிருந்தால் யவதானியம் மற்றும் கோதுமையை நீரில் கரைத்து அல்லது நெய் கலந்த பெரிமாவை உட்கொள்ளச் செய்க. இவ்வாறே பளுவான உணவாலான நாவறட்சியில் பித்தத்தால் தோன்றியதானால் பொரிமாவை குளிர்ந்த நீரில் கலந்துஅதில் நெய் சேர்த்து மற்றும் பனிக்கட்டியைச்சேர்த்து உட்கொள்ளச் செய்க. 32

## 28. எண்ணெய் அல்லது மது பருகுவதாலான நாவறட்சிக்குச் சிகிச்சை

எண்ணெய் அதிக அளவில் உட்கொள்வதாலான நாவறட்சிக்கு வெந்நீரைப் பருகச் செய்க. மதுவை மிகுதியாகப் பருகுவதால் தோன்றும் நாவறட்சிக்கு பாதியளவு நீர் கலந்த மதுவைப் பருகச் செய்க. 33

## 29. நாவறட்சியாலான நாவறட்சிக்குச் சிகிச்சை

நாவறட்சியால் (இதய நோயால் துன்புறுபவருக்கு பிற்காலத்தில்) தோன்றும் நாவறட்சிக்கு சர்க்கரை கலந்த குளிர்ந்த நீர் அல்லது குளிர்ந்த கருப்பஞ்சாறு அல்லது மிகக் குளிர்ந்த நீர் மட்டும் பருகச் செய்தல் நன்மை தரும். 34

அந்தந்த தோஷங்களுக்கு ஏற்பக் கூறப்பட்ட வாந்தி எடுக்கச் செய்யும் கஷாயம் முதலியவற்றைத் தொண்டைவரை பருகச் செய்து வாந்தி எடுக்கச் செய்ய வேண்டும். பிறகு செரிமானத்தைத் தூண்டும் பொருள்களைப் பயன்படுத்த வேண்டும். 35

## 30. நாவறட்சி நோய்களில் பித்தத்தைத் தணிக்கும் முறை

சந்தனம், கற்பூரம், போன்ற குளிர்ச்சி தரும் பொருள்களை நீருடன் அரைத்துப் பூசுதல், குளிர்ந்த நீர் நிரம்பிய தொட்டியில் மூழ்குதல், வெட்டிவேர், தாமரைத்தண்டு, முதலியவற்றாலான விசிறி மேல் குளிர்ந்த நீரைத் தெளித்து வீசிக்கொள்ளுதல், அத்தகைய நீரை உடல் மேல் ஊற்றிக்கொண்டிருத்தல், குளிர்ச்சி தரும் நீர்க் குழாய்கள் கொண்ட தாராகிருஹத்தில் இருத்தல் போன்றவற்றை மேற்கொள்ளவேண்டும். மற்றும் பித்தத்தைத் தணிக்கும் பேதி யாகச் செய்யும் முறையைப் பயன்படுத்தி, உடலைத் தூய்மைப் படுத்திக்கொள்ள வேண்டும். பாலைப் பருகுதல், பழங்களின் சாறு, மான் முதலான விலங்குகளின் இரத்தம் (புலால் சாறு) பசுநெய் ஆகியவற்றைப் பருகுதல், இனிப்புச் சுவை கொண்ட குளிர்ச்சி யூட்டப்பட்ட லேகியங்கள், கண்டகூஷ்மாவலேஹம் முதலியவற்றைப் பயன்படுத்துதல், பொரிமாவைப் பயன்படுத்துதல் போன்ற முறைகள் அனைத்தையும் நாவறட்சி நோய்களில் தகுந்தபடி பயன்படுத்தலாம். 36

சிறுங்கட்டூர், நடாதூர் எஸ்.என். ஸ்ரீராமதேசிகன் எழுதிய
ஸுச்ருத ஸம்ஹிதை உத்தரஸ்தானம் தமிழாக்க நூலின்
திருஷ்ணாபிரதிஷேதம் எனும் நாற்பத்தெட்டாம் அத்தியாயம்
முற்றும்

# சர்த்திப்ரதிஷேதம்

## எனும்

## நாற்பத்தொன்பதாம் அத்தியாயம்

இனிதன்வந்திரி பகவான் ஸுச்ருதர் முதலான சீடர்களுக்கு உபதேசம் செய்தபடி வாந்திக்குரிய சிகிச்சை முறைகளை விளக்குவோம். 1

### 1. வாந்திக்குக் காரணங்கள்

நீர்ப்பகுதி, மிகுந்த உணவு, எண்ணெய்பசை மிகுந்துள்ள உணவு ஆகியவற்றை அளவுக்கு மீறி உட்கொள்ளுதல், உவர்ப்புச் சுவை கொண்டவற்றை மிகுதியாக உண்பது, வேளையற்ற வேளையில் உண்பது, அளவுக்கு மீறி உண்பது, உடலுக்கு ஒவ்வாத (தனக்கு விருப்பமில்லாத) உணவு, சோர்வு, க்ஷயநோய், மனத்தில் குழப்பம், அசீரணம், வயிற்றில் கிருமிகள் தோன்றுதல் முதலிய காரணங்களால் வாந்தி வெளிப்படும். கருவுற்ற புதிதில் மங்கையருக்கு வாந்தியாகும். விரைவாக உணவை உட்கொள்ளுவதாலும் வாந்தியாகும். ஆமம் (செரிமானமாகாத உணவு ரசம்) உடலில் மிகுந்திருந்தால் வாந்தியாகும். அருவருப்பைத் தோற்றுவிக்கும் பொருளைக் காண்பது, தொடுவது, அத்தகைய பொருளைத் தவறாக உண்பது என்பனவற்றாலும் வாந்தியாகும். 2–5

### 2. 'சர்த்தி' சொல் விளக்கம்

நீர்ப்பகுதி மிகுந்திருத்தல், எண்ணெய்ப்பசை மிகுந்திருத்தல் போன்ற முன் கூறப்பட்ட காரணங்களால் குமட்டலுடன், திடீரென வாயில் நிரம்பி பொட்டில், தலை முதலான உறுப்புகளுக்குத் துன்பம் விளைவித்துக் கொண்டு விரைவாக வெளியேறும் தோஷம் 'சர்த்தி'

---

சர்த்தி – வாந்தி. அதற்குரிய சிகிச்சை முறைகளை விளக்குவதால் இந்த அத்தியாயம் சர்த்திப்ரதிஷேதம் எனும் பெயர் பெற்றது.

எனப்படும். 6

தவறான உணவை உட்கொள்வதால் வியானம் எனும் வாயுவுடன் கலந்த உதானம் என்ற வாயு சீற்றம் பெற்று தோஷங்களைத் தூண்டி விரைவாக மேல் நோக்கிச் செல்லும். இதனால் வாந்தி தோன்றும். 7

## 3. வாந்திக்கு முற்குறிகள்

வாயில் உமிழ் நீர் அதிக அளவில் ஊறுதல், இதயத்தில் ஒருவகைக் கலக்கம், உணவில் விருப்பமின்மை என்பன வாந்திக்கு முற்குறிகளாகும். மற்றும் அந்தந்த தோஷத்திற்கு ஏற்ப முற்குறிகள் தோன்றும். அதாவது வாயில் ஊறும் உமிழ்நீர் துவர்ப்பு, புளிப்பு, இனிப்புச் சுவைகளில் ஒன்றை உடையதாக இருத்தல் போன்ற இலக்கணங்களால் முறையே வாத பித்த கபச் சீற்றத்தாலான வாந்தி என உணர வேண்டும் 8

## 4. வாதச்சீற்றத்தால் தோன்றும் வாந்தியின் இலக்கணம்

விலா, பின் தட்டுகள், வயிறு ஆகிய பகுதிகளில் வலி, நுரையுடன் சிறிது சிறிதாக வெளிப்படுதல், சோர்வு, மிக்க ஒலிகொண்டு துவர்ப்புச் சுவையுடன் வாந்தி வெளிப்படுதல், உணவு செரிமானமடைந்த பிறகு வாந்தி மிகுதல் என்பன வாதச் சீற்றத்தால் தோன்றும் இலக்கணங்களாகும். 9

## 5. பித்தச் சீற்றத்தால் தோன்றும் வாந்தி இலக்கணம்

வாந்தியில் புளிப்புச்சுவை மிகுந்திருத்தல், வாய் கார்ப்பு, கசப்புச்சுவை கொண்டிருத்தல், நிறம் மஞ்சளாக வாந்தியாதல் அல்லது இரத்தத்துடனோ பச்சை நிறம்கொண்டோ காணப்படுதல், உடல் முழுவதிலும் அல்லது ஆமாசயம் – உணவுக்குழாய் போன்ற உறுப்புகளில் எரிச்சல், ஊசியால் குத்துவது போன்ற வலி, காய்ச்சல், வாய் உலர்ந்து போதல், அடிக்கடி நினைவிழத்தல், என்பன பித்தச்சீற்றத்தால் தோன்றும் வாந்தியில் காணப்படும் 10

## 6. கபச்சீற்றத்தால் தோன்றிடும் வாந்தியின் இலக்கணம்

உடல் புல்லரித்தல், உணவில் விருப்பம் இன்மை, உடல் பளுவாகத் தோன்றுதல், உடல் தளர்ச்சி, இனிப்புச் சுவை கொண்டு அளவில் அதிகமாகி வெண்ணிறத்தில் வாந்தியாதல், குளிர்ச்சித்

தன்மை கொண்டிருத்தல், அடர்ந்த கபம் வாந்தியில் மிகுந்திருத்தல் என்பன சீற்றத்தால் தோன்றும் வாந்தியில் காணப்படும் 11

## 7. ஸந்நிபாதத்தால் தோன்றும் வாந்தியில் இலக்கணம்

வாதபித்த கபங்களின் இலக்கணங்கள் கலந்து காணப்பட்டால் ஸந்நிபாதத்தால் தோன்றிய வாந்தி என்று அறிக. 12

## 8. புறக்காரணங்களால் தோன்றும் வாந்தி

அழுக்கடைந்த அருவருக்கத் தக்க பொருள்களைக் காண்பது அல்லது தவறாகத் தொடுவது போன்றவற்றாலும், பெண்களுக்குக் கருவுற்ற நிலையிலும், ஆமதோஷத்தாலும், அசீரணத்தாலும், உடலுக்கு ஏற்ற உணவு உட்கொள்ளாமையாலும், குடலில்கிருமிகள் தோன்றுதலாலும் வாந்தியாதல் என்பது ஐந்தாவது வகை யைச் சேர்ந்த வாந்தியாகும். இவற்றிலும் முன்கூறப்பட்ட வாதம் முதலியவற்றாலான இலக்கணங்களைக் கண்டு சீற்றமடைந்த தோஷத்தை அறிக. 13

## 9. கிருமிகளால் தோன்றிய வாந்தி இலக்கணம்

வயிற்றுவலி, இதயத்தில் (குமட்டல்) அதிக அளவில் தோன்றினால் அது கிருமிகளால் தோன்றும் வாந்தி என்று உணர்க. மற்றும் இதய நோய்க்கு உரிய இலக்கணங்களும் காணப்படும். 14

## 10. சிகிச்சைக்கு உட்படாத வாந்தி இலக்கணம்

இரசம், இரத்தம் முதலான தாதுக்கள் குறைந்து போனதால் உடல் இளைத்துப் போனவருக்குப் பல துன்பங்களுடன் சீழும் கலந்து வாந்தி வெளிப்பட்டால் மற்றும் மயில் தோகையைப் போன்ற பல நிறங்களுடன் இடையின்றி வாந்தி வருமானால் அத்தகைய நோயாளிக்குத் திறமை மிக்க மருத்துவர் சிகிச்சை செய்வதைக் கைவிட வேண்டும். (சிகிச்சை பயனற்றது என்பதால்.) 15

## 11. எல்லா வகை வாந்திக்கும் பொது சிகிச்சை

பொதுவாக எல்லாவகை வாந்தியிலும் ஆமாசயத்தில் கோளாறு தோன்றுவது காரணமாகும். அதனால் ஆமாசயத்தில் தங்கி

வளர்ந்துள்ள கபத்தைத் தணிப்பதற்காக முதல் முதலில் பட்டினி கிடக்கச் செய்யவேண்டும். இது சிறந்த முறையாகும். ஆனால் வாதத்தால் தோன்றிய வாந்தியில் பட்டினி கிடக்கச் செய்யக் கூடாது. எல்லா வகைக் கபங்களிலும் கபத்தையும், பித்தத்தையும் தணிக்க உடலைத் தூய்மைப்படுத்தும் முறையை அதாவது வாந்தி எடுக்கச் செய்தல், பேதியாகச் செய்தல் எனும் முறைகளைக் கையாள வேண்டும். 16

## 12. கபம் மிகுந்துள்ள வாந்திக்குச் சிகிச்சை

கபம் மிகுந்துள்ள வாந்தி நோயில் வாந்தி எடுக்கச் செய்தல் மிக்க நன்மை தரும். அல்லது எந்த தோஷம் மிகுந்துள்ளதோ அதற்குத் தக்க சிகிச்சை மேற்கொள்ள வேண்டும். பித்தம் மிகுந்திருந்தால் பேதியாகச் செய்தல் சிறந்த சிகிச்சையாகும். 17

உடலைத் தூய்மைப்படுத்திய பிறகு முறையாகப் பேயா எனும் கஞ்சிமுதலாக உணவு முறையைப் பின்பற்ற வேண்டும். அத்துடன் தோஷத்தைத் தணிக்கவல்ல மருந்துப்பொருள்களின் தூளைக் கலந்து கொடுப்பது மிகவும் தேவையாகும். 18

பிறகு அளவிலும் தன்மையிலும் இலேசான (எளிதில் செரிமானமாகக்கூடிய) உலர்ந்த (ஈரப்பசையற்ற) பொரி முதலான உடலுக்குள் ஒற்றிக்கொள்ளும் உணவை உட்கொள்ளச் செய்ய வேண்டும். 19

அந்தந்த தோஷங்களைத் தணிக்க வல்லவையும், காய்ச்சலைப் போக்க வல்லவையுமான கஷாயங்களையும் பயன்படுத்த வேண்டும். 20

## 13. வாதத்தால் தோன்றும் வாந்திக்குச் சிகிச்சை

பாலைக் கடைந்து எடுத்த வெண்ணெயாலான நெய் அல்லது இளஞ்சூடுள்ள பாலில் கலந்த நெய்யைப் பருகச் செய்தால் வாதத்தாலான வாந்தி தணியும். அந்த நெய்யில் சிறிது இந்துப் புவைக் கலந்து பயன்படுத்துவதும் நலம் தரும். 21

பயறு, நெல்லி முள்ளி ஆகியவற்றுடன் கஞ்சி செய்து அதில் நெய்யும், இந்துப்பும், கலந்து பருகச் செய்தால் வாதத்தாலான வாந்தி தணியும். பெரும்பஞ்சமூலப் பொருள்களாலான கஷாயத்

துடன் யவாகூ எனும் கஞ்சி செய்து தேன் சேர்த்துப் பயன் படுத்தலாம். 22

மாதுளை, நெல்லி, துரிஞ்சி முதலான பழங்களின் சாறு, லாவகம் போன்றவற்றின் புலால் சாறு ஆகியவற்றுடன் தேவையான அளவு இந்துப்பு கலந்து பருகச் செய்தால் வாதத்தாலான வாந்தி தணியும். ஆமணக்கு எண்ணெயில் இந்துப்பு சேர்த்து இளஞ்சூடாக பருகச் செய்து பேதியாகச் செய்தல் நலம் தரும். 23

## 14. பித்தத்தாலான வாந்திக்குச் சிகிச்சை

பித்தக்காய்ச்சலைத் தணிக்கும் கஷாயம், சீதக்கஷாயம் ஆகியவற்றைப் பயன்படுத்துவதால் பித்தத்தாலான வாந்தி தணியும். பித்தத்தாலான வாந்திக்கு தூய்மைப்படுத்தும் வாந்தி எடுக்கச் செய்தல், பேதியாகச் செய்தல் எனும் முறைகளுக்குப் பயன்படுத்தத் தக்க மருந்துப்பொருள்களை இனிப்புச் சுவை கொண்ட திராட்சை சாறு, கருப்பஞ்சாறு முதலியவற்றுடன் கலந்து தொண்டை வரை உட்கொள்ளச் செய்க. பேதியாகச் செய்வதற்கு அதிமதுரம் முதலான இனிப்புச் சுவையுள்ள பொருள்களின் தூளைத் திராட்சைச் சுரசத்தில் கலந்து பயன்படுத்துக. வலிமையுள்ள வாந்திக்கு வாதவியாதி பிரகரணத்தில் கூறப்பட்ட தைல்வக்கிருதம் எனும் நெய் மருந்தைப் பயன்படுத்துவது சிறந்ததாகும். 24,25

## 15. கபத்தால் தோன்றிய வாந்திக்குச் சிகிச்சை

கபத்தாலான வாந்திக்கு சரக்கொன்றை (ஆரக்வதாதி) கூட்டுப் பொருள்களின் கஷாயம் மற்றும் *தசாங்கயோகம் எனும் கபத்தைத் தணிக்கும் பொருள்களுடன் தேன் கலந்து பருகச் செய்க. 26

## 16. மூன்று தோஷங்களும் கலந்து தோன்றும் வாந்திக்குச் சிகிச்சை

மூன்று தோஷங்களும் சீற்றமடைவதால் தோன்றும் வாந்திக்கு சீந்தில் கொடியின் சீதகஷாயத்தைத் தேன் கலந்து பருகச் செய்க.

* தசாங்கம் – கக்கு, கொத்துமல்லி, சிறுதேக்கு, கடுக்காய், தேவதாரு, பர்ப்படகம், வசம்பு, கோரைக் கிழங்கு, நறுமணப்புல், காயபலம் என்பன பத்தும் சேர்ந்த கஷாயம்.

தனித்தனியாகத் தோஷங்களால் தோன்றும் வாந்திக்குப் பயன் படுத்தலாம். 27

## 17. அருவருப்பு முதலியவற்றாலான வாந்திக்கு சிகிச்சை

அருவருப்பைத் தரும் பொருள்களைக் காண்பது, தொடுவது முதலிய செயல்களால் தோன்றும் வாந்திக்கு மனத்திற்கு விருப்ப மான நலம் தரும் (கர்ப்பூரம், ஏலக்காய்) இலவங்கம் முதலான பொருள்களைக் கொண்டு, சிகிச்சை செய்க. கருவுற்ற மங்கைக்குத் தோன்றும் வாந்திக்கு அவளுக்கு விருப்பமான பழம், உணவுப்பொருள் முதலியவற்றைத் தர வேண்டும். ஆமத்தால் தோன்றும் வாந்திக்குப் பட்டினி கிடத்தலாலும், உடலுக்கு ஒவ்வாத பொருள்களாலான வாந்திக்கு ஒவ்வும் பொருள்களைக் கொண்டும், கிருமியால் தோன்றும் வாந்திக்கு கிருமிகளாலான இதய நோய்க்குக் கூறப்பட்ட சிகிச்சை முறைகளையும் பயன்படுத்த வேண்டும். இவ்வாறு வாந்தியைத் தவிர்த்து அந்தந்த தோஷங்களுக்கு ஏற்ற முறைகளைப் பயன்படுத்த வேண்டும். 28, 29

## 18. மேலும் சில முறைகள்

நன்கு பழுத்த விளாம்பழத்தின் சுரசத்தைக்கொண்டு, அதில் திப்பிலித் தூளைச் சேர்த்து தேன் கலந்து அடிக்கடி சிறுகச் சிறுக உட்கொள்ளச் செய்தால் வாந்தி தணியும். 30

வட்டத்திருப்பிச் சுரசத்தில் தேனும் அரிசி கழுவிய நீரும் சேர்த்து பருகச் செய்தாலும் அல்லது பொரிமாவில் நீர் கலந்து அல்லது தேன் கலந்து பருகச்செய்தாலும் மூன்று தோஷங்களால் தோன்றும் வாந்தி நோய்கள் தணியும். 31

அதிமதுரத்தூள், சாஞ்சொரி விதைத்தூள் எனும் இரண்டையும் சம அளவில் கலந்து மூன்று முதல் ஆறு உளுந்து எடைவரை நான்கு தோலா அளவு தேன் ஆறு உளுந்து எடை முதல் ஒரு தோலா அளவு கலந்து பருகச் செய்தாலும் புங்கன் தளிர்களின் கஷாயத்தால் யவாகூ எனும் கஞ்சி செய்து பருகச் செய்தாலும் எல்லா வகையான வாந்தி களும் தணியும். 32

கொத்துமல்லி இலை அல்லது கொத்துமல்லிவிதை, மூன்று முதல் ஆறு உளுந்து எடை வரை கொண்டு தகுந்த அளவு மாதுளைவிதை, புளி, மரக்காய்த்தூள் போன்ற புளிப்புச் - சுவை

கொண்டவை, இந்துப்பு ஆகியவற்றைக் கலந்து சிறிது நீர் விட்டு அரைத்துத் துவையல் போலச்செய்து உட்கொள்ளச் செய்தால் வாந்தி தணியும். விளாம்பழத்தூளுடன் சுக்கு மிளகு திப்பிலித் தூளைக் கலந்து அரிசி கழுவிய நீருடன் உட்கொள்ளச் செய்தால் வாந்தி தணியும். 33

தேனீயின் மலத்தில் சர்க்கரை 3 உளுந்து எடை, சிவப்புச் சந்தனத்தூள் ஒரு உளுந்து எடை, தேன் ஆறு உளுந்து எடை எனக் கலந்து பருகச் செய்தால் வாந்தி தணியும். பல்லியைச் சுட்டு அதன் சாம்பலைப் பால் அல்லது நீரில் சேர்த்துப் பருகச் செய்தால் வாந்தி தணியும். 34

பொரிமாவுடன் நெய் தேன் ஆகியவற்றைத் தகுந்த அளவு கலந்து உட்கொள்ளச் செய்தாலும் திப்பிலித்தூளை நெய், தேன், சர்க்கரையுடன் கலந்து உட்கொள்ளச் செய்தாலும் வாந்தி நோய் தணியும். 35

நெல்லிக்கனிச் சுரசத்தில் சந்தனம் கலந்து பருகச் செய்தாலும், பயற்றின் கஷாயத் தெளிவு அல்லது இலந்தைப் பழம் நெல்லிக்காய் தூள் ஆகியவற்றைத் தேன் கலந்து உட்கொள்ளச் செய்தாலும், இலவங்கப்பட்டை, ஏலக்காய், ஜாதிபத்திரி ஆகியவற்றின் தூளைத் தேனுடன் குழைத்து உட்கொள்ளச் செய்தாலும் வாந்தி தணியும். 36

## 19. வாந்தி நோய்க்குப் பத்திய முறை

சம்பாப்பொரியால் யவாகூ எனும் கஞ்சி காய்ச்சி தேன் கலந்து உட்கொள்ளச் செய்யவேண்டும். மனத்திற்கும், மூக்குக்கும், மகிழ்ச்சி தோற்றுவிக்கும் நறுமணமுள்ள மலர்கள் போன்றவற்றை முகரச் செய்யவேண்டும். காட்டில் வாழும் விலங்கு, பறவைகளின் புலாலை உட்கொள்ளச் செய்க. திராட்சை, சாலரைப்பருப்பு முதலிய வற்றாலான சுவையுள்ள உணவுப் பண்டங்கள், குடிநீர் வகைகள் முதலியவற்றை வாந்தி நோய்களுக்குப் பத்தியமான உணவாகக் கொடுக்கவும். 37, 38

**சிறுங்கட்டூர், நடாதூர் எஸ்.என். ஸ்ரீராமதேசிகன் எழுதிய ஸம்ஸ்குருத ஸம்ஹிதை உத்தரஸ்தானம் தமிழாக்க நூலில் சர்த்திபிரதிஷேதம் எனும் நாற்பத்தொன்பதாம் அத்தியாயம் முற்றும்**

# ஹிக்காபிரதிஷேதம்

# எனும்

## ஐம்பதாம் அத்தியாயம்

இனி தன்வந்திரி பகவான் ஸுசுருதர் முதலான சீடர்களுக்கு உபதேசம் செய்தபடி விக்கல் நோய்க்கு உரிய சிகிச்சை முறைகளை விளக்குவோம் 1,2

### 1. விக்கலுக்குக் காரணம்

எரிச்சலைத் தோற்றுவிக்கும் மிளகு, கடுகு போன்றவை, உளுத்தம் பருப்பு, பன்றியின் புலால் போன்ற எளிதில் பக்குவம் பெறாதவை (குருத்தன்மை கொண்ட உணவு) குளிர்ந்த நீரைப் பருகுதல், வறட்சித்தன்மை கொண்டவற்றைப் பயன்படுத்துதல், தயிர், பால், அரிசி, மீன்புலால் போன்ற சுரோதங்களில் ஈஷிக் கொள்ளும் உணவுப் பொருள்கள் ஆகியவற்றை அளவுக்கு மீறி உட்கொள்ளுதல், ஈரமான இடத்தில் படுத்தல், அமர்தல், தூசிப் புகை, வெப்பம் மிகுந்த காற்று வெய்யில், நெருப்பு, ஆகியவற்றின் அருகில் இருத்தல், அளவுக்கு மீறி உடற்பயிற்சி செய்தல், வலிமைக்கு மிஞ்சிச் செயல் புரிதல், கால்நடையாக வெகுதூரம் நடத்தல், தகாத உடை போன்றவற்றை அணிதல், பட்டினி கிடத்தல், உடல் இளைக்கச் செய்யும் விரதம் முதலியவற்றைப் பின்பற்றுதல், ஆமதோஷம் (உண்ட உணவு செரியாமை) அடிபடுதல், கலவியில் ஈடுபடுவதால் இரசம் முதலான தோஷங்களின் சீற்றம் பெற்று உடலை மிகவும் துன்புறுத்தல், அதிக அளவு உணவு உட்கொள்ளுதல், ஒன்றுக்கொன்று மாறான தன்மை கொண்ட உணவுப் பொருள்களைக் கலந்து உட்கொள்ளுதல், போன்றவற்றால் விக்கல், சுவாசம் (இழுப்பு) காசம் (இருமல்) எனும் நோய்கள் தோன்றும். 3,4,5

---

ஹிக்கா – விக்கல். அதற்கான சிகிச்சை முறைகளை விளக்குவதால் இந்த அத்தியாயம் ஹிக்காபிரதிஷேதம் எனும் பெயர் பெற்றது.

## 2. விக்கலின் தோற்றமும், இலக்கணமும்

உதானம் எனும் வாயுவுடன் கூடிய உயிர்காற்று (பிராண வாயு) சீற்றம் பெற்று கல்லீரல், மண்ணீரல், குடல் ஆகிய உறுப்புகளை மேல் நோக்கி இழுத்து வாய் வழியே ஒலியைத் தோற்றுவித்துக் கொண்டு வெளியேறும். விரைவாக வெளிப்படுவதாகிய பிராண னையும் விரைவாக வாய்ப்பகுதிக்குக் கொண்டுவரும். திடீரென ஹிக், ஹக் என்ற ஒலி தோற்றுவிப்பதால் இந்நோய் விக்கல் (ஹிக்கா) எனப்படும். 6

## 3. விக்கலின் வகைகள்

கபத்துடன் கூடிய வாயு உணவால் தோன்றியது, யமளமி, அற்பமானது (க்ஷுத்ரம்), கம்பீரமானது, மஹாஹிக்கா என ஐந்து வகை விக்கல்களைத் தோற்றுவிக்கும். 7

## 4. விக்கலின் முற்குறி

வாய் துவர்ப்புச் சுவை கொள்ளுதல், மனஅமைதி இன்மை, தொண்டையும், மார்பும் பளுவாகத் தோன்றுதல், வயிற்றில் காற்று (வாயு) சுழலுதல் என்பன எல்லா வகை விக்கல்களிலும் காணப்படும் முற்குறியாகும். 8

## 5. உணவினால் தோன்றும் விக்கலின் இலக்கணம்

உணவை மிக விரைவாக உண்பது மற்றும் அடர்த்தியும், கனத்தன்மையும் கொண்டதுமான உணவை மற்றும் கார்ப்புச் சுவை கொண்ட பொருளை உட்கொள்ளுதல் எனும் செயல்களால் உணவுக் குழாயில் காற்று தடைப்பட்டு உணவால் சூழப்பட்டு மேல் நோக்கிச் செல்லத் துவங்கும். இத்தகைய விக்கல் உணவால் தோன்றியது என்று அறிக. 9

## 6. யமள (இரட்டை) விக்கலின் இலக்கணம்

தலையையும், கழுத்தையும் நடுங்கச் செய்து வெகு நேரத்திற்கு ஒரு முறை இரட்டையாக வாயு வேகத்துடன் வெளிப்படும் விக்கல் 'யமளம்' (இரட்டை விக்கல்) எனப்படும். 10

### 7. 'க்ஷுத்ர ஹிக்கா' எனும் விக்கலின் இலக்கணம்

பயிற்சி அல்லது உழைப்பில் ஈடுபட்டுள்ளபோது, குறைந்த வேகத்துடன் தொண்டையின் அடிப்பகுதியிலிருந்து தோன்றுவது க்ஷுத்ரஹிக்கா' எனப்படும். 11

### 8. கம்பீர ஹிக்கா இலக்கணம்

தொப்புள் பகுதிக்குள்ளிருந்து தோன்றி பெருத்த ஒலியுடன் உதடு, தொண்டை, நாக்கு, ஆகியவற்றை உலர்த்தி, மூச்சு விடுவதிலும் விலாப்பகுதியிலும் துன்பம் விளைவிப்பதாகிய விக்கல் கம்பீர விக்கல் எனப்படும். இது மேலும் பல துன்பங்களை விளைவிப்பதாகும். 12

### 9. மகாஹிக்கா (பெரும் விக்கல்) இலக்கணம்

சிறுநீர்க்குண்டிகை, இதயம், தலை ஆகிய முக்கிய உறுப்புகளில் உள்ள மர்மங்களுக்கு (உயிர் நிலைகளுக்கு) துன்பம் விளைவித்துக் கொண்டு, இடைவிடாமல் உடல் முழுவதையும் மேல் நோக்கி இழுப்பதாகி, மிகுந்த வேகத்துடன் ஒலித்துக் கொண்டு, வெளிப்படுவது 'மகாஹிக்கா' எனும் பெரும் விக்கலாகும். இதில் மிக்க நாவறட்சி தோன்றும். விக்கும்பொழுது உடல் முழுவதும் நடுங்கும். 13–14

### 10. சிகிச்சைக்கு உட்படாத விக்கலின் இலக்கணம்

விக்கும்போது உடலின் உறுப்புகள் அனைத்தும் நீண்டு விடுவதும், கண்கள் சொருகிக் கொண்டு போவதும், உணவில் விருப்பமின்மையைத் தோற்றுவிப்பதுமாகி உடல் இளைக்கத் துவங்கும்போது இருமலும் கூடிக்காணப்படும், விக்கல் மற்றும் கம்பீரம், மஹாஹிக்கா என்பவையும் சிகிச்சைக்கு உட்படாதவையாகும். கைவிடத் தக்கவை என்று உணர்க. 15

### 11. விக்கலுக்குச் சிகிச்சை

கும்பகம் எனும் பிராணாயாமம், கடும் சொற்களால் உணர்ச்சியைத் தூண்டுதல், உடல்வலிமை குறைந்துள்ள நோயாளியானால் சொற்களால் அச்சுறுத்தல், ஊசியால் குத்தப்போவது

போல நடத்தல், நோயாளியின் மனத்தைக் கலங்கச் செய்யும் உபாயங்களை மேற்கொள்ளுதல் என்பன விக்கலுக்குப் பொது சிகிச்சை யாகும். மற்றும் அதிமதுரத் தூளைத் தேனுடன் குழைத்து அவலபீடனநசியமாக மூக்கில் விட வேண்டும். அல்லது திப்பிலியைச் சர்க்கரையுடன் மைய தூளாக்கி மூக்கிலிடு மருந்தாகப் பயன்படுத்த வேண்டும். 16

## 12. விக்கலில் வாந்தியெடுக்கச் செய்தல் முதலியன

விக்கல் நோயில் நெய், இளஞ்சூடுள்ள பால், கருப்பஞ்சாறு முதலியவற்றில் ஒன்றைப் பருகச் செய்தல், விக்கலைத் தணிக்கச் சிறந்த முறையாகும். மற்றும் நோயாளி இளைக்காமல் இருந்தால் வாந்தி எடுக்கச் செய்யும் முறையைக் கையாளலாம். 17

## 13. விக்கலுக்கு மூக்கிலிடும் மருந்துகள்

தாய்ப்பாலில் சிவப்புச் சந்தனத்தை அரைத்து மூக்கிலிடு மருந்தாகப் பயன் படுத்துவது விக்கல் நோய்க்குச் சிறந்த முறை யாகும். சிவப்புச் சந்தனத்தின் மைய அரைத்த தூளை நெய்யுடன் கலந்து இளஞ்சூடுள்ளபோது மூக்கிலிடலாம். இந்துப்புவை மையத்தூளாக்கி நீரில் கலந்து விக்கல் நோய்க்கு மூக்கிலிடும் மருந்தாகப் பயன்படுத்தலாம். 18

## 14. விக்கலுக்குப் புகை போடுதல்

சாலமரத்தின் பிசின் அல்லது மனோசிலைத்தணலின் மேல் இட்டுப்புகை பிடிக்கச் செய்தல், ஆட்டின்கொம்பை, அல்லது அதன் மேல் புரையை தணலில் போடுதல், பசுவின் தோல், வாலில் உள்ள உரோமங்கள் ஆகியவற்றை நெய்யுடன் கலந்து தணலின் மீது இடுதல், எனும் முறைகளைக் கொண்டு புகைபிடிக்கச் செய்தல், விக்கல் தோன்றும் தொண்டை, மார்பின் மையப்பகுதி ஆகிய பகுதிகளை வியர்க்கச் செய்தல் எனும் முறைகளால் விக்கலைத் தணிக்க வேண்டும். 19

## 15. விக்கலுக்கு இலேகிய முறைகள்

**தூய சுவர்ணகரிகம் நான்கு குன்றிமணிகள் எடை முதல் ஓர் எடை வரைகொண்டு தேனில் குழைத்து உட்கொள்ளச்**

செய்க. கிராமத்தில் வாழும் பசு, குதிரை, ஆடு ஆகியவற்றின் எலும்பைச் சாம்பலாக்கித் தேனில் குழைத்து உட்கொள்ளச் செய்க. முள்ளம்பன்றி முள், ஆடு, பசு, சல்லகி எனும் விலங்கு ஆகியவற்றின் உரோமங்களை ஒரு சட்டியில் இட்டு வாயை மூடி புகை வெளியே போகாமல் சாம்பலாக்கித் தேனுடன் உட்கொள்ளச் செய்க. மயில் தோகையைச் சாம்பலாக்கி அதில் மூன்று முதல் ஆறு உளுந்து எடை வரைகொண்டு ஆறு உளுந்து எடை தேனும், எட்டு உளுந்து எடை நெய்யும் சேர்த்துக் குழைத்து உட்கொள்ளச் செய்க. அத்திக்காய்ச் சாம்பல் அல்லது சிவப்புப் பாச்சோத்திப்பட்டையின் சாம்பலைத் தேன், நெய் விட்டுக்குழைத்து உட்கொள்ளச் செய்க. சர்ஜக்ஷாரத்தைத் துரிஞ்சிப்பழச்சாற்றுடன் கலந்து தேன் விட்டுக் குழைத்து உட்கொள்ளச் செய்க. இந்த முறைகளால் விக்கல் விரைவில் தணியும். 20, 21

## 16. மேலும் சில முறைகள்

நெய்விட்ட எண்ணெய்ப்பசை தோற்றுவிக்கப்பட்ட கஞ்சியை உட்கொள்ளுதல், இளஞ்சூடுள்ள நீரை வாயில் கொண்டிருத்தல், இளஞ்சூடுள்ள பாயசம் (பாற்சோறு) உட்கொள்ளச் செய்தல் என்பன விக்கலைத் தணிக்கும். 22

ஆட்டின் பாலில் நான்கு மடங்கு நீர்விட்டுச்சுக்கின் விழுது கலந்து பால் மட்டும் மிகுந்திருக்கக் காய்ச்சிப் பருகச் செய்தல், ஏதேனும் ஒரு பாலில் சர்க்கரை கலந்து நான்கு மடங்கு நீரும் சுக்கின் விழுதும் விட்டுப் பால் மட்டும் மிகுந்திருக்கக் காய்ச்சிப் பருகச் செய்தல், ஆடு அல்லது செம்மறியாட்டின் சிறுநீரை உள்ளங்கையில் கொண்டு முகரச் செய்தல் என்பனவற்றால் விக்கல் தணியும். 23

## 17. வேறு சில முறைகள்

பூதிகீடம் எனும் பூச்சி (ஈசல்) வெள்ளைப்பூண்டு, வசம்பு, பெருங்காயம், தாமரை ஆகியவற்றை சம அளவில் கொண்டு மைய அரைத்து ஆடு அல்லது செம்மறியாட்டின் சிறுநீரில் ஊற வைத்து (பாவனை செய்து) அரைத்து நிழலில் உலர்த்துக. இம்மருந்தை முகரச் செய்தால் விக்கல் தணியும். 24

தேன், சர்க்கரை, சிறுநாகப்பூவின் தூள் ஆகியவற்றை சுக்கின் சுரசத்துடன் அல்லது இலுப்பைப் பூவின் கஷாயத்துடன் பருகச்

செய்தால் விக்கல் தணியும். அல்லது இந்துப்பு ஒரு பலம் எடைகொண்டு மையத்தூளாக்கி இரண்டு பலம் நெய்யுடன் சேர்த்து உட்கொண்டால் விக்கல் தணியும். 25

பெருங்காயத்தூள் மூன்று உளுந்து எடை முதல் ஆறு உளுந்து எடை வரை இளஞ்சூடுள்ள நீருடன் உட்கொள்ளச் செய்தல், யவக்ஷாரத்தை நான்கு முதல் எட்டு குன்றிமணி எடை வரை ஆறு உளுந்து எடை தேன் கலந்து அல்லது இளஞ்சூடுள்ள நெய் ஒரு தோலா எடை கொண்டு என மூன்றையும் கலந்து உட்கொள்ளச் செய்தல் எனும் முறைகளால் விக்கல் தணியும். 26

திப்பிலித்தூள் நான்கு குன்றிமணி எடை முதல் எட்டு குன்றி மணி எடை வரை மூன்று உளுந்து எடை சர்க்கரை, ஆறு உளுந்து எடை சுக்குத்தூள் கலந்து ஆறு உளுந்து எடை தேனில் குழைத்து உட்கொள்ளச் செய்தல், நெல்லி முள்ளித்தூள் மூன்று உளுந்து எடை ஒரு உளுந்து எடை சுக்குத் தூள் கலந்து ஆறு உளுந்து எடை தேனுடன் குழைத்து உட்கொள்ளச் செய்தல், இலந்தைக் கொட்டைப் பருப்பு, தூய சௌவீராஞ்சனம், பொரி ஆகியவற்றைச் சம அளவில் கொண்டு தூளாக்கி அதில் மூன்று உளுந்து எடை முதல் ஆறு உளுந்து எடை வரை கொண்டு இரண்டு மடங்கு தேன் கலந்து உட்கொள்ளச் செய்தல் எனும் முறைகளால் விக்கல் நோய் தணியும். 27

பாதிரிப்பழம் மற்றும் மலர்களின் தூள் மூன்று உளுந்து எடை முதல் ஆறு உளுந்து எடை வரை தேனுடன் உட்கொள்ளச் செய்க. தூய சுவர்ணகைரிகம் ஒரு உளுந்து எடை கடுகரோகிணித்தூள் இரண்டு உளுந்து எடை கலந்து இரண்டு மடங்கு தேன் விட்டுக் குழைத்து உட்கொள்ளச் செய்க. பேரிச்சம்பழக் கதுப்பு அல்லது கொட்டைத்தூள் திப்பிலித்தூள் சம அளவில் கொண்டு தேனுடன் உட்கொள்ளச் செய்க. தூய அன்னபேதி மூன்று குன்றிமணி எடை, விளாம்பழத்தூள் மூன்று உளுந்து எடை கலந்து இரண்டு மடங்கு தேனுடன் உட்கொள்ளச் செய்க. இவ்வாறு கூறப்பட்ட நான்கு முறை மருந்துகளைத் தனித்தனியாகத் தேனுடன் கலந்து ட்கொள்ளச் செய்தால் விக்கல் தணியும். 28, 29

## 18. விக்கலுக்குப் புலால் சாறு

புறா, வீட்டில், வளரும் புறா, லாவகம், காட்டுப்பன்றி, உடும்பு, காட்டுப்பூனை, மான் மற்றும் விஷ்கிர வகையைச் சேர்ந்த

பறவைகள் ஆகியவற்றின் புலால் சாற்றில் மாதுளை, துரிஞ்சி போன்ற பழங்களின் சாறு கலந்து புளிப்புச்சுவை பெறச் செய்து இந்துப்பு கலந்து நெய் விட்டுத்தாளிக்கச் செய்து உட்கொள்ளச் செய்தால் விக்கல் தணியும். 30

இந்துப்புடன் கூடிய பேதியாகச் செய்யும் கஷாயங்கள் இளஞ் சூடுள்ள நெய்யில் கற்கண்டுத்தூள் கலந்து பருகச் செய்தல், வாயு மேல் நோக்கிச் சென்றால் அது வாஸனவஸ்தியைப் பயன்படுத்துதல் என்பன விக்கல் நோயில் நலம் தரும் என்பது சிலரின் கருத்து. 31

*சிறுங்கட்டூர், நடாதூர் எஸ்.என். ஸ்ரீராமதேசிகன் எழுதிய ஸுச்ருத ஸம்ஹிதை உத்தரஸ்தானம் தமிழாக்க நூலின் ஹிக்காபிரதிஷேதம் எனும் ஐம்பதாம் அத்தியாயம் முற்றும்.*

# சுவாசப்பிரதிஷேதம்

# எனும்

## ஐம்பத்தோராம் அத்தியாயம்

இனி தன்வந்திரி பகவான் ஸுசுருதர் முதலான சீடர்களுக்கு உபதேசம் செய்தபடி சுவாசநோய்க்கு உரிய சிகிச்சை முறைகளை விளக்குவோம். 1,2

### 1. சுவாச நோய் இலக்கணம்

முன்பு எரிச்சலைத் தோற்றுவிக்கும் பொருள் முதலானவற்றை உண்பதால் விக்கல் நோய் தோன்றும் என முன் அத்தியாயத்தில் கூறப்பட்டதல்லவா? அந்நோய்க்கு உரிய காரணங்களே இந்தச் சுவாசம் எனும் நோயைத் தோற்றுவிக்கக் காரணங்கள் ஆகும் என்று உணர்க. 3

தவறான உணவை உண்பது, கூடாத பழக்க வழக்கங்களை மேற்கொள்ளுதல் எனும் காரணங்களால் சீற்றமடைந்து பிராணவாயு தன் இயற்கையை விட்டு மேல்நோக்கி எழும்புவதாகிக் கபத்துடன் சேர்ந்து மிக்க வேகமாக மூச்சு உள்சென்று வெளிவருமாறு செய்கிறது. இவ்வாறு மூச்சுக்காற்று விரைவாகச் செயல்படுவது 'சுவாசம்' எனும்நோயாகும். 4

### 2. சுவாச நோய் வகைகள்

சுவாசம் எனும் கடுமையான நோய் ஒன்றேயாயினும் காரணம், இலக்கணங்கள் ஆகியவற்றில் உள்ள வேறுபாடுகளால் ஐந்து வகைப்படுகின்றன. அவையாவன (1) க்ஷுத்ர சுவாசம் (2)

---

**சுவாசம் – இழுப்பு, எனும் மேல்மூச்சு வாங்கும் நோய். அதற்குரிய சிகிச்சை முறைகளை விளக்குவதால் இந்த அத்தியாயம் சுவாசப்பிரதிஷேதம் எனப் பெயர் பெற்றது.**

தமகசுவாசம் (3) சின்ன சுவாசம் (4) மகா சுவாசம் (5) ஊர்த்வ சுவாசம் என்பனவாகும். 5

### 3. சுவாச நோய் முற்குறி

நெஞ்சுப்பகுதியில் வலி, உணவு உட்கொள்வதில் வெறுப்பு, மனதில் ஒன்றும் தோன்றாமை, வயிறு வீங்குதல், விலாப் பகுதிகளில் வலி என்பன சுவாச நோயின் முற்குறிகளாகும். 6

### 4. க்ஷுத்ர சுவாச இலக்கணம்

உடல் உழைப்பைச் சார்ந்த ஏதேனும் ஒரு வேலையைத் துவங்கியதும் தோன்றி வேலையை விட்டு ஓய்வாக அமரும்போது வேகம் தணிந்துள்ள 'மேல்மூச்சு வாங்குதல்' க்ஷுத்ரசுவாசம் எனப்படும். 7'

### 5. தமகசுவாசம், பிரதமக சுவாசம் என்பனவற்றின் இலக்கணங்கள்

நாவறட்சி, வாந்தி, மிக்க வியர்த்தல், குமட்டல் அடிக்கடி தோன்றுதல், தொண்டையில்'குர் குர்'எனும் ஒலி தோன்றுதல், வானத்தில் முகில் பரவியுள்ள போது சீற்றம் கொண்டு துன்புறுத்தல் என்பன தமகசுவாசத்தின் இலக்கணங்களாகும்.

பிரதமகசுவாசம் கொண்ட நோயாளி மிகவும் அதிக அளவில் ஒலித்துக் கொண்டிருக்கும் மூச்சிழுத்து விடுதல் கொண்டு மிக்க துன்புறுவார். இருமல் தோன்றிக் கபம் தொண்டையிலிருந்து வெளிப்பட்டால் மூச்சின் வேகம் தணியும். மற்றும் படுத்தபோது சீற்றம் கொள்வதும், உட்கார்ந்தபோதும் தணிவதும் இந்நோயின் இலக்கணமாகும்.

தமகசுவாசம் கொண்டவருக்கு நினைவு தவறுதலும், காய்ச்சலும் தோன்றுமானால் அந்நோய் பிரதமகசுவாசம் எனப்படும். 8–10

### 6. சின்ன சுவாச இலக்கணம்

பித்தம் சீற்றம் பெறுவதால் சிறுநீர்க்குண்டிகைப் பகுதியில் எரிச்சலும், வயிற்று வீக்கமும் கொண்டு தன் முழு வலிமையைக்

கொண்டு சிரமப்பட்டு தடைப்பட்ட மூச்சிழுத்து விடும் நோயாளி சின்ன சுவாசம் கொண்டவர் என அறிக. 11

### 7. மகாசுவாச இலக்கணம்

நினைவு தவறுதல், விலாவலியால் துன்புறுதல், தொண்டை உலர்ந்து போதல், மிக்க ஒலியுடன் மூச்சு இழுத்து விடுதல் கண்களில் வீக்கம் காணப்படுதல், குனிந்தோ அல்லது மார்பை உயர்த்தியோ மூச்சிழுத்தல் எனும் இலக்கணங்கள் காணப்பட்டால் அது மகாசுவாசம் எனும் நோய் என்று உணர்க. 12

### 8. ஊர்த்வ(மேல் நோக்கி) சுவாச இலக்கணம்

ஹிருதயம், சிறுநீர்க்குண்டிகை பகுதி, தலை ஆகியவற்றில் உள்ள உயிர்நிலைகளை (மர்மங்களை) இழுத்துக்கொண்டு அடிக்கடி செயலற்று கண்கள்சொருகிக் கொண்டு போவதும், குரல் மிகவும் தாழ்ந்து போவதும் காணப்பட்டால் அது ஊர்த்வசுவாசம் எனும் நோயாகும். 13

### 9. சிகிச்சைக்கு உட்படுவதும், உட்படாததுமான சுவாச நோய்கள்

முன்கூறப்பட்ட ஐவகை சுவாச நோய்களில் க்ஷுத்ரசுவாசம் என்பது எளிதில் தீர்க்கக் கூடியதாகும். தமகசுவாசம் சிரமப்பட்டுத் தீர்க்கக்கூடியதாகும். சின்னசுவாசம், மகாசுவாசம், ஊர்த்வசுவாசம் என்பன சிகிச்சைக்கு உட்படாதவையாகும். வலிமை குன்றியவருக்குத் தோன்றும் தமக சுவாசம் சிகிச்சைகளுக்கு உட்படாததேயாகும். அதாவது காய்ச்சல், நினைவிழத்தல் முதலிய இலக்கணங்கள் காணப்பட்டால் தமகசுவாசம் சிகிச்சைக்கு உட்படாததாகிவிடும். 14

### 10. சுவாசத்திற்குச் சிகிச்சை

உடல் வலிமை கொண்டவருக்குச் சுவாசநோயில் எண்ணெய் வஸ்தியைத் தவிர்த்து மென்மையான அதாவது துன்பம் விளைவிக்காத மருந்துப்பொருள்களால் பேதியாகச் செய்தல், வாந்தியாகச் செய்தல் எனும் தூய்மைப்படுத்தும் முறைகளைக் கையாளத் தகும் என்று மருத்துவ நூலாசிரியர்கள் சிலர் கூறுகின்றனர். 15

### 11. சுவாசம், காசம் முதலான நோய்களுக்கு நெய்

பழைய நெய் ஒரு பிரஸ்தம் கடுக்காய், பிடாலவணம், பெருங்காயம் இம்மூன்றும் கலந்து நான்கு பலம் (1/2 பிரஸ்தம்) நீர் நான்கு பிரஸ்தம் என்ற அளவில் கலந்து நெய்ப்பகுதி மட்டும் மிகுந்திருக்கக் காய்ச்சுக. இதில் ஒரு தோலா அளவு நெய் மருந்தை வெந்நீருடன் நாள்தோறும் மூன்று முறை உட்கொள்ளச் செய்தால் சுவாசம் இருமல், விக்கல், இதயநோய் முதலிய நோய்கள் தணியும். 16

### 12. சௌவர்ச்லாதி கிருதம்

சௌவர்ச்சல உப்பு, கடுக்காய், வில்வப்பட்டை அல்லது வில்வப்பழக்கதுப்பு ஆகியவற்றை விழுதாக அரைத்து பழைய நெய்யுடன் நெய் மருந்து செய்க. இது சௌவர்ச்சலாதி கிருதம் எனப்படும். இது சுவாசகாசத்தைத் தணிக்கவல்லது. அல்லது திப்பிலி முதலான மருந்துப்பொருள்களின் விழுது நான்கு பலம், விதாரிகந்தாதி, கூட்டுப் பொருள்களின் கஷாயம் நான்கு பிரஸ்தம், பழைய நெய் ஒரு பிரஸ்தம் எனக்கொண்டு முறைப்படி நெய் மருந்து செய்க. அதில் ஐந்து உப்பு வகைகளையும் சேர்த்து நாள்தோறும் பயன்படுத்துவதால் சுவாசமும் காசமும் தணியும். 17

### 13. ஹிம்ஸ்ராதிகிருதம்

கண்டங்கத்திரிவேர், வாயுவிளக்கம், புங்கன்காய்ப்பருப்பு, அல்லது புங்கன்வேர்ப்பட்டை, கடுக்காய், தான்றிக்காய், நெல்லிக் காய், சுக்கு, மிளகு, திப்பிலி, கொடி வேலிப்பட்டை என்பன வற்றை ஒவ்வொன்றும் அரை கர்ஷம் வீதம் கொண்டு விழுதாக்கி நான்கு பலம், பால் இரண்டு பிரஸ்தம், நீர் நான்கு பிரஸ்தம் என்ற அளவில் கலந்து முறைப்படி நெய் மருந்து செய்க. இம்மருந்து ஹிம்ஸ்ராதிகிருதம் எனப்படும். இதில் ஒரு தோலா அளவு இளஞ்சூடுள்ள நீர் துணை மருந்தாகக் கொண்டு உட்கொள்ளச் செய்தால் சுவாசமும் காசமும் தணியும். மற்றும் இந்த நெய்மருந்து மூலநோய், சுவையின்மை, குன்மம், அதிஸாரம், க்ஷயம் எனும் நோய்களையும் தணிக்க வல்லதாகும். 18,19

### 14. விருஷகஷாய கிருதம்

பழைய நெய், ஒரு பிரஸ்தம், வேர், கிளை, இலை, மலர்கள் ஆகியவற்றுடன் கூடிய ஆடாதொடைக்கஷாயம் நான்கு பிரஸ்தம்,

ஆடாதொடை வேர் மற்றும் மலர்கள் அல்லது ஆடாதொடை வேர், பட்டை, இலை, மலர்கள் எனும் ஐந்தினைச் சேர்த்து செய்த விழுது நான்கு பலம் எனக்கலந்து முறையாக நெய் மருந்து காய்ச்சுக. இது விருஷகஷாய கிருதம் எனப்படும். நன்கு குளிர்ந்த இந்நெய் மருந்து ஒரு தோலா அதற்குச் சமஅளவு தேன் கலந்து உட்கொள்ளச் செய்தால் காசம், சுவாசம் எனும் நோய்கள் தணியும். 20

## 15. சிருங்கியாதி கிருதம்

கர்கடகசிருங்கி, சோம்பு, சிறுதேக்கு, சுக்கு, ரஸாஞ்சனம், சர்க்கரை கோரைக்கிழங்கு, மஞ்சள், அதிமதுரம் எனும் இவற்றைச் சம அளவு மொத்தம் நான்கு பலம் அளவு கொண்டு நீருடன் விழுதாக அரைத்துக் கொண்டு, நெய் மருந்து செய்க. இது சிருங்கியாதி கிருதம் எனப்படும். இது காசம், சுவாசம் விக்கல் எனும் நோய்களைத் தணிக்க வல்லது. 21, 22

## 16. சுவஹாதி கிருதம்

சித்தரத்தை, சடாமாஞ்சி, அல்லது கருஞ்சீரகம், சிறுதேக்கு, பெருங்காஞ்சொறி வேர், பிரப்பம்பழம், குன்றிமணி, இஞ்சி, சாரணை, கண்டங்கத்திரிவேர், முள்ளுக்கத்திரி வேர், எனும் இவற்றைத் தனித்தனியாக ½ கர்ஷம் வீதம் கொண்டு நீருடன் விழுதாக அரைத்து ஒரு பிரஸ்தம் நெய், இரண்டு பிரஸ்தம் நீர் கலந்து முறைப்படி நெய்மருந்து செய்க. இது ஸுவஹாதி கிருதம் எனப்படும். இது உஷ்ண வீரியம் கொண்ட மருந்தாகும். நாள்தோறும் தக்க அளவு இம்மருந்தை உட்கொண்டால் சுவாச நோய் தணியும். 23, 24

## 17. வேறு சௌவர்ச்சலாதி கிருதம்

சௌவர்ச்சல உப்பு, யவக்ஷாரம், கடுகரோகிணி, சுக்கு, மிளகு, திப்பிலி, கொடிவேலி வேர்ப்பட்டை, வசம்பு, கடுக்காய், வாயுவிளங்கம் எனும் இவற்றைச் சமஅளவாக மொத்தம் நான்கு பலம் அளவு கொண்டு நெய் ஒரு பிரஸ்தம், நீர் நான்கு பிரஸ்தம் ஆக கலந்து முறைப்படி நெய் காய்ச்சுக. இது சௌவர்ச்சல கிருதம் எனப்படும். இது சுவாச நோயைத் தணிக்கும். இதைப் போலவே ஹிம்ஸ்ராதி, சிருங்கியாதி, சுவஹாதி, சௌவர்ச்சலாதி, கோபல்ல

வாதி எனப்படும் ஐவகைக் கூட்டுப்பொருள்களாலான நெய் மருந்துகள் சுவாசநோயைத் தணிப்பதில் சிறந்தவை என மருத்துவர்கள் கூறுகின்றனர். *25,26*

## *18.* தாளிசாதி கிருதம் :

தாளிசபத்திரி, கீழாநெல்லி, வசம்பு, கீரைப்பாலை, கோஷ்டம், இந்துப்பு, வில்வ வேர்ப்பட்டை, புஷ்கரமூலம், வாசனைப்புல், சௌவர்சலஉப்பு, திப்பிலி, கொடிவேலிவேர்ப்பட்டை, கடுக்காய், செவியம் எனும்இவற்றில் ஒவ்வொன்றும் ஒவ்வொரு தோலா வீதம் கொண்டு தூய பெருங்காயம் 1/4 தோலா சேர்த்து அவற்றுடன் ஒரு பிரஸ்தம் நெய்யும், நான்கு பிரஸ்தம் நீரும் கலந்து முறைப்படி நெய் காய்ச்சுக. இது தாளிச்சாதி கிருதம் எனப்படும். இது எல்லாவகையான சுவாச நோய்களையும் தணிக்க வல்லது. மற்றும் இரத்த பித்த நோய்க்கு உரிய சிகிச்சையைக் கூறும் அத்தியாயத்தில் குறிப்பிடப்பட்ட ஷட்பல கிருதம் எனும் மருந்தும் சுவாச நோயைப் போக்குவதில் சிறந்ததாகும். *27-29*

## *19.* பிருங்கராஜரச சித்த தைலம்.

எள் எண்ணெய் ஒரு பிரஸ்தம் கொண்டு கரிசலாங்கண்ணி இலைச்சாறு பத்து மடங்கு சேர்த்து (எண்ணெய்ப்பகுதி மிகுந்திருக்கச் )காய்ச்சி வடிகட்டுக. இது பிருங்கராஜ ரஸஸித்த தைலம் எனப்படும். இதைத்தகுந்தபடி எண்ணெய்க் குளியல், மூக்கிலிடு மருந்து, உட்கொள்ளுதல் எனும், முறையாகப் பயன்படுத்தினால் சுவாசம், இருமல் எனும்நோய்கள் தணியும். *30*

## *20.* சுவாச காசங்களைப் போக்கும் பழச்சாறு முதலியன

மாதுளை, துரிஞ்சி முதலிய புளிப்புச்சுவை மிக்க பழங்களின் சாற்றுடன் விஷ்கிரப் பறவைகளின் புலால் சாற்றைக் கலந்து நெய்யுடன் எண்ணெய்ப்பசை கொள்ளச் செய்து இந்துப்பு சேர்த்துப் பருகச் செய்க. கருநிறமான், மான் முதலியவற்றின் தலையில் உள்ள புலாலுடன் கொள்ளின் சுரசத்தைக் கலந்து பக்குவம் செய்து பருகச் செய்க. அல்லது பெரும்பஞ்சமூலம் முதலான வாதத்தைத் தணிக்கும் பொருள்களைச் சேர்த்துக் காய்ச்சிய பாலைப் பருகச் செய்தால் சுவாசமும் காசமும் தணியும். *31*

## 21. சுவாச காசத்தைப் போக்கும் ஐவகை இலேகியங்கள்

திளிச மரவகை, கர்கடகசிருங்கி எனும் இவ்விரண்டையும் சம அளவில் கொண்டு செய்த தூள் (2) காஞ்சொரி , திப்பிலி, கடுக ரோகிணி, கடுக்காய் ஆகியவற்றை சம அளவில்கொண்டு செய்த தூள் (3) முள்ளம்பன்றிமுள், மயில் இறகு, செவியம், திப்பிலி எனும் இவற்றைச் சம அளவு கொண்டு செய்த தூள் (4) சிறுதேக்குப் பட்டை,சுக்கு, சர்க்கரை, யானை வணங்கி மரப் பட்டை எனும் இவற்றைச் சம அளவிற் கொண்டு செய்த தூள் (5) நெருஞ்சி முள் மட்டும் தூள் செய்துகொள்ளல் என இவ்வைந்து வகைகளால் இலேகியம் செய்து (தகுந்த அளவு தேனும் நெய்யும் கலந்து) உட்கொள்ளச் செய்தால் சுவாசமும் காசமும் தணியும். 32–35

## 22. ஏழிலைப்பாலை மலர் முதலான முறைகள்

ஏழிலைப்பாலை மலர், திப்பிலி எனும் இவ்விரண்டையும் சம அளவில் கொண்டு தூளாக்கி அதில் மூன்று உளுந்து எடை முதல் ஆறு உளுந்து எடை வரை தயிர் மேல் தெளிவுடன் உட்கொள்ளச் செய்க. இதைப்போல வறுத்த யவதானியத்தின் தூளைத் தேன் கலந்து உட்கொள்ளச்செய்தால் சுவாச காசங்கள் தணியும். 36

## 23. யவதானியத்தின் மாவைப் பயன்படுத்துதல்

எருக்கன் இலை மற்றும் மலர்களின் கஷாயத்தில் பல முறை யவதானியத்தைப் பாவனை செய்து அல்லது யவதானிய மாவை கலந்து பாலுடன் நீர் பகுதி மிக்க கஞ்சியாகச் செய்து தேனுடன் கலந்து பருகச்செய்க. 37

## 24. வாகை மலர் முதலியவற்றைப் பயன்படுத்துதல்

வாகை மலர், வாழைப்பூ, மல்லிகை மலர், திப்பிலி எனும் இவற்றைச் சம அளவு கொண்டு அரைத்து அரிசி கழுவிய நீருடன் உட்கொள்ளச் செய்தால் சுவாச நோய் தணியும். 38

## 25. இலந்தை முதலியன

இலந்தைக்கொட்டை பருப்பு, பனைவேர், மான்தோல் எரித்த சாம்பல் எனும் இவற்றை மைய அரைத்து அதில் மூன்று உளுந்து

மனோசிலை, தேவதாரு, மஞ்சள், பத்ரகம் எனும் பச்சிலை, குங்கிலியம்,கொம்பரக்கு, ஆமணக்கு வேர் எனும் இவற்றைச் சம அளவு கொண்டு முறைப்படி வத்தியாகச் செய்து அதைக் கொண்டு புகை பிடிக்கச் செய்க. 50

நெய், யவதானியம், தேன்மெழுகு, 'சால (மருத) மரத்துப் பிசின் ஆகியவற்றைக் கலந்து அல்லது இவற்றைத் தனித்தனியே பயன்படுத்திப் புகைபிடிக்கச் செய்க.

மாட்டின் கொம்பு, தோல், வால், மயிர், குளம்பு, நரம்பு ஆகியவற்றைத் தூளாக்கி அவற்றைக் கொண்டு புகை பிடிக்கச் செய்க.

ஸிம்ஹவகம் (துருஷ்கம் எனப்படும் புகை போடும் பொருள்.) யானை வணங்கிப் பிசின், குங்கிலியம் ஆகியவற்றின் தூளைத் தணலின் மேல் இட்டுப் புகை பிடிக்கச் செய்க. 51, 52

## 34. வலிமை கொண்ட வலிமையற்ற நோயாளிகளுக்குச் சிகிச்சை முறைகள்

உடல் வலிமை கொண்டு கபம் மிகுந்துள்ள நோயாளிகளுக்கு வாந்தி எடுக்கச் செய்து பிறகு பேதியாகச் செய்யவேண்டும். சுவாச நோய் கொண்டவர் உடல் வலிமையற்றவரும், வறண்ட உடல் கொண்டவரும் ஆனபோது பொரி, பொரிமா என்பனவற்றால் உடல் செழிப்புறச் செய்ய வேண்டும். நோயாளி புலால் உணவுப்பழக்கம் கொண்டவரானால் காட்டில் வாழும் விலங்கு மற்றும் பறவைகளின் புலாலை நன்கு பக்குவம் செய்து அவ்வாறே செம்மறியாட்டுப்புலால், நீர்ப்பாங்கான நிலத்தில் வாழும் விலங்குகளின் புலால் ஆகியவற்றை நன்கு பக்குவம் செய்து உட்கொள்ளச் செய்க. 53, 54

## 35. சுவாசத்திற்குச் சிறந்த முறை

கண்டங்கத்திரி, நெல்லிக்காய், இலை இரண்டும் ஒவ்வொரு தோலா வீதம் கொண்டு தூய பெருங்காயம் அரைத் தோலா சேர்த்து மையத்தூளாக்கவும், இதில் மூன்று உளுந்து எடை முதல் ஆறு உளுந்து எடை வரை தேன் விட்டுக் குழைத்து மூன்று நாட்கள் உட்கொள்ளச் செய்தால் சுவாச நோய் தணியும். 55

## 36. நீக்க இயலாத சுவாச காச நோய்கள்

பெருங்காற்றுடன் கூடிய தீ, இந்திரனால் ஏவப்பட்ட வஜ்ராயுதம் ஆகியவை தடுக்க இயலாதவை யாகுமோ அவ்வாறே சுவாசமும், காசமும், ஸ்லிம்பிகா எனும் நோயும் எளிதில் தடுக்க இயலாத கடும் நோய்களாகும். *56*

***சிறுங்கட்டூர், நடாதூர் எஸ்.என். ஸ்ரீராமதேசிகன் எழுதிய***

***ஸம்ஸ்க்ருத ஸம்ஹிதை உத்தரஸ்தானம் தமிழாக்க நூலின்***

***சுவாசப்பிரதிஷேதம் எனும்***

***ஐம்பத்தோராம் அத்தியாயம்***

***முற்றும்.***

# காசபிரதிஷேதம்

# எனும்

## ஐம்பத்திரெண்டாம் அத்தியாயம்

இனி தன்வந்திரி பகவான் ஸுசுருதர் சீடர்களுக்கு உபதேசம் செய்தபடி காசம் (இருமல்) எனும் நோய்க்கு உரிய சிகிச்சை முறைகளை விளக்குவோம். *1, 2*

### 1. காச நோய்க்குக் காரணம்

சுவாசம் மற்றும் விக்கல் நோய்கள் தோன்றக் காரணங்களாகக் கூறப்பட்டவையே காசம் எனும் இருமல் நோய்க்கும் காரணங்களாகும் என்று உணர்க. *3*

வாய், மூக்கு, தொண்டை எனும் பகுதிகளில் புகை புகுதல் தூசி நிரம்பிய இடத்தில் செல்லுதல், உட்கொண்ட உணவுச்சாறு, வாயுவால் தூண்டப்பட்டு வாய்க்குள் மீண்டும் வருதல், உடற்பயிற்சி, வறட்சித் தன்மை கொண்ட உணவை உட்கொள்ளுதல், உண்ட உணவு சுவாசக்குழாய் போன்ற வழிகளில் புகுதல், தடுத்து நிறுத்தக்கூடாத வேகங்களை (தும்மல் முதலியவற்றைத்) தடுத்தல் போன்ற காரணங்களால் இருமல் தோன்றும். *4*

### 2. காசத்தின் தோற்றம்

முன்கூறிய காரணங்களால் கேடுற்ற (பிராணவாயு) உயிர்காற்று உதானம் எனும் வாயுவுடன் இணைந்து வெண்கலப் பாத்திரம் உடைவது போன்ற ஒலியைத் தோற்றுவித்துக்கொண்டு கபம்,

---

காசம் - இருமல், அதற்குரிய சிகிச்சை முறைகளை விளக்குவதால் இந்த அத்தியாயம் காசப் பிரதிஷேதம் எனும் பெயர் பெற்றது.

பித்தம் போன்ற தோஷங்களுடன் விரைவாக வாய் வழியே வெளியேறும். இது அறிஞர்களால் காசம் எனக் கூறப்படுகிறது. 5

### 3. காச வகைகள்

இந்தக் காசம், வாதம், பித்தம், கபம் என்பனவற்றாலும், மார்ப்புப்பகுதி தாக்குண்டதாலும், க்ஷயநோயால் தோன்றுவதாலும் மருத்துவர்களால் ஐவகைப்படும் எனக் கூறப்பட்டுள்ளது. தோற்றத்திலேயே இதற்குத் தக்க சிகிச்சை செய்யப்படாவிடில் 'ராஜயஷ்மா' எனும் க்ஷய நோய்க்குக் காரணமாகும். 6

### 4. காசத்திற்கு முற்குறி

இருமல் தோன்றுவதற்கு முன் தொண்டைக்குள் அரிப்பு, உணவுப்பொருள் தொண்டையை அடைத்தல், விழுங்குவதில் சிரமம் தோன்றுதல், தொண்டை அண்ணம் ஆகிய பகுதிகளில் ஏதோ ஈஷிக்கொண்டிருப்பது போலிருத்தல், இயற்கையான குரலில் மாறுபாடு சுவையின்மை, உண்ட உணவு செரிமான மாகாமை எனும் இலக்கணங்கள் காணப்படும். 7

### 5. வாதம் மிகுவதால் தோன்றும் இருமலின் இலக்கணங்கள்

வாதத்தால் தோன்றும் இருமலில் இதயம், நெற்றிப்பொட்டில் பகுதி, தலை, வயிறு, விலாப்பகுதி ஆகியவற்றில் வலி தோன்றும். வாயின் செயல் வலிமையற்றுக் காணப்படும்.

உடல் வலிமை, குரல், உடற்பொலிவு ஆகியவை குறைந்து போகும். மார்பு, காற்றுப் பைகள் ஆகியவை கபத்தால் நிறைந் திருப்பது போல நோயாளி இருமிக்கொண்டிருத்தல், குரல் மாறுபாடு, வறண்ட இருமல் ஆகியவை காணப்படும். 8

### 6. பித்தகாசத்தின் இலக்கணம்

மார்பில் எரிச்சல், காய்ச்சல், வாய்உலர்ந்து போதல், வாய் கசத்தல், இடைவிடாமல் நாவறட்சி தோன்றுதல், மஞ்சள் நிறத்துடன் கார்ப்புச்சுவைக்கொண்டு வாந்தி வெளிப்படுதல், உடல் வெளிறிப் போதல், உடல் முழுவதிலும் எரிச்சல் எனும் இலக்கணங்கள் பித்தத்தாலான காச நோயில் காணப்படும். 9

## 7. கபத்தாலான காச இலக்கணம்

வாயில் கொழகொழப்பு, வாய்பூத்தல், தலைவலி, உடல் கபத்தால் நிறைந்திருத்தல், உணவில் விருப்பம் தோன்றாமை, உடல் பளுவாகத் தோன்றுதல், அடர்ந்த கபத்துடன் கூடிய இருமல் என்பன கபத்தால் தோன்றும் காசத்தின் இலக்கணங்கள் ஆகும். 10

## 8. மார்பு தாக்குண்டதால் தோன்றும் இருமலின் )லக்கணம்

உடற்பயிற்சி, மிக்க பளுவான பொருளைச் சுமத்தல், கட்டை முதலியவற்றால் அடிபடுதல் போன்ற தாக்குதலுக்கு உட்படுவதால் மார்புப்பகுதியில் கடும் வலி, அடிக்கடி இரத்தம் கலந்த உமிழ்நீர் வெளிப்படுதல் எனும்இலக்கணங்களுடன் கூடிய இருமல் மார்பு தாக்கப்படுவதால் தோன்றிய இருமலின் இலக்கணங்களாகும். 11

## 9. க்ஷயத்தால் தோன்றும் இருமலின் இலக்கணம்

உடல் உறுப்புகளில் வலி, காய்ச்சல், அழற்சி, நினைவு தவறுதல் போன்ற துன்பங்கள் க்ஷயத்தால் தோன்றும் இருமலில் காணப்படும். முடிவில் உயிரும் நீங்கக் கூடும். க்ஷயத்தால் இருமல் கொண்ட நோயாளியின் உடல் நாளுக்குநாள் உலர்ந்து இளைத்துக் கொண்டிருக்கும். உடல் வலிமை குன்றும். உடலில் சதைப்பற்று (மாமிசம்) குறைந்து கொண்டே போகும். இருமலுடன் சீழும் இரத்தமும் கலந்த உமிழ்நீர் வெளிப்படும். இத்தகைய நிலையில் உள்ள நோய் சிகிச்சையால் எளிதில் தீர்க்க கூடியதல்ல என மருத்துவ வல்லுநர்கள் கூறுகின்றனர். முதுமையில் இத்தகைய நோய் தோன்றினால் அது காலம் கடத்தக் கூடியது (யாப்பியம்) எனக் கூறுவர். 12,13

## 10. இருமலுக்குப் பொது சிகிச்சை

கர்நாடக சிருங்கி, வசம்பு, காயபலம், வாசனைப்புல், கோரைக்கிழங்கு, கொத்துமல்லிவிதை, பெருங்கடுக்காய், சிறுதேக்கு தேவதாரு, சுக்கு தூய பெருங்காயம் எனும் இவை அனைத்தையும் ஒவ்வொன்றும் ஒவ்வொரு தோலா வீதம் கொண்டு தூளாக்கித் துணியால் சலித்துக் கொள்க. இந்தத் தூளில் மூன்று முதல் ஆறு

உளுந்து எடை வரை வெந்நீருடன் உட்கொள்ளச் செய்தால் பலநாள்பட்ட இருமலும் தணியும். 14

## 11. பலதிரிகா - சூரணம

கடுக்காய், தான்றிக்காய், நெல்லிக்காய், சுக்கு, மிளகு, திப்பிலி, வாயுவிளங்கம், கர்க்காடகசிருங்கி, சிற்றரத்தை, வசம்பு, பதுமுகம், தேவதாரு எனும் இவற்றைச் சமஅளவு கொண்டு நன்கு தூளாக்கி துணியால் சலித்துக் கொள்க. இது பலதிரிகாதி சூரணம் எனப் படும். இதில் மூன்று முதல் ஆறு உளுந்து எடை வரை கொண்டு மூன்று உளுந்து எடை தேன், மூன்று உளுந்து எடை சர்க்கரை, ஆறு உளுந்து எடை நெய் ஆகியவற்றுடன் குழைத்து உட்கொள்ளச் செய்க. இது இருமலைப் போக்கவல்ல சூரணமாகும். 15

## 12. பத்யாதி சூரணம்

பெருங்கடுக்காய், சர்க்கரை, நெல்லிக்காய், பொரி, திப்பிலி, சுக்கு எனும் இவற்றைச் சம அளவு கொண்டு தூளாக்குக. இது பத்யாதி சூரணம் எனப்படும். இதில் மூன்று உளுந்து எடை கொண்டு நெய் ஆறு உளுந்து எடை, தேன் ஒரு தோலா எடை கலந்து உட்கொள்ளச் செய்க. அல்லது திப்பிலித்தூள் மூன்று குன்றிமணி எடை இந்துப்பு இரண்டு குன்றிமணி எடை என இரண்டையும் கலந்து வெந்நீருடன் உட்கொள்ளச் செய்தால் இருமல் தணியும். 16

## 13. வேறு முறைகள்

(1) சுக்குத்தூள் ஆறு குன்றிமணி எடை, திப்பிலித் தூள் மூன்று குன்றிமணி எடை எனக் கலந்து ஆறு உளுந்து எடை வெல்லத்துடன் கலந்து உட்கொள்ளச் செய்க. (2) உலர்ந்த திராட்சை ஆறு உளுந்து எடைகொண்டு விதைகளை நீக்கி அரைத்து ஆறு உளுந்து எடை நெய் மூன்று உளுந்து எடை தேன் கலந்து உட்கொள்ளச் செய்க. (3) திராட்சையை விழுதாக அரைத்துஅது ஆறு உளுந்து எடை, சர்க்கரை ஆறு உளுந்து எடை, திப்பிலித்தூள் மூன்று குன்றிமணி எடை என அனைத்தையும் கலந்து உட்கொள்ளச் செய்க. (4) இஞ்சியைத்

*பலதிரிகம், திரிபலை, கடுகாய், தான்றிக்காய், நெல்லிக்காய், என்பன மூன்றும்

துவையல் போல அரைத்து ஒரு உளுந்து எடை, சுக்குத்தூள் நான்கு குன்றிமணி எடை, அதிமதுரத்தூள் ஒரு குன்றிமணி எடை எனக் கொண்டு அனைத்தையும் கலந்து தேன் விட்டுக் குழைத்து உட்கொள்ளச் செய்க. இம்முறைகள் காச நோயைத் தணிக்க வல்லவையாகும். 17

## 14. மரிசாதி* முறைகள்

*(1)* மிளகுத்தூள் நான்கு குன்றிமணி எடை, சர்க்கரை மூன்று உளுந்து எடை, எனக் கொண்டு நெய் ஆறு உளுந்து எடை, தேன் மூன்று உளுந்து எடை எனக் கலந்து உட்கொள்ளச் செய்க. *(2)* நெல்லிக்காய், திப்பிலி, சுக்கு, சர்க்கரை எனும் இவற்றைச் சம அளவு கொண்டு கலந்து அதில் மூன்று உளுந்து எடை முதல் ஆறு உளுந்து எடை வரை தயிர்த் தெளிவுடன் உட்கொள்ளச் செய்தால் இருமல் தணியும். 18

## 15. அரேணிகாதி முறை

அரேணிகத்தூள், திப்பிலித்தூள் இவ்விரண்டையும் சம அளவு கலந்து தயிருடன் உட்கொள்ளச்செய்தால் காசம் தணியும். மஞ்சள், மரமஞ்சள், தேவதாரு, சுக்கு, கருங்காலியின் சாரம் (காசுக்கட்டி) எனும் இவற்றைச் சம அளவு கொண்டு, தூளாக்கி ஆட்டின் சிறுநீருடனோ, வெந்நீருடனோ உட்கொள்ளச் செய்க. நேர் வாள வேர், ஆமணக்கு வேர், தில்வக, நெய்யில் வதக்கிய இலந்தை இலை, இந்துப்பு எனும் இவற்றைச் சம அளவில் கொண்டு நன்கு தூளாக்கி அதில் மூன்று உளுந்து எடை முதல் ஆறு உளுந்து எடை வரை இளஞ்சூடுள்ள நீருடன் உட்கொள்ளச் செய்க. இம்முறைகள் இருமலைத் தணிக்க வல்லவை. 19,20

## 16. இருமலுக்குப் பெருங்காயம்

தூயபெருங்காயம் ஒரு கர்ஷம் அளவு கொண்டு புளிக் கொடியுடன் அல்லது துரிஞ்சிப்பழச்சாறு போன்ற புளிப்புச் சுவைகொண்ட பழங்களின் சுரசத்துடன் உட்கொள்ளச் செய்தால் இருமல் தணியும். 21

*மரிசம் – மிளகு

## 17. இருமலுக்கு மிளகுத்தூள் புகைவத்தி

மிளகுத்தூள் ஒரு உளுந்து எடை கொண்டு ஆறு உளுந்து எடை தேன் கலந்து உட்கொள்ளச் செய்தால் இருமல் தணியும். சிறுதேக்கு, வசம்பு, பெருங்காயம் எனும் இம்மூன்றையும் சம அளவில் கொண்டு தூளாக்கி நீர்விட்டு அரைத்து வத்தி போல் செய்து உலர்த்துக. இந்த வத்தியை நெய்யில் தோய்த்து முறைப்படி புகைப்பிடிக்கச் செய்தால் வாதத்தாலும், கபத்தாலும் தோன்றும் இருமல் தணியும். 22

## 18. வேறு முறை

கோரைக்கிழங்கு, அழிஞ்சிமரப்பட்டை அல்லது பழத்தோல், அதிமதுரம் சடாமஞ்சரி மனோசிதை, அரிதாரம் எனும் இவற்றைச் சம அளவு கொண்ட நன்கு தூளாக்கி ஆட்டின் சிறுநீர்விட்டு அரைத்து வத்திபோல் செய்து உலர்த்துக. இதை முறைப்படி புகை பிடிக்கப் பயன்படுத்தினால் வாதத்தாலும் கபத்தாலும் தோன்றும் இருமல் தணியும். புகை பிடித்தபிறகு பாலைப் பருகச் செய்க. 23

## 19. மிளகு, திராட்சை முதலியவற்றுடன் பால்

மிளகுத்தூள் ஒரு உளுந்து எடை சீது எனும் மதுவுடன் உட்கொள்ளச் செய்தால் விரைவில் இருமல் தணியும். (2) உலர்ந்த திராட்சை, நேத்ர பாலை, மஞ்சிட்டி, குங்கிலியம் அல்லது ஆனை வணங்கி எனும் இவற்றைச் சம அளவில் (இரண்டு தோலா அளவு) கொண்டு நீர்விட்டு விழுதாக அரைக்கவும். இதை 16 தோலா பால், 64 தோலா நீர் என இவற்றுடன் கலந்து முறையாகவும் பாலின் அளவு மிகுந்திருக்கக் காய்ச்சித் தேன் கலந்து நாள் தோறும் பருகச் செய்தால் இருமல் தணியும். 24

கண்டங்கத்திரி, திப்பிலி என இவ்விரண்டின் கஷாயத்தில் பயற்றைப் பக்குவம் செய்து தேனுடன் உட்கொண்டால் இருமல் தணியும். 25

## 20. இருமலுக்கு *உத்காரிகை முதலியன

ஏலக்காய், இலந்தைப்பழம் சுக்கு, ஜாதிபத்திரி எனும் )வற்றைச் சம அளவு கொண்டு தூளாக்கிக் கொள்க. இத்தூளில்

*உத்காரிகை – கொழுக்கட்டை போன்ற தின்பண்டம்

நீர்விட்டு அரைத்து கொழுக்கட்டை போன்ற தின்பண்டமாகச் செய்து பக்குவப்படுத்தி உட்கொள்ளச் செய்தால் இருமல் தணியும். அல்லது முன்கூறிய பொருள்களைச் சேர்த்து கஞ்சியாகச் செய்து குளிர்ந்த பின் அதில் தகுந்த அளவு தேன் கலந்து உட்கொள்ளச் செய்தால் இருமல் தணியும். 26

## 21. வாதத்தால் தோன்றும் இருமலுக்கு நெய் மருந்து

(1) பிலீஹம் எனும் மண்ணீரல் வீக்கத்திற்குச் சிகிச்சையை கூறும் அத்தியாயத்தில் 'ஷடங்க கிருதம்' எனும் நெய் மருந்து கூறப்பட்டுள்ளது. அதில் ஆறு உளுந்து எடை முதல் ஒரு தோலா அளவு வரை கொண்டு தேன் கலந்து உட்கொள்ளச் செய்க. (2) விதாரிகந்தாதி கூட்டுப்பொருள்களாலான விழுதும் கஷாயமும் கலந்து அதனால் செய்த நெய் மருந்து பயன்படுத்துக. (3) ஆடாதொடை சுரசம் அல்லது இலை விழுது சேர்த்துக் காய்ச்சிய பாலில் எடுத்த நெய் மருந்தைப் பயன்படுத்துக. இம்முறைகள் வாதத்தாலான இருமலைத் தணிக்கும். 27

## 22. வாதகாசத்திற்கு வேறு முறைகள்

வாத காசத்திற்கு (1) ஆமணக்கு எண்ணெய் முதலியவற்றால் எண்ணெய்ப்பசை கொண்ட விரேசன முறைகளைப் பயன்படுத்த வேண்டும். (2) ஆஸ்தாபனவஸ்தி, அநுவாஸனவஸ்தி எனும் வஸ்திமுறைகள் வாதத்தையும் அதன் அடியாகத் தோன்றிய காசத்தையும் போக்கச் சிறந்த முறைகளாகும். (3) தக்க முறையில் எண்ணெய்ப்பசை கொண்ட புகைபிடிக்கும் முறை வாத காசத்திற்கு நலம் தரும். (4) வாதத்தைத் தணிக்க நெய்யைச் சிறிது சூடாக்கி இளஞ்சூடுள்ள பாலில் கலந்து அல்லது இளஞ்சூடுள்ள நீரைத் துணைமருந்தாகக் கொண்டு உட்கொள்ளச் செய்க. இவை அல்லாது புலால் சாற்றினால் செய்த யவாகூ அல்லது பால், இலேகியம், பல வகை நெய் மருந்து ஆகியவற்றைப் பயன்படுத்த வேண்டும். 28

## 23. கபச்சிற்றத்தால் தோன்றும் காசத்திற்குச் சிகிச்சை

கபத்தால் தோன்றிய காசநோயில் முதன் முதலாக வாந்தி எடுக்கச் செய்து கபத்தை வெளியேற்ற வேண்டும். பிறகு ஜாதிக்காய், கள்ளிப்பால் முதலான கபத்தை தணிக்கும் வெப்பம் தரும்

விரேசன மருந்துகளைக் கொண்டு பேதியாகச் செய்யவேண்டும். மற்றும் நாயுருவி திப்பிலி, காயபலம் முதலானவற்றின் மருந்துத் தூளை நசியமாக (மூக்கிலிடு மருந்தாக) சிரோவிரேசனமாகப் பயன்படுத்த வேண்டும். பிறகு கபத்தைத்தணிக்கும் புகைபிடிக்கும் முறை, கார்ப்பு கசப்புச் சுவைகளுள்ள கஷாயப் பொருள்களின் சுரசத்தைக் கொண்டு கபளகிரகம் (வாயில் மருந்துப்பொருளை சிறிது நேரம் வைத்துக் கொண்டு பிறகு உமிழ்தல்) எனும் முறையைப் பயன்படுத்த வேண்டும். கார்ப்புச் சுவைகொண்ட மருந்துப்பொருட்களாலான வெப்பமுள்ள லேகியங்கள், கபத்தைத் தணிக்கவல்ல இலேசான வறண்ட தன்மை கொண்ட உணவு அளவோடு உட்கொள்ளுதல் போன்றவற்றைக் கபத்தாலான காசநோயில் பயன் படுத்துவது நன்மை தரும். 29

## 24. *கபகாசத்திற்குக் கடுத்ரிககிருதம்

சுக்கு, மிளகு, திப்பிலி எனும் இம்மூன்றையும் சம அளவில் கொண்டு தூளாக்கித் துணியால் சலித்துக் கொள்க. இதில் ஒன்று முதல் மூன்று உளுந்து எடை வரை நாள்தோறும் தேனுடன் உட்கொண்டு வந்தால் கபகாசத்திற்கு மிக்க நன்மை விளையும். மற்றும் வாயுவிளங்க சுரசம் அல்லது கஷாயம் அல்லது விழுதாகக் கொண்டு செய்த நெய்மருந்து, நொச்சி இலைச்சுரசத்துடன் செய்த நெய் மருந்து என்பன கபகாசத்தைத் தணிக்கும். 30

## 25. காசநோய்களுக்குப் *பாடாதிகிருதம்

வட்டத்திருப்பி, பிடாலவணம், சுக்கு, மிளகு, திப்பிலி, வாயுவிளங்கம், இந்துப்பு, நெருஞ்சி சிற்றரத்தை, கொடிவேலி, சிற்றாமுட்டி, கர்க்கடகசிருங்கி, வசம்பு கோரைக்கிழங்கு, தேவதாரு, காஞ்சொரி, சிறுதேக்கு, கடுக்காய், பூலாங்கிழங்கு எனும் இவற்றைச் சம அளவாக மொத்தம் நான்கு பலம் அளவு கொண்டு தூளாக்கி நீருடன் நன்கு அரைத்து விழுதாக்குக. அத்துடன் நான்கு மடங்கு (பதினாறு பலம் அளவு நெய்) நெய்யின் அளவிற்கு இருமடங்கு கண்டங்கத்திரி சுரசம் என்ற அளவில் கலந்து காய்ச்சி நெய் மருந்து செய்க. அதில் ஆறு உளுந்து எடைமுதல் ஒரு தோலா அளவு வரை நாள்தோறும் உட்கொண்டு வந்தால் சுவாசம்,

---

*கடுத்ரிகம் - கார்ப்புச்சுவை கொண்டவை மூன்று. சுக்கு, மிளகு, திப்பிலி. *பாடா - வட்டத்திருப்பி

# ஸ்வரபேதபிரதிஷேதம்

## எனும்

## ஐம்பத்து மூன்றாம் அத்தியாயம்

இனி தன்வந்திரி பகவான் ஸுசுருதர் முதலான சீடர்களுக்கு உபதேசம் செய்தபடி குரல் மாறுபாடு என்பதற்குரிய சிகிச்சை முறைகளை விளக்குவோம். *1, 2*

### 1. குரல் மாறுபடுவதற்குக் காரணமும், வகையும்

மிகவும் உரத்த குரலில் பேசுதல், நச்சுப் பொருள்களை உட்கொள்ளுதல், மிக்க உரத்த குரலில் படித்தல் (வேதம் முதலிய சாஸ்திரங்களைக் சந்திப்படுத்திக் கற்றல்) அடிபடுவது போன்ற வற்றால் சீற்றமுள்ள வாதம் முதலான தோஷங்கள் குரலை எழுப்பும் சுரோதங்கள் (குழாய் வழிகளில்) நிலையாக நின்று குரலைக் கெடுத்து விடும். இந்நோய் ஆறு வகைப்படும். *3*

### 2. வாதப்பித்தக் கபங்களால் தோன்றும் குரல் மாறுபாடு களின் இலக்கணம்

வாத சீற்றத்தால் நோயாளியின் கண், வாய், சிறுநீர், மலம் ஆகியவை கருநிறம் கொள்ளும். இத்தகைய நோயாளி உடைபட்ட குரலில் மெல்ல பேசுவார். குரல் தழுதழுத்துக் காணப்படும். பித்தத்தால் முகம், கண், மலம், சிறுநீர் முதலியன மஞ்சள் நிறம் கொள்ளும். எரிச்சலுடன் கூடிய தொண்டையால் நோயாளி பேசுவார். *4*

---

ஸ்வரபேதம் – இயற்கையான குரல் மாறுபடுதல். அதற்கு உரிய சிகிச்சை முறைகளை விளக்குவதால் இந்த அத்தியாயம் ஸ்வரபிரதிஷேதம் எனும் பெயர் பெற்றது.

அளவு கொண்டு தூள் செய்து கொள்க. இதில் மூன்று உளுந்து எடை முதல் ஆறு உளுந்து எடை வரை தேனுடன் உட்கொண்டால் பித்தகாசம், க்ஷயத்தால் தோன்றும் காசம், அடிபடுவதால் தோன்றும் காசம் எனும்நோய்கள் தணியும். அல்லது நெய் ஒரு பிரஸ்தம். நான்கு பிரஸ்தம் கருப்பஞ்சாறு கலந்து நெய்ப்பகுதி மட்டும் மிகுந்திருக்கக் காய்ச்சுக. இதில் ஆறு உளுந்து எடை முதல் ஒரு தோலா அளவு வரை இளஞ்சூடுள்ள பாலுடனோ வெந்நீருடனோ கலந்து உட்கொள்ளச் செய்தால் மூன்று வகை காச நோய்கள் தணியும். 35

## 29. காசத்திற்கு *ஆமலிக சூர்ணம்

நெல்லி முள்ளித்தூள், ஆறு உளுந்து எடை கொண்டு ஒரு தோலா நெய்யில் பக்குவம் செய்து பாலைத் தூளை மருந்தாகக் கொண்டு உட்கொள்ளச் செய்தால் காசநோயில் மிக்க நன்மை விளையும். 36

## 30. காசத்திற்குக் கோதுமைத்தூள்

கோதுமைத்தூள், யவதானியத்தூள், காகோலி முதலான கூட்டுப்பொருள்கள் தூள் எனும் இவற்றைச் சம அளவில் மொத்தம் ஒரு தோலா அளவு கொண்டு ஐந்து முதல் பத்து தோலா அளவு வரை தகுந்த அளவு பால், ஒரு தோலா தேன், ஒன்றரை தோலா நெய் எனக் கலந்து உட்கொள்ளச் செய்தால் மூன்று வகையான காச நோய்கள் தணியும். 37

## 31. சுவாசத்திற்கு **குடோதகம்

நீரில் வெல்லம் கரைத்து அல்லது சீதகஷாயம் செய்து முறைப்படி கஷாயம் செய்து துணியால் வடிகட்டிக் குளிர்ந்த பின் ஆறுஉளுந்து எடை மிளகுத்தூள், மூன்று உளுந்து எடை தேன் கலந்து _கொள்ளச் செய்தால் காச நோய் தணியும். 38

## 32. காசத்திற்கும், சுவாசத்திற்கும் கல்யாண குடம்

நெல்லிக்கனி சுரசம் 3 பிரஸ்தத்தில் 50 பலம் வெல்லம் கலந்து இலேகியம் போலப் பக்குவம் செய்க. பக்குவம் பெறும் நிலையில் திப்பிலி மூலம் தூள் ஒரு பலம், சீரகத்தூள் ஒரு பலம், செவியத்தூள்

*ஆமலக - நெல்லிக்காய்

**குடோதகம் - வெல்லம் கலந்த நீர்

ஒரு பலம், சுக்குத் தூள் ஒரு பலம், மிளகுத்தூள், ஒரு பலம், ஓமத்தூள் ஒரு பலம், வாயுவிளங்கத்தூள், ஒரு பலம், யானைத் திப்பிலித் தூள் ஒருபலம், இந்துப்புத் தூள் ஒரு பலம், கடுக்காய் தூள் ஒரு பலம், தான்றிக்காய்த் தூள் ஒரு பலம், நெல்லிக்காய்த்தூள் ஒருபலம், குராசானி ஓமத்தூள் ஒருபலம், வட்டத்திருப்பித் தூள் ஒரு பலம், கொடி வேலித் தூள் ஒருபலம், கொத்துமல்லி விதைத்தூள் ஒரு பலம், மஞ்சள் தூள் 8 பலம் எனும் அளவில் கொண்டு நன்கு கலந்து எள் எண்ணெய் எட்டு பலம் சேர்த்து அடர்த்தியாகப் பக்குவம் செய்க. இந்த லேகியம் குளிர்ந்த பிறகு இலவங்கத் தூள், பட்டைத்தூள் ஒரு பலம், சிறு ஏலக்காய்த்தூள் ஒரு பலம், இலவங்கப்பத்திரித்தூள் ஒரு பலம் எனக் கலந்து நன்றாகக் கலக்குக. இது கல்யாண குடம் எனப்படும் மருந்தாகும். ஒரு இலந்தைக் கொட்டை அளவு இதை உட்கொண்டு வந்தால் கிரிகணி நோய் வகைகள், சுவாசம், காசம் குரல் மாறுபாடு, வீக்கம் முதலியன தணியும். குறைந்து போன சடாரக்கினியின் வலிமையும், ஆண்மையும் மிகும். பெண்களின் மலட்டுத் தன்மையைப் போக்கும். 39–42

### 33. அகஸ்த்யா வலேகம்

இரு வகை பஞ்சமூலப் பொருள்கள், பெரும் பஞ்சமூலப் பொருள்கள், யானைத் திப்பிலி, தொட்டால் சிணுங்கி விதை, சிறுதேக்கு, பூலாங்கிழங்கு, புஷ்காரமூலம், சுக்கு, வட்டத்திருப்பி, சீந்தில்கொடி திப்பிலி மூலம், நாயுருவி, சிற்றாமுட்டி வேர், சிறு காஞ்சொரி எனும் இந்தப் பொருள்கள் ஒவ்வொன்றும் இரண்டு பலம் வீதம் யவதானியம் நான்கு பிரஸ்தம், பெருங்கடுக்காய் 100 (எண்ணிக்கையில்) பதினாறு பிரஸ்தம் நீர் என அனைத்தையும் சேர்த்துக் கஷாயம் காய்ச்சுக. நான்கில் ஒரு பங்கு மிகுந்துள்ள போது இறக்கி வடிகட்டி அதில் 100 பலம் தூய்மை படுத்திய பழைய வெல்லம் கலந்து அதில் முன்பு பக்குவமான 100 கடுக்காய்கள், நெய் எண்ணெய் எனும் இவை இரண்டும் தனித்தனியாக நான்கு பலங்கள் வீதம் சேர்த்து அனைத்தையும் கலந்து பக்குவம் செய்க. பக்குவம் பெறும்போது துணியால் சலித்த திப்பிலித்தூள் நான்கு பலம், தேன், எட்டு பலம் கலந்து சில நிமிடங்கள் நேரம் பக்குவம் செய்து இறக்குக. இது அகஸ்த்யாவலேகம் எனப்படும். இந்த ரசாயன மருந்தில் நாள்தோறும் ஒரு கர்ஷம் அளவு உட்கொள்ளச்

செய்து முன் பக்குவம் செய்த கடுக்காய் இரண்டு உட்கொண்டு வந்தால் ராஜயக்ஷ்மா கிரகணி, சோபை, சடாரக்னிக்குறைவு, குரல் மாறுபாடு, இருமல், பாண்டு நோய், சுவாசம் தலை நோய்கள், இதய நோய்கள் விக்கல் விஷமக்காய்ச்சல், முதலியன தீரும். அறிவாற்றல், உடல்வலிமை, ஊக்கம் என்பன மிகும். அகஸ்திய முனிவர் செய்த மருந்து ஆகையால் இதற்கு அகஸ்திய லேகியம் என்று பெயர் ஆயிற்று.

43–47

## 34. குளீராதி கிருதம்

நண்டு பூச்சியுடன் கூடிய முத்துச்சிப்பி, சிட்டுக்குருவி, மானின் புலால் லாவசப்புள், காகோலி முதலான கூட்டுப் பொருள்களின் தூள் நான்கு பிரஸ்தம் என அனைத்தையும் பதினாறு பிரஸ்தம் நீருடன் பக்குவம் செய்து நான்கு பிரஸ்தம் மிகுந்திருக்கக் காய்ச்சி வடிகட்டுக. அதில் ஒரு பிரஸ்தம் நெய் விட்டு நெய் மருந்து காய்ச்சு, இந்நெய் மருந்தில் நாள்தோறும் ஆறு உளுந்து எடை முதல் ஒரு தோலா அளவு வரை உட்கொண்டு வந்தால் க்ஷயத்தால் தோன்றிய காசம், பித்தகாசம், க்ஷயநோயால் தோன்றிய காசம் எனும் நோய்கள் தணியும். 48

## 35. சதாவரி கிருதம்

சதாவரி, நாகபலை என்பவைவற்றை இரண்டிரண்டு பிரஸ்தம் வீதம் கொண்டு பதினாறு பிரஸ்தம் நீருடன் காய்ச்சி நான்கு பிரஸ்தம் அளவு மிகுந்திருக்கும்போது வடிகட்டிக் கொள்க. அதில் ஒரு பிரஸ்தம் நெய்யும் சதாவரி, நாகபலை இவ்விரண்டின் விழுது நான்கு பலம் சேர்த்து முறைப்படி நெய் மருந்து செய்க. இது சதாவரி கிருதம் எனப்படும். இது காச நோயைத் தணிக்க வல்ல மருந்தாகும்.

49

**சிறுங்கட்டூர், நடாதூர் எஸ்.என். ஸ்ரீராமதேசிகன் எழுதிய ஸம்ஸ்கிருத ஸம்ஹிதை உத்தரஸ்தானம் தமிழாக்க நூலின் காசபிரதிஷேதம் எனும் ஐம்பத்திரண்டாம் அத்தியாயம் முற்றும்**

## 6. குரல் மாறுபாட்டிற்குப் பொது சிகிச்சை

குரல் மாறுபட்டிருக்கும் நோயாளிக்கு முதன் முதலில் எண்ணெய் பசை தோற்றுவித்துப் பிறகு முறைப்படி (தோஷங் களுக்கு ஏற்றவாறு) வாந்தி எடுக்கச் செய்தல், பேதியாகச் செய்தல், வஸ்திமுறை, முதலியவற்றால் சீற்றம் பெற்ற தோஷத்தை வெளியேற்றிய பிறகு நசியமுறை, அவபீடனமுறை மருந்துப் பொருளால் பல்துலக்குதல் (வாயைத் தூய்மைப்படுத்துதல்) புகைப்பிடித்தல் அலகலகம் (மேல்பூச்சு) பல வகையான கபளகிரஹம் (மருந்துப் பொருளை வாயில் கொண்டிருத்தல்) போன்ற சிகிச்சை முறைகளைக் கையாள வேண்டும். 9

## 7. குரல் மாறுபாட்டுக்குச் சிறப்பு சிகிச்சை

சுவாசகாச நோய்களுக்கு சிகிச்சை முறைகளைக் கூறும் அத்தியாயங் களில் நோயின் துவக்கத்தில் கூறப்பட்ட சிகிச்சை முறைகளை முழுமை யாக இந்நோயிலும் மேற்கொள்ள மருத்துவர் முயல வேண்டும். சிறப்பாகச் செய்யத் தக்க முறைகள் இனிமேல் விளக்கப்படுகின்றன. அவற்றை நிறைவான மருத்துவர் அறிந்து கொள்ளத்தகும். 10

## 8. வாதத்தால் தோன்றிய குரல் மாறுபாட்டிற்குச் சிகிச்சை

வாதத்தால் தோன்றிய குரல் மாறுபாட்டில் உணவு உட்கொண்ட பிறகு புகை பிடிக்கும் முறைகளைப் பயன்படுத்தச் செய்க. பொன்னாவாரை, கண்டங்கத்திரி, அல்லது வேர், இலை, மலர், பட்டை, காய் எனும் ஐந்து உறுப்புகள், கரிசலாங்கண்ணி, ஆகியவற்றின் சுரசம் அல்லது கஷாயம் அல்லது நான்கு பிரஸ்தம் அளவுகொண்டு ஒரு பிரஸ்தம் நெய் கலந்து நெய்ப்பகுதி மட்டும் மிகுந்திருக்கக் காய்ச்சுக. இந்தநெய் மருந்தில் ஆறு உளுந்து எடை முதல் ஒரு தோலா அளவு வரை நாள் தோறும் உட்கொள்ளச் செய்வதால் வாதத்தால் தோன்றிய குரல் மாறுபாடு தணியும். அவ்வாறே மருத மரப்பட்டை கஷாயம் நான்கு பங்கும், நெய் ஒரு பங்கும் சேர்த்துச் செய்த மருந்தைப் பயன்படுத்தினால் வாதத்தாலான குரல் மாறுபாடு தணியும். 11

## 9. வேறு முறைகள்

(1) யவக்ஷாரம் இரண்டு பலம், ஓமம் இரண்டு பலம் எனும் அளவில் கொண்டு நீர்விட்டு அரைத்து விழுதாக்குக. ஆட்டின் நெய்

ஒரு பிரஸ்தம், நீர் நான்கு பலம் சேர்த்து முன் செய்த விழுதையும் சேர்த்து முறைப்படி நெய் மருந்து செய்க. (2) கொடிவேலி வேர்ப்பட்டை அல்லது வேர், நெல்லிக்காய் இவ்விரண்டின் விழுது நான்கு பலம், நெய் ஒரு பிரஸ்தம், நீர் நான்கு பிரஸ்தம் என்ற அளவில் சேர்த்து முறையாக நெய் மருந்து செய்க. (3) தேவதாரு, ஓமம் ஆகியவற்றின் விழுது நான்கு பலம், நெய் ஒரு பிரஸ்தம், நீர் நான்கு பிரஸ்தம் என்றஅளவில் கலந்து முறையாக நெய் மருந்து செய்க. இம்மூன்று வகை மருந்துகளில் ஒன்றை ஆறு உளுந்து எடை முதல் ஒரு தோலா எடை வரை இரண்டு மடங்கு தேன் கலந்து நாள்தோறும் உட்கொள்ளச் செய்தால் வாதத்தால் தோன்றிய குரல் மாறுபாடு தணியும். 12

## 10. குரல் மாறுபாட்டுக்கு வெல்லச் சோறு

வெல்லத்தை நீரில் கரைத்து அதைக்கொண்டு அரிசியைச் சோறாக்கி நெய் கலந்து இளஞ்சூடுள்ள வெந்நீரைத்துணை மருந்தாகக் கொண்டு உட்கொள்ளச் செய்தால் வாதத்தாலான குரல் மாறுபாடு தணியும். 13

## 11.பித்தத்தால் தோன்றிய குரல் மாறுபாட்டிற்குச் சிகிச்சை

பித்தத்தின் சீற்றத்தாலான குரல் மாறுபாட்டிற்குத் தாமதம் செய்யாமல் பாலைத் துணை மருந்தாகக் கொண்டு, நெய்யைப் பருகச் செய்க. பசி எடுத்தபோது அதிமதுரத்தால் செய்த பாலில் சோறு பக்குவம் செய்து அதில் நெய் கலந்து உணவாக உட்கொள்ளச் செய்க. அல்லது அதிமதுரத்தூள் மூன்று உளுந்து எடை பால் சோற்றில் (பாயசத்தில்) கலந்து உணவாக உட்கொள்ளச் செய்க. 14

## 12. வேறு முறை –

காகோலி முதலான இனிப்புச் சுவையுள்ள கூட்டுப்பொருள்களின் தூள் மூன்று உளுந்து எடை முதல் ஆறு உளுந்து எடை வரை கொண்டு, தேன் ஆறு உளுந்து எடை நெய் ஒரு உளுந்து எடை கலந்து உட்கொள்ளச் செய்க. அல்லது ஆறு உளுந்து எடை சதாவரித்தூளுடன் தேனும் நெய்யும் கலந்து உட்கொள்ளச் செய்க. அல்லது சதாவரித்தூளை முன்கூறப்பட்ட காகோலி முதலிய கூட்டுப்பொருள்களின் தூளுடன் கலந்து தேனும் நெய்யும் கலந்து உட்கொள்ளச் செய்க. அல்லது சிற்றாமுட்டி வேர்த்தூள், காகோலி

முதலியவற்றின் தூள் கலந்து அல்லது தனியாகச் சிற்றாமுட்டித் தூளை மட்டுமோ தேனும் நெய்யும் கலந்து உட்கொள்ளச் செய்க. 15

## 13. கபத்தாலான குரல் மாறுபாட்டிற்குச் சிகிச்சை

கபத்தாலான குரல் மாறுபாட்டிற்குக் கார்ப்புச்சுவைகொண்ட சுக்கு, மிளகு, திப்பிலி, போன்வற்றின் தூள் மூன்று முதல் ஆறு உளுந்து எடை பசுவின் சிறுநீருடன் உட்கொள்ளச் செய்க. அல்லது கார்ப்புச் சுவை கொண்ட மருந்துப் பொருள்களின் தூளை தேன், எண்ணெய் ஆகியவற்றுடன் உட்கொள்ளச் செய்க. அல்லது உணவு உட்கொண்ட பிறகு கார்ப்புச் சுவை கொண்ட பொருள்களைப் பயன்படுத்தச் செய்க. 16

## 14. கொழுப்பு மிகுவதால் தோன்றுவது முதலான குரல்மாறுபாடுகளுக்குச் சிகிச்சை

கொழுப்பு மிகுவதால் தோன்றிய குரல் மாறுபாட்டிற்குக் கபத்தால் தோன்றும் குரல் மாறுபாட்டிற்குக் கூறப்பட்ட முறைகளைப் பயன்படுத்துக. மூன்று தோஷங்களாலும் தோன்றும் குரல் மாறுபாடும், க்ஷயத்தால் தேன்றிய நோயும் சிகிச்சைக்கு உட்படாததாகையால் சிகிச்சை பயனற்றதென்பதை உணர்ந்து மருத்துவர் தன் கடமையைத் தக்கபடி மேற்கொள்ளவேண்டும். 17

## 15. உரக்கப் பேசுவதாலான குரல் மாறுபாட்டிற்கு சிகிச்சை

பசுவின் பால், ஆட்டின் பால், எருமைப்பால், ஆகிய ஏதேனும் ஒன்றை காகோலி முதலான கூட்டுப்பொருள்களின் விழுதுடன் காய்ச்சி, சர்க்கரையும் தேனும் கலந்து பருகச் செய்தால் உரத்த குரலில் பேசுவதால் கேடுற்ற குரல் சீராகும். 18

**சிறுங்கட்டூர், நடாதூர் எஸ்.என். ஸ்ரீராமதேசிகன் எழுதிய ஸுச்ருத ஸம்ஹிதை உத்தரஸ்தானம் தமிழாக்க நூலின் ஸ்வரபிரதிஷேதம் எனும் ஐம்பத்து மூன்றாம் அத்தியாயம் முற்றும்**

# கிருமிரோகபிரதிஷேதம்

# எனும்

## ஐம்பத்து நான்காம் அத்தியாயம்

இனி தன்வந்திரி பகவான் ஸுசுருதர் முதலான சீடர்களுக்கு உபதேசம் செய்த முறையில் கிருமிரோகம் எனும் புழுக்களால் தோன்றும் நோய்களுக்குரிய சிகிச்சை முறைகளை விளக்குவோம் 1,2

### 1. கிருமிகள் தோன்றக் காரணம்

உணவு செரியாமை, உணவு செரியாத நிலையில் மேலும் உணவு உட்கொள்ளுதல், அளவுக்கு மீறி உண்ணல், உடலுக்கு ஒவ்வாத பொருள்களை உட்கொள்ளுதல், ஒன்றுக்கொன்று மாறான தன்மை கொண்ட உணவுப் பொருள்களைச் சேர்த்து உண்ணல், உடற்பயிற்சி இன்மை, பகலில் உறங்குதல், குருத்தன்மை கொண்ட (எளிதில் செரிமானமாகாத) உணவுப் பொருள்களை உட்கொள்ளுதல், எண்ணெய்ப்பசை மிக்க உணவுப்பொருள்களை மிகுதியாக உண்ணுதல், மிகவும் குளிர்ந்த உணவுப் பொருள்களை உட்கொள்ளுதல், மிக்க குளிர்ந்த பகுதியில் வசித்தல், உளுத்தம் பருப்பு மற்றும் அதனாலான தின்பண்டங்களை உண்ணுதல், மாவுப் பொருட்களை அதிக அளவில் உட்கொள்ளுதல், காட்டுப்பயறு, கடலைப்பருப்பு முதலானவற்றாலான உணவுப் பொருள்களை உண்ணுதல், தாமரைத்தண்டு, தாமரைக்கிழங்கு, கொட்டிக்கிழங்கு ஆகியவற்றை உண்ணுதல், கீரை, மது, தயிர், பால், வெல்லம், கரும்பு ஆகியவற்றை அதிக அளவில் உட்கொள்ளுதல், எள்ளுப்பொடி, (விழுது) நீர்ப்பாங்கான இடத்தில் வாழும் விலங்கு, பறவைகளின் புலால், பிண்ணாக்கு அவல் ஆகியவற்றை

---

கிருமி - புழு உடலில் தோஷங்களால் தோன்றக்கூடிய புழுநோய்களுக்கு உரிய சிகிச்சை முறைகளை விளக்குவதால் இந்த அத்தியாயம் கிருமிபிரதிஷேதம் எனும் பெயர் பெற்றது.

எப்பொழுதும் பயன்படுத்துதல், வெல்லம் கலந்த புளிப்புச் சுவை மிக்க பொருள்களை உண்ணுதல் ஆகியவற்றால் கபமும், பித்தமும் மிகவும் சீற்றமடைந்து உடலில் பல உறுப்புகளில் (இதயம், குடல் போன்றவற்றில்) தங்கி வளரக்கூடிய புல வகைக் கிருமி (புழுக்)களைத் தோற்றுவிக்கும். 3,5

## 2. கிருமிகள் தோன்றும் பகுதிகள்

கபத்தால் தோன்றக்கூடிய கிருமிகள் ஆமாசயத்திலும் (உணவுப் பையிலும்) மலத்தால் தோன்றக்கூடிய கிருமிகள் பக்குசயத்திலும், இரத்தத்தால் தோன்றக்கூடிய கிருமிகள் தமணிகளிலும் அதிக அளவில் உற்பத்தியாகின்றன.

## 3. கிருமிகளின் வகைகள்

ஆயுர்வேத சாஸ்திரத்தில் இருபது வகையான கிருமிகள் கூறப்படுகின்றன. பிறப்பிடத்தைக் கொண்டு அவற்றை மூன்று வகைகளாகக் கொள்ளலாம். அவையாவன : மலத்தில் தோன்றுபவை, கபத்தில் தோன்றுபவை, மற்றும் இரத்தத்தில் தோன்றுபவை எனவாகும். 7

அஜவா, விஜவா, கிப்யம், சிப்பியம், கண்டூபதம், சுரு, திவிமுகம் என ஏழும் மலத்தில் தோன்றும் கிருமிகளாகும். 8

வெண்ணிறமும் சிறுதோற்றமும் கொண்டு இவை தாம் தோன்றிய பகுதியில் கத்திரித்தலைப் போன்ற வலியைத் தோற்றுவிக்கும். இவை ஆசனவாய்ப் பகுதியை நோக்கிச் செல்லும். இவற்றில் சில தட்டையான வால் கொண்டிருக்கும். மலத்தில் தோன்றும் கிருமி வலி, சடாரக்னிக் குறைவு, உடல் வெளிறிப்போதல், மலத்தடை, வலிமை குறைதல், உமிழ் நீர்ப்பெருக்கம், சுவையின்மை, இதயநோய் அதிஸாரம் எனும் நோய்களைத் தோற்றுவிக்கும். 9,10

## 4. கண்டூபதத்தின் இலக்கணம்

கண்டூபதம் என்பது சிவந்த நிறம் கொண்டு நீளமாக மண்புழுவைப் போன்ற தோற்றத்தில் இருக்கும். ஆசனவாய்ப் பகுதியில் அரிப்பு, வலி, ஆடோபம், அதிஸாரம் சடராக்னிக் குறைவு என்பனவற்றைத் தோற்றுவிக்கும். 11

### 5. கபத்தில் தோன்றும் கிருமிகள்

தர்ப்பை மலரைப் போன்ற தோற்றம் கொண்டவை மஹாபுஷ்பம், பிரலூனம் சிபிடம், பிபீலிகா, தாருணம் எனக் கபத்தில் தோன்றும் கிருமிகள் ஆறு வகைப்படும். 12

### 6. கபத்தில் தோன்றும் கிருமிகளின் தோற்றம்

கபத்தில் தோன்றும் கிருமிகளின் உடல் உரோமங்களால் நிரம்பியிருக்கும். தலை மேலும் உரோமம் இருக்கும். வால் கொண்டிருக்கும். உடலில் கருநிற வட்டங்களைக் கொண்டிருக்கும். இவை தானியங்களின் முளைகளைப் போன்ற தோற்றமும், வெண்ணிறமும் கொண்டிருக்கும். அதாவது நூலைப் போலக் காணப்படும். 13

### 7. கபக்கிருமிகளின் செயல்

கபக்கிருமிகள் உடலில் உள்ள கொழுப்பை உண்டு வாழும், கண்களை நக்கி விடும். அண்ணம், காது போன்ற பகுதிகளைத் தின்று விடும். இவற்றால் தலைவலி, இதய நோய், வாந்தி, பிரதிசியாயம் எனும்நோய்கள் தோன்றும். 14

### 8. இரத்தத்தால் தோன்றும் கிருமிகள்

தலைமுடியை உண்ணும் கேசாதம், உரோமங்களை உண்ணும் ரோமாதம், நகத்தை தின்று விடும் நகாதம், பற்களைத் தின்று விடும் தந்தாதம், மற்றும் கித்கசம், குஷ்டஜம் பரிஸர்ப்பம் என இரத்தத்தால் தோன்றும் கிருமிகள் ஏழு வகைப்படும். 15

### 9. இரத்தக் கிருமிகளின் தோற்றமும் செயலும்

இரத்தத்தில் தோன்றும் இந்தக் கிருமிகளில் சில சிவப்பு நிறமும், சில கருநிறமும், தொடுகைக்கு எண்ணெய்ப்பசை கொண்டு மென்மையாகவும், தட்டையாகவும் காணப்படும். இந்தக் கிருமிகளால் இரத்தத்தைச் சார்ந்த குஷ்டம், விஸர்ப்பம், பீடகை எனும் கட்டிகள் முதலியவை தோன்றும். 16

## 10. கிருமிகள் தோன்றக் காரணம்

உளுந்து, உளுந்தாலான தின்பண்டங்கள், மாவாலான தின்பண்டங்கள், பருப்புகள், கீரை வகைகள், ஆகியவற்றை உண்பதால் மலத்தைச் சார்ந்த கிருமிகள் தோன்றும். புலால் உளுந்து, வெல்லம் தயிர் எண்ணெய் ஆகியவற்றை அதிக அளவில் உட்கொள்வதால் கபத்தால் தோன்றும் கிருமிகள் உண்டாகின்றன. ஒன்றுக்கொன்று மாறான தன்மை கொண்ட பொருள்களைச் சேர்த்து உண்ணுதல். அசீரணம், அசீரணம் உள்ளபோது மேலும் உண்ணுதல், கீரை வகைகளை அதிக அளவில் உண்ணுதல் போன்ற வற்றால் இரத்தத்தால் தோன்றும் கிருமிகள் உண்டாகின்றன. 17,18

## 11. உடலுக்குள் கிருமிகள் தோன்றியதன் இலக்கணம்

காய்ச்சல், வலி, இதயநோய், உறுப்புகளில் தளர்ச்சி, தலை சுற்றல், உணவில் விருப்பமின்மை, அதிஸாரம் எனும் இலக்கணங்கள் காணப்பட்டால் உடலுக்குள் கிருமிகள் தோன்றியுள்ளன என்று உணர்க. 19

## 12. கண்களுக்குப் புலப்படுபவை, புலப்படாதவையுமான கிருமிகள்

முன்கூறப்பட்ட இருபது வகை கிருமிகளில் அஜவா என்பது முதல் தாருணம் என்பது வரை உள்ள கிருமிகள் கண்களுக்குப் புலப்படும். கோசதம் முதலான ஏழுவகை இரத்தத்தில் தோன்றும் கிருமிகள் கண்களுக்குப் புலப்படாதவை. 20

## 13. கிருமிகளுக்குப் பொது சிகிச்சை

மலத்தில் தோன்றுவன, கபத்தில் தோன்றுவனவற்றில் ஏதேனும் ஒன்று தோன்றினால் அவற்றைக் கொண்டு விரும்பும் மருத்துவர் முதலில் சுரசாதிகணக் கூட்டுப்பொருள்களின் விழுது மற்றும் கஷாயத்தால் பக்குவம் செய்த நெய் மருந்தைக் கொண்டு எண்ணெய்ப்பசையை தோற்றுவித்துப் பிறகு மிகவும் தீக்ஷ்ணமான பேதியாகச் செய்யும் மருந்துகளால் நன்கு பேதியாகச் செய்ய வேண்டும். பிறகு இனி கூறப்போகும் யவகோலாதிகஷாயத்தால் ஆஸ்தாபன வஸ்தி செய்விக்க வேண்டும். 21

## 14. கிருமி நோய்க்கு ஆஸ்தாபன வஸ்தி

பேதியாகச் செய்யும் முறையைப் பயன்படுத்திய பிறகு யவதானியம், இலந்தைப்பழம் கொள்ளின் கஷாயம், சுரசாதி கணத்தைச் சேர்ந்த கூட்டுப்பொருள்களைச் சம அளவு கொண்டு கஷாயம் காய்ச்சி அதில் சுரசங்களைக் கூட்டுப்பொருளின் விழுதும், வாயுவிளங்கத்தின் விழுதும், விழுதுக்கு நான்கு பங்கு எண்ணெயும் கலந்து முறையாகப் பக்குவம் செய்க. பிறகு இதில் இந்துப்பு கலந்து ஆஸ்தாபன வஸ்தியாகப் பயன்படுத்துக. 22

## 15. ஆஸ்தாபனத்திற்குப் பிறகு அநுவாஸனம்

முன்கூறப்பட்ட ஆஸ்தாபனவஸ்தி மருந்து கொடுத்து அது மீண்டும் வெளிவந்த பிறகு நோயாளியை இளஞ்சூடுள்ள வெந்நீரில் குளிக்கச்செய்க. பிறகு கிருமிகளை அழிக்கக்கூடிய வாயுவிளங்கம் முதலான பொருள்களாலான நீரை( கஷாயத்தைக்) கொண்டு அதில் யவாகூ (கஞ்சி) அல்லது கிருணரா (பொங்கச் ) செய்து அதை உண்ணச் செய்க. அதன் பிறகு மீண்டும் யவதானியம், இலந்தைப் பழம், கொள்ளின் கஷாயம், சுரசாதி கணக்கூட்டுப்பொருள்களின் விழுது, வாயு விளங்க விழுது ஆகியவற்றைக்கொண்டு செய்த எண்ணெயைக் கொண்டு அநுவாஸன வஸ்தியைப் பயன்படுத்த வேண்டும். 23 – 24

## 16. அநுவாஸன வஸ்திக்குப் பிறகு சிகிச்சை முறை

அநுவாஸன வஸ்தியைப் பயன்படுத்திய பிறகு வாகைப் பட்டையின் சுரசம் அல்லது கஷாயம் அல்லது வாகை இலையின் சுரசம், நாயுருவியின் ஐந்து பாகங்களைச் சேர்த்துச் செய்த சுரசம் ஆகியவற்றில் இரண்டு தோலா அளவு கொண்டு அதில் ஒரு தோலா அளவு தேன் கலந்து உட்கொள்ளச் செய்க. அல்லது கோவு (கோஷ்டம்) சுரசத்தில் தேன் கலந்து உட்கொள்ளச் செய்க. பசி எடுத்ததும் விறுவிறுப்புள்ள (தீக்ஷ்ணமான) பொருள்களின் சுரசம் அல்லது கஷாயத்தில் பக்குவம் செய்த உணவை உட்கொள்ளச் செய்க. 25

### 17. கிருமிநோய்க்குப் புரசவிதை சுரசம்

புரசவிதையை அரைத்து அதன் சுரசத்தை அல்லது புரசவிதையின் விழுதை அரிசி கழுவிய நீருடன் உட்கொள்ளச் செய்க. அல்லது கல்யாணமுருங்கை இலைச் சுரசத்தில் தேன் கலந்து உட்கொள்ளச் செய்க. 26

### 18. கிருமிநோய்க்குப் பத்தூர சுரசம்

பத்தூரம் எனும் புல்வகையின் சுரசம் இரண்டு தோலா அல்லது சுரசாதிகணக் கூட்டுப்பொருள்களின் சுரசம் அல்லது கஷாயத்தில் தேன் கலந்து உட்கொள்ளச் செய்க. அல்லது குதிரைச் சாணத்தூள் மூன்று உளுந்து எடை கொண்டு, தேன் விட்டுக் குழைத்து அல்லது வாயுவிளங்கத்தூள் மூன்று உளுந்து தேன் விட்டுக் குழைத்து உட்கொள்ளச் செய்தால் கிருமி நோய் தீரும். 27

### 19. கிருமி நோய்க்கு எலிச்செவி இலை

எலிச்செவி இலையை அரைத்து கோதுமை மாவில் கலந்து பிசைந்து நெய்யில் அடைபோலப் பக்குவம் செய்து உட்கொள்ளச் செய்க. அதன் பிறகு தான்யாம்லம் எனும் காடியை உட்கொள்ளச் செய்க. 28

### 20. சுரசாதி தைலம்

சுரசாதிகணக்கூட்டுப் பொருள்களின் விழுதும், கஷாயமும் எண்ணெயும் சேர்த்து முறைப்படி எண்ணெய் மருந்து பக்குவம் செய்க. இது சுரசாதி தைலமாகும். இது கிருமிகளைப் போக்க வல்லது. அல்லது வாயுவிளங்கத்தூளில் மாவைக் கலந்து பலவகை யாகத் தின்பண்டம் செய்து பயன்படுத்துக. அல்லது வாயுவிளங்கம் கஷாயத்தில் எள்ளை 24 மணி நேரம் ஊற வைத்து நிழலில் உலர்த்தி அதிலிருந்து எண்ணெய் எடுத்து உட்கொள்ள கிருமி நோய் தணியும். 29

### 21. கிருமி நோய்க்குச் சூரணங்கள்

சேவாவிதம் (உடல் முழுவதும் முட்கள் கொண்டு பூனையைப் போன்ற தோற்றம் கொண்டது) எனும் விலங்கினுடைய மலத்தின்

தூளை வாயுவிளங்கக் கஷாயம் மற்றும் திரிபலா கஷாயத்தில் ஏழு முறை பாவனை செய்து அரைத்து உலர்த்துக. மூன்று உளுந்து எடை மருந்துத்தூளைத் தேனுடன் குழைத்து உட்கொண்டு நெல்லிக் கனிச்சாறு அல்லது தான்றிக்காய்க் கஷாயம், அல்லது கடுக்காய்க் கஷாயத்தைப் பருகச் செய்க. இவ்வாறே லோகபற்பம் முதலிய வற்றையும் பயன்படுத்தலாம். *30,31*

## *22. கிருமி நோய்க்குப் புங்கன் சுரசம்*

மணிபுங்கன் இலைச்சுரசத்தை வடிகட்டித் தேன் கலந்து உட்கொள்ளச் செய்க. திப்பிலி வேர் கஷாயத்தை ஆட்டின் சிறுநீருடன் பருகச் செய்தால் கிருமிகள் அழியும். அவற்றால் தோன்றும் நோய்கள் நீங்கும். *32*

## *23. கிருமி நோய்க்கு வங்கம்*

வங்க (பற்ப) தயிர் மீதுள்ள தெளிந்த நீருடன் கலந்து ஏழு நாள் இரவுகளில் உட்கொள்ளச் செய்தால், கிருமிகள் அழியும். இவ்வாறே மருத்துவர் முன்கூறப்பட்ட முறைகளால் மலத்தில் தோன்றும் மற்றும் கபத்தில் தோன்றும் கிருமிகளை அழிக்கவேண்டும். *33*

## *24. தலை முதலியவற்றில் தோன்றும் கிருமிகளுக்குச் சிகிச்சை*

தலை, இதயம், மூக்கு, காது, கண் ஆகிய உறுப்புகளைச் சார்ந்து பலவகை கிருமிகள் தோன்றக் கூடும். அவற்றை அழிக்கச் சிறப்பான நேத்ராஞ்சனம் (கண்மை மருந்து) நசியம் (மூக்கிலிடும் மருந்து) அவபீடனம் முதலிய முறைகளால் நோயாளிக்கு நன்மை விளைவிக்க வேண்டும். *34*

## *25. கிருமிகளைப் போக்கும் பிரதமனம்*

குதிரை சாணத்தை நன்கு உலர்த்தி வாயுவிளங்கக் கஷாயத்தில் ஏழு அல்லது மூன்று முறை பாவனை செய்து உலர்த்தி மூக்கில் (தேய்த்து) பிரதமன நசியமாகப் பயன்படுத்துவதால் தலையில் தோன்றும் கிருமிகளும் அவற்றால் தோன்றும் நோயும் தணியும். *35*

## 26. கிருமிகளைப் போக்க உலோகத்தூள்

[1]ரைச்சாணத்தை உலர்த்தி அத்துடன் உலோக (வங்கம், ஈயம், தாமிரம், வெள்ளி, இரும்பு) முதலியவற்றின் பற்ப வகைகளில் ஒன்றைச் சம அளவு கலந்து வாயு விளங்கக் கஷாயத்தில் ஏழுமுறை பாவனை செய்து உலர்த்திப் பத்திரப்படுத்துக. இந்தத்துகள்களைப் பிரதமன நசிய முறையில் பயன்படுத்தினால் கிருமிகள் அழியும். இவ்வாறே சுரசாதி கணக்கூட்டுப் பொருள் களின் கஷாயம் மற்றும் விழுதில் செய்த எண்ணெயில் வெண்கலக் களிம்பும், நாயுருவிச் சாம்பலும் கலந்து அந்த எண்ணெயை நசியமாகப் பயன்படுத்தினால் தலையில் தோன்றிய கிருமிகள், அவற்றாலான நோய்கள் தீரும். 36

## 27. உரோமங்கள், தந்தங்கள் முதலியவற்றை அழிக்கும் கிருமிகளுக்குச் சிகிச்சை

உரோமங்களைத் தின்றுவிடும் பூச்சிகளையும், அவற்றால் தோன்றும் நோய்களையும் அழிக்க இந்திரலுப்தம் எனும் நோய்க்குக் கூறப்பட்ட சிகிச்சை முறைகளைக் கையாள வேண்டும். அவ்வாறே பற்களை, (தந்தங்கள்) அழித்து விடும் கிருமிகளுக்கும் முகநோய் களுக்கும் கூறப்பட்ட முறைகளைக் கையாள வேண்டும். 37

## 28. இரத்தத்தில் தோன்றும் கிருமிகளுக்குச் சிகிச்சை

[1]ரத்தத்தில் தோன்றும் கிருமிகளையும், அவற்றாலான நோய்களையும் தணிக்கக் குஷ்டநோய்க்குக் கூறப்பட்ட சிகிச்சை முறைகளைப் பயன்படுத்துக. எல்லாவகையான கிருமிகளையும் அவற்றால் தோன்றும் நோய்களையும் தணிக்க சுரசாதிகணக் கூட்டுப் பொருள்களின் கஷாயம் மற்றும் விழுதுகளைக் குளியல், உட்கொள்ளுதல் எனும் முறைகளுக்குப் பயன்படுத்துக. 38

## 29. கிருமி நோய்க்குப் பத்திய முறை

கிருமி மற்றும் கிருமிகளால் தோன்றும் நோய்களுக்குக் கசப்பு, கார்ப்புச் சுவைகளைக் கொண்ட பொருள்களை உட்கொள்ளுதல் நன்மை தரும். சிறப்பாக கொள்ளின் க்ஷாரம், யவக்ஷாரம் ஆகியவற்றைச் சம அளவில் கலந்து ஒரு உளுந்து எடை முதல்

மூன்று உளுந்து எடை வரை கொண்டு ஐந்து தோலா நீருடன் கலந்து உட்கொள்ளச் செய்வது நன்மை பயக்கும். 39

## 30. கிருமி நோய்களில் விலக்கத் தக்கவை

எண்வகைப் பால்கள், புலால்,நெய் தயிர் கீரை வகை, புளிப்புச்சுவை, இனிப்புச்சுவை கொண்டவை, குளிர்ந்த பொருள்கள் ஆகியவற்றை கிருமி நோய் மற்றும் அவற்றாலான நோய்களைப் போக்க விரும்புகிறவர் கைவிட வேண்டும். 40

**சிறுங்கட்டூர், நடாதூர் எஸ்.என். ஸ்ரீராமதேசிகன் எழுதிய ஸம்ஸ்க்ருத ஸம்ஹிதை உத்தரஸ்தானம் தமிழாக்க நூலின் கிருமிபிரதிஷேதம் எனும் ஐம்பத்துநான்காம் அத்தியாயம் முற்றும்.**

# உதாவர்த்த பிரதிஷேதம்

# எனும்

## ஐம்பத்தைந்தாம் அத்தியாயம்

இனி தன்வந்தரி பகவான் ஸுசுருதர் முதலான சீடர்களுக்கு உபதேசம் செய்தபடி உதாவர்த்தம் எனும் நோய்க்கு உரிய சிகிச்சை முறைகளை விளக்குவோம். 1,2

### 1. வேகங்களைத் தடுக்கக்கூடாமை

*நீண்ட நாள், வாழ விரும்புகிறவர் இயற்கையாக வெளியேற இருக்கும் மலம், சிறுநீர் அபானவாயு, ஏப்பம், தும்மல் முதலியவற்றைத் தடுத்து அவற்றின் வேகத்தை நிறுத்தக்கூடாது.* 3

### 2. உதாவர்த்த நோய் தோன்றக் காரணம்

*அபானவாயு, சிறுநீர், மலம், கொட்டாவி, கண்ணீர், தும்மல், ஏப்பம், வாந்தி விந்து ஆகியவை வெளியேற இருக்கும்போது அவற்றைத் தடுத்து நிறுத்துவதால் உதாவர்த்தம் எனும் நோய் தோன்றும்.* 4

*பசி, நாவறட்சி, மூச்சு, தூக்கம் ஆகியவற்றைத் தடுத்து நிறுத்துவதால் உதாவர்த்தம் எனும் நோய் தோன்றும். இனி அதற்கான இலக்கணங்களையும் சிகிச்சை முறைகளையும் விளக்குவோம்.*

*உதாவர்த்தம் - மலம் சிறுநீர் முதலியவற்றைத் தடுத்து நிறுத்துவதால் வாதம் மேல் நோக்கிப் பரவுதல் உதாவர்த்தம் எனப்படும். அந்நோய்க்குரிய சிகிச்சை முறைகளை விளக்குவதால் இந்த அத்தியாயம் உதாவர்த்தப் பிரதிஷேதம் எனும் பெயர் பெற்றது.*

## 3. உதாவர்த்த நோய் வகைகள்

முன்கூறப்பட்ட, அபானவாயு, மலம், சிறுநீர் முதலியவற்றைத் தடுப்பதால் தோன்றுவதான உதாவர்த்த நோய் தனக்குக் காரணமான தடுக்கப்பட்ட வேகத்தை ஒட்டி பதின்மூன்று வகைகளாகும். 6

## 4. அபானவாயுவைத் தடுப்பதால் தோன்றும் துன்பங்கள்

தன் வழியே ( ஆஸனவாய் வழியாக ) வெளிப்பட முயலும் வாயுவைத் தடுப்பதால் வயிற்றுவீக்கம், வலி, இதயத்தின் செயல் தடைப்படுதல் அதாவது இதயம் சூழ்ந்து கொள்ளப்படுதல், தலைவலி, பெருமூச்சு, விக்கல், இருமல், பிரதிசியாயம், தொண்டை அடைப்பு, கபமும், பித்தமும் தம் இடத்தை விட்டு அகலுதல், மலம் குறைந்து போதல் அல்லது வாய்வழியாக வெளிப்படுதல் என்ற துன்பங்கள் தோன்றும். 7

## 5. மலத்தைத் தடுப்பதால் தோன்றும் துன்பங்கள்

மலம் வெளிப்பட இருக்கும்போது அதை அடக்கி வைப்பதால் வயிற்று வீக்கம், வலி, ஆஸனவாய் சிறுநீர்க்குண்டிகை குறிப்பகுதி ஆகியவற்றில் கத்தரிப்பது போன்ற வலி, மலக்கட்டு, அபானவாயு, மேல் நோக்கிப் பரவுதல், வாய்வழியே (வாந்தியாக) மலம் வெளிப்படுதல் போன்ற துன்பங்கள் தோன்றும். 8

## 6. சிறுநீரை வெளிவராமல் தடுப்பதால் தோன்றும் துன்பங்கள்

வெளிப்பட இருக்கும் சிறுநீரைத் தடுப்பதால் பிறகு சிறுநீர் மிக்க கஷ்டத்துடன் சிறிது சிறிதாக வெளிப்படும். குறிப்பகுதி, ஆஸன வாய், தொடை இடுக்குகள், சிறுநீர்ப்பை, விதைப்பகுதி, தொப்புள் பகுதி தலை எனும் பகுதிகளில் சூலத்தால் குத்துவது போன்ற குத்தல் வலி தோன்றும். சிறுநீர்க்குண்டிகை நிரம்பி வீங்கி விடும். 9,10

## 7. கொட்டாவியைத் தடுப்பதால் தோன்றும் துன்பங்கள்

கொட்டாவியைத் தடுப்பதால் தாடைப்பிடிப்பு, தொண்டை அடைப்பு, சூரியவர்த்தம் போன்ற தலை நோய்கள், நடுக்கம், சுப்தி முதலான வாதக் கோளாறுகள், சுவையின்மை, தலைசுற்றல், காது

வாய் மூக்கு கண் போன்ற உறுப்புகளில் கடும் நோய்கள் ஆகியவை தோன்றக்கூடும். 11

## 8. கண்ணீரைத் தடுத்து நிறுவத்துவதால் தோன்றும் துன்பம்

மிக்க மகிழ்ச்சி அல்லது மிக்க வருத்தம் கொள்ளும்போது கண்களிலிருந்து நீர் சுரக்கும். அதைத் தடுத்து நிறுத்துவதால் தலைப்பளு, அபிஷ்யந்தம் முதலான கண் நோய்கள் பீநசம் எனும் மூக்கடைப்பு (நாள்பட்டசளி) ஆகியவை தோன்றக் கூடும். 12

## 9. தும்மலைத் தடுப்பதால் தோன்றும் துன்பம்

தும்மல் வெளிப்பட இருக்கும்போது அதைத் தடுப்பதால் தலை, மூக்கு, கண் ஆகிய உறுப்புகளில் கடுமையான நோய்கள் தோன்றும். தொண்டையும் வாயும் வாதத்தால் நிரம்பி இருப்பது போலத் தோன்றும். அப்பகுதிகளில் ஊசியால் குத்துவது போன்ற வலி உண்டாகும். நோயாளி தெளிவான உச்சரிப்பு இன்றிப் பேசுவார். மூச்சு உட்கொள்ளுதல் தடைப்படும். தாடைப்பிடிப்பு, தொண்டை அடைப்பு போன்றவையும் தோன்றக்கூடும். 13

## 10. ஏப்பம், வாந்தி ஆகியவற்றைத் தடுப்பதால் தோன்றும் துன்பங்கள்

ஏப்பத்தைத் தடுத்து நிறுத்துவதால் நடுக்கம், விக்கல், நெஞ்சுப் பிடிப்பு போன்ற கடுமையான வாத நோய்கள் தோன்றக்கூடும். வாந்தியை வெளிவராமல் அடக்குவதால் வாதம் முதலானவற்றில் எதன் காரணமாக உண்ட உணவு கெட்டதோ அந்தத் தோஷம் சீற்றம் பெறுவதால் தோன்றக் கூடிய குட்டநோய் உண்டாகும். சுவையின்மை போன்ற துன்பங்களும் தோன்றக் கூடும். 14

## 11. விந்துவைத் தடுத்து நிறுத்துவதால் தோன்றும் துன்பங்கள்

சிற்றின்ப வேட்கையால் விழிப்பு நிலையிலோ, கனவிலோ வெளிப்பட இருக்கும் விந்துவைத் தடுப்பதால் சிறுநீர்க்குண்டிகை, ஆஸனவாய், விதைகள் ஆகிய பகுதிகளில் வீக்கம், வலி தோன்றும்.

சிறுநீர் தடைப்படும். விந்துவால் சிறுநீர்க் குண்டிகைப் பகுதியில் கல் தோன்றும். அந்தக் கல் அல்லது விந்து வெளிப்படும் மற்றும் இதயத்தில் வலி, உறுப்புகளில் வலி மேலும் பல துன்பங்கள் விளையக் கூடும். 15

## 12. பசி நாவறட்சி ஆகியவற்றைத் தடுப்பதால் தோன்றும் துன்பங்கள்

பசி எடுத்தபோது உண்ணாமல் தடுத்துக் கொள்வதால் சோம்பல், உடல் உறுப்புகளில் வலி, சுவையின்மை உடல் சுற்றுவது போலிருத்தல், கண் பார்வை குறைதல் எனும் இலக்கணங்கள் தோன்றும். நாவறட்சியைத் தடுத்து நிறுத்துவதால் தொண்டையும் வாயும் உலர்தல், காது கேளாமை, நாவறட்சி மிகுதல் இதயத்தில் துன்பம் என்பன தோன்றும். 16

## 13. பெருமூச்சு, உறக்கம் ஆகியவற்றைத் தடுப்பதால் தோன்றும் துன்பங்கள்

ஓடுதல், குதித்தல், வேகமாக நடத்தல் முதலிய உடலுக்குச் சிரமம் அளிப்பதால் சோர்வு உண்டாகிப் பெருமூச்சு தோன்றும். அதைத் தடுப்பதால் இதயநோய், நினைவிழத்தல், குன்மம் எனும் நோய்கள் தோன்றும்.

இவ்வாறே உறக்கத்தைத் தடுத்து நிறுத்துவதால் கொட்டாவி, உறுப்புகளில் பிசைந்து விடுவது போன்ற வலி, கால்கைகள், தலை, கண்போன்ற உறுப்புகள் செயலிழந்து காணப்படுதல், சோம்பல் எனும் இலக்கணங்கள் காணப்படும். 17

## 14. சிகிச்சைக்கு உட்படாத உதாவர்த்த இலக்கணம்

நாவறட்சியால் துன்புறுதல், மிக்க செயலிழந்து சோர்வுறுதல், உடல் இளைப்பு, கடுமையான வலி, விந்து மற்றும் மலம் ஆகியவற்றை வாந்தி எடுத்தல் எனும் துன்பங்கள் கொண்ட உதாவர்த்தம் சிகிச்சையால் தீர்க்க இயலாததாகும். 18

## 15. உதாவர்த்த நோய்களுக்குப் பொது சிகிச்சை

முன்கூறப்பட்ட எல்லாவகை உதாவர்த்த நோய்களிலும் வாதசீற்றம் முக்கியமாகக் காணப்படும். அதை இயற்கை நிலையில்

கொண்டு வருவதற்கு வாதத்தை வெல்வதற்கான எண்ணெய்ப் பசை தோற்றுவித்தல், உடல் வியர்க்கச் செய்தல், வாத நோய் களுக்குக் கூறப்பட்ட சிகிச்சை முறைகள் ஆகியவை கையாளத் தக்கவையாகும். 19

### 16. வாத உதாவர்த்த நோய்க்குச் சிகிச்சை

வாதத்தினால் தோன்றிய உதாவர்த்தத்தில் முதலில் எண்ணெய்ப் பசையைத் தோற்றுவித்து வியர்க்கச் செய்து பிறகு சிறப்பான முறையில் ஆஸ்தாபன வஸ்தியைப் பயன்படுத்த வேண்டும். இவ்வாறே மலத்தால் தோன்றும் உதாவர்த்தத்தில் ஆநாஹம் எனும் நோய்க்குக் கூறப்பட்ட பலவர்த்தி முதலான முறைகளைப் பின்பற்ற வேண்டும். 20

### 17. மூத்திரோதா வர்த்தத்திற்குச் சிகிச்சை

சிறுநீர் வெளிவருவதைத் தடுப்பதால் தோன்றும் உதாவர்த்த திற்கு சௌவர்ச்சல உப்பு என்பதை அதிக அளவில் கலந்த மதுவைப் பருகச் செய்க. 21

நன்றாகப் பழுத்த புது நெல்லிக்கனிச் சுரசம் கொண்டு அத்துடன் சிறிதளவு நீர் கலந்து மூன்று நாட்கள் பருகச் செய்க. அல்லது குதிரையின் சாணத்தை நீரில் கலந்து வடிகட்டிப் பருகச் செய்க. அவ்வாறே கழுதையின் மலத்தையும் சுரசமாக்கி வடிகட்டிப் பருகச் செய்க. 22

புலாலை உண்டபிறகு அல்லது அந்த உணவுடன் திராட்சையி லான மதுவையோ, சீது என்னும் மதுவையோ, வெல்லத்தாலான மதுவையோ பருகச் செய்தால் சிறுநீர்த் தடுப்பாலான உதாவர்த்தம் நீங்கும். 23

### 18. சிறுநீர்த்தடுப்பாலான உதாவர்த்தத்திற்குப் பத்ரதாடு முதலானவற்றைப் பயன்படுத்துதல்

தேவதாரு, கோரைக்கிழங்கு, வட்டத்திருப்பி, மஞ்சள், அதி மதுரம் என்பனவற்றைச் சம அளவுகொண்டு தூளாக்குக. இந்தத் தூளில் ஆறு உளுந்து எடை கொண்டு தரையில் படாமல் வானத்தி லிருந்து விழும் மழைநீரைத் துணை மருந்தாக்கிப் பருகச் செய்தால் சிறுநீரைத் தடுப்பதால் தோன்றும் உதாவர்த்தம் தணியும். 24

## 19. காஞ்சொரியைப் பயன்படுத்துதல்

காஞ்சொரியை அரைத்துச் சுரசம் அல்லது குங்குமப்பூ கஷாயம், அல்லது கக்கரி விதையை நீருடன் அரைத்து வடிகட்டி சுரசம் தயார் செய்து சிறிது உப்பு கலந்து உட்கொள்ளச் செய்தால் சிறுநீர்த் தடையாலான உதாவர்த்தம் தணியும். 25

## 20. பஞ்சமூலக்ஷீரம்

சிறுபஞ்சமூலப்பொருள்களுடன் காய்ச்சிய பால் அல்லது ஒன்று முதல் இரண்டு தோலா உலர்ந்த திராட்சையை விதை நீக்கி அரைத்து வடிகட்டிப் பருகச் செய்க. அல்லது சிறுநீர்ப்பையில் கல் எனும் அச்மரி நோய்க்கு கூறப்பட்ட முறைகளைப் பயன்படுத்துக. 26

உதாவர்த்த நோயைத் தணிக்க நீர்ச்சுருக்கு நோய்க்குக் கூறப் பட்ட சிகிச்சை முறைகளைப் பயன்படுத்துக. இனி கூறப்போகும் முறைகளையும் தக்கபடி பயன்படுத்துக. 27

## 21. கொட்டாவியைப் தடுப்பதாலான உதாவர்த்தத்திற்குச் சிகிச்சை

கொட்டாவியைத் தடுப்பதால் தோன்றிய உதாவர்த்தத்திற்கு முதலில் எண்ணெய்ப் பசையைத்தோற்றுவித்து வியர்க்கச் செய்க. இவ்வாறே கண்ணீரைத் தடுப்பதால் தோன்றிய உதாவர்த்தத்திற்கும் ம்முறைகளைப் பயன்படுத்திப் பிறகு கண்ணீரைப் பெருகச் செய்யும் முறையைப் பின்பற்றுக 28

## 22. தும்மலை தடுப்பதால் தோன்றும் உதாவர்த்தத்திற்குச் சிகிச்சை

தும்மலைத் தடுப்பதால் தோன்றிய உதாவர்த்த நோய்க்கு மிளகு, திப்பிலி போன்ற தீக்ஷ்ணத் தன்மை கொண்ட பொருள் களால் கண்களில் மையிடுதல், அவபீடனநசியம் மற்றும் (விறுவிறுப்புள்ள) மணம் கொண்ட பொருள்களை முகரச் செய்தல், அல்லது புகைவத்தியால் புகையைப் பிடிக்கச் செய்தால் தும்மலை உண்டாக்கி நோயைத் தணிக்க வேண்டும்.

தீக்ஷ்ணத் தன்மை கொண்ட பொருள்களின் தூளை மூக்கில் பிரதமன நசியமாகப் பயன்படுத்துக. அல்லது சூரிய ஒளியை நோக்கி 3,4 நிமிடங்கள் நின்றால் தும்மல் தோன்றும். அதனால் தும்மலைத் தடுப்பதால் தோன்றிய உதாவர்த்தம் தணியும். 29

## 23. ஏப்பத்தைத் தடுப்பதாலான உதாவர்த்தத்திற்குச் சிகிச்சை

ஏப்பத்தைத் தடுப்பதால் தோன்றிய உதாவர்த்த நோய்க்கு மருந்துப் பொருள்களால் புகைபிடிக்கச் செய்தல். நசியமுறை, கபளகிரகம் (மருந்துப் பொருளை வாய்க்குள் கொண்டிருத்தல்) எனும் முறைகளால் எண்ணெய்ப்பசை கொண்ட புகை முறையைப் பயன் படுத்துக. சௌவர்ச்சல உப்பை துரிஞ்சிப்பழச்சாற்றில் கலந்து பருகச் செய்க. பிராந்தி எனும் சுரையையும் பருகச் செய்க. 30

## 24. வாந்தியைத் தடுப்பதாலான உதாவர்த்தத்திற்குச் சிகிச்சை

வாந்தியைத் தடுப்பதால் தோன்றிய உதாவர்த்தநோயின் சீற்ற மடைந்த தோஷத்திற்கு ஏற்ப நன்கு உடலை எண்ணெய்ப்பசை கொள்ளச் செய்தல், வியர்க்கச் செய்தல், வாந்தி எடுக்கச் செய்தல், பேதியாகச் செய்தல் ஆகியவற்றைப் பயன்படுத்திப் பிறகு யவக்ஷாரம், இந்துப்பு ஆகியவை கலந்த நெய்யைப் பூசிக் கொண்டு குளிக்கச் செய்க.

## 25. விந்துவைத் தடுப்பதலான உதாவர்த்தத்திற்குச் சிகிச்சை

விந்துவைத் தடுப்பதால் உதாவர்த்த நோயில் வஸ்தியைத் தூய்மைப்படுத்தும் திருணபஞ்சமூலம், நெருஞ்சி, கக்கரி விரை, பூசணி விதை முதலியவற்றைத் தூளாக்கிக் கொண்டு பாலில் எட்டில் ஒரு பங்கு அளவில் கொண்டு கலந்து நான்கு மடங்கு நீர் சேர்த்துப் பால் பகுதி மிஞ்சும் அளவு வரை காய்ச்சுக. இம்மருந்தை இளஞ்சூட்டில் பருகச் செய்தால் விந்துவைத் தடுப்பதால் தோன்றிய உதாவர்த்தம் தணியும். அத்துடன் மனதிற்கு இனிய மங்கையுடன் கலவி புரியச் செய்க.

## 26. நாவறட்சி ஆகியவற்றைத் தடுப்பதாலான உதாவர்த்த நோய்க்குச் சிகிச்சை

பசியைத் தடுப்பதால் தோன்றும் உதாவர்த்தத்திற்கு எண்ணெய்ப் பசையுடன் கூடிய வெப்பமுள்ள உணவு அளவோடு உட்கொள்ளச் செய்தல் நன்மை தரும்..

நாவறட்சியைத் தடுப்பதால் தோன்றிய உதாவர்த்தத்திற்கு நெய், குளிர்ந்த நீர் ஆகியவற்றைக் கொண்டு செய்த கஞ்சி, குளிர்ந்த கஞ்சி, ஆகியவை பயன்தரும். 33

## 27. சிரமத்துடன் மூச்சு விடுதலுக்குச் சிகிச்சை

மிக்க உடல் வருத்தம் கொள்வதால் தோன்றிய பெருமூச்சைத் தடுப்பதால் தோன்றிய உதாவர்த்த நோய் கொண்டவரை ஓய்வு கொள்ளச் செய்து பிறகு புலால்சாற்றை உட்கொள்ளச் செய்க. இவ்வாறே தூக்கத்தைத் தடுப்பதால் தோன்றிய உதாவர்த்தத்தில் பசுவின் பாலைப் பருகச் செய்க. அவருடைய மனத்திற்கு மகிழ்ச்சியூட்டத் தக்க கதைகளைக் கூறுக 34

## 28. மிக்க உழைப்பால் தோன்றும் பெருமூச்சுக்குச் சிகிச்சை

அளவுக்கு மீறிய உழைப்பினால் பெருமூச்சு மிகுந்துள்ளபோது முதலில் நோயாளியை ஓய்வு கொள்ளச் செய்து பிறகு புலால் சாற்றுடன் உணவை உட்கொள்ளச் செய்க. அவ்வாறே உறக்கத்தைத் தடுப்பதால் தோன்றும் உதாவர்த்த நோய்க்கு பசுவின் பாலைப் பருகச் செய்க. பிறகு உறங்கச் செய்க. அவரை மனமகிழ்ச்சி தரும் நற்செய்திகளை (கதைகளை)க் கேட்கச் செய்க. 35

## 29. உதாவர்த்தத்தால் தோன்றும் துன்பங்களுக்குச் சிகிச்சை

உதாவர்த்தம் எனும் நோயில் அதனைச் சார்ந்து தோன்றும் வயிற்று வீக்கம், வலி, கத்தரிப்பது போன்ற வலி போன்ற துன்பங்கள் தோன்றக் கூடும். அந்தந்த உபத்திரவங்களுக்குக் கூறியுள்ளபடி சிகிச்சை செய்க. 36

பத்தியமில்லாத உணவை உட்கொள்ளுவதால் தோன்றும் உதாவர்த்தம் - முன்பு ஆறாவது சுலோகத்தில் 'அபத்தியமான

உணவை உட்கொள்ளுவதால் ஒருவகை உதாவர்த்தம் தோன்றும் எனக் கூறப்பட்டுள்ளது. அந்நோயின் தோற்றம் முதலியன பின் வருமாறு உணர்க.

குடலில் உள்ள அபானவாயு வறட்சித் தன்மை கொண்ட அல்லது துவர்ப்பு, கார்ப்புச்சுவைகளைக் கொண்ட பொருள்களை மிகுதியாக உண்பதால் சீற்றமடைந்து அந்த நேரத்தில் உதாவர்த்தம் எனும் நோயைத் தோற்றுவிக்கும். இந்த வாயு வாதம், சிறுநீர், மலம், இரத்தம், கபம், கொழுப்பு ஆகியவற்றைக் கீழ் நோக்கிக் கொண்டு செல்லும் குழாய் வழிகளைச் (சுரோதங்களைத்) தடுத்து மேல் நோக்கிப் பரவச் செய்து உதாவர்த்த நோயைத் தோற்று விக்கும். இதனால் வாதந் தோன்றுதல் எனும் துன்பங்கள் காணப்படும். நோயாளி அபானவாயு, சிறுநீர், மலம் ஆகியவற்றை மிக்கத் துன்பத்துடன் வெளியேற்றுவார். மேலும் பெருமூச்சு, இருமல், பிரதிசியாயம், அழற்சி, நினைவிழத்தல், வாந்தி, காய்ச்சல், நாவறட்சி, விக்கல், தலைநோய், மனநோய், காதுநோய் போன்ற மற்ற வாதத்தால் தோன்றக் கூடிய கோளாறுகளுக்கு இலக்காவார். 37–40

## 30. தோஷத்தால் தோன்றும் உதாவர்த்தத்திற்குச் சிகிச்சை

அபத்திய உணவால் தோன்றும் உதாவர்த்தத்திற்கு முதலில் நோயாளியை எண்ணெய், உப்பு ஆகியவற்றுடன் எண்ணெய்க் குளியல் செய்வித்துப் பிறகு எண்ணெயை உட்கொள்ளச் செய்து உடல் வியர்க்கச் செய்க. அதன்பிறகு நிரூஹண வஸ்தியை கொடுக்க வேண்டும். அதனால் தோஷத்திற்கு ஏற்றபடி மலம் நீர்த்துப் பேதியானாலும் தோஷத்திற்கு ஏற்றபடி உணவு உட்கொள்ளச் செய்க. பிறகு அநுவாஸன வஸ்தியைப் பயன்படுத்துக. 41

நிரூஹண அநுவாஸன வஸ்திகளைப் பயன்படுத்துவதால் உதாவர்த்தம் தணியாத போது நோயாளிக்கு பலமுள்ள எண்ணெய்ப் பசை தோற்றுவித்து அவரை உடல் வியர்க்கச் செய்வதுடன் ஆமணக்கு எண்ணெய் முதலியவற்றால் பேதியாகச் செய்ய வேண்டும். 42

## 31. அபத்திய உணவால் தோன்றும் உதாவர்த்தத்திற்குச் சில முறைகள்

(1) வெள்ளிசிவதை, உவகை, ஓமம் ஆகியவற்றைச் சம அளவில் கொண்டு மொத்தம் ஆறு உளுந்து எடை, கொண்ட அளவு

புளிப்புக்காடி, கொடி வேலி முதலான செரிமானத்தைத் தூண்டும் பொருள்களின் தூளுடன் உட்கொள்ளச் செய்க. (2) நெய்யில் பொரித்த பெருங்காயம், கோஷ்டம், வசம்பு, சுவர்ஜக்ஷாரம் வாயுவிளங்கம் என்பனவற்றை முறையே அடுத்துள்ள பொருள் முன்னதைவிட இரண்டு மடங்கு அளவுள்ளதாகக் கொண்டு தூளாக்குக. இந்தத்தூளில் மூன்று உளுந்து எடை முதல் ஆறு உளுந்து எடை வரை கொண்டு புளிக்காடியைத் துணை மருந்தாக உட்கொள்ளச் செய்க. இவ்விரண்டு முறைகளும் உதாவர்த்தத்தையும், வாதத்தால் தோன்றும் வலியையும் தணிக்கும். *43–44*

## 32. உதாவர்த்தத்திற்கு தேவதாரு முதலானவை

தேவதாரு, கொடிவேலிவேர், கோஷ்டம், சுக்கு, கடுக்காய், குங்கிலியம், புஷ்கரமூலம் எனும் இவற்றைச் சம அளவில் கொண்டு தூளாக்குக. இவற்றை எட்டு பலம் அளவு கொண்டு 32 பலம் நீரில் இட்டுக் காய்ச்சி நான்கில் ஒரு பங்கு மருந்திருக்கும் போது வடிகட்டிக் கொள்க. இதைப் பருகச் செய்தால் உதாவர்த்தம் தணியும். *45*

## 33. மூலகாதிகிருதம்

உலர்ந்த முள்ளங்கி, உலர்ந்த இஞ்சி(சுக்கு) சாரடை, வில்வப் பட்டை, வாகைப்பட்டை குமிழன்பட்டை, பாதிரிப்பட்டை, முள்ளைப்பட்டை, சாக்கொன்னைக்காய்க்கதுப்பு ஆகியவற்றைச் சம அளவில் அனைத்தும் சேர்த்து நான்கு பிரஸ்தம் அளவாகக் கொண்டு பதினாறு பிரஸ்தம் நீர்விட்டு நான்கு பிரஸ்தம் அளவு மிஞ்சி இருக்கக் காய்ச்சி வடிகட்டி ஒரு பிரஸ்தம் நெய் சேர்த்து நெய்யின் அளவு மிகுந்திருக்க முறையாக நெய் மருந்து செய்க. இது மூலகாதிகிருதம் எனப்படும். இதில் ஆறு உளுந்து எடை முதல் ஒரு தோலா அளவு வரை இளஞ்சூடுள்ள பாலுடன் அல்லது நீருடன் உட்கொள்ளச் செய்தால் கடுமையான உதாவர்த்த நோய் தணியும். *46,47*

## 34. உதாவர்த்தத்திற்கு வசாதி* சூரணம்

வசம்பு, அதிவிடயம், கோஷ்டம், யவக்ஷாரம், கடுக்காய், திப்பிலி, முள்ளை ஆகியவற்றைச் சம அளவு கொண்டு தூளாக்குக.

*வசாதி – வசம்பு.

வசாதி சூரணமாகும். இதில் மூன்று உளுந்து எடை முதல ஆறு எடை வரை இளஞ்சூடுள்ள நீருடன் உட்கொள்ளச் செய்தால் உதாவர்த்தம் தணியும். 48

## 35. உதாவர்த்தத்திற்கு இக்ஷ்வாகு** மூலாதி சூரணம்

கசப்புச் சுரை வேர், மருக்காரைக்காய், கல்பைக் கிழங்குச் செடிவேர், அதிவிடயம், வசம்பு, கோஷ்டம், சுரை எனும் மதுவின் வண்டல், கொடிவேலி வேர்ப்பட்டை, ஆகியவற்றைச் சம அளவுகொண்டு தூளாக்குக. இது இக்ஷ்வாகு மூலாதி சூரணம் எனப்படும். இதில் மூன்று உளுந்து எடை முதல் ஆறு உளுந்து எடை வரை இளஞ்சூடுள்ள நீருடன் உட்கொள்ளச் செய்தால் உதாவர்த்தம் தணியும். 49

## 36. உதாவர்த்தத்திற்கு தேவதாரு ஆதி சூரணம்

தேவதாரு, கொடிவேலி, வேர்ப்பட்டை, கடுக்காய், தான்றிக்காய், நெல்லிக்காய், கண்டங்கத்திரி ஆகியவற்றைச் சம அளவு கொண்டு தூளாக்குக. இது தேவதாரு ஆதி சூரணம் எனப்படும். இதில் மூன்று உளுந்து எடை முதல் ஆறு உளுந்து எடை வரை பசுவின் சிறுநீருடன் உட்கொள்ளச் செய்தால் உதாவர்த்தம் தணியும். 50

## 37. உதாவர்த்தத்திற்கு யவாதி கஷாயம்

யவதானியம், முள்ளுக் கத்தரி எனும் இவ்விரண்டையும் சம அளவாக இரண்டும் கலந்து 16 பலம் அளவுகொண்டு, 64 பலம் நீருடன் கஷாயம் காய்ச்சி எட்டுபலம் அளவு மிகுந்திருக்கும்போது இறக்கி வடிகட்டிக் கொள்க. நெய்யில் பொரித்த பெருங்காயம் நான்கு முதல் எட்டு குன்றிமணி வரை சேர்த்து பருகச் செய்தால் உதாவர்த்தம் தணியும். 51

**இக்ஷ்வாகு – கசப்புச்சுரை

## 38. உதாவர்த்தத்திற்கு பிரதமனம்

மருக்காரை விதை, சாரை விதை, திப்பிலி, முள்ளுக்கத்திரியின் ஐந்து உறுப்புகள் (வேர், இலை, பட்டை, மலர், காய் என்பன ஐந்து) அல்லது விதை ஆகியவற்றைச் சம அளவு கொண்டு தூளாக்கி நாடீயந்திரம் எனும் குழாய்க் கருவியால் ஆஸனவாய் வழியாக உள்பகுதிக்குத் தூள் செல்லும்படி ஊதிப் பிரதமனம் செய்க. இதனால் உதாவர்த்தம் தணியும். 52

## 39. உதாவர்த்தத்திற்குப் பவவர்த்தி

நேர்வாளவிதை, கம்பில்லம், செந்நிறச் சிவதை, சுசப்புச்சுரை விதை அல்லது வேர், ஓமம், கொன்றைக்கதுப்பு அல்லது சுசப்புப் பீர்க்கு வேர், திப்பிலி, இந்துப்பு, கடல்உப்பு, பிடாலவணம் எனும் உப்பு, சௌவர்ச்சல உப்பு, கரியுப்பு ஆகிய இவை அனைத்தையும் சம அளவு கொண்டு தூளாக்குக. பிறகு பசுவின் சிறு நீருடன் இதை பக்குவம் செய்க. அடர்த்தியாக இலேகியப் பக்குவம் பெறும்போது இறக்கிக் குளிர்ந்த பிறகு இதை ஆஸனவாய்க்குள் செல்லும் அளவிற்கு வத்தி போலச் செய்து உலர்த்துக. இதை ஆஸன வாயில் வத்தி போல வைத்துச் சிகிச்சை செய்க. மதனாதிசூரணம் மற்றும் இந்த வத்தி எனும் இரண்டு முறைகளும் அமிர்தம் போலப் பயன்தரும் மருந்துகளாகும். 53

**சிறுங்கட்டூர், நடாதூர் எஸ்.என். ஸ்ரீராமதேசிகன் எழுதிய ஸம்ஸ்கருத ஸம்ஹிதை உத்தரஸ்தானம் தமிழாக்க நூலின் உதாவர்த்தப்பிரதிஷேதம் எனும் ஐம்பத்தைந்தாம் அத்தியாயம் முற்றும்.**

# விஸூசிகா பிரதிஷேதம்

# எனும்

## ஐம்பத்தாறாம் அத்தியாயம்

இனி தன்வந்திரி பகவான் ஸுசுருதர் முதலான சீடர்களுக்கு உபதேசம் செய்தபடி விஸூசிகா பிரதிஷேதம் எனும் வாந்திபேதி நோய்க்கு உரிய சிகிச்சை முறைகளை விளக்குவோம். *1,2*

### 1. விஸூசி முதலியவற்றிற்குக் காரணம்

உணவு, குடிநீர் முதலியவற்றைப் பயன்படுத்தவேண்டிய முறைகளை விளக்கும் 'அன்னபானவிதி' எனும் பகுதியில் ஆமாசீரணம், விஷ்டப்தா சீரணம், விதக்தா சீரணம் என மூன்று வகை அசீரண நோய்கள் குறிப்பிடப்பட்டுள்ளன. அவற்றால் முறையே விஸூசி, அலஸகம், விலம்பிகா எனும் மூன்று வகை நோய்கள் தோன்றும். *3*

### 2. விஸூசி என்பதன் பொருள்

அசீரணத்தினால் சீற்றம் பெற்ற வாயு உடல்உறுப்புகளில் ஊசியால் குத்துவது போன்ற துன்பத்தைத் தோற்றுவித்து நிலையாக நின்று விடும். இந்நோயை முற்காலத்து மருத்துவர்கள் 'விஸூசி' என்ற பெயரால் குறிப்பிட்டனர்.

### 3. விஸூசி தோன்றக் காரணம்

ஆயுர்வேத மருத்துவத்தில் திறமை பெற்றவர்களின் கருத்தாவது; உணவின் தன்மை அறிந்து அளவோடு உணவை உட்கொள்பவருக்கு விஸூசி எனும் நோய் தோன்றாது. உணவில் மிக்க விருப்பம் கொண்டு

விஸூசிகா – வாந்தியுடன் பேதியாதல், அதற்குரிய சிகிச்சையை விளக்குவதால் இந்த அத்தியாயம் விஸூசி பிரதிஷேதம் எனும் பெயர் பெற்றது.

அளவுக்கு மீறி உண்பவர், ஆமாசயத்தில் கோளாறுள்ளவர், கட்டுப்பாடின்றி உண்பதால் இந்நோய் தோன்றும். 5

## 4. விஸூசியின் இலக்கணம்

நினைவிழத்தல், அதிஸாரம், வாந்தி, நாவறட்சி, அழற்சி, வயிற்றுவலி, தலைச்சுற்றல், குமட்டல், கொட்டாவி, உடல் நீலம் பாய்தல், உடல் நடுங்குதல், இதயத்தில் துன்பம், தலைவலி என்பன விஸூசி எனும் நோயில் காணப்படும் அறிகுறிகளாகும். 6

## 5. 'அலஸகம்' எனும் நோயின் இலக்கணம்

வயிறு மிகவும் பருத்து நோயாளி நினைவிழந்து விடுதல், அல்லது துன்பம் தாங்காமல் அலற்றுதல், தடுக்கப்பட்ட வாயு வயிற்றின் மேற்பகுதி நோக்கிப் பரவி இதயம், தொண்டை போன்ற பகுதிகளில் சுழன்று கொண்டிருத்தல், அபானம் மற்றும் மலம் அடியோடு தடுக்கப்படுதல், நாவறட்சியும் ஏப்பமும் மிகுந்திருத்தல் எனும் இலக்கணங்கள் காணப்படுவது அலஸகம் எனும் நோயாகும். 7,8

## 6. விலம்பிகா எனும் நோயின் இலக்கணம்

கபத்தாலும், வாதத்தாலும் கேடுற்ற உணவு மேல் வழியாகவோ, கீழ் வழியாகவோ, வெளியேறாமல் துன்பம்விளைவித்துக் கொண்டிருப்பது விலம்பிகா எனும்நோய் ஆகும். இது சிகிச்சையால் எளிதில் தீர்க்கக் கூடியதல்ல என மருத்துவ நூல் கூறுகிறது. 9

## 7. ஆமம் விளைவிக்கும் கோளாறுகள்

செரிமானமாகாமல் குடலில் தங்கிய உணவு ஆமம் எனப்படும். அந்த உணவுச்சாறு உடலில் எந்தப் பகுதியை அடைந்து நிலையாக இருக்குமோ அந்த உறுப்பில் சீற்றமுற்ற வாதம் முதலியவை தம் இயற்கையான வலி, எரிச்சல், பளுவாகத் தோன்றுதல் எனும் இலக்கணங்களுடன் மற்றும் ஆமதோஷத்தால் தோன்றும் செரிமானமின்மை, அலஸகம், ஆமவாதம், கம்பம் போலப் பருத்து அசைவற்றுப் போதல், வீக்கம் எனும் கோளாறுகளை அந்தந்த உடற்பகுதியில் தோற்றுவிக்கும். 10

## 9. விஸூசி, அலஸகங்களில் சிகிச்சைக்கு உட்படாத நிலை

விஸூசி அல்லது அலஸகம் எனும்நோய் கொண்டவரின் பல், உதடு, நகம், கருநீலநிறம் கொள்ளுதல், நினைவாற்றல் குறைதல், இடைவிடாமல் வாந்தியாதல், கண்விழிகள் உள்பதிந்து அல்லது மேல்நோக்கி நிலைபெற்றிருத்தல், குரல் மிகவும் மங்கியிருத்தல், இணைப்புகள் தளர்ந்து போதல் எனும் அறிகுறிகள் காணப் பட்டால் அந்நோயாளி மீண்டும் இவ்வுலகுக்கு வராத நிலையை அடைவார். (உயிர் விடுவார் என்பதாம்)

## 10. விஸூசி நோய்க்குச் சிகிச்சை

எளிதில் சிகிச்சைக்கு உட்படக்கூடிய அறிகுறிகள் கொண்ட விஸூசி நோயாளிக்கு இருகால் மணிக்கட்டுப் பகுதியில் நெருப் பால் சுடுதல் எனும் சிகிச்சையைச் செய்ய வேண்டும். இதனால் நினைவாற்றல் தோன்றும். அதிக அளவில் பேதியாவது நிற்கும். பக்குவம் பெற சடாரக்னியைத் தூண்ட வேண்டும். சிறு குடலில் தங்கிய கேடுற்ற உணவை வெளிப்படுத்த மருக்காரைக்காய் போன்ற கடுமையான வீரியமுள்ள வாந்தி எடுக்கச் செய்யும் மருந்துப் பொருள்களைப் பயன்படுத்த வேண்டும். ஆம நிலைக்கு உரிய சிகிச்சை முறைகள் இவையாகும். உணவு அல்லது தோஷம் பக்குவம் பெறத் துவங்கியதும் நிலைமைக்கு ஏற்பப் பட்டினி கிடத்தல் எனும் சிகிச்சையை முறைப்படிப் பயன்படுத்த வேண்டும். வியர்க்கச் செய்தல் எனும் செயலால் பக்குவம் பெறு தலைத் தூண்டி பேதியாகும்படிச் செய்ய வேண்டும். 12

## 11. தூய்மைப்படுத்தலும், வஸ்தி முறையும்

விஸூசி நோயில் முறைப்படி பேதியாகச் செய்தல், வாந்தி எடுக்கச் செய்தல், எனும் முறைகளால் உடலின் மேற்பகுதியையும், கீழ்ப்பகுதியையும் தூய்மைப்படுத்தினால் நினைவிழத்தல் அதிஸாரம் போன்ற அறிகுறிகள் தணியும். வாந்தி, பேதிகளைத் தவிர்த்து செரிமானமடையத் துவங்கிய உணவு மலத்தடை தோன்றிய போது அதைப் போக்க ஆஸ்தாபனவஸ்தியைப் பயன்படுத்த வேண்டும். எல்லாவகை விஸூசிகளிலும், அலஸகம், விலம்பிகா எனும் நோய்களிலும் எல்லா வகைக் கோளாறுகளிலும் கால்

மணிக்கட்டுப்பகுதியைச் சுடுதல், பக்குவம் பெறச் சுடுதல் எனும் முறையைப் பின்பற்றுதல், வாந்தியாகச்செய்யும் கடுமையான மருந்துகளைப் பயன்படுத்துதல், பட்டினி கிடத்தல், பேதியாகச் செய்தல், பக்குவம் பெறச் செய்தல், ஆஸ்தாபனவஸ்தி என்பன மிக்க நன்மை தரும். இனி இந்நோய்களுக்கு உரிய பலவகை மருந்து முறைகள் கூறப்படுகின்றன. 13

## 12. *பத்யாதிசூரணம்

கடுக்காய்,வசம்பு, தூய பெருங்காயம், சூடச்சப்பாலை (அல்லது துமட்டிக்காய்) வெள்ளைப்பூண்டு, ஸௌவர்சல உப்பு, அதிவிடயம் எனும் இவற்றைச்சம அளவில் கொண்டுத் தூளாக்குக. இது பத்யாதி சூரணம் எனப்படும். இதில் மூன்று உளுந்து எடை ஆறு உளுந்து எடை வரை இளஞ்சூடுள்ள வெந்நீருடன் உட்கொள்ளச் செய்தால் அஜீரணம், வலி, விஸூசிதை, சுவையின்மை என்பனவற்றை உடனே போக்கும். 14

## 13. வேறு முறை

கல்பஸ்தானத்தில் துந்துபிஸ்வனீயம் எனும் ஆறாம் அத்தியாயத்தில் கூறப்பட்டுள்ளபடி, பிடாலவனம் அல்லது வெல்லம் கலந்த கடுகுத்தூளை தகுந்த அளவு இளஞ்சூடுள்ள வெந்நீருடன் உட்கொள்ளச் செய்க. அல்லது திரிபலை, திரிகடுகம் ஆகிய இவ்விரண்டின் பொருள்களையும் சம அளவில் கொண்டு தூளாக்கி அத்துடன் ஒவ்வொரு பங்கு இந்துப்பு, தூயபெருங்காய்த் தூளையும் கலந்து துரிஞ்சிப்பழச்சாற்றுடன் அரைத்து புளிப்புக்காடி முதலான புளிப்புச்சுவை கொண்ட பொருளுடன் உட்கொள்ளச் செய்க. 15

## 14. மற்றொரு முறை

சுக்கு, மிளகு, திப்பிலி ஆகியவற்றைச் சம அளவில் கொண்டு தூளாக்கி ஐந்து உப்புகளின் தூளையும் கலந்து கள்ளிப் பாலுடன் உட்கொள்ளச் செய்க. அல்லது வாதவியாதி சிகிச்சைக்குரிய பகுதியில் கூறப்பட்ட கல்யாண லவனம் என்பதில் மூன்று உளுந்து

*பத்யா - கடுக்காய்

எடை முதல் ஆறு உளுந்து எடை வரை காடி முதலான புளிப்புச் சுவை கொண்ட பொருளுடன் உட்கொள்ளச் செய்க. 16

## 15. விஸூசி நோய்க்கு திப்பிலி முதலான மருந்துகள்

(1) திப்பிலி, ஓமம் பணிஞ்சகம் என்பனவற்றைச் சம அளவு கொண்டு தூள் செய்து அதில் மூன்று உளுந்து எடைவெந்நீர் அல்லது புளிப்புக் காடியுடன் உட்கொள்ளச் செய்தல். (2) திப்பிலி, நேர்வாள வேர் எனும் இவ்விரண்டையும் தூளாக்கி புளிப்புக்காடி முதலியவற்றுடன் உட்கொள்ளச் செய்க (3) திப்பிலித்தூளில் சம அளவு நேர்வாள வேர்த்தூள் கலந்து கசப்புப்பீர்க்குச்சுரசத்துடன் உட்கொள்ளச் செய்க. (4) திப்பிலித் தூளுடன் சம அளவு சுக்குத்தூள் கலந்து மூன்று முதல் ஆறு உளுந்து எடை இளஞ்சூடுள்ள நீருடன் உட்கொள்ளச் செய்க. 17

## 16. *விஸூசிக்கு வியோஷாஞ்சனம்

சுக்கு, மிளகு, திப்பிலி, புங்கன்விதைக்குள்ள பருப்பு, மஞ்சள், மரமஞ்சள், எனும்இவற்றைச் சம அளவு கொண்டு அத்துடன் இந்நான்கிற்கும் சம அளவு துரிஞ்சி வேர் கலந்து தூளாக்குக. அத்துடன் நீர்விட்டு அரைத்து மாத்திரைகளாகச் செய்து நிழலில் உலர்த்திக் கொள்க. இந்த மாத்திரையை நீரில் தேய்த்து அதைக் கண்களில் மை போல இட்டால் விஸூசி தணியும். 18

## 19. விஸூசிக்குப் பத்திய முறை

விஸூசி நோயில் நன்கு வாந்தி எடுக்கச் செய்து, நன்றாகப் பேதியாகச் செய்து சரியான முறையில் பட்டினிக் கிடக்கச் செய்தபின் நோயாளிக்குப் பசி தோன்றிய போது செரிமானத்தைத் தூண்டுவதும், உணவு சீராகச் செரிமானமடையச் செய்வதுமான மருந்துப் பொருள்களுடன் கூடிய கஞ்சி, வகையாகிய பேயா, விலேபி என்பனவற்றை உண்ணக் கொடுக்க வேண்டும். 19

*வியோஷா – சுக்கு

## 20. ஆநாஹம் எனும் நோயின் இலக்கணம்

செரிமானமடையாமல் வயிற்றில் தங்கிய உணவுச்சாறு (ஆமரசம்) மற்றும் மலம் பக்வாசயம், மலாசயம் (பெருங்குடல்) ஆகியவற்றில் சிறிது சிறிதாகச் சேர்ந்து சில நேரங்களில் தன்வழி தவறிய வாதமாகித் தன் இயற்கையான கீழ்நோக்கி செல்வதை விட்டு விடும். அதாவது கீழ்நோக்கி வெளிவராமல் இருந்துவிடும். இந்நோய் ஆநாஹம் எனப்படும். 20

## 21. ஆமத்தால் தோன்றும் ஆநாஹ அறிகுறிகள்

ஆமத்தால் தோன்றும் ஆநாஹத்தில் நாவறட்சி, சளி, தலையில் எரிச்சல், ஆமாசயத்தில் வலி, உடல் பளுவாகத் தோன்றுதல், இதயப்பிடிப்பு, ஏப்பம் வெளிவராமல் தடைப்படுதல் எனும் அறிகுறிகள் காணப்படும். 21

## 22. மலத்தால் தோன்றும் ஆநாஹ இலக்கணம்

மலத்தால் அல்லது பக்குவாசயத்தில் தோன்றிய ஆநாஹத்தில் இடுப்பு, பின்தட்டுப் பகுதிகளில் பிடிப்பு, ஏற்படும் மலமும் சிறுநீரும் தடைப்படும். அப்பகுதிகளில் வலியும் தோன்றும். நோயாளி நினைவிழப்பார். அடிக்கடி வாந்தியில் மலம் வெளிப்படும். சுவாஸ நோய், அலஸக நோய் என்பனவற்றின் அறிகுறிகளும் காணப்படும். 22

## 23. ஆநாஹ நோய்ச் சிகிச்சை

ஆமதோஷத்தாலும் மற்றும் மலத்தாலும் தோன்றிய ஆநாஹ நோய்களுக்கு முதலில் நோயாளியை வாந்தி எடுக்கச் செய்து பசி எடுத்த பிறகு பயன்படுத்தத் தக்க உணவு முறைப்படி திப்பிலி முதலான செரிமான வலிமையைத் தூண்டும் மருந்துப் பொருள்களின் கஷாயத்துடன் பேயா, விலேபி, யவாகூ என்பனவற்றை உணவாகக் கொடுக்க வேண்டும். வாந்தியில் மலம் வெளிப்படாத போது உடல் வியர்க்கச் செய்தல், செரிமானமடையச் செய்யும் பாசனமுறைகளாலும், மருந்துகளாலும் ஆம ரஸத்தைச் செரிமானமடையச் செய்ய வேண்டும். 23

விஸூசி நோயைப் போக்கும் நேர்வாளம் முதலான மருந்துப் பொருள்களைச் சம அளவில் கொண்டு தூளாக்கி எருமை, ஆடு, செம்மறியாடு, யானை, பசு ஆகியவற்றின் சிறுநீருடன் ஒவ்வொரு நாளாக அரைத்து வத்தியாகச் செய்க. நோயாளிஷ்ய முதலில் உடல் வியர்க்கச் செய்து பிறகு இந்த வத்தியை அவருடைய ஆஸன வாய்க்குள் செலுத்தவும். இந்தமருந்துப் பொருள்களின் தூளைக் குழாய் போன்ற கருவியின் வழியாக ஆஸன வாய்க்குள் பிரதமன முறைப்படிச் செலுத்துக. *24,25*

சம்சோதனம், சம்சமநியம் எனும் பகுதிகளில் கூறப்பட்ட மருக்காரைக்காய், கசப்புச்சுரை போன்ற உடலின் மேற்பகுதியில் உள்ள தோஷங்களைப் போக்கும் சிரோவிரேசக மருந்துப் பொருள்கள், மற்றும் கடுக்காய், கொன்றை, ஆமணக்கு வேர், சிவதை முதலான உடலின் கீழ்ப்பகுதி தோஷங்களைத் தணிக்கும் மருந்துப்பொருள்கள் ஆகியவற்றைக் கொண்டு முறைப்படி பசு, எருமை ஆகியவற்றின் சிறுநீருடன் பக்குவம் செய்து வடிகட்டி அந்தக் கஷாயத்தில் மீண்டும் அரை பங்கு பசுவின் சிறு நீரைக் கலக்கவும். தேன் ஒரு பலம், சிவதை, இந்துப்பு ஆகியவற்றை ஒரு பலம் வீதம் கலந்து நிரூஹணவஸ்தியாகப் பயன்படுத்துக.

பிறகு விரேசன முறைப்படி, பேயா, யவாகூ முதலான உணவை முறைப்படி பயன்படுத்துக. *26*

வாந்தி எடுக்கச் செய்யும் மற்றும் பேதியாகச் செய்யும் இதே மருந்துப் பொருள்களை விழுதாக்கியும், கஷாயம் காய்ச்சியும் அவற்றுடன் எண்ணெய் சேர்த்து முறைப்படி எண்ணெய் காய்ச்சித் தேவைப்பட்டால் அநுவாஸன வஸ்தியாகப் பயன்படுத்துக.

**சிறுங்கட்டூர், நடாதூர் எஸ்.என். ஸ்ரீராமதேசிகன் எழுதிய ஸுசுருத ஸம்ஹிதை உத்தரஸ்தானம் தமிழாக்க நூலின் விஸூசி பிரதிஷேதம் எனும் ஐம்பத்தாறாம் அத்தியாயம் முற்றும்.**

# அரோசக பிரதிஷேதம்

# எனும்

## ஐம்பத்தேழாம் அத்தியாயம்

இனி தன்வந்திரி பகவான் ஸுசுருதர் முதலான சீடர்களுக்கு உபதேசம் செய்தபடி 'அரோசகம்' எனும் 'உணவு சுவையாகத் தோன்றாமை' எனும் நோய்க்குரிய சிகிச்சை முறைகளை விளக்குவோம். 1,2

### 1. சுவையின்மை நோய் விளக்கம்

வாதம், பித்தம், கபம் எனும் தோஷங்களால் தனித் தனியாகவும், மூன்றும் சேர்ந்து தோற்றுவிப்பது ஒன்றும், காமம், மிக்க வருத்தம் அச்சம் முதலான காரணங்களால் தோன்றுவது ஒன்றும் ஆக சுவையின்மை ஐந்து வகைப்படும். இந்த தோஷங்கள் உணவை எடுத்துச் செல்லும் குழாய் வழியிலும், இதயத்திலும் பரவியிருக்கும். அதனால் உணவு உட்கொள்வதற்கு நோயாளிக்கு விருப்பம் தோன்றுவதில்லை. ஆகவே மருத்துவர்கள் இந்நோயை ஐந்து வகையாகக் கூறுகின்றனர். 3

### 2. வாதத்தாலும் பித்தத்தாலும் தோன்றும் சுவையின்மையின் இலக்கணங்கள்

வாதத்தால் தோன்றிய சுவையின்மையில் இதயத்தில் வலி சுவைஉணர்ச்சியின்மை என்பன காணப்படும். பித்தத்தின் சீற்றத்தால் தோன்றும் சுவையின்மையில் இதயத்தில் எரிச்சல்,

---

அரோசகம் - சுவையின்மை - அல்லது சுவையை உணராமை. இந்நோய்க்கு உரிய சிகிச்சை முறைகளை விளக்குவதால் இந்த அத்தியாயம் அரோசக பிரதிஷேதம் எனும் பெயர் பெற்றது

ஈரப்பசையின்றி உலர்ந்து போதல், வாய்கசத்தல், நினைவிழத்தல், மிக்க நாவறட்சி எனும் இலக்கணங்கள் காணப்படும். 4

## 3. கபத்தாலும், ஸந்நிபாதத்தாலும் தோன்றும் சுவையின்மையின் இலக்கணங்கள்

கபச் சீற்றத்தால் தோன்றிய சுவையின்மையில் உடலில் அரிப்பு, பளுவாகத் தோன்றுதல், வாயிலிருந்து கபம் ஒழுகிக் கொண்டிருத்தல், உடலுறுப்புகளில் சோர்வு, சோம்பல் வாய் இனித்தல் என்பன காணப்படும். மூன்று தோஷங்களின் சீற்றத்தாலான சுவையின்மையில் உடலிலும் இதயத்திலும் பலவகை இலக்கணங்களும் மூன்று தோஷங்களுக்கு உரிய இலக்கணங்களும் கலந்து காணப்படும். 5

## 4. மனக்கோளாறினால் தோன்றும் சுவையின்மையின் )லக்கணம்

மிக்க காமம், வருத்தம் (அழுகை) அச்சம் ஆகியவற்றில் கலக்கமடைந்த மனம் கொண்டவருக்கு அல்லது அருவருக்கத் தக்க பொருள்களைக் கண்டவருக்குத் தோன்றும் சுவையின்மை ஐந்தாவது வகைப்படும். 6

## 5. வாதத்தால் தோன்றிய சுவையின்மைக்குச் சிகிச்சை

வாதத்தால் தோன்றிய சுவையின்மையில் முதலில் வசம்புக் கஷாயத்தைப் பருகச் செய்து வாந்தி எடுக்கச் செய்க. பிறகு திப்பிலி, வாயுவிளங்கம், யவக்ஷாரம், அரேணிகம், சிறுதேக்கு, சிற்றரத்தை, ஏலக்காய், தூயபெருங்காயம், இந்துப்பு, சுக்கு எனும் இப்பொருள்களைச் சம அளவில் கொண்டு தூளாக்கி அதில் மூன்று முதல் ஆறு உளுந்து எடை வரை நெய், எண்ணெய் முதலியவற்றுடன் அல்லது மூன்று வகை சுரை எனும் மதுவுடன் அல்லது வெந்நீருடன் உட்கொள்ளச் செய்க. 7

## 6. பித்தத்தால் மற்றும் கபத்தால் தோன்றும் சுவையின்மைக்குச் சிகிச்சை

பித்தத்தால் தோன்றிய சுவையின்மையில் வெல்லம் கலந்த நீர் அதாவது பானகம், காகோலி முதலான இனிப்புச் சுவைகொண்ட பொருள்களின் கஷாயம் ஆகியவற்றில் ஒன்றைப் பருகச் செய்து

வாந்தி எடுக்கச் செய்தல் சிறந்த முறையாகும். பிறகு இந்துப்பு, சர்க்கரை, தேன், நெய், எனும் இவற்றைத் தகுந்த அளவில் கலந்து எண்ணெயின் தோற்றத்தில் பருகச் செய்வது சிறந்தது. கபத்தால் தோன்றிய சுவையின்மையில் முதலில் வேப்பிலை, வேப்பம் பட்டைகளாலான கஷாயத்தைப் பருகச் செய்து வாந்தி எடுக்கச் செய்க. கொள்ளுக் கஷாயத்தில் தேனையும், ஓமத்தின் தூளையும் கலந்து பருகச் செய்க. 8

## 7. கபத்தால் மற்றும் ஸந்நிபாதத்தால் தோன்றும் சுவையின்மை நோய்களுக்கு சிகிச்சை

முன்பு வாதத்தாலான சுவையின்மைக்குக் கூறப்பட்ட திப்பிலி முதலானவற்றின் தூளையே கபத்தாலான சுவையின்மைக்கும் பயன்படுத்தலாம். ஸந்நிபாதத்தால் தோன்றிய சுவையின்மையில் முதலில் வாந்தி எடுக்கச் செய்து பிறகு மூன்று தோஷங்களையும் தணிக்க வல்ல சிகிச்சையை மேற்கொள்ளவேண்டும். 9

## 8. நான்குவகை நோய்களுக்கும் இலேகியங்கள்

(1) திராட்சை, புடலை இலை, பிடாலவணம், வஞ்சி, செங்கம், வேப்பம்பட்டை, பெருங்குரும்பை, கடுக்காய், தான்றிக்காய், நெல்லிக்காய், இலந்தைப்பழம், வெப்பாலைப்பட்டை, புங் கன்விதை, கொன்றைக் கதுப்பு எனும் இவற்றைச் சம அளவில் கொண்டு தூளாக்கித் தூளின் அளவிற்கு நான்கு மடங்கு பசுவின் சிறுநீர் கொண்டு அனைத்தையும் கலந்து இலேகிய பக்குவம் செய்க. (2) கோரைக்கிழங்கு, வசம்பு, சுக்கு, மிளகு, திப்பிலி, மஞ்சள், மரமஞ்சள், சிறுதேக்கு, கோஷ்டம், கொடிவேலி எனும் இவற்றைச் சம அளவில் கொண்டு தூளாக்கி நான்கு மடங்கு ஆட்டின் சிறுநீர் கலந்து இலேகிய பக்குவம் செய்க. (3) வட்டத்திருப்பி, மூங்கில் உப்பு, அதிவிடயம், மஞ்சள் எனும் இவற்றைச் சம அளவில் கொண்டு தூளாக்கி நான்கு மடங்கு யானையின் சிறுநீர் கலந்து இலேகிய பக்குவம் செய்க. (4) வல்லாரை, எருக்கன்வேர், வேம்பு, சீந்தில்கொடி, கலப்பைக் கிழங்கு எனும் இவற்றைச் சம அளவு கொண்டு தூளாக்கி எருமையின் சிறுநீர் நான்கு மடங்கு கலந்து லேகியப் பக்குவம் செய்க. இந்நான்கு இலேகிய வகைகளைத் தோஷங்களுக்கு ஏற்ப நோயின் வலிமை அறிந்து தக்கபடி ஆறு

உளுந்து எடை நாள்தோறும் உட்கொள்ளச் செய்தால் குன்மம், சுவையின்மை, சுவாசம், தொண்டை நோய்கள், இதயநோய்கள் அனைத்தும் நீங்கும். 10–12

## 9. சுவையின்மையில் உணவு

தன்நாட்டில் வழக்கத்தில் உள்ள உணவுமுறைகளில் தன் உடலுக்கு ஏற்ற பொருளை உட்கொள்ளச் செய்க. தன் தேசத்தில் உள்ளபடி பருகத்தக்க உணவுமுறைகளைப் பயன்படுத்துக. மற்றும் வள்ளிக்கிழங்கு, காரட், முள்ளங்கி, நெல்லி, மாதுளை முதலிய வற்றையும், ஷாடபம், ராகம் எனும் உணவு வகைகள் முதலிய வற்றையும், இலேசாக, வறண்ட மனத்திற்கு இனிய பலவகை சாறுகளையும் முறைப்படிப் பக்குவம் செய்து உட்கொள்ளச் செய்க. 13

## 10. சுவையின்மையில் நிரூஹ முறை

சுவையின்மை நோய் கொண்டவருக்கு முறைப்படி ஆஸ்தாபன (நிரூஹ) வஸ்தியைப் பயன்படுத்த வேண்டும். பிறகு பேதியாகச் செய்து அதன் பிறகு மென்மையான சிரோவிரேசன முறையைப் பயன்படுத்த வேண்டும். 14

## 11. சுவையின்மைக்கு வியூஷணாதி சூரணம்

சுவையின்மை எனும் நோயில் வாயில் சுவை உணர்வைச் சீராகவும், வாயில் சுவையை மிகச் செய்யவும், அல்லது வாயில் சுரக்கும் உமிழ்நீர், அக்னியாச்யச்சாறு, குடலில் தோன்றும் சாறு, ஆகிய உணவைச் செரிமானமடையச் செய்யும் சாறுகளைத் தக்க அளவு சுரக்கச் செய்யவும், சுக்கு, மிளகு, திப்பிலி, மஞ்சள், மர மஞ்சள், நெல்லிக்காய், யவக்ஷாரம் எனும் இவற்றை சம அளவு கொண்டு தூளாக்கி அத்தூளில் மூன்று முதல் ஆறு உளுந்து எடை வரை நாள்தோறும் தேன் விட்டுக்குழைத்து உட்கொள்ளச் செய்க. இவ்வாறே மற்ற கசப்புச் சுவையும், கார்ப்புச் சுவையும் கொண்ட மருந்துப் பொருட்களை வாய் முதலியவற்றைத் தூய்மைப்படுத்த பயன்படுத்துவது சிறந்த முறையாகும். 15

## 12. சுவையின்மையில் கஷாயம் முதலியன

கோரைக்கிழங்கு முதலான கூட்டுப்பொருள்கள், கொன்றை முதலான கூட்டுப் பொருள்கள், தசமூலப்பொருள்கள் ஆகிய இவை அனைத்தையும் சம அளவு கொண்டு தூளாக்கி மொத்தம் இரண்டு தோலா எடை கொண்டு பதினாறு தோலா நீர் சேர்த்து நான்கில் ஒரு பங்கு மிகுந்திருக்கக் கஷாயம் காய்ச்சுக. பிறகு வடிகட்டி தேன் கலந்து உட்கொள்ளச் செய்க. கோரைக்கிழங்கு முதலான கூட்டுப்பொருள்களின் கஷாயத்தில் சர்க்கரை கலந்து செய்த இலேகியத்தில் தேன் கலந்து உட்கொள்ளச் செய்க. அவ்வாறே முன் கூறப்பட்ட தூள்களுடன் பசுவின் சிறுநீர் கலந்து செய்த ஆஸவம் மற்றும் குஷ்ட நோய்க்கு உரிய சிகிச்சை முறைகள் கூறப்பட்ட அத்தியாயத்தில் குறிப்பிடப்பட்ட வெல்லம், தேன் ஆகியவற்றுடன் செய்த யுரசக்ஷார நீருடன் தேன் முதலானவற்றைக் கலந்து க்ஷாராஸவம் செய்து மற்றும் 'மாதவம்' எனும் மது வகையுடன் உட்கொள்ளச் செய்க. )ம் முறைகளால் சுவையின்மை நீங்கும். 16

கபம் மற்றும் வாயுவால் செரிமானத்தையச் செய்யும் அக்னி குறைந்து போனதும் அதைப் போக்க இம்முறைகளைப் பயன்படுத்துக. 17

## 13. புறக்காரணங்களால் தோன்றும் சுவையின்மைக்குச் சிகிச்சை

விரும்பியபொருள் கிடைக்காமையால், அச்சம், துக்கம் முதலிய காரணங்களால் சடராக்கினி வலிமை குறைந்து போகும். அதனால் தோன்றிய சுவையின்மையில் பெறுதற்கு ஏற்ற விருப்பமுள்ள பொருள்களைக் கொடுத்துச் சுவையூட்டுக. அவ்வாறே இந்தப் பிறவியில் இழந்த பொருளை மீண்டும் பெற முடியாது. அடுத்த பிறவியில்தான் பெற முடியும். ஆகவே இந்நிலையில் இராமன், நளன் முதலிய புராண புருடர்களின் வரலாறுகளைக் கூறி ஆறுதல் பெறச் செய்க. இம்முறைகளால் சுவையின்மையைப் போக்க வேண்டும். இவ்வாறே மனத்தில் தோன்றும் மற்ற விரும்பத் தகாத எண்ணங்களையும், அவற்றிக்குத் தக்க நல்லுரைகளைக் கூறி மனக்கவலையைப் போக்க வேண்டும். மற்றும் நோயாளிக்கு விருப்பமான பொருள்களைத் தந்து மனத்திற்கு ஆறுதலைத் தோற்றுவிப்பதால் புறக்காரணங்களால் தோன்றும் சுவையின்மை தணியும். 18,19

**சிறுங்கட்டூர், நடாதூர் எஸ்.என். ஸ்ரீராமதேசிகன் எழுதிய ஸம்ஸ்கிருத ஸம்ஹிதை உத்தரஸ்தானம் தமிழாக்க நூலின் அரோசகபிரதிஷேதம் எனும் ஐம்பத்தேழாம் அத்தியாயம் முற்றும்**

# மூத்ராகாத பிரதிஷேதம

## எனும்

## ஐம்பத்தெட்டாம் அத்தியாயம்

இனி தன்வந்திரி பகவான் ஸுசுருதர் முதலான சீடர்களுக்கு உபதேசம் செய்தபடி சிறுநீர்த்தடைக்குரிய சிகிச்சை முறைகளை விளக்குவோம். *1 – 2*

### 1. சிறுநீர்த்தடை வகைகள்

*(1)* வாதகுண்டலிகா, *(2)* அஷ்டீலா, *(3)* வாதவஸ்தி, *(4)* மூத்ராதீதம் *(5)* மூத்ர ஜடரம் *(6)* மூத்ரோத்ஸங்கம் *(7)* மூத்ரக்ஷயம் *(8)* மூத்ரகிரந்தி *(9)* மூத்ரசுக்ரம் *(10)* உஷ்ணவாதம் *(11)* பித்தத்தால் தோன்றும் மூத்ரௌகஸாதம், *(12)* கபத்தால் தோன்றும் மூத்ரௌகஸாதம் எனச் சிறுநீர்த்தடை பன்னிரண்டு வகைப்படும். *3,4*

### 2. வாதகுண்டலிகா என்பதன் இலக்கணம்

வறட்சித் தன்மைகொண்ட பொருள்களை மிகுதியாக உட்கொள்வதாலும், தடுத்து நிறுத்தக்கூடாத வேகங்களைத் (உடலிலிருந்து வெளியேற முற்படும் சிறுநீர் போன்றவற்றின் விரைவுகளை) தடுத்து நிறுத்துவதாலும் இயற்கைத் தன்மை மாறுபட்டு வாயு சிறுநீர்க் குண்டிகையைச் சேர்ந்து சிறுநீரில் கலந்து முதலில் அதை வெளியேறாமல் தடுத்து அதை சீற்றமுறச் செய்து வட்டமாகச் சுழலச் செய்யும். இதனால் சிறுநீர்க்குண்டிகையில் வலிதோன்றும். சிறுசிறு அளவில் மிக்க துன்பம் விளைவித்துக் கொண்டு, சிறுநீர் வெளிப்படும். இந்தக் கொடிய துன்பம் விளைவிக்கும் நோய் வாதகுண்டலிகா எனப்படும். *5–6*

---

மூத்ராகாதம் – சிறுநீர்த்தடை, இந்நோய்க்கு உரிய சிகிச்சை முறைகளை விளக்குவதால் இந்த அத்தியாயம் மூத்ராகாத பிரதிஷேதம் எனும் பெயர் பெற்றன.

## 3. வாத அஷ்டீலா தோன்றக் காரணமும், இலக்கணமும்

ஆஸனவாய் - சிறுநீர்க்குண்டிகைக்கு இடையில் உள்ள பகுதியைச் சார்ந்து அபானவாயு அஷ்டீலா எனும் கட்டியைப் போலக் கடினமான கட்டியைத் தோற்றுவிக்கும். சிறிது அசைவதாயும் மேல்நோக்கி எழும்பியதாயும் இருக்கும். இந்தக் கிரந்தியின் காரணத்தால் மலம், சிறுநீர், அபானவாயு ஆகியவை தடுக்கப்பட்டு விடும். தொப்புளுக்குக் கீழ்ப் பகுதியில் சிறுநீர்ப்பைப் பகுதியில் வீக்கம் தோன்றும். சிறுநீர்க்குண்டிகையில் கடுமையான வலி தோன்றும். இத்தகைய இலக்கணங்கள் கொண்டது வாத அஷ்டீலா எனப்படும். 7–8

## 4. வாதவஸ்தி தோன்றக் காரணமும், இலக்கணமும்

சிறுநீர் வெளிவரும்போது அதன் வேகத்தை அறியாமையால் தடுத்து நிறுத்திக் கொண்டபோது சிறுநீர்க்குண்டிகையில் உள்ள வாயு சீற்றமடைந்து சிறுநீர்க்குண்டிகையின் வாயை அடைத்து விடும். அதனால் சிறிதுநேரம் சிறுநீர் வெளிவருவது தடைப்பட்டு போகும். அப்பொழுது சிறுநீர்க்குண்டிகையிலும், வயிற்றிலும் வேதனை தோன்றும். மிகவும் சிரமப்பட்டு நீக்கக்கூடியதான நோய் வாதவஸ்தி எனப்படும். 9-10

## 5. மூத்ராதீதம் எனும் நோயின் இலக்கணம்

சிறுநீர் வெளிவர இருக்கும்போது அதன் வேகத்தைத் தடுத்து நிறுத்திப் பிறகு சிறுநீரை வெளியேற்ற முற்பட்டால் அப்பொழுது சிறுநீர் வேகமாக வெளிவராமல் வலிமையுடன் (முக்கி) வெளியேற்ற முற்படுவதால் சிறிது சிறிதாக நின்று நின்று வெளிவரும். இவ்வாறு வேகத்தைத் தடுப்பதால் தோன்றிய நோய் மூத்ராதீதம் எனப்படும். 11 – 12

## 6. மூத்ரஜடரம் எனும் நோய் தோன்றக் காரணமும், இலக்கணமும்

சிறுநீர் வெளியேற இருக்கும்போது அதைத்தடுத்துக் கொள்வதால் சிறுநீர்க்குண்டிகையில் சிறுநீர் நிரம்பிவிடும். சிறுநீர்க் குண்டிகை பருத்துத் தொப்புள் நோக்கி வீங்கும். அபானவாயுவும்

சீற்றம் கொண்டு வயிற்றை வீங்கச் செய்யும். அவ்வமயம் தொப்புளுக்குக் கீழ்ப்பகுதியில் கடுமையான வலியுடன் வீக்கம் தோன்றும். சிறுநீரும், மலமும் கீழ் நோக்கிச் செல்வது தடைப்பட்டுவிடுவதால் இந்நோய் மூத்ரஜடரம் எனப்படும். 13, 14

## 7. மூத்ரோத்ஸங்கம் எனும் நோயின் இலக்கணம்

சிறுநீரை வெளியேற்றும்போது சிறுநீர், சிறுநீர்க்குண்டிகை, சிறுநீர்க்குழாய், குறியின் முனைமொட்டு ஆகிய பகுதிகளில் தங்கிவிடும். அல்லது இரத்தம் கலந்து சிறுநீர் வெளிப்படும். சில நேரங்களில் மெல்ல மெல்ல விட்டுவிட்டு வலியுடனோ வலியின்றியோ வெளிவரும். சீற்றமடைந்த வாதத்தால் தோன்றிய ந்தக் கோளாறு மூத்ரோத்ஸங்கம் எனப்படும். 15 – 16

## 8. மூத்ரக்ஷயம் எனும் நோயின் இலக்கணம்

வறட்சித்தன்மை கொண்டவருக்கும், மிக்க சோர்வு கொண்டவருக்கும் வஸ்தியில் (சிறுநீர்க்குண்டிகையில்) உள்ள பித்தமும், வாதமும் சீற்றம் பெற்று சிறுநீரின் அளவைக் குறைத்துவிடும். இந்நோய் மூத்ரக்ஷயம் எனப்படும். இந்நோய் தோன்றினால் மூத்திரக்குண்டிகை, சிறுநீர்ப்பை முதலிய பகுதிகளில் வலியும், எரிச்சலும் தோன்றும். 17

## 9. மூத்திர கிரந்தி எனும் நோயின் இலக்கணம்

சிறுநீர்ப்பைக்குள் அதன் வாய்ப்பகுதியில் உருண்டையாகவும், சிறியதாகவும், நிலைபெற்றிருப்பதாகவும், எப்பொழுதும் விடாமல் துன்பம் விளைவித்துக்கொண்டும், சிறுநீர்க்குழாய் முகத்தை அடைத்துக் கொண்டுள்ளதாகியும், அச்மா எனும் சிறுநீர்ப்பையில் கல் எனும் நோயைப் போலத் துன்பம் விளைவித்துக்கொண்டும் திடீரெனத் தோன்றும் நோய் மூத்திர கிரந்தி எனப்படும். 18–19

## 10. மூத்ரசுக்கிரம் எனும் நோயின் இலக்கணம்

சிறுநீர் வெளிப்பட இருக்கும்போது (அதைத் தடுத்துக் கொண்டு) மங்கையுடன் கலவி புரிந்ததால் சாம்பல் கலந்த நீரைப்

போல நிறம் கொண்டுள்ள சிறுநீருடன் கூடிய விந்து சிலநேரங்களில் சிறுநீர் கழிப்பதற்கு முன்போ, சிறுநீர் கழித்ததுமோ வெளியேறும். இந்நோய் மூத்திர சுக்கிரம் எனப்படும். *20-21*

### *11. உஷ்ண வாத இலக்கணம்*

*அளவுக்கு மீறிய உடற்பயிற்சி, கால் நடையாக வெகுதூரம் நடத்தல், வெய்யிலில் வெகுநேரம் இருத்தல் எனும் காரணங்களால் வாதத்துடன் பித்தமும் சீற்றமடைந்து சிறுநீர்க்குண்டிகை, சிறுநீர்க் குழாய், ஆஸனவாய், குறி எனும் பகுதிகளில் அழற்சியைத் தோற்றுவிக்கும். நோயாளி அடிக்கடி மிக்க சிரமத்துடன் மஞ்சள் கலந்த நீரைப்போல இரத்தம் கலந்த சிறுநீரை வெளியேற்றுவார். அல்லது சிறுநீரை மட்டும் வெளியேற்றுவார். இந்த நோய் உஷ்ணவாதம் எனப்படும். 22-23*

### *12. இரு வகை மூத்ரௌகஸாத நோய்களின் இலக்கணம்*

*பிசுபிசுப்பு அற்றதாகி மஞ்சள் நிறம்கொண்டு அழற்சியுடன் அடர்த்தியாக வெளிவருவதும், சிறுநீர் உலர்ந்த பிறகு கோரோசனத்தூள் போன்ற நிலை கொள்ளுவதுமான நோய் பித்தத்தால் தோன்றிய மூத்ரௌகஸாதம் எனப்படும். பிசுபிசுப்பான அடர்த்தியான வெண்ணிறம் கொண்டு மிக்க கஷ்டத்தை விளை வித்து வெளியேறும், வெளிப்பட்ட சிறுநீர் உலர்ந்ததும் சங்குத்தூள் போன்ற நிறம் காணப்படுவதுமான நோய் கபத்தால் தோன்றிய மூத்திரௌகஸாதம் எனப்படும். இது பன்னிரெண்டாவது வகை நோயாகும். 24-26*

### *13. மூத்திராகாதத்திற்குப் பொது சிகிச்சை*

*அறிவாற்றல் மிகுந்த மருத்துவர் எல்லா வகையான மூத்திராகாத நோய்களுக்கும் கஷாயம், விழுது, நெய்மருந்து, பல வகையான தின்பண்டங்கள், இலேகியங்கள், பால், க்ஷாரவகை, மது ஆஸவம், உபநாஹம் முதலான உடல் வியர்க்கச் செய்யும் முறைகள் உத்தரவஸ்தி, எண்ணெயாலான பேதியாகச் செய்யும் மருந்துகள், அச்மரி எனும்நோயைத் தணிக்கவல்ல மருந்துகள் முதலியவற்றைப் பயன்படுத்த வேண்டும். மற்றும் மூத்ராகாதம் எனும் நோயைத் தணிக்கவல்ல மருந்து வகைகள் எல்லாவற்றையும் மூத்ராகாத நோயில் பயன்படுத்த வேண்டும். 27-28*

### 14. மூத்ராகாத நோய்க்கு *ஏர்வாகு விழுது

கக்கரிக்காய் விதை ஒரு தோலா அளவு கொண்டு நீருடன் நன்கு அரைத்து அதில் இந்துப்பு சேர்த்து நான்கு தோலா புளிப்புக் காடியுடன் பருகச்செய்தால் மூத்ராகாத நோய் அகலும். 29

### 15. மூத்ராகாதத்திற்கு ஸுரை எனும் மது

இரண்டு தோலா அளவு ஸுரை எனும் மதுவுடன் இந்துப்பு கலந்து பருகச் செய்தால் மூத்ராகாதம் தணியும். இதைப் போலவே புலால் உணவு உட்கொண்டு தேன் அல்லது தேனாலான மது, வெல்லத்தாலான மது ஆகியவற்றைப் பருகச் செய்க. 30

### 16. மூத்ராகாதத்திற்கு குங்குமப்பூ

தூய குங்குமப்பூ ஒரு தோலா கொண்டு பன்னீருடன் நன்கு அரைத்து அதில் ஒரு தோலா தேன், இரண்டு தோலா நீர் கலந்து நன்றாகக் கலக்கி இரவு முழுவதும் மூடி வைத்திருந்து மறுநாள் காலை காலைக்கடன்களை முடித்தபிறகு உட்கொண்டால் மூத்ராகாத நோயில் சுகம் ஏற்படும். 31

### 17. வேறு முறை

அரிசி, கோதுமை, முதலியவற்றின் மாவைக்கொண்டு, செய்த சுரை எனும் மது இரண்டு தோலா அளவு கொண்டு, இரண்டு தோலா மாதுளை சுரசம் கலந்து புளிக்கச் செய்து அதில் ஏலக்காய், சீரகம், சுக்கு எனும்இவற்றின் தூள் ஒவ்வொன்றும் ஒவ்வோர் உளுந்து எடை வீதம் கலந்து ஒரு உளுந்து எடை இந்துப்பு கலந்து பருகச் செய்தால் மூத்ராகாத நோயில் சுகம் உண்டாகும். 32

### 18. வாத பித்தங்களாலான மூத்திராகாதத்திற்குச் சிகிச்சை

**ஓரிலை முதலான அதாவது விதாரிகந்தா முதலான கூட்டுப் பொருள்களுடன் நெருஞ்சிவேர் ஆகியவற்றைச் சம அளவில் கொண்டு மொத்தமாக எட்டு பலம் அளவில் சேர்த்துத் தூளாக்கி**

***ஏர்வாகு – கக்கரிக்காய்**

அத்துடன் எட்டு மடங்கு (64 பலம்) பால், அதற்கு நான்கு மடங்கு நீர் கலந்து பாலின் அளவு மிஞ்சியிருக்கக் காய்ச்சி வடிகட்டி அந்தப் பாலில் தேனும், சர்க்கரையும் கலந்து பருகச்செய்தால் வாதத்தாலும் பித்தத்தாலும் தோன்றும் மூத்ராகாத நோய் தணியும். 33–34

## 19. சிறுநீர் நோய்களைப் போக்கும் [1]ராஸ பவாஜி வர்ச்ச ரஸம்

கழுதை, குதிரை எனும் இவற்றில் ஒன்றின் அப்பொழுதே வெளியேற்றப்பட்ட சாணத்தைத் துணியில் வைத்துப் பிழிந்து எடுத்த சாறு நான்கு பலம் அளவு பருகச் செய்தால் சிறுநீர் நோய்கள் தணியும். 35

## 20. கோரைக்கிழங்கு முதலியவற்றின் விழுது

கோரைக்கிழங்கு, கடுக்காய், தேவதாரு, பெருங்குரும்பை, அதிமதுரம் எனும் இவற்றைச் சம அளவு கொண்டு தூளாக்கித் துணியில் சலித்து அத்தூள் ஒரு தோலா எடை அளவும், இளஞ்சூடுள்ள நீர் அல்லது பால் என்பதனைத் துணை மருந்தாகவும் செய்து உட்கொள்ளச் செய்தால் சிறுநீர்க் கோளாறு நீங்கும். 36

## 21. [2]அபயாதி கல்கம்

கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய் எனும் மூன்றையும் சம அளவு கொண்டு தூளாக்குக. இதில் சிறிதளவு இந்துப்பு கலந்து அரை தோலா அளவாக இளஞ்சூடுள்ள நீருடன் உட்கொள்ளச் செய்தால் சிறுநீர்த்தடை முதலான நோய்கள் தீரும் 37

## 22. திராட்சை விழுது

உலர்ந்த திராட்சை ஒரு தோலா எடை கொண்டு, நீர்விட்டு நன்கு அரைத்து எட்டு தோலா நீரில் கலந்து ஒரு கண்ணாடி பாத்திரத்தில் வைத்து ஆடையால் மூடி ஓரிரவு வைத்திருந்து மறுநாள் காலையில் நன்றாக அதைக் குழப்பி உட்கொண்டால் மூத்திராகாதம் தணியும். 38

1. ராஸபம் – கழுதை, பாஜி – குதிரை, வர்ச்சம் – சாணம்.
2. அபயா – கடுக்காய்

## 23. முள்ளுக்கத்திரி சுரசம்

முள்ளுக்கத்திரி செடியை வேருடன் எடுத்து அரைத்துச் சுரசம் எடுக்கவும். அல்லது புடபாக முறைப்படிப் பக்குவம் செய்து சாறு எடுக்கவும். இந்த சுரசத்தில் 16 தோலா அளவு காலையில் பருகினால் சிறுநீர்க்கோளாறுகள் தணியும். 39

## 24. நெல்லிக்கனி சுரசம்

பச்சையான புது நெல்லிக்காய்களை இடித்துத் துணியில் வைத்துப்பிழிந்து சாறு எடுக்கவும். இந்தச் சாறு பதினாறு தோலா அளவு கொண்டு அதில் இரண்டு தோலா அளவு தேன் கலந்து பருகச் செய்தால் சிறுநீரைச் சார்ந்த் கோளாறுகள் நீங்கும். 40

சிறு ஏலக்காய்த்தூள் ஒரு உளுந்து எடை கொண்டு நான்கு தோலா அளவு நெல்லிக்கனிச் சாற்றுடன் உட்கொள்ளச் செய்தால் சிறுநீர் கோளாறுகள் நீங்கும். 41

## 25. வேறு முறைகள்

பனை மரத்தின் பச்சை வேரை மிகக் குளிர்ந்த நான்கு தோலா அளவுள்ள அரிசி கழுவிய நீருடன் அரைத்து வடிகட்டி பருகச் செய்க. அல்லது கத்தரிச்செடியின் வேர் அல்லது விதைகளைக் குளிர்ந்த நீருடன் அரைத்துக்கொண்டு, கறந்த சூட்டுடன் கூடிய பால், அல்லது தூயதான பச்சை (காய்ச்சாத) பால் பத்து தோலா அளவு கொண்டு முன் அரைத்த விழுதைச் சேர்த்துக் காலை வேளையில் பருகச் செய்தால் அனைத்துவகை மூத்ராகாத நோய்களும் தணியும். 42

## 26. சிறுநீர்க் கோளாறுகளுக்குப் பால்

இனிப்புச் சுவை கொண்ட காகோலி முதலான கூட்டுப் பொருள்களின் விழுது இரண்டு தோலா, பதினாறு தோலா அளவு பால், நான்கு மடங்கு அதாவது 64 தோலா அளவு நீர் கலந்து பாலின் அளவு மிஞ்சியிருக்கக் காய்ச்சுக. அதில் ஒரு தோலா அளவு நெய் கலந்து உட்கொள்ளச் செய்தால் சிறுநீர்க் கோளாறுகள் நீங்கும். சிறுநீர்க்குழாயில் தோன்றும் கல் எனும் நோய் அகலும். 43

### 27. சிறுநீர்க் கோளாறுகளுக்குச் சிற்றாமுட்டி முதலியன

சிற்றாமுட்டி, நெருஞ்சி, கிரௌஞ்சம் எனும் பறவையின் எலும்பு, அல்லது காஞ்சொரிவிதை, நீர்முள்ளி, அரிசி, சதபர்வா எனும் மூலிகையின் வேர், தேவதாரு, கொடிவேலி, தான்றித்தோல் எனும் இவற்றைச் சமஅளவில் மொத்தம் இரண்டு தோலா அளவு கொண்டு குளிர்ந்த நீர்விட்டு அரைத்து விழுதாகச் செய்து சுரையுடன் உட்கொள்ளச் செய்தால் எல்லாவகையான மூத்ராகாதங்களும் அச்மரி எனும் நோயும் தணியும். 44-45

### 28. க்ஷார முறை :

பாதிரி மரத்தை, எரித்த சாம்பலை நான்கு மடங்கு அல்லது ஆறு மடங்கு நீர் சேர்த்து எழு முறை ஸூத்ரஸ்தானம் 11ஆம் அத்தியாயத்தில் கூறியபடி பரிஸ்ருதம் எனும் முறையில் பக்குவம் செய்து நிழலில் உலர்த்திக் கொள்க. இது க்ஷாரமாகும். இதில் நான்கு முதல் எட்டு குன்றிமணி எடைத்தூளைச் சிறிது எண்ணெய் கலந்து நீருடன் உட்கொள்ளச் செய்தால் சிறுநீர்க் கோளாறுகள் அகலும். 46

### 29. சிறுநீர்க் கோளாறுகளுக்கு *நலாதி க்ஷீரம் :

நலம் எனும் புல், கல்லூர் வஞ்சி, தர்ப்பை, அறுபதாங்குறுவை நெற்பயிர்வேர், கத்தரிச்செடி வேர், அல்லது விதை, முதுவேனில் பருவத்தில் தோன்றிய சுத்திரிக்கொடி வேர் அல்லது விதை, விஜயசாரம் எனும் இவற்றைச் சம அளவாக மொத்தம் இரண்டு தோலா அளவு கொண்டு பதினாறு தோலா பால், அறுபத்து நான்கு தோலா நீர் கலந்து பால் அளவு மிஞ்சி இருக்கும் வரை காய்ச்சுக. பிறகு வடிகட்டிக் கொள்க. இது நலாதி க்ஷீரமாகும். இந்த மருந்தில் ஒரு தோலா அளவு நெய் கலந்து பருகச் செய்தால் சிறுநீர்க் கோளாறுகள் அனைத்தும் நீங்கும். 47

### 30. சிறுநீர்க்கோளாறுகளுக்கு க்ஷாரோதகம்

பாதிரி, யவக்ஷாரம், மலைவேம்பு, எள் எனும் இவற்றை முறைப்படி க்ஷாரம் செய்து அதை நீருடன் கலந்து கொள்க. பிறகு

---

*நலம் - ஒருவகைப் புல்

**மகாபலாகிருதம்***

கொடிவேலி, நன்னாரி, சிற்றாமுட்டிவேர், கருநன்னாரி, திராட்சை, துமட்டி, திப்பிலி, பெருந்துமட்டி, அதிமதுரம், கடுக்காய், நெல்லிக்காய் இலை ஒவ்வொன்றும் ஒரு கர்ஷம் வீதம் நன்கு இடித்து நீருடன் விழுதாக அரைத்துக் கொள்க. பிறகு அத்துடன் நான்கு பிரஸ்தம் அல்லது 256 தோலா, நெய் பால் ஒரு துரோணம், (அல்லது 1024 தோலா) நீர் இரு துரோணம் அளவு சேர்த்து நெய் அளவு மிஞ்சியிருக்கக் காய்ச்சி குளிர்ந்த பிறகு வடிகட்டுக. பிறகு அதில் சர்க்கரை ஒரு பிரஸ்தம், மூங்கில் உப்புத்தூள் ஒரு பிரஸ்தம் எனக் கலந்து நன்றாகக் கலக்கி மண் பாத்திரத்திலோ கண்ணாடிப் பாத்திரத்திலோ வைக்கவும். தோஷத்திற்கும் உடல் வலிமைக்கும் ஏற்றவாறு ஆறு உளுந்து முதல் ஒரு தோலா அளவு வரை காலை வேளையில் உட்கொள்ளச் செய்க. வாதத்தால், பித்தத்தால், கபத்தால் ரத்தத்தால் கேடுற்ற விந்து நோய்களிலும், கிரந்திகளுடன் கூடிய விந்து தோஷத்திற்கும் இந்நெய் மருந்தை நான்கு மாதங்கள் வரை பயன்படுத்திச் செய்க. இது உடல் செழிப்பைத்தரும். வலிமையையும், விந்துவையும் மிகச் செய்யும். நோய்கள் அனைத்தையும் நீக்கவல்லது. இந்நெய் மருந்தைப் பயன்படுத்தும் மங்கை விரைவில் மலட்டுத் தன்மை நீங்கப்பெறுவாள். மற்றும் இரத்த தோஷங்கள், பெண்குறிக் கோளாறுகள் நீங்கும். சிறுநீரைச் சார்ந்த நோய்கள் அனைத்தும் தணியும். 66–72

**சிறுங்கட்டூர், நடாதூர் எஸ்.என். ஸ்ரீராமதேசிகன் எழுதிய ஸு'சுருத ஸம்ஹிதை உத்தரஸ்தானம் தமிழாக்க நூலின் மூத்ராகாத பிரதிஷேதம் எனும் ஐம்பத்தெட்டாம் அத்தியாயம் முற்றும்.**

*மகாபலா – பேராமுட்டி

# மூத்ரகிருச்சிர பிரதிஷேதம்

## எனும்

## ஐம்பத்தொன்பதாம் அத்தியாயம்

இனி தன்வந்திரி பகவான் ஸுசுருதர் முதலான சீடர்களுக்கு உபதேசம் செய்தபடி நீர்ச்சுருக்கு எனும் நோய்க்கு உரிய சிகிச்சை முறைகளை விளக்குவோம்.

### 1. நீர்ச்சுருக்கு நோய் வகைகள்

வாதம், பித்தம், கபம் எனும் தோஷங்களால், மூன்றும் சேர்ந்த ஸந்நிபாதத்தால், அடிபடுவதால், மலம் சேர்ந்து விடுவதால், அச்மரி எனும் சிறுநீர் குழாயில் கல் தோன்றுவதால், சர்க்கரை நோயினால் மூத்திரகிருச்சிரம் எனும் நீர்ச்சுருக்கு எட்டு வகையாகத் தோன்றும். 3

### 2. வாதத்தால் தோன்றும் நீர்ச்சுருக்கு இலக்கணம்

வாதத்தால் தோன்றும் நீர்ச்சுருக்கு நோயில் நோயாளி விரை, விரைப்பை, குறிப்பகுதி, சிறுநீரகம் ஆகிய உறுப்புகளில் அழுத்தம் ஏற்பட்டு அதனால் அவ்வுறுப்புகள் பிளந்து விடுவது போன்ற வலியுடன் சிறுநீரை வெளிவிடுவார். இத்தகைய நோய் வாதத்தால் தோன்றும் நீர்ச்சுருக்கு எனப்படும். 4

மூத்ரகிருச்சிரம் - நீர்ச்சுருக்கு - அந்நோய்க்கு உரிய சிகிச்சை முறைகளை விளக்குவதால் இந்த அத்தியாயம் மூத்ரகிருச்சிரப்ரதிஷேதம் எனும் பெயர் பெற்றது.

### 3. பித்தத்தால் தோன்றும் நீர்ச்சுருக்கு இலக்கணம்

பித்தத்தின் சீற்றத்தால் நீர்ச்சுருக்கு தோன்றினால் நோயாளி விரை, சிறுநீரகம், சிறுநீர்க்குழாய் போன்ற பகுதிகளில் நெருப்பால் சுடுவது போன்ற வேதனையுடன் மஞ்சள் நிறத்தில் வெப்பம் கொண்டு சிவந்த நிறத்துடன் சிறிது சிறிதாகச் சிறுநீரை வெளிவிடுவார். இந்த நோய் பித்தத்தால் தோன்றும் நீர்ச்சுருக்கு எனப்படும். 5

### 4. கபத்தால் தோன்றும் நீர்ச்சுருக்கு இலக்கணம்

கபத்தால் தோன்றும் நீர்ச்சுருக்கு நோய் கொண்டபோது நோயாளி விரை, விரைப்பகுதி, சிறுநீர்ப்பை, சிறுநீரகம் முதலியன பளுவாகத் தோன்றுவதுடன் பிசுபிசுப்பும், அடர்த்தியான வெண்ணிறமுள்ள ஓரளவு (குறைந்த) வெப்பமுடைய அல்லது குளிர்ந்த சிறுநீரை வெளியேற்றுவார். நோயாளியின் உடலில் மயிர்க்கூச்சம் உண்டாகும். இத்தகைய நோய் கபத்தால் தோன்றும் நீர்ச்சுருக்கு எனப்படும். 6

### 5. ஸந்நிபாதத்தால் தோன்றும் நீர்ச்சுருக்கு இலக்கணம்

ஸந்நிபாதத்தால் தோன்றிய நீர்ச்சுருக்கில் நோயாளி உடல் முழுவதும், சிறப்பாக சிறுநீர்க்குண்டிகை, சிறுநீர்ப்பை, விரைப் பகுதி, குறிப்பகுதி, (மாதர்களின்) கருப்பை, சினைமுட்டைப்பை, போன்றவற்றில் எரிச்சல், குளிர்ச்சி, வலி முதலியன கொண் டிருப்பார். இருட்டில் புகுவது போல தோன்றும். அடிக்கடி மிக்க சிரமத்துடன் மஞ்சள், சிவப்பு வெண்மை நிறங்களில் சிறுநீர் வெளியிடுவார். இத்தகைய அறிகுறிகள் கொண்டது ஸந்நிபாதத் தால் தோன்றிய நீர்ச்சுருக்கு என்று உணர்க. 7

### 6. அடிபடுதலால் தோன்றும் நீர்ச்சுருக்கு இலக்கணம்

நீர் வழிகளான ஸ்ரோதஸ்கள், உடலுக்குள் தோன்றிய அல்லது புறக்காரணத்தால் தோன்றிய காயங்களால் காயம் பட்டபோது அல்லது தாக்குண்ட போது மிக்க துன்பம் விளைவிப்ப தாகி நீர்ச்சுருக்கு நோய் தோன்றும். இதில் முன்பு கூறப்பட்ட வாதத்தாலான நீர்ச்சுருக்கு இலக்கணங்கள் காணப்படும். 8

## 7. மலத்தால் தோன்றும் நீர்ச்சுருக்கு இலக்கணம்

மலம் வெளிப்பட இருக்கும்போது அதன் வேகத்தைத் தடுப்பதால் அபான வாயு இயற்கைக்கு மாறாகப் பரவி வயிற்றுப் பகுதியில் வீக்கத்தையும், வலியையும் தோற்றுவிக்கும். நீர்ச்சுருக்கையும் தோற்றுவிக்கும். 9

## 8. அச்மரி நோயால் தோன்றும் நீர்ச்சுருக்கு இலக்கணம்.

முன்பு நிதானஸ்தானத்தில் அச்மரி எனும் சிறுநீர் உறுப்புகளில் தோன்றும் கல் எனும் நோயைப் பற்றி விளக்கும்போது அந்நோயால் தோன்றும் நீர்ச்சுருக்கு இலக்கணங்கள் விளக்கப்பட்டுள்ளன. 10

## 9. அச்மரி, சர்க்கரை நோய், என்பனவற்றால் தோன்றும் நீர்ச்சுருக்கு வேற்றுமைகள்

அச்மரி, அவ்வாறே சர்க்கரை (மணல் போன்ற பொருள் சிறுநீர்ப் பகுதியில் சேருதல்) மற்றும் சர்க்கரை நோய்களால் தோன்றும் சிறுநீர்ச்சுருக்கு ஆகிய நோய்களின் தோற்றம், இலக்கணம் ஆகியவை ஒரே வகையாக இருக்கும். ஆனால் இவ்விரண்டின் வேற்றுமைகள் இனி விளக்கப்படுகின்றன. 11

## 10. சர்க்கரை (மணல் போன்ற பொருள் சிறுநீர்பகுதியில் சேருதல்) நோய்த் தோற்றம்

பித்தத்தால் பக்குவம் பெற்றபிறகு வாதத்தால் சிறுசிறு பகுதிகளாகிய சிறு துண்டுகளான கபமே சர்க்கரை அதாவது மணல் போன்றவை ஆகும். 12

## 11. சர்க்கரை இலக்கணம்

சர்க்கரை போன்ற (மணல்) சிறுநீரகத்தில் சேர்ந்த போது இதயத்தில் வலி, கைகால்கள் போன்ற உறுப்புகளில் நடுக்கம், வயிறு, சிறுநீர்க்குண்டிகை ஆகிய பகுதிகளில் வலி, சடராக்கினி வலிமை இழத்தல், நினைவு தவறுதல், மிக்க துன்பம் விளைவிக்கும் நீர்ச்சுருக்கு எனும் அறிகுறிகள் தோன்றும். 13

### 12. துன்பம் தணியும் காலம்

சிறுநீர் வெளியேறும் வேகத்தால் மணல் போன்ற பொருள்கள் வெளியேறிய பிறகு துன்பம் தணியும். மணல் போன்ற பொருள் மீண்டும் தோன்றிச் சிறுநீர்க் குழாயின் வாய்ப்பகுதியை அடைத்துக் கொள்ளும் வரை தடை இருக்காது. 14

### 13. சர்க்கரையால் தோன்றும் நீர்ச்சுருக்குக்குச் சிகிச்சை

இவ்வாறு சர்க்கரை அல்லது மணல் போன்ற பொருள்களால் தோன்றும் நீர்ச்சுருக்கு விளக்கப்பட்டது. இனி இந்த எட்டு வகையான நீர்ச்சுருக்குக்குத் தக்க சிகிச்சை முறைகள் விளக்கப் படுகின்றன. 15

### 14. நீர்ச்சுருக்குக்கு அச்மரி சிகிச்சை

முன்பு அச்மரி எனும் நோயை முன்னிட்டு தோஷங்களுக்கு ஏற்பக் கூறப்பட்ட எண்ணெய்முறை முதலான சிகிச்சை வகை களை நீர்ச்சுருக்கு நோய்க்கும், தோஷங்களுக்கு ஏற்பக் கையாள வேண்டும். அவ்வாறே முன்பு மூத்ராகாதம் எனும் நோய்க்குக் கூறப்பட்ட முறைகளையும் நீர்ச்சுருக்கு நோயில் பயன்படுத்த வேண்டும். 16

### 15. வாதத்தாலான நீர்ச்சுருக்குக்குச் சிகிச்சை

நெருஞ்சி, கல்லூர்வஞ்சி, சதகுப்பை, முள்ளுக்கத்திரி, சிற்றா முட்டி, சதாவரி, சிற்றரத்தை, முன்னைப்பட்டை, அபராஜிதை, விதாதிகந்தா முதலான கூட்டுப் பொருள்களைச் சார்ந்தவை ஆகிய இவை அனைத்தையும் சம அளவில் 16 பலம் அளவு கொண்டு இடித்து நீர் விட்டு அரைத்து விழுதாகச் செய்க. நெய், வசை (நிணநீர்) கொழுப்பு எனும் இம்மூன்று வகை எண்ணெய்களும் சேர்ந்து 64 பலம் எடையில் கொண்டு அல்லது 64 பலம் எடை எண்ணெயை கலந்து 4 பிரஸ்தம் (256 பலம்) நீரும் கலந்து எண்ணெய்ப்பகுதி மட்டும் மிஞ்சியிருக்க முறைப்படி எண்ணெய் மருந்து செய்க. குளிர்ந்த பிறகு வடிகட்டுக. இந்த எண்ணெய் அல்லது நெய் மருந்தை 6 உளுந்து எடை முதல் தேவைக்கேற்ப தோலா எடை அளவு மருந்து வரை இளஞ்சூடுள்ள நீர்

அல்லது பாலுடன் கலந்து உட்கொள்ளச் செய்க. மற்றும் இம்மருந்தை அநுவாஸன வஸ்தி, உத்தரவஸ்தி முறைகளிலும் பயன்படுத்துக. 17-18

## 16. நெருஞ்சி எண்ணெய்

நெருஞ்சி சுரசம் அல்லது கஷாயம் நான்கு பிரஸ்தம் அளவு கொண்டு அத்துடன் ஒரு பிரஸ்தம் எண்ணெய் கலந்து முறைப்படி எண்ணெய் காய்ச்சுக. இந்த எண்ணெய் மருந்தில் 6 உளுந்து எடை முதல் ஒரு தோலா அளவு வரை கொண்டு அத்துடன் ஒரு தோலா வெல்லம், பத்து தோலா பால், ஒரு உளுந்து எடை சுக்குத்தூள் கலந்துப் பருகவும், அநுவாஸன வஸ்தி, உத்தரவஸ்தி முறைகளில் பயன்படுத்தவும் செய்க. அல்லது நெருஞ்சிக் கஷாயத்தில் எண்ணெய் கலந்து வெல்லம், பால், சுக்குத்தூள் எனும் மூன்றையும் தகுந்த அளவு சேர்த்து எண்ணெய் மருந்து செய்து வாதத்தால் தோன்றும் நீர்ச்சுருக்குக்குப் பயன்படுத்துக. 19

## 17. பித்தத்தாலான நீர்ச்சுருக்குக்குச் சிகிச்சை

திருண பஞ்சமூலம், உத்பலாதீகணத்தைச் சேர்ந்த கூட்டுப் பொருள்கள், காகோலி முதலான கூட்டுப்பொருள்கள், நியக்ரோதாதி கூட்டுப்பொருள்கள் எனும் இவற்றின் விழுதால் செய்த நெய் அல்லது பால் மருந்தைப் பயன்படுத்தினால் பித்தத்தால் தோன்றிய நீர்ச்சுருக்கு தணியும். 20

## 18. பித்தத்தாலான நீர்ச்சுருக்குக்கு உத்தரவஸ்தி

திருண பஞ்சமூலம் முதலான கூட்டுப் பொருள்கள், உத்பலாதி கூட்டுப்பொருள்கள், காகோலி முதலான கூட்டுப்பொருள்கள், நியக்ரோதாதி கூட்டுப் பொருள்கள், ஆகியவற்றின் விழுதுடன் செய்த எண்ணெய் அல்லது நெய் மருந்துகளைக் கொண்டு உத்தர வஸ்தியைப் பித்தத்தாலான நீர்ச்சுருக்குக்குப் பயன்படுத்த வேண்டும். 21

## 19. பித்தநீர்ச்சுருக்குக்கு மூன்று வகை வஸ்திகள்

**நிரூஹணம், அநுவாஸனம், உத்தரம் எனும் மூன்று வகை வஸ்தி முறைகளில் திருணபஞ்சமூலம், உத்பலாதிகணம்,**

காகோலியாதி கணம், நியக்ரோதாதி கணம் ஆகியவற்றின் கூட்டுப் பொருள்களாலான நெய் அல்லது எண்ணெய் மருந்துகளை தோஷத் திற்கும், நிலைமைக்கும் தக்கபடி பித்தநீர்ச்சுருக்கில் பயன்படுத்த வேண்டும். வஸ்தியைப் பயன்படுத்திய பிறகு கருப்பஞ்சாறு, பால், திராட்சைச்சாறு ஆகியவற்றில் ஒன்றுடன் ஆராக்வதசூர்ணம், சிவதைத் தூண், அதிமதுரத்தூள் ஆகியவற்றில் ஏதேனும் ஒன்று 3 முதல் 6 உளுந்து எடை வரை உட்கொள்ளச் செய்து பேதியாகச் செய்ய வேண்டும். 22

## 20. கபத்தால் தோன்றும் நீர்ச்சுருக்குக்குச் சிகிச்சை

சுரசாதி கணம், ஊஷகாதிகணம், முஸ்தாதிகணம், வருணாதி கணம் எனும் கூட்டுப்பொருள்களாலான விழுதைக் கொண்டு செய்த நெய் அல்லது எண்ணெய் மருந்து, யவாகூ முதலான கஞ்சிவகை ஆகியவற்றைக் கபச்சீற்றத்தாலான நீர்ச்சுருக்கில் பயன்படுத்த வேண்டும். 23

## 21. ஸந்நிபாதத்தாலான நீர்ச்சுருக்குக்குச் சிகிச்சை

வாதம் முதலான மூன்று தோஷங்களும் சேர்ந்து சீற்றமுறு வதால் தோன்றிய நீர்ச்சுருக்குக்கு முதலில் அம்மூன்றிலும் அதிக அளவு சீற்றமுற்ற தோஷத்தை அறிந்து அதற்கேற்ப முன்கூறப்பட்ட சிகிச்சை முறைகளில் ஏதேனும் ஒன்றையோ அல்லது இரண்டு, மூன்று முறைகளைக் கலந்தோ தக்கபடிப் பயன்படுத்த வேண்டும். 24

பேய் அத்தி, வெள்ளைச்சாரடைவேர், தர்ப்பை, தூயசிலாஜித்து எனும் இவற்றைச் சம அளவில் கொண்டு தூளாக்கி அதில் மூன்று முதல் ஆறு உளுந்து எடை வரை நீர், சுரை எனும் மது, கருப்பஞ் சாறு எனும் இவற்றில் ஒன்றுடன் உட்கொள்ளச் செய்தால் ஸந்நிபாதத்தால் தோன்றிய நீர்ச்சுருக்கு தணியும். 25

## 22. அடிபடுதலால் தோன்றும் நீர்ச்சுருக்குக்குச் சிகிச்சை

சிறுநீர்ப்பகுதியில் அடிபடுதலால் தோன்றிய நீர்ச்சுருக்குக்கு ஸத்யோவிரண சிகிச்சை முறைகளைக் கையாள வேண்டும். அதற்கேற்ற பணிவிடைகளைச் செய்க. 26

## 23. மலத்தடையாலான நீர்ச்சுருக்குக்குச் சிகிச்சை

மலம் வெளிப்படும்போது அடக்கிக் கொள்வதால் தோன்றும் நீர்ச்சுருக்குக்கு வாதத்தைப் போக்கும் சிகிச்சை முறைகளைக் கையாள வேண்டும். மற்றும் உடல் வியர்க்கச் செய்தல், எண்ணெய் கலந்த வெந்நீரை நிரப்பிய தொட்டியில் மூழ்கி இருக்கச் செய்தல். எண்ணெய் முறை, எண்ணெய்க் குளியல், வஸ்தி, தூள்மருந்து, சாறுபருகச் செய்தல் போன்ற முறைகளைத் தகுந்தபடி பயன்படுத்த வேண்டும். 27

## 24. அச்மரி, சர்க்கரை போன்ற பொருள் சிறுநீர்ப் பகுதியில் தோன்றுதல் முதலானவற்றால் நீர்ச் சுருக்குக்குச் சிகிச்சை

அச்மரி, சர்க்கரையாலான நீர்ச்சுருக்கு நோய்களுக்கு அச்மரி சிகிச்சை அத்தியாயத்தில் முன்கூறப்பட்ட சிகிச்சை முறைகளைக் கையாள வேண்டும்.

**சிறுங்கட்டூர், நடாதூர் எஸ்.என். ஸ்ரீராமதேசிகன் எழுதிய**
**ஸுச்ருத ஸம்ஹிதை உத்தரஸ்தானம் தமிழாக்க நூலின்**
**மூத்ரகிருச்சிர பிரதிஷேதம் எனும்**
**ஐம்பத்தொன்பதாம் அத்தியாயம் முற்றும்.**

# அமானுஷ்யோபஸர்கப்பிரதிஷேதம்

## எனும்

## அறுபதாம் அத்தியாயம்

இனி தன்வந்திரி ஸுசுருதர் முதலான சீடர்களுக்கு உபதேசம் செய்தபடி மனிதர்கள் அல்லாத அரக்கர், பிசாசுகள், பூதங்கள் முதலானவற்றால் தோன்றும் துன்பங்களுக்கு உரிய சிகிச்சை முறைகளைக் கூறுவோம். 1,2

### 1. காயம்பட்டவரைக் காத்தல்

காயமடைந்த நோயாளியை எப்பொழுதும் நிசாசரர்கள் வசத்திலிருந்து காப்பாற்ற வேண்டும் எனச் சுருக்கமாக விரணி தோபாஸனீய அத்தியாயத்தில் கூறப்பட்டது அதைப் பற்றிய விளக்கம் இந்த அத்தியாயத்தில் உரைக்கப்படுகிறது. 3

### 2. பொதுவாகக் கிரகங்களின் இலக்கணம்

மறைவாக உள்ள பொருள் அல்லது மறைவாகச் (பிறர் அறியாமல்) செய்த உரையாடல் ஆகியவற்றை அறிந்து கொள்ளுதல், வரும் பொருளை உணர்தல், உடல்நிலையும், மனநிலையும் சீராக இன்மை, காரணமின்றி மிக்க சினம் கொள்ளுதல், மனித இயற்கைக்கு மாறுபட்ட செயல்களில் ஈடுபடுதல் போன்றவை காணப்பட்டால் அத்தகையவர் கிரகத்தால் சூழ்ந்து கொள்ளப் பட்டவர் என அறிக. 4

---

அமானுஷ – மனிதரல்லாத – தேவர்,அரக்கர், கந்தர்வர், கின்னரர், பிசாசர், குஷ்யகர், பூதங்கள் போன்றவற்றால் தோன்றும் துன்பங்களுக்குரிய சிகிச்சை முறைகளை விளக்குவதால் இந்த அத்தியாயம் அமானுஷோப ஸர்கப் பிரதிஷேதம் எனப்பட்டது.

## 3. கிரகங்களால் சூழ்ந்து கொள்ளப்படக்கூடியவரின் இலக்கணம்

உணவு உட்கொண்ட பிறகு, அல்லது மலசலம் கழிந்த பிறகு நீரால் தூய்மைப்படுத்திக் கொள்ளாமல் இருப்பவர். சாஸ்திரங்கள் கூறிய, தன்குலத்திற்கு ஏற்ற நல்லொழுக்கத்தைக் கடைப்பிடிக்காதவர், உடலில் காயம் பட்டுள்ளவர், உடலின் விரணம் இல்லாவிடினும் தூய்மை யற்றிருப்பவர், அத்தகையவரைத் துன்புறுத்தக் கூடிய கிரகம், அவருக்குத் துன்பம் விளைவிக்கும் விருப்பத்துடனும், அவரிடமிருந்து பூசை, வழிபாடு முதலிய பெற விரும்பியும் சூழ்ந்து கொள்ளும். அவரிடமிருந்து தன் விருப்பம் நிறைவேறாத போது அவரைக் கொன்று விடும். 5

## 4. கிரகங்களின் எண்ணிக்கை

கிரகங்கள் எண்ணிக்கை அளவற்றவை. ஆனால் அவற்றில் தலைமை தாங்கி வேறு வேறு சிறப்பான இலக்கணங்களுடன் கூடியவற்றின் எண்ணிக்கை எட்டாகும். 6

1. தேவதை, 2. தேவதைகளுக்குப் பகையான தைத்யர், 3. கந்தர்வர், 4. இயக்கர், 5. பித்ருக்கள், 6. புஜங்கர், 7. அரக்கர், 8. பிசாசர் எனக் கிரகங்கள் எண் வகையாகும்.

## 5. தேவகிரகத்தால் துன்புறுத்தப்படுபவரின் இலக்கணம்

எப்பொழுதும் மகிழ்ச்சியுடன் காணப்படுதல், புனித நிலையில் இருத்தல், சிறந்த நறுமணப்பொருளிலும், அத்தகைய மலர் மாலைகளிலும் விருப்பம் மிகுதல். உறக்கம், சோம்பல் ஆகியவை இன்மை, மழை பொழிவது போல் இடைவிடாமல் வடமொழியில் உரையாடுதல், மிக்க பொலிவு கொண்டிருத்தல், நிலைபெற்ற பார்வை கொண்டிருத்தல் என்பன தெய்வகிரகத்தால் பற்றிக் கொள்ளப்பட்டவரின் இலக்கணங்களாகும். 8

## 6. தேவர்களுக்குப் பகையான தைத்யர் கிரகத்தால் பற்றிக் கொள்ளப்பட்டவரின் இலக்கணம்

தைத்ய கிரகத்தால் பற்றிக் கொள்ளப்பட்டவர் உடலில் வியர்வை மிகுந்திருக்கும். அந்தணர், பெரியவர்கள் (குரு முதலான

வர்கள்) தேவதைகள் ஆகியவர்களை எப்பொழுதும் தூற்றிக் கொண்டிருப்பார். பார்வை கோணலாக இருக்கும். அவர் எத்தகையவர்க்கும் அஞ்சமாட்டார். தீய வழிகளில் அறநெறிக்குப் புறம்பான வழிகளில் செல்பவராக இருப்பார். அளவுக்கு மீறி உணவு, குடிநீர் ஆகியவற்றை உட்கொண்டாலும் மனநிறைவு கொள்ளமாட்டார். அவரது ஆன்மா எப்பொழுதும் தீய நிலையிலேயே இருக்கும். 9

## 7. கந்தர்வ கிரகத்தால் பற்றிக்கொள்ளப்பட்டவரின் இலக்கணம்

எப்பொழுதும் மகிழ்ச்சி கொண்டிருத்தல், ஆற்றங்கரை, தோட்டம் முதலிய பகுதிகளில் உலாவுவதில் மிக்க விருப்பம் தூய செயல்களை புரிதல், இசை நறுமண மலர் மாலைகள் போன்றவற்றின் மிக்க விருப்பம், நாட்டியம் செய்து கொண்டு குறைந்த ஒலியில் நகைத்துக் கொண்டிருத்தல் போன்ற இலக்கணங்கள் காணப்பட்டால் அத்தகையவர் கந்தர்வ கிரகத்தால் பற்றிக் கொள்ளப்பட்டவர் என்று அறிக. 10

## 8. இயக்கர்களால் பற்றிக் கொள்ளப்பட்டவரின் இலக்கணம்

கண்கள் செம்பு நிறத்தில் சிவந்து காணப்படும். மெலிந்து சிவந்த நிறமுள்ள ஆடைகளை அணிவதில் விருப்பம், அறிவாற்றல் மிகுந்தும், கம்பீரத் தோற்றத்துடனும் காணப்படுதல். பொறுமை மிகுந்திருந்து குறைந்த அளவில் பேசுதல் எனும் இலக்கணங்களுடன் கூடியவர் இயக்கர் கிரகத்தால் பற்றிக் கொள்ளப்பட்டவர் ஆவார். 11

## 9. பித்ரு கிரகங்களால் பற்றிக் கொள்ளப்பட்டவர் இலக்கணம்

அமைதியான தன்மை கொண்டிருத்தல், வலது தோளில் மேல் துணியைத் தாங்கிக் கொண்டு அபஸவ்யமான நிலையில் தர்ப்பையால் ஆன ஆஸனத்தில் அமர்ந்து பித்ருக்களுக்கு மாவினால் ஆன பிண்டம் அர்ப்பணம் செய்தல், நீரால் தர்ப்பணம் செய்தல், புலால் உணவில் விருப்பம் கொண்டிருத்தல். எள் - வெல்லம் - பாயசம் போன்ற உணவில் விருப்பம் கொண்டிருத்தல்,

பித்ருக்களிடத்தில் நன்றி செலுத்துதல் போன்ற இலக்கணங்கள் காணப்பட்டால் அத்தகையவர் பித்ரு கிரகத்தால் பற்றிக் கொள்ளப் பட்டவர் என்று உணர்க. 12

## 10. நாக கிரகத்தால் பற்றிக் கொள்ளப்பட்டவரின் இலக்கணம்

பாம்பைப்போல வயிற்றைத் தரையில் வைத்து படுத்துக் கொண்டு அடிக்கடி நகர்தல், உதட்டை அடிக்கடி நாவினால் நக்கிக் கொண்டிருத்தல், உறக்கம் மிகுதல், வெல்லம் - தேன் - பால் பொருள்களைக் கொண்டு செய்த உணவு வகைகளில் விருப்பம் மிகுந்திருத்தல், எனும் இலக்கணங்களைக் கொண்டவர் நாக கிரகத்தால் பற்றிக் கொள்ளப்பட்டவர் ஆவார். 13

## 11. அரக்க கிரகத்தால் பற்றிக் கொள்ளப்பட்டவர்களின் இலக்கணம்

புலால் இரத்தம், பலவகை மது ஆகியவற்றை உட்கொள்வதில் விருப்பம் மிகுதல், வெட்கமின்றி இருத்தல், மிக்க கடுமையான தன்மை கொண்டிருத்தல், சண்டை போடுதல் வீரத்தைக் காட்டுவதில் ஈடுபடுதல், போதிய உணவு உட்கொள்ளாவிடினும் உடல் வலிமை மிகுந்திருத்தல், இரவு வேளைகளில் உலாவுவதில் விருப்பம் கொண்டிருத்தல் குளிரில் இறைவழிபாடு, புனிதச் செயல்கள் ஆகியவற்றை எப்பொழுதும் தூற்றிக் கொண்டிருத்தல் போன்ற இலக்கணங்களைக் கொண்டவர் அரக்க கிரகத்தால் பற்றிக் கொள்ளப்பட்டவர் என்று உணர்க. 14

## 12. பிசாசு கிரகத்தால் பற்றிக் கொள்ளப்பட்டவர் இலக்கணம்

கைகளை உயரத் தூக்கி வைத்துக் கொண்டிருத்தல், உடல் இளைத்தல், உடல் உறுப்புகள் வறண்டிருத்தல், வெகுநேரம் எதையாவது பிதற்றிக் கொண்டிருத்தல், உடலில் கெட்ட நாற்றம் ஏற்படுதல், எப்பொழுதும் மிகவும் அழுக்கடைந்திருத்தல், மிக்க உலோப குணம் கொண்டிருத்தல், அளவுக்கு மீறிய உணவு உட்கொள்ளுதல், மக்கள் யாரும் வசிக்காத தனி இடத்தில் இருக்க

விரும்புதல், குளிர்ந்த நீரைப் பருகுவதில் விருப்பம், இரவு நேரத்தில் சுற்றிக் கொண்டிருத்தல், உணர்ச்சி வசப்பட்டு, அழுது கொண்டிருத்தல், இங்குமங்கும் உலாவிக்கொண்டே இருத்தல் எனும்இலக்கணங்கள் காணப்பட்டால் அத்தகையவர் பிசாசத்தால் பற்றிக் கொள்ளப்பட்டவர் என்று உணர்க. 15

## 13. கிரகங்கள் பற்றிக் கொண்டபோது சிகிச்சைக்கு உட்படாத நிலை

கண்கள் இயற்கையாக இருந்ததை விட மிகப்பெரியனவாக அல்லது பிதுங்கி இருத்தல், கண்களின் மணிகள் அகன்றிருத்தல், விரைவாக நடத்தல், தன் வாயிலிருந்து வரும் நுரை, எச்சில் ஆகியவற்றை நக்கிக் கொண்டிருத்தல், உறக்கம் மிகுதல், நடந்து கொண்டே அடிக்கடி விழுதல், உடல் மிகவும் நடுங்கிக் கொண் டிருத்தல், மலை யானை, மரம் முதலியவற்றிலிருந்து விழுந்ததால் கிரகங்களால் பற்றிக்கொள்ளப்பட்டிருத்தல், முதுமைப்பருவத்தில் கிரகங்களால் பற்றிக் கொள்ளப்படுதல், மிக்க துன்பம் விளைவிக்க வேண்டுமென்ற ஆவல் கொண்ட கிரகத்தால் பற்றிக் கொள்ளப் படுதல் எனும் நிலைகளில் உள்ள நோயாளி சிகிச்சையால் குணம் அடைய மாட்டார் என்று உணர்க. 16

## 14. கிரகங்கள் பற்றிக் கொள்ளும் காலம்

தேவகிரகம் பௌர்ணமியன்றும், அசுர கிரகம் சந்தி வேளையிலும், கந்தர்வ கிரகம் அஷ்டமி அன்றும், இயக்க கிரகம் பிரதமை அன்றும், பித்ரு கிரகம் அமாவாசை அன்றும், நாககிரகம் பஞ்சமி அன்றும் நோயாளியின் உடலைப் பற்றிக் கொள்ளும். அரக்க கிரகம் நள்ளிரவிலும், பிசாச கிரகம் சதுர்த்தசியன்றும் நோயாளியின் உடலில் புகுந்து கொள்ளும். 17–18

## 15. கிரகங்கள் பற்றும் முறை

கிரகங்கள் மனிதர்களைப் பற்றிக்கொள்வது உண்மையானால் (அவை பற்றும் போது) நம் கண்களுக்குப் புலனாகாமைக்குக் காரணம் என்ன? எனும் கேள்விக்கு விடையாவது : கண்ணாடி, நீர், எண்ணெய் முதலியவற்றில் பொருள்களின் நிழல் விழுவதோ, மறைவதோ, நம் கண்களுக்கு (அவை புகுவதும், நீங்குவதும்) விளங்குவதில்லை. உடலில் வெப்பம் குளர்ச்சியாகியவை

படும்போது நம் கண்களுக்குப் புலனாவதில்லை. சூரியனின் கதிர்கள் சூரிய காந்த மலையில் புகுவது நம் கண்களுக்குப் புலனாவதில்லை. சீவன் உடலில் புகுவதும் நம் கண்களுக்குப் புலனாவதில்லை. அவ்வாறே தேவகிரகம் முதலியன மனித உடலில் புகுவதும் நம் கண்களுக்குப் புலனாவதில்லை. 19–20

## 16. தேவாஸுரர்களின் சிறப்புத் தன்மைகள்

தைவம் முதலான கிரகங்களில் கடுமையான தவம், தானம், விரதம், அறச்சொல், கட்டுப்பாடு, உண்மை, அணிமா முதலான எண்வகை சித்திகள் முதலானவை தனித்தனியாகவோ, கூட்டாகவோ அவற்றின் சிறப்பான வலிமைக்கு ஏற்ப இருக்கும். 21

தேவாதி கிரகங்களில் கடுந்தவம், தானம், விரதம் முதலான சிறந்த தன்மைகளைக் கொண்டிருப்பதால் அவை மனிதர்களுடன் சமமாக இருப்பதில்லை. அவை தாமாக மனிதர்களைப் பற்றிக் கொள்வதும் இல்லை. அத்தகைய கிரகங்கள் பற்றிக் கொண்டதாக அறியாமையால் நினைப்பவர்கள் பூதவித்தையைப் பற்றிய சிறப்பினை அறியாதவர்களே ஆவார்கள். 22

## 17. கிரகங்களின் பரிவாரங்கள் மனித உடலில் புகுதல்

இந்தத் தேவாதி கிரகங்களுக்குக் கோடிக்கணக்கில் பணியாளர் களான பரிவாரங்கள், இருக்கும். அவை இரத்தம், வசை எனும் நிணநீர், புலால் ஆகியவற்றை உண்ணும். வலிமை கொண்டு அவை இரவு நேரங்களில் அங்கும் இங்கும் அலைந்து கொண் டிருக்கும். அத்தகையவை மனிதர்களைப் பற்றிக் கொள்ளும். 23

## 18. தேவகணங்களின் பரிவாரங்கள் தேவதைகளைப் போன்றவையே

இரவு நேரங்களில் அலைந்து கொண்டிருக்கும் தேவகண பரிவாரங்கள்(தலைமை தாங்கும்) தேவர்களின் வலிமை, தன்மை முதலியற்றைக் கொண்டிருக்கும். 24

இந்தப் பரிவாரங்களில் புனிதத் தன்மை கொண்டிருப்பவை தேவகிரகங்கள் எனப்படும். ஆகவே இவற்றை தேவதைகளை வணங்குவது போல வழிபடுதல், தேவதைகளை வேண்டி

விருப்பங்களை நிறைவேற்றிக் கொள்வது போலவே இவற்றை வேண்டி விருப்பங்களை நிறைவேற்றிக் கொள்ளுதல் முதலியன செய்யத் தக்கவை. 25

## 19. தேவகிரகங்களின் தன்மைகள்

தேவகண பரிவார கிரகங்கள் தம் தலைவனைப் போன்ற தன்மை, ஒழுக்கம், செயல் கொண்டிருக்கும். ஆயினும் அவை இரத்தம், புலால் ஆகியவற்றை உண்பனவாகும். இவை அரக்கர்களின் பாட்டனாரான நிருதியின் கன்னிகைகளாக இருப்பதே அதற்குக் காரணமாகும். அதாவது மரபின் வழியாகத் தோன்றிய தன்மை என்பதாம். 26

## 20. பரிவார கணங்களின் செயல்

உண்மை, தூய்மை போன்ற நற்பண்புகள் அற்றவராகி நெறிதவறி நடப்பவர்களின் உடலில் புகுந்து தம் வாழ்க்கையை நடத்துமாறு இந்தப் பரிவாரங்களுக்குத் தலைமை தாங்கும் தேவதை கட்டளை இட்டுள்ளது. 27

## 21. கிரகங்களுக்கு பூதங்கள் எனப்பெயர் தோன்றுதல்

தேவகண பரிவாரங்களாக இருந்தும் துன்புறுத்துவதில் விருப்பம் கொண்டவையான பரிவாரங்கள் பூதங்கள் என பூத வித்தை அறிந்தவர்களால் கூறப்பட்டன. 28

## 22. பூதவித்தையின் விளக்கம்

திறமை மிக்க மருத்துவர் சாஸ்திரங்களைக் கற்று அவற்றில் கூறப்பட்டுள்ள விளக்கங்களால் பூதங்களை உணர்ந்து கொள்வதால் இந்த சாஸ்திரம் பூதவித்தை எனப்பட்டது. 29

## 23. கிரகங்களுக்குப் பொது சிகிச்சை

இந்தத் தேவாதி கிரகங்கள் பற்றிக் கொண்டபோது சிகிச்சை புரிய விரும்பும் மருத்துவர் மிக்க கவனத்துடன், தூய்மையுடன் குளியல், பிரும்மசரியம் போன்ற கட்டுப்பாடுகளுடன் பிரணவத்துடன் கூடிய காயத்ரி என்னும் மந்திரத்தை ஒரு லட்சம் முதல் ஒரு

கோடி வரை ஜபம் செய்து எள் நெய் ஆகியவற்றுடன் வேள்வி செய்த பிறகு சிகிச்சையைத் துவங்க வேண்டும். 30

குங்குமப்பூ சேர்த்து அரைத்த சிவப்புச் சந்தனம், சிவந்த அரளிப்பூமாலை, கடுகு, யவதானியம், தேன், நெய், லட்டு போன்ற இனிப்புப் பண்டங்கள் முதலியவற்றை புரச இலையில் கொண்டு நான்கு தெருக்கள் ஒன்று கூடும் இடத்தில் மக்கள் யாரும் இல்லாத இடத்தில் பற்றிய கிரகத்தின் பெயரைச் சொல்லி பலியாக இட வேண்டும். 31

எந்தத் தெய்வத்திற்கு எத்தகைய விருப்பம் உள்ளதோ அதற்கு ஏற்றபடி ஆடை (சிவப்பு மஞ்சள்–வெண்மை, கருமை போன்ற நிறங்களில்) பலியாக கொடுக்கவேண்டும். அவ்வாறே தக்க மலர் மாலை, புலால், இரத்தம் போன்றவற்றை அந்தத் தெய்வத்திற்கு விருப்பமானவற்றையும் பலியாகக் கொடுக்க வேண்டும். 32

## 24. பலி கொடுக்க ஏற்ற நாள் :

எந்த கிரகம் மனிதனை எந்த நாளில் பற்றிக்கொண்டதோ அந்நாளில் அந்தக் கிரகத்திற்கு உரிய சாந்தி கர்மா அதாவது பலி முதலான காணிக்கைகளை அர்ப்பணம் செய்யவேண்டும். 33

அந்தத் தெய்வத்தைக் குறித்துத் தீயில் நெய், எள் போன்ற பொருள்களால் வேள்வி செய்யவேண்டும். முதலில் தரை மேல் தர்ப்பையைப் பரப்பி அதன் மேல் யவதானியத்தூள் முதலிய வற்றால் ஸ்வஸ்திகம் போலக் கோலம் போட்டு அதன் மீது தெய்வத்திற்குரிய உணவுப்பண்டம், (அப்பம், வடை முதலானவை) நெய், பால் முதலியவற்றாலான பாயசம் போன்ற பொருள்களை வைத்துப் பலி ஸமர்ப்பணம் செய்யவேண்டும். 34

## 25. கிரகங்களுக்கு பலி இடத்தக்க இடங்கள்

அசுரன் எனும் பெயர் கொண்ட கிரகத்திற்கு மாலை நேரத்தில் நான்கு தெருக்களும் கூடும் (நாற்சந்தியில்) இடத்தில் பலி சமர்ப்பணம் செய்ய வேண்டும். கந்தர்வ கிரகத்திற்காக மது, காட்டு விலங்குகள், பறவைகள் ஆகியவற்றின் புலால், நீர் ஆகியவற்றை ஒரு புது மண் மடக்கில் இட்டு, மாட்டுக் கொட்டகையின் மையத்தில் வைக்க வேண்டும். 35

## 26. இயக்கர் கிரகத்திற்குப் பலிச் சமர்ப்பணம் செய்யும் முறை

இயக்கர் கிரகத்திற்கு உரிய சாந்தி முறைக்கு மனத்திற்கு இனிய நல்ல மாளிகையில் யவதானிய மாவினாலான உணவுப்பண்டம் (அடை) அல்லது பாதி வெந்த யவதானியம், ரத்தம், சுரை எனும் கள், மற்ற உணவுப்பண்டங்கள், முல்லை, மல்லி, தாமரை எனும் மலர்கள் ஆகிய இவை அனைத்தையும் ஒரு புது மடக்கில் வைத்து பலி சமர்ப்பணம் செய்க. 36

## 27. பித்ரு, நாக கிரகங்களுக்குப் பலி இடும் முறை

பித்ரு கிரகத்திற்கு ஆற்றங்கரையில் தர்ப்பையைப் பரப்பி அதன் மேல் யவதானியம், எள், நெய், வெல்லம் ஆகியவற்றைப் பலியாக அர்ப்பணம் செய்க. நாக கிரகத்திற்கு ஆற்றங்கரையில் தகுந்த பலி சமர்ப்பணம் செய்க. அதாவது வெல்லம், தேன், மது, பால் முதலியவற்றுடன் பக்குவம் செய்த பாயசம் முதலியவற்றைப் பலி இடுக. 37

## 28. அரக்கர், பிசாசர் ஆகியவர்களுக்குப் பலி இடும் முறை

அரக்கர் கிரகத்திற்குக் கிராமத்தில் நாற்சந்தியில் அல்லது மரங்கள் அடர்ந்த காட்டில் பலி கொடுக்க வேண்டும். பிசாச கிரகத்திற்கு பாழடைந்த வீட்டில் பக்குவம் செய்யாத (பச்சைப்) புலால் அல்லது பக்குவம் செய்த புலால், மது போன்றவற்றைப் பலியாகச் சமர்ப்பணம் செய்க. 39

## 29. கிரக தோஷத்திற்கு புகை போடும் முறை

ஆடு, கரடி ஆகியவற்றின் உரோமங்களுடன் கூடிய தோல், முள்ளுடன் கூடிய முள்ளம்பன்றியின் தோல், கோட்டானின் வால்பகுதி, இறகு அல்லது தோல், பெருங்காயம் ஆகியவற்றை இடித்து ஆட்டின் சிறுநீருடன் கலந்து கிரகம் பற்றியுள்ள நோயாளியின் அருகில் புகை போட்டு வந்தால் கிரகம் விரைவில் அகன்று விடும். 40

## 30. கிரக தோஷத்திற்கு நசிய முறை

யானைத்திப்பிலி, கொடிவேலி, சுக்கு, மிளகு, திப்பிலி, நெல்லிமுள்ளி, கடுகு ஆகியவற்றைச் சம அளவு கொண்டு இடித்து, அதை உடும்பு, கீரி, பூனை, ருஷியம் எனும் கருநிற மான் ஆகிய வற்றின் பித்தத்தில் முறையே பாவனை செய்து அரைத்து உலர்த்துக. இந்தத் தூளை நசியம், எண்ணெய்க் குளியல் போன்ற வற்றிற்குப் பயன்படுத்தினால் கிரகதோஷம் தணியும். 41

## 31. கழுதை, குதிரை, ஆகியவற்றின் சாணத்தாலான தைலம்

கழுதை, குதிரை, கோவேறு கழுதை, கோட்டான், ஒட்டகம், நாய், நரி, கழுகு, காக்கை, பன்றி ஆகியவற்றின் மலத்தைச் சம அளவு கொண்டு விழுதாகச் செய்க. இதற்கு நான்கு மடங்கு எண்ணெய் எண்ணெயின் அளவிற்கு நான்கு மடங்கு ஆட்டின் சிறுநீர் சேர்த்து எண்ணெய்ப்பகுதி மட்டும் மிகுந்திருக்கக் காய்ச்சுக. இந்த மருந்தை நசியம், எண்ணெய்க்குளியல், உடலின் மேல் ஊற்றுதல் எனும் முறைகளில் பயன்படுத்தினால் பைத்தியம், கால் கை வலி போன்ற நோய்களும் அகலும். 42

## 32. [1]கிரீஷாதி பீஜவத்தி

வாகை விதை, பூண்டு, சுக்கு, வெண்கடுகு, வசம்பு, மஞ்சிட்டி, மஞ்சள், பிப்பிலி எனும் இவற்றைச் சம அளவில் கொண்டு தூளாக்கி ஆட்டின் சிறுநீரில் பாவனை செய்து மூன்று மணி நேரம் அரைக்கவும். பிறகு முன்கூறப்பட்ட ஐவகை உயிரினங்களின் பித்தத்தில் பாவனை செய்க. இதை நீர் அல்லது பன்னீர் விட்டு அரைத்து கண்களில் மையாக இட்டால் கிரகத்தாலான துன்பங்கள் அனைத்தும் அகலும். 43

## 33. கிரகதோஷங்களுக்கு [2]சைந்தவாதி முறை

இந்துப்பு, கடுகரோகிணி, பெருங்காயம், சீந்தில்கொடி, வசம்பு எனும் இவற்றைச் சம அளவில் கொண்டு இடித்துத் தூளாக்குக. பிறகு ஆட்டின் சிறுநீர்விட்டு மூன்று நாட்கள் அரைக்க வேண்டும். அதை மீனின் பித்தத்தில் பாவனை செய்க. பிறகு யவதானியத்

---

[1]கிரீஷம் – வாகை. [2]சைந்தவம் – இந்துப்பு,

தோற்றமுள்ள வத்திகளாகச் செய்து நிழலில் உலர்த்துக. இதை நீருடன் குழைத்துக் கண்களில் மை போல் இட்டால் மற்ற பணிவிடைகளால் தணியாத கிரகத் தோஷங்கள் தணிந்து விடும்.

*44*

## 34. கிரக தோஷங்களுக்கு [1]லசுநாதிஸர்ப்பி

பத்து ஆண்டுகள் கடந்த பழைய நெய், வெள்ளைப்பூண்டு, பெருங்காயம், வெண்கடுகு, வசம்பு, அருகம்புல், வெள்ளை அருகம்புல், சடாமாஞ்சி, கந்தமாம்ஸி, குக்குடசிம்பி, ஸர்ப் பகந்தா, காகோலி, க்ஷீரகாகோலி, வஜ்ரகந்தம், சீந்தில்கொடி, கர்க்கடகசிருங்கி, மோகனவல்லி, எருக்கன் வேர், சுக்கு, மிளகு, திப்பிலி ஞாழற்பூ, சுரோதாஞ்சனம், மனோசிலை, அரிதாரம், வெண்கடுகு முதலான அரக்கர்களாலான துன்பங்களைப் போக்கும் கூட்டுப்பொருள்கள் சிங்கம், புலி, கரடி, காட்டுப்பூனை, சிறுத்தை, குதிரை, கழுதை, காட்டுப்பன்றி, உடும்பு, நாய், ஒட்டகம் கீரி எனும் இவ்விலங்குகளின் மலம், தோல் எனும் இந்தப் பொருள்கள் ஆகிய அனைத்தையும் சம அளவில் கொண்டு நன்கு தூள் செய்து விழுதாக அரைக்கவும். இந்த விழுது நான்கு பலம், எள்எண்ணெய் அல்லது நெய் பதினாறு பலம், நீர் 64 பலம் எனும் அளவில் சேர்த்து எண்ணெய் அல்லது நெய்யின் அளவு மிஞ்சியிருக்கப் பக்குவம் செய்க. இந்த எண்ணெய் அல்லது நெய் மருந்தைப் பருகுதல், உடலின் மேல் பூசிக் குளித்தல், நசியமாகப் பயன்படுத்துதல் எனும் முறைகளில் பயன்படுத்துக. மற்றும் இம்மருந்துப் பொருள்கள் அனைத்தையும் சேர்த்து மாத்திரையாகச் செய்து அவபிடன நசியமாகவும், கண்களில் மை போல் இடவும் பயன்படுத்துக. இம்முறைகளைக் கொண்டு சிகிச்சை செய்தால் மனக்கோளாறு களால் தோன்றும் பைத்தியம், கால்கைவலி, கிரக தோஷங்கள் போன்ற எல்லா துன்பங்களும் நீங்கும். இந்த மருந்தைப் பயன் படுத்தும் முன்பும், பின்பும் மருந்தைப் பயன்படுத்தும் போதும் தேவைக்கு ஏற்ப எண்ணெய்ப்பசை தோற்றுவித்தல் உடல் வியர்க்கச் செய்தல், வாந்தி எடுக்கச் செய்தல். பேதியாகச் செய்தல், வஸ்தி முறையைப் பயன்படுத்துதல் எனும் சிகிச்சை முறைகளையும் பின்பற்ற வேண்டும். *45–53*

---

[1]லசுனாதிஸர்ப்பி – பூண்டு முதலியவற்றாலான நெய் மருந்து

## 35. கிரக தோஷத்தில் பின்பற்றத் தக்க பத்திய முறை

தேவகிரகம் முதலியவற்றால் பற்றிக் கொள்ளப்பட்ட நோயாளி தூய்மையற்ற பொருள்களைப் பயன்படுத்தக்கூடாது. பிசாச கிரகம் தவிர மற்ற கிரகங்களால் துன்புறுத்தப்பட்டவர் அந்தக் கிரகத்திற்கு விருப்பமற்ற பொருளைப் பயன்படுத்துதல் கூடாது. தூய்மையற்ற பொருளைப் பயன்படுத்தக்கூடாது என்பதாம். மாறாகப் பயன்படுத்தினால் மிக்க வலிமை கொண்ட அந்தத் தேவாதி கிரகங்கள் சினம் கொண்டு மருத்துவரையும், நோயாளியையும் கொன்று விடும். 54

ஹிதாஹிதம் எனும் ஸுச்ருத ஸம்ஹிதையின் சூத்தர ஸ்தானத்தில் 20வது அத்தியாயத்தில் கூறப்பட்டபடி உணவுப்பொருள்கள், பழக்க வழக்கங்கள் ஆகியவற்றைக் கவனத்துடன் பின்பற்றினால் நோயாளி நன்மை பெறலாம், நோய் நீங்கி நோயாளி நன்மை பெறுவதுடன் மருத்துவருக்கும் திறமையுள்ளவர் என்ற புகழ் கிடைக்கும். 55

**சிறுங்கட்டூர், நடாதூர் எஸ்.என். ஸ்ரீராமதேசிகன் எழுதிய ஸுச்ருத ஸம்ஹிதை உத்தரஸ்தானம் தமிழாக்க நூலின் அமானுஷோபஸாகப்பிரதிஷேதம் எனும் அறுபதாம் அத்தியாயம் முற்றும்.**

# அபஸ்மார ப்ரதிஷேதம

## எனும்

## அறுபத்தோறாம் அத்தியாயம்

இனி தன்வந்திரி பகவான் ஸுசுருதர் முதலான சீடர்களுக்கு உபதேசம் செய்தபடி அபஸ்மாரம் எனும் நோய்க்குரிய சிகிச்சை முறைகளை விளக்குவோம். *1,2*

### *1.* 'அபஸ்மாரம்' பெயர் விளக்கம்

கடந்த செயல்களை நினைவில் கொள்ளுதல், 'ஸ்மிருதி' அல்லது 'ஸ்மரணம்' எனப்படும். 'அப' என்ற சொல் 'நீங்குதல்' எனும் பொருளைத் தரும். (நீர், நெருப்பு எனும் பொருள்களைப் பற்றிய அறிவையும் இழந்து விடுவதாலும், அவற்றுள் தான் புகுவதையும் அறியாமல் சென்று விடக்கூடுமாகையாலும் இந் நோய் உயிரைப் போக்கவல்லது. அதாவது நோயாளி இன்னது செய்கிறோம் என்ற நினைவு இன்றி நீரில் மூழ்கியோ, நெருப்பில் விழுந்தோ எளிதில் உயிரிழக்கக்கூடியவராவார் என்பதாம்.) *3*

### *2.* அபஸ்மாரம் தோன்றக் காரணம்

புலன்களின் செயல்களைத் தவறான வழியில் செலுத்துதல். அவற்றின் செயல்களை அளவுக்கு மீறியோ, தாறுமாறாகவோ செய்தல், ஹிதாஹித அத்தியாயத்தில் கூறப்பட்ட செயற்கையால் கேடுறும் உணவுப்பொருட்களைச் சேர்ந்துப் பயன்படுத்துதல், கெட்ட நாற்றம் கொண்டதும், கெட்டுப்போனதும், தூய்மை

---

அப – நீங்கிய, ஸ்மாரம் – நினைவாற்றல், நீங்கும் 'கால்கைவலி' நோய்க்கு உரிய சிகிச்சை முறைகளைக் கூறுவதால் இந்த அத்தியாயம் அபஸ்மாரபிரதிஷேதம் எனும் பெயர் பெற்றது.

யற்றதும், நாள் பழகியதுமான உணவை உட்கொள்ளுதல். தவறான பழக்கம் (தூய்மையற்ற செயல்களால்) எனுமிவற்றால் கபம் வாதம், பித்தம் ஆகியவை சீற்றம் பெற்று விடும். அவை ரஜோ குணம், தமோ குணம் ஆகியவற்றுடன் கூடி தூய்மையற்ற வரும் மலம் சிறுநீர் போன்றவற்றின் வேகங்களைத் தடுப்பவரும், தூய்மையற்ற உணவை உட்கொள்பவரும், ரஜோ தமோ குணங் களால் கேடுற்ற உடலும் மனமும் கொண்டவரும், மாதவிடாய் கொண்ட மங்கையுடன் கலவி புரிபவரும், ஆகியவர்களின் மனத்தில் காமம், அச்சம், உணர்ச்சி வேகம், சினம், வருத்தம் போன்ற வற்றைத் தோற்றுவித்து அதை கேடுறச் செய்வதால் அபஸ்மாரம் எனும் நோய் உண்டாகும். 6

### 3. அபஸ்மார நோய்க்கு முற்குறி

இதயத்தில் நடுக்கம் மற்றும் வெறுமை தோன்றுதல், உடலில் வியர்வை மிகுதல், ஏதேனும் ஒரு நினைவில் மனம் மூழ்கி இருத்தல், இடையிடையே நினைவாற்றல் தவறுதல், உணர்ச்சி அற்றுப் போதல், உறக்கம் இன்மை போன்றவை அபஸ்மார நோய்க்கு முற்குறிகளாகும். 7

### 4. அபஸ்மாரத் தோற்றம்

உணர்வு வழிக்குழாய்களாகிய ஸ்தோரஸ்களில் வாத பித்த கபங்கள் சூழ்ந்து ரஜோகுணதமோ குணங்களும் பரவி விடும்போது மனம் மிகவும் கலங்கி மயக்கம் கொள்ளும். கைகால்களைத் தரைமேல் வீசி அடித்துக் கொள்ளுதல், வாயில் நுரை தள்ளுதல், புருவங்களும், கண்களும் (பார்வை) கோணலாகுதல், ஆகிய இலக்கணங்களுடன் கண் விழிகள் திறந்திருக்க நோயாளி தரையில் விழுந்து கிடப்பார். சிறிது நேரம் சென்ற பிறகு நினைவு திரும்பும், இத்தகைய இலக்கணங்கள் கொண்ட நோய், கால் கைவலி (அபஸ் மாரம்) எனப்படும். இந்நோய் வாதத்தால் தோன்றியது, பித்தத்தால் தோன்றியது, கபத்தால் தோன்றியது. ஸந்நிபாதத்தால் தோன்றியது என நான்கு வகைப்படும். 8–10

### 5. வாதத்தால் தோன்றிய அபஸ்மார இலக்கணம்

உடல் நடுக்கம், நறநறவென பற்களைக் கடித்தல், விரைவாக மூச்சிழுத்து விடுதல், வாயிலிருந்து நுரை மிகுதியாக வெளிவிடுதல்,

தன் பின்னால் விகாரத் தோற்றம் கொண்டவன், கருநிறமுள்ள கொடிய விலங்கு துரத்தி வந்ததால் தான் நினைவிழந்ததாக கூறுதல் எனும் இலக்கணங்கள் காணப்பட்டால் வாதச்சீற்றத்தால் தோன்றிய அபஸ்மாரம் என்று உணர்க. *11 – 12*

## 6. பித்தத்தால் தோன்றிய அபஸ்மார இலக்கணம்

மிக்க நாவறட்சி, அழற்சி, உடல் வியர்த்தல், நினைவிழத்தல், உடல் நடுக்கம், தன் பின்னால் மஞ்சள் நிறம் கொண்டுள்ள விலங்கு துரத்திக் கொண்டு வருவதாகவும் அதனால் நினைவிழந்து போவதாகவும் கூறுதல் எனும் இலக்கணங்கள் காணப்பட்டால் பித்தச் சீற்றத்தாலான அபஸ்மாரம் என்று உணர்க. *14–15*

## 7. கபத்தால் தோன்றும் அபஸ்மார இலக்கணம்

குளிர்ச்சி மிகுதல், குமட்டல் தோன்றி நாக்கு வெளியே தொங்குதல், உறக்கம் மிகுந்து தரையில் விழுதல், கபம் வாந்தியாதல், வெண்ணிற முள்ள விலங்கு தன்னைத் துரத்திக் கொண்டு வருவதால் நினைவு தவறுவதாகக் கூறுதல், நினைவு தவறுதல் எனும் இலக்கணங்கள் காணப்பட்டால் கபச்சீற்றத்தால் தோன்றிய அபஸ்மாரம் என்று உணர்க.

*14–15*

## 8. வாதம் முதலியவற்றாலான அபஸ்மாரத்தில் சிறப்பான இலக்கணங்கள்

வாதத்தாலான அபஸ்மாரத்தில் இதயத்தில் ஊசியால் குத்துவது போன்ற துன்பம் தோன்றுதல், பித்தத்தாலான அபஸ்மாரத்தில் நா வறட்சி மிகுதல், கபத்தாலான அபஸ்மாரத்தில் கபம் மிகுதியாக வாயிலிருந்து வெளிவருதல் என்பன அந்தந்த தோஷங்களாலான அபஸ்மாரத்தின் சிறப்பு இலக்கணங்களாகும். *16*

## 9. ஸந்நிபாத அபஸ்மார இலக்கணம்

முன்கூறப்பட்ட மூன்று தோஷங்களின் இலக்கணங்களும் கலந்து காணப்பட்டால் அது ஸந்நிபாதத்தாலான அபஸ்மாரம் என்று உணர்க.

*17*

### 10. புறக்காரணங்களால் தோன்றும் அபஸ்மாரம்

உடலில் உள்ள தோஷங்களின் கோளாறுகளால் அல்லாது வேறு ஏதேனும் காரணம் தெளிவு படாததால் திடீரெனத் தோன்றிச் சிகிச்சை புரியாவிட்டாலும் தானாகவே அகன்று விடும் ஆகந்துக அபஸ்மாரம் என்கிற நோய் வகை ஒன்று உண்டு என வேறு ஒரு மருத்துவக் கொள்கை கூறுகிறது. 18

### 11. அபஸ்மார நோய் தோஷங்களால் தோன்றியது என்பதன் விளக்கம்

வாதம் முதலான மூன்று தோஷங்களின் கோளாறினால் தோன்றுவதாகையால், அபஸ்மார நோய் தோஷங்களால் தோன்றுவது எனப்பட்டது. நொடி தோறும் உடலில் உள்ள தோஷங்களின் தன்மை மாறுபடுவதால் அவை சீற்றம் பெற்ற நிலையில் நோய் தோன்றுவதும், தாமாக அவை தணிந்தபோது சிகிச்சை இன்றியே நோய் மறைவதாலும் இந்நோய் தோஷங்களால் தோன்றுவதென்பது தெளிவாகிறது. மற்றும் ரஜோகுணம், தமோகுணம் எனும் மனத்தின் விகாரங்கள் பல ஆகையால் இந்நோயின் இலக்கணங்களும் பலவாகும். 19

### 12. நோய்கள் தமக்கு உரிய காலத்தில் தோன்றக் காரணம்

நிலத்தில் விழுந்து அழுந்திக் கிடக்கும் விதைகள் மழை பொழிந்தபோது அதாவது கார் பருவத்தில் முளைக்கின்றன. அவ்வாறே நோய்க்கு காரணமானவை உடலில் அடங்கியிருந்து தாம் வெளிபடத் தகுந்த நிலை ஏற்பட்டபோது வெளிப்படுகின்றன. 20

### 13. வெகு குறுகிய காலத்திலும் நோய் தோன்றக் காரணம்

வாதம் முதலியன மூன்றும் உடலில் நிலையாக இருப்பவையாகும். ஏதேனும் காரணத்தால் மிகக்குறுகிய காலத்தில் அவற்றில் கோளாறு தோன்றினாலும் உடனே குறுகிய காலத்திலேயே அவை நோய்களைத் தோற்றுவிக்கின்றன. அதனால் இந்த அபஸ்மார நோய் முன்கூறியபடி தோஷங்களால் தோன்றுவதாகி நான்கு வகைப்படுகின்றன. பூதங்கள் முதலியவை பற்றிக் கொள்வதால் தோன்றுவதில்லை. 21

## 14. அபஸ்மார நோய்க்குச் சிகிச்சை

அபஸ்மார நோய்களால் துன்புறுபவருக்கு உன்மாதம் எனும் பைத்திய நோய்க்குக் கூறப்பட்ட சிகிச்சை முறைகள் முழுவதும் பின்பற்றத் தக்கவை. சிறப்பாகப் பல்லாண்டு கழிந்த பழைய நெய்யைப் பருகச் செய்தல், அந்நெய்யை உடல் முழுவதிலும் பூசிக் குளிக்கச் செய்தல், மிக்க நன்மை பயக்கும். 22

முன்பு அமானுஷ உபஸர்கபிரதிஷேதம் எனும் அத்தியாயத்தில் கிரக தோஷங்களைத் தணிப்பதற்குக் கூறப்பட்ட முறைகளையும் அபஸ்மார நோயில் தகுந்தபடி பயன்படுத்தவேண்டும். 23

## 15. அபஸ்மாரத்திற்கு [1]சிக்ரு ஆதி தைலம்

முருங்கை, வேம்பு எனும் இவற்றின் பட்டையின் விழுது, இவற்றின் இலைகள் முதலானவற்றின் சுரசம் ஆகியவற்றைக் கலந்து முதலில் எண்ணெய் மருந்து காய்ச்சிய பிறகு அத்துடன் நான்கு மடங்கு பசுவின் சிறுநீர் கலந்து பக்குவம் செய்க. எண்ணெய் பகுதி மட்டும் மிதந்திருக்கக் காய்ச்சி வடிகட்டுக. இதை எண்ணெய்க் குளியலுக்குப் பயன்படுத்துவதால் நன்மை விளையும். 24

## 16. அபஸ்மாரத்திற்குத் கோதாதி [2]தைலம்

உடும்பு, கீரி, யானை, சித்ரலம் எனும் மான், கரடி, பசு இவற்றின் பித்தம் – சம அளவு கலந்துள்ளது நான்கு பலம், எண்ணெய் பதினாறு பலம் கலந்து, அறுபத்து நான்கு பலம் நீரும் சேர்த்து எண்ணெய்ப்பகுதி மிகுந்திருக்கும் வரை காய்ச்சுக. இம்மருந்தைப் பருகவும், எண்ணெய்க் குளியலுக்கும் பயன்படுத்தினால் அபஸ்மாரம் தணியும். 25

## 17. அபஸ்மாரத்திற்கு சிரோ விரேசனமும், தெய்வ சிகிச்சையும்

வாந்தியாகச் செய்வதால், உடலின் மேற்பகுதியையும், பேதியாகச் செய்வதால் உடலின் கீழப்பகுதியையும் தூய்மைப்படுத்தும் வீறுகொண்ட (தீஷ்ண) மருந்துப் பொருள்களாலும், தீஷ்ண தன்மை

1. சிக்ரு – முருங்கை 2. கோதா – உடும்பு

கொண்ட மருந்துப்பொருள்களாலான நசிய முறைகளாலும் உடலைத் தூய்மைப்படுத்த வேண்டும். இவற்றைத் தவிர பரம சிவனையும் அத்தெய்வத்தின் பரிவாரகணங்களையும் நாள்தோறும் பூசைமுறைகளால் வழிபட வேண்டும். இவற்றால் அபஸ்மார நோய் தணியும். 26

## 18. அபஸ்மாரத்தில் தோஷத்திற்கு ஏற்பத் தூய்மைப் படுத்துதல்

வாதத்தால் தோன்றிய அபஸ்மாரத்திற்கு வாதத்தைத் தணிக்கும் பலவகை மருந்துப் பொருள்களால் வஸ்தி முறைகளைப் பயன்படுத்த வேண்டும். பித்தத்தாலான அபஸ்மாரத்திற்குப் பலவகையான பேதியாகச் செய்யும் முறைகளைப் பயன்படுத்த வேண்டும். கபத்தாலான அபஸ்மாரத்திற்கு மருக்கரைக் காய் போன்ற பொருள்களாலான வாந்தி எடுக்கச் செய்யும் முறைகளைப் பயன்படுத்த வேண்டும். 27

## 19. வாத அபஸ்மாரத்திற்குக் [1]குளுத்தாதி கிருதம்

கொள்ளு, யவதானியம், இலந்தைப்பழம், சணல்விதை, சடாமஞ்சி, இலகு பஞ்சமூலம், பெரும் பஞ்சமூலம் எனும் கூட்டுப் பொருள்கள், கடுக்காய் எனும் பொருள்களைச் சம அளவில் கொண்டு நான்கு மடங்கு நீர் விட்டு கொதிக்க வைத்து அந்தக் கஷாயத்தில் நான்கு பிரஸ்தம் அளவும், ஆட்டின் சிறுநீர் நான்கு பிரஸ்த அளவிலும் கொண்டு நெய் ஒரு பிரஸ்தம் கொள்ளு முதலான முன்கூறப்பட்ட மருந்துப்பொருள்களின் விழுது நான்கு பலம் எனக்கொண்டு அனைத்தையும் கலந்து நெய்யின் அளவு மிகுந்திருக்கும் வரை பக்குவம் செய்க. இது குளுத்தாதி கிருதமாகும். இதில் ஆறு உளுந்து எடை முதல் ஒரு தோலா எடை வரை நாள்தோறும் இளஞ்சூடுள்ள பால் அல்லது வெந்நீருடன் உட்கொள்ளச் செய்தால் வாதத்தால் தோன்றிய அபஸ்மாரம் தணியும். 28

[1] குளுத்தாதிகிருதம் – கொள்ளு முதலிய பொருள்களாலான நெய் மருந்து.

## 20. பித்தத்தாலான அபஸ்மாரத்திற்கு காகோலி முதலிய வற்றினாலான நெய்

காகோலி முதலிய கூட்டுப்பொருள்களின் விழுது நான்கு பலம், விதாரிகந்தா முதலான கூட்டுப்பொருள்களின் கஷாயம் நான்கு பிரஸ்தம், நெய் ஒரு பிரஸ்தம் எனும் அளவில் கலந்து நெய்ப்பகுதி மட்டும் மிகுந்திருக்கக் காய்ச்சுக. இந்த நெய் மருந்து காகோல்யாதி கிருதம் எனப்படும். இதில் ஆறு உளுந்து எடை முதல் ஒரு தோலா அளவு வரை கொண்டு அதில் இளஞ்சூடுள்ள பால் 10 தோலா, தேன் ஒரு தோலா, சர்க்கரை மூன்று தோலா அளவில் சேர்த்து உட்கொள்ளச் செய்தால் பித்தத்தால் தோன்றிய அபஸ்மாரத்தில் மிக்க நன்மை உண்டாகும். 29

## 21. கபத்தாலான அபஸ்மாரத்திற்குக் [1]கிருஷ்ணாதி கிருதம்

திப்பிலி முதலான கூட்டுப்பொருள், வசம்பு முதலான கூட்டுப்பொருள், முஸ்தகாரி (கோரைக்கிழங்கு முதலான) கூட்டுப்பொருள் எனும் இம்மூவகைக் கூட்டுப் பொருள்களைச் சம அளவில் 6 பிரஸ்தம் அளவு கொண்டு பதினாறு பிரஸ்தம் நீருடன் கஷாயம் காய்ச்சி, நான்கு பிரஸ்தம் அளவு மிகுந்திருக்கும்போது வடிகட்டிக் கொள்க. அத்துடன் ஒரு பிரஸ்தம் நெய் ஆரக்வதாதி (சரக்கொன்றை முதலான) கூட்டுப்பொருள்களின் விழுது கால் பிரஸ்தம்(நான்கு பலம்) நெய்யின் அளவிற்கு நான்கு மடங்கு எண் வகை சிறுநீர் கலந்து இளஞ்சூட்டில் பக்குவம் செய்க. பக்குவ மாகும்போது நெய்யின் அளவு மிகுந்திருக்கும்போது இறக்கி வடிகட்டுக. இது கிருஷ்ணகாதிகிருதம் எனப்படும். இம்மருந்தில் ஆறு உளுந்து எடை முதல் ஒரு தோலா அளவு வரை நாள்தோறும் உட்கொள்ளச் செய்தால் கபத்தாலான அபஸ்மாரம் தணியும். 30

## 22. அபஸ்மாரத்திற்கு [2]சித்தார்த்தக கிருதம்

தேவதாரு, வசம்பு, கோஷ்டம், வெண்கடுகு, சுக்கு, மிளகு, திப்பிலி, பெருங்காயம் மஞ்சிட்டி, மஞ்சள், மரமஞ்சள், தொட்டால்

---

1. கிருஷ்ணாதிகிருதம் – திப்பிலி முதலியவற்றாலான நெய் மருந்து.
2. சித்தார்தா – கடுகு

சிணுங்கி, கடுக்காய்,தான்றிக்காய் நெல்லிக்காய், கோரைக்கிழங்கு புங்கன்காய்ப்பருப்பு வாகை விதைப் பருப்பு, கிரிகர்ணி, கொடி வேலி வேர்பட்டை ஆகிய பொருள்களைச் சம அளவில் நான்கு பலம் கொண்டு இடித்து அரைத்து விழுதாக்குக. அந்த விழுதுக்கு நான்கு மடங்கு நெய், நெய்யின் அளவிற்கு நான்கு மடங்கு பசுவின் சிறுநீர் என அனைத்தையும் சேர்த்து இலேசாக எரியும் தீயில் நெய்யளவு மிகுந்திருக்கப் பக்குவம் செய்க. இது சித்தார்தக கிருதம் எனப்படும். இந்நெய் மருந்து ஆறு உளுந்து எடை முதல் ஒரு தோலா அளவு வரை இளஞ்சூடுள்ள பால் அல்லது வெந்நீருடன் உட் கொள்ளச் செய்தால் கிருமி நோய் குட்டம், இடுவிஷம், இழுப்பு, பலாசம் எனும் கப நோய், விஷக்காய்ச்சல் எல்லா வகையான பூத நோய்கள், கிரக பீடை, பைத்தியம், அபஸ்மாரம் ஆகிய நோய்கள் தணியும். *31–33*

## 23. பஞ்சகவ்ய கிருதம்

தசமூலக்கூட்டுப்பொருள்கள் பத்து, குடசப்பாலைப்பட்டை, பெருங்குரும்பை, சிறுதேக்கு, கடுக்காய், தான்றிக்காய், நெல்லிக் காய், கொன்றை, யானைத் திப்பிலி, ஏழிலைப் பாலைப்பட்டை, நாயுருவியின் ஐந்து உறுப்புகள் (வேர், இலை, மலர், காய், பட்டை) காட்டத்திப்பட்டை எனும் பொருள்கள் சம அளவில் கொண்டது நான்கு பிரஸ்தத்தை பதினாறு பிரஸ்தம் நீருடன் நான்கு பிரஸ்தம் அளவு மிகுந்திருக்கக் கஷாயம் காய்ச்சுக. பிறகு அதில் நிலவேம்பு, புங்கன்பட்டை, அல்லது விதையின் பருப்பு, சுக்கு, மிளகு, திப்பிலி, கொடிவேலிப்பட்டை, சிவதை, வட்டத்திருப்பி, மஞ்சள், மரமஞ்சள், வெண்நன்னாரி, கருநன்னாரி, புஷ்கரமூலம், கடுக ரோகிணி, காஞ்சொரி, நேர் வாளவேர், வசம்பு, அவுரி, வாயு விளங்கம் என்பனவற்றின் விழுது நான்கு பலம், நெய் ஒரு பிரஸ்தம், பசுவின் பால் ஒரு பிரஸ்தம், பசுந்தயிர் ஒரு பிரஸ்தம், பசுவின் சிறுநீர் ஒரு பிஸ்தம், பசுஞ்சாணச்சாறு ஒரு பிரஸ்தம், நீர் நான்கு பிரஸ்தம் எனும் அளவில் கொண்டு அனைத்தையும் கலந்து இலேசான தீயில் நெய்யின் அளவு மிகுந்திருக்கக் காய்ச்சுக. இது பஞ்சகவ்ய கிருதம் எனப்படும். எல்லா வகையான அபஸ்மார நோய்களைப் போக்கவல்லதாகும். மேலும் நான்கு வகைக் காய்ச்சல், க்ஷயம், இழுப்பு, பைத்தியம் எனும் நோய்களையும் நீக்கவல்லதாம்.

*34–37*

## 24. [1]பார்ங்க்யாதி சுரை

சிறுதேக்கின் விழுது ஒரு பிரஸ்தம், பால் 4 பிரஸ்தம், நீர் 16 பிரஸ்தம் எனக் கொண்டு முதலில் பாலின் அளவு மிகுந்திருக்கும் வரை பக்குவம் செய்க. பிறகு அந்தப்பாலில் அறுபதாங்குறுவை அரிசி ஒரு பிரஸ்தம் சேர்த்துப் பாயசம் காய்ச்சுக. பிறகு மூன்று நாட்கள் பட்டினி கிடந்து உடல் தூய்மை பெற்ற பன்றிக்கு அப்பாயசத்தை உண்ணக் கொடுக்க வேண்டும். அவ்உணவு முதல் முறை பக்குவம் பெற்று இனிமைச் சுவை கொண்ட போது அப்பன்றியைக் கொன்று அதன் குடலுக்குள்உள்ள உணவை எடுத்துக் கொள்க. அதில் மூன்று பங்கு கொண்டு நான்காவது பகுதியாக சுரா பீஜத்தைச் (கள்ளின் வண்டல்) சேர்க்கவும். குளிர்ந்த சிறுதேக்குக் கஷாயம் சேர்க்கவும். நெய், தேன், திப்பிலித்தூள் என்பனவற்றைக் கலந்து உட்பகுதியில் பூசிய புதுப்பானையில் மேற்படி கலவையைச் சேர்த்து மூடி சீலை மண்ணிட்டு சம அளவில் வெப்பமும், குளிர்ச்சியும் உள்ள இடத்தில் வைக்கவும். ஒரு மாதம் அல்லது இருபது, இருபத்தைந்து நாட்களில் அது சுரையாக மாறிய நிலை அறிந்து வடிகட்டி எடுத்துக் கொள்ளவும். ஒன்று அல்லது இரண்டு தோலா அளவு இந்தச் சுரையில் சம அளவு நீர் கலந்து இரு வேளையும் உணவுக்குப் பிறகு நாள் தோறும் பருகச் செய்தால் அபஸ்மார நோய் தணியும். *38–41*

## 25. அபஸ்மாரத்தில் ஸிராவியதனம்

அபஸ்மார நோய்க்கு இந்தச் சிகிச்சைமுறைகளுடன், மார்பு, சுடைக்கண், பகுதி நெற்றிப்பகுதியில் உள்ள சிரையைக் கீறும் முறையைப் பயன்படுத்துக. சிலர் தாடை இணைப்பின் நடுப்பகுதி கிரையக் கீற வேண்டும் என்பர். மற்றும் விரணிதொபாஸனீய அத்தியாயத்தில் கூறப்பட்ட சத்ரா, அதிச்சத்ரா முதலான மருந்து களை அணியச் செய்ய வேண்டும். அல்லது ரத்தினம் பதித்த காதணியை அணியச் செய்க. **42**

---

[1] பார்ங்க் - சிறு தேக்கு.

**சிறுங்கட்டூர், நடாதூர் எஸ்.என். ஸ்ரீராமதேசிகன் எழுதிய ஸுச்ருத ஸம்ஹிதை உத்தரஸ்தானம் தமிழாக்க நூலின் அபஸ்மாரபிரதிஷேதம் எனும் அறுபத்தோறாம் அத்தியாயம் முற்றும்**

# உன்மாதப்ரதிஷேதம்

## எனும்

## அறுபத்திரெண்டாம் அத்தியாயம்

இனி தன்வந்திரி பகவான் ஸுச்ருதர் முதலான சீடர்களுக்கு உபதேசம் செய்தபடி பைத்தியம் எனும் நோய்க்கு உரிய சிகிச்சை முறைகளை விளக்குவோம். 1-2

### 1. உன்மாதமெனும் பெயர் விளக்கம்

தவறான உணவு உட்கொள்ளுதல், தவறான பழக்க வழக்கங்களை மேற்கொள்ளுதல் என்பனவற்றால் சீற்றமடைந்த தோஷம் மேல் நோக்கிப் பரவி மனக்கலக்கத்தை உண்டு பண்ணும். அவ்வாறு கோளாறு அடைந்த மனத்தின் நோய் உன்மாதம் எனப்படும். 3

### 2. உன்மாத வகைகள்

மிகவும் கேடுற்ற வாதம் முதலான ஒவ்வொரு தோஷத்தால் தனித்தனியாகத் தோன்றிய பைத்திய நோய்கள் மூன்று வகை. எல்லா தோஷங்களும் சேர்ந்து சீற்றமடைவதால் தோன்றிய நான்காவது, ரஜோகுணம், தமோகுணம் எனும் மனத்தைச் சார்ந்த தோஷங்களால் கலங்கிய மனத்தில் மிக்க வருத்தம் போன்றவற்றலால் தோன்றும் மனநோய் ஐந்தாவது நஞ்சின் விளைவாகத் தோன்றக் கூடியது ஆறாவது என பைத்திய நோய் ஆறு வகைப்படும். இந்தத் தோஷங்களுக்கு ஏற்ப அந்தந்த வகைகளைச் சார்ந்த பைத்திய நோய்க்குச் சிகிச்சை செய்யவேண்டும். இந்நோய்

---

**உன்மாதம் - பைத்தியம் (மனக்கோளாறு) அந்நோய்க்கு உரிய சிகிச்சை முறைகளை விளக்குவதால் இந்த அத்தியாயம் உன்மாத பிரதிஷேதம் எனும் பெயர் பெற்றது.**

முற்றாத நிலையில் சிறிய அளவில் இந்நோய்க்கு உரிய இலக்கணங்கள் காணப்பட்டால் அது மதம் (வெறி) எனப் பெயர் கொள்ளும். மதுவைப் பருகுவதால் தோன்றும் கோளாறின் முதல் நிலையைச் சிலர் மதம் என்கின்றனர். 4–5

## 3. பைத்திய நோயின் முற்குறி

மோகம் (மயக்கம்) உணர்ச்சி மிகுதல், புறத்தே ஒலியில்லாத நிலையில் காதுகளில் ஒலி உணர்வு தோன்றுதல், உடலும் உடலுறுப்புகளும் வலிவின்றியிருத்தல், அவ்வாறு இருந்தும் ஏதேனும் ஒரு செயலில் ஊக்கம் மிகுந்து காணப்படுதல், உணவில் விருப்பம் இன்மை, உறக்கத்தில் மலம், சிறுநீர் போன்றவற்றால் கேடுள்ள உணவு, உட்கொள்வது போன்ற கனவு காணுதல், வாதம் சீற்றமுற்றிருப்பதால் இதயம் முதலியன மிகவும் கலக்கம் கொள்ளுதல், குயவரின் சக்கரத்தில், அமர்ந்திருப்பதால் உடல் முழுவதும் சுற்றுவது போன்ற மனத்தில் பிரமை தோன்றுதல் எனும் இவ்விலக்கணங்கள் காணப்படுமாயின் அத்தகையவர் விரைவில் பைத்தியம் பிடித்தவராவார் என்று உணர்க. 6,7

## 4. வாதத்தால் தோன்றும் பைத்தியத்தின் இலக்கணம்

வாதம் சீற்றம் பெறுவதால் தோன்றும் பைத்திய நோயில் உடற்பொலிவு, வறண்டிருத்தல், குரல் கடுமையாதல், உடல் முழுவதிலும் தமனிகள் பருத்தல், எப்பொழுதும் குளுமையால் துன்புறுவது போன்ற உணர்ச்சி உடல் வலிமை குறைந்து போதல், உறுப்புகளில் இணைப்புகள் துடித்துக் கொண்டிருத்தல், காரண மின்றி இங்குமங்கும் சுற்றிக் கொண்டிருத்தல், பாடுதல், ஆடுதல், உரக்கக் கூவுதல், உடலும் தலையும் சுற்றுவது போன்ற உணர்ச்சி என்பன வாதத்தால் தோன்றும் பைத்தியத்தின் இலக்கணங் களாகும். 8

## 5. பித்தச் சீற்றத்தால் தோன்றும் பைத்தியத்தின் இலக்கணம்

பித்தம் சீற்றம் பெறுவதால் தோன்றும் பைத்திய நோயில் நோயாளிக்கு அடிக்கடி நா வறட்சி மிகும். வியர்வை மிகுதியாகத் தோன்றும். அழற்சி மிகும், நோயாளி அதிக அளவில் உணவு உட்கொள்வார். உறக்கம் சீராகத் தோன்றாது, நிழலுள்ள இடத்தில்

இருப்பதிலும் குளிர்ந்த காற்றில் அலைவதிலும், நீர் நிலைப் பகுதிகளில் சுற்றிக் கொண்டிருப்பதாலும் நோயாளி, அதிக விருப்பம் கொள்வார். சினம் மிகுந்தவராகக் காணப்படுவார். குளிர்ந்த நீர்ப்பகுதியையும் நெருப்பாகக் கருதுபவர். பகல் நேரத்திலும் வானத்தில் நட்சத்திரங்களைக் காண்பார். 9

## 6. கபச்சீற்றத்தால் தோன்றும் பைத்தியத்தின் இலக்கணம்

தவறான உணவு உட்கொள்ளுதல், தவறான பழக்க வழக்கங்களை மேற்கொள்ளுதல் என்பனவற்றால் சீற்றம் பெற்ற கபத்தால் தோன்றும் பைத்திய நோயின் வாந்தி, சடராக்னிக் குறைவு, உணவு முதலியவற்றில் விருப்பமின்மை, இருமல், மாதர்களுடன் தனிமையில் இருப்பதில் விருப்பம், அறிவு மிகக் குறைதல், குறைந்த அளவில் இங்குமங்கும் சுற்றிக் கொண்டிருத்தல். உறக்கம் மிகுதல், குறைந்த அளவு உரையாடுதல், உணவு குறைந்த அளவில் உட்கொள்ளுதல், வெப்பம் மிகுந்த பகுதியில் இருப்பதிலும், சூடான பொருள்களிலும் விருப்பம் கொள்ளுதல் எனும் இலக்கணங்கள் காணப்படும். இரவு நேரங்களில் நோயின் கோளாறு அதிக அளவில் காணப்படும். நோயாளியின் நகம், கண், மெய்த்தோல், மலம் சிறுநீர் ஆகியவை மிகவும் வெளுத்து காணப்படும். 10

## 7. ஸந்நிபாதத்தால் தோன்றும் பைத்தியத்தின் இலக்கணம்

ஸந்நிபாதத்தால் தோன்றும் பைத்திய நோயில் வாத பித்த கபங்கள் மூன்றும் ஒன்றொடொன்று இணைந்து சீற்றம் பெற்று தத்தம் சீற்றத்தால் தோன்றும் இலக்கணங்களைத் தோற்றுவிக்கும். (அதாவது மூன்று தோஷங்களாலும்) தோன்றும் இலக்கணங்கள் ஒருங்கே நோயாளியினிடத்தில் காணப்படும் என்பதாம்.) 11

## 8. வருத்தம் மிகுவதால் தோன்றும் பைத்தியத்தின் இலக்கணம்

திருடர்களாலும், அரசாங்கப் பணியாளர்களான காவல் நிலையத்தினர் முதலியவர்களாலும், பகைவர்களாலும், கொடிய விலங்குகளாலும் அச்சுறுத்தப்படுவதால், மிக்க பிரியமுள்ள சுற்றத்

தாரின் இழப்பால், விரும்பிய மங்கையுடன் கலவியில் ஈடுபட மிக்க விருப்பம் கொண்டு அது நிறைவேறாததால் மனத்தில் பெரும் தாக்குதல் உண்டாகும். அதனால் கடுமையான மனக்கோளாறு தோன்றும். அத்தகைய நோயாளி தன் மனத்தில் மறைந்துள்ள, ஒளித்து வைக்கத் தக்க பொருள்களையும் தன்னையறியாமல் உரையாடலில் வெளிப்படுத்துவார். பாடுவார். காரணமின்றி நகைப்பார். அழுவார். நல்லது கெட்டது அறிய இயலாதவராக இருப்பார் அல்லது நினைவிழந்து கிடப்பார். *13*

## 9. நஞ்சின் விளைவால் தோன்றும் பைத்தியத்தின் )லக்கணம்

ஊமத்தை, கஞ்சா போன்ற நச்சுப் பொருள்களைப் பயன் படுத்துவதால் அல்லது அளவுக்கு மீறி மதுவைப் பருகுவதால் பைத்தியம் தோன்றும். அவரது கண்கள் சிவந்திருக்கும். வலிமை, புலன்களின் பொலிவு, செயலாற்றும் திறமை, உடற்பொலிவு ஆகியவை குன்றும், மிக்க சோர்வுடன் கூடியவராக நோயாளி காணப்படுவார். அவரது முகம் கருத்துக் காணப்படும். இத்தகைய நோயை அசட்டை செய்தால் நோய் நோயாளியைக் கொன்று விடும். *14*

## 10. பைத்திய நோய்க்குச் சிகிச்சை

பைத்திய நோயில் உடலையும், மனத்தையும் துன்புறுத்தும் தோஷங்களை நீக்குவதற்கு சிகிச்சை செய்ய வேண்டும். முதலில் எண்ணெய் முறைகளால் நோயாளியின் உடலில் எண்ணெய்ப் பசையைத் தோற்றுவித்துப் பிறகு உடல் வியர்க்கச் செய்ய வேண்டும். பிறகு சிறுகுடல், பெருங்குடல் பகுதிகளையும், மேல் உடலைச் சார்ந்த ஆமாசயம், மார்புப்பகுதி, தலைப்பகுதிகளையும் தூய்மைப்படுத்தும் முறைகளைக் கையாளத் துவங்க வேண்டும். அதாவது வயிற்றைத் தூய்மைப்படுத்த ஜயபாலத்தாலான மிக்க விறுவிறுப்புள்ள முறை, இச்சாபேதி, ஆச்வகஞ்சுகி, உதாரதிரஸம் முதலியவற்றையோ அல்லது சுவர்ண பத்திரி, சிவதை, சரக் கொன்றை முதலியவற்றால் கள்ளிப்பாலாலான முறைகளைப் பயன்படுத்திப் பேதியாகச் செய்ய வேண்டும். அதன் பிறகு ஆமாசயத் தூய்மைக்காக மருக்காரைக்காய், ராஜிகாசூரணம், 'ப்புத்தூள் முதலியவற்றில் ஒன்றை வெந்நீருடன் உட்

கொள்ளச் செய்து, வாந்தி எடுக்கச் செய்ய வேண்டும். அதன் பிறகு தலைப்பகுதியைத் தூய்மைப்படுத்த நாயுருவி விதைத்தூள், திப்பிலித்தூள், காயபலத்தூள் போன்றவற்றில் ஒன்றைப் பயன் படுத்தி சிரோவிரேசனம் செய்விக்க வேண்டும். அல்லது 'அமானி ஷோபஸர்கபிரதிஷேதம் எனும் அத்தியாயத்தில் கூறப்பட்ட மனக்கோளாறுகளைப் போக்கவல்லவையான அவபீடன நசிய முறைகளின் ஏதேனும் ஒன்றைக் கடுகெண்ணெயுடன் கலந்து மூக்கிலிடு மருந்தாகப் பயன்படுத்த வேண்டும். 15–16

## 11. புகை நசியம், எண்ணெய்க் குளியல் முறைகள்

மிகவும் கெட்ட நாற்றம் கொண்ட நாய்ப்புலால், பசுவின் புலால் கொண்டு பைத்திய நோயில் புகை போட வேண்டும். கடுகெண்ணெயை மூக்கிலிடும் மருந்தாகவும், குளியலுக்கு முன் உடலில் பூசவும் பயன்படுத்த வேண்டும். 17

## 12. பைத்திய நோய்க்கு அச்சுறுத்தல், வியப்புண்டாக்குதல் போன்ற சிகிச்சை முறைகள்

பைத்தியம் பிடித்தவர் தன் வாழ்க்கையில் அதுவரை கண்டிராத வியப்பூட்டும் பொருளைக் காணச் செய்யவேண்டும். அல்லது அவரது மனத்தையும் மூளையையும் திடீரென தாக்கும்படி அவருக்கு மிகவும் விருப்பமானவர் மனைவி, தாய், தந்தை போன்ற யாரேனும் ஒருவர் மறைந்து விட்டதாகப் பொய்யான செய்தியைக் கூற வேண்டும். கடுந்தோற்றமுள்ள அச்சுறுத்தும் தோற்றமுள்ள வர்களை அவர் முன் நிறுத்தியோ, நீண்ட தந்தங்களைக் கொண்ட யானையை முன்னிறுத்தியோ, நஞ்சில்லாவிடினும் அச்சுறுத்தும் தோற்றம் கொண்ட பாம்பை அவனருகில் இருக்கச் செய்தோ அச்சுறுத்த வேண்டும். இறுகக் கட்டி வைத்து கசையடி கொடுக்க வேண்டும். அல்லது நெருப்பால் தீங்கு நேராதபடி பாதுகாப்பான கவசம் போன்றவற்றை அணிவித்து அவரருகில் வைக்கோலைப் பரப்பித் தீ மூட்ட வேண்டும். உடல் வலிமை மிக்கவர் நோயாளியை(உயிருக்குக் கேடு விளையாதபடி) நீரில் முக்கித் திணற வைக்கும்படிச் செய்ய வேண்டும். இளஞ்சூடுள்ள வெந்நீரில் மூழ்கச் செய்வதாக அச்சுறுத்த வேண்டும். உடலின் உயிர் நிலைகளுக்குத் துன்பம் நேராதபடி மற்ற உயிர் பகுதிகளில்

ஊசியால் குத்தித் துன்புறுத்த வேண்டும். நோயாளியை வீட்டிற்குள் வைத்து அவருக்குத் தீங்கு நேராதபடி தீ மூட்ட வேண்டும். நீரில்லாத மிக்க ஆழமில்லாத (பாதுகாப்பான) பாழும் கிணற்றில் நோயாளியை சிறது நேரம் வைத்திருக்க வேண்டும். *18–21*

## *13.* பைத்திய நோயாளிக்குத் தக்க உணவு முதலியன

பைத்திய நோயாளிக்கு ஒவ்வொரு நாள் இடைவிட்டு மூன்று நாளுக்கு ஒருமுறை யவாகூ அல்லது மந்தம் எனும் கஞ்சி அல்லது பொரிமாவைக் கொண்டு உணவு தந்து உடல் செழிப்புறச் செய்ய வேண்டும். இந்த மாவை நீருடன் மட்டும் கலந்து கொடுக்க வேண்டும். மருத்துவ நூலை நன்கு ஆராய்ந்த திறமை மிக்க மருத்துவர் பைத்திய நோயாளிக்கு அரைகுறையாக வெந்த யவதானியத்தை உணவாகக் கொடுக்க வேண்டும். அந்நோயாளிக்கு இதமான உணவு முறை களை நன்கு உணர்ந்து பயன்படுத்தச் செய்ய வேண்டும். *22*

## *14.* பைத்திய நோய்க்குக் கல்யாண கிருதம்

வாயுவிளங்கம், கடுக்காய், தான்றிக்காய், நெல்லிக்காய், கோரைக்கிழங்கு, மஞ்சிட்டி, மாதுளைவிதை, நீலாம்பல் சிவதை, ஏலவாலுகம், ஏலக்காய், தேவதாரு, நேத்ரபாலா, மஞ்சள், கோஷ்டம் ஓரிலை, மூவிலை, வெள்ளை நன்னாரி, கருநன்னாரி, அரோணுகம், வெண்சிவதை, நேர்வாளவேர், வசம்பு, தாளிசபத்திரி சிறுநாகப்பூ மல்லிகை மலர் இவை அனைத்தையும் சம அளவில் கலந்து நான்கு பலம் அளவு கொண்டு விழுதாக அரைக்கவும். அத்துடன் அதற்கு நான்கு மடங்கு (16 பலம்) நெய், நெய்யின் அளவிற்கு இரண்டு மடங்கு பால், நான்கு பிரஸ்தம் (64 பலம்) அளவு நீர் கலந்து நெய்யளவு மிகுந்திருக்கக் காய்ச்சுக. குளிர்ந்த பின் வடிகட்டிக் கொள்க. இது கல்யாணகிருதம் எனப்படும். இதில் ஆறு உளுந்து எடை முதல் ஒரு தோலா எடை வரை வெந்நீர் அல்லது வெஞ்சூடுள்ள பாலைத் துணை மருந்தாக உட்கொள்ளச் செய்க.

குன்மம், இழுப்பு, இருமல், காய்ச்சல், க்ஷயம், பைத்தியம் முதலான நோய்களைத் தீர்க்கும்.

*23–25*

## 15. மகா கல்யாணகிருதம்

முன்கூறப்பட்ட கல்யாணகிருத மருந்துப்பொருள்களுடன் ஜீவனீயக்னத்தைச் சார்ந்த கூட்டுப்பொருள்களையும், இரண்டு பிரஸ்தம் பாலுக்கு மாறாக நான்கு பிரஸ்தம் பாலும் சேர்த்துப் பக்குவம் செய்தால் அது மகா கல்யாண கிருதம் எனப்படும். இந்த நெய் மருந்தால் அபஸ்மாரம், கிரகநோய்கள், சோஷம், ஆண்மை குறைவு, விந்துவில் சீவ அணுக்கள் (ஸ்பர்மடோஜாவா) இன்மை, குன்மம், இருமல் போன்றவையும் முன்கூறப்பட்ட நோய்களும் ரும். 26,27

## 16. பலகிருதம்

நேத்ரபாலா, கோஷ்டம், மஞ்சிட்டி, கடுகரோகிணி, ஏலக்காய், மஞ்சள், தகரை, கடுக்காய், தான்றிக்காய், நெல்லிக்காய், பெருங்காயம் அமுக்கராக்கிழங்கு, தேவதாரு, வசம்பு, ஓமம், காகோலி, மேதா, அதிமதுரம், பதுமுகம் சர்க்கரை என்பவைவற்றைச் சம அளவில் மொத்தம் நான்கு பலம் அளவு கொண்டு நீர் விட்டு விழுதாகச் செய்க. கொண்டு அதற்கு நான்கு மடங்கு (16 பலம்) நெய், நெய்யின் அளவிற்கு நான்கு மடங்கு (64 பலம்) பால், நீர் 64 பலம் எனச் சேர்த்து மெல்ல எரியும் தீயில் (மந்தாக்னியில்) நெய்யின் அளவு மிகுந்திருக்கக் காய்ச்சுக. இது பலகிருதம் எனப்படும். இந்நெய் மருந்து கிரகதோஷத்தால் துன்புறும் சிறுவர்களுக்கும், கேடுற்ற அல்லது குறைந்தளவுள்ள விந்து கொண்டவர்களுக்கும், மலடான மங்கையருக்கும் பயன்படுத்தத் தக்கது. கருவைத் தோற்றுவிப்பதற்கு மிகவும் ஏற்றதான மருந்து. ஆறு உளுந்து எடை முதல் ஒரு தோலா அளவு வரை தூய வெந்நீர் அல்லது இளஞ் சூடுள்ள பாலைத் துணை மருந்தாக்கி உட்கொள்ளச் செய்க. 28-30

## 17. [1]பிராம்ஹி ஆதிவத்தி

வல்லாரை இலை, கூடசப்பாலை வேர், வாயுவிளங்கம், சுக்கு, மிளகு, திப்பிலி, பெருங்காயம், தேவதாரு, சடாமாஞ்சி, மஞ்சள் வெள்ளைப்பூண்டு, சிற்றரத்தை, சீந்தில் கொடி, துளசி வசம்பு, மால்கங்கிணி, சுக்கு, (சுக்கு - இது இருமுறை கூறப்பட்டிருப்பதால்

---

[1] பிராம்ஹி - வல்லாரை.

இது இருமடங்கு சேர்க்க வேண்டும் என்று பொருள் கொள்க.) நன்னாரி, கடுக்காய், சௌராட்டிர மண் என்பனவற்றைச் சம அளவு கொண்டு நன்கு தூளாக்கி யானை அல்லது ஆட்டின் சிறுநீர் விட்டு ஒரு நாள் முழுவதும் அரைத்து யவதானிய அளவுள்ள வர்த்தியாகச் செய்து நிழலில் உலர்த்திக் கொள்க. சாஸ்திரமுறைகளை நன்கு அறிந்த மருத்துவர் இந்த பத்தியை அவபீடன நசியமாகவும், கண்களில் மை போல் இடவும், எண்ணெய்க்குளியலில் உடல்மேல் பூசவும், நசியமருந்தாகவும் புகை பிடிக்கும் முறையிலும் உடலில் மேல் பூசவும் பயன்படுத்தத் தகும். 31–33

## 18. பைத்திய நோயில் சிரையைக் கீறுதல்

பைத்திய நோயில் மார்புப் பகுதி கடைக்கண் பகுதி, நெற்றி ஆகியவற்றில் முறைப்படி சிரையைக் கீறிக் கெட்ட இரத்தத்தை வெளியேற்ற வேண்டும். 34

## 19. பைத்திய நோயில் மேலும் சில சிகிச்சை முறைகள்

அபஸ்மார நோய்க்கு உரிய சிகிச்சையைக் கூறும் அத்தியாயத்திலும் ஸ்கந்தகிரசாதி பிரதிஷேத்திற்கு உரிய சிகிச்சை மற்றும் அமானுஷோபஸர்க பிரதிஷேதம் சிகிச்சை முறை ஆகியவற்றை கூறும் அத்தியாயங்களிலும் கூறப்பட்ட சிகிச்சை முறைகளைப் பைத்திய நோயிலும் தகுந்தபடி பயன்படுத்த வேண்டும். 35

## 20. சாந்த உன்மாதத்திற்குச் சிகிச்சை

பைத்திய நோயாளிக்கு வாதம் முதலான தோஷங்களும், மனத்தைச் சார்ந்த ரஜோகுண தமோகுணங்களும் தணிந்து சம நிலையில் உள்ளதுபோல் அதாவது பைத்திய நோய் தணிந்த போது வாந்தி எடுக்கச் செய்தல் முதலானவற்றால் உடலைத் தூய்மைப் படுத்தி மீண்டும் பைத்திய நோய் தோன்றாதபடி எண்ணெய் வஸ்தி முறைகளைப் பயன்படுத்துக. 36

## 21. பைத்திய நோயில் மனத்தைத் தெளியச் செய்தல்

எல்லா வகையான பைத்திய நோய்களிலும் மனத்தைத் [illegible] இருக்கச் செய்யத் தக்க முறைகளைப் பயன்படுத்த

வேண்டும். அவ்வாறே மதுவைப் பருகுவதால் தோன்றும் வெறியில் முதலில் மென்மையான மருந்துகளால் உடலைத் தூய்மைப் படுத்திய பிறகு கண்களில் மருந்தை மை போல இடுதல், அவபீடன நசியம், புகை போடுதல் போன்ற மென்மையான சிகிச்சை முறைகளைப் பயன்படுத்த வேண்டும். 37

## 22. வருத்தத்தால், மற்றும் நஞ்சால் தோன்றும் பைத்திய நோய்க்குச் சிகிச்சை

மிக்க அன்புக்கு உரிய மனைவி - அல்லது கணவன் போன்ற நெருங்கிய உறவினரின் பிரிவாற்றாமையால் தோன்றிய பைத்தியத்தை ஆறுதல் தோன்ற நல்லுரைகளாகக் கூறுதல் போன்றவற்றைக் கையாண்டு வருத்தம் தணியச் செய்யவேண்டும். நஞ்சினால் தோன்றும் பைத்திய நோய்க்கு முதலில் உடல் மேல் பகுதி மற்றும் கீழ்ப் பகுதிகளை மென்மையான சிகிச்சை முறைகளால் தூய்மைப் படுத்திப் பிறகு கல்பஸ்தானத்தில் கூறப்பட்டபடி நஞ்சைப் போக்கும் சிகிச்சை முறைகளைக் கையாள வேண்டும். 38

**சிறுங்கட்டூர், நடாதூர் எஸ்.என். ஸ்ரீராமதேசிகன் எழுதிய ஸுச்ருத ஸம்ஹிதை உத்தரஸ்தானம் தமிழாக்க நூலின் உன்மாத பிரதிஷேதம் எனும் அறுபத்திரெண்டாம் அத்தியாயம் முற்றும்**

# ரஸபேத விகல்பம்

## எனும்

### அறுபத்து மூன்றாம் யாயம்

இனி தன்வந்திரி பகவான் ஸுசுருதர் முதலான சீடர்களுக்கு உபதேசம் செய்தபடி அறுசுவைகளின் வேற்றுமைகளைப் பற்றி விளக்குவோம். *1–2*

முன்பு விரணபிரசனாதியாயத்தில் தோஷங்கள் பதினைந்து வகைகளாகப் பரவும் எனக் கூறப்பட்டது. உண்மையில் அறுபத்து மூன்று வகையாக தோஷங்கள் பரவுகின்றன. அவற்றிற்குப் பயன் படுத்தத் தக்க வகையில் சுவைகளும் அறுபத்து மூன்று வகை களாகும். (அவற்றின் விளக்கம் இங்கு கூறப்படும்.) *3*

### 1. சுவைகளின் வேற்றுமைகள்

ஒன்றோடொன்று கலக்காமல் தனித்தனியாக விளங்கும் சுவைகள் ஆறு. இரண்டு, மூன்று, நான்கு, ஐந்து ஆறு எனச் சுவைகள் தமக்குள் ஒன்றோடொன்று கலந்து விடுவதால் ஏற்படும் வேற்றுமைகள் ஐம்பத்தேழு. ஆக மொத்தம் அறுபத்து மூன்று வகையான சுவைகள் உள்ளன. தோஷங்கள் ஒன்றோடொன்று கலந்து சீற்றமுறுவதால் தோன்றும் கோளாறுகளுக்கு ஏற்ப இவற்றைப் பயன்படுத்த வேண்டும். *4*

**ரஸம் – ஆறு வகையான சுவைகள், அவற்றைப் பற்றிய விளக்கம் கொண்டதால் இந்த அத்தியாயம் ரஸபேத விகல்பம் என்னும் பெயர் பெற்றது.**

## 2. தோஷங்களுக்கு ஏற்பச் சுவைகளைப் பயன் படுத்துதல்

பகுதி பகுதியாக ஒன்றோடொன்று கலந்து விடுவதால் அறுபத்து மூன்று வகையான சுவைகள் ஏற்படுகின்றன. அறிவாற்றல் மிகுந்த மருத்துவர் உடலில் எந்தந்த பகுதிகளில் எந்தெந்த தோஷங்கள் கலந்து சீற்றமுறுவதால் நோய் தோன்றுமோ அவற்றை உணர்ந்து அவற்றைத் தவிர்க்கத் தக்க வேறு வேறு சுவைகள் கலந்துள்ள மருந்துப் பொருள்களைப் பயன்படுத்த வேண்டும். (அறுபத்து மூன்று வகையான சுவைக் கலப்பில் எந்தெந்த மூலிகைகளில் எந்தெந்த சுவைகள் கலந்துள்ளனவோ அவற்றை அறிந்து அவற்றால் தணிக்கத் தக்க தோஷங்களையும் அறிந்து தக்கபடி பயன்படுத்த வேண்டும் என்பதாம்.) 5

## 3. இரு சுவைகளின் கலப்பு

சுவைகளில் முதன்மையானது இனிப்பு. இத்துடன் வேறு சுவையும், சேர்ந்து இரு சுவைகள் கலப்பதால் பதினைந்து வகைகள் ஏற்படுகின்றன. அவையாவன : 1. இனிப்பும் புளிப்பும், 2. இனிப்பும் உவர்ப்பும், 3. இனிப்பும் கார்ப்பும், 4. இனிப்பும் கசப்பும், 5. இனிப்பும் துவர்ப்பும் என இனிப்புடன் வேறு சுவை கலப்பதால் நான்கு வகை கலப்புச் சுவை தோன்றும். அவை யாவன : 1. புளிப்பும் உவர்ப்பும் 2. புளிப்பும் கார்ப்பும், 3. புளிப்பும் கசப்பும், 4. புளிப்பும் துவர்ப்பும். உவர்ப்புச் சுவையுடன் வேறு சுவைகள் கலப்பதால் மூன்று வகை கலப்புச் சுவைகள் தோன்றும். அவையாவன : 1. உவர்ப்பும் கார்ப்பும், 2. உவர்ப்பும் கசப்பும், 3. உவர்ப்பும் துவர்ப்பும். கார்ப்புச் சுவையுடன் வேறு சுவை கலப்பதால் இருவகைக் கலப்புச் சுவைகள் தோன்றும். அவை யாவன : கசப்பும், கார்ப்பும், கார்ப்பும், துவர்ப்பும், கசப்புச் சுவையும் துவர்ப்புச் சுவையும் எனக் கசப்புடன் கூடிய கலப்புச் சுவை ஒன்று. இருசுவைகள் கலப்பினால் தோன்றும் சுவை வகைகள் பதினைந்தாகும். 6–8

---

**இவ்வாறு சுவைகள் கலந்துள்ள மூலிகை மருந்துப் பொருள்கள் ஒவ்வொரு சுவைக்கும் எடுத்துக் காட்டாக ஒன்றிரண்டு மூலிகைகள் இங்கு கூறப்படுகின்றது. இவ்வாறு மருத்துவத்தில் பயன்படுத்தப்படும் மூலிகைகளின் சுவைகளைப் பற்றி மூலிகைகளின் தன்மைகளை விளக்கும் மருத்துவ நிகண்டு நூல்களில் காணலாம்.**

6. இனிப்பும் புளிப்பும் கசப்பும் துவர்ப்பும்
7. இனிப்பும் உவர்ப்பும் கார்ப்பும் கசப்பும்
8. இனிப்பும் உவர்ப்பும் கார்ப்பும் துவர்ப்பும்
9. இனிப்பும் உவர்ப்பும் கசப்பும் துவர்ப்பும்
10. இனிப்பும் கார்ப்பும் கசப்பும் துவர்ப்பும்

புளிப்புடன் வேறு சுவைகள் மூன்று கலந்து நான்கு வகைக் கலப்புச் சுவைகள் தோன்றும்.

---

37. இனிப்பும் புளிப்பும் உவர்ப்பும் கசப்பும் – பசுவின் சிறுநீரும் ஒற்றைக் குளம்புள்ள குதிரை முதலியனவற்றின் பாலும்
38. இனிப்பும் புளிப்பும் உவர்ப்பும் துவர்ப்பும் – இந்துப்பு கலந்த மோர்
39. இனிப்பும் புளிப்பும் கார்ப்பும் கசப்பும் – வெள்ளைப் பூண்டுடன் கூடிய சுரை
40. இனிப்பும் புளிப்பும் கார்ப்பும் துவர்ப்பும் – புளிப்புக்காடியுடன் கூடிய ஆமணக்கு எண்ணெய் கருங்காலியுடன் கூடிய கூடிய சிலாஜித்து
41. இனிப்பும் புளிப்பும் கசப்பும் துவர்ப்பும்
42. இனிப்பும் உவர்ப்பும் கசப்பும் கார்ப்பும் – கத்தரிப்பழம்
43. இனிப்பும் உவர்ப்பும் கார்ப்பும் துவர்ப்பும் – பசுவின் சிறு நீருடன் கூடிய எண்ணெய்
44. இனிப்பும் கார்ப்பும் கசப்பும் துவர்ப்பும் – எள்ளும் குங்கிலியமும்
45. இனிப்பும் உவர்ப்பும் கசப்பும் துவர்ப்பும் – கடல் நுரை, சர்க்கரை, சித்திர மூலத்துடன் கூடிய இலந்தைப் பழம்
46. புளிப்பும் உவர்ப்பும் கார்ப்பும் கசப்பும் – ஸௌவர்ச்சல உப்புடன் கூடிய யானைத் தயிராலான சுரை
47. புளிப்பும் உவர்ப்பும் கார்ப்பும் துவர்ப்பும் – ஸௌவர்ச்சல உப்புடன் கூடிய யானைத் தயிர்.
48. புளிப்பும் உவர்ப்பும் கசப்பும் துவர்ப்பும் – ஒருவகை உப்புடன் கூடிய கிளியின் புலால்
49. புளிப்பும் கார்ப்பும் கசப்பும் துவர்ப்பும் – யானைத் தயிர், இளம் முள்ளங்கி
50. உவர்ப்பும் கார்ப்பும் கசப்பும் துவர்ப்பும் – சாம்பர் எனும் உப்புடன் கூடிய வில்வக்காய்
51. இனிப்பும் புளிப்பும் உவர்ப்பும் கார்ப்பும் துவர்ப்பும்
52. இனிப்பும் புளிப்பும் உவர்ப்பும் கசப்பும் துவர்ப்பும் – ஔத்பிதம் எனும் உப்புடன் கூடிய மோர்.
53. இனிப்பும் புளிப்பும் உவர்ப்பும் கசப்பும் துவர்ப்பும் – திரிகடுகத்துடனும் யவக்ஷாரத்துடனும் கூடிய மோர்.

11. புளிப்பும் உவர்ப்பும் கார்ப்பும் கசப்பும்

12. புளிப்பும் உவர்ப்பும் கார்ப்பும் துவர்ப்பும்

13. புளிப்பும் உவர்ப்பும் கசப்பும் துவர்ப்பும்

14. புளிப்பும் கார்ப்பும் கசப்பும் துவர்ப்பும்

உவர்ப்புச் சுவையுடன் மற்றும் மூன்று சுவைகள் சேர்ந்தால்

15. உவர்ப்பும் கார்ப்பும் கசப்பும் துவர்ப்பும் எனும் ஒரு வகை நாற்சுவைக் கலப்பு தோன்றும். இவ்வாறு நான்கு சுவைகள் கலப்பதால் பதினைந்து வகையான கலப்புச் சுவைகள் தோன்றும். (11-12)

## 6. ஐந்து சுவைகளின் கலப்புள்ள சுவைகளின் வகை

இனிப்புடன் மற்ற நான்கு சுவைகளும் கலந்து தோன்றும் கலப்புச் சுவை வகை ஐந்தாகும் அவையாவன :

1. இனிப்பும் புளிப்பும் உவர்ப்பும் கார்ப்பும் கசப்பும்

2. இனிப்பும் புளிப்பும் உவர்ப்பும் கசப்பும் துவர்ப்பும்

3. இனிப்பும் புளிப்பும் உவர்ப்பும் கசப்பும் துவர்ப்பும்

4. இனிப்பும் புளிப்பும் கார்ப்பும் கசப்பும் துவர்ப்பும்

54. இனிப்பும் புளிப்பும் துவர்ப்பும் கசப்பும் துவர்ப்பும் - கடுக்காய், நெல்லிக்காய்
55. இனிப்பும் உவர்ப்பும் கார்ப்பும் கசப்பும் துவர்ப்பும் - வெள்ளைப் பூண்டு
56. புளிப்பும் உவர்ப்பும் கார்ப்பும் துவர்ப்பும் - சேராங்கொட்டை, வெள்ளிச்சிலாஜத்துகளுடன் கூடிய வேம்பு.
57. இனிப்பும் புளிப்பும் உவர்ப்பும் கார்ப்பும் கசப்பும் துவர்ப்பும் - கருநிற மானின் புலால்.
58. இனிப்பு - பசுவின் பால், திராட்சை
59. புளிப்பு - புளி
60. உவர்ப்பு - இந்துப்பூ முதலியன
61. கார்ப்பு - திப்பிலி, செவியம், கொடிவேலி
62. கசப்பு - நிலவேம்பு, பாகல், வேம்பு
63. துவர்ப்பு - ஆலம் தளிர், பாச்சோத்தி

## 3. பருவ நிலையைச் சார்ந்த உடல்நலக் காப்பு

இளவேனில், முதுவேனில் முதலான பருவ காலங்களில் உடல் நலம் சீராக உள்ளவரின் உடலில் எந்தெந்த தோஷங்கள் சீற்றம் பெறக்கூடுமோ அந்தந்த தோஷங்களுக்கு மாறான அதாவது அவற்றின் சீற்றத்தைத் தணிக்கக் கூடிய பொருள்களை அந்தந்த பருவங்களில் பயன்படுத்த வேண்டும்.

## 4. காலாகாலத்தில் பின்பற்ற வேண்டிய முறை

கார் பருவத்தில் மனித உடல் ஈரமாக இருப்பதால் சடராக்கினி (உணவைச் செரிமானம் அடையச் செய்யும் வெப்பம்) வலிமை குன்றியிருக்கும். அதனால் வாதம், பித்தம், கபம் எனும் மூன்று தோஷங்களும் சீற்றமடையக்கூடும். எனவே, ஈரப்பசையை அகற்றித் தோஷங்களைத் தணிக்கத் துவர்ப்பு, கசப்பு, கார்ப்புச் சுவைகளைக் கொண்டவையும், நீர்ப் பகுதியற்ற அல்லது நீர்ப்பகுதி மிகவும் குறைவாக கொண்டு மிக்க எண்ணெய்ப் பசையோ மிக்க வறட்சித் தன்மையோ இல்லாதவையும் வெப்பத்தையும் செரிமான வலிமையையும் தூண்டிவிடக் கூடிய உணவுப் பொருள்களை உண்ண கொடுக்க வேண்டும். முன்பு நீர்த் தன்மை கொண்ட பொருள்களைப் பயன்படுத்தும் முறையை விளக்கும் அத்தியாயத்தில் குடிநீர் வகைபற்றிக் கூறியுள்ளபடி வானத்திலிருந்து விழும் (தரையைத் தொடாத) நீரையோ, தரையைப் பிளந்து கொண்டு வரும் ஊற்று நீரையோ மற்றும் நன்கு காய்ச்சித் தானாகக் குளிர்ந்த நீரையோ பருகத் தர வேண்டும். கார் பருவத்தின் நாட்களில் வானம் முகிற் கூட்டத்தால் சூழப்படும். குளிர்ந்த காற்றுடனும் இருக்கும். மூலிகைகள் மிக்க குளிர்ந்த நீருடன் இளம் பருவமும் கொண்டிருப்பதால் புளிப்புச் சுவை கொண்ட பாகத்துடன் (அமிலமாக) (விதாஹ) அழற்சியைத் தோற்றுவிக்கும் தன்மை கொண்டிருக்கும். எனவே கார் பருவத்தில் மனிதன் அதிக உடற்பயிற்சி செய்யக் கூடாது. அதிக அளவு நீரைப் பருகக் கூடாது. பனிபடும் இடத்தில் படுக்கக் கூடாது. கலவியையும், வெய்யிலில் சுற்றுவதையும் தவிர்க்க வேண்டும். நிலத்திற்குள்ளிருந்து வெளிப்படும் வெப்பம் உடலில் படாமல் இருக்க உப்பரிகையில் படுக்க வேண்டும். மழை முதலியவற்றால் காற்று மிக்க குளிர்ந்த நிலையில் தடித்த ஆடை, கம்பளி ஆடை முதலியவற்றால் உடலைப் போர்த்தி வைத்துக் கொள்ள வேண்டும். அடிக்கடி

நெருப்பின் உதவியால் உடலுக்கு வெப்பம் தோற்றுவித்துக் கொள்ள வேண்டும். காற்றோட்டமில்லாத (மிகக் குறைந்த அளவு காற்றுள்ள) அறையில் இருக்க வேண்டும். அத்தகைய இடத்தில் படுக்க வேண்டும். வெளியே செல்லும்போது அகில், கஸ்தூரி போன்ற வெப்பம் தரும் பூச்சுகளைப் பூசிக் கொண்டு செல்ல வேண்டும். யானையின் மேல் ஏறிப் பயணம் செல்வது நல்லது. பகலில் உறங்குதல், அசீரணம் தோற்றுவிக்கும் உணவுப்பண்டம், கீழக்காற்று ஆகியவற்றை விலக்க வேண்டும். 6–12

## 5. சரத் காலத்தில் (கூதிர்ப் பருவ) பின்பற்ற வேண்டிய முறைகள்

கூதிர் பருவத்தில் (சரத் காலத்தில்) துவர்ப்பு, இனிப்புச் சுவைகளைக் கொண்ட பொருள்களைப் பயன்படுத்த வேண்டும். பால், கருப்பஞ்சாறு, (அச்சாற்றிலானான சர்க்கரை) போன்றவை, தயிர், பாலேடு, வெல்லப்பாகு, தேன் அறுபது நாள் குறுவை, பயற்றின் பருப்பு காட்டில் வாழும் மான் போன்ற விலங்குகளின் லாவகப் பறவை போன்ற பறவைகள் ஆகியவற்றின் புலால், புலால் சாறு ஆகியவற்றை உட்கொள்ள வேண்டும். கூதிர் பருவத்தில் நிலத்தில் உள்ள அனைத்து வகை நீர் நிலைகளிலும் உள்ள நீர் தெளிவாக இருப்பதால் நன்மை பயப்பதாகும். வெண்ணிற மலர் மாலைகளை அணிய வேண்டும். நிலவு உடலில் படும்படி இருக்க இரவின் துவக்கத்தில் மூன்று மணி நேரம் கொண்ட முதல் யாமத்தின் இலேசான ஆடை அணிய வேண்டும். வெள்ளைத் தாமரை, ஆம்பல் முதலியவற்றைக் கொண்ட குளங்களில் நீராட வேண்டும். இரவின் துவக்கத்தில் உலவும் சந்திரனின் கதிர்கள் உடல் மேல் படும்படி இருத்தல், சந்தனத்தைப் பூசிக் கொள்ளுதல் ஆகியவை நன்மை தரும். மற்றும் கசப்புச் சுவை கொண்ட நெய்யைப் பருகுதல், இரத்தத்தைத் தக்க அளவு வெளியேற்றுதல், பேதியாக மருந்து உட்கொள்ளுதல் போன்ற சிகிச்சை முறைகளால் மழைக்காலத்தில் உடலில் மிகுதியாக சேர்ந்துள்ள பித்தத்தைத் தணித்துக் கொள்ள வேண்டும். மிகவும் தீக்ஷ்ணத் தன்மை கொண்ட பொருள்கள், புளிப்புச் சுவை மிக்கவை, வெப்பத்தை மிகச் செய்பவை, கார வகைகள், பகல் உறக்கம், வெய்யில் உடலில் படும்படி இருத்தல், இரவில் கண் விழித்தல், கலவி ஆகியவற்றை விலக்க வேண்டும். இனிப்புச் சுவை கொண்டதும், குளிர்ந்ததும்,

அறிவாற்றலை வளர்ப்பதும், புனிதமானதும், படிகம் போலத் தூய்மையானதும், கூதிர் பருவத்து நிலவொளியில் தெளிவு பெற்றதும், அகத்திய நட்சத்திரம் உதயமானதால் நச்சுத் தன்மையற்றதும் ஆனதால் அனைத்து வகை நீர் நிலைகளின் நீர் நன்மை பயப்பதாகும். இத்தகைய நீரில் மலைப்பகுதியில் தோன்றிய சந்தனத்தில் பச்சைக் கர்ப்பூரத்தைக் கலந்து பருகுதல் நன்மை தரும். இலேசான தூய மெல்லிய ஆடை இந்தப் பருவத்தில் அணிவதற்கேற்றதாகும். இந்தப் பருவத்தில் மலரும் பூக்களாலான மாலைகளை அணிதல், சீது எனும் மதுவை முறைப்படி தகுந்த அளவு பருகுதல் ஆகியவை நன்மை தரும். பித்தத்தைத் தணிக்கவல்ல உணவுவகைகளும், பழக்க வழக்கங்களும் இந்தப் பருவத்தில் மேற்கொள்ளத் தக்கவையாகும்.

## 6. பனிக்காலத்தில் மேற்கொள்ளத் தக்கவை

பனிக்காலத்தில் குளிர்ச்சி மிக்கதும், வறட்சித் தன்மையும் ஆதவனின் கிரணங்கள் குறைந்த ஒளியும், குறைந்த வெப்பமும் கொண்டதாகியும், காற்று வலிமையுடன் வீசுவதாகவும் இருக்கும். அதனால் இந்தப் பருவத்தில் வாதம் குளிர்ச்சியால் சீற்றமடைந்து விடும். இந்நிலையில் சடராக்கினி குடலுக்குள் குளுமையில் பிண்டம் போன்ற தோற்றம் கொண்டு உணவு ரசத்தை உலர்த்தி விடும். ஆகவே, இந்தப் பருவத்தில் எண்ணெய்ப் பசை கொண்ட உணவு நன்மை தரும். அவ்வாறே உவர்ப்பு, கார்ப்பு, கசப்பு, புளிப்புச் சுவைகள், நெய், எண்ணெய், வெப்பம் மிகுந்த உணவு ஆகியவற்றைப் பயன்படுத்துவதால் நன்மையுண்டாகும். தீஷணத் தன்மை கொண்ட மது இந்தப் பருவத்தில் பருகத் தக்கது. அகில் கலந்த மெய்ப்பூச்சைப் பயன்படுத்த வேண்டும். எண்ணெயை உடலில் தடவிக் கொண்டு குளித்தலும், இளஞ்சூடுள்ள நீர் நிரம்பிய தொட்டியில் குளிப்பதும் நலம் தரும். புகையற்று விறகுக்கரியா லான தணல் உள்ள அடுப்பு வைக்கப்பட்டுள்ள அறையில் பட்டாடையைப் போர்த்திக் கொண்டு உறங்க வேண்டும். இந்தப் பருவத்தில் செல்வம் மிக்கவர் பாலுடன் மனத்திற்கு இசைந்த உணவை நன்கு உண்டு, அல்லது புலால் சாறு, மது ஆகியவற்றைப் பருகி, மனநிறைவு கொண்டு அகில் கலந்த மெய்ப்பூச்சு கொண்டு அகிற்புகையால் நறுமணம் கொண்ட உடலுள்ளவளும், பருத்த கொங்கைகளும், பின்தட்டுகளும் உள்ளவளுமான மங்கையைத்

தழுவிப் புணர்ந்து மகிழ வேண்டும். கலவி புரிந்த பிறகு இனிப்பு, கசப்பு, கார்ப்பு, புளிப்பு, உவர்ப்புச் சுவைகளைக் கொண்ட உணவுப்பண்டங்கள், சாறு வகைகள், எண்ணெய், உளுந்து ஆகிய வற்றாலானவை பலவகை காய்கறி வகைகள், தயிர், வெல்லம், சர்க்கரை பாகு போன்ற கருப்பஞ் சாற்றாலான உணவுப் பொருள் களாலான உணவு வகைகள், நறுமணம் கொண்ட புதிய சம்பா அரிசிச் சோறு, பிரஸாஹ (ஒன்று மற்றொன்றினிடமிருந்து வலிமை யுடன் உணவைப் பிடுங்கித் தின்னும் பழக்கம் கொண்ட) உயிரினங் களின் மற்றும் நீர்நிலைகள் மிக்கப் பகுதிகளில் வாழும் உயிரினங் களின் புலால், புலால் உண்ணும் விலங்குகளின் புலால், பொந்து களிலும், துறைகளிலும் வாழும் பழக்கமுள்ள உயிரினங்களின் புலால், நீர் வாழ் உயிரினங்களின் புலால், நீரில் நீந்தும் பழக்கம் கொண்ட வாத்து முதலியவற்றின் புலால், காலால் நடக்கக் கூடிய ஆமை முதலியவற்றின் புலால் ஆகியவை பயன்படுத்தத் தக்கவை. அவற்றுடன் பலவகை மது, வலிமையைத் தரக்கூடிய பொருள்கள் ஆகியவற்றைப் பயன்படுத்த வேண்டும். பகல் உறக்கம், அசீரணத் தைத் தோற்றுவிப்பவை ஆகியவற்றையும் விலக்க வேண்டும். இலையுதிர் பருவத்திலும் இந்தப் பருவத்தைப் போலவே உணவு பழக்க வழக்கங்கள் ஆகியவற்றை மேற்கொள்ள வேண்டும். 21-31

## 7. இளவேனிற் காலத்தில் பின்பற்றத் தக்கவை

ஏமந்த பருவ காலத்தில் குளிர்ச்சியினால் இயற்கையாகக் குளிர்ச்சித் தன்மை கொண்ட உயிரினங்களின் உடலில் சேர்ந்துள்ள கபம் இளவேனில் பருவத்தில் தோன்றிய வெப்பத்தினால் சீற்ற மடைந்து கபநோய்கள் பலவற்றைத் தோற்றுவிக்கும். அதனால் இந்தப் பருவத்தில் புளிப்பு, இனிப்பு, எண்ணெய்ப் பசை கொண்டவை, உவர்ப்புச் சுவை, குருத்தன்மை (எளிதில் செரிமானமாகாதவை) கொண்டவையுமான பொருள்களை விலக்க வேண்டும். முதலில் வாந்தி எடுக்கச் செய்தல், பிறகு பேதியாகச் செய்தல் எனும் தூய்மைப்படுத்தும் முறைகளைத் தக்கபடி பயன்படுத்த வேண்டும். அறுபதாங்குறுவை அரிசி, சோளம், குளிர்ச்சித் தன்மை கொண்ட பொருள்கள், பயறு, வரகு முதலான புல்லரிசி வகைகள் முதலிய வற்றாலான உணவுப் பொருள்கள் ஆகியவற்றை லாவகப்புள் போன்ற விஷ்கிரப் (அலகால் தானியங்கள் முதலியவற்றைப் பொறுக்கி உண்ணும்) பறவைகளின் புலால் சாற்றுடன் உண்ணச் செய்ய

வேண்டும். இந்தப் பருவத்தில் புடலை, வேப்பிலை, கத்தரி, பாகல் முதலான கசப்புச் சுவை கொண்ட காய்கறிகளைப் பயன்படுத்த வேண்டும். அவ்வாறே மது ஆஸவம், திராட்சாரிஷ்டம், சீது மாத்வீகம், மாதவம் போன்ற மதுவகைகளைப் பருகச் செய்ய வேண்டும். இளவேனிற் பருவத் துவக்கத்தில் உடற் பயிற்சி, கண்களில் மை இடுதல், தீக்ஷ்ணத் தன்மை கொண்ட பொருள் களைக் கொண்டு புகை பிடித்தல், தீக்ஷ்ணத் தன்மை கொண்ட மருந்துப் பொருள்களின் கஷாயத்தால் கபளதாரணம் (வாயில் சிறிது நேரம் கொண்டு உமிழ்தல்), இளஞ்சூடுள்ள வெந்நீரைக் குளியலுக்கும், உடலைத் தூய்மைப்படுத்திக் கொள்ளவும், கால் கழுவவும் பயன்படுத்துதல் என்பன மேற்கொள்ளத் தக்கவை. இளவேனில் பருவத்தில் உக்ஷ்ணத் தன்மை, வறட்சித் தன்மை, கார்ப்புச் சுவை, கார வகை, துவர்ப்புச் சுவை ஆகியவற்றைச் சிறப்பாகக் கொண்ட பொருள் உணவு, குடிநீர், இளஞ்சூடுள்ள நீர்த்தன்மையற்ற அல்லது சிறிதளவோ நீர்த்தன்மை கொண்ட பொருள்கள், யவதானியம், பயறு, தேன் ஆகியவற்றை மிகுந்த அளவில் உணவில் பயன்படுத்த வேண்டும். இந்தப் பருவத்தில் மற்போர், நெடுந்தொலைவு பயணம், கல்லெறிதல் போன்ற உடற்பயிற்சிகள் நன்மை தரும். மேலும் குங்குமப்பூ, கஸ்தூரி, அகில் போன்ற உஷ்ணத்தன்மை மிக்க பொருள்களை உடலின் மேல் பூசிக் கொண்டு குளித்தல், மாதர்களுடன் கலவி புரிதல், பூந்தோட்டங்களில் உலாவுதல், என்பன செய்யத் தக்கவை. ஏமந்த ருதுவின் உடலில் சேர்ந்த கபத்தை சிரோவிரேசனம் வாந்தி எடுத்தல், நிரூஹணவஸ்தி, கபளகிரஹணம் போன்ற முறைகளால் வெளியேற்ற வேண்டும். இனிய, எண்ணெய்ப்பசை கொண்ட பொருள்கள், பகலில் உறங்குதல், குருத்தன்மை கொண்ட பொருள் கள், இளகிய (நீர்த்தன்மை மிக்க) பொருள்கள் ஆகியவற்றை விலக்க வேண்டும்.

## 8. முதுவேனிற் பருவத்தில் விடத் தக்கவை

முதுவேனிற் பருவத்தில் உடற்பயிற்சி, கலவி, உடலை உலர்த்தும் (நீரைச் சுண்டச் செய்யும்) உணவு, அத்தகைய பழக்க வழக்கங்கள், தீ புகை ஆகியவற்றிற்கு அருகில் இருத்தல், பித்தத்தை வளர்க்கும் கார்ப்பு, புளிப்பு, உவர்ப்புச் சுவைகளைக் கொண்ட பொருள்கள் முதலியவை விலக்கத் தக்கவையாகும். 40

## 9. முதுவேனிற் பருவத்தில் பின்பற்றத் தக்கவை

முதுவேனிற் பருவத்தில் குளம், ஆறு, கிணறு, அழகிய மலர்த்தோட்டம், நறுமணம் மிக்க சந்தனம், நறுமண மலர்களின் மாலைகள் சிறப்பாக செங்கமலம், ஆம்பல்கள் கொண்ட மாலைகள், பனை விசிறிக் காற்று, குளிர்ச்சி தரும் மாளிகை, மிக மெல்லிய ஆடைகள் ஆகியவை பயன்படுத்தத் தக்கவை. சர்க்கரை, கற்கண்டு களுடன் கூடிய நறுமணம் கொண்டு பனிக்கட்டியால் குளிர்ச்சி யூட்டப்பட்ட குடிநீர் வகைகளை பயன்படுத்த வேண்டும். நீர், நெய், சர்க்கரையும் கூடிய பொரிமாவை உட்கொள்ள வேண்டும். இனிப்புச் சுவை கொண்ட நீர்த்தன்மையுள்ள பொருள்களையும் நெய்யுடன் கூடிய உணவையும் உட்கொள்ள வேண்டும். இரவில் சர்க்கரை பால் கலந்த சோற்றை உண்ணவேண்டும். இரவில் உப்பரிகைகளின் மேல்புதுமலர்களாலான படுக்கையில் சந்தனம் பூசிக்கொண்டு இன்பம் பயக்கும் வண்ணம் குளிர்ந்த காற்று உடலில் படும்படி உறங்க வேண்டும். 41–45

## 10. கார் பருவத்தில் பயன்படுத்த வேண்டியவை

முதுவேனில் பருவம் முடிந்ததும் மழைக்காலம் துவங்கும் போது இனிப்பு, புளிப்பு, உவர்ப்பு, எனும் இம்மூன்று சுவைகளும் கொண்டு குருத் தன்மையுள்ள உணவுப் பொருட்களைப் பயன் படுத்த வேண்டும். இளஞ்சூடுள்ள பால், புலால், சாறு, மருந்துப் பொருள்களுடன் கூடிய எண்ணெய், நெய் ஆகியவற்றை உட் கொள்ள வேண்டும். உடலைச் செழிப்புறச் செய்யும் பிசுபிசுத் தன்மை மிக்கதுமான உணவுப் பொருள்களை பயன்படுத்த வேண்டும். முதுவேனிற் பருவத்தில் உடலில் சேர்ந்துள்ள கார் பருவத் துவக்கத்தில் சீற்றமுறும் வாதத்தைத் தணிப்பதற்கு மருத்துவ நூலில் மிக்க திறமை கொண்டவர் வாதத்தைத் தணிக்க வல்ல எண்ணெய்ப்பசையைத் தோற்றுவிக்கும் முறை, உடலை வியர்க்கச் செய்யும் முறை என்பவற்றை கையாள வேண்டும். இந்தப் பருவத்தில் ஆற்று நீர், வறட்சித் தன்மை கொண்ட வெப்பத்தை வளர்க்கும் பொருட்கள், பொரிமா, வெயிலில் உலாவுதல், உடற்பயிற்சி, பகல் உறக்கம், மாதர்களுடன் கலவி புரிதல் என்பனவற்றை விலக்க வேண்டும். ஓராண்டுக்குள்ளான புது அரிசிச் சோறு, வறட்சித் தன்மை, குளிர்ச்சித் தன்மை கொண்ட பொருள்கள், குளிர்ந்த நீர் ஆகியவற்றை விலக்க வேண்டும். யவதானியம், பார்லி,

அறுபது நாள் குறுவை, பழைய சம்பா அரிசி, கோதுமை ஆகியவற்றாலான உணவுப் பொருட்கள் முதலியவற்றைப் பயன்படுத்த வேண்டும். மாளிகையின் நடுப்பகுதியில் காற்று ஓட்டம் அதிகமில்லாத இடத்தில் தடித்த போர்வைகளைக் கொண்ட படுக்கையில் உறங்கவேண்டும். இந்தப் பருவத்தில் வானத்திலிருந்து விழும் மழை நீர். நஞ்சு கொண்ட உயிரினங்களின் மலம், சிறுநீர், உமிழ் நீர் முதலியவற்றுடன் கூடி நச்சுத் தன்மை கொண்டிருக்கும், அத்தகைய நீரைப் பருகவோ, குளிக்கவோ உடலைத் தூய்மைப் படுத்திக் கொள்ளவோ பயன்படுத்தக் கூடாது. கார் பருவத் துவக்கத்தில் உத்தியுடன் சுவையுள்ளதாகச் செய்யும் பொருள்களைக் கூட்டிய மதுவையும், பழைய அரிஷ்டம், ஆஸவம், மைரேயம் ஆகிய மதுத் தன்மை கொண்டவற்றையும் பருகப் பயன்படுத்த வேண்டும். ஆனால் இரவு நேரங்களில் இவற்றைப் பயன்படுத்தக் கூடாது. இந்தப் பருவத்தில் சீற்ற மடைந்த வாதத்தை நிரூஹணவஸ்தி, அநுவாஸனவஸ்தி வாதத்தைத் தணிக்கும் முறை (எண்ணெய்ப்பசை யூட்டுதல், வியர்க்கச் செய்தல்) போன்ற முறைகளால் தணியச் செய்ய வேண்டும். மற்றும் கார் பருவத்தில் (மழைக் காலத்தில்) பின்பற்றத் தக்க முறைகள் மேற்கொள்ளத் தகும். 46–54

## 11. பருவத்திற்கேற்ற முறைகளைப் பின்பற்றுவதன் பயன்

ஆண்டுதோறும் மாறிமாறி வரும் ஆறு பருவங்களிலும் பின்பற்றத் தக்கவையாக கூறப்பட்ட உணவு, பழக்க வழக்கங்கள் ஆகியவற்றைச் சீராகத் தகுந்தபடி பயன்படுத்துபவர், அந்தந்த பருவத்தில் சீற்றம் பெறும் வாத பித்த கபங்களைத் தகுந்த பஞ்சகர்மா எனப்படும் ஐவகைச் சிறப்பு முறைகளால் தணித்துக் கொள்பவர் அந்தந்த பருவங்களில் தோன்றக் கூடிய கொடிய நோய்களுக்கு இலக்காக மாட்டார். 55

## 12. பொதுவான உணவு வகைகள்

இனி பதினோரு வகையான உணவு முறைகள் விளக்கப்படு கின்றன. அந்த முறைகளாவன : 1. குளிர்ச்சியூட்டுவது, 2. வெப்பம் தருவது, 3. எண்ணெய்ப்பசை மிக்கது, 4. வறட்சித் தன்மை கொண்டது, 5. நீர்த்தன்மை மிக்கது, 6. உலர்ந்தது, 7. ஒருவேளை உண்பது, 8. இருவேளை உணவு உண்பது, 9. மருந்து

பொருட்களுடன் கூடியது, 10. அளவில் குறைந்தது, 11. உடலின் செயல்பாட்டுக்கு உதவுவது என்பவையாகும். 56

## 13. குளிர்ச்சி தன்மை கொண்ட பொருள்களைப் பயன் படுத்தத் தக்கவர்

நாவறட்சி, மிக்க வெப்பம், வெறி, அழற்சி, ஆகியவற்றால் துன்புறுபவர், இரத்த பித்த நோய் கொண்டவர், நச்சுப் பொருளை உண்டவர், நினைவிழத்தல் எனும் மூர்ச்சை நோயால் துன்புறுபவர், கலவியில் அளவுக்கு மீறி ஈடுபடுவதால் உடல் இளைத்தவர், ஆகியவர்களின் குளிர்ச்சி தன்மை மிக்க உணவைப் பயன்படுத்த வேண்டும். 57

## 14. மிக்க வெப்பம் தரும் உணவை உட்கொள்ளத் தக்கவர்

கபச் சீற்றத்தாலும், வாத சீற்றத்தாலும் தோன்றும் நோய்களைக் கொண்டவர் பேதியாவதற்கு மருந்து உட்கொண்டவர், எண்ணெய் உட்கொண்டவர், கிலேதமற்ற உடல் கொண்டவர் ஆகியவர்கள் வெப்பம் மிகச் செய்யும் உணவு, குடிநீர் வகை, மருந்துப் பொருள்கள் ஆகியவற்றைப் பயன்படுத்த வேண்டும். (கிலேதம் – சதசதப்பு, நீர்த்தன்மையுடன் சேறு போல இருக்கும் தன்மை.)

## 15. எண்ணெய்ப்பசை மிகுந்த உணவு உட்கொள்ளத் தக்கவர்

இயற்கையாக வாதம் மிகுந்த உடல் கொண்டவர், வாத நோயால் துன்புறுபவர், வறண்ட உடல் கொண்டவர், அளவுக்கு மீறிக் கலவியில் ஈடுபடுவதால் வலிமை குறைந்துள்ளவர், உடற் பயிற்சி செய்பவர் ஆகியவர்கள் எண்ணெய்ப்பசை மிகுந்த உணவை உட்கொள்ளச் செய்வதால் அவர்களது உடல் நலத்தை வளர்க்க வேண்டும். 59

## 16. வறட்சித் தன்மை கொண்ட உணவு உட்கொள்ளத் தக்கவர்

உடலில் கொழுப்பு மிகுந்துள்ளவர், எண்ணெய்ப்பசை மிகுந்த உடல் கொண்டவர், நீரிழிவு நோயுள்ளவர், உடலில் (மூளைப் பகுதி

– கழுத்து – காற்றுப்பை – இணைப்புகள்) கபம் மிகுந்துள்ளவர் ஆகியவர்கள் வறட்சித் தன்மை மிக்க உணவு உட்கொள்வதால் நன்மை பெறலாம். 60

## 17. நீர்த்தன்மை மிக்க உணவு உட்கொள்ளத் தக்கவர்

உலர்ந்த உடலுறுப்புகளைக் கொண்டவர் நாவறட்சியால் துன்புறுபவர், உடல் வலிமை குறைந்துள்ளவர் ஆகியவர்கள் நீர்த் தன்மை மிகுந்த உணவை உட்கொள்ள வேண்டும். 61

## 18. உலர்ந்த உணவுப் பொருள்களை பயன்படுத்தத் தக்கவர்

குட்டம், அக்கி போன்ற நோய்களால் சதசதப்பு (ஒட்டுத் தன்மை, பிசுபிசுப்பு) கொண்ட உடல் உள்ளவர், விரணம் கொண்டவர், நீரிழிவு நோய் கொண்டவர் ஆகியோர் உலர்ந்த உணவுப் பொருள்களைப் பயன்படுத்துவதால் நன்மை பெறலாம். 62

## 19. ஒருவேளை, இருவேளை உணவு உட்கொள்ளத் தக்கவர்

செரிமானத்தைத் தூண்டும் சடராக்கினி (வெப்பம்) உடலில் குறைந்துள்ள நோயாளிக்கு அந்த வெப்பத்தை வளர்ப்பதற்காக நாள்தோறும் ஒருவேளை உணவு உட்கொள்ளச் செய்க. செரிமான வலிமை சீராக உள்ளவர் இருவேளைகளிலும் உணவு உட்கொள்ளத் தகும். 63

## 20. மருந்து பொருள்களுடன் கூடிய, அளவிற் குறைந்த உணவுக்குத் தக்கவர்கள்

தனியாக மருந்தை உட்கொள்வதை வெறுப்பவனுக்கு மருந்துப் பொருள்களுடன் கூடிய உணவு தோஷங்களைத் தணிக்கப் பயன்படுத்தத் தகும். சடராக்கினி வலிமை குறைந்துள்ளவர்களுக்கு உடல் நலத்தை வளர்க்கத் தக்க அளவில் குறைந்த அளவு உணவு கொடுக்கத் தகும்.

## 21. பருவத்திற்கு ஏற்ற உணவின் பயன்

அந்தந்த பருவத்திற்கு ஏற்ற உணவை உட்கொள்வதால் தோஷங்கள் தணிந்து சமநிலையில் இருக்கும்.

## 22. உடல்நலம் பெற்றுள்ளவனுக்கு உணவு

முன்பு கூறப்பட்ட பதினோரு வகையைத் தவிர, உடலில் தோஷங்களும், தாதுக்களும் (ரசம்-ரத்தம்-மாமிசம்-கொழுப்பு-எலும்பு, மஜ்ஜை, விந்து) சமநிலையில் சீராக இருப்பவருக்கு எல்லா வகையான உணவு வகைகளையும் பயன்படுத்தலாம். இவ்வாறு பன்னிரண்டு வகையான உணவு முறைகளைத் தகுதி அறிந்து முறையே பயன்படுத்த வேண்டும்.

## 23. மருந்து உட்கொள்ளத் தக்க நேரம்

இனி மருந்துகளை உட்கொள்வதற்கான பத்து வகை நேரங்கள் விளக்கப்படுகின்றன. அந்நேரங்களாவன : 1. உணவின்றி மருந்து மட்டும் கொடுப்பது (அபக்தம்) 2. உணவுக்கு முன் மருந்து கொடுப்பது (பிராக்பக்தம்), 3. உணவிற்கு இடையே மருந்து கொடுப்பது (மத்யேபக்தம்), 5. காலையிலும், மாலையிலும் மருந்து கொடுப்பது (அந்தராபக்தம்), 6. உணவுடன் கலந்து மருந்து கொடுப்பது (ஸபக்தம்), 7. உணவு உட்கொள்ளத் துவங்கும் முன்பும் உட்கொண்ட உடனேயும் மருந்து கொடுப்பது (ஸாமுக்தம்) 8. அடிக்கடி மருந்து கொடுப்பது (முகுர் முகுர் புக்தம்), 9. உண்ணும் உருண்டையான உணவில் (பிண்டத்தில்) கலந்து கொடுப்பது (கிராஸபக்தம்), 10. உணவாகக் கொள்ளும் உருண்டைகளுடன் அல்லது முதன் முதல் உட்கொள்ளப்படும் உருண்டையுடன் மருந்து கலந்து கொடுப்பது (கிராஸாந்தபக்தம்) என மருந்து கொடுக்கும் நேரங்கள் பத்து வகையாகும். 67

## 24. அபக்தகாலம் பயன்

மருந்தை மட்டும் உட்கொள்ளச் செய்வது அபக்தம் எனப்படும். உணவைத் தவிர்த்து மருந்தை மட்டும் உட்கொள் வதால் மருந்தின் வலிமை மிகும். இத்தகைய மருந்து விரைவாகப் பலன் தரும். அதாவது நோயைத் தணிக்கும். சிறுவர், முதியவர், மாதர்கள் ஆகியவர்களுக்கும் மற்றும் மென்மையான உடல் கொண்டவர்

களுக்கு இவ்வாறு மருந்து கொடுத்தால் துன்பம் விளையும், வலிமையும் குறையும். 68,69

## 25. உணவு உட்கொள்வதற்கு முன் மருந்து கொடுத்தலின் பயன

உணவு உட்கொள்வதற்கு முன்பு உட்கொள்ளப்படும் மருந்து பிராக்பக்தம் எனப்படும். உணவுக்கு முன் கொடுக்கப்படும் மருந்து விரைவில் செரிமான மடையும். அம்மருந்து உடல் வலிமையைக் குறைக்காது. அம்மருந்தை உட்கொண்டபின் உணவு உட்கொள்ள வதால் அந்த உணவு மருந்தைச் சுற்றிலும் பரவி அது வாய் வழியே வெளிவராமல் தடுத்து விடும். ஆகவே, முதியவர், சிறுவர், அச்சம் கொள்ளும் தன்மை கொண்டவர். உடல் வலிமை குறைந்தவர். மாதர்கள் ஆகியவர்களுக்கு இத்தகைய முறையைப் பயன் படுத்துவது நன்மை பயக்கும். 70,71

## 26. உணவுக்குப் பின் மருந்து கொடுத்தலின் பயன்

உணவு உட்கொண்டதும் கொடுக்கப்படும் மருந்து அதோபக்தம் எனப்படும். இவ்வாறு உட்கொள்ளப்படும் மருந்து உடலில் மேல் பகுதி (தலை, கண், மூக்கு, காது, வாய், மார்பு எனும் பகுதிகளில்) தோன்றக் கூடிய நோய்களைத் தணிக்கும், உடல் வலிமையை வளர்க்கும்.

## 27. உணவுக்கு இடையில் உட்கொள்ளப்படும் மருந்தின் பயன்

உணவு உட்கொள்ளும்போது இடையில் உண்ணப்படும் மருந்து மத்யபக்தம் எனப்படும். உணவுக்கு இடையில் உண்ணப் படும் மருந்து உடலுக்குள் இங்குமங்கும் பரவக்கூடிதாக இருப் பதால் குடற் பகுதியில் (நடு உடலில்) தோன்றிய நோய்களைத் தணிக்கும். 73

## 28. காலையிலும், மாலையிலும் உணவுடனும் உண்ணப் படும் மருந்தின் பயன்

காலையிலும் மாலையிலும் உணவு வேளைக்கு நடுவில் உட்கொள்ளப்படும் மருந்து அந்தராபக்தம் எனப்படும், உணவுடன்

கலந்து உட்கொள்ளப்படும் மருந்து ஸபத்தம் எனப்படும். உணவுப் பொருட்களுடன் கலந்து பக்குவம் செய்து உட்கொள்ளப்படும் மருந்து அல்லது பக்குவான உணவுடன் கலந்து உட்கொள்ளப்படும் மருந்து 'ஸபக்தம்' எனப்படும். 75-76

உணவுடன் கலந்து உட்கொள்ளப்படும் மருந்து மாதர்கள், வலிமையற்ற ஆடவர், மருந்து உட்கொள்வதில் விருப்பமற்றவர், சிறுவர், முதியவர் போன்றவர்களுக்கு நன்மை பயக்கும். அவ்வாறே உணவுக்கு முன்பும் பின்பும் உண்ணப்படும் மருந்து இதயத்திற்கு நன்மை விளைவிக்கும். மன வலிமையை மிகச் செய்யும். சடராக்னியை நன்கு தூண்டக் கூடியதாகும். 74-77

## 29. உணவு உட்கொள்வதற்கு முன்பும், உட்கொண்ட உடனேயும் உட்கொள்ளப்படும் மருந்தின் பயன்

உணவு உட்கொள்ளத் துவங்கு முன்பும், உட்கொண்ட பின்பும் ஆக இருமுறையும் உட்கொள்ளப்படும் மருந்து ஸாமுத்கபுக்தம் எனப்படும். உடலின் மேற் பகுதி மற்றும் கீழ்ப்பகுதி என இரு வழிகளிலும் பரவிச் சீற்றமுற்ற தோஷத்தை இவ்வாறு இருமுறை உட்கொள்ளப்படும் மருந்து தணிக்க வல்லதாகும். 78,79

## 30. அடிக்கடி உட்கொள்ளப்படும் மருந்தின் பயன்

உணவுடனும், அல்லது உணவுடன் அல்லாமலும் அடிக்கடி உட்கொள்ளப்படும் மருந்து 'முகுமுகர் பக்தம்' எனப்படும். அடிக்கடி மூச்சிழுப்பும் (சுவாசம்), இருமலும் (காசமும்) தோன்றும் அல்லது அடிக்கடி விக்கல் தோன்றும் நோயாளிக்கு அல்லது அடிக்கடி வாந்தி எடுப்பவருக்கு அடிக்கடி உட்கொள்ள மருந்தைத் தர வேண்டும். 80-81

## 31. ஒவ்வொரு உருண்டையுடன் இருவாய் உணவுக்கு இடையில் உட்கொள்ளப்படும் மருந்தின் பயன்

உணவை உருண்டைகளாக உட்கொள்ளும்போது ஒவ்வோர் உருண்டையுடன் (ஒவ்வொரு வாய் உணவுடன்) மருந்தைக் கலந்து உட்கொள்வது 'சிராஸபக்தம்' எனப்படும். ஒருவாய் உணவு, பிறகு மருந்து மீண்டும் உணவு என இரு உருண்டைகளுக்கு இடையில் மருந்தை உட்கொள்ளுதல் ''கிராஸந்த ரௌஷதம்'' எனப்படும். 82-83

உடல் வலிமை குன்றியவனுக்குச் சேரிமான வலிமையைத் தூண்ட ஹிங்க்வஷ்டிகம், கொடிவேலித்துகள் போன்ற மருந்து களை உணவு உருண்டைகளுடன் அல்லது முதலில் உட்கொள்ளப் படும் உணவு உருண்டையுடன் கலந்து கொடுக்க வேண்டும். அவ்வாறே ஆண்மையை வளர்க்கும் அச்வகந்தாதி சூரணம் போன்ற மருந்துகளையும் ஒவ்வொரு வாய் உணவுடன் கலந்து பயன்படுத்தச் செய்யலாம். அவ்வாறே சுவாசம் (இழுப்பு) போன்ற நோய்களுக்கு வாந்தியைத் தோற்றுவிக்கும் மருந்துப் பொருள் களால் புகை போடும் முறைகளை இருவாய் உணவுகளுக்கு இடையில் பயன்படுத்த வேண்டும். அவ்வாறே சுவாச நோய் முதலியவற்றைப் போக்கப் பயன்படுத்தப்படும் சியவன பிராசம், வாஸாலவேஹம் போன்ற மருந்துகளை இருவாய் உணவுகளுக்கு இடையில் உட்கொள்ளச் செய்ய வேண்டும். 84

இவ்வாறு மருந்து பயன்படுத்தும் முறைகள் பத்தும் விளக்கப்பட்டன. 85

## 32. பொதுவாக உணவு உட்கொள்ளத் தக்க நேரம்

மலம், சிறுநீர் ஆகியவற்றைக் கழித்த பிறகு, புலன்கள் தெளிவடைந்த பிறகு, உடல் இலேசாகக் காணப்பட்ட பிறகு, ஏப்பம் மிகவும் தூயதாக இருந்தபிறகு, இதயம் தெளிவாக இருக்கும்போது அதாவது இதயத்தில் எத்தகைய பளுவும் இல்லாத உணர்ச்சி ஏற்பட்ட பிறகு, அபானவாயு சீராக வெளியேறிய பிறகு, உணவில் விருப்பம் மிகுந்தபோது, உடல் மற்றம் மனத்தில் எத்தகைய துன்பமும் தோன்றாதபோது, வயிறு மிகவும் தளர்ந் துள்ளபோது உணவு உட்கொள்வது நலம் என்பது மருத்துவர்களின் கொள்கையாகும். 86

**சிறுங்கட்டூர், நடாதூர் எஸ்.என். ஸ்ரீராமதேசிகன் எழுதிய ஸ~ருத ஸம்ஹிதை உத்தரஸ்தானம் தமிழாக்க நூலின் ஸ்வஸ்தவிருத்தாத்யாயம் எனும் அறுபத்து நான்காம் அத்தியாயம் முற்றும்.**

# தந்திர யுக்தி
# எனும்
## அறுபத்தைந்தாம் அத்தியாயம்

இனி உடல் நலத்தைக் காக்கும் தந்திரமாகிய சிகிச்சை முறைகளின் நுட்பத்தை தன்வந்தரி பகவான் ஸுசுருதர் முதலான சீடர்களுக்கு உபதேசம் செய்த முறையை விளக்குவோம்.

(மருத்துவ நூல்களில் கூறப்பட்டுள்ள விஷயங்களைச் சீராகப் புரிந்து கொண்டு அவற்றில் கூறப்பட்டுள்ள மருந்துகளைத் திறமையுடன் செய்து பயன்படுத்தும் முறைகளை நுட்பமாகக் கண்டறியும் முறைகள் தந்திரயுக்திகளாகும் என்றறிக.) 1,2

### 1. தந்திரயுக்திகளாவன : 32

தந்திரயுக்திகள் முப்பத்திரண்டாகும். அவையாவன : 1. அதிகரணம், 2. யோகம், 3. பதார்த்தம், 4. ஹேத்வர்த்தம், 5. உபதேசம், 6. நிர்தேசம், 7. உபதேசம், 8. அபதேசம், 9. பிரதேசம், 10. அதிதேசம், 11. அபவர்கம், 12. வாக்யதோஷம், 13. அர்த்தாபத்தி, 14. விபிர்யயம், 15. பிரஸங்கம், 16. ஏகாந்தம், 17. அநேகாந்தம், 18. பூர்வபக்ஷம், 19. நிர்ணயம், 20. அநுமதம், 21. விதானம், 22. அநாகதாவேக்ஷணம், 23. அதிக்ராந்தாவேக்ஷணம், 24. சமசயம், 25. வியாக்யானம், 26. ஸ்வஸம்ஞா, 27. நிர்வசனம், 28. நிதர்சனம், 29. வியோகம், 30. விகல்பம், 31. சமுச்சயம், 32. ஊஹ்யம் என்பனவாம்.

---

**தந்திரம் – உடல் நலத்தைக் காக்கும் முறைகள். அதாவது சிகிச்சை முறைகள் அவற்றைத் திறமையுடன் பயன்படுத்தும் முறையை சாஸ்திரங்களால் அறிந்துகொண்டு அவ்வாறு சிகிச்சைக்குத் தேவையான உத்திகளை விளக்குவதால் இந்த அத்தியாயம் தந்திரயுக்தி எனும் பெயர் பெற்றது.**

## 2. தந்திரயுக்திகளினால் பயன்

இந்த முப்பத்திரண்டு உத்திகளை அறிந்து மருத்துவ நூல்களில் கூறப்பட்டுள்ள சுலோகங்களில் உள்ள சொற்களைச் சீராக பொருத்தி யுணர்வது வாக்ய யோஜனா எனப்படும். அச்சொற்களின் பொருள் களைச் சீராக உணர்ந்து கொள்ளும் திறமை அர்த்த யோஜனா எனப்படும். (மருத்துவ நூல்களில் கூறப்பட்ட பொருள்களை சீராக அறிந்து கொள்ளப் பயன்படுபவை இந்த யுக்திகளாகும். சிறப்பாக ஸுச்ருத ஸம்ஹிதை சுலோக வடிவத்தில் உள்ளதால் அவற்றில் வேறு வேறு அடிகளில் உள்ள சொற்களைச் சீராக அறிந்து கொள்ளப் பயன்படுபவை இந்த யுக்திகளாகும். சிறப்பாக ஸுச்ருத ஸம்ஹிதை சுலோக வடிவத்தில் உள்ளதால் அவற்றில் வேறு வேறு அடிகளில் உள்ள சொற்களைத் தக்கபடி உத்தி பொருந்தச் செய்வது வாத்ய யோசனை என்றும், பொருத்தமற்றவை போலக் காணப்படும் சொற்றொடர்களின் பொருளைச் சரியாக உணர்ந்து கொள்ளும் உத்திஅர்த்தயோசனை என்றும் சொல்லப்படும்.)

மருத்துவ நூல்களின் பாக்களாகிய சுலோகங்களைத் தவறாகப் புரிந்துகொண்டு வாதம் செய்பவர்களின் கருத்தை மறுத்துச் சரியான கருத்தை நிலை நாட்ட இந்த உத்திகள் பயன்படும்.

சாஸ்திரங்களில் நன்கு தெளிவுபடக் கூறப்படாத பொருள் களையும், மறைபொருளாக கூறப்பட்டுள்ள கருத்துகளையும், விளங்காத வகையில் கூறப்பட்டுள்ள பொருள்களையும், சிறிதளவே குறிப்பால் உணர்த்தப்பட்ட பொருள்களையும் நன்கு தெளிவாக உணர்ந்து கொள்ள இந்தத் தந்திர உத்திகள் வழிவகுக்கும். 6

முகிழ்ந்திருக்கும் தாமரையை ஆதவன் மலரச் செய்வது போலவும், இல்லத்தில் (இருட்டில்) மறைவாக உள்ள பொருள்களை விளக்கு புலப்படுத்துவது போலவும் இந்த உத்திகள் மருத்துவ நூலில் சுருக்கமாகக் கூறப்பட்டுள்ள பொருள்களை விளங்கச் செய்கின்றன. மறைவாகக் கூறப்பட்டுள்ள பொருள்களை வெளிப் படுத்துகின்றன.

## 3. 'அதிகரணம்' என்பதன் பொருள்

எந்தப் பொருளை விளக்குவதாக நூற்பகுதி உள்ளதோ அந்தப் பகுதி அதைச் சார்ந்த 'அதிகரணம்' எனப்படும். அதாவது அதிகரணப் பெயரைக் கொண்டு அந்த அதிகரணத்தில் கூறப் பட்டுள்ள பொருள் இன்னது என்பதைத் தெரிந்து கொள்ளலாம்.

ரசத்தைப் பற்றிய பொருள்களை விளக்குவது ரஸவிஞ்ஞானாதி கரணம். தோஷங்களைப் பற்றி விளக்குவது தோஷ விஞ்ஞானாதி கரணம் என்பதை போல உணர்க. (அதிகரணம், அத்தியாயம் என்பன ஒரு பொருளைக் குறிக்கும் இரு சொற்களாகும்.)

## 4. யோகம் என்பதன் பொருள்

ஒரு வாக்கியத்தை அல்லது சுலோகத்தில் வேறு வேறு இடங்களில் உள்ள சொற்களைக் கொண்டு கூட்டிப் பொருத்தமான பொருளைக் காணும் வழி யோகம் எனப்படும். மருத்துவ நூலில் உள்ள சுலோகங்களைக் கவனத்துடன் (வேறு வேறு பாதங் களிலிருந்தாலும் கண்டு இணைத்துப் பொருள் கூறுதல் யோகமாகும். எடுத்துக் காட்டுக்கு ஒரு சுலோகத்தில் 'தைலம்பிவேச்சாமிதவல்லி நிகும்ப – என முதல் பாதத்திலும், 'சித்தம் பலாய்யாச்சு' என மூன்றாம் பாதத்திலும் உள்ளது. அதாவது எண்ணெயைப் பருக வேண்டும்' சீந்தில் கொடி வேம்பு முதலியவற்றாலான அதை 8 பங்கு 'தயாரான்' என மூன்றாம் அடி துவங்கியதில் 'சீந்தில் கொடி வேம்பு முதலிவற்றால் தயாரான எண்ணெயைப் பருக வேண்டும்' எனச் சொற்களைச் சீராக இணைத்துப் பொருள் காண வேண்டும். இது யோகம் எனும் உத்தியாகும் என்பதாம். 9

## 5. பதார்த்தத்தின் விளக்கம்

எல்லா மொழிகளிலும் ஒரு சொல்லுக்குப் பல பொருள்கள் உண்டு. எடுத்துக் காட்டுக்கு 'சிநேகம்' என்ற சொல்லுக்குப் 'எண்ணெய்' என்றும், நட்பு என்றும் பொருள்கள் உள்ளன. எண்ணெயிலும் பலவகை எண்ணெய்கள் உண்டு. சமயத்திற்கு ஏற்ப முன் பின் உள்ள விஷயங்களைக் கவனித்துத் தக்க பொருளைத் தேர்ந்து கொள்ளுதல் 'பதார்த்தம்' எனும் உத்தியாகும். எடுத்துக் காட்டுக்கு 'வேதோத் பத்தியை விளக்குகிறேன்' என்று இந்நூலில் கூறியபோது ரிக், யஜுர், சாமம், அதர்வணம் என்பன நான்கும் வேதம் என்னும் சொல்லால் வழங்கப்பட்டாலும், மருத்துவ நூலுக்கும் 'ஆயுர்வேதம்' என்ற பெயர் உண்டு என்பதால் துவங்கும் நூல் மருத்துவத்தைப் பற்றியது ஆகையால் 'வேதம்' என்ற சொல்லுக்கு 'ஆயுர்வேதம்' என்றே பொருள் கூற வேண்டும். இவ்வாறு பொருள் காணும் உத்தி பதார்த்த உத்தியாகும். 10

## 6. ஹேது என்பதன் விளக்கம்

ஒரு சொற்றொடரைக் கூறும்போது அதன் பொருள் வேறு ஒரு சொற்றொடரின் பொருளைத் தெளிவாக உணர்ந்து கொள்ளப் பயனப்படுவது 'ஹேது' எனும் உத்தியாகும்.

மண் குவியலில் நீர் சேர்ந்தால் உருண்டையாக இணைந்து விடும். அவ்வாறே உளுந்து, பால் முதலிய உணவு வகைகளைப் பயன்படுத்துவதால் விரணம் சதசதப்பு (சேறு போலாகும் தன்மையை) கொள்ளும் என்ற போது புறத்தில் நீர் கலப்பதால் மண் உருண்டையாவதைக் கொண்டு உடலுக்குள் உட்கொள்ளும் உணவு வகையால் விரணம் சதசதப்பு அடைந்தது புரிந்து கொள்ளப்படுகிறது. இவ்வாறு பொருளைத் தெளிவாக உணரும் உத்தி 'ஹேது' எனப்படும். *11*

## 7. 'உத்தேசம்' என்பதன் விளக்கம்

சுருங்கச் சொல்லி விளங்க வைத்தல் உத்தேசம் எனும் உத்தியாகும். எடுத்துக் காட்டுக்கு மருத்துவநூலில் 'சல்யம்' (துன்புறுத்தும் பொருள்) என்று கூறுவதால் உடலுக்குத் துன்பம் விளைவிக்கும் பொருளும், மனத்திற்குத் துன்பம் விளைவிக்கும் பொருளும் கூறப்படுவதாகப் பொருள் கொள்ளலாகும். இது உத்தேசம் எனும் உத்தியாகும். *12*

## 8. 'நிர்தேசம்' என்பதன் விளக்கம்

முன்பு சுருக்கமாகக் கூறியதை விளக்கமாக உரைத்தல் 'நிர்தேசம்' எனப்படும். சாரீரம் – ஆகந்துகம் என இரு வகைப்படும் என விளக்குதல்.

உடலைத் துன்புறுத்தும் பொருள் 'சாரீரகசல்யம்,' மனத்தைத் துன்புறுத்துவது மானஸிக சல்யம்' என விளக்கமாக உரைத்தல் நிர்தேசம் எனும் உத்தியாகும். *13*

## 9. 'உபதேசம்' என்பதன் விளக்கம்

'இரவில் கண் விழித்தல் கூடாது, பகலில் உறங்குவது கூடாது' என்பன போன்ற நல்லுரைகள் 'உபதேசம்' எனும் உத்தியாகும். *14*

## 10. 'அபதேசம்' என்பதன் விளக்கம்

ஒரு நிகழ்சிக்குக் காரணமானதைக் கூறுவது 'அபதேசம்' எனப்படும். இனிப்பால் கபம் வளரும். இனிப்புச்சுவை கொண்ட பொருளை உண்பது கபம் வளர்வதற்குக் காரணமாகும் என்பது போல உரைத்தல் 'அபதேசம்' எனும் உத்தியாகும். 15

## 11. 'பிரதேசம்' என்பதன் விளக்கம்

நிகழ்காலத்திற்குத் தேவையானதைக் கடந்த நிகழ்ச்சியின் உதவியால் அறிந்து கொள்ளுதல் 'பிரதேசம்' எனப்படும். எடுத்துக் காட்டுக்கு 'இதனால் (இந்தக் கருவியால்) தேவதத்தன் என்பவரது உடலிலிருந்த சல்யம் நீக்கப்பட்டது, அதைப் போலவே இப்பொழுது யஞ்கதத்தன் என்பவரது சல்யம் நீக்கப்படத் தகும் என்பதாகும். 16

## 12. 'அதிதேசம்' என்பதன் விளக்கம்

நிகழ்காலத்தில் உள்ளன கொண்டு வருங்காலத்தில் நிகழக் கூடியதை ஊகம் செய்து அறிதல் 'அதிதேசம்' எனப்படும். எடுத்துக் காட்டுக்கு 'இந்நோயாளியின் உடலில் வாதம் மேல் நோக்கிப் பரவத் துவங்கியுள்ளது. இதனால் இவருக்கு உதாவர்த்தம் எனும் நோய் தோன்றக் கூடும் என்பது தெளிவாகிறது என்பதாம். 17

## 13. அபவர்க்கத்தின் இலக்கணம்

ஏதேனும் ஒரு பொருளை அனைத்திற்கும் மறுத்துப் பிறகு ஏதோ ஒன்றுக்கு மட்டும் விதிவிலக்கு அளித்தல் அபவர்தம் எனப்படும். எடுத்துக் காட்டுக்கு ''நஞ்சை உட்கொண்ட அல்லது நஞ்சினால் சூழப்பட்டவருக்கு உடல் வியர்க்கும் முறையைப் பயன்படுத்தக் கூடாது. ஆனால் பூச்சிக் கடியால் நஞ்சு கொண்டவருக்கு உடல் வியர்க்கச் செய்யும் முறை மேற்கொள்ள வேண்டும்'' என்பதாம். 18

## 14. வாக்யசேஷத்தின் விளக்கம்

ஏதேனும் ஒரு பொருளை விளக்கும் சொற்றொடரில் தேவைக்கு ஏற்பக் கூறப்படாத சொல் ஒன்றை வருவித்துக் கூட்டி

பொருள் காணுதல் வாக்ய சேஷம் எனும் உத்தியாகும். எடுத்துக் காட்டுக்கு, 'தலை, கை, கால், விலா, பின்தட்டு, வயிறு, மார்பு எனும் பகுதிகளில்' என்று கூறினால் இங்கு 'மனிதன்' எனும் சொல்லை வருவித்துக் கொண்டு மனிதனின் தலை, கை , எனப் பொருள் உணர்ந்து கொள்ளுதல் வாத்ய சேஷமாம் எனக் காண்க. 19

## 15. அர்த்தாபத்தியின் இலக்கணம்

ஒன்றை உரைத்தால் அதைக் கொண்டு கூறப்படாத பொருளை ஊகம் செய்து அறிந்து கொள்ளுதல் 'அர்த்தாபத்தி' எனப்படும். 'நான் சோறு உட்கொண்டால்' என்று கூறினால் 'அவருக்குக் கஞ்சியைப் பருக விருப்பம் இல்லை' என்பது தெரிய வருகிறது என்பது இதற்கு எடுத்துக் காட்டாகும். 20

## 16. விபர்யயத்தின் இலக்கணம்

கூறப்பட்ட ஒரு பொருளைக் கொண்டு அதற்கு மாறான கூறப்படாத பொருளை உணர்ந்து கொள்ளுதல் 'விபர்யயம்' எனப்படும். எடுத்துக் காட்டுக்கு, உடல் வலிமையற்று உயிர்க் காற்றின் வலிமை மிகக் குறைந்து போனவருக்கு, மிகவும் அச்சம் கொள்பவருக்கு சிகிச்சை செய்வது மிகவும் கடினம்' என்று கூறினால் இதனால் உடல் வலிமையும், திடமான உயிர்ச் சக்தியும், தைரியமும் கொண்டுள்ளவருக்குச் சிகிச்சை செய்வது எளிது' என்பது புலனாகிறது என்பதாம். 21

## 17. பிரஸங்க உத்தியின் விளக்கம்

ஒரு பிரகணத் (அத்தியாயத்தில்) தில் கூறப்பட்ட பொருளை மீண்டும் மீண்டும் நினைவுபடுத்திக் கூறுதல், அல்லது வேறு அத்தியாயத்தில் அடிக்கடி கூறப்பட்ட பொருளை நினைவுபடுத்தி அத்தியாயத்தை முடித்தல் பிரஸங்கம் எனும் உத்தியாகும். 'வேதோத்பத்தி' எனும் அத்தியாயங்களில் நிலம், நீர், ஒளி, ஒலி, ஆகாயம் எனும் ஐம்பெரும் பூதங்களாலான உடல் சீவனுக்கு நிலையாகும். அவரது செயல்கள் அனைத்திற்கும் இதுவே கருவியாகும். சிகிச்சைக்குரிய நிலைகளனும் அதுவே எனக் கூறப்பட்டது. இதே பொருள் மீண்டும் 'சர்வபூதசிந்தா சாரீரம்' எனும் அத்தியாயத்தில் மீண்டும் கூறப்பட்டுள்ளது. இது 'பிரஸங்கம்' எனப்படும் உத்திக்கு எடுத்துக் காட்டாகும். 22

## 18. 'ஏகாந்தம்' என்பதன் விளக்கம்

எல்லா இடங்களிலும் உறுதிப்படுத்திக் கூறப்படும் பொருள் 'ஏகாந்தம்' எனப்படும். இதற்கு எடுத்துக் காட்டு - 'சிவதை பேதியாகச் செய்யும், மருக்காரைக்காய் வாந்தியாகச் செய்யும் என இந்நூலில் அடிக்கடி உறுதியாகக் கூறப்பட்டுள்ளது. இது ஏகாந்தம் எனப்படும் உத்தியாகும். 23

## 19. 'அநேகாந்தம்' எனும் உத்தி விளக்கம்

ஓரிடத்தில் ஒரு வகையாகவும், அதைப்பற்றியே வேறு ஓரிடத்தில் வேறு வகையாகவும் கூறுவது 'அநேகாந்தம்' எனும் உத்தியாகும். இதற்கு எடுத்துக்காட்டு பின்வருமாறு :

மருத்துவ நூல் ஆசிரியர்களில் சிலர் மருந்துப்பொருள் சிறப்பானது என்பர், மற்றும் சிலர் சாறு சிறப்பு என்பர், மற்றும் சிலர் வீரியம் (செயல் வீறு) சிறப்பு என்பர். மேலும் சிலர் விபாகம் (பக்குவம் பெறும்போது அதன் தன்மையாவது) சிறப்பு என்பர் என்பதாம். 24

## 20. 'பூர்வபக்ஷம்' என்பதன் விளக்கம்

ஏதேனும் ஒரு பொருளைப் பற்றி மறுப்பு வினா எழுப்புவது 'பூர்வ பக்ஷம்' எனப்படும். இதற்கு எடுத்துக் காட்டு. 'வாதத்தால் தோன்றும் நான்கு வகை நீரிழிவு நோய்கள் சிகிச்சைக்கு உட்படாதவை என்பது எவ்வாறு பொருந்தும்' என்பதாம். 25

## 21. 'நிர்ணயம்' என்பதன் விளக்கம்

முன் கூறியபடி ஆக்ஷேபம் எனும் உத்தியில் கூறிய வினாக்களுக்குத் தக்க விடை கூறுதல், 'நிர்ணயம்' எனப்படும். சீற்ற மடைந்தவாதம் முதலில் உடலைத் துன்புறுத்திப் பிறகு உடலின் கீழ்ப்பகுதியில் பரவி வசை (நில நீர்), கொழுப்பு, மஜ்ஜை ஆகியவற்றுடன் கலந்து அவற்றையும் சீற்றமடையச் செய்து சிறுநீர்ப்பையைச் சார்ந்து அதையும் கெடுத்து, நிணநீர் முதலிய வற்றுடன் கலந்துள்ள சிறுநீரை வெளிப்படுத்தும். அதனால் வாதத் தால் தோன்றும் நீரிழிவு சிகிச்சையில் தீர்க்க இயலாததாகும். 26

தவறான உணவு உட்கொள்ளுதல், பழக்க வழக்கங்களை மேற்கொள்ளுதல் ஆகியவற்றால் சீற்றமடைந்த வாதம் உடல் முழுவதையும் துன்புறுத்திக் கொழுப்பு மஜ்ஜை, நிணநீர் ஆகிய வற்றுடன் கலந்து அவற்றைக் கெடுத்துக் கீழ் நோக்கிச் சிறுநீர் குண்டிகைப் பகுதியில் சேர்ந்து சிறுநீரைக் கெடுத்து, அது கொழுப்பு முதலியவற்றுடன் சேர்ந்து வெளிப்படும்படிச் செய்து விடுகிறது. அதனால் வாதத்தால் தோன்றும் நீரிழிவு சிகிச்சைக்கு உட்படாத தாகிறது. 27

## 22. அனுமதத்தின் இலக்கணம்

வேறு ஒருவரது கொள்கையை மறுக்காமல் ஏற்றுக் கொள்வது அனுமதம் எனும் உத்தியாகும். ''சுவைகள் ஏழு எனச் சிலர் கூறுகின்றனர்'' என்னும் பிறரது கொள்கையை மறுக்காமல் இருப்பது இந்த எடுத்துக் காட்டாகும். 28

## 23. விதானம் எனும் உத்தியின் விளக்கம்

அத்தியாயத்தில் கூறப்பட்ட பொருளை விளக்கிக் கூறுவது 'விதானம்' எனப்படும். எடுத்துக் காட்டுக்கு, 'காலைச் சார்ந்துள்ள உயிர்நிலைகள் பதினொன்று என அத்தியாயத்தை ஒட்டிக் கூறப் பட்டுள்ளது'' என்பதாம். 29

## 24. 'அநாகதா வேக்ஷணம்' என்பதன் விளக்கம்

இனி மேல் வரக்கூடிய (கூற இருக்கும்) பொருளை முன்பே நினைத்தல் 'அநாகதா வேக்ஷணம்' மாகும். இதற்கு எடுத்துக்காட்டு: சூத்திரஸ்தானத்தில் ஒன்றைப் பற்றிக் குறிப்பிடும்போது இதைப் பற்றிச் சிகிச்சாஸ்தானத்தில் விளக்குவோம்' எனக் கூறப் பட்டுள்ளது. இது இனி கூறப்போவதை நினைவிற் கொள்ளு தலாகும். 30

## 25. 'அதிகிராந்தாவேக்ஷணம்' என்பதன் விளக்கம்

கடந்து போனதை நினைவு கொள்ளுதல் 'அதிகிராந்தாவே க்ஷணம்' எனும் உத்தியாகும். எடுத்துக் காட்டுக்கு, சிகிச்சா ஸ்தானத்தில் ஒரு பொருளைக் குறித்து 'இதைப் பற்றி முன்பு சூத்திர

ஸ்தானத்தில் கூறப்பட்டுள்ளது எனக் குறிப்பிடப்பட்டுள்ளது காண்க.'' என்பதாம். 31

## 26. 'ஸம்சயம்' எனும் உத்தியின் விளக்கம்

ஒன்றுக்கொன்று மாறான பொருள்களுக்கு ஒன்றை ஏதுவாகக் கூறுதல் ஸம்சயம் (ஐயம்) எனும் உத்தியாகும். இதற்கு எடுத்துக் காட்டு :'தலஹ்ருதயம் எனும் உயிர் நிலையில் அடிபட்டால் உயிர் நீங்கும். ஆனால் கால் கைகள் வெட்டப்பட்டால் உயிர் நீங்காது' என்பதாம். 32

## 27. 'வியாக்யானம்' என்பதன் விளக்கம்

தான் இயற்றிய சாஸ்திரத்தில் ஏதேனும் ஒரு பொருளை பற்றிய விளக்கத்தில் (வேறு நூலாசிரியர்கள் கூறாத) தனிச்சிறப்பாகச் சில பொருள்களை உரைத்தல் 'வியாக்யானம்' எனப்படும். இதற்கு எடுத்துக்காட்டு; ''ஸுச்ருதஸம்ஹிதையில் இருபத்தைந்தாவது தத்துவம் புருடன் என்று உரைக்கப்பட்டுள்ளது. ஏனைய மருத்துவ நூலாசிரியர்கள் தாமச குணமுள்ள அகங்காரம் என்பது துவங்கி சிருஷ்டி தத்துவங்கள் உரைக்கப்பட்டன. அங்கு அவ்யக்தம் என்பது ஒப்புக்கொள்ளப்பட்டு படைப்பு கூறப்பட்டுள்ளது.'' (ஸுச்ருதர் கூறிய முறை மற்ற நூலாசிரியர்களின் கொள்கைக்கும் மேற்பட்டது என்பதாம்.) 33

## 28. 'ஸ்வஸஞ்ஜா' என்பதன் விளக்கம்

வேறு நூல்களில் ஒரு பொருளுக்கு வழங்கப்படாத பெயரைத் தான் சூட்டுதல் 'ஸ்வஸஞ்ஜா' எனப்படும். அல்லது உலகில் பெரும்பாலான வழக்கில் உள்ளதைக் கூறுவது 'ஸ்வஸஞ்ஜா' எனப்படும். எடுத்துக்காட்டுக்கு ''ஸுச்ருத ஸம்ஹிதையில் தேனும் நெய்யும் ஆன இவ்விரண்டும் மிதுனம் எனக் கூறப்பட்டுள்ளது. இப்பொருள்களுக்கு இப்பெயர் வேறு நூல்களில் வழங்கப் படவில்லை'' என்பதாகும். 34

## 29. நிர்வசனம் என்பதன் விளக்கம்

ஏதேனும் ஒரு பொருளை உறுதியாகக் கூறுதல் நிர்வசனம் எனப்படும். எடுத்துக்காட்டுக்கு, 'ஆயுளைப் பற்றிய விளக்கம்

கொண்ட அல்லது ஆயுளை வளர்த்துக் கொள்ளும் முறைகளைப் பற்றிய விளக்கங்கொண்ட நூலே ஆயுர்வேதம் ஆகும்.' என்பதாம். 35

### 30. 'நிதர்சனம்' எனும் உத்தியின் விளக்கம்

ஒரு பொருளைத் தக்க எடுத்துக்காட்டுடன் தெளிவுபட விளக்குதல் 'நிதர்சனம்' எனும் உத்தியாகும். எடுத்துக் காட்டுக்கு, 'காற்றுடன் தீ கூடியபோது வைக்கோற் போரில் போட்ட நீ கொழுந்து விட்டு எரியும். அதைப்போல வாத பித்தம் மற்றும் கபங்களால் கேடுற்ற விரணம் பெரிதாகி வளர்ந்து விடும்' என்பதாம். 36

### 31. 'நியோகம்' எனும் உத்தியின் இலக்கணம்

'இதையே செய்ய வேண்டும்' என ஆணையிட்டுக் கூறுதல் 'நியோகம்' ஆகும். எடுத்துக்காட்டுக்குப் 'பத்தியமான உணவையே உட்கொள்ள வேண்டும்' என்பதாம். 37

### 32. 'ஸமுச்சயம்' என்பதன் விளக்கம்

இன்ன இன்ன பொருள்கள் என ஒரு வகையைக் குறிப்பிட்டு அத்துடன் வேறு ஒன்றையும் இணைத்துக் கூறுதல் 'ஸமுச்சயம்' எனப்படும். எடுத்துக்காட்டுக்கு, 'புலால் வகையில் ஏணம் மற்றும் ஹரிணம் எனும் மான் வகைகளின் புலால் சிறந்தது. அவ்வாறே லாவகம், தித்திரி, சாரங்கம் எனும் பறவைகளின் புலாலும் சிறந்தவையே, எனக் கூறியதாகும். 38

### 33. 'விகல்பம்' என்பதன் விளக்கம்

இது அல்லது அது சிறந்தது எனக் கூறுதல் 'விகல்பம்' எனப்படும். எடுத்துக்காட்டுக்கு, 'புலால் முதலியவற்றின் சாற்றுடன் கூடிய உணவு சிறந்தது. அல்லது நெய்யுடன் கூடிய யவாகூ எனும் கஞ்சியும் சிறந்ததே' என்பதாகும். 39

### 34. 'ஊஹ்யம்' எனும் உத்தியின் விளக்கம்

தெளிவாக விளக்கிக் கூறாமல் ஒரு பொருளை படிப்பவர் ...ம் செய்து அறிந்து கொள்ளும்படி கூறுதல் 'ஊஹ்யம்' எனும்

உத்தியாகும். 'உணவு இரு வகைப்படும். தின்னத் தக்கது, பருகத் தக்கது என்பனவாம்' என்று உரைப்பது இதற்கு எடுத்துக்காட்டு. உண்மையில் உணவுப்பொருள்கள் நான்கு வகைப்படும். 1. கடித்து மென்று உண்ணத் தக்கவை, 2. மென்று தின்னத் தக்கவை, 3. நக்கி உண்ணத் தக்கவை (லேஹியம்), 4. பருகத் தக்கவை என்பனவாம். ஆனால், அன்னம் என முதல் இரண்டு வகையையும், பருகத் தக்கவை என பின் இரண்டையும் குறிப்பிட்டு நான்கு வகையையும் ஊஹம் செய்து அறிந்து கொள்ளும்படி கூறுதல் 'ஊஹ்யம்' எனும் உத்தியாகும். 40

## 35. தந்திர உத்திகளை அறிவதன் பயன்

)வ்வாறு பொதுவாக முப்பதிரண்டு தந்திர உத்திகள் தக்க எடுத்துக்காட்டுகளுடன் விளக்கப்பட்டுள்ளன. மேலும் சிறப்பாக இவற்றைப் பற்றி அறிந்து கொள்ள விரும்புகிறவர்கள் நுட்பமாக சாஸ்திரத்தை ஆராய்ந்து தெரிந்து கொள்ளத் தகும். இந்த ஆயுர்வேத நூலை உற்று ஆராய்ந்து என்னால் குறிப்பிடப்பட்ட இந்த உத்திகளை விளக்காகக் கொண்டு சாஸ்திரத்தின் நுட்பங்களைத் தெளிவாக உணர்ந்து கொள்ளும் மருத்துவர் சிறந்த அறிஞராக, மருத்துவத்தில் வெற்றி கண்டவராக விளங்குவார் என்பது தன்வந்தரி பகவானின் கருத்தாகும். 41–43

***சிறுங்கட்டூர், நடாதூர் எஸ்.என். ஸ்ரீராமதேசிகன் எழுதிய ஸ˜கருத ஸம்ஹிதை உத்தரஸ்தானம் தமிழாக்க நூலின் தந்திரயுக்தி எனும் அறுபத்தைந்தாம் அத்தியாயம் முற்றும்***

# *தோஷபேத விகல்பம்

# எனும்

## அறுபத்தி ஆறாம் அத்தியாயம்

இனி தன்வந்தரி பகவான் ஸுச்ருதர் முதலான சீடர்களுக்கு உபதேசம் செய்தபடி தோஷ பேத விகல்பங்களை விளக்குவோம். *1,2*

### 1. ஸுச்ருதரின் வினா

சல்யம், சாலாக்யம் முதலான எண் வகை உறுப்புகளுடன் கூடிய ஆயுர்வேத சாஸ்திரத்தில் கரைகண்டவரும், மருத்துவ நூலில் மாணவர்களுக்குத் தோன்றும் ஐயங்கள் அனைத்தையும் தக்க விளக்கங்கள் கூறி நீக்க வல்லவரும், மிக நுட்பமான சாஸ்திரப் பொருள்களில் ஆழங்காற்பட்டவருமான திவோதாஸர் எனும் பெயர் கொண்ட தன்வந்தரி பகவானை விச்வாமித்திரர் எனும் பெயர் கொண்ட மகனாகி ஸுச்ருதர் வினவத் துவங்கினார்.

முன்பு ரஸபேதவிகல்பம் எனப் பெயர் கொண்ட அறுபத்தி மூன்றாம் அத்தியாயத்தில் தோஷங்களின் குறைவு, மிகை மற்றும் ஒன்றோடொன்று சிறுபகுதிகளாக இணைதல் போன்ற வேற்றுமைகளால் அறுபத்திரண்டு வகை தோஷ பேதங்கள் கூறுப்பட்டுள்ளன. அவற்றில் ஒவ்வொரு தோஷமாக வேறுபட்டவை எத்தனை, இரண்டிரண்டாகத் தோஷங்கள் சேர்வதால் தோன்றும் விகற்பங்கள் எத்தனை, மூன்று தோஷங்களும் ஒன்று சேர்ந்து சீற்றமுறுவதால் தோன்றும் வகைகள் எத்தனை என்பதை விளக்க வேண்டும். 4

---

தோஷங்கள் வாத பித்த கபங்கள். இவை ஒன்றோடொன்று கலந்து சீற்றமுறுவதால் தோன்றும் வகைகளைப் பற்றி விளக்கம் கொண்டிருப்பதால் இந்த அத்தியாயம் 'தோஷ பேதவிகல்பம்' எனும் பெயர் கொண்டதாயிற்று.

## 2. தன்வந்தரி பகவானின் விடை

ஸுசுருதர் வினவியதைக் கேட்டு தவநெறியில் சிறந்தவரும், மன்னர்களில் சிறந்தவரும், திவோதாஸர் எனும் பெயர் கொண்டவருமான தன்வந்தரி பகவான், உண்மையை விளக்கத் துவங்கினார்.

வாதம், பித்தம், கபம் எனும் மூன்று தோஷங்கள், ரசம், ரத்தம், முதலான தாதுக்கள் மற்றும் சிறுநீர் என்பன கெடாத நிலையில் சம அளவில் இருக்கும்போது இனிப்பு முதலான சுவைகள் கொண்ட பொருள்களால் மனிதன் உடலை நன்கு தாங்குபவனாகிறான். 6

புருடன் (மனிதன்) பதினாறு கலைகளுடன் கூடியவனாவான். அக்கினி சோமம் முதலான புராணங்கள் பதினொன்றாகும். நோய்களின் எண்ணிக்கை ஆயிரத்து எழுபத்து மூன்று. இவை அனைத்தும் இந்த நூலில் விளக்கப்பட்டுள்ளன. 7,8

வாதம், பித்தம், கபம் எனத் தோஷங்கள் மூன்றாகும். அவ்வாறே சத்துவம், ரஜஸ், தமஸ் எனக் குணங்களும் மூன்று வகைப்படும். இவை ஏற்றத் தாழ்வு பெறுவதால் அறுபத்து இரண்டு வகைகளான விகற்பங்கள் ஏற்படுகின்றன. 9

## 3. தோஷங்களின் விகல்பங்கள் அறுபத்திரண்டின் விளக்கம்

தனித்தனியாக வாத ரத்த கபங்கள் ஒவ்வொன்று மட்டும் சீற்றமுறுவதால் தோன்றும் விகல்பங்கள் மூன்று.

இரண்டு தோஷங்கள் கலந்து சீற்றமுறுதலால் தோன்றும் விகல்பங்கள் ஒன்பது வகைப்படும்.

மூன்று தோஷங்களில் அதிக அளவில் சீற்றமுறும்நிலையைச் சார்ந்து பதின்மூன்று விகல்பங்கள் தோன்றும்.

இம்மூன்று தோஷங்களில் ஒன்று மிகக் குறைதல், மற்றொன்று நடுத்தர அளவில் சீற்றமுறுதல், மற்றொன்று அதிக அளவில் சீற்றமுறுதல் என்ற விகல்பங்களால் தோன்றுபவை ஆறு.

இவ்வாறு தோஷங்கள் மிகக் குறைந்து போவதால் தோன்றும் விகல்பங்கள் இருபத்தைந்து. ஆக ஐம்பது விகல்பங்களாகும்.

குறைதல், நடுத்தர அளவில் குறைதல், மிகக் குறைதல் எனப் பன்னிரண்டு தோஷ விகல்பங்கள் உண்டாகும். ஆக தோஷ விகல்பங்கள் அறுபத்திரண்டாயின என்று அறிக. 10,11

தோஷ விகல்பங்களின் விளக்கம் பின்வருமாறு உணர்க :

1. வாதம் அதிக அளவில் சீற்றமுற்றுப் பித்த கபங்கள் சம நிலையில் இருப்பது.

2. பித்தம் அதிக அளவில் சீற்றமடைந்து வாத கபங்கள் சம நிலையில் இருப்பது.

3. கபம் சீற்றமடைந்து வாதமும் பித்தமும் சமநிலையில் இருப்பது.

(இரண்டு தோஷங்கள் சீற்றமுறுவதில் இரண்டும் சம அளவில் அல்லது ஒன்று அதிக அளவில் சீற்றமுறுவது என்பனவற்றால் ஒன்பது வகை விகல்பங்கள் தோன்றுகின்றன.)

4. வாதமும் பித்தமும் சம அளவில் சீற்றமுற்று கபம் சம அளவில் இருப்பது

5. வாதமும் கபமும் சம அளவில் வளர்ந்து பித்தம் சம நிலையில் இருப்பது

6. பித்தமும் கபமும் சம அளவில் சீற்றமடைந்து வாதம் சம நிலையில் இருப்பது. இரண்டு தோஷங்கள் சீற்றமடைந்த போது ஒன்று அதிக அளவிலும் மற்றொன்று அதைவிடக் குறைந்த அளவிலும் சீற்றமடைந்திருக்க மூன்றாவது தோஷம் சமநிலையில் உள்ளதும் இயற்கையாக இருக்க வேண்டிய நிலையில் இருப்பது.

7. அதிக அளவிலும் பித்தம் அதை விடக் குறைந்த அளவிலும் சீற்றம் பெறக் கபம் சம நிலையில் இருப்பது.

8. பித்தம் அதிக அளவிலும் வாதம் அதைவிடக் குறைந்த அளவிலும் சீற்றம் பெறக் கபம் சம அளவில் இருப்பது.

9. வாதம் அதிக அளவிலும் கபம் அதைவிடச் சற்ற குறைந்த அளவிலும் சீற்றம் பெறப் பித்தம் சம நிலையில் இருப்பது.

10. கபம் அதிக அளவிலும் வாதம் அதைவிடக் குறைந்த அளவிலும் சீற்றம் பெறப்பித்தம் சம நிலையில் இருப்பது.

11. பித்தம் அதிக அளவிலும் கபம் அதைவிடக் குறைந்த அளவிலும் சீற்றம் பெற வாதம் சம நிலையில் இருப்பது.

12. கபம் அதிக அளவிலும் பித்தம் குறைந்த அளவிலும் சீற்றம் பெற வாதம் சமநிலையில் இருப்பது.

மூன்று தோஷங்களும் சீற்றம் பெற்றவை பதின்மூன்று வகைகளாகும்.

13. வாதம் மிகவும் சீற்றமடைந்து மற்றவை குறைந்த அளவில் சீற்றமுறுவது.

14. பித்தம் சீற்றமடைந்து மற்றவை குறைந்த அளவில் சீற்ற முறுவது.

15. பித்தம் மட்டும் சீற்றமடைந்து மற்றவை குறைந்த அளவில் சீற்றமுறுவது.

16. கபம் அதிக அளவில் சீற்றமுற்று மற்றவை குறைந்த அளவில் சீற்றமுறுவது

17. வாதமும் பித்தமும் அதிக அளவில் சீற்றமுறுதல்

18. வாதமும் கபமும் அதிக அளவில் சீற்றமுறுவது

19. பித்தமும் கபமும் அதிக அளவில் சீற்றமுறுவது

ஒன்று குறைந்தும் மற்றொன்று நடுத்தரமாக சீற்றமுற மூன்றாவது அதிக அளவு சீற்றமுறுவதால் ஆறு வகை தோன்றும்.

20. வாதம் குறைந்த அளவில், பித்தம் நடுத்தர அளவில், கபம் அதிக அளவு சீற்றம் பெறுவது.

21. வாதம் குறைந்த அளவிலும், கபம் நடுத்தர அளவிலும், பித்தம் அதிக அளவிலும் சீற்றமுறுவது

22. பித்தம் குறைந்த அளவிலும், வாதம் அதிக அளவிலும், கபம் நடுத்தர அளவிலும் சீற்றம் பெறுவது.

23. வாதம் நடுத்தர அளவிலும், பித்தம் குறைந்த அளவிலும், கபம் நடுத்தர அளவிலும் சீற்றம் பெறுவது.

24. கபம் குறைந்த அளவிலும், பித்தம் அதிக அளவிலும், வாதம் நடுத்தர அளவிலும் சீற்றமுறுவது

25. வாதம் அதிக அளவிலும், பித்தம் நடுத்தர அளவிலும், கபம் குறைந்த அளவிலும் சீற்றமுறுவது.

இவற்றைப் போலவே மிகவும் குறைந்து போன தோஷங்களால் இருபத்தைந்து வகையான தோஷ விகல்பங்கள் ஏற்படும்.

1. வாதமும் பித்தமும் சம அளவில் குறைந்து போக கபம் சம அளவில் இருப்பது.

2. வாதமும் கபமும் சம அளவில் குறைந்தபோது பித்தம் சம அளவில் இருப்பது

3. பித்தமும் கபமும் சம அளவில் குறைந்து போக வாதம் சம அளவில் இருப்பது.

இரண்டு தோஷங்கள் அளவில் குறைந்தபோது அதில் ஒன்று மற்றதை விட அதிக அளவில் குறைந்து போவதால் ஆறு வகை விகற்பங்கள் தோன்றும்.

4. வாதம் அதிக அளவில் குறையப் பித்தம் நடுத்தர அளவில் குறைய கபம் சமநிலையில் இருப்பது.

5. வாதம் ஓரளவு குறைய அதைவிடப் பித்தம் அதிக அளவில் குறைய கபம் சமநிலையில் இருப்பது.

6. வாதம் அதிக அளவில் குறையக் கபம் ஓரளவு குறைந்து பித்தம் சமநிலையில் இருப்பது.

7. வாதம் ஓரளவு குறைய அதைவிடக் கபம் அதிக அளவில் குறையப் பித்தம் சமநிலையில் இருப்பது.

8. பித்தம் அதிக அளவில் குறையக் கபம் ஓரளவு குறைய வாதம் சம நிலையில் இருப்பது.

9. கபம் அதிக அளவு குறையப் பித்தம் ஓரளவு வாதம் சமநிலையில் இருப்பது.

மூன்று தோஷங்களும் உடலில் அளவில் குறைந்த போது 13 விகற்பங்கள் ஏற்படுகின்றன.

மூன்றும் சமஅளவில் குறைந்துள்ளது ஒரு வகை

மூன்று தோஷங்களும் உடலில் அளவில் குறைந்தபோது பதிமூன்று விகல்பங்கள் ஏற்படுகின்றன. மூன்றில் ஒன்று மற்ற )ரண்டை விட அதிக அளவில் குறைவது மூன்று விகற்பங்கள்.

வாத பித்த கபங்கள் மூன்றும் அளவில் குறைந்த போது அம்மூன்றில் 1. வாதம் அதிக அளவு குறைதல், 2. பித்தம் அதிக அளவு குறைதல், 3. கபம் அதிக அளவு குறைதல்.

வாத பித்த கபங்கள் மூன்றும் அளவில் குறைந்தபோது அவற்றில் 1. வாதமும் பித்தமும் அதிக அளவு குறைந்த போதல், 2. வாதமும் கபமும் அதிக அளவு குறைந்து போதல், 3. பித்தக் கபங்கள் அதிக அளவு குறைந்து போதல்.

இனி, 4. குறைந்த அளவு, 5. நடுத்தர அளவில் குறைந்தது, 6. அவ்விரண்டைவிட அதிக அளவில் குறைந்தது என்பன ஆறு விகற்பங்களாகும்.

1. வாதம் குறைந்த அளவு குறைதல், பித்தம் நடுத்தர அளவில் குறைதல், இவ்விரண்டையும் விட அதிக அளவில் கபம் குறைதல்.

2. நடுத்தர அளவில் வாதம் குறைதல், குறைந்த அளவு பித்தம் குறைதல், அவ்விரண்டையும் விடக் கபம் அதிக அளவு குறைதல்.

3. வாதம் அதிக அளவில் குறைதல், பித்தம் நடுத்தர அளவில் குறைதல், கபம் ஓரளவு குறைதல்.

4. குறைந்த அளவு வாதம் குறைதல், பித்தம் அதிக அளவில் குறைதல், கபம் நடுத்தர அளவில் குறைதல்.

5. வாதம் அதிக அளவில் குறைதல், பித்தம் ஓரளவு குறைதல், கபம் நடுத்தர அளவில் குறைதல்.

6. வாதம் நடுத்தர அளவில் குறைதல், பித்தம் அதிக அளவில் குறைதல், கபம் ஓரளவு குறைதல்.

இங்கு மூலத்தில் 'நடுவில் உள்ள' எனும் சொல்லால், சமநிலையில் உள்ள தோஷம் கருத்தாகும். அந்நிலையில் ஆறு விகல்பங்கள் தோன்றும். அவையாவன :

1. குறைந்து போன வாதம், சமநிலையில் உள்ள பித்தம், அதிக அளவு கொண்ட கபம்.
2. குறைந்த வாதம், வளர்ந்த பித்தம், சமநிலையில் உள்ள கபம்.
3. சமநிலையில் உள்ள வாதம், குறைந்த பித்தம், வளர்ந்த கபம்.
4. வளர்ந்த வாதம், குறைந்த பித்தம், சமநிலையில் உள்ள கபம்.

5. சமநிலையில் உள்ள வாதம், வளர்ந்த பித்தம், குறைந்த கபம்.

6. வளர்ந்த வாதம், சமநிலையில் உள்ள பித்தம், குறைந்த கபம்.

இரண்டு தோஷங்கள் குறைந்து ஒன்று அதிக அளவு வளர்வது என்ற முறையில் மூன்று விகல்பங்கள் தோன்றும். அவையாவன :

1. வாதமும் பித்தமும் வளர்தல், கபம் குறைதல்.
2. வாதமும் கபமும் வளர்தல், பித்தம் குறைதல்.
3. பித்தமும் கபமும் வளர்தல், வாதம் குறைதல்.

வ்வாறு வாத பித்த கபங்கள் இருபத்து இரண்டு விகல்பங்களாகின்றன. ஒருவேளை தத்தம் அளவில் இருப்பதையும் கணக்கில் கொண்டால் இவ்விகல்பம் அறுபத்திமூன்றாகும்.

## 4. நோய்கள் எண்ணற்றவை

ாஷங்கள ரசம முதலான ஏழு தாதுக்கள், மலம், சிறுநீர், வியர்வை முதலியவற்றுடன் கலந்தபோது எண்ணற்ற விகல்பங்கள் தோன்றும், அதனால் தோஷ - தாது - தலங்களின் கூட்டலான விகற்பங்களாகிய நோய்கள் தோன்றுவதைக் கொண்டு முன்பு கூறிய சுவைகளின் விகல்பங்களையும் அறிந்து தகுந்த நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டும். *12,13*

## 5. சிகிச்சையின் உறுப்புகள்

நோயாளிக்குச் சிகிச்சை புரிவதில் மருத்துவகர்த்தா. மருந்துப் பொருள்களில் உள்ள இனிப்பு முதலான ஆறு சுவைகள் கருவிகள். வாதம், பித்தம், கபம் ஆகியவை நோய் தோன்றக் காரணங்கள். மருத்துவர் தக்க மருந்தைப் பயன்படுத்துவது நலம் விளைவிப்பதாகும். இவை ஏதும் இல்லாத நிலை உடல் நலமின்மையாகும். *14*

## 6. நூல் முடிவுரை

அறுபத்தாறு அத்தியாயங்களில் சீடர்களின் வினாக்களுக்குத் தெளிவாக விடை பொருள் செறிந்த சொற்களால் சீராக உரைக்கப்பட்டுள்ளது. இவ்வாறு உத்தர தந்திரம் நிறைவு பெற்றுள்ளது.

*மிகவும் தெளிவாக, நுட்பமாக மறைவாக உள்ள பொருள்கள் நன்கு உணர்ந்து கொள்ளக் கூடிய வகையில் விளக்கப்பட்டுள்ளது. அறிவற்ற மூர்க்கர்களுடன் சேராத, தெளிவான மனம் கொண்டு அனைவருக்கும் தெளிவாகத் தெரிந்து கொள்ளக் கூடிய வகையில் பெருந்தன்மையுள்ள புலவர்களுக்கு அவர்களது வினாக்கள் அனைத்திற்கும் தக்க விடை இந்நூலில் கூறப்பட்டுள்ளது. 15,16*

*முன்பு பிரும்மதேவனால் தோற்றுவிக்கப்பட்ட ஆயுர் வேதத்தை நிறைவாகக் கொண்ட இந்த ஸுசுருத ஸம்ஹிதை முழுவதையும் முறையாகக் கற்ற புலவருக்கு எந்த விஷயத்திலும் சந்தேகம் தோன்றாது. மன நிறைவான அறிவாற்றல் உண்டாகும் என்பது பிரும்மாவின் கூற்றாகும்.*

**சிறுங்கட்டூர், நடாதூர் அம்மாளாசாரியாரின் புத்திரர்**
**எஸ்.என். ஸ்ரீராமதேசிகன் எழுதிய**
**ஸுசுருத ஸம்ஹிதை உத்தரஸ்தானம் தமிழாக்க நூலின்**
**தோஷபேத விகல்பம் எனும்**
**அறுபத்தாறாவது அத்தியாயம் முற்றும்.**

**உத்தரஸ்தானமும் இத்துடன் நிறைவு பெற்றது.**

★ ★ ★